# பதினெண் புராணங்கள்

ஆசிரியர்

பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், *எம்.ஏ.*

ஞா. மீரா, *எம்.ஏ.*



கங்கை புத்தக நிலையம்

23, தீனதயாளு தெரு,

தியாகராய நகர். சென்னை – 600 017.

முதல் பதிப்பு : 1996
கங்கை இரண்டாம் பதிப்பு : நவம்பர், 2005


**விலை : ரூ. 200-00**

---

| | | |
|---|---|---|
| TITLE | : | **PATHINENN PURANANKAL** |
| AUTHOR | : | Professor A.S. GNANASAMPANTHAN, M.A. & G. MEERA, M.A. |
| LANGUAGE | : | TAMIL |
| SUBJECT | : | Purana Stories |
| EDITION | : | Second Edition, November, 2005 |
| PAGES | : | **xxviii + 752 = 780** |
| PUBLICATION | : | **GANGAI PUTHAKA NILAYAM**<br>23, Deenadayalu Street,<br>Thyagaraya Nagar,<br>CHENNAI - 600 017 |
| PRICE | : | **Rs. 200 - 00** |

---

*Laser Typeset at:*
**SPM Graphics,** CHENNAI-600 071

*Printed at:*  பாலாஜி ஆப்செட் பிரிண்டர்ஸ்
23633094 -23631794

# பதிப்புரை

**பே**ராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்களால் சுருக்கமாகவும் மெருகு குன்றாமலும் அமுதத் தமிழில் அமைத்துத் தரப்பட்டுள்ள பதினெண் புராணங்களை கங்கை புத்தக நிலையம் பதிப்பித்து மகிழ்ச்சியோடு வெளியிடுகிறது.

பாரத தேசத்தின் பழம் பெருமையைப் பாருக்குப் பறை சாற்ற வந்தவை இரண்டு இதிகாசங்கள். இவை பிறக்க மூல கர்த்தாவாய் அமைந்தவை புராணங்கள். இப்புராணங்களில் குறிப்பிட்டுச் சொல்லத் தக்கவை பதினெண் புராணங்கள். இப்புராணங்கள் வேதகாலத்திற்கும் வெகுகாலம் முற்பட்டவை என்று இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். இப் புராணங்கள் பெரும்பாலும் வடமொழியிலேயே வழிவழியாக வாய்மொழியாக வழங்கப்பட்டு வந்துள்ளன. இவர்தான் நூலாசிரியர் என்று அறியப்படவில்லை.

வடமொழியிலிருந்த இந்தப் புராணங்களைத் தமிழ் மக்களுக்குத் தரவேண்டுமென்னும் பேரவா கொண்ட பேராசிரியர் அ. ச. ஞா. அவர்கள் தமக்கே உரிய இலக்கிய நயத்தோடும் சொல்லாட்சித் திறத்தோடும் நூலைத் தமிழில் படைத்துத் தந்துள்ளமையை அவர்தம் முன்னுரை நமக்கு நன்கு விளக்குகிறது.

மும்மூர்த்திகள் என்று இந்து சமயத்தினரால் வணங்கப் பெறும் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோரின் அளப்பரிய ஆற்றல்களைப் பற்றிப் பேசும் பதினெண் புராணங்கள் இந்நூலில் இடம் பெறுகின்றன.

வளமான பாரதத்தை உருவாக்கும் வேளையில், நலம் தரும் நற்சிந்தையோடும், தெய்வ பக்தியோடும், தேச

பக்தியோடும், சத்திய நிலையோடும் இன்றைய இளைஞர்கள் திகழ வேண்டும் என்னும் எண்ணத்தைத் தம் வாழ்நாள் முழுக்கக் கொண்டிருந்த தமிழாசான் அ. ச. ஞா. அவர்கள், அவ்வெண்ணத்தை இலக்கிய — ஆன்மிகச் சொற்பொழிவுக் கூட்டங்கள் வாயிலாகவும், பல நூல்களின் வாயிலாகவும் வெளிப்படுத்தி வந்தார்கள்.

"வானை அளப்போம் கடல் மீனை அளப்போம்" என்று அறிவியல் புரட்சியில் இந்தியர் இறங்குவர் என்பதற்குக் கட்டியம் கூறிய மகாகவி பாரதியார், ஆன்மிக எழுச்சியிலும் ஞானம் தேடும் முயற்சியிலும் இந்தியர் முதன்மை பெற்று உலகத்தார்க்கு வழிகாட்டியாக விளங்குவர் என்ற தீர்க்க தரிசனத்தையும் வெளிப்படுத்தினார். அதனை பேராசிரியர், அமரர் அ. ச. ஞா. அவர்கள் தம் வாழ்நாளில் மெய்ப்பித்துப் பெரும்புகழ் ஈட்டிவிட்டார்கள்.

தமிழ்ப் பெரியாரான அ. ச. ஞா. அவர்கள் தமிழ்ப் பெருங்குடி மக்களை விட்டுப் பிரிந்துவிட்டாலும், அவர்கள் ஆக்கித் தந்துள்ள ஆன்மிக — இலக்கிய நூல்களின் மூலமாக தமிழர் நெஞ்சத்தை விட்டு நீங்காமல் இருக்கின்றார்கள். அவர்கள் தொகுத்துத் தந்துள்ள **பதினெண் புராணங்கள்** என்னும் அரிய ஆன்மிக நூலை கங்கை புத்தக நிலையம் வெளியிட்டுப் பெருமை கொள்கிறது.

அமரர் அ. ச. ஞா. அவர்களின் மகளார் திருமதி ஞா. மீரா அவர்களுக்கு கங்கை புத்தக நிலையம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

இந்நூலுக்கு நல்ல முறையில் கணினி ஒளிஅச்சு செய்து தந்த எஸ்.பி.எம். கிராபிக்ஸ் பெ. மணி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

**— கங்கை புத்தக நிலையத்தார்**

# முன்னுரை

மிகப் பழங்காலந்தொட்டே வடமொழியிலுள்ள சமய இலக்கியங்களில் பதினெட்டுப் புராணங்கள் என்ற ஒரு தொகுதி இடம் பெற்று வந்துள்ளது. இதனையடுத்து பதினெட்டு உப புராணங்களும் காலாந்தரத்தில் இடம் பெற்றுள்ளன.

புராணங்கள் என்ற பெயர் பழைமையானவை என்ற பொருளிலேயே இங்கு வழங்கப்பட்டுள்ளது. ஒரு நாட்டின் கலாச்சாரம் என்பது அந்நாட்டில் வாழும் மக்களின் வாழ்க்கை நிலை, உணவு முறை, எண்ண ஓட்டங்கள், அவர்களின் குறிக்கோள்கள், அவர்கள் வாழ்க்கையில் கொண்ட விழுப்பொருள்கள் (Values in life) என்பவற்றின் ஒட்டுமொத்த தொகுதியே ஆகும். இந்தக் கலாச்சாரத்தை அறிய அந்த இனத்தின் வரலாறு, இலக்கியம் என்பவை பேருதவி புரிகின்றன. ஒரு குறிப்பிட்ட நூற்றாண்டில் தோன்றிய வரலாறு அந்த மக்கள் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை மட்டுமே தொகுத்து வெளியிடுகின்றது. ஆனால் இலக்கியம் என்பது அந்த நிகழ்ச்சிகளுக்கு அடித்தள மாகவும், பின்னணியாகவும் உள்ள அந்த மக்களின் எண்ண ஓட்டங்கள், கருதுகோள்கள் (concepts), குறிக்கோள்கள் (aims), விழுப்பொருள்கள் என்பவற்றை விளக்க உதவுவ தாகும்.

ஒரு நூற்றாண்டில் தோன்றிய இலக்கியம், அது தோன்றிய காலத்தை மட்டும் குறிக்காமல் அந்த இனத்தின் பல நூற்றாண்டு முந்தைய வாழ்வு முறையையும் படம் பிடித்துக் காட்டுகின்றது. அத்தகைய இலக்கியங்களுள் புராணமும் ஒன்றாகும்.

மேநாட்டார் மித்தாலஜி (Mythology) என்ற சொல்லால் ஒரு இனத்தின் மிகப் பழைய இலக்கியங்களைக் குறிப்பிடுவர். இதற்கு நேரான தமிழ்ச் சொல்லாக செவிவழி இலக்கியம் என்ற தொடரைப் பயன்படுத்தலாம். இத்தகைய மித்தாலஜி இலக்கியத்தை அதிகமாகப் பெற்றுள்ளது கிரேக்க மொழியாகும். சிறந்த நாகரிகங்கள் என்று இன்று கூறப்படும் கிரேக்க, உரோமானிய, எகிப்திய, மெஸபட்டோமிய, சுமேரிய நாகரிகங்கள் அனைத்துமே இவ்வகை இலக்கியத்தைப் பெரிதும், சிறிதுமாகப் பெற்றுள்ளன. பெரும்பாலும் தெய்வங்கள் பற்றியும், உலகத் தோற்றம் பற்றியும், அம் மக்களின் வீரவாழ்வு பற்றியும் பேசும் இயல்புடையன இவை. இவற்றை வரலாறு என்று நினைத்து ஆராய்வதில் பயனில்லை. வரலாற்று அடிப்படையில் ஆராய்ந்தால் இவற்றில் பெரும்பாலானவை அடிபட்டுப் போய்விடும். இத்துணை அறிவு வளர்ந்துவிட்ட இக்காலத்தில் கூடச் சமுதாய வரலாற்று ஆய்வாளர்கள் இந்த மித்தாலஜி இலக்கியங்களை ஏற்றுக் கொள்கின்றனர். இவற்றை அறிவு கொண்டு ஆராய்வதைவிட அவற்றை அப்படியே ஏற்றுக் கொள்வது சார்புடையதாகும். இன்றைய நடைமுறை வாழ்வில் நாம் சிலவற்றை நியாயமானவை என்றும், இதுதான் முறை என்றும், இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும் என்றும் அறுதியிட்டு வைத்துள்ளோம். ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் நம் முன்னோர் தொகுத்து வைத்துள்ள கதைப் பகுதிகளில் இன்று நாம் வகுத்துள்ள சட்டதிட்டங்களை ஏற்றிப் பார்ப்பது பொருத்த மற்ற செயலாகும்.

இந்திய நாட்டிலும் வேதகாலம் என்று சொல்லப்படும் காலத்திற்குச் சில ஆயிரம் ஆண்டுகள் முன்னரே நாகரிகமான வாழ்க்கையும் சமுதாய அமைப்பும் இருந்து வந்ததை மொகஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய இடங்களின்

அகழ்வாராய்ச்சி மூலம் அறிஞர்கள் அறுதியிட்டுள்ளனர். அப்பொழுது இருந்த இலக்கியங்கள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை என்பது உண்மைதான்.

வேதகாலம் என்பது கி.மு. 1500 முதல் 1000 வரை உள்ள இடைப்பட்ட காலம் என்பர். இன்று இந்தியாவின் வடமேற்கில் உள்ள பஞ்சாப், ஹரியானா மாநிலங்களில் தான் வேதமும், அதில் கூறப்பட்ட சடங்குகளும் பயின்று வந்துள்ளன. கி.மு. 1000 வாக்கில் வேதத்தின் முடிமணியாக உள்ள உபநிடதங்கள் தோன்றலாயின. கதோபநிடதத்தில் காணப்பெறும் நசிக்கேதார் கதை போன்றவை மூலம் தத்துவங்களையும் மெய்ப்பொருளையும் விளக்கும் வழிமுறையை நமது முன்னோர்கள் மேற்கொண்டனர் என்பதை அறிகின்றோம். இந்த அடிப்படையில் தோன்றியவைதாம் புராணங்கள். பதினெண் புராணங்கள் என்று சொல்லப்படுபவை எப்பொழுது தோன்றின என்று அறுதியிட்டுச் சொல்லத்தக்க சான்றுகள் இல்லை. இதில் வரும் பாடல்களுள் சில மிகப் பழைய வடமொழியிலும், பல பாடல்கள் 4, 5ஆம் நூற்றாண்டில் வழக்கத்திலிருந்த வடமொழியிலும் இயற்றப்பட்டுள்ளன. எந்த ஒரு புராணமும் அது தோற்றுவிக்கப்பட்ட காலத்திலிருந்து வேதங்களைப் போல அப்படியே இன்றும் உள்ளன என்று சொல்லுதற் கில்லை. இவை எந்தெந்தப் பிராந்தியங்களில் தோன்றினவோ அந்தந்தப் பிராந்தியங்களின் பழக்க வழக்கங்களையும் தம்மிடையே கொண்டுள்ளன. இவை பரவப் பரவ இடைச் செறுகல்கள் மிகுதியும் உள்ளே புகுந்தன. ஒரே புராணத்தில் 6,000 பாடல்கள் உள்ளன என்று சிலரும் 12,000 பாடல்கள் உள்ளன என்று சிலரும் கூறுவது இதனால்தான். எந்த ஒரு புராணமும் தோன்றிய பொழுது இருந்த வடிவுடன் இன்றில்லை என்பது தெளிவு. 'Puranas' என்ற தலைப்பில் சில நூல்களை வெளியிட்டுள்ள

திரு. குல்கர்னியின் கூற்றுப்படி எந்த ஒரு புராணமும் ஆதியில் தோன்றிய முறையில் இன்று கிடைக்கவில்லை. மூலநூல் காணாமல் போகவே பிற்காலத்தவர் புதிதாகப் பாடி பழைய பெயரை வைத்து வெளியிட்டுள்ளனர் என்று கூறுகிறார். இதுபற்றி பிரம்மவைவத்தர், இலிங்க புராணங்களின் முன்னுரையில் பேசப்பட்டுள்ளதைக் காண வேண்டும்.

இந்தப் புராணங்கள் பலவற்றிலும் இப்பிரபஞ்சத்தின் தோற்றம், நிலைபேறு, அழிவு, மறுபடியும் தோற்றம் என்பவை பற்றி விரிவாகப் பேசப்படுவதைக் காணலாம். என்றாலும் மேலோட்டமாகப் பார்ப்பதற்கு இவை ஒன்றுபோலக் காணப்பட்டாலும், ஒரு புராணத்திற்கு, ஒரு புராணம் இதே விஷயங்களை அதிக வேறுபாட்டுடன் சொல்லிச் செல்கின்றன. எல்லாப் புராணங்களும் ஒரே காலத்தில் தோன்றியிருக்க முடியாது. ஒரே இடத்திலும் தோன்றியிருக்க முடியாது. எனவே இந்தக் காலதேச வேறுபாட்டால் இந்த முரண்பாடுகள் தோன்றியிருக்கலாம் என்று நினைப்பதில் தவறில்லை. இதற்கு அடுத்தபடியாகக் கால அளவைக் குறிப்பிடுவதில் பெரும்பாலும் ஒற்றுமை இருப்பதைக் காணலாம். கண்ணிமைப் பொழுது, கை நொடிப் பொழுது என்பவை நிமிஷா என்ற பெயரில் பேசப்படுகின்றன. இதில் தொடங்கி ஆண்டுக் கணக்கு வரையில் சென்றுள்ளன. 43,20,000 மனித ஆண்டுகள் கொண்டது ஒரு மகாயுகம் என்றும், 71 மகாயுகம் கொண்டது ஒரு மன்வந்திரம் என்றும், 14 மன்வந்திரம் கொண்டது ஒரு கல்பம் என்றும், ஒரு கல்பம் பிரம்மனுக்கு ஒரு நாள் என்றும் சொல்லப்படும். பிரம்மனுடைய ஒரு நாள் முடிவில் பிரளயம் என்று சொல்லப்படுகின்ற பேரழிவு ஏற்படு கின்றது. பிறகு பல ஆயிரம் ஆண்டுகள் கழித்து மறுபடியும் பிரபஞ்ச உற்பத்தி தொடங்குகிறது. இந்தக் காலக் கணக்கில்

எல்லாப் புராணங்களும் அதிக வேறுபாடின்றி இக் கருத்தைப் பேசுகின்றன. இந்தப் பொதுத்தன்மை போக, ஒவ்வொரு புராணத்திலும் தனித்தனியாக நூற்றுக் கணக்கான கதைகள் பேசப்படுகின்றன. பெரும்பாலான கதைகள் ஏறத்தாழ எல்லாப் புராணங்களிலும் பயின்று வருகின்றன. என்றாலும் ஒரே கதையாக இருப்பினும் பற்பல சிறிய மாற்றங்களும், சில மிகப் பெரிய மாற்றங்களும் கூட ஒவ்வொரு புராணத்திலும் காணப்படுகின்றன.

இதைவிட வியப்பான ஒன்றையும் காணலாம். உதாரணமாக விஷ்ணு புராணத்தின் முற்பகுதியில் சாமந்தக மணி கதையில் கிருஷ்ணன், பலராமன் ஆகிய இருவருடைய வாழ்க்கை முறை மிக மட்டமாகப் பேசப்படுகிறது. கிருஷ்ண னுடைய கூற்றாகவே இவை அமைந்துள்ளது. அதற்கு அடுத்த சில அத்தியாயங்கள் கடந்து, கிருஷ்ணன் வரலாறு மிகச் சிறப்பாகப் பேசப்படுகிறது. இத்தகைய குழப்பங்கள் பெரும்பாலான புராணங்களில் இடம் பெற்றுள்ளன. பிரம வைவர்த்த புராணம், குழப்பங்களுக்குச் சிகரம் வைத்தது போல் அமைந்துள்ளது. இதன் அடிப்படையை ஆராய்ந்தால் ஓர் உண்மையை விளங்கிக்கொள்ள முடியும். ஒரே புராணம் பல பிராந்தியங்களில் பயிலப்படும் பொழுது அந்தப் புராணத்தைச் சொல்பவர்கள் தங்கள் கற்பனைகளையும் கைவரிசைகளையும் உடன் சேர்த்து விடுகின்றனர். இதனாலேயே ஒரே கதையில் பல மாற்றங்கள் ஏற்பட இடமுண்டாயிற்று. நாட்டின் ஒரு பகுதியிலிருந்து, மற்றொரு பகுதிக்குச் செல்லும் இலக்கியங்கள் இத்தகைய மாறுதல் களுக்கு இடமளிப்பது இயற்கையேயாகும். யஜுர் வேதத்தைப் பொருத்தமட்டிலும்கூட கிருஷ்ண யஜுர் என்றும், சுக்கில யஜுர் என்றும் பிரிந்து நிற்பதைக் காண முடியும். இந்தியாவின் தென்பகுதியில் வழங்கும் கிருஷ்ண யஜுர், வட பகுதியில் வழங்கும் சுக்கில யஜுரிலிருந்து

பல மாறுதல்களைப் பெற்றுள்ளது. இவ்வேதத்தின் நான்காவது பிரபாடகத்தின் கடைசியில் வரும் ஸ்ரீருத்ரம் கூட சுக்கில யஜுரில் பல மாறுபாடுகளுடன் விளங்கக் காணலாம். இதனால் இப்புராணங்களில் காணப்படும் மாறுபாடுகளைப் பெரிதாக நினைக்க வேண்டியதில்லை.

வரலாற்று ஆராய்ச்சிக் கண்கொண்டு இப்புராணங் களை ஆராயாமல், இந்நாட்டின் கலாச்சாரத்திற்கு அஸ்திவாரமாக உள்ளவை இப்புராணங்கள் என்று மட்டும் எடுத்துக்கொள்ள வேண்டும். பிரமன், விஷ்ணு, சிவன் ஆகிய மூன்று கடவுளரைச் சுற்றியே இப்புராணங்கள் பேசுகின்றன. பிரம்மம் என்று சொல்லப்படும் பரப் பிரம்மத்தைப் பற்றி (நிர்குணப் பிரம்மம்) எல்லாப் புராணங் களும் தொடக்கத்தில் சில பாடல்களைப் பாடுகின்றன என்றாலும் புராணத்தினுள் திரிமூர்த்திகளே அதிக இடம் பெறுகின்றனர். இவர்கள் தனித்தனியே பேசப்படும் பொழுது அவரவர்களே மூவரிலும் முதல்வர் என்று பேசப் படுகின்றனர். என்றாலும் பல புராணங்களில் இவர்கள் மூவரும் ஒரே கடவுளின் மூன்று வடிவங்கள் என்றும், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்வதால் மூன்று பெயர்களால் வழங்கப்படுகின்றனர் என்றும் பேசுவதைக் காணலாம். இவர்களுள் வேறுபாடு கற்பித்து, ஒருவருக்குக் கீழ்ப்பட்டவர் மற்றவர்கள் என்று பேசுமிடங்கள் ஒன்றிரண்டு தவிர, மற்ற எல்லா இடங் களிலும் மூவரையும் ஒருமைப்படுத்திப் பேசுவதைக் காணலாம். பிற்காலத்தில் காணப்படுவது போல சைவ, வைணவ வேறுபாடுகளும் போராட்டங்களும் இப்புராணங் களில் இல்லை. ஒருவகையாக நோக்குமிடத்து சைவ, வைணவ ஒருமைப்பாட்டிற்கு இப்புராணங்கள் பெரிதும் உதவியுள்ளன என்பதை அறியலாம்.

மனித வாழ்க்கையோடு பெரிதும் தொடர்புடைய புராணங்கள் அம்மனிதனுடைய ஆன்மிக வளர்ச்சிக்குத் தேவையான யோகம், தியானம், பிரார்த்தனை என்பவை பற்றியும் விரிவாகப் பேசுகின்றன. அதே நேரத்தில் இந்த உலகத்தில் செம்மையாக வாழ்வதற்குரிய பல கலைஞானங் களையும், உடலைச் செம்மையாக வைத்துக் கொள்வதற்குத் தேவையான ஆயுர்வேதம் முதலிய மருத்துவங்கள் பற்றியும் பேசுகின்றன.

இவ் வடமொழிப் புராணங்களைப் பொருத்தமட்டில் பஞ்சலட்சணம் என்று சொல்லப்படும் 5 பகுதிகள் ஒவ்வொரு மகாபுராணத்திலும் இடம் பெற்றிருக்க வேண்டும். அவையாவன: 1. சர்கா எனப்படும் பிரபஞ்ச உற்பத்தி 2. பிரதிசர்கா எனப்படும் பிரளயத்திற்குப் பின் ஏற்படும் மறு உற்பத்தி 3. வம்ஸா எனப்படும் தெய்வங்கள் சூரியன், சந்திரன் இவர்கள் பரம்பரையினர் ஆகியவர்கள் பற்றிய வரலாறு 4. மன்வந்திரங்களின் தோற்றம், நிலைபெறும் கால அளவு, காலங்களை அளவிடும் முறை, இதுவரை நடைபெற்ற மன்வந்திரங்கள் என்பவற்றைக் கூறுவதுடன் இப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருக்கும் வைவஸ்வத மனுவின் நடைமுறை 5. வம்ஸானுசரிதா எனப்படும் அரச பரம்பரையினரின் செயல்கள் பற்றி சொல்வன என்பவையாம். எல்லா மகாபுராணங்களும் இவ்வைந்தையும் சுருக்கமாகவும் விரிவாகவும் சொல்வதைக் காணலாம். இந்த ஐந்து இலக்கணங்களும் புராணங்கட்கு இருக்க வேண்டும் என்று சொல்வதைப் பார்த்தால் ஒன்றை அறிந்து கொள்ள முடிகிறது. மனிதனும் அவன் வாழும் இந்தப் பிரபஞ்சமும், இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்து, காத்து, அழித்து, மறுபடியும் படைக்கின்ற தெய்வங்களும் ஏதோ தனித்தனியாகக் காணப்படுபவையல்ல என்பதை வலியுறுத்துவதே இப்புராணங்களின் உள்நோக்கமாகும்.

இவையனைத்தும் ஒருங்கிணைக்கப்பட்ட முழுத்தன்மை (integrated whole) என்பதை அறிதல் வேண்டும். ஒன்றை யொன்று எவ்வளவு சார்ந்துள்ளன, ஒன்றை ஒன்று எவ்வளவு பற்றி நிற்கின்றன என்பதை அறிவுறுத்துவதே புராணங்களின் உள்நோக்கமாகும்.

ஐந்தாவதாக உள்ள அரச பரம்பரையினரின் வாழ்க்கை பற்றிப் பேசும் புராணப் பகுதிகளிலிருந்து மற்றொன்றையும் காணமுடியும். தம்மால் ஆளப்பெறும் மக்களின் நலங் கருதியே இந்த மன்னர்கள் ஆட்சி செய்தனர். ஒருவர், இருவர் இதற்கெதிராகத் தன்னலத்தைப் பெரிதாக்கி மக்களுக்குத் தீங்கிழைக்கும் ஆட்சிமுறையைக் கையாண்டால் முனிவர்கள் முதலானவர்கள் அந்த அரசனுக்கு புத்தி புகட்டுவதும், அந்த உபதேசம் பயன்படாத பொழுது அந்த அரசனையே கொன்று விடுவதும் இப்புராணங்களில் காணக் கிடைக் கின்றன. இப்புராணங்கள் தோன்றுவதற்குரிய காரணங் களும் அறியப்பட வேண்டும். பிரபஞ்சத்தின் தோற்றம், அழிவு, மறு உற்பத்தி, கிருஷ்ணன் போன்ற மகாத்மாக்களின் வரலாறு ஆகியவை கற்றவர், கல்லாதவர், செல்வர், வறியர், உயர்குலத்தோர், தாழ்குலத்தோர் ஆகிய அனைவராலும் அறியப்பட வேண்டும். வேதம் போன்றவை பிராமணர் களுக்கே உரியவை என்று பிற்காலத்தில் வரையறை செய்யப்பட்டபின் எல்லோரும் அறிவு பெறக்கூடிய வாய்ப்பே தடை செய்யப்பட்டுவிட்டது. அந்நிலையில் மேலே கண்டவற்றைப் பொதுமக்களுக்கு, குறிப்பாக சமுதாயத்தில் ஒதுக்கப்பட்ட மக்களுக்குங்கூட இவற்றைப் பற்றிச் சொல்ல புராணங்கள் பயன்பட்டன.

இதுபற்றிப் பேசவந்த வாயு புராணம் 33, 34 பாடல் களில் சொல்லும் செய்தியைக் கருத்தில் கொள்வது நலம். அக்கால மெய்ஞ்ஞானிகள் அரசர்களின் அவைகளில் பணி

புரியும் சூதர்களுக்கென்று சில கடமைகளைக் கூறியுள்ளனர். அரசர்களுடைய வரலாற்றையும், அவர்கள் முன்னோர் களின் வரலாற்றையும், தெய்வங்களின் வரலாற்றையும் இச் சூதர்கள் புராணங்களாகப் பாடி எல்லா மக்களுக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும். அவ்வாறு கூறும் பொழுது பொதுமக்களுக்குப் புரியக்கூடிய மொழியில் இவற்றைக் கூறவேண்டும். (இங்கு குறிக்கப்பட்ட சூதர்கள் என்பவர்கள் பிராமணப் பெண்ணிற்கும், பிராமணரல்லாத ஓர் ஆணுக்கும் பிறந்தவர்கள் ஆவர். பெரும்பாலான புராணங்களின் தொடக்கத்தில் அப்புராணங்களை முனிவர்களுக்கு எடுத்துக் கூறும் லோம ஹர்ஷனர் என்பவரும் ஒரு சூதரே ஆவார். இவர் வேதவியாசரின் சீடரும் ஆவார்) இக் காலத்தில் கூடக் கற்றவர்கள் பலரும், வேதத்தை அத்யயனம் பண்ணும் பிராமணர்களும் மற்ற பிராமணர்களும் கூட ஒரு தவறான கருத்தைக் கொண்டுள்ளனர். வேதம் என்பது பிராமணர்களுடைய தனிச் சொத்து என்றும், அது பிறரால் படிக்கப்படக் கூடாதது என்று எண்ணும் தவறான கொள்கை இருந்து வருகிறது. இதுபோன்றவற்றைப் போக்கவே வாயு புராணம் போன்ற புராணங்கள் இதனை மறுத்துப் பேசுகின்றன.

யாஸ்க்கர் முனிவரின் கொள்கைப்படி புராணங்கள் என்பவை என்றோ நிகழ்ந்த நிகழ்ச்சியை இன்றுள்ள அறிவையும், அனுபவத்தையும் கொண்டு அப்பழைய நிகழ்ச்சிக்குப் புதிய விளக்கம் தருவதாகும். வரலாறு என்பது ஒரு சமுதாயத்தின் வாழ்க்கையை, நிகழ்ச்சிகளை தேனொழுக்குப் போல் சொல்வதில்லை. ஒரு நூறாண்டு வரலாற்றை எடுத்துக் கொண்டால், அதில் நிகழ்ந்த பெரிய நிகழ்ச்சிகளை மட்டும் அது குறித்துச் சொல்லும். இடையே நிகழ்ந்த சிறுசிறு நிகழ்ச்சிகள் இப்பெருநிகழ்ச்சிக்கு எவ்வாறு உதவியாக அல்லது விரோதமாக இருந்தன

என்பதைக் குறிப்பிடுவதில்லை. புராணங்களில் வரும் மரபு மன்னர்களின் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அந்தந்த மன்னருடைய ஆட்சிக்காலத்தில் விரிவாக எழுதப்பட்டு வைக்கப்பட்டிருந்தன என்பது உண்மைதான். ஆனால் காலதேவனின் கொடுமையாலும், படையெடுப்பு, வெள்ளம், நெருப்பு ஆகியவற்றாலும் இவை அழிந்து விட்டன. ஆதலால் நமக்கு அவை கிடைக்கவில்லை. இன்று கிடைத்துள்ள புராணங்களும் வரலாற்று அடிப்படையில் எழுதப்பட்டவையல்ல. பௌராணிகர்களின் கைவண்ண மும் இதில் இடம் பெற்றுள்ளமையால் அவை ஒருசில மன்னர்களை அதீத ஆற்றலுடையவர்களாகக் காட்டிச் செல்கிறது. அந்த மன்னர்களின் வரலாற்றிலும் ஒரு தொடர்ச்சி காணப்படுவதில்லை.

பல புராணங்களிலும், குறிப்பாக விஷ்ணு புராணத் திலும் யவனர், சாகர்கள், கம்போஜர்கள் ஆகியவர்களைப் பொதுவாகக் குறிப்பிடுகின்றது. மார்க்கண்டேய புராணத் திலும் பிரம்மாண்ட புராணத்திலும் பாரதவர்ஷத்தின் கிழக்கில் கிராதர் நாடும் மேற்கில் யவன நாடும் தெற்கில் பொதிகை மலையும், வடக்கே இமயமலையும் எல்லை களாகக் கூறப்பட்டுள்ளன.

புராணங்கள் 18 என்ற எண்ணிக்கையுடன் இப்பொழுது இருந்தாலும் இந்தப் பதினெட்டும் ஒன்றிலிருந்தே கிளைத்தன என்று மச்ச புராணம் குறிப்பிடுகிறது. தொடக்கத்தில் நூறு கோடி பாடல்களுடன் கூடிய மச்ச புராணம் மட்டுமே இருந்தது. நாளாவட்டத்தில் அறிஞர்களும் பௌராணி கர்களும் குறிப்பிட்ட ஒரு தெய்வத்திற்குத் தலைமைத் தன்மை தருவதற்காக இப்புராணங்களை இயற்றினர். உதாரணமாக விஷ்ணு புராணம், பாகவத புராணம் போன்றவை விஷ்ணுவைச் சிறப்பித்தும், வாயு புராணம், இலிங்க

புராணம் என்பவை சிவனைச் சிறப்பித்தும், பிரம்ம புராணம் பிரம்மனைச் சிறப்பித்தும், மார்க்கண்டேய புராணம் துர்க்கையைச் சிறப்பித்தும், ஸ்கந்த புராணம் கார்த்திகேயனைச் சிறப்பித்தும் பாடப்பெற்றன. இப் புராணங்கள் அனைத்திலும் அறுபது சதவிகிதம் கதைகள் சிறுசிறு மாற்றங்களுடன் ஒவ்வொரு புராணத்திலும் இடம் பெற்றுள்ளன. பூமியின் உற்பத்தி பற்றியும் ஏறத்தாழ ஒரே மாதிரியான கதைகள் இப்புராணங்களில் பேசப்பட்டுள்ளன. ஒரு பொதுவான மூல நூலிலிருந்து பெரும் பகுதி விஷயங் களை எடுத்துக் கொண்டு ஓரளவு தத்தமக்குத் தேவையான புதியனவற்றைச் சேர்த்து ஒவ்வொரு புராணமும் படைக்கப் பெற்றது. இவ்வாறு ஒரு மூலத்திலிருந்து புதிய வடிவுடன் வேறு நூல்கள் தோன்றுவது இயல்பே என்பது வேதங்களி லிருந்தே அறியலாம். யஜுர் வேதத்தின் பெரும்பகுதி ரிக் வேதத்தில் உள்ளவையே ஆகும். இதனால் ஒரே ஒரு மூல புராணத்திலிருந்து இவை தோன்றின என்று நினைப்பதில் தவறில்லை.

இப்புராணங்கள் அனைத்துமே, இவ்வுலகிடைப் பிறந்த மனிதன் பல்வேறு சிக்கல்கள் நிறைந்திருக்கும் வாழ்க்கையில் எவ்வாறு அமைதியான வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்பதையும், தர்ம, அர்த்த, காமம் ஆகிய மூன்றையும் எப்படி அளவறிந்து வாழ்க்கையில் மேற் கொள்ள வேண்டும் என்பதையும் கதைகளுள் புகுத்தி நமக்கு அறிவுறுத்துகின்றன.

இந்த எல்லாப் புராணங்களிலும் முடிவுரை என்ற தலைப்புடன் சில பகுதிகள் காணப்படுகின்றன. இந்தப் புராணத்தை ஒருமுறை படித்தாலும், கேட்டாலும் இன்ன இன்ன பயன் ஏற்படும்; இருமுறை, மும்முறை படித்தால், கேட்டால் இன்ன பயன் ஏற்படும் என்று சொல்லப்

பட்டிருப்பதை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். பல்வேறு தவறுகளைச் செய்த ஒருவன் இவற்றை ஒருமுறை படித்து விட்டால் தன் பாவங்களிலிருந்து விடுதலை அடைவான் என்று சொல்வது மேலோட்டமாகப் பார்ப்பதற்கு நகைப்பைத் தருவதாகும். ஒருவன் செய்த குற்றத்திற்குத் தண்டனை அனுபவிக்காமல் தப்பித்துக் கொள்ளலாம் என்பது இந்த நாட்டின் வினைக் கொள்கையோடு (Karma theory) மாறுபட்டதாகும். அப்படியிருக்க இவ்வாறு கூறுவதன் நோக்கம் என்ன? எத்தகைய குற்றம் செய்தவனும் முழு நம்பிக்கையோடு, ஈடுபாட்டுடன் இப்புராணங்களைக் கேட்பானாயின் அவன் தன் பிழைகளுக்கு வருந்துவான். மேற்கொண்டு அத்தகைய தவறுகளைச் செய்யமாட்டான் என்பதே அடிப்படைக் கருத்தாகும். இதனைப் புரிந்து கொள்ளாவிட்டால், புராணங்களின் அடிப்படையைத் தவாறகப் புரிந்துகொள்ள நேரிடும். கொனாரக்கில் உள்ள சூரியன் சிலையையும், புருஷோத்தம நகரிலுள்ள சிவன், விஷ்ணு சிலைகளையும் ஒருமுறை தரிசித்தால், தீர்த்தங் களில் ஒருமுறை குளித்தால் எல்லாப் பாவங்களும் போய் விடும் என்று சொல்வதன் கருத்தும் இதுவேயாகும்.

இடைக் காலத்திலும், பிற்காலத்திலும் புராணங்கள் அதிகம் பயிலப்படாத காலத்தில் சில புதுமைகள் நிகழ்ந்தன. ஏறத்தாழ எல்லாப் புராணங்களும் குப்தர் பரம்பரைக் காலத்தோடு முடிவடைந்து விட்டன. ஆனால் அவ்வப் பொழுது அந்தந்தப் பிராந்தியங்களில் இடைச் செறுகல்கள் நுழையாமல் இல்லை. வடமொழியில் சுலோகங்கள் இயற்றக் கூடிய பிராமணர்கள், பௌராணிகர்கள் என்பவர்களின் தயவால் இடைச் செறுகல்கள் புராணங்களில் புகுத்தப் பெற்றன. இந்த விநோதமான நிகழ்ச்சி 19ஆம் நூற்றாண்டின் கடைசிப் பகுதிவரை நடைபெற்றது என்பதற்கு பவிஷ்ய புராணமே தக்க சான்றாகும். பவிஷ்யம் என்ற சொல்லிற்கு

எதிர்காலத்தை உணர்த்துவது என்ற பொருளும் உண்டு. ஆதலால் இடைச் செறுகல்காரர்கள் தங்கள் கைவரிசை யைக் காட்ட இப்புராணத்தைத் தேர்ந்தெடுத்தனர். பல புராணங்கள் குப்த பரம்பரையோடு முடிய, இப்புராணம் முகமதியர் படையெடுப்பைக் கூறுவதுடன் முகமதுகோரி, தீமூர் என்பவர்களைப் பற்றியும் குறிப்பிடுகிறது. முகமதிய அரசர் பற்றியும் அவர்கள் படையெடுப்புப் பற்றியும் இப் புராணத்தில் பாடிச் சேர்த்ததன் உள்நோக்கம் எளிதில் புரிந்து கொள்ளலாம். வெளிநாட்டிலிருந்து இடைக் காலத்தில் புகுந்த முகமதியர் படையெடுப்பு நியாயமானது. ஏற்கெனவே புராணத்தில் கூறப்பட்டுள்ளது என்ற எண்ணத்தை மக்கள் மனத்தில் உண்டாக்குவதற்கேயாம்.

இதனையடுத்து விவிலியத்திற் காணப்படும் ஆதாம் ஏவாள் கதை, இயேசுவின் வரலாறு என்பவற்றில் தொடங்கி, விக்டோரியா மகாராணியின் வரலாறு வரை பவிஷ்ய புராணத்தில் இடம்பெறுவது வியப்பைத் தருவ தாகும். இடைக் காலத்திலிருந்த முகமதியர்களும், பிற் காலத்தில் வந்த கிறிஸ்தவர்களும் தங்கள் படையெடுப்பை நியாயப்படுத்திக் கொள்ளச் செய்த பல்வேறு சூழ்ச்சி களில் இதுவும் ஒன்றாகும். புராணங்களைப் போலவே வடமொழியில் பாடல்கள் இயற்றவல்ல பிராமணர்கள் முகமதிய, கிறிஸ்தவர்கள் தந்த பொருளுக்காக அவர்களைச் சிறப்பித்துப் பாடி அதை பவிஷ்ய புராணத்திலும் சேர்க்கக் கூடிய அளவிற்குத் துணிந்துவிட்டமையின் புராணங்களும் மதிப்பை இழக்க லாயின.

இப்புராணங்களில் ஒவ்வொருவருடைய ஆயுள், ஆண்ட காலம், சிலர் தவம் இயற்றிய காலம் என்பவற்றைப் பார்க்கும் பொழுது ஒரு மலைப்புத் தோன்றும். ஆயிரம் ஆண்டுகள், பத்தாயிரம் ஆண்டுகள், பதினாறாயிரம்

ஆண்டுகள் என வரும் காலக் கணக்கு நம்மைச் சிந்திக்க வைப்பதாகும். பௌராணிகர்களின் உயர்வு நவிற்சி அணியின் பாற்படுமோ என்றும் நினைக்கலாம். வேதத்தில் மனிதனுடைய ஆயுட்காலம் நூறாண்டுகளாகும் என்று குறிக்கப்படுகிறது. பிற்காலத்தில் வந்த ஆழ்வாரும் "வேதநூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேனும்" என்று பேசுகிறார். எனவே வேதத்தை ஏற்றுக்கொள்ளுகின்ற இந்தப் புராணங்கள் ஆயிரம், பதினாயிரம் என்று கணக்குப் போடுவதில் ஏதோ ஒரு புதுமை இருக்க வேண்டும். புராண ஆய்வாளர்கள், 'வர்ஷ' என்ற சொல் இப்பொழுது வருடம் என்பதைக் குறிப்பது போல அக்காலத்தில் ஒரு நாளைக் குறித்திருக்கலாம் என்று கருதுகின்றனர். எனவே அதை ஏற்றுக் கொண்டால் ஆயிரம் வருடம் என்பது ஆயிரம் நாட்களாகக் குறுகிவிடும். இந்த முறை தவிர வேறு வழியில் இதனை ஏற்றுக் கொள்ள முடியாது.

**மன்வந்திரங்கள்**

சத்திய, திருத, திரேத, கலி இந்த நான்கு யுகங்களுக்கும் சேர்ந்த ஒரு மகாயுகத்திற்கு எல்லை 43,20,000 மனித ஆண்டுகள் ஆகும். இதுபோன்று எழுபத்தியொரு மகாயுகங்களுக்கு 43,20,000 X 71 = 30,67,20,000 ஆண்டுகள் ஒரு மன்வந்திரமாகும். இதுபோன்று 14 மன்வந்திரங்களுக்கு, இந்த எண்ணிக்கையை 14ஆல் பெருக்கினால் வரும் ஆண்டுகள் ஒரு கல்பம் எனப்படும். இந்த கல்பம் பிரமனுடைய ஒரு நாளாகும். பிரமனுடைய ஓர் இரவும் இதே அளவுள்ள ஆண்டுகளாகும். பிரமனுடைய நாளின் முடிவில், அதாவது 14 மன்வந்திரங்களின் முடிவில் ஒரு மகாபிரளயம் தோன்றுகிறது. அதன்பிறகு பிரமனுடைய இரவு முழுவதும் சூன்யமே நிலவுகிறது. பிரமனுடைய மறுநாள் காலையில் மறுபடியும் உற்பத்தி தொடங்குகிறது.

பிரம்மாண்ட புராணத்தின் இக்கணக்கு, நம் அறிவையும் மனத்தையும் கதிகலங்கச் செய்யும் ஓர் எண்ணிக்கை யாகும்.

இவ்வாறு நம் முன்னோர் கூறியதன் அடிப்படையைச் சிந்திக்க வேண்டும். இந்த பூமி நித்தியத்துவம் வாய்ந்தது என்பதைக் குறிப்பதற்கே இந்தக் கணக்கைப் பயன் படுத்தினர். யுக முடிவில் மகாபிரளய காலத்தில் 5 பூதங்களும் ஒன்றுக்குள் ஒன்று ஒடுங்கி ஆகாயமாக நின்று விடுகின்றது. அதனையே, திருமாலின் வயிற்றுக்குள் அனைத்தும் சென்று அடங்கிவிடுகின்றன என்று நம் முன்னோர் கூறினர். மறுபடைப்புக் காலத்தில் ஒன்றிலிருந்து ஒன்று வெளிப்பட்டுப் பிரபஞ்சமாகக் காட்சியளிக்கிறது. இவை ஒன்று ஒன்றாக மாறுதல் அடைவது தவிர, உள்ளது அழிவதுமில்லை, இல்லாதது தோன்றுவதுமில்லை.

திரு. எஸ்.டி. குல்கர்னி அவர்கள் பொதுப் பதிப்பாசிரிய ராக இருந்து வெளியிட்டுள்ள 'The Puranas' என்ற நூலின் 2வது பாகத்தில் வியாச முனிவர்களைப் பற்றிப் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. ஆழ்ந்து சிந்தித்தால் அவர் கூற்று பெரிதும் பொருத்தமுடையதாகவே காணப்படுகிறது. 5 வேதங்களை அனைவரும் படித்துப் புரிந்துகொள்வது என்பது மிகவும் கடினமான காரியம். ஆகவே வேத ஆராய்ச்சி செய்து மக்களுக்குப் புரியும் வகையில் அதனை எடுத்துச் சொல்பவர்கள் வியாசர் என்று அழைக்கப் பட்டனர். ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு வேதவியாசர் இருந்ததாக வாயு புராணம் கூறுகிறது. முதலாவது வேத வியாசர் சுவயம்பு மனுவே ஆவார். இப்புராணத்தில் 28 வியாசர்கள் இருந்தார்கள் என்று சொல்லப்படுகிறது.

இந்தப் பதினெட்டு மகாபுராணங்களிலும் எல்லா தெய்வங்களும் ஒவ்வொரு புராணத்திலும் பேசப்

படுகின்றனர். புராணத்தின் பெயர்களை மட்டும் வைத்துக் கொண்டு சிவ சம்பந்தமுடையது, விஷ்ணு சம்பந்தமுடையது என்று கூறுவதற்கில்லை. பதினெட்டுப் புராணங்களும் பின்வரும் முறையில் பிரிக்கப்பட்டுள்ளன. பிரமன் சம்பந்தமானவை பிரம புராணம், பத்ம புராணம்; சூரிய சம்பந்தமானது பிரம்ம வைவர்த்த புராணம்; அக்னி சம்பந்தமுடையது அக்னி புராணம்; சிவ சம்பந்தமானவை வாயு புராணம், ஸ்கந்த புராணம், இலிங்க புராணம், கூர்ம புராணம், வாமன புராணம், வராக புராணம், பவிஷ்ய புராணம், மச்ச புராணம், மார்க்கண்டேய புராணம், பிரம்மாண்ட புராணம் ஆகிய பத்து புராணங்கள்; விஷ்ணு சம்பந்தமானவை நாரத புராணம், பாகவத புராணம், கருட புராணம், விஷ்ணு புராணம் ஆகிய நான்கும் ஆகும்.

இப்புராணப் பெயர்களையும் அதில் சேர்க்கப்பட்டுள்ள தலைப்பையும் பார்க்கும்பொழுது சிலருக்கு வியப்புத் தோன்றலாம். சிவ சம்பந்தமானவை என்ற தலைப்பில் வராக புராணம், கூர்ம புராணம், மச்ச புராணம் என்ற மூன்று பெயர்கள் வருவதை கவனிக்க வேண்டும். இவை மூன்றும் விஷ்ணு சம்பந்தமானவை என்பதில் ஐயமிருப்பதற் கில்லை. என்ன காரணத்தாலோ கூர்ம புராணம், வராக புராணங்களில் சிவனைப் பற்றி இடைச் செறுகல்கள் மிகுதியாக ஏற்றப்பட்டுள்ளன. ஒரு காலத்தில், அதாவது கி.பி. 6, 7ஆம் நூற்றாண்டுகளில் சைவ, வைணவப் போராட்டம் மிகுதியாக இருந்திருக்க வேண்டும். அம்மாதிரி காலங்களில் வராகம், கூர்மம் முதலானவற்றில் சிவ சம்பந்தமுடைய கதைகளை இடைச் செறுகல்களாகப் புகுத்தினர் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். எது எவ்வாறாயினும் இம்மூவருள் யார் பெரியவர் என்ற சண்டையைப் பெரிதாக்கிப் பகைமையை வளர்க்காமல்

மூவரும் ஒருவரே என்ற கருத்தையே எல்லாப் புராணங் களும் வலியுறுத்துகின்றன.

இப்புராணங்களின் காலத்தை நிர்ணயிப்பது கடினமான காரியமாகும். காரணம் எந்த ஒரு புராணமும் தோன்றிய நிலையில் இன்றில்லை. இந்தியாவில் தோன்றிய எல்லா நூல்களையும் போலப் புராணங்களிலும் மூலத்தைவிட இடைச் செறுகல் பகுதி மிகுத்துக் காணப்படுகின்றன. திரு. எஸ்.டி. குல்கர்னி பதிப்பித்த 'The Puranas' என்ற நூலில் இன்றைய ஆராய்ச்சியாளர் பலரும் ஏற்காத முறையில் ஆதிசங்கரர் காலத்தை கி.மு. 509 என்றும், சங்கரரின் ஆசிரியருக்கு ஆசிரியரான கௌடபாதரின் காலத்தை கி.மு. 600 என்றும் கொள்கிறார். புத்தருடைய சாங்கிய மத நியாயவாதங்களை வாதிட்டு வெல்ல முயன்ற சங்கரர் காலத்தை கி.மு. 509 என்று கூறுவது பொருத்தமா என்று சிந்திக்க வேண்டும். இவ்வாறு சங்கரரை கி.மு.விற்குக் கொண்டு போவதால் புராணங்களை முன்னே கொண்டு செல்ல ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது. ஆதிசங்கரர் தம்முடைய பாஷ்யத்தில் விஷ்ணு புராணத்திலிருந்து பல பாடல்களை மேற்கோள் காட்டுவதால் விஷ்ணு புராணம் கி.மு. 500க்கு முற்பட்டது என்று திரு. குல்கர்னி கூறுகிறார். இன்றைய ஆராய்ச்சியாளர்கள் பெரும்பாலோரால் ஏற்றுக் கொண்டுள்ளபடி வேதகாலம் என்பதே கி.மு. 1500 முதல் 1000 வரை உள்ளதாகும். திரு. குல்கர்னி அவர்கள் வேதம் நான்காகப் பிரிக்கப்பட்ட காலத்தை கி.மு. 3200 என்று கொள்கிறார். வேதத்தை வகுத்தவர் வியாசர் ஆதலாலும், அந்த வியாசரே புராணங்களின் ஆசிரியர் என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளதாலும், புராணங் களின் காலம் கி.மு. 3100 என்ற முடிவிற்கு வருகிறார் குல்கர்னி. எல்லாவற்றிற்கும் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்ட பழைமையைக் காட்டுவதால் அதற்கொரு சிறப்பு

கிடைக்குமென திரு. குல்கார்னி போன்றவர்கள் கருதுவதாகத் தெரிகிறது.

இந்தக் கால ஆராய்ச்சிக் கற்பனையை ஒதுக்கிவிட்டு, சில சிந்தனைகளைக் கைக் கொள்ளவேண்டும். சில புராணங்கள் சூரிய, சந்திர பரம்பரையைக் கூறும்பொழுது புத்தர்வரை பேசுகிறது. அடுத்தபடியாக கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த திருநாவுக்கரசர் 'இலிங்க புராணத்துள்ளார்' என்று சிவனைக் குறிப்பதாலும், கி.பி. ஏழின் பிற்பகுதியில் வாழ்ந்த திருமங்கை மன்னன் 'இலிங்கத்திட்ட புராணத்தீர்' என்று கூறுவதாலும், பெரும்பாலான புராணங்களின் கீழ் எல்லை கி.பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டு என்று கருதலாம். இதன் மேல்எல்லை கி.மு. 3 அல்லது 2ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

ஏறத்தாழ எல்லாப் புராணங்களிலும் தரும சாஸ்திரங் களின் தாக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. ஒரு புராணம் தவறாமல் எல்லாவற்றிலும் வர்ணாச்ரமத்திற்குத் தனிச் சிறப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நூற்றுக்குத் தொண்ணூற் றெட்டுக் கதைகள் பிராமணர் பற்றியே இருக்கின்றன. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு நோக்கும் பொழுது பிராமணியம் ஈடுஇணையற்ற செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் இந்த தரும சாஸ்திரப் பகுதி புராணங்களில் புகுத்தப்பட்டிருக்க வேண்டும்.

இந்த அடிப்படையைக் கொண்டு பார்த்தால் குப்தர்கள் காலம் நம் கண்முன் வந்து நிற்கிறது. குப்தர்களுக்கு முற்பட்ட காலத்தில் ஹுணர்கள் வடஇந்தியாவின் பெரும் பகுதியைப் பிடித்து ஆண்டனர். அவர்களுக்குப் பிறகு வந்த குப்தர்கள் ஹுணர்களை வென்று அடக்கி இந்து சாம்ராஜ்யத்தை நிலைநாட்டினர். ஹுணர்கள் காலத்தில்

மறையத் தொடங்கிய இந்து சமயத்திற்கு ஒரு மறுமலர்ச்சி செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் சுருக்கமாக இருந்த புராணக் கதைகளுக்கு வடிவு கொடுக்க குப்தர்கள் முயன்றிருக்க வேண்டும். குப்தர்கள் காலத்தில் சாணக்கியன் முதலான பிராமணர்களுக்கு அளவு மீறிய செல்வாக்கு தரப்பட்டிருந்ததை வரலாற்றில் அறியலாம். அந்தச் செல்வாக்கைப் பயன்படுத்தி குப்தர் காலத்துப் பிராமணர்கள் இப்புராணங்களைப் பழைமையோடு புதிய பல பகுதிகளைச் சேர்த்து விரிவாகப் பாடியிருக்க வேண்டும். புராணங்களுக்குத் தனி மகத்துவம் இருந்தமை யாலும், அதில் சொல்லப்பட்டவற்றை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே இருந்ததாலும் எல்லாப் புராணங்களிலும் வர்ணாஸ்ரமப் பகுதி மிகுதியாகப் புகுத்தப்பட்டது.

இவ்வாறு, வடமொழி பலருக்கும் தெரியாத காரணத்தால் எதை வேண்டுமானாலும் அதில் புகுத்தலாம் என்ற நிலை அன்றிருந்தது என நினைக்க வேண்டியுள்ளது. அதேபோல வடமொழியில் உள்ளதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து எழுதும் இக்காலத்தில் கூட இத்தகைய தவறுகள் வேண்டுமென்றே செய்யப்படுகின்றன என்பதற்கு ஓர் உதாரணத்தைக் காணலாம். அரசர்களுடைய அவையிலும், முனிவர்களிடையேயும் கூட 'சூதர்கள்' என்ற ஒரு இனத்தவர் உண்டு. இவர்கள் நால்வகை வர்ணத்திலும் சேராதவர்கள். ஒரு பிராமணப் பெண்ணிற்கும், பிராமணர் அல்லாத தந்தைக்கும் பிறந்தவர்களே சூதர்கள் என்றழைக்கப் பட்டவர்கள். வேதவியாசரின் சீடரும், பல புராணங்களை முனிவர்களிடையே புராணப் பிரசங்கம் செய்யும் லோம ஹர்ஷனர் என்ற முனிவரும் சூதரினத்தைச் சேர்ந்தவரே யாவர்.

ஆனால் இந்தச் சூதர்களைப் பற்றிச் சொல்லவரும் திரு. குல்கர்னி தாம் பதிப்பித்த 'The Puranas' என்ற நூலின் இரண்டாவது பகுதியில் 41ஆம் பக்கத்தில் சூதர்கள் என்பவர்கள் பிராமணத் தந்தைக்கும் சூத்திரர் இனத்தைச் சேர்ந்த பெண்ணிற்கும் பிறந்தவர்கள் என்று கூறுகிறார். இவ்வாறு வேண்டுமென்றே செய்யப்படும் தவறுகளும், அறியாமை காரணமாகச் செய்யப்படும் தவறுகளும் புராணங்களின் ஆராய்ச்சிக்குப் பெரிதும் இடையூறாக உள்ளன.

பதினெட்டுப் புராணங்களைத் தமிழில் சுருக்கி எழுத வேண்டும் என்ற எண்ணம் தோன்றிய உடன் அநேகமாக எல்லாப் புராணங்களும் மூலநூல் மறைந்துவிட்டபடியால் புதிதாகப் படைக்கப்பட்டன என்று முன்னர் குறிப்பிடப் பட்டுள்ளது. தமிழ் நாட்டைப் பொருத்தவரை கச்சியப்ப சிவாச்சாரியார் இயற்றிய கந்த புராணம் மிகச் சிறப்புடைய தாகும். உற்பத்திக் காண்டம், அசுர காண்டம், தேவ காண்டம், யுத்த காண்டம் என்ற பகுதிகளையுடைய கந்த புராணத்தை ஸ்காந்தத்திலிருந்து பெறப்பட்டது என்று பலர் கூறுவர். வடமொழி ஸ்கந்த புராணத்தில் முதல் பகுதியில் உள்ள சங்கர சம்ஹிதையில் உள்ள முதற்காண்டமாகிய சிவரகஸ்ய காண்டம் என்ற பகுதியே கச்சியப்பருக்கு மூலமாகும்.

வடமொழிப் புராணங்கள் தமிழ் நாட்டில் மூலத்திலோ, மொழிபெயர்ப்பிலோ அதிகம் வழங்கவில்லை. அது ஏனென்று தெரியவில்லை. அது அதிகம் வழங்கப் படாமையின் இப்புராணங்கள் அனைத்தும் ஒன்றிரண்டு தவிர தமிழில் மொழிபெயர்க்கப்படவும் இல்லை. தமிழ்க் கந்த புராணம் வடமொழி மூலத்தைத் தழுவிய புதுப் படைப்பாகும். கம்பனுடைய இராம காதையைப் போல இதுவும் ஒரு முயற்சியாகும்.

*முழுவதுமாகப் பாடல் பாடலாக சிறந்த முறையில் பாடல்களாகவே மொழிபெயர்க்கப்பட்டுள்ளது கூர்ம புராணமாகும். நைடதம் பாடிய அதிவீரராம பாண்டியர் இக்கூர்ம புராணத்தை இரண்டு காண்டங்களாகவும், 97 அத்தியாயங்களாகவும் பிரித்து 3,717 பாடல்களாகப் பாடியுள்ளார்.*

*பதினெட்டு புராணங்களின் சுருக்கத்தைத் தமிழில் எழுதி வெளியிட வேண்டும் என்ற எண்ணம் மனத்தில் இருந்து வந்தது. இம்முயற்சிக்குத் தேவையான அனைத்து நூல்களையும் தந்து உதவிய* Dr. M.R.P. *குருசாமி* M.A., Ph.D., *திரு.* I. *ரவி ஆறுமுகம்* B.E., M.L., I.P.S. *அவர்களுக்கும் நன்றி பெரிதுடையோம். வடமொழிப் பகுதிகளில் பல சந்தேகங்களைத் தீர்த்து உதவியவர் அண்மையில் காலஞ்சென்ற உழுவல் அன்பர் டாக்டர்* K.R. *நஞ்சுண்டன்* M.A., Ph.D. *அவர்கட்கும் எங்கள் நன்றி உரியதாகும்.*

*இம்முயற்சியில் மூல நூல்களைப் படிப்பதற்கும் சுருக்கி எழுதுவதற்கும் வாய்மொழியாகக் கூறியவற்றை எழுத்து வடிவில் கொண்டு வருவதற்கும் உதவிய என் மகளார் ஞா. மீராவுக்கு என் வாழ்த்துக்கள் உரியதாகும். நூல் வடிவுபெறப் பேருதவி செய்தமையால் அவர் பெயரும் ஆசிரியர் பெயருடன் சேர்க்கப்பட்டுள்ளது.*

**– அ. ச. ஞானசம்பந்தன்**

# பொருளடக்கம்


| வரிசை எண் | பொருள் | பக்கம் |
| --- | --- | --- |
| 1. | பிரம்ம புராணம் | 1 |
| 2. | பத்ம புராணம் | 43 |
| 3. | விஷ்ணு புராணம் | 79 |
| 4. | வாயு புராணம் | 135 |
| 5. | பாகவத புராணம் | 185 |
| 6. | நாரத புராணம் | 241 |
| 7. | மார்க்கண்டேய புராணம் | 279 |
| 8. | அக்னி புராணம் | 337 |
| 9. | பவிஷ்ய புராணம் | 391 |
| 10, | பிரம்ம வைவர்த்த புராணம் | 421 |
| 11. | இலிங்க புராணம் | 461 |
| 12. | வராக புராணம் | 481 |
| 13. | ஸ்கந்த புராணம் | 531 |
| 14. | வாமன புராணம் | 587 |
| 15. | கூர்ம புராணம் | 623 |
| 16. | மச்ச புராணம் | 657 |
| 17. | கருட புராணம் | 695 |
| 18. | பிரம்மாண்ட புராணம் | 723 |

# 1. பிரம்ம புராணம்

## இப்புராணம் பற்றி...

*பிரம்ம புராணம் என்று கூறப்படும் இப்புராணம் ஆதிபுராணம் என்றும் சொல்லப்படும். பிரம்ம புராணம் என்பது, பரப்பிரம்மத்தைப் பற்றிக் கூறுவது என்று பொருள்தரும். இதன் மூலம் இப்பொழுது கிடைக்க வில்லை. கிடைத்துள்ள பகுதி மூலத்தோடு எவ்வளவு தொடர்புடையது என்று சொல்வதற்கில்லை. ஆராய்ச்சி யாளர்கள் இப்பொழுதுள்ள பிரம்ம புராணத்தை உப புராணங்களில் ஒன்றே எனக் கருதுகின்றனர். இந்த பிரம்ம புராணம் பரப்பிரம்மத்தை விரிவாக விளக்கத் தொடங்குகிறது. தைத்திரிய உபநிடதத்தில் பிருகு வல்லி கூறும் பரப்பிரம்மம் பற்றிய இலக்கணத்தை அடியொற்றியே இந்த பிரம்ம புராணம் பேசுகிறது.*

*"எந்தப் பரப்பிரம்மத்திலிருந்து இந்த உயிர்கள் தோன்றுகின்றனவோ, எந்தப் பரப்பிரம்மத்தின் தயவால் இந்த உயிர்கள் உலகிடை நிலை பெறுகின் றனவோ, அந்தப் பரப்பிரம்மத்தினிடமே இந்த உயிர்கள் அனைத்தும் சென்று அடைகின்றன" – இதுவே பிருகுவல்லி கூறும் பரப்பிரம்மத்தின் இலக்கணம்.*

*"சத்தியம், ஞானம், ஆனந்தம், பிரம்மம்" என்ற சுருதி வாக்கியத்தை அடியொற்றி, "அது என்றுமுள்ளது, ஆனந்த மயமானது, தூய்மையே வடிவானது, கருணை நிரம்பியது, ஞான வடிவானது" என்று பிரம்ம புராணம் பேசுகிறது. வாழ்க்கையின் குறிக்கோள் தர்மமே என்று பேசுகிறது.*

*இப்புராணம் 246 அதிகாரங்களையும், 14,000 பாடல்களையும் கொண்டது. லோமஹர்ஷனரே இப் புராணத்தைக் கூறுவதாக பிரம்ம புராணம் தொடங்கு கிறது. பிரபஞ்ச உற்பத்தி, நிலைபேறு, அழிவு ஆகிய வற்றை மற்ற புராணங்கள் கூறுவது போலவே பிரம்ம புராணமும் கூறுகிறது. இந்த ஸ்வேத வராக கல்பத்தில் பிருது முதன்முதலில் மன்னனாக முடிசூட்டிக் கொண்டான் என்ற கதை இப்புராணத்தில்தான் வருகிறது.*

*இந்தப் புராணத்தில் பாரத நாட்டின் வடகோடி யிலிருந்து, தென்பகுதிவரை உள்ள ஆறுகள், தீர்த்தங்கள், புண்ணியத் தலங்கள் ஆகியவற்றை ஒருங்கிணைத்து விவரிப்பதன் மூலம், இந்த நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு முதன்முதலாக வடிவு கொடுக் கின்றது. கங்கை, கோதாவரி, கோமதி ஆகிய ஆறுகள் நாட்டின் விளைச்சலை அதிகப்படுத்தி, பெருகி வரும் மக்கள் தொகைக்கு உணவளிக்கும் செயல் விரிவாகக் கூறப்படுகிறது.*

*இந்தப் புராணத்தில், கங்கைச் சமவெளியில் கங்கை நதி பாயுமாறு பகீரதன் செய்த முயற்சியும், இந்தியாவின் தென்பகுதியில் கோதாவரி பாயுமாறு கௌதம முனிவர் எடுத்துக் கொண்ட முயற்சியும் இப்புராணத்தில் பேசப் பெறுகின்றன. கோதாவரி*

*நதிக்கரையில் உள்ள புண்ணியத் தலங்கள் பற்றியும் இப்புராணத்தில் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.*

*(பிரம்மம், பிரம்மன் இரண்டு பெயர்களும் முற்றிலும் வெவ்வேறானவை. பிரம்மம் என்பது மூலப் பரம்பொருளைக் குறிக்கும் சொல். பிரம்மன் என்பது மும்மூர்த்திகளில் ஒருவராகிய நான்முகனைக் குறிக்கும். இப்புராணம் பிரமன் + புராணம் = பிரம்ம புராணம் என்று பெயர் பெற்றுள்ளது. இது குறிப்பிடுவது பிரம்மனையே என்று அறிந்து கொள்ளவும்)*

**நை**மிசாரண்ய வனம் மிகவும் வனப்பு வாய்ந்த ஒரு பகுதியாகும். பூத்துக் குலுங்கும் மரம், செடி, கொடிகள், பறந்து திரியும் பறவைகள், ஓடித் திரியும் விலங்குகள், சலசலத்தோடும் ஓடைகள் ஆகியவை நிறைந்துள்ள பகுதியாகும் நைமி சாரண்யம். யாருக்கும் உணவுப் பஞ்சமில்லாமல் இயற்கை வளங்களை வாரிக் கொடுக்கும் சிறப்புடையது நைமி சாரண்யம். இக்காரணங்களால் பல முனிவர்களும், ரிஷிகளும், துறவிகளும் இவ்வனத்தில் வாழ்ந்தனர். இயற்கை வளங்கள் நிறைந்திருந்தமையால் பல வேள்விகளும், யாகங்களும் அடிக்கடி இங்கு நடைபெற்றன.

ஒருமுறை பல முனிவர்களும் கூடி ஒரு மிகப் பெரிய வேள்வியை நடத்தத் துவங்கினார்கள். இங்கே உள்ள ரிஷிகள், முனிவர்கள் போக இந்த வேள்விக்குப் பிறவிடங்களிலிருந்து, பல முனிவர்கள் வந்திருந்தனர். அவருள் வேதவியாசரின் சீடராகிய உரோம ஹர்ஷனரும் ஒருவர். இப்பெயர் சற்று மருவி லோமஹர்ஷனர் என்றும் வழங்கப் பெற்றது. பல புராணங்களை வகுத்த வேதவியாசரின் சீடர் ஆதலால் புராணங்களையும், அவற்றின் கதைகளையும் உரோமஹர்ஷனர் தம் குருவினிடம் கேட்டுத் தெளிவாக அறிந்திருந்தார்.

உரோமஹர்ஷனரைப் பார்த்தவுடன் இந்த வேள்விக்கு வந்த முனிவர்கள் பலரும் அவரைச் சூழ்ந்துகொண்டு, வேதவியாசரிடம் கற்ற புராணங்களைப் பற்றித் தங்களுக்குச் சொல்லுமாறு வேண்டிக் கொண்டனர். இந்த வேள்வி 12 ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றமையால், உரோம ஹர்ஷனர் விரிவான முறையில் ஒவ்வொரு புராணம் பற்றியும் முனிவர்களுக்கு சொல்லத் தொடங்கினார்.

அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கிய உரோம ஹர்ஷனர் மிகப் பழைய காலத்தில் தட்சன் முதலிய முனிவர்கள் நான்முகனைப் (பிரம்மன்) பார்த்து பூமியின் தோற்றம் பற்றிய வரலாற்றைத் தெரிவிக்க வேண்டும் என்று வேண்டினார்கள். நான்முகன் அளித்த விடையை அப்படியே வாங்கிக் கொண்ட என் குருவான வேதவியாசர் அவற்றை எனக்கு வழங்கினார். நான் கேட்டவற்றை இப்பொழுது உங்களுக்குச் சொல்லப் போகிறேன்.

தொடக்கத்தில் எங்கும் நீரே நிறைந்திருந்தது. பரப் பிரம்மத்தின் ஒரு வடிவாகிய விஷ்ணு அக்கடலின் மேல் படுத்திருந்தார். தண்ணீருக்கு (வடமொழியில்) 'நார' என்றொரு பெயருண்டு. 'அயன்' என்ற சொல்லுக்கு 'படுக்கை' என்பது பொருளாகும். எனவே நீரின் மேல் உறங்கிய பரப்பிரம்ம சொரூபம் நார + அயன = நாராயண என்ற பெயரைப் பெற்றது. இத்தண்ணீரிலிருந்து பொன்னாலான பெரிய முட்டை நீரின் வெளியே வந்தது. அதனுள் பிரம்மன் (நான்முகன்) இருந்தான். ஓராண்டுக் காலம் முட்டையினுள்ளே தங்கியிருந்த பிரம்மன் தன்னைத் தானே தோற்றுவித்துக் கொண்ட சுயம்பு மூர்த்தி ஆவான். ஓராண்டு முடிந்ததும் இந்த முட்டையை இரண்டாகப் பிளந்து கொண்டு பிரம்மன் வெளியே வந்தான். முட்டையின் ஒரு பகுதி பரந்த ஆகாய மாகவும், மற்றொரு பகுதி இவ்விரிந்த பூமியாகவும்

மாற்றப்படலாயிற்று. இந்த பிரம்மம் எண்ணத்தின் மூலமாகவே (இச்சா மாத்திரையாக) ஏழு ரிஷிகளை உண்டாக்கின. அவர்கள் முறையே மாரீச்சி, அத்ரி, ஆங்கீரசா, புலஸ்தியா, புலஹா, கிரது, வசிட்டன் ஆகிய எழுவரும் ஆவர். பிரம்மன் இவர்களோடு நில்லாமல் ருத்ரன் என்ற கடவுளையும், சனத்குமாரன் என்ற முனிவரையும் படைத்தான். இவர்களோடு இல்லாமல் பிரம்மன் தன் உடம்பில் இருந்து ஓர் ஆணையும், ஒரு பெண்ணையும் படைத்தான். இந்த ஆண் சுவயம்புமனு என்றும், பெண் ஷத்தரூபா என்றும் பெயர் பெற்றனர். அவர்கள் இருவரும் திருமணம் செய்துகொண்டு தங்கள் குலத்தைப் பெருக்கினர். மனுவின் பரம்பரையில் வந்ததால் மக்கள் 'மானவர்கள்' என்று அழைக்கப்பட்டார்கள். மனுவுக்கும், ஷத்தரூபாவுக்கும் விரா, பிரியவிரதா, உத்தான பாதா என்ற மூன்று புத்திரர்கள் தோன்றினர். இவருள் உத்தானபாதரின் மகன்தான் பிரசித்தி பெற்ற துருவன். தேவ வருஷங்கள் மூவாயிரம் வரை துருவன் செய்த தவத்தைக் கண்டு மெச்சிய பிரம்மன் துருவனுக்குக் காட்சி தந்து, துருவ நட்சத்திரமாக அவன் விளங்குமாறு வரம் தந்தான். வடக்கே காணப்படும் சப்தரிஷி மண்டலத்தின் அடிப்பகுதியில் காணப்படுவது 'துருவ நட்சத்திரம்' ஆகும். மூன்றாவது தலைமுறையாக 'பிரசேதாஸ்' என்ற பெயருடன் பதின்மர் தோன்றினர். உலகை ஆளப் பிறந்த இவர்கள் ஆட்சி பீடத்தில் அமராமல் தவம் செய்யும் நோக்கத்துடன் கடலுக்கடியில் சென்று பதினாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தனர். இதன் காரணமாக உலகை ஆள்பவர் இன்மையால் உலகம் முழுவதும் மரங்களும், செடிகளும் மண்டி அடர்ந்து வளர்ந்து விட்டன. இவற்றின் நெருக்கம் காரணமாகக் காற்றும் உள்ளே நுழைய முடியவில்லை. உலகம் தாங்கொணாத துன்பத்தை அனுபவிக்கத் தொடங்கியது. இந்தச் செய்தி கடலுக்கடியில்

இருந்த பிரசேதன சகோதரர்கள் கவனத்திற்கு வந்தது. இயற்கையின் இந்தச் சூழலை மாற்ற அவர்கள் தங்கள் வாயின் மூலம் நெருப்பையும், காற்றையும் உண்டாக்கினர். வனங்கள் அனைத்தும் எரிந்து சாம்பலாயின.

உலகின் அழிவைக் கண்டு கலங்கிய சோமன் (சந்திரன்), ஓர் அழகிய பெண்ணுடன் பிரசேத சகோதரர்களிடம் வந்து, "நீங்கள் சினம் கொள்வதில் நியாயமில்லை. உலகை ஆள வேண்டிய நீங்கள் அத்தொழிலைத் துறந்து விட்டதால் இந்நிலை உருவாயிற்று. இப்பொழுது உலகை ஆள்வதற்கு மிக அவசரமாக ஒரு மன்னன் தேவை. இந்தப் பெண்ணை மணந்துகொண்டு அவள் மூலம் பிறக்கும் ஆண் மகவை அரசனாக்கிவிட்டால் உலகமும் செழித்து வளரும்; நீங்களும் இடையூறு இல்லாமல் தவத்தை மேற்கொள்ளலாம்" என்று கூறினான். பிரசேதர்கள் இதற்கு உடன்பட்டு அவளை மணந்து தட்சன் என்ற பிள்ளையைப் பெற்றனர். அவனே உலகத்திற்கு அரசனானான். "மக்களுக்குப் பிரஜை என்ற பெயருண்டு ஆதலால், அவர்களுக்கு பதியாக (அரசனாக) உள்ள தட்சன் 'பிரஜாபதி' என்று அழைக்கப்பட்டான்" என்று உரோம ஹர்ஷனர் கூறிக்கொண்டிருக்கும் பொழுதே, அதைக் கேட்டுக் கொண்டிருந்த முனிவர்கள் குறுக்கிட்டனர். "பெருமுனிவரே, தட்சன் என்பவன் பிரம்மனின் கால் கட்டை விரலில் இருந்து தோன்றினவன் என்றல்லவா நாங்கள் கேள்விப்பட்டிருந்தோம். அதற்கு எதிராக இப்பொழுது பிரசேதர்களின் மகன்தான் தட்சன் என்றால் எங்களுக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. தயவு கூர்ந்து விளக்க வேண்டும்" என்று கூறினார்கள்.

அதைக்கேட்ட உரோமஹர்ஷனர் "இதில் குழம்புவதற்கு எதுவுமே இல்லை. எத்தனையோ தட்சர்கள் தோன்றியுள்ளனர். அவர்களில் ஒரு தட்சன் நான்முகன் கால் கட்டை விரலில்

இருந்து தோன்றினான். இந்த தட்சன் பிரசேதர்களின் மகனாகத் தோன்றினான். ஆகவே குழம்புவதற்கு ஒன்றுமில்லை'' என்று விடை பகர்ந்தார்.

தட்சன், அசிக்கினி என்பவளை மணந்து ஐயாயிரம் பிள்ளைகள் பெற்றனர். இவர்கள் உலகத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்க முனைந்த பொழுது, நாரதர் அங்கு தோன்றி, "உலகம் எப்படிப்பட்டது, பூகோள அமைப்பு எப்படி என்பதை அறிந்து கொள்ளாமல் நீங்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்பது தவறு. எல்லாரும் சென்று உலகம் முழுவதையும் சுற்றிப் பார்த்த பிறகு ஆட்சிப் பொறுப்பை ஏற்கலாம்'' என்று கூறினார். அதன்படியே தட்சனின் மைந்தர்கள் ஐயாயிரவரும் உலகைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றனர். சென்ற வர்கள் சென்றவர்கள்தான். திரும்பவேயில்லை. தட்சன் மறுபடியும் ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றான். இவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்கப் புறப்பட்ட பொழுது மறுபடியும் நாரதர் தோன்றி இவர்களது மூத்த சகோதரர்களுக்குச் சொன்னவற்றையே திரும்பக் கூறினார். இந்த ஆயிரவரும் உலகைச் சுற்றிப் பார்க்கச் சென்றனர். சென்றவர்கள் மீளவே இல்லை.

தன்னுடைய ஆயிரம் பிள்ளைகளும் நாரதரின் புத்திமதி யைக் கேட்டு அதன்வழி நடக்கத் தொடங்கிக் காணாமலே போய்விட்டார்கள் என்பதனால், நாரதர்பேரில் தட்சனுக்கு அளவற்ற கோபம் உண்டாயிற்று. எப்படியாவது நாரதரைக் கொன்று விட வேண்டும் என்று தட்சன் முயல்கையில் பிரம்மா குறுக்கிட்டார். நாரதரைக் கொல்லாமல் இருக்க வேண்டும் என்றால் அதற்காகச் சில வரையறைகளை பிரம்மா நிறைவேற்ற வேண்டும் என்று தட்சன் கூறிவிட்டான். அவ்வரையறைகளின்படி தட்சன் பெண்களுள் ஒருத்தியை பிரம்மா மணந்துகொள்ள வேண்டும். அவள் வயிற்றில் நாரதர்

வந்து பிறக்க வேண்டும் என்பனவாகும். தட்சனுக்கு 60 பெண்கள் இருந்தார்கள். அவர்களுள் 27 பெண்களை சோமன் என்றழைக்கப்படும் சந்திரனும், பத்துப் பெண்களை தர்ம தேவதையும், எஞ்சிய பெண்களை ஆங்கீரசா முதலிய முனிவர்களும் மணம் செய்து கொண்டனர். இவருள் ப்ரியா என்பவளை மட்டும் பிரம்மன் மணந்து கொண்டான். தர்ம தேவதையை மணந்த பத்துப் பெண்களுள் அருந்ததிக்கு 'உலகத்திலுள்ள பொருள்கள்' எனும் குழந்தைகளும், வசுவிற்கு 'அஷ்டவசுக்கள்' என்ற எட்டுக் குழந்தைகளும் பிறந்தன. அஷ்ட வசுக்களுள் ஒருவனாகிய அனலன் என்பவனுக்குக் "குமரன்" எனும் பிள்ளை பிறந்தான். இந்தக் குமரன் என்ற பிள்ளையை கார்த்திகைப் பெண்கள் வளர்த்தமையின் அவன் 'கார்த்திகேயன்' எனப் பெயர் பெற்றான். அஷ்ட வசுக்களுள் ஒருவனாகிய பிரபசாவுக்கு விஸ்வகர்மா பிள்ளையாகப் பிறந்தான். விஸ்வகர்மா சிறந்த கட்டடக் கலைஞனாகவும், ஆபரணங்கள் செய்வதில் தேர்ந்தவனாகவும் இருந்தான். சோமனை மணந்த 27 பெண்களும் 27 நட்சத்திரங்கள் எனப்பட்டனர். தட்சனுடைய எஞ்சிய பெண்களில் காசிப முனிவன் 13 பெண்களை மணந்தான். அவருள் அதிதி என்ற பெண்ணுக்கு 12 ஆதித்தர்களும், திதி என்ற பெண்ணுக்கு ஹிரண்யன், ஹிரண்யாக்ஷன் முதலிய அரக்கர்களும், அவர்கள் சகோதரியாகிய சிம்ஹிகாவிற்கு வாதாபி, வில்வலன், மாரீச்சன் முதலிய அரக்கர்களும் தோன்றினர்.

அர்ஷிதா என்ற பெண்ணுக்கு கந்தர்வர்கள் மக்களாகத் தோன்றினர். சுரசா என்பவளுக்குப் பாம்புகள் பிறந்தன. காஷா என்ற பெண்ணிற்கு குபேரனுக்கு நண்பர்களாகிய யக்ஷர்கள் தோன்றினர். சுரபியின் வயிற்றில் பசுக்களும், எருமைகளும் தோன்றின. வினதாவிற்குப் பறவைகளின்



அரசனாகிய கருடனும், அருணாவும் மக்களாகத் தோன்றினர். தாமராவின் வழியில் ஆந்தைகள், வல்லூறுகள், காகங்கள், குதிரைகள், கழுதைகள், ஒட்டகங்கள் தோன்றின. குரோத வஷாவிற்கு 14,000 பாம்புகள் பிறந்தன. இலா என்பவள் வயிற்றில் மரங்கள், செடி கொடிகள் தோன்றின. கத்ரு என்ற பெண்ணின் வயிற்றில் அனந்தன், வாசுகி, தட்சகன், நகுசன் முதலிய நாகங்கள் தோன்றின. முனி என்ற பெண்ணிற்கு அப்சரஸ்கள் பெண்களாகத் தோன்றினர்.

அதிதியின் பிள்ளைகளாகிய தேவர்களுக்கும், திதியின் பிள்ளைகளாகிய அசுரர்களுக்கும் ஓயாது போர் நடந்தது. பல அசுரர்கள் தேவர்கள் தலைவனாகிய இந்திரனால் கொல்லப் பட்டனர். இதனை அறிந்த திதி இந்திரனைக் கொல்ல தனக்கு ஒரு பிள்ளை வேண்டுமென விரும்பினாள். அப்படி ஒரு பிள்ளை வேண்டுமானால் நூறு ஆண்டுகள் அவளுடைய கருவில் அப்பிள்ளை இருக்குமென்றும், அந்த நூறு ஆண்டு களும் மிகக் கடுமையான விரதங்கள் அனுஷ்டித்து கடுந்தவம் புரிய வேண்டும் என்றும் காசியபர் கூறினார். அப்படியே செய்வதாக ஏற்றுக் கொண்டாள் திதி. விரதத்தை மேற் கொண்டு பல ஆண்டுகள் சென்றன. தன்னைக் கொல்ல திதியின் வயிற்றில் ஒரு சிசு வளர்வதை அறிந்த இந்திரன் அதனை அழித்துவிடக் காலம் பார்த்திருந்தான். ஒரு நாள் அனுஷ்டானங்களை முடித்த திதி, கால்களைக் கழுவித் தூய்மை செய்து கொள்ளாமல் படுக்கையில் படுத்து விட்டாள். இந்த விரத பங்கத்தையே தனக்குச் சாதகமாக்கிக் கொண்ட இந்திரன், ஓர் அணு வடிவாக அவள் கால்களில் நுழைந்து கருவில் இருக்கும் சிசுவை ஏழு துண்டங்களாக வெட்டினான். அந்த ஏழு துண்டங்களும் 'ஓ' எனக் கதறி அழுதன. அழாதீர்கள் என்ற பொருளுடைய 'மருத்' என்ற சொல்லை மும்முறை இந்திரன் கூறியும் அத்துண்டங்கள் அழுகையை

நிறுத்தவில்லை. சினம் கொண்ட இந்திரன் ஒவ்வொரு துண்டத்தையும் ஏழு துண்டுகளாக, ஏழு துண்டங்களையும் வெட்டி 49 துண்டங்களாக ஆக்கிவிட்டான். காலாந்திரத்தில் இந்த நாற்பத்தி ஒன்பதும் பிறந்தன. 'மருத்' என்று இந்திரனால் அழைக்கப்பட்டமையின் 'மருத்துகள்' என்ற பெயருடனேயே இவர்கள் வழங்கப்பட்டனர். விரதபங்கம் ஆகிவிட்டபடியால் இந்த 49 மருத்துகளும் இந்திரனுக்குப் பகையாகாமல் அவன் நண்பர்களாகி விட்டனர்.

சுயம்பு மனுவின் மகனான உத்தானபாதனுக்கு மகனாவான் துருவன். துருவன் பரம்பரையில் வந்தவன் அங்கா. நேர்மை உடையவனான அங்கா நல்லமுறையில் ஆட்சி செய்தாலும், அவன் மனைவியாகிய சுனிதா தீயவனான மிருத்யுவின் மகளாவாள். அவள் மகனான 'வெனா' தகப்பனைப் போலில்லாமல் மிகவும் தீயவனாக இருந்தான். மேலும் தாய்வழிப் பாட்டனாகிய மிருத்யுவுடன் சேர்ந்து கொண்டு எல்லையற்ற அகங்காரம் கொண்டவனாக இந்த அண்டங்களுக்கு எல்லாம் தானே தலைவன் என்று சொல்லித் திரிந்தான். இவனைத் திருத்துவதற்காக மாரீச்சியின் தலைமையில் பல முனிவர்கள் ஒன்று சேர்ந்து வந்து எவ்வளவு எடுத்துச் சொல்லியும், வெனா அவர்கள் அறிவுரை களைக் கேட்கத் தயாராக இல்லை. எல்லையற்ற சினம் கொண்ட முனிவர்களில் அத்ரி என்ற முனிவர் வெனாவின் வலக்காலைப் பிடித்து முறுக்கி மாவு பிசைவது போல் பிசைந்தார். மிகக் குரூரமானதும், கொடியதும், பயங்கர மானதும், கரியதும் ஆன குள்ளன் ஒருவன் இக்காலின் வழி வெளிப்பட்டான். இந்த உருவத்தைக் கண்டு கலக்கமுற்ற அத்ரி முனிவர் 'உட்கார்' என்ற பொருளுடைய 'நிஷிதர்' என்று கூறினார். எனவே இந்தக் குள்ளனின் பரம்பரை நிஷிதர்கள் என்று அழைக்கப்பட்டனர். காலை முறுக்கிய பிறகு இந்த

*முனிவர்கள் வெனாவின் கையை முறுக்கிப் பிசைந்தார்கள். வெனாவினிடத்தில் இருந்த தீமைகள் முழுவதும் கால் வழியாகச் சென்றுவிட்டமையின், அவனிடமிருந்த நன்மைகள் எல்லாம் ஒன்று சேர்ந்து பிசையப்பட்ட கையின் வழியே ஒளி வடிவுடன் சிறந்த கவசம் பூண்டு 'பிருத்து' என்ற ஒருவன் வெளிப்பட்டான். இவன் வெளிப்பட்டவுடன் வெனா இறந்து விட்டான்.*

*ஒளியுடன் வெளிவந்த பிருத்துவை இப்பூமிக்கு அரசனாக்கி, பிரம்மாவே முடி சூட்டினார். பூமியிலுள்ள பொருள்களுக்கெல்லாம் யார் யார் தலைவன் என்றும், அதே நேரத்தில் அத்தலைமைப் பதவிகளையும் பிரம்மாவே பங்கிட்டுத் தந்தார். அப்பங்கீட்டின்படி மரம், செடி, கொடிகள், விண்மீன்கள், கோள்கள், யாகங்கள், தியானம், வேதியர்கள் ஆகியவர்களுக்குத் தலைவனாகச் சோமனை (சந்திரன்) நியமித்தார். வருணன் கடலுக்கும், குபேரன் செல்வத்திற்கும் அரக்கர்களுக்கும் தலைவனாக்கப்பட்டான். பன்னிரண்டு ஆதித்தியர்களுக்கும் தலைவனாக விஷ்ணுவும், அஷ்ட வசுக் களுக்குத் தலைவனாக அக்னியும் நியமிக்கப்பட்டார்கள். எல்லா பிரஜாபதிகளுக்கும் தலைவனாக தட்சனும், 49 மருத்துக் களுக்கும் தலைவனாக இந்திரனும், தைத்திரியர்கள், தானவர்கள் என்பவர்களின் தலைவனாகப் பிரஹலாதனும் நியமிக்கப்பட்டனர். பிதுர்க்களுக்குத் தலைவனாக யமனும், யட்சர்கள், ராட்சதர்கள், பிசாசுகள் ஆகியவர்களின் தலைவனாக சிவனும், மலைகளின் தலைவனாக இமவானும் நியமிக்கப்பட்டனர். நதிகளுக்குக் கடலும், பாம்புகளுக்கு வாசுகியும், கந்தர்வர்களுக்கு சித்ரரதனும், பறவைகளுக்குக் கருடனும், யானைகளுக்கு ஐராவதமும் தலைவர்களாக நியமிக்கப்பட்டனர். இதோடு நில்லாமல் நான்கு திசைகளுக்கும் நான்கு தலைவர்களை நியமித்தார்.*

## பிருத்வி என்ற பெயர்க் காரணம்

பிரம்மாவால் பங்கிட்டுத் தரப்பட்ட பூமிக்கு அரசனான பிருத்து நன்முறையில் ஆட்சி செய்ததால், பூமியில் வளங்கள் செழித்தன. பசுக்கள் பாலைப் பொழிந்தன. மகிழ்ச்சி அடைந்த முனிவர்கள் பெரிய யாகத்தைச் செய்தனர். யாகத்தின் முடிவில் 'சுதாக்கள்' என்றும், 'மகதாக்கள்' என்றும் இரு கூட்டங்கள் தோன்றின. பிருத்துவின் புகழைப் பாடுமாறு முனிவர்கள் இவர்களை ஏவினர். ஆனால் "பிருத்து மிகவும் இளையவன். இப்பொழுதுதான் ஆட்சிக்கு வந்திருக்கிறான். இன்னும் எந்த வேலையும் செய்து காட்டவில்லை. அப்படி இருக்க அவனது எந்த வீரச்செயலை எவ்வாறு புகழ்வது?" என்று சுதர்களும் மகதர்களும் முனிவர்களைக் கேட்டனர். முனிவர்கள் எதிர்காலத்தை அறியும் ஆற்றலை இவர்களுக்கு வழங்கினர். உடனே பிருத்துவின் புகழை அவர்கள் பாடினர். இந்தப் புகழ்ப் பாடல்கள் எட்டுத் திக்கும் சென்று பரவின. இப்படி இருக்கையில், பூமியின் வேறொரு மூலையில் இருந்து ஒருசிலர் பிருத்துவைக் காண வந்தனர். அவர்கள் பிருத்துவை நோக்கி, "அரசே! உன் புகழ் எட்டுதிக்கும் பரவி எதிரொலிக் கின்றது. எங்களது கஷ்டத்தை நீ போக்க வேண்டும். பூமியில் ஒன்றும் விளைவதில்லை. வளமின்மையால் பசுக்கள் பால் தரவில்லை. என்ன செய்வது?" என்று வினவினர். இதைக் கேட்ட பிருத்து மிகக் கோபம் கொண்டு தன்னுடைய வில்லை எடுத்துக்கொண்டு பூமியைப் பிளப்பதற்குப் புறப்பட்டான். அஞ்சிய பூமி, பசு வடிவெடுத்துக் கொண்டு ஓடத் துவங்கி மேலுலகம், கீழுலகம் சென்று எங்கும் புகல் கிடைக்காமையால் பிருத்துவின் எதிரே சென்று வேண்டி நின்றது. பூமியாகிய பசு பிருத்துவை நோக்கி, "அரசே! பெண்ணாகிய என்னைக் கொல்வதால் உனக்கு ஒரு பயனும் விளையாது. பெண் கொலை என்ற பாவம்தான் மிஞ்சும். அதற்கு பதிலாக இந்த

பூமியை சமன்செய். மலைகளை எல்லாம் ஒருபுறமாக ஒதுங்கி இருக்குமாறு செய்வாயாக. சமதரையில் வேளாண்மை செய்தால் தேவையான வளங்கள் உனக்குக் கிட்டும்'' என்று கூறிற்று. இதைச் செவியுற்ற பிருத்து அவ்வாறே செய்தான். மலைகளையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கிவிட்டு சமதரை பெரிய அளவில் கிடைத்தமையின் வேளாண்மை வளம் பெறலாயிற்று. பூமியின் வளம் கொழிக்கலாயிற்று. உயிர்கள் வாழ்வுக்கு ஏற்றதாக இப்பூமியைச் சரிசெய்த மன்னவன் பெயராகிய பிருத்து என்பதே பூமிக்குப் பெயராக 'பிருத்வி' என்று வழங்கலாயிற்று.

### மன்வந்திரங்கள்

பருப் பொருளாகவும், முன் பொருளாகவும் இந்தப் பேரண்டத்தின் தோற்றம், நிலைபேறு, அழிவு என்பதைப் பற்றி பிரம்ம புராணம் தரும் கணக்கைச் சுருக்கமாகக் காணலாம். நான்கு யுகங்களை அடக்கிய கால எல்லைக்கு 'மன்வந்திரம்' என்ற பெயருண்டு. ஒவ்வொரு மன்வந்திரத்திற்கும் அதிபதியாக இருப்பவர் 'மனு.' இந்தப் பிரபஞ்சம் தோன்றிய நாள்முதல் இதுவரை சுவயம்புமனு முதல் ஆறு மனுக்கள் தோன்றி மறைந்துள்ளனர். இப்பொழுது நடைபெறும் ஏழாவது மன்வந்திரத்திற்குத் தலைவன் 'வைவஸ்வத மனு' என்பதாகும். இந்த மன்வந்திரத்தில் முறையே கிருத, திரேத, துவாபர யுகங்கள் முடிந்து இப்பொழுது கலியுகம் நடைபெறுகிறது. இந்த நான்கு யுகங்களும் சேர்ந்து ஒரு 'மகாயுகம்' என்று அழைக்கப்படும். இந்த மகாயுகத்தின் கால எல்லை **12,000** தேவ வருஷங்கள் ஆகும். இதை மனிதக் கணக்கில் கொள்வதானால் **43,20,000** வருடங்கள் ஆகும். இதுபோன்றே சுழற்சி முறையில் எழுபத்தோரு மகாயுகங்கள் முடிவுற்றால் வைவஸ்வத மனுவின் ஆட்சி முடிந்து அந்த மன்வந்திரமும்

முடியும். ஒவ்வொரு மன்வந்திரத்திலும் அதற்குரிய மனு, இந்திரன், தேவர்கள், முனிவர்கள் என்பவர்கள் மாறுவார்கள். வைவஸ்வத மனுவின் ஆட்சியில் நடைபெறும் இந்தக் கலியுகத்தில் அத்ரி, வசிஷ்டர், காசியபர், கௌதமர், பரத்வாஜர், விஸ்வாமித்திரர் மற்றும் ஜமதக்கினி ஆகிய எழுவரும் இந்த மன்வந்திரம் முழுதும் இருப்பவர்கள் ஆவர். இதற்குரிய தேவதைகள், சத்தியர்கள், ருத்ரர்கள், விஸ்வதேவர்கள், வசுக்கள், மருத்துகள், ஆதித்தியர்கள் மற்றும் இரண்டு அஸ்வினிகள்.

**வைவஸ்வத மனு பரம்பரை**

சூரியனுக்கும், விஸ்வகர்மாவின் மகளுக்கும் பிறந்த முதல் குழந்தை வைவஸ்வத மனு எனப்படும். இந்த மனுவிற்கு நீண்ட காலம் குழந்தைப் பேறு இன்மையால் அவன் ஒரு பெரிய யாகத்தை நடத்தினான். அதன் பயனாக இக்சுவாகு முதலிய ஒன்பது பேர் மைந்தர் களாய்த் தோன்றினர். இக்சுவாகுவிற்கு நூறு மைந்தர்கள் தோன்றினர். ஒரு யாகம் நடத்துவதற்காகக் காட்டில் சென்று ஒரு மிருகத்தை வேட்டையாடி அதன் உடலைக் கொண்டு வருமாறு இக்சுவாகு முதல் மகனான 'விருக்சி'யை ஏவினான். காடு சென்று வேட்டையாடிய விருக்சி அதிகம் பசித்தமையால் அவ்வேட்டை மிருகத்தின் ஒரு பகுதியைத் தான் தின்றுவிட்டான். எச்சிலான பாகத்தைக் கொண்டு வந்தமையின் இக்சுவாகு அவனை நாடு கடத்திவிட்டான். இக்சுவாகு இறந்தபின் நாடு கடத்தப்பட்ட விருக்சி மீண்டு வந்து நாட்டை ஆட்சி செய்தான். இவன் ஆட்சி செய்த பகுதிக்கு அயோத்தி என்பது பெயர். விருக்சியின் மைந்தர்களுள் ஒருவனாகிய காகுஸ்தன் பரம்பரையில் தோன்றியவனே பிரசித்தி பெற்ற இராமன் ஆவான்.

## திரிசங்குவின் கதை

*துந்துபி என்ற அசுரனைக் கொன்ற குபலஷ்வாவின் மைந்தர்களில் ஒருவனாகிய திருதஷ்வாவின் பரம்பரையில் வந்த 'திரயருனி' முறையான ஆட்சியை மேற்கொண்டான். ஆனால் அவன் மகனாகிய சத்யவிரதன் அவன் பெயருக்கு நேர்மாறாக நடந்து கொண்டான். அவன் கொடுமை அதிக மாகவே அவர்கள் குருவாகிய வசிட்டன், அரசனிடம் சொல்லி சத்தியவிரதனைப் பிரஷ்டம் செய்து நாட்டிற்கு வெளியே வாழுமாறு செய்தார். திரயருனி இறந்தவுடன் நாட்டை ஆள யாருமில்லை. பஞ்சம் பீடித்து உயிர்கள் இறக்கத் துவங்கின. இந்நிலையில் அந்நகருள் வாழ்ந்த விஸ்வாமித்திரன் தன் குடும்பத்தை விட்டுவிட்டுத் தவம் செய்யச் சென்று விட்டான். பசிக் கொடுமை தாங்காமல் விஸ்வாமித்திரர் மனைவி தன் மகனை விற்க முடிவு செய்தாள். எனவே அவன் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டிச் சந்தைக்கு அழைத்துச் சென்றாள். பிரட்டனாக வெளியில் வாழ்ந்த சத்யவிரதன் அவனை விடுவித்து விஸ்வாமித்திரர் குடும்பத்தையும் தன் பொறுப்பில் ஏற்றுக் கொண்டான். உண்பதற்கு ஏதும் இன்மையால் குல குருவாகிய வசிட்டன் பசுவைத் திருடி அதைக் கொன்று தானும் தின்று விஸ்வாமித்திரர் குடும்பத்திடமும் கொடுத்தான். இதை அறிந்த வசிட்டன் சத்தியவிரதனிடம் வந்து அவன் மேல் மூன்று குற்றங்களைச் சாட்டினார். முதலாவது குற்றம், தந்தை சொல் கேளாதது; இரண்டாவது குற்றம், பசுவைத் திருடியது; மூன்றாவது குற்றம், பசுக் கொலை புரிந்தது. இதனால் அவன் பெயர் முக்குற்றம் புரிந்தவன் என்ற பொருளில் 'திரிசங்கு' என்றாயிற்று. தவத்தில் இருந்து மீண்ட விஸ்வாமித்திரர் நடந்த வற்றை அறிந்து திரிசங்குவை அரசனாக்கி ஆளச் செய்தார். இறுதியில் இந்த உடம்புடனேயே திரிசங்கு சொர்க்கம் செல்லத் தன் வரபலத்தால் ஏற்பாடு செய்தார் விஸ்வாமித்திரர்.*

### தசரதனின் முன்னோர்

*சூரிய வம்சத்தில் தோன்றிய திரிசங்குவின் மகன் அரிச்சந்திரன். அவன் பரம்பரையில் வந்தவன் திலீபன். அவன் மகனாகிய பகீரதன் கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்ததால் கங்கைக்குப் பாகீரதி என்ற பெயரும் வந்தது. இவர்கள் வழியில் தோன்றியவன் ரகு. இவனுடைய பேரனே பிரசித்தி பெற்ற இராமனின் தந்தையாகிய தசரதன் ஆவான். பிரம்ம புராணப்படி சூரிய வம்ச மன்னர்களின் வம்சாவளிச் சுருக்கம் இதுவாம்.*

### சந்திர வம்சாவளி

*படைப்புக் காலத்தில் பிரம்மனுடைய எண்ணத்தில் தோன்றிய ஏழு பிள்ளைகளில் 'அத்ரி' முனிவரும் ஒருவன் ஆவான். செய்தற்கரிய தவத்தை மேற்கொண்ட அவன் நீண்ட காலம் தவம் செய்தான். அத் தவத்தின் ஆற்றல் பெரும் சக்தியாக வெளிப்பட்டு விண்ணில் பரவியது. அவ்வாற்றலைத் தாங்கமாட்டாத ஆகாயம் அதனை மீண்டும் பூமியில் திருப்பியது. பூமிக்கு வந்த ஆற்றலில் ஒரு பகுதியே சந்திரனாகப் பரிணமித்தது. சந்திரனின் ஆற்றலைக் கண்ட பிரம்மன் தன்னுடைய ரதத்தில் அவனை ஏற்றிக் கொண்டு பூமியை 21 முறை வலம் வந்தான். அதன் பிறகு சோமனாகிய சந்திரன் நூறு பத்ம யுகங்கள் தவம் செய்தான். இத் தவத்தை மெச்சிய பிரம்மன் சோமனாகிய சந்திரனுக்கு உலகத்தில் உள்ள செடி, கொடி, மரங்களின் தலைமைப் பதவியும், பிராமணர்களின் தலைமைப் பதவியும், சமுத்திரங்களின் தலைமைப் பதவியும் கொடுத்தான். இவற்றையடுத்து சோமன் ராஜசூய வேள்வி நடத்தி எல்லையற்ற செல்வத்தைப் பெற்றான். இச் செல்வத்தின் வளர்ச்சி சோமனின் தலையை கனக்கச் செய்தது. அதிகார வெறி கொண்ட சோமன், தேவகுருவாகிய*

*பிரஹஸ்பதியின் மனைவியாகிய தாரையைக் களவாடிக் கொண்டு வந்துவிட்டான். இத் தீச்செயலுக்கு உடந்தையாக அரக்கர்களும் அவர்கள் குருவாகிய சுக்ராச்சாரியும் இருந்தனர். தாரைக்காக தேவர்களுக்கும், சோமனுக்கும் நீண்டகாலம் போர் நடந்தது. இறுதியாக பிரம்மன் தலையிட்டு தாரையை மீட்டு பிரஹஸ்பதியிடம் ஒப்பித்தார். தாரையை ஏற்றுக் கொண்ட பிரஹஸ்பதி, அவளுக்கும் சோமனுக்கும் பிறந்த பிள்ளையாகிய புதனை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டான். இந்த புதன்தான் இலாவை மணந்தவன் என்று முன்னரே குறிக்கப்பட்டுள்ளது.*

**மன்னன் யயாதியின் பரம்பரை**

*மன்னன் நகுஷனின் ஆறு பிள்ளைகளில் ஒருவனாகிய யயாதி, ஆட்சி மேற்கொண்டு உலகம் முழுவதையும் வென்றான். அவனுடைய ஐந்து மகன்களுக்கும் நாட்டை கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, நடுப்பகுதி என்று ஐந்து பகுதிகளாகப் பிரித்து ஆட்சியை ஒப்பித்து விட்டு, உலகைச் சுற்றிப் பார்க்க நினைத்தான் யயாதி. உலகம் சுற்ற தன்னுடைய முதுமை இடையூறாக இருக்கும் என்று கருதிய யயாதி தன் மூத்த பிள்ளையாகிய 'யது'விடம் தன் முதுமையைப் பெற்றுக் கொண்டு அவன் இளமையைத் தருமாறு கேட்டான். அவனும், அவன் சகோதரர்கள் மூவரும் அவ்வாறு செய்ய மறுத்து விட்டனர். அவர்களையெல்லாம் சபித்து விட்டுக் கடைசிப் பிள்ளையாகிய 'புரு'விடம் கேட்டான். அவன் மகிழ்ச்சியுடன் தன் இளமையைத் தந்தான். இளமையைப் பெற்றுக் கொண்ட யயாதி, நீண்ட காலம் உலகைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து மகனிடம் அவன் இளமையைத் தந்தான். புருவின் பரம்பரையில் வந்தவன் பரதகண்டம் என்று பெயர் வரக் காரணமான பரதனாவான். பரதனின் பரம்பரையில் வந்த 'குரு' என்ற மன்னனின் பரம்பரையில் வந்தவர்களே*

கௌரவர்கள் ஆவர். மன்னன் குரு ஆட்சி செய்த இடமே குருக்ஷேத்திரம் எனப்படும்.

யயாதி மன்னனின் மகனாகிய துர்வாசுவின் பரம்பரையில் வந்தவர்களே பாண்டியர்கள், கேரளர்கள், சோழர்கள்.

யயாதி மன்னனின் மற்றொரு மகனாகிய துருயாவின் பரம்பரையில் வந்தவர்களே காந்தார மன்னனாகிய சகுனி முதலியவர்கள். யயாதியின் பேரனாகிய சஹஸ்ரதனின் வழியில் வந்தவனே இராவணனை வென்ற கார்த்தவீரிய அருச்சுனன் ஆவான். யயாதியின் மற்றொரு பேரனாகிய குரோஷ்குவின் வழியில் வந்தவனே கிருஷ்ணன்.

**ஆதித்தன் (சூரியன்) கோயில் :** கீழ்க்கடற்கரையில் மணற்பாங்கான பிரதேசத்தில் சூரியனுக்கு ஒரு கோயில் உள்ளது. இக்கோயில் உள்ள பகுதி உத்கல நாடு எனப்படும். ஆதவனின் பிம்பம் உள்ள இதற்கு 'கோனாதித்யா' என்ற பெயரும் உண்டு. இதற்கு 'கோனார்கா' என்ற மற்றொரு பெயரும் உண்டு. 'அருகன்' என்ற பெயரும், 'ஆதித்தன்' என்ற பெயரும் சூரியனைக் குறிக்கும். இவை இரண்டும் கலந்து மருவி 'கோனாரகா' என்று வழங்கப்படுகிறது. இக்கோயிலின் எதிரே கிழக்கு முகமாக நின்று கொண்டு எதிரே உள்ள மணலில், எட்டு இதழ்களை உடைய ஒரு தாமரையை சந்தனக் கட்டையால் வரைய வேண்டும். அத்தாமரையின் நடுவே ஒரு தாமிரப் பாத்திரத்தில் நெய், எள், தண்ணீர், சிவந்த சந்தனக் கட்டை, சிவப்புப் பூக்கள், தர்ப்பை ஆகியவற்றைப் போட்டு, தாமரையின் நடுவே அப்பாத்திரத்தை வைத்து சூரியன் புறப்படுகின்ற நேரத்தில் வழிபட்டால் முன் ஏழு ஜென்மங் களில் செய்த பாவங்களைப் போக்கிக் கொள்ளலாம்.

துவாதச ஆதித்தர்கள் என்று சொல்லப்படும் பொழுது பன்னிரண்டு சூரியர்கள் என்று பொருள் கொள்வது தவறு.

ஒரே ஆதித்தன் பன்னிரண்டு வகையான பணிகளைச் செய்கிறான். அவ்வப் பணியைச் செய்யும்பொழுது அதற்குரிய பெயரினைப் பெறுகிறான். உதாரணமாக, விஷ்ணு என்ற பெயரில் தேவர்களின் பகைவர்களை அழிக்கிறான். இந்திரன் என்ற பெயரில் அசுரர்களை அழிக்கிறான். தத்தா என்ற பெயரில் உயிர்களைப் படைக்கிறான். வருணன் என்ற பெயரில் நீரில் இருக்கிறான். சித்திரை முதல் பங்குனி முடிய வுள்ள மாதங்களில் பருவங்களுக்கேற்ற முறையில் பல்வேறு மாறுபாடுகளைச் செய்தலின் பன்னிரண்டு சூரியர்கள் எனப்பட்டார்கள்.

உலகின் வாழ்விற்கு மூலமாக இருப்பவன் சூரியன் ஆதலால் பன்னிரண்டு சூரியர்கள் என்று சொல்லப் பட்டதோடல்லாமல் 12 சிறப்புப் பெயர்களும் அவனுக்குத் தரப்பட்டுள்ளன. அவை ஆதித்யா, சூர்யா, அருக்கன், பிரபாகரன், மார்த்தாண்டன், பாஸ்கரன், பானு, திவாகரன், ரவி முதலியவையாம். இவற்றை அல்லாமல் நான்முகனே சூரியனுக்கு 108 பெயர்களைக் கூறியதாக பிரம்ம புராணம் கூறுகிறது.

## பூரி ஜகந்நாதர் ஆலயம் தோன்றிய கதை

சத்தியயுகம் என்று கூறப்படும் முதலாவது யுகத்தில் மாளவ தேசத்தை அவந்தி என்னும் ஊரினைத் தலைநகராகக் கொண்டு இந்திரதுாய்மன் என்னும் மன்னன் ஆட்சி செய்து வந்தான். கதிரவனும் வெட்கப்படும்படியான உடல் ஒளியும், இந்திரனும் அஞ்சும் பேராற்றலும் பெற்றவனாவான். வெறும் உடல் வன்மையோடு மட்டுமல்லாமல் வேதங்கள், சாத்திரங்கள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்தான். போர்க் கருவிகள் அனைத்தையும் கையாளும் பேராற்றல் பெற்றிருந்தான். சுருங்கச் சொன்னால் அவனுக்கு நிகரானவர் பூவுலகிலோ

அன்றி தேவருலகிலோ இல்லை என்று கூறிவிடலாம். இவ்வளவு இருந்தும் கடுகளவும் அகங்காரம் கொள்ளாமல் விஷ்ணு பக்தியில் சிறந்து விளங்கினான். தனக்குள்ள செல்வம், ஆற்றல், அதிகாரம், செல்வாக்கு அனைத்தையும் பயன் படுத்த ஒரு வழியைக் கண்டான். தன்னால் வழிபடப்படும் விஷ்ணுவிற்கு அன்றுவரை யாரும் கட்டாத ஒரு சிறந்த கோயிலை அமைக்கத் தீர்மானித்தான். சிறந்த கோயிலாக அமைவதுடன், அக்கோயில் அமைகின்ற இடமும் ஈடு இணை யற்றதாக இருக்க வேண்டும் என்று அவன் நினைத்ததில் வியப்பொன்றுமில்லை. எங்கும் பரவி இருந்த அவன் செல்வாக்கு காரணமாக எல்லாத் தீர்த்தங்களையும், இருமருங் கிலும் அமைந்துள்ள புண்ணிய ஸ்தலங்களையும் பார்த்து அலசி ஆராய்ந்தான். அவனுடைய தலைநகரான அவந்தியும் அதனைச் சுற்றியுள்ள பகுதியும் மிக அற்புதமாக இருந்தன. பெரிய பெரிய விண்ணை இடிக்கும் கட்டடங்கள் நிறைந் திருந்தது அவந்தி. ஓயாத மக்கள் நடமாட்டமும், பெரு வாணிபம் நடைபெறுகின்ற கடைவீதிகளும் நிறைந்திருந்த அவந்தியில், விஷ்ணு கோயிலைக் கட்ட ஏனோ அவன் மனம் இடம் தரவில்லை. இதில் ஒரு வியப்பு என்னவென்றால், சிப்ரா நதி பாய்ந்தோடும் அவந்தி நகரத்தில், அந்நதிக் கரையில் மிகப் பிரசித்தமான மகாகாளர் திருக்கோயில் என்று வழங்கப்படும் ஒரு பெரிய சிவன் கோயிலும், கோவிந்த சாமி, விக்கிரம சாமி என்ற பெயர்களில் இரண்டு விஷ்ணு ஆலயங்களும் ஏற்கெனவே இருந்தன. மகா காளர் கோயிலைப் பொறுத்தமட்டில் ஒரு தனிச் சிறப்பும் உண்டு. அவரை ஒருமுறை வழிபட்டால் ஆயிரம் அஸ்வமேத யாகம் செய்ததற்கான பலன் உண்டு என்றும் சொல்லப் பட்டது. இவ்வாறு இருந்தும் அரசனின் மனம் இங்கு லயிக்க வில்லை.

எனவே தன் அமைச்சர்கள், படைகள் ஆகியோருடன் சிறந்ததோர் இடத்தைத் தேடிப் புறப்பட்டு விட்டான் இந்திர தூய்மன். நீண்ட தேடலுக்குப் பிறகு கடற்கரையை அடைந்தான். இக்கடற்கரைப் பகுதியில் சில காலம் வசித்த பிறகு மிக்க அழகு வாய்ந்ததும், இயற்கை எழில் கொஞ்சு வதும், பறவைகள் மகிழ்ந்து திரிவதுமான புருஷோத்தம க்ஷேத்திரம் என்ற இடத்தை அடைந்த அரசன், தான் நினைத்த ஆலயத்தைக் கட்ட இதுவே சிறந்த இடம் என்ற முடிவுக்கு வந்தான்.

மிக அழகிய இந்தப் பகுதிக்கு புருஷோத்தம க்ஷேத்திரம் என்று பெயர் வந்ததற்கு ஒரு காரணமுண்டு. பல காலத்திற்கு முன் விஷ்ணுவின் சக்தியின் பெரும்பகுதி பெற்ற மகா விஷ்ணு விக்கிரகம் இந்த இடத்தில் இருந்தது. யார் வந்து அதனை ஒருமுறை தரிசித்தாலும் அவருடைய பாபங்கள் அனைத்தும் அப்பொழுதே நீங்கிவிடும். எனவே மக்கள் அனைவரும் இங்கு வந்து இந்தச் சிலையை தரிசித்து பாபங் களினின்று நீங்கினதால் எமனுக்கு வேலையில்லாமல் போயிற்று. வேலை இல்லாத திண்டாட்டத்தில் அவதிப்பட்ட எமன் மகாவிஷ்ணுவை வணங்கித் தன் குறையைத் தெரிவித்தான். அவனுடைய குறையைப் போக்க வேண்டி மகாவிஷ்ணு இந்தப் பிரசித்திபெற்ற சிலையை மணலுக்குள் புதைத்து விட்டார். இப்பொழுது முன்போல மக்கள் வந்து உடனடியாகத் தங்கள் பாவத்தைப் போக்கிக் கொள்ள முடிய வில்லை என்றாலும், ஊருக்கிருந்த மதிப்பு குறையாமல் இருந்தது. புருஷோத்தமன் என்பது மகாவிஷ்ணுவிற்கு ஒரு பெயராகும். எனவே அவரால் பிரசித்தி பெற்ற இந்த இடத்திற்குப் புருஷோத்தம நகரம் என்று பெயர் வந்தது இயல்பே. இந்த இடத்தைப் பார்த்தவுடன் இந்திர தூய்மன் மனத்தில் ஒரு நிறைவு ஏற்பட்டது. வேறு இடம் தேடிச்

செல்ல வேண்டும் என்ற எண்ணம் போய்விட்டது. மிகச் சிறந்த இந்த இடத்தில் ஈடு இணையில்லாத ஒரு விஷ்ணு ஆலயத்தை நிர்மாணிக்கத் திட்டமிட்டான்.

பேரரசனாகிய அவன் தான் மட்டும் இதனைச் செய்யாமல் பிற அரசர்கள், செல்வர்கள், வணிகர்கள் ஆகியவர்களும் இதில் பங்குபெற வேண்டி அவர்கள் அனைவரையும் ஒன்றாக அழைத்தான். கோயில் எப்படிக் கட்ட வேண்டும் என்ற திட்டம் உருவாயிற்று. அதற்கு வேண்டிய பொன், பொருள் முதலியவை கணக்கின்றிக் கிடைத்தன. கோயில் நிர்மாணம் தொடங்கு வதற்கு முன் ஓர் அஸ்வமேத யாகம் செய்யவேண்டுமென அரசன் விரும்பியதால் பொன்னாலேயே ஒரு மண்டபம் தயாரிக்கப்பட்டது. பரத கண்டம் முழுவதிலிருந்து மன்னரும், மக்களும் பொன்னையும் பொருளையும் கொண்டு வந்து சேர்த்தனர். இந்த யாகத்தில் கிடைக்கும் தானத்தைப் பெறுவதற் காகவே பிராமணர்கள் நாடு முழுவதிலுமிருந்து வந்து கூடினார்கள். அஸ்வமேத யாகம் முடிந்தவுடன் கோயில் கட்டும் பணி துவங்கி அதுவும் முடிந்துவிட்டது. எந்த விக்கிரகத்தை எவ்வாறு தேர்ந்தெடுத்து இங்கே பிரதிஷ்டை செய்வது என்ற கவலையுடன் உறங்கிய அரசனுக்கு விஷ்ணு கனவில் தோன்றி சமுத்திரக் கரையில் உள்ள மரத்தை அடையாளம் காட்டி அதனைப் பயன்படுத்திச் சிலைகள் செய்ய வழிகாட்டினார்.

மறுநாள் அந்த மரத்தை வெட்டித் தயாரித்த பொழுது விஷ்ணுவும், விஸ்வகர்மாவும் அந்தணர் வேடத்தில் வந்து உடனடியாக பலராமன், கிருஷ்ணன், சுபத்திரை ஆகிய மூவருடைய சிலைகளையும் விநாடி நேரத்தில் செய்து முடித்தனர். இதுவே இன்று பிரசித்தியுடன் விளங்கும் பூரி ஜெகந்நாதர் ஆலயம்.

## மார்க்கண்டேயர்

*யுக முடிவில் அண்டம் முழுவதையும் நெருப்பு சூழத் துவங்கி அனைத்தையும் எரித்துவிட்ட நிலையில், மார்க்கண்டேய முனிவர் மட்டும் விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்யும் நிலையில் இருந்து வந்தார். யுக நெருப்புக் கூட அவரை அண்ட முடியவில்லை. ஆனால் கண்விழித்த பொழுது அனைத்தும் அழிந்திருப்பதையும் ஓர் ஆலமரம் மட்டும் தனித்து நிற்பதையும் பார்த்து மரத்தினடியில் அமர்ந்து விஷ்ணுவை தியானம் செய்தார். அதன் பயனாக இப் பிரளய நெருப்பை அணைக்கும் மாமழை பன்னிரண்டு வருடங்கள் விடாது பெய்தது. இப்பொழுது நெருப்புக்குப் பதிலாக எங்கும் நீர் மயம். நீரில் மிதந்த ஆலமரத்தின் கிளை ஒன்றில் ஒரு பொன் படுக்கையில் பாலகன் ஒருவன் படுத்திருக்கக் கண்டார். அப்பாலகனின் ஆணையின்படி அவன் வாயினுள் சென்றார் மார்க்கண்டேயர். பாலகன் வயிற்றினுள் அண்டங்கள் அனைத்தும் பாதுகாப்புடன் இருப்பது கண்ட மார்க்கண்டேயர் வெளியே வந்து விஷ்ணுவை துதித்துக் கொண்டு பல்லாண்டுகள் அவருடனேயே இருந்தார். அவர் தவத்தை மெச்சிய விஷ்ணு, அவர் வேண்டும் வரத்தைக் கொடுப்பதாகக் கூறினார். உடனே மார்க்கண்டேயர் புருஷோத்தம க்ஷேத்திரத்தில் சிவனுக்கு ஒரு கோயில் அமைக்க வேண்டும். மக்கள் மனத்தில் அரியும் சிவனும் ஒன்று என்ற எண்ணம் நிலைக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். விஷ்ணுவும் அதற்கிசையவே சிவபெருமானுக்கு "புவனேஷ்வர்" ஆலயம் நிர்மாணிக்கப்பட்டது.*

*ஸ்வேதா என்ற நேர்மையுள்ள அரசன் ஜகந்நாதர் ஆலயத்திற்கு அருகில் ஸ்வேத மாதவன் என்ற பெயருடைய விஷ்ணு ஆலயத்தைக் கட்டினார்.*

### மகாபலி கதை

முன்னொரு காலத்தில் தைத்தியர்கள் என்ற அசுர குலத்தில் வலி (மகாபலி) என்ற அரசன் ஆண்டு வந்தான். நேர்மை, அன்பு என்பவற்றில் மிகுந்து நின்றதாலும், எல்லை யற்ற வலிமை உடையவனாக இருந்ததாலும் அவனை யாரும் வெல்ல முடியவில்லை. எனவே தேவர்கள் ஒரு சூழ்ச்சி செய்து மகாவிஷ்ணுவிடம் வேண்ட, அவர் வாமனனாக வந்து வலிக்கு மோட்சம் தந்து, வலியின் நாட்டை தேவர் களுக்குத் தந்தார்.

### தீர்த்த சிறப்பு

வானதி ஆகிய கங்கையின் ஒரு பகுதியை பகீரதன் தன் முன்னோர்களுக்காகப் பூமிக்குக் கொண்டு வந்தான். உலக மக்களின் வாழ்வு மலர கௌதம முனிவன் கங்கையின் மற்றொரு பகுதியை பூமியில் பரவுமாறு செய்தான். அதனால் கங்கைக்கு 'கௌதமி' என்ற தத்திதாந்தப் பெயருண்டாயிற்று. கௌதமி கங்கைக்கு ஒரு இறங்கு துறைக்கு "கபோத தீர்த்தம்" (புறா தீர்த்தம்) என்ற பெயர் வரக் காரணம் வருமாறு:— ஒரு மரத்தில் வாழ்ந்த இரண்டு புறாக்களில் இரை தேடச் சென்ற பெண் புறாவைக் கொலைத் தொழில் புரியும் வேடன் ஒருவன் பிடித்துக் கூண்டில் அடைத்துக் கொண்டு அந்த மரத்தின் அடியிலேயே வந்து தங்கினான். பெண் புறாவைக் காணாமை யால் வருந்தி அழுத ஆண் புறாவின் குரலைக் கேட்டுப் பெண் புறா தான் கூண்டிற்குள் அகப்பட்டு இருப்பதைச் சொல்லி, "இயற்கையின் படைப்பில் ஒன்றையொன்று தின்றுதான் வாழ்கின்றன. எனவே அவனுக்கு நாம் உணவாவதில் தவறில்லை. அல்லாமலும் நாம் இருக்கும் இடத்திற்கு வந்து தங்கிய அவனுக்குக் குளிரைப் போக்கி உணவு தரவேண்டியது நமது கடமை," என்று பெண் புறா கூறியதைக் கேட்ட ஆண்

புறா, அதற்கு உடன்பட்டு, தீ மூட்டி அவனுடைய குளிரைப் போக்கியது. பின் அதில் விழுந்து அவனுக்கு உணவாயிற்று. இவற்றின் உரையாடலைக் கேட்ட வேடன் பெண் புறாவைக் கூண்டில் இருந்து விடுவிக்க, "என்னையும் உண்க" என்று கூறி அப்பெண் புறாவும் தீயில் விழுந்து இறந்துவிட்டது. தேவ உலகத்தில் இருந்து விமானம் வந்து அந்த இரண்டு புறாக்களின் உயிர்களையும் ஏற்றிச் சென்றது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த வேடன் அன்றிலிருந்து நல்வாழ்வு வாழத் தொடங்கினான். கௌதமி கங்கையின் கரையில் இப் புறாக்கள் வசித்த இடம் கபோத தீர்த்தம் என்று பெயர் பெற்றது.

### கருட தீர்த்தம்

நாகலோகவாசியான அனந்தனுக்கு மணிநாகன் என்ற ஒரு புத்திரன் பிறந்தான். கருடனைக் கண்டால் பாம்புகளுக்கு நடுக்கம் என்பது அனைவரும் அறிந்த ஒன்று. இதை அறிந்த மணிநாகன் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்தான். தவத்தை மெச்சிய சிவபெருமான் கருடனால் ஒன்றும் செய்ய முடியாத ஆற்றலை மணிநாகத்திற்குத் தந்தார். வரபலத்தின் தைரியத்தால் கருடனைக் கண்டு அஞ்சாமல் மணிநாகம் சுற்றித் திரிந்தான். அவனை ஒன்றும் செய்ய முடியாது என்பதை அறிந்த கருடன், அவனைத் தூக்கிக்கொண்டு சென்று தன் வீட்டில் சிறை வைத்தான். பல நாட்கள் மணிநாகனைக் காணாமையால் நந்திதேவன் சிவனிடம் சென்று முறை யிட்டான். சிவன், "நீ மகாவிஷ்ணுவிடம் சென்று மணிநாகனை விடுதலை செய்து கொண்டுவா!" என்று ஆணையிட்டார். நந்திதேவன் மகாவிஷ்ணுவிடம் சென்று தன் வேண்டு கோளைச் சொன்னான். விஷ்ணு கருடனை அழைத்து மணி நாகனை விட்டுவிடு என்று கூறினார். அதனைச் செய்ய விரும்பாத கருடன், "ஐயனே! சிவன் முதலானவர்களெல்லாம் தமக்கு உதவி செய்பவர்களுக்கும், வாகனங்களுக்கும்

எவ்வளவோ நன்மைகள் செய்கிறார்கள்; பாராட்டுகிறார்கள். உங்களுடைய வாகனம் நான். நீங்கள் அசுரர்களுடன் போரிட வேண்டுமானால் என்மேல் ஏறிக் கொண்டுதான் போர் செய்கிறீர்கள். நான் இல்லையானால் உங்களால் போர் செய்யவே முடியாது" என்று கூறினான். உடனே விஷ்ணு, "நீ சொல்வது உண்மைதான். என்னுடைய பாரத்தைச் சுமக்கின்ற நீ பெரியவன்தான். இதோ பார். என்னுடைய சுண்டு விரலை உன் தலையில் வைக்கிறேன். அதை எவ்வளவு எளிதாகச் சுமக்கிறாய் என்று பார்க்கலாம்" என்று கூறி விஷ்ணு தன் சுண்டு விரலைக் கருடன் தலையில் வைத்தவுடன் கருடன் தலை நசுங்கியதுடன் உடலும் நசுங்கி விட்டது. கருடன் உடனே தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். விஷ்ணு விரலை எடுத்தவுடன் கருடன் தலைப்பாரம் குறைந்ததே தவிர நசுங்கிய தலையும், உடலும் பழைய நிலைக்கு வரவே இல்லை. அவன் வருந்திய பொழுது, "நீ சிவனிடம் சென்று முறையிடு. உன் குறையைத் தீர்ப்பார்" என்று கூறினார். கருடன் சிவனிடம் சென்ற பொழுது அவர் கருடனை கௌதமி கங்கையில் 15 நாள் மூழ்கி எழுமாறு கூறினார். அதனால் அவன் பழைய உடல் வந்தது. மணிநாகமும் விடுதலை பெற்றான். அப்பகுதி இதனால் 'கருடதீர்த்தம்' என்று பெயர் பெற்றது.

**விசுவாமித்திர தீர்த்தம்**

ஒரு காலத்தில் நாடு முழுவதும் பயங்கரமான பஞ்சத்தின் பிடியில் சிக்கியது. விசுவாமித்திர முனிவர், அவர் குடும்பத்தார், சீடர்கள் அனைவரும் எத்தகைய உணவும் கிடைக்காமையால் வாடி வதங்கினர். விஸ்வாமித்திரர் தன் சீடர்களைப் பார்த்து எங்காவது தேடிச் சென்று ஏதாவது கிடைத்ததைக் கொண்டு வருக என்று கூறினார். தேடிச் சென்றவர்கள் வேறு ஒன்றும்

கிடைக்காமையால் இறந்து கிடந்த நாய் ஒன்றின் உடலைக் கொண்டு வந்தார்கள். முனிவர் அவர்களை நோக்கி, "இதன் புலாலை நன்கு கழுவி சுத்தம் செய்து தெய்வங்கட்கும், பிதுரர்கட்கும் முதலில் படையுங்கள். பிறகு இதனை நாம் உண்ணலாம்" என்று கூறினார். நாயின் புலாலைப் படைப்பது என்பது கேள்விப்படாத விஷயம். இதை அறிந்த இந்திரன் வல்லூறு வடிவம் கொண்டு வந்து நாய் உடல் இருந்த கிண்ணத்தைத் தூக்கிச் சென்று விட்டான். இதை அறிந்த விஸ்வாமித்திரர் இந்திரனை சபிக்க முற்பட்டார். முனிவர் சாபத்திற்கு அஞ்சிய இந்திரன் அந்தக் கிண்ணம் நிறைய அமிர்தத்தைக் கொண்டுவந்து, "முனிவரே! இதைச் சாப்பிடுங்கள்" என்று கூறினான். அதை மறுத்த விஸ்வா மித்திரர், "இந்திரா! உலகம் முழுதும் பட்டினியால் சாகும் பொழுது நான் மட்டும் அமிர்தத்தை உண்ண விரும்ப வில்லை. மேலும் புலால் உண்பதில் நாயின் புலால் ஆகாது என ஏன் நினைக்க வேண்டும்? உன் அமிர்தம் எனக்கு வேண்டாம். நாய் உடம்பு உள்ள கிண்ணத்தையே கொண்டு வா" என்றார். முனிவரின் முடிவை மாற்ற முடியாது என்பதை அறிந்த இந்திரன் மேகங்களை எல்லாம் ஏவி மழை பொழியும் படி செய்தான். அதன் பிறகே விஸ்வாமித்திரர் அமிர்தத்தை வாங்கி உண்டார். இது நடந்த இடம் "விஸ்வாமித்திர தீர்த்தம்" என்று அழைக்கப் பெற்றது.

### கௌதமி கங்கையின் சிறப்பு

கங்கைக் கரையில் சுவேதா என்ற வேதியன் வாழ்ந்து வந்தான். அவன் பெரிய சிவபக்தன். அவன் காலம் முடிந்த வுடன் யமதூதர்கள் அவனைக் கொண்டு போக வந்தனர். ஆனால் அவன் ஆசிரமத்துக்குள் நுழைய முடியாதபடி சிவனுடைய படைகள் காவல் காத்து வந்தன. சென்ற தூதர்கள்

மீண்டு வராமையால் மிருத்யு (சாவு) என்ற தன் தோழனை அனுப்பினான் யமன். மிருத்யு பாசக் கயிற்றை சுவேதாவின் கழுத்தில் மாட்ட முயன்ற பொழுது சிவ கணங்களால் கொல்லப்பட்டான். இதைக் கேள்விப்பட்ட யமன் தானே படைகளுடன் வந்து போர் தொடங்கினான். சிவனுடன் இருந்த நந்தி, விக்னேஷ்வரன், கார்த்திகேயன் ஆகிய அனைவரும் யமனுடன் போர் தொடுத்தனர். இப்போரில் கார்த்திகேயன் யமனையும் கொன்றுவிட்டான். யமன் இல்லையானால் சாவு, வாழ்வு நடைபெறாது என்பதை அறிந்த தேவர்கள், சிவனிடம் முறையிட்டனர். ஒரு நியதியின் பேரில் சண்டையை நிறுத்த சிவன் ஒப்புக் கொண்டார். சிவ பக்தர்கள் இறந்தால் யம தூதர்கள் அங்கே வரக் கூடாது. அவர்கள் நேரே சிவலோகம் சென்று விடுவர். இதை எல்லாரும் ஏற்றுக்கொள்ள, நந்திதேவர் கங்கைத் தண்ணீரைக் கொண்டு வந்து யமன், மிருத்யு மேல் தெளிக்க அவர்கள் உயிர் பெற்றனர். கௌதமி கங்கையின் சிறப்புக்களுள் இதுவும் ஒன்று.

## குபேரன்

விஸ்ரவனுக்கு இரண்டு மனைவியர். முதல் மனைவியின் மகன் குபேரன். பெருஞ் செல்வத்துடன் இலங்கையை ஆட்சி செய்து வந்தான். அரக்கியாகிய இரண்டாம் மனைவியின் பிள்ளைகள் இராவணன், கும்பகர்ணன், விபீஷணன் ஆகியோர். முதலில் இவர்கள் குபேரனுடன் நட்புடன் இருந்தனர். இராவணன் தாய் மகனை அழைத்து, "நீ அரக்கன்; குபேரன் தேவ வர்க்கம். நீங்கள் எல்லோரும் நட்புக் கொள்வது தவறு. காலங்காலமாக தேவர்களுக்குப் பகை அரக்கர்களும், அசுரர்களும். அவனை எப்படியாவது வென்று அவன் செல்வத்தை நீ பறித்துக் கொள்" என்று கூறினாள். இராவணன் முதலிய மூவரும் பிரம்மனைக் குறித்துப் பெரும்

தவம் செய்து பல வரங்களைப் பெற்றனர். அதன் பயனாக குபேரனை வென்று இலங்கையை விட்டே விரட்டி விட்டனர். தாத்தாவாகிய புலத்தியனுடைய அறிவுரையின்படி குபேரன் கௌதமி கங்கையின் கரைக்கு வந்து சிவனைக் குறித்துப் பெரும் தவம் இயற்றினான். இறுதியில் சிவன் தோன்றி, குறையாத செல்வத்தின் தலைவனாக குபேரனை ஆக்கினார்.

## அரிச்சந்திரன் கதை

இக்சுவாகு பரம்பரையில் வந்த அரிச்சந்திரனுக்கு மகன் இல்லை. நாரதர் அரிச்சந்திரனைப் பார்த்து, "நீ கங்கைக்கரை சென்று வருணனைக் குறித்துப் பிரார்த்தனை செய்தால் உனக்கு மகன் பிறப்பான்" என்று கூறினார். அரிச்சந்திரன் அவ்வாறே செய்தான். அவன் முன் தோன்றிய வருணன், "உனக்கு ஆண் குழந்தை பிறக்குமாறு வரம் தருகிறேன். ஆனால் என்னைக் குறித்து ஒரு யாகம் செய்து அதில் உன் மகனை பலியிடுவதானால் உனக்கு ஆண் மகவு பிறக்கும்" என்றான். அரிச்சந்திரன் அதனை ஒப்புக் கொண்டான். மகன் பிறந்த ஏழாம் நாள், ஏழாம் ஆண்டு, பதினாறாம் ஆண்டு முடியும் பொழுதெல்லாம் வருணன் வந்து எப்பொழுது யாகம் என்று கேட்கும்பொழுதெல்லாம் அரிச்சந்திரன் ஒவ்வொரு சமாதானம் கூறினான். மகனுக்குப் பதினாறு வயதாகும் பொழுது வருணன் மறுபடியும் வந்து கேட்டான். உடன் இருந்த மகன் ரோஹிதன் 'விஷ்ணுவைக் குறித்து யாகம் செய்யப் போகிறேன். முடிந்தவுடன் உனக்கு பலியாவேன்' என்றான். யாகம் செய்யக் காட்டிற்குச் சென்றபொழுது 'அஜிகர்தா' என்ற முனிவனைச் சந்தித்து தன் வரலாற்றைக் கூறினான். அதுகேட்ட முனிவன் தன் மூன்று பிள்ளைகளுள் தனக்கு வேண்டிய முதல் மகனையும், மனைவிக்கு வேண்டிய மூன்றாவது பிள்ளையையும் விட்டுவிட்டு நடு மகனைப்

பலிக்கு அழைத்துச் செல். அவனுக்கு விலையாக ஆயிரம் பசுக்கள், ஆயிரம் பொற்காசுகள், நிறைந்த செல்வம் என்பன வற்றைக் கொடுக்க வேண்டும் என்றான். அவ்வாறே செய்து விட்டு அம்முனிவரின் நடுமகனாகிய 'சுனசேபா'வை அழைத்துக் கொண்டு அரிச்சந்திரன் மகன் மீண்டான். அப்பொழுது அசரீரி ஒன்று பின்வருமாறு பேசிற்று: 'நீ யாரையும் பலியிடத் தேவையில்லை. கௌதமி கங்கைக் கரையில் சென்று வருணனுக்கு யாகம் செய்தால் எந்தப் பலியும் தேவையில்லை' என்று கூறிற்று. அரிச்சந்திரன் அவ்வாறே செய்தான்.

**ததீசியின் கதை**

ததீசி என்ற முனிவர் லோபாமுத்ரா என்ற தன் மனைவியுடன் கங்கைக் கரையில் ஓர் ஆசிரமத்தில் வாழ்ந்து வந்தார். அவர் தவப் பலன் காரணமாகத் தைத்தியர்கள், அரக்கர்கள், அசுரர்கள் என்பவர்கள் அச்சம் காரணமாக அவருடைய எல்லைக்குள் நுழைய முயன்றதேயில்லை. ஒருமுறை நடந்த தேவ, அசுரப் போரில் தேவர்கள் வென்றனர். வெற்றியடைந்த அவர்கள் ததீசியிடம் வந்து 'ஐயனே! உனது ஆசீர்வாதத்தால் நாங்கள் அசுரர்களை வென்றோம். போர் முடிந்துவிட்ட நிலையில் இந்த ஆயுதங்கள் தேவையில்லை. அசுரர்கள் கவர்ந்து செல்ல முடியாத ஓரிடத்தில் இவற்றைப் பாதுகாப்பாக வைக்க விரும்பினோம். அவர்கள் அண்ட முடியாத இடம் என்று நினைத்தவுடன் உன் ஆசிரமம்தான் நினைவுக்கு வந்தது. ஆகவே இவற்றை இங்கு விட்டுச் செல்கிறோம்' என்று கூறிச் சென்றார்கள். ஆண்டுகள் பல சென்றன. ஆயுதங்கள் பளபளப்புக் குன்றி தங்கள் மந்திர சக்தியை இழக்கத் தொடங்கின. இந்த நிலையில் மனைவி லோபாமுத்திரை, "ஐயனே! தாங்கள் செய்தது சரியில்லை.

உலக பந்தத்தில் இருந்து விடுபட்ட நீங்கள் இந்தப் பொருட்களை வைத்துக் கொண்டிருப்பது சரியில்லை. மேலும் அசுரர்கள் அவர்கள் விரோதிகளான தேவர்களின் ஆயுதங் களை நீங்கள் வைத்திருக்கிறீர்கள் என்றறிந்தால், உங்கள்மேல் விரோதம் பாராட்டுவார்கள்,'' என்று கூறினாள். அதுகேட்ட முனிவர் "நீ சொல்வது சரிதான். ஆனால் வாக்குக் கொடுத்து விட்டேன். அதை மீற முடியாது" என்று கூறிவிட்டார். இந்நிலையில் ஆயுதங்கள் ஒளி இழப்பதை அறிந்த முனிவர் அவற்றை கங்கை நீரில் கழுவி அந்நீரைக் குடித்துவிட்டார். ஆயுதங்களின் சக்தி முழுவதும் அவரது உடம்பில் சேர்ந்து விட்டது. பல ஆண்டுகள் ஓடி மறைந்தன. திடீரென்று ஆசிரமத் திற்கு வந்த தேவர்கள், "முனிவரே! அசுரர் கை ஓங்கிவிட்டது. எங்கள் ஆயுதங்களைக் கொடுங்கள்,'' என்று கேட்டனர். முனிவர் நடந்தவற்றைக் கூறி "நான் யோகத்தால் என் உயிரைப் போக்கிக் கொள்கிறேன். என் உடம்பில் உள்ள முதுகெலும்பைக் கொண்டு நீங்கள் புதிய ஆயுதம் செய்து கொள்ளுங்கள்'' என்று கூறி அவர் அப்படியே உயிரை விட அவர் எலும்பைக் கொண்டு விஸ்வகர்மா 'வஜ்ராயுதம்' என்ற ஆயுதத்தைப் படைத்தான். அதை எடுத்துக்கொண்டு தேவர்கள் போய்விட்டனர். அச்சமயம் லோபாமுத்திரை அங்கு இல்லை. சிலகாலம் கழித்து மீண்டும் வந்த அவள் நடந்தவற்றை அறிந்து தன் குழந்தை பிறக்கும் வரை தன் உயிரை வைத்துக் கொண்டிருந்து பிறகு தீயில் மூழ்கிவிட்டாள். இறப்பதற்கு முன் தான் பெற்ற மகனை ஓர் அத்திமரத்திடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றாள். அத்திமரத்தால் வளர்க்கப்பட்ட மகன் அத்தி மரத்தின் வட மொழிப் பெயராகிய 'பிப்பலா' என்ற பெயரைப் பெற்றான். ஒருமுறை தன் பெற்றோர் யார் என்று அத்தி மரத்தைக் கேட்க, அத்தி மரம் நடந்தவற்றைக் கூறிற்று. கடுங்கோபம் கொண்ட பிப்பலா, தேவர்களை அழிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் சிவனை நோக்கித் தவம்

செய்தான். சிவபிரான் தோன்றியவுடன் "தேவர்களை அழிக்க வேண்டும்" என்று வரம் கேட்டான். அதுகேட்ட சிவன், "என் நெற்றியில் இருக்கும் மூன்றாவது கண் எப்பொழுது உனக்குத் தெரிகிறதோ அப்பொழுது உன் விருப்பம் நிறைவேறும்" என்று சொல்லி மறைந்தார். பல ஆண்டுகள் தவம் செய்து சிவபிரானுடைய நெற்றிக்கண்ணைப் பார்க்கும் ஆற்றலைப் பெற்றான் பிப்பலா. அந்த நெற்றிக் கண்ணிலிருந்து ஒரு கொடிய பூதம் வெளிப்பட்டது. வெளிப்பட்ட பூதம் "உன்னுடைய விருப்பம் என்ன?" என்று கேட்க, பிப்பலா, "தேவர்களை அழித்து விடுக!" என்று கூறினான். உடனே பூதம் அவனுடன் போர் செய்யத் துவங்கியது. "ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று பிப்பலா கேட்க, "தேவர்களை அழிக்க வேண்டும் என்றுதானே நீ சொன்னாய். ததீசியின் பிள்ளையாகிய நீயும் ஒரு தேவன்தானே! ஆகவேதான் அழிக்கும் வேலையை உன்னிடத்திலிருந்தே தொடங்குகிறேன்" என்று கூறிற்று. அஞ்சி ஓடிய பிப்பலா சிவபிரானைச் சரணடைந் தான். அப்பெருமான், "எது நடக்க வேண்டுமோ அது நடந்து விட்டது. தேவர்களை அழிப்பதால் உனக்கு எவ்வித லாபமும் இல்லை. இப்பொழுது நீ உன் தாய் தந்தையரை தரிசிக்கலாம்" என்று கூறியவுடன் விமானத்தில் ததீசியும், லோபாமுத்திரையும் வந்தனர். பிப்பலா அவர்களை வணங்கினான். "மணஞ் செய்து கொண்டு சுகமாக வாழ்வாயாக!" என்று அவர்கள் அவனை ஆசீர்வதித்துவிட்டுப் போயினர்.

## நாகேஸ்வரனின் கதை

பிரதிஷ்டனா என்ற நகரை 'சுரசேனா' என்ற மன்னன் ஆட்சி செய்து வந்தான். நீண்ட காலம் அவனுக்கு மகப்பேறு இல்லை. பல தவங்கள் செய்து இறுதியாக ஒரு குழந்தை பிறந்தது. ஆனால் என்ன துரதிஷ்டம்! அக்குழந்தை மனித

உருவுடன் இல்லாமல் ஒரு பாம்பாக அமைந்துவிட்டது. அரசனும் அரசியும் யாருக்கும் சொல்லாமல் அக்குழந்தையை வளர்த்தார்கள். திருமணப் பருவம் வந்தவுடன் அப்பாம்புப் பிள்ளை, "உடனே எனக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும். இல்லாவிட்டால் தற்கொலை செய்து கொள்வேன்" என்றது. பெற்றோர் என்ன செய்ய முடியும்? அமைச்சனிடம் நடந்தவற்றை அரசன் கூறினான். வயது முதிர்ந்த அமைச்ச னொருவன் அதற்கொரு வழியைக் கண்டான். "கீழ்த்திசையை ஆட்சி செய்யும் விஜயன் என்ற மன்னனுக்கு போகவதி என்ற அழகான பெண் இருக்கிறாள். அவளை மணமுடித்து வைக்கிறேன்," என்று கூறிவிட்டுப் பிறகு அக்கிழ அமைச்சர் விஜயனிடம் சென்று பெண் பேசினார். அவன் ஒத்துக் கொண்ட பொழுது ராஜபுத்திர முறையில் மணமகன் வராமல் அவனுடைய வாளுக்கு மாலையிட்டாள் போகவதி. திருமணம் முடிந்த பிறகு புகுந்த வீட்டிற்கு வந்தாள் போகவதி. மணப் பெண்ணைத் தனியாக அழைத்து, "இந்த வீட்டில் ஒரு தேவன் பாம்பு வடிவத்துடன் இருக்கிறான். அவனுக்குத்தான் நீ மாலை யிட்டாய்" என்று ஒரு தாதி கூறினாள். தேவன் என்று கூறிய வுடன் மணமகள் மகிழ்ச்சி அடைந்து பாம்புக் கணவனைப் பார்க்கச் சென்றாள். இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டனர். முற்பிறவியில் இருவரும் கைலாயத்தில் சிவனின் ஆபரணமாக இருந்தனர். இருவரும் இப்பொழுது கங்கையில் சென்று குளித்தனர். மூழ்கி எழுந்தவுடன் பாம்புக் கணவன் அழகான மனித தேகத்தைப் பெற்றுவிட்டான். நீண்ட காலம் ஆட்சி செய்த பிறகு இருவரும் கைலை சென்றடைந்தனர்.

**நான்முகன் கதை**

முன்னொரு காலத்தில் தேவாசுரப் போர் மிகக் கடுமையாக நடந்தது. இப்போரில் தேவர்கள் தோற்றனர்.

தோற்ற தேவர்கள் பிரம்மாவிடம் ஓடிச் சென்று தங்கள் பரிதாபமான நிலையைக் கூறி வருந்தினர். அப்பொழு தெல்லாம் பிரம்மனுக்கு ஐந்து தலைகள் இருந்தன. நான்கு தலைகள் வடிவுக்கேற்ற தலையாகவும், ஐந்தாவது தலை ஒரு கழுதையின் தலையாகவும் இருந்தது. அவர்கள் குறையைக் கேட்ட பிரம்மன், "நீங்கள் சிவபிரானிடம் சென்று முறை யிட்டால் அவர் ஒருவரால்தான் அசுரர்களை அழிக்க முடியும். ஆகவே செல்லுங்கள்" என்று ஆணையிட்டான். தேவர்கள் சிவனிடம் முறையிட அவர்கள்பால் இரக்கம் கொண்ட சிவன் தான் ஒற்றையாக நின்று அசுரர்களுடன் போர் தொடுத்தார். அசுரர் படை சின்னாபின்னமாகியது. தேவர் உலகத்தைக் கடந்து, பூமிக்கு ஓடி, அங்கும் துரத்தப்பட்ட காரணத்தால் கீழ் உலகம் சென்றனர். சிவபிரான் தான் ஒருவராக நின்று போர் தொடுத்தமையின், அவர் உடம்பிலிருந்து வியர்வைத் துளிகள் வெளிப்பட்டுத் தரையில் சிந்தின. அந்தத் துளிகள் ஒவ்வொன் றிலிருந்தும் மாத்ரிகள் எனப்படும் சிவ கணங்கள் தோன்றின. இப்பொழுது இந்த மாத்ரிகளும் அசுரர்களை விரட்டியடித்தன. ஒருவாறு அசுரர்கள் ஓடி மறைகின்ற நிலையில் போரில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. கங்கைக் கரையில் ஏனைய தேவர்களோடு தங்கியிருந்த பிரம்மாவின் கழுதை வடிவுடைய ஐந்தாவது தலை அசுரர்களைக் கூவி அழைத்தது. 'நீங்கள் ஏன் அஞ்சி ஓடுகிறீர்கள்? மீண்டும் வந்து சண்டையைத் துவக்கி னால் உங்களுக்கு உதவியாக நான் இருக்கிறேன்' என்று அவர்களைக் கூவி அழைத்தது. இதைக் கேட்டுக்கொண்டிருந்த தேவர்கள் பிரம்மன் தங்களுக்குத் துணையாக இருக்க, அவர் ஐந்தாவது தலை தங்கள் விரோதிகளாகிய அசுரர்களுக்குத் துணை போகிறேன் என்று கூறியது பெரும் கலக்கத்தை விளைவித்தது. செய்வதறியாது தேவர்கள் ஓடிச்சென்று விஷ்ணுவிடம் முறையிட்டனர். அதைக்கேட்ட விஷ்ணு, "பிரம்மனுடைய ஐந்தாவது தலையை நான் கிள்ளிவிட

முடியும். அதிலும் ஓர் ஆபத்து இருக்கிறது. கிள்ளப்பட்ட தலை கீழே விழுந்தால் பூமி சுக்கு நூறாகிவிடும். அதனால் என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. நீங்கள் சிவனிடம் சென்று முறையிடுங்கள்'' என்று கூறினார். தேவர்கள் சிவ பிரானிடம் சென்று முறையிட்டு அத் தலை கீழே விழுந்தால் பூமிக்கு நேரக்கூடிய விபத்தையும் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட சிவபெருமான் சற்று யோசித்துவிட்டு, "கவலை வேண்டாம். நானே அந்தத் தலையைக் கிள்ளி எடுத்து அந்த மண்டை ஓட்டை என் கையிலேயே வைத்துக் கொள்கிறேன்'' என்று கூறினார். தாம் கூறியபடியே பிரம்மனுடைய ஐந்தாவது தலை (கழுதைத் தலை)யைக் கிள்ளி எடுத்து அந்த மண்டை ஓட்டைச் சிவபிரான் கையிலேயே வைத்துக் கொண்டார். அன்றிலிருந்து பிரம்மா 'சதுர்முகன்' (நான்முகன்) என்று அழைக்கப்பட்டார். பிரம்மாவின் தலை கிள்ளப்பட்ட இடம் பிரம்ம தீர்த்தம் என்றழைக்கப்பட்டது. சிவபிரானின் வியர்வை யில் கிளம்பிய மாத்ரிகள் அசுரர்களைக் கொன்ற இடம் 'மாத்ரி தீர்த்தம்' என்று வழங்கப்படுகிறது.

## பில்ல தீர்த்தம்

முன்னொரு காலத்தில் வேதா என்றொரு முனிவர் சிவ பக்தியில் சிறந்து விளங்கினார். நாள்தோறும் காலையில் இருந்து மாலைவரை சிவனைப் பிரார்த்தித்து விட்டுப் பிறகு ஊருக்குள் சென்று பிச்சை எடுப்பார். கிடைத்த உணவைப் பக்கத்தில் உள்ள காட்டில் இருந்த சிவலிங்கத்திற்குப் படைத்து விட்டுப் பிறகுதான் உண்பார். இதே காலத்தில் பில்லா என்றொரு வேடன் அக்காட்டில் வசித்து வந்தான். தினந் தோறும் மிருகங்களை வேட்டையாடி தன்னால் கொல்லப்பட்ட மிருகங்களின் புலாலைச் சிவலிங்கத்திற்குப் படைத்துவிட்டு எஞ்சியதை தான் உண்பான். இவர்கள் இருவரும் ஒருவரை

ஒருவர் சந்தித்ததில்லை. ஆனால் வேதாவைப் பொறுத்தமட்டில் தான் படைக்க வரும்பொழுது சிவலிங்கத்தைச் சுற்றி இறைச்சித் துண்டுகள் கிடப்பதைப் பார்த்தார். முதலில் அதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை என்றாலும், நாளாவட்டத்தில் ஒரு வேறுபாட்டைக் கண்டார். தான் படைத்த பொருள்கள் சிதறிக் கிடப்பதையும், இறைச்சித் துண்டுகள் சாப்பிட்டுப் போடப்பட்டவை போல ஒருபுறமாகக் குவிந்திருப்பதைக் கண்டு யாரோ வேடன்தான் இதனைச் செய்திருப்பான் என்பதை அறிந்துகொண்டார். ஆனால் கல்வி அறிவு இல்லாத வேடன் தினந்தோறும் தவறாமல் இறைச்சியைப் படைக்கிறான் என்றால் வேதாவுக்கு அது வியப்பாக இருந்தது. யார் அது என்பதைக் காணவேண்டும் என்பதால் ஓரிடத்தில் மறைவாக இருந்தார். அன்று மிகவும் நேரம் கழித்து பில்லா வந்தான். வழக்கம்போல் இறைச்சியை லிங்கத்திற்கு முன் வைத்தான். லிங்கத்திலிருந்து வெளிப்பட்ட சிவபிரான் "பில்லா! நீ ஏன் இன்றைக்கு இவ்வளவு தாமதமாக வந்தாய்? நீ வராமையால் நான் பசியோடு இருந்தேன். வேட்டை சரியாகக் கிடைக்க வில்லையா?" என்று வினவி விட்டு மறைந்தார். பில்லா இறைச்சியைப் படைத்து விட்டு எஞ்சியதை எடுத்துக் கொண்டு போய்விட்டான். சிவபிரான்மேல் பெரும் சினம் கொண்ட வேதா என்ற முனிவர் லிங்கத்தின் எதிரே வந்து நின்று "ஐயனே! இந்தப் பாரபட்சம் உனக்கு நியாயமா? இத்தனைக் காலமாக நியமம் தவறாமல் உன்னையே பிரார்த்தனை செய்து பிச்சை எடுக்கும் உணவை உனக்கு நிவேதனம் செய்து உண்டு வருகிறேன். இதுவரையில் நீ எனக்குக் காட்சி தந்ததே இல்லை. ஆனால் கொலைத் தொழில் புரிந்து பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யும் இந்த வேடனுக்குக் காட்சி தந்தாய். இது என்னால் பொறுக்க முடியவில்லை. இந்தக் கல்லை எடுத்து உன் லிங்கத் திருமேனியை உடைக்கப் போகிறேன்" என்றார். உடனே

சிவபெருமான் வெளிப்பட்டு, "பில்லாவையும் அவன் அன்பையும் நீ தெரிந்து கொள்ளவில்லை. நாளை வந்து பார்" என்று கூறி மறைந்தார். மறுநாள் வேதா வந்தபொழுது லிங்கத்தின் உச்சியில் இரத்தம் ஒழுகிற்று. அவர் அதைத் துடைத்துவிட்டு வழக்கம் போல தன் பணிகளைச் செய்து விட்டு மறைவாக இருந்தார். பின்னர் வந்த பில்லா லிங்கத்தின் தலையில் இரத்தம் ஒழுகுவதைக் கண்டு பதைத்துவிட்டான். தான் ஏதோ குற்றம் செய்ததனால்தான் இப்படியொரு நிலை ஏற்பட்டது என்று வாய்விட்டுக் கூவி பில்லா தான் அறியாமல் செய்த குற்றத்திற்குத் தண்டனை அனுபவிக்க வேண்டும் என்று கூறிக்கொண்டே அம்பை எடுத்துத் தன்னுடைய உடம்பில் பல இடங்களிலும் குத்திக் கொண்டான். இரத்தம் பெருகியது. உடனே சிவபிரான் வெளிப்பட்டு வேதாவைப் பார்த்து, "நீ சாத்திரப்படி செய்கிற பூசைக்கும் அன்பே வடிவான இவன் பூசைக்கும் உள்ள வேறுபாட்டைப் பார்த்தாயா? சாத்திரப்படி வழிபட்ட நீ பிரசாதத்தை என் முன் படைத்தாய். அன்பினால் வழிபட்ட இவன் தன் உடல், பொருள், ஆவி மூன்றையுமே எனக்குப் படைத்துவிட்டான். சாத்திர வழிபாட்டிற்கும், அன்பு வழிபாட்டிற்கும் உள்ள வேற்றுமையைத் தெரிந்து கொள்" என்று கூறி மறைந்தார். பில்லா சிவனை வழிபட்ட இடம் 'பில்ல தீர்த்தம்' என்று வழங்கப்படுகிறது. (பெரிய புராணத்தில் வரும் கண்ணப்பர் வரலாற்றை இதனோடு ஒப்பிட்டுக் காண வேண்டும்)

**தர்மத்தின் வழி நடந்தால்...**

பவனா என்ற ஊரில் கௌதமன் என்பவன் வாழ்ந்து வந்தான். பிறப்பால் பிராமணன் ஆயினும், அவன் தாயின் தூண்டுதலால் எந்தத் தீய காரியத்தையும் அஞ்சாமல் செய்யும் துணிவு பெற்றிருந்தான். அப்படி இருந்தும் வைசிய குலத்தைச்

சேர்ந்த மணிகுண்டலன் என்பவன் இவனுக்கு நண்பனாக இருந்தான். மணிகுண்டலன் பெருஞ் செல்வந்தருடைய மகன். சூழ்ச்சிக்காரனாகிய கௌதமன் தோழனிடமிருந்து பொருளைக் கொள்ளை அடிக்க நினைத்தான். அது உள்ளூரில் முடியாத காரியம் ஆயிற்று. எனவே நல்லவன் போல் நண்பனைப் பார்த்து, "மணிகுண்டலா! நாம் இருவரும் வெளியூர் சென்று வாணிபம் செய்து பொருள் ஈட்டி வரலாம்" என்றான். இத்திட்டத்திற்கு மணிகுண்டலன் உடன்படவில்லை. "நண்பனே! என் தந்தையிடம் பெருஞ்செல்வம் குவிந்து கிடக்கிறது. நான் ஏன் வெளியூர் சென்று பொருள் தேட வேண்டும்?" என்றான். சூழ்ச்சிக்காரனாகிய கௌதமன், "நண்பனே! மலைபோன்ற செல்வம் தந்தையிடம் இருந்தாலும் மகன் அதை அனுபவிப்பதில் பெருமை இல்லை. தானாகச் சம்பாதிப்பதுதான் சிறப்பாகும்" என்றான். இந்த வாதத்தை மணிகுண்டலன் ஏற்றுக் கொண்டதால் பெரும் பொருளுடன் இருவரும் வெளியூர்களுக்குச் சென்று வாணிபம் செய்தனர். கௌதமன் மிக ஏழை ஆதலால், முதலாகப் போட்ட பொருள் முழுவதும் மணிகுண்டலனுடையதே ஆகும். வியாபாரம் நன்கு நடக்கவே தோழர்கள் வருமானத்தைப் பங்கிட்டுக் கொண்டனர்.

எந்த நிலையிலும் தர்மம்தான் சிறந்தது. தர்ம வழி செல்வதே சிறப்புடையது என்று மணிகுண்டலன் கூறிக் கொண்டிருப்பான். பிராமணனாகப் பிறந்த கௌதமன், "பைத்தியக்காரத்தனம். தர்மமாவது, ஒன்றாவது! எப்படியாவது பொருளைச் சேகரித்து வாழ்வதே புத்திசாலித்தனம்" என்றான். கருத்து வேறுபாடு முற்றவே கௌதமன் ஒரு வழி சொன்னான். "மணிகுண்டலா! நாம் வெளியில் பார்க்கும் பலரையும் இதுபற்றிக் கேட்கலாம். அவர்கள் தர்மம்தான் சிறந்தது என்று சொன்னால், என் பங்குக்குரிய செல்வம் முழுவதையும்

உனக்குத் தந்து விடுகிறேன். நான் சொல்வதுதான் சரி என்றால் உன் பங்குக்குரிய செல்வம் முழுவதையும் எனக்குத் தந்துவிடவேண்டும்" என்றான். அப்பாவியாகிய மணி குண்டலன் அதற்குச் சம்மதித்தான். வழியில் போவோர்களைச் சந்தித்துக் கேட்டார்கள். அறிவில்லாத அந்தச் சாதாரண மக்கள் கௌதமன் சொல்வதுதான் சரி என்றனர். மணிகுண்டலன் பங்கு முழுவதும் கௌதமனுக்குப் போய்விட்டது. மறுபடியும் வியாபாரம் நடந்தது. மணிகுண்டலன் தான் சொன்னதையே சொன்னான். இரண்டாம் முறை பந்தயம் கட்டி மணி குண்டலன் கருத்தை யாரும் பேசாததால் கௌதமன் அவன் கைகளை வெட்டி எறிந்தான். அந்நிலையிலும் மணிகுண்டலன் தர்மத்தின் சிறப்பைப் பேசிக் கொண்டிருந்தான். அவனை ஒழித்துவிட எண்ணிய கௌதமன், மறுபடியும் பந்தயம் கட்டி தான் ஜெயித்தவுடன் மணிகுண்டலனின் இருகண்களையும் பிடுங்கி விட்டான். அப்பொழுதும் மணிகுண்டலன் தன் கொள்கையினின்று மாறவே இல்லை. தர்மம்தான் சிறந்தது, அது இறுதியில் வெல்லும் என்று சொல்லிக் கொண்டு எங்கெங்கோ அலைந்து கங்கைக் கரையில் உள்ள விஷ்ணுவின் சிலைக்குப் பக்கத்தில் வந்து சேர்ந்தான். அங்கேயே படுத்தும் விட்டான். நடு இரவில் இலங்கையில் இருந்து விபீஷணனும் அவன் காவலர்களும் இந்த விஷ்ணுவின் சிலைக்கு பூஜை செய்ய வந்தனர். அந்த இடத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண் டிருந்த விபீடணனின் மகன், கண்ணிழந்த மணிகுண்டலனைப் பார்த்து அவன் வரலாறு முழுவதையும் தெரிந்து கொண்டான். அவன் சோகக் கதையைத் தந்தையாகிய விபீடணனிடம் சொன்னான். அப்போது வீடணன், "மகனே! இராம—இராவண யுத்தத்தின்போது அனுமன் மருத்து மலையினைக் கொண்டு வந்தான். திருப்பி அம்மலையை அனுமன் எடுத்துச் செல்லும்போது அதி அற்புதம் வாய்ந்த விஷல்யகரணி என்ற

மரத்தின் ஒரு பகுதி இங்கு விழுந்துவிட்டது. அதைத் தேடிப் பார்க்கலாம் என்று சொல்லித் தேடி, இறுதியில் அது பெரிய மரமாக வளர்ந்திருப்பதைக் கண்டார்கள். அதில் ஒரு சிறு கிளையை உடைத்து வந்து மணிகுண்டலன்மேல் போட்டவுடன் இழந்த கை, கண்கள் ஆகியவை பெற்று முழுவடிவுடன் விளங்கினான்.

ஒரு சிறிய நாட்டில் ஆட்சி செய்த அரசனுடைய ஒரே மகள் கண்களை இழந்து சோகத்தில் மூழ்கி இருந்தாள். தம் மகளின் கண்களை யார் சரி செய்கிறார்களோ அவர்கள் அவளைத் திருமணம் செய்து கொண்டு அந்த நாட்டையும் ஆளலாம் என்று கூறியிருந்தார் அந்த அரசர். இதை அறிந்த மணிகுண்டலன் தனக்குத் தெரிந்த மருந்துச் செடியின் உதவியால் அரசகுமாரியின் இழந்த கண்களைப் பெறுமாறு செய்து, அவளைத் திருமணம் செய்து கொண்டு அந்த நாட்டை ஆண்டான். சில காலம் கழித்து காவலர்கள் ஒருவனைக் கொண்டுவந்து அவன்முன் நிறுத்தினர். அவன் வேறு யாருமல்ல, தீய வழியில் சென்று மணிகுண்டலன் பொருட் களையும் அபகரித்துக் கொண்டு அவனையும் கொல்ல நினைத்த கௌதமன் என்ற பிராமணனே ஆவான். மணி குண்டலன் அவனை அடையாளம் தெரிந்து கொண்டு அவனை மன்னித்து வேண்டுமான திரவியங்களும் தந்தான். தருமம் இறுதியில் வென்றது.

## ஏகாதசி மகிமை

அவந்தி நகரத்தின் எல்லைக்கப்பால் பிரஷ்டம் செய்யப் பட்ட சண்டாளன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவந்தி நகரைச் சுற்றி ஓடும் சிர்பா நதியின் கரையில் ஒரு விஷ்ணு ஆலயம் இருந்தது. இந்தச் சண்டாளன் மிகப் பெரிய விஷ்ணு பக்தன். ஏகாதசி அன்றைக்கு முழுப்பட்டினி இருந்து அன்று இரவு

விஷ்ணு கோயிலுக்குச் சென்று மனமுருகிப் பாடும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தான். ஒருமுறை ஏகாதசி வழிபாட்டிற்குப் புறப்பட்ட அவன், நதிக்கரையில் இருந்த மரங்களில் பூப்பறிக்கத் துவங்கியபோது ஒரு சிக்கலில் அகப்பட்டுக் கொண்டான். அந்த மரத்தில் இருந்த பிரம்ம ராட்சதன், "நில், பசியால் துடிக்கின்றேன். உன்னைத் தின்னப் போகிறேன்" என்றான். அது கேட்ட சண்டாளன் சிறிதும் அச்சம் இல்லாமல் "நல்லது, உனக்கு உணவாவதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் இப்பொழுதில்லை. 20 ஆண்டுக்காலமாக ஏகாதசி விரதம் இருந்து விஷ்ணு கோயிலுக்குச் சென்று வழிபட்டு வருகிறேன். இன்று ஏகாதசி. என்னை இப்பொழுது விட்டுவிட்டால் கோயிலுக்குச் சென்று வழிபட்டு விட்டு வந்து, நாளைக் காலை உனக்கு உணவாகிறேன்" என்று உறுதியோடு கூறினான் சண்டாளன். அதைக்கேட்ட பிரம்ம ராட்சதன் (பார்ப்பனப் பேய்) அவனுடைய உறுதிப்பாட்டைக் கண்டு அவன் போய்வர அனுமதி தந்தது.

சண்டாளன் தன் வார்த்தை தவறாமல் மறுநாள் காலை வந்து பிரம்ம ராட்சதனிடம் "இன்று, இப்பொழுது என்னை உண்ணலாம்" என்றான். ஆச்சரியம் அடைந்த பிரம்ம ராட்சதன், "எவ்வளவு நாளாக இந்த ஏகாதசி விரதம் இருக்கிறாய்?" என்று கேட்க, "20 ஆண்டுகள்" என விடை பகர்ந்தான் சண்டாளன். அதைக்கேட்ட பிரம்ம ராட்சதன், "நான் ஆதியில் பிராமணனாகத்தான் இருந்தேன். பூணூல் போடுவதற்கு முன்பு எந்த யாகத்திலும் பங்கு கொள்ளக் கூடாது என்று இருந்தும் திருட்டுத்தனமாக ஒரு யாகத்தில் கலந்து கொண்டேன். என் தந்தையார் பெயர் சோமசர்மா. என் பெயர் சர்மா. இப்பொழுது உன்னைச் சாப்பிடுவதற்கு பதிலாக ஒரு ஏகாதசி புண்ணியத்தை எனக்குத் தந்தால், இந்த நிலைமை நீங்கிவிடும்" என்று பிரம்ம ராட்சதன் கேட்டுக்

கொண்டான். அவன் மேல் இரக்கம் கொண்ட சண்டாளன் ஒரு ஏகாதசி புண்ணியத்தில் இரண்டு மணி நேரப் பங்கை அவனுக்குத் தந்து அந்த இழிபிறவியிலிருந்து விடுதலை அடையச் செய்தான்.

இந்தச் சண்டாளன் மேற்கொண்ட தீர்த்த யாத்திரையின் போது தன் பழம்பிறப்பை உணர்ந்தான். துறவியாக ஆசிரம வாழ்க்கை நடத்தும் பொழுது பிச்சை ஏற்றுக் கொண்டு வந்த உணவில் மண் விழுந்து விட்டது என்பதற்காக அந்த உணவைத் தூக்கி எறிந்து விட்டான். அதன் காரணமாகவே இப்பொழுது சண்டாளனாகப் பிறந்தான். அதன்பிறகு தீர்த்த யாத்திரை சென்று மன்னிப்புப் பெற்றான்.

பிரம்ம புராணத்தின் பிற்பகுதி, யோகம் என்பது பற்றியும் அது செய்யப்பட வேண்டிய முறை பற்றியும் விரிவாகப் பேசுகிறது.

கதையைத் தொடங்கியபடியே நைமிசாரண்யவனத்தில் உரோமஹர்ஷனர் இக்கதையை முடித்தார் என்று இப்புராணம் முடிகிறது.



# 2. பத்ம புராணம்

## இப்புராணம் பற்றி...

*ஆதியில் ஒரே ஒரு புராணம்தான் இருந்தது. நூறு கோடி பாடல்களைக் கொண்டதாக அப்புராணம் இருந்தது. சென்ற கல்பத்தில் இப்புராணம் ஒன்று மட்டுமே இருந்தது. இந்தப் புராணம் மனித வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய தர்ம, அர்த்த, காமம் ஆகிய மூன்றையும் பற்றிக் கூறி, இவற்றைச் செம்மையாகக் கடைப்பிடித்தால் மோட்சம் என்ற விடுதலை தானே கிட்டும் என்று கூறிற்று.*

*இதிலிருந்து ஒன்றைத் தெரிந்து கொள்ளலாம். மிகப் பழங்காலத்தில் இருந்தே இந்தியர்களைப் பொறுத்தமட்டில் மனித வாழ்க்கை என்பது ஆன்மிகம், உலகியல் என்ற இரண்டையும் ஒரளவில் கலந்து வாழ்க்கையில் கடைப்பிடிப்பதையே குறிக்கோளாகக் கொண்ட சமுதாயம் ஆகும் என்பதை அறியவேண்டும். பத்ம புராணம் மிகப் பெரியதாக இருந்தமையாலும், சாதாரண மக்கள் அதைப் படிப்பது என்பது மிகக் கடினமாக இருந்ததாலும், வேத வியாசர் அதைச் சுருக்கிப் பதினெட்டு அத்தியாயங்களில் நான்கு இலட்சம் பாடல்களாகத் தொகுத்தார்.*

*பிரம்ம புராணத்தை அடுத்து சிறப்புக் கொண்டது பத்ம புராணம் ஆகும். ஒரு காலத்தில் இந்த பூமியே ஒரு தங்கத் தாமரை வடிவுடன் விளங்கியதால், இதற்குப் பத்ம புராணம் என்று பெயர் வந்தது. வேத வியாசருக்குப் பின் இப்புராணம் மேலும் சுருக்கப்பட்டு ஏழு அத்தியாயங்களையும், 55,000 பாடல்களையும் கொண்டு விளங்குகிறது. இக் காண்டங்கள் சிருஷ்டி காண்டம்; பூமி காண்டம்; சுவர்க்க காண்டம்; பிரம்ம காண்டம்; பாதாள காண்டம்; உத்தர காண்டம்; கிரியா யோகா முதலியனவாகும்.*

### சிவசர்மாவின் கதை

**மு**ன்னொரு காலத்தில் பல முனிவர்கள் ஒன்றுகூடி உரோமஹர்ஷனரிடம் பத்ம புராணத்தைத் தங்களுக்குக் கூறுமாறு வேண்டினர். அந்த வேண்டுகோளுக்கிணங்கி உரோமஹர்ஷனரே சிவசர்மாவின் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

மிகப் பழங்காலத்தில் துவாரகையில் சிவசர்மா என்ற பிராமணர் வாழ்ந்து வந்தார். வேதங்கள், அதன் அங்கங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றை நன்கு அறிந்திருந்த சிவசர்மா, மந்திர சக்தியால் பல அற்புதங்களைச் செய்யும் ஆற்றலையும் பெற்றிருந்தார்.

அவருக்கு யக்ஞசர்மா, வேதசர்மா, தர்மசர்மா, விஷ்ணு சர்மா, சோமசர்மா என்ற ஐந்து புதல்வர்கள் இருந்தனர். தம் பிள்ளைகள் தம்மிடத்தில் எவ்வளவு பணிவும், சொன்னதைச் செய்யும் திட சித்தமும் உடையவர்களாக இருந்தனர் என்பதை அறிய சிவசர்மா விரும்பினார். தம்முடைய அபூர்வ சக்தியால் தம் மனைவியைப் போல மாய மனைவியை உண்டாக்கி அவள் இறந்து போகுமாறு செய்தார். தம் மூத்த மகனாகிய யக்ஞ

சர்மாவை அழைத்து, "உன் தாய் இறந்துவிட்டாள். அவள் உடம்பு வீட்டை அசுத்தம் செய்கிறது. கத்தி எடுத்து அவள் உடம்பைப் பல துண்டங்களாக வெட்டித் தூரத்தே எறிந்து விடு" என்று ஆணையிட்டார். ஒரு சிறிதும் தயக்கம் காட்டாமல் தந்தையின் கட்டளையை யக்ஞசர்மா செய்து முடித்தான். மகனுடைய பணியைக் கண்டு மகிழ்ந்த சிவசர்மா தன் மாயா சக்தியால் மிகவும் அழகு வாய்ந்த பெண்ணை உற்பத்தி செய்து, தன் இரண்டாவது மகனாகிய வேதசர்மாவிடம் அனுப்பினார். மகனை அழைத்து, "இந்த அழகான பெண்ணை மணந்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன்; அவளைச் சம்மதிக்க வைக்க வேண்டும்" என்று கூறினார். அந்தப் பெண் வேதசர்மாவிடம் வந்து 'உன் தந்தை மிகவும் வயதானவர், நோயுற்றுள்ளார். அவரைத் திருமணம் செய்துகொள்ள முடியாது. ஆனால் உன்னைத் திருமணம் செய்து கொள்கிறேன்' என்றாள். வேதசர்மா தான் மணம் செய்து கொள்ளமுடியாது என்று கூறி, எப்படியாவது தன் தந்தையை அவள் மணம் செய்து கொள்ள வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். உடனே அந்தப் பெண் 'நான் சொல்வதற்கு நீ கட்டுப்படுவதானால் உன் தந்தையைத் திருமணம் செய்து கொள்கிறேன்' என்றாள். அவள் என்ன விதித்தாலும் அதைச் செய்வதாக வேதசர்மா ஒப்புக்கொண்டான். அப்பெண் 'உன் தலையை வெட்டி என் கையில் கொடுக்க வேண்டும். உன் தலை என் கைக்கு வந்தவுடன் உன் தந்தையை மணந்து கொள்கிறேன்' என்றாள். மறுவார்த்தை பேசாமல் வேதசர்மா தன் தலையை வெட்டி அவள் கையில் கொடுத்தான்.

வேதசர்மாவின் வெட்டுண்ட தலையை மூன்றாவது மகனாகிய தர்மசர்மாவிடம் சிவசர்மா கொடுத்தார். அந்தத் தலையை வைத்துக் கொண்டு மிகத் தீவிரமாக தர்ம தேவதையை தியானம் செய்தான், தர்மசர்மா. தர்ம தேவதை

நேரில் வந்தவுடன் என் அண்ணனின் உயிரைத் தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அப்படியே அண்ணன் பிழைத்தவுடன் இருவருமாகச் சென்று தந்தையை வணங்கி நின்றனர். மகிழ்ச்சியடைந்த சிவசர்மா, நான்காவது மகனாகிய விஷ்ணுசர்மாவை அழைத்து, 'நீ இந்திர லோகம் சென்று இந்திரனிடம் கொஞ்சம் அமிர்தத்தை வாங்கி வா' என்றார். விஷ்ணுசர்மா இந்திரலோகம் சென்று அமிர்தத்தைத் தேடுகையில் இவனுடைய எண்ணத்தை மாற்ற முயன்று இந்திரன் மேனகையை அவனிடம் அனுப்பினான். மேனகை அவனை மயக்கி, 'நாம் இருவரும் மணம் செய்துகொண்டால் மிகச் சிறப்பான இன்பத்தைத் தருவேன்' என்று கூறினாள். விஷ்ணுசர்மா அதற்கு இசையாமல் போகவே, துர்த்தேவதை களை அனுப்பி விஷ்ணுசர்மாவைக் கலைக்க முயன்றான். அதற்கும் விஷ்ணுசர்மா மசியவில்லை என்றவுடன், தேவேந்திரன் ஒரு பாத்திரத்தில் அமிர்தத்தைக் கொடுத்தார். விஷ்ணுசர்மாவும் அந்த அமிர்தத்தைக் கொண்டுவந்து சிவசர்மாவிடம் கொடுத்தான். மகிழ்ந்த சிவசர்மா இந்த நான்கு பிள்ளைகளையும் நேரே விஷ்ணுலோகம் போகுமாறு அனுப்பி வைத்தார்.

எஞ்சியிருக்கும் ஐந்தாவது பிள்ளையான சோமசர்மாவை அழைத்து, "நானும் உன் தாயாரும் தீர்த்தயாத்திரை போகிறோம். அதுவரை இந்த அமிர்தத்தை கவனமாகப் பாதுகாத்து வைத்திரு" என்று கூறிவிட்டு, அமிர்தத்தை அவனிடம் கொடுத்துவிட்டுப் போனார். சிலகாலம் கழித்து சிவசர்மாவும், அவன் மனைவியும் தொழுநோயால் பாதிக்கப்பட்ட உடம்புடன் சோமசர்மாவிடம் வந்து சேர்ந்தனர். அவன் முகம் சுளிக்காமல் அவர்களுக்குப் பணிவிடை செய்தான். சிவசர்மா தேவை இல்லாமல் கோபித்துக் கொண்டு சோமசர்மாவை வாயில் வந்தபடி ஏசினார்.

அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் சோமசர்மா தொண்டு செய்தான்.

ஒருநாள் திடீரென்று, 'உன்னிடம் அமிர்தத்தைக் கொடுத்து வைத்திருந்தேனே, அதைக் கொண்டுவா' என்றார். மகனுக்குக் கட்டளையிடுவதற்கு முன்பே சிவசர்மா அந்த அமிர்தத்தைக் காணாமல் போகுமாறு செய்தார். இதை அறியாத சோமசர்மா பாத்திரம் காலியாக இருப்பதைப் பார்த்து, தன் பெருஞ் சக்தியால் அந்தப் பாத்திரம் நிறைய அமிர்தத்தை வரவழைத்துத் தந்தையிடம் கொண்டு நீட்டினான். மகனுடைய சக்தியில் மகிழ்ச்சி அடைந்த சிவசர்மா மனைவியை அழைத்துக் கொண்டு நேரே விஷ்ணு லோகம் போய்விட்டார். தனியே விடப்பட்ட சோமசர்மா ஆழ்ந்த தியானத்தில் இருக்கும் பொழுது துர்த்தேவதைகள் அவனைச் சூழ்ந்துகொண்டு அவன் கவனத்தைத் திருப்ப முயன்றன. தேவதைகளைக் கண்டு பயத்தால் இறந்து போனான். அதனால் அடுத்த ஜென்மத்தில் ஹிரண்யன் என்ற அரக்கனுடைய மகனாகப் பிரகலாதன் என்ற பெயருடன் பிறந்தான். மிகுந்த புண்ணியம் செய்திருந்த தால் அரக்கனாகப் பிறந்தும், மிகுந்த விஷ்ணு பக்தனாக விளங்கினான் பிரகலாதன்.

### விருத்ராசுரன் கதை

காசிப முனிவரின் மனைவியருள் திதி என்பவள் தேவர்களுக்கு விரோதிகளான தைத்தியர்களைப் பெற்றுக் கொண்டிருந்தாள். காசிபனின் மற்றொரு மனைவியும், திதியின் சகோதரியுமான அதிதி தேவர்களைப் பெற்றுக் கொண் டிருந்தாள். அவருள் இந்திரன் நான்கு கைகளுடனும், கோடி சூரியப் பிரகாசத்துடனும் பிறந்தான். நாளாவட்டத்தில் இந்த இந்திரன் மிகுந்த பலவானாகி தேவர்களுக்குத் தலைவனாகவும் ஆகிவிட்டான். திதியின் பிள்ளைகளாகிய தைத்தியர்களை

அழித்துக் கொண்டிருந்தான். இதை அறிந்த திதி காசிப முனிவரிடம் முறையிட்டு அவர் உதவியுடன் பலி என்ற பிள்ளையைப் பெற்றாள். மிகுந்த பலசாலியாகிய இந்த பலி தேவர்களை அழிப்பதற்காகப் பெருந்தவம் செய்தான். இவன் குறிக்கோளின் ரகசியத்தை அறிந்த இந்திரன், இவன் தவம் செய்து கொண்டிருக்கும் பொழுது வஜ்ராயுதத்தால் இவனை அழித்தான். இதை அறிந்த திதி இந்திரன் செய்த அநியாயத்தைக் காசிபரிடம் கூற, அவன் செய்தது தவறு என்று அவரும் கூறிவிட்டார்.

எப்படியாவது இந்திரனை ஒழிக்க வேண்டும் என்று விரும்பிய திதி, மறுபடியும் காசிபரிடம் சென்று தன் விருப்பத்தைக் கூறினாள். இந்திரன்மேல் பெருஞ்சினம் கொண்ட காசிபர் தன் தலையில் இருந்து ஒரு முடியைப் பறித்து, பூமியில் எறிந்தார். விருத்ராசுரன் என்ற பெயருடன் அந்த முடியிலிருந்து ஒரு அசுரன் தோன்றி, "எனக்கு இடும் கட்டளை என்ன?" என்று காசிபரிடம் கேட்டான். "எப்படியும் இந்திரனை ஒழித்துவிடு" என்று கட்டளையிட்டார். இந்த நோக்கத்துடன் புறப்பட்ட விருத்ராசுரன் போர்க்கலை பயின்று கொண்டிருந்தான். இதை அறிந்த இந்திரன் இவனைப் போர் செய்து அழிக்க முடியாது, தந்திரத்தால் தான் அழிக்க முடியும் என்று நினைத்து சப்த ரிஷிகளையும் அழைத்தான். "நீங்கள் எனக்காக விருத்ராசுரனிடம் செல்லுங்கள். தேவாசுரப் பகையை இனி வளர்க்க வேண்டாம். என் ஆட்சியில் பாதியை அவனுக்குக் கொடுக்கிறேன். நாங்கள் இருவரும் ஒற்றுமையாக இருந்து ஆட்சி செய்யலாம் என்று சொல்லி அவனை அழைத்து வாருங்கள்" என்று வேண்டிக் கொண்டான். முனிவர்கள் விருத்ராசுரனிடம் சென்று இதைச் சொல்ல, விருத்ராசுரன் அதை ஏற்றுக் கொண்டான். உடன்படிக்கைப்படியே இந்திரன் ஆட்சியை இரண்டாகப் பிரித்து ஒரு பகுதியை விருத்ரா

சுரனிடம் கொடுத்துவிட்டான். இந்த உடன்படிக்கையைக் கடைப்பிடிக்க சற்றும் விரும்பாத இந்திரன், காலம் பார்த்து விருத்ராசுரனை அழிக்க நினைத்தான். இதனிடையில் நந்தன கானகம் என்ற இடத்தில் உலாவிக் கொண்டிருந்த விருத்ரா சுரன் எதிரே ரம்பை என்ற தேவ கன்னிகை தோன்றினாள். அவள்மேல் ஆசைப்பட்ட விருத்ரன் தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டினான். தான் என்ன சொன்னாலும் அவன் கேட்க வேண்டும், அதன்படி நடக்க வேண்டும் என்று ஒரு கட்டளை விதித்தாள் ரம்பா. விருத்ராசுரன் அதற்கு உடன்படவே ரம்பா மணம் செய்து கொண்டாள். சில காலம் கழித்து ரம்பா விருத்ராசுரனைப் பார்த்து "இந்த அருமையான திராட்சை ரசத்தை அருந்துங்கள்" என்று கூறினாள். விருத்ரா சுரன், 'காசிபன் என்ற பிராமணன் மகன் நான். மது அருந்துவது பாவம்' என்று கூறினான். தனக்காக மதுவை அருந்தியே தீர வேண்டும் என்று ரம்பா பிடிவாதம் செய்ததால், விருத்ராசுரன் மதுவை அருந்தி மயக்கத்தில் வீழ்ந்து விட்டான். இந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த இந்திரன், விருத்ரனைக் கொலை செய்து விட்டான். ஒரு பிராமணனைக் கொன்றதால் பிரம்மஹத்திதோஷம் இந்திரனைப் பற்றிக் கொண்டது.

*(இதனை அடுத்துப் பத்ம புராணத்தில் வெனாவின் கதையும், பிருதுவின் கதையும் வருகின்றன. இவை ஏற்கெனவே பிரம்ம புராணத்தில் கூறப்பட்டுள்ளன.)*

### ஆண், பெண் பன்றிகளின் கதை

இஷ்வாகு மன்னன் சுதேவா என்ற பெண்ணை மணந்து அயோத்தியை ஆண்டு வந்தான். ஒருமுறை அவன் வேட்டைக்குப் புறப்பட்டபோது அவன் மனைவி சுதேவாவும் உடன் சென்றாள். பல மிருகங்களை வேட்டையாடிவிட்டு

இறுதியாக ஓர் ஆண் பன்றி, அதன் மனைவியாகிய பெண் பன்றி, அவற்றின் குட்டிகளாகிய ஆண் பெண் பன்றிகள் அனைத்தும் ஒன்றாக நின்ற இடத்திற்கு வந்தனர். இஷ்வாகுவின் வீரர் பலர் அப் பன்றிகளை எதிர்க்க, பலரைத் தம் கொம்புகளால் குத்திக் கிழித்து விட்டது. வியப்படைந்த இஷ்வாகு மன்னன் தானே அந்த ஆண் பன்றியை அம்பை எய்து கொன்றான். உடனே பெண்பன்றி சீறிப் பாய்ந்தது. இஷ்வாகு அம்பு பட்டு அப் பெண் பன்றி குற்றுயிரும், கொலை உயிருமாக இரத்தம் வழியக் கிடந்தது. இஷ்வாகுவின் மனைவியாகிய சுதேவா இரக்கப்பட்டு அப்பன்றியின் முகத்தில் நீர் தெளித்து, குடிக்கவும் நீர் கொடுத்தாள். அப் பெண்பன்றி பேச ஆரம்பித்தவுடன் சுதேவா ஆச்சரியப்பட்டுப் போனாள். உடனே பெண் பன்றியைப் பார்த்து, நீ யார்? உன் கணவன் யார்? என்று விவரம் கேட்டவுடன் அப் பெண்பன்றி தன் கணவன் பற்றி விவரம் சொல்லலாயிற்று:

ஒரு காலத்தில் சுமேரு உச்சியில் புலஸ்தியன் என்ற முனிவர் தவம் செய்துகொண்டு இருந்தார். ரங்க வித்யாதரன் என்ற கந்தர்வன் அருகில் நின்று பாடிக்கொண்டிருந்தான். புலஸ்தியனுடைய தவம் கலையத் தொடங்கியதால், அவர் கந்தர்வனை அழைத்து, 'பாடல் நன்றாக இருக்கிறது. ஆனாலும் அது என் தவத்திற்கு இடையூறாக இருப்பதால் வேறு எங்காவது சென்று பாடு' என்று கூறினார். அந்த கந்தர்வன் 'சுமேருமலை அனைவருக்கும் சொந்தம். பாடுவது என் உரிமை. அதைக் கேட்க நீ யார்? உனக்கு இந்த இடம் பிடிக்கவில்லை யானால் வேறு எங்காவது சென்று தவம் செய்' என்று கூறிவிட்டான். சில நாட்களில் புலஸ்திய முனிவர் காட்டில் வேறொரு பகுதிக்குச் சென்று தவம் செய்யத் துவங்கினார். அவர் அங்கே சென்றிருப்பதை அறிந்த கந்தர்வன் ஒரு குறும்பு செய்ய வேண்டும் என்று முடிவு செய்தான். அதனால் ஒரு

*பன்றி வடிவெடுத்துக்கொண்டு புலஸ்திய முனிவர் தங்கியிருந்த பர்ணசாலையை அடுத்த பூமியைத் தோண்டத் துவங்கினான். தவம் கலைந்த புலஸ்திய முனிவர் இது சாதாரண காட்டுப் பன்றி அன்று, ரங்க வித்யாதரன் என்ற பழைய கந்தர்வன்தான் என்பதை அறிந்துகொண்டார். கடுஞ்சினம் கொண்ட புலஸ்திய முனிவர் 'நீ பூமியில் பன்றியாகப் பிறக்கக் கடவாய்!' என்று சாபமிட்டார். சாபத்தைக் கேட்டு நடுங்கிப் போன வித்யாதரன் தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். முனிவர், "இஷ்வாகு மன்னனுடைய அம்பு உன்னைக் கொல்லும்போது, நீ பழைய கந்தர்வ வடிவம் பெறுவாய்' என்று சாப விமோசன வழியும் தந்தார். "இப்பொழுது உன் கணவனாகிய இஷ்வாகு அம்பு பட்டு என் கணவன் உய்கதி அடைந்து விட்டான்" என்று கூறி முடிக்கவும் 'சுதேவா! உன்னுடைய கதை என்ன?' என்று கேட்க, பெண் பன்றி தன் கதையைக் கூறத் துவங்கியது:*

*ஒரு காலத்தில் ஸ்ரீபுரம் என்ற ஊரில் வசுதத்தா என்ற பிராமணன் வசித்து வந்தான். அவனுக்குச் சுதேவா என்ற பெண் (இஷ்வாகுவின் மனைவி சுதேவா வேறு, இவள் வேறு) இருந்தாள். நல்ல கல்வி அறிவு உடையவனாயினும், தனக்கு ஒரே பெண் என்ற காரணத்தால், மகளுக்கு அளவுமீறிச் செல்லம் கொடுத்து ஒரே அகங்கார சொரூபமாக அவளை வளர்த்து வந்தான். அவளுக்கு மணப் பருவம் வந்ததும், எத்துணையோ பேர் அவளை மணக்க முன்வந்தும் வசுதத்தா தன் மகளை அவர்களுக்கு மணம் செய்து கொடுக்க மறுத்து விட்டான். தன் ஒரே பெண்ணைப் பிரிந்திருக்க முடியாததால் அனாதையாக உள்ள ஒருவனுக்குத் தன் மகளை மண முடித்து வீட்டோடு மாப்பிள்ளையாக வைத்துக் கொள்ள விரும்பினான். சிவசர்மா என்ற ஏழை பிராமணனுக்குத் தன் மகளை மணமுடித்து வீட்டோடு வைத்துக் கொண்டான். அகங்கார வடிவினளாகிய சுதேவா கணவனைத் தூசிபோல*

மதித்து நடத்தி வந்தாள். மனைவியின் கொடுமையைத் தாங்க முடியாத சிவசர்மா ஒருவருக்கும் சொல்லாமல் ஒருநாள் வீட்டை விட்டே போய்விட்டான். வசுதத்தாவின் மனைவி தன் மகளை செல்லம் கொடுத்துக் கெடுத்ததையும், அந்த மகள் கணவனைத் தூசாக மதித்து நடத்தியதையும் எடுத்துக் கூறி, 'இப்படிப்பட்ட பெண் வீட்டில் இருப்பதில் யாருக்கும் நன்மை யில்லை. இவளை வீட்டைவிட்டு அனுப்பி விடுக!' என்று கூறினாள். மனைவி சொல்லில் இருக்கும் உண்மையைப் புரிந்துகொண்ட வசுதத்தா தன் செல்ல மகளை வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். ஊர் ஊராகச் சென்று, பிச்சை எடுத்து வயிறு வளர்க்க வேண்டிய சூழ்நிலைக்கு வந்த சுதேவா கடைசியாக ஒரு ராஜ்ஜியத்தில் புகுந்து மிகுந்த செல்வம் உடைய ஒருவன் வீட்டில் பிச்சை கேட்டாள். அந்த வீட்டுக் காரன் தன் மனைவியை அழைத்து, "மங்களா! யாரோ பசி என்று கேட்கிறார்கள், வேண்டுமான உணவினைப் படைப்பா யாக!" என்று கூறினான். மங்களா வெளியே வந்து பார்த்துப் பசியுடன் கூடிய மெல்லிய உடலை உள்ளவளை உள்ளே அழைத்து அமரச் செய்து, இனிப்புப் பண்டங்கள் நிறையக் கொடுத்து உண்ணச் செய்தாள். இப் பெண் உண்டு கொண் டிருக்கும்போது சிவசர்மா இவளைப் பார்த்து, 'நீ யார்? ஏன் இந்த நிலைமைக்கு வந்தாய்?' என்று கேட்டான். அவன் குரலிலிருந்து அவன் யார் என்பதைப் புரிந்து கொண்ட சுதேவா தலை குனிந்து கொண்டாள். இப்பொழுது அவளை அறிந்து கொண்ட சிவசர்மா, மங்களாவிடம் நடந்ததைக் கூறி "இவள் என் மனைவி. இவளை நன்றாகப் பாதுகாப்பாயாக!" என்று கூறினான். மங்களாவும் அப்படியே செய்தாள் என்றாலும், தான் செய்த குற்றத்தை நினைத்து வருந்தி சுதேவா உயிரை விட்டுவிட்டாள். நரகலோகத்தில் பல தண்டனை களையும் அனுபவித்துப் பிறகு கரையான், பூச்சி வாழ்க்கை

என்பவற்றில் பிறந்து வாழ்ந்து படிப்படியாக முன்னேறி இறுதியாகச் சுதேவா ஒரு பெண் பன்றியாகப் பிறந்தாள். அந்தப் பெண் பன்றி வேறுயாருமில்லை, நான்தான்" என்று இஷ்வாகுவின் மனைவிக்குப் பெண்பன்றி தன் பூர்வ வரலாற்றைக் கூறிப் பெண் தெய்வ வடிவை எடுத்துக் கொண்டது. உடனே தேவ கணங்கள் வந்து இந்த உயிரை விமானத்தில் ஏற்றிச் சுவர்க்கத்திற்கு அழைத்துச் சென்றனர்.

### கிரிகலா – சுகலா கதை

ஒரு காலத்தில் வாரணாசியில் கிரிகலா என்ற வைசியன் வாழ்ந்து வந்தான். திடீரென்று தீர்த்த யாத்திரை போக வேண்டுமென்று மனைவியிடம் சொன்னான். சுகலா என்ற அவன் மனைவி தானும் உடன் வருவேன் என்று அடம் பிடித்தாள். வழியில் எத்தனையோ இடையூறுகள் ஏற்படு மென்று அஞ்சிய கிரிகலா அவளிடம் சொல்லாமலே யாத்திரைக்குப் புறப்பட்டு விட்டான். கணவனிடம் மிக்க அன்பு கொண்ட சுகலா உணவு, உறக்கம் என்பதை விட்டுத் தரையில் கிடந்து உறங்கத் தொடங்கினாள். அவளது உறவினர்கள் அவளிடம் "உன் கணவன் தீர்த்த யாத்திரைக்குத்தானே போயிருக்கிறார். நீ ஏன் இப்படி மனத்தைக் குழப்பிக் கொண்டு, உடம்பைக் கெடுத்துக் கொள்கிறாய்?" என்று கூறினர். அவர்கள் கூறியதை ஏற்காத சுகலா 'என்னிடம் சொல்லாமல் போனதே என்னை ஒதுக்கி வைத்தது போலத் தான். ஆகவே நான் இந்த விரதங்களை அனுஷ்டிப்பது நியாயம்தான்' என்று வாதாடினாள்.

ஒருமுறை இந்திரன் பணியாளன் ஒருவன் வந்து, "அம்மா! உன் கணவன் போய் மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. அவன் எங்கே போனான் என்று யாருக்கும் தெரியவில்லை.

போனவனை நினைத்து அவதிப்பட்டு உன் இளமையை ஏன் பாழாக்கிக் கொள்கிறாய்? எங்கள் எஜமானர் உங்களை மணந்து கொள்ளத் தயாராக இருக்கிறார்' என்று கூறியவுடன், 'உங்கள் எஜமானர் யார்?' என, 'இந்திரன்!' என்று அவன் விடை கூறியதும், 'உன் எஜமானனை இங்கு வரச் சொல்' என்றாள். முழு அலங்காரங்களுடன் இந்திரன் அங்கு வந்தான். இந்திரனை நன்றாகக் கடிந்து கொண்டு, 'இப்படிப்பட்ட பாவச் செயல்களில் தேவேந்திரன் இறங்கக் கூடாது' என்று ஏசி அனுப்பி விட்டாள்.

இந்த நிலையில் தன் தீர்த்த யாத்திரையை முடித்துக் கொண்டு கிரிகலா வீடு திரும்பத் தயாரானான். அப்போது ஒரு அசரீரி பின்வருமாறு கூறிற்று: 'கிரிகலா, இத்தனை தீர்த்தங்களில் நீ குளித்தும் கடுகளவு புண்ணியமும் சேர வில்லை. அதனால் உன் முன்னோர்கள் இன்றும் நரகத்தில் தான் அழுந்தி உள்ளனர்' என்று கூற, கிரிகலா 'நான் என்ன தவறு செய்தேன்?' என்று கேட்டான். அசரீரி, 'உன்னையே நம்பி இருக்கும் உன் மனைவியை அழைத்துக் கொண்டு தீர்த்த யாத்திரை செல்லாமல், நீ மட்டும் போனதால் ஒரு பயனும் இல்லை. உடனே அவளைச் சென்று அடைவாயாக!' என்று கூறவே விரைவாக வீடு திரும்பிய கிரிகலா மனைவியோடு மகிழ்ச்சியாக இருந்தான். அப்போது அங்கே வந்த இந்திரன் கிரிகலாவைப் பார்த்து 'இப்படியொரு மனைவியை அடைய நீ புண்ணியம் செய்திருக்க வேண்டும். அவள் மனத்தைக் கலைக்க நான் எவ்வளவோ முயன்றும் அது முடியவில்லை. ஆகவே உங்களுக்கு ஒரு வரம் தருகிறேன். என்ன வரம் வேண்டும்?' என்று கேட்க, கிரிகலாவும் அவன் மனைவியும் "நாங்கள் நேர்மையான வழியிலிருந்து விலகாமல் இருக்க வேண்டும்' என்றும், நாங்கள் வாழ்கின்ற இந்த இடம் 'நாரி தீர்த்தம்' என்ற பெயருடன் புண்ணிய ஸ்தலமாக விளங்க

வேண்டும்" என்றும் கேட்டனர். இந்திரனும் அவ்வாறே கொடுத்து மகிழ்ந்தான்.

### பிப்பலாவின் கதை

காசிபனின் மகனாகிய பிப்பலா உலகத்தில் உள்ள யாவரையும் விடத் தான் அதிக ஆற்றலைப் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் தவம் செய்தான். ஊண், உறக்கம் அனைத்தையும் துறந்து, தவம் செய்த அவன் உடம்பைச் சுற்றிப் பாம்புகள், கொடிய விலங்குகள் ஆகியவை இருந்தும் அவன் தவத்திலேயே இருந்தான். அவன் உடம்பைச் சுற்றிக் கரையான் புற்று வைத்தும், அவன் தவம் கலையவில்லை. இந்த நிலையில் 3,000 ஆண்டுகள் கழிந்தன. அவனுடைய ஆற்றல் அவனைச் சுற்றி நிறைந்திருந்ததுடன் அவன் தலையைச் சுற்றி ஒரு ஒளி வளையமும் உண்டாயிற்று. பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரில் குறிப்பாக யாரையும் நினைத்து தவம் செய்யாததால் திடீரென்று ஒரு அசரீரி கேட்டது: 'பிப்பலா! உன் தவத்தை மெச்சினோம். உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேள்.' உடனே பிப்பலா, "இவ்வுலகத்தில் உள்ள அனைத்தையும் அடக்கி ஆளும் ஆற்றலை நான் பெற வேண்டும்" என்று கூறினான். 'அப்படியே ஆகட்டும்' என்றது அசரீரி. மகிழ்ச்சி மிகுந்த பிப்பலா, ஒரு குளக்கரையில் அமர்ந்து கொண்டு தன்னையும், தான் பெற்ற வரத்தையும் மனத்தில் நினைந்து மகிழ்ச்சி அடைந்து கொண்டிருந்தான். அப்பொழுது அக் குளத்தில் இருந்த ஒரு கொக்கு, "அடேய் பிப்பலா! 3,000 ஆண்டுகள் தவம் செய்து என்ன செய்துவிட்டாய்? ஒரு தவமும் செய்யாத சுகர்மா உன்னைவிட மிகப் பெரியவன். அவனைப் போய்ப் பார். நீ எவ்வளவு சாதாரணமானவன் என்பது தெரியும்' என்று கூறிற்று. கொக்கு பேசிய அதிசயத்தைப் பார்த்த பிப்பலா, "நீ யார்?" என்று கேட்டான். 'அதையும்

சுகர்மாவைக் கேட்டுத் தெரிந்து கொள்' என்று கொக்கு கூறியது. சுகர்மா இருக்குமிடத்தை கொக்கு கூறவே பிப்பலா, சுகர்மா இருக்குமிடம் வந்து சேர்ந்தான். சுகர்மா தன் பெற்றோர்களை உபசரித்துக் கொண்டிருந்தான். உபசரணை முடித்த சுகர்மா வெளியே வந்தவுடன் "ஓ பிப்பலா! இந்த உடம்பை வருத்தி 3,000 ஆண்டுகள் செலவு செய்து என்ன பயனைப் பெற்றாய்? நான் உன்னைப் போல் தவம் செய்ய வில்லை. வேதங்களைக் கரைத்துக் குடிக்கவில்லை. ஆனாலும் இந்திராதி தேவர்கள் நான் அழைத்தால் இங்கு வந்து நிற்பார்கள். அதுமட்டுமல்ல, உன்னிடம் பேசிய கொக்கு பிரம்மனே ஆவார். இன்னும் ஏதாவது தெரிந்து கொள்ள விரும்புகிறாயா?" என்று கேட்டான் சுகர்மா. இந்திரன் முதலானவர்களை அங்கு வருமாறு செய்த சுகர்மா 'என்னுடைய சக்தியைக் காட்டவே இவர்களை இங்கு வரவழைத்தேன்' என்று கூறினான். இதற்கு மேலும் உனக்கு ஒரு விளக்கம் தருவதற்கு யயாதியின் கதையைச் சொல்கிறேன், கேள்' என்றான்.

**யயாதியின் கதை**

இக்கதை முன்னரே பிரம்ம புராணத்தில் சொல்லப் பட்டது. அங்குச் சொல்லப்பட்டதற்கும், இங்குச் சொல்லப் பட்டதற்கும் உள்ள ஒரே ஒரு வேறுபாட்டை மட்டும் இங்குக் குறிக்கலாம். பிரம்ம புராணத்தில் புரு என்ற தன் மகனிடம் தன் முதுமையைக் கொடுத்து அவன் இளமையை யயாதி வாங்கியதற்குக் காரணம், உலகைச் சுற்றிப் பார்க்க என்று கூறப்பட்டுள்ளது. இங்குள்ள கதைப்படி யயாதி தன் முதுமையை மகன் புருவிடம் கொடுத்துவிட்டு அவன், இளமை யைப் பெற்றுக் கொண்டதற்குக் காரணம் ரதியின் மகளான அஷ்ருவிந்துமதியை மணந்து கொள்வதற்காக என்பதாகும்.

## திவ்விய தேவியின் கதை

பிருகு முனிவரின் வழியில் 'சயவனன்' என்ற முனிவன் தோன்றினார். நிறைந்த ஞானத்தைப் பெற வேண்டும் என்று நினைத்தார். அதைப் பெறுவதற்குரிய சிறந்த வழி தீர்த்த யாத்திரை செல்வதுதான் என்ற முடிவுக்கு வந்தார். பல ஊர்கட்குச் சென்று பல தீர்த்தங்களில் நீராடி விட்டு நர்மதை ஆற்றின் தென்கரையில் உள்ள 'அமரகந்தகா' என்ற ஊரின் எல்லையில் உள்ள ஓர் ஆலமரத்தின் கீழ் அமர்ந்திருந்தார். அப்பொழுது அம்மரத்தின் கிளைகளில் ஒரு கிளிக் குடும்பம் வசித்து வந்தது. ஆண் கிளியின் பெயர் குஞ்சலா. இக்கிளி தன் மனைவி, நான்கு மகன் கிளிகளுடன் வசித்து வந்தது. பிள்ளைகளுள் மூத்த கிளியாகிய 'உஞ்வலா' காலை இரை தேடச் சென்று தாய் தந்தையருக்கு வேண்டுமான இரையைத் தேடிக் கொண்டு மாலை வரும். அந்த உணவை மற்ற கிளிகள் பகிர்ந்து சாப்பிடும். சயவன முனிவர் அங்கு தங்கியிருந்த நேரத்தில் மேலே உள்ள கிளிக் குடும்பத்தில் நடந்த உரையாடலைக் கேட்க நேர்ந்தது.

**குஞ்சலா கிளி (தந்தை) :** மகனே உஞ்வலா! இன்று எங்கு இரை தேடப் போயிருந்தாய்?

**உஞ்வலா :** தந்தையே! பிளக்ஷத்தீவு என்ற பகுதிக்குத் தான் நான் இரைதேடச் செல்வது வழக்கம். அதை ஆள்கின்ற மன்னன் திவோதசா என்பவன் ஆவான். அவனுக்கு திவ்ய தேவி என்ற ஒரு அழகான பெண் இருந்தாள். அவளுக்குத் திருமணம் செய்ய ரூபா நாட்டின் அரசன் சித்ரசேனனைத் தேர்ந்தெடுத்தார்கள். திருமணம் நிச்சயிக்கப்பட்டு அதற்குரிய சடங்கும் நடந்தது. இது நடந்த சில நாட்களில் சித்ரசேனன் இறந்து விட்டான். அடுத்து ரூபசேனன் என்ற மன்னனை நிச்சயித்துச் சடங்குகள் நடைபெற்றன. திருமணத் தேதிக்குள்

அவனும் இறந்து விட்டான். இப்படியே 21 அரசர்கள் ஒருவருக்குப் பின் ஒருவராக நிச்சயம் செய்யப்பட அத்தனை பேரும் மடிந்து விட்டனர். அச்சமடைந்த திவ்யதேவியின் தந்தை தனித்தனியாக நிச்சயம் செய்யப்பட்டால் ஏற்படும் ஆபத்தை மனத்தில் கருதி, பெண்ணுக்கு சுயம்வரம் என்று ஒரு நாளைக் குறிப்பிட்டான். பல அரசர்களும், அரசகுமாரர் களும் வந்து கூடினர். என்ன காரணத்தாலோ சுயம்வரம் தொடங்கு முன்னரே கூடியிருந்தவர்களுள் சண்டை ஏற்பட்டு ஒருவரை ஒருவர் கொன்று கொண்டனர். அப்பா, ஏன் அந்தப் பெண்ணுக்கு இப்படி நடந்தது என்று தெரியவில்லை. உங்களுக்கு ஏதாவது தெரியுமா?

குஞ்சலா : மகனே! அந்த ரகசியம் எனக்கு நன்றாகத் தெரியும். வாரணாசியில் சுதிரா என்றொரு வைசியன் இருந்தான். மிகவும் நல்லவனும், நல்வழி நடப்பவனுமாகிய அவனுக்கு சித்ரா என்றொரு மனைவி இருந்தாள். அவள் மிகவும் தீயவள். யாருடனாவது தீய பேச்சுக்களைப் பேசிக் கொண்டிருப்பதும், சமயம் நேரும்போதெல்லாம் தன் கணவனை அவமானப்படுத்துவதும் அவள் பொழுது போக்காக இருந்தது. அவள் கொடுமை தாங்காது சுதிரா மற்றொரு பெண்ணை மணந்து கொண்டான். இது பொறுக்க மாட்டாமல் சித்ரா வீட்டை விட்டு ஓடிக் கொலை, கொள்ளை, களவு முதலியவற்றைச் செய்கின்ற கூட்டத்தாருடன் சேர்ந்து கொண்டாள். தானே தலைமை வகித்துப் பலரையும் கொன்று தீர்த்தாள். காலம் வந்த பொழுது அவள் இறந்துவிட அவள் ஆன்மா எமலோகத்திற்குக் கொண்டு செல்லப்பட்டது. பல தண்டனைகளை அனுபவித்த பிறகு பிளக்ஷத்தீவு மன்னனுடைய மகளாகப் பிறந்தாள். அவள் செய்த கொலைகள் காரணமாக இப்போது அவள் வாழ்க்கையை நாசப்படுத்த அவளுக்கு மணம் பேசப்பட்ட அத்தனை ராஜாக்களும் இறந்தார்கள்.

**உஞ்வலா :** *தந்தையே! எனக்கு ஒரு சந்தேகம். இத்துணை கொலைகள் செய்து நரகவேதனை அனுபவித்த இவள் ஒரு சாதாரணப் பிறப்பு எடுக்காமல் எப்படி பிளக்ஷத்தீவு மன்னனுக்கு மகளாகப் பிறக்க முடிந்தது?*

**குஞ்சலா :** *மகனே! மிக அருமையான கேள்வியைக் கேட்டாய். இந்தக் கேள்வியை நான் உன்னிடம் எதிர் பார்த்தேன். அதற்கான காரணம் உனக்குச் சொல்வேன். இத்துணை கொலைகள் செய்து வாழ்க்கை நடத்தி யிருந்தாலும், ஒரு நாள் இவள் வீடு தேடி, உணவு கேட்டு ஒரு முனிவர் வந்தார். தன் தீய குணங்களை எல்லாம் மறந்து விட்டு அவரை வரவேற்று பாதபூஜை செய்து அவருக்கு உணவும் தந்தாள். அந்தப் புண்ணியம்தான் அரசன் மகளாகப் பிறக்கச் செய்தது.*

**உஞ்வலா :** *தந்தையே! அந்தப் பெண்ணுக்குத் தன் பாவங்களிலிருந்து வெளியேறி நற்கதி அடைய வழி உண்டா என்பதைச் சொல்ல வேண்டுகிறேன்.*

**குஞ்சலா :** *உண்டு மகனே! அவள் எல்லாவற்றையும் துறந்து காட்டிற்குச் சென்று விஷ்ணுவைக் குறித்து கடுந்தவம் இயற்றினால் அவள் உய்கதி அடைய முடியும். அவளிடத்தில் அன்பு வைத்திருக்கும் நீ நாளை அங்கு செல்லும் பொழுது, அவளைக் கண்டு இதனைச் சொல்வாயாக.*

## நிறம் மாறிய அன்னங்கள்

*ஆலமரத்தின் மேல் குடியிருந்த கிளிக் குடும்பத்தின் தலைவன் குஞ்சலா தன் இரண்டாவது பிள்ளையாகிய சமுஜ்வலாவிடம் பேசத் தொடங்கிற்று.*

**குஞ்சலா (தந்தை) :** என் இரண்டாவது மகனே, சமுஜ்வலா! நீ எப் பக்கம் இரை தேடப் போகிறாய்? நீ ஏதாவது விசேஷத்தைக் கண்டாயா?

**சமுஜ்வலா (மகன்) :** தந்தையே! வட திசையில் இமயத்தில் இருக்கும் மானசரோவர் என்ற ஏரிக்குத்தான் இரை தேடிச் செல்கிறேன். ஒருமுறை நான் அங்கு இருந்தபொழுது முழுவதும் கருநிறம் வாய்ந்த ஒரு பெரிய அன்னப் பறவையும், அதன் பின்னர் அதே கருநிறம் பொருந்திய பல அன்னங்களும் மானசரோவருக்குள் வந்தன. சற்று நேரத்தில் உடல் முழுவதும் வெள்ளையும், மூக்கும் காலும் கருப்பாக உள்ள சில அன்னங்கள் வந்து சேர்ந்தன. இந்தப் பறவைகள் எல்லாம் ஏரியில் நீந்தி விளையாடும் பொழுது மிகப் பெரிய ஒரு ராஜ அன்னமும், 2 துணை அன்னங்களும் மானசரோவர் உள்ளேயிருந்து புறப்பட்டு வெளியே பறந்து சென்று விட்டன. சற்று நேரத்தில் பேய் வடிவுடைய 4 பெண் பூதங்கள் மானசரோவர் கரைக்கு வந்து மிகப் பெரிய குரலுடன் ஓலமிட்டுக் கொண்டே இருந்தன. இதைப் பார்த்த எனக்குத் தலையும் புரியவில்லை, காலும் புரியவில்லை. இதுபற்றிய விளக்கங்கள் ஏதேனும் தரமுடியுமா?

**குஞ்சலா (தந்தை) :** மகனே! இதன் ரகசியத்தை நான் அறிவேன். இதோ உனக்குச் சொல்லுகிறேன். ஒருமுறை நாரதர் இந்திரலோகம் சென்றார். இந்திரன் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்று, 'நீண்ட நாட்களாக உங்களைக் காணவில்லையே, எங்கு சென்றிருந்தீர்கள்?' என்று கேட்டான். நாரதர், 'தீர்த்த யாத்திரை சென்றிருந்தேன்' என்றார். உடனே இந்திரன், 'ரொம்ப நல்லது. எல்லாத் தீர்த்தங்களையும் பார்த்த தாங்கள் அவற்றுள் மிக உயர்ந்தது எது என்று சொல்ல முடியுமா?' என்று கேட்க, அனைத்தும் உயர்ந்ததுதான். ஒன்றைக்

குறிப்பிட்டுச் சொல்ல முடியாது என்று கூறிவிட்டார். இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று இந்திரன் விரும்பியதால் அனைத்துத் தீர்த்தங்களையும் தன்னிடம் வருமாறு ஆணை யிட்டான். இந்திர சபையில் கங்கை, கோதாவரி, நர்மதா, சரஸ்வதி, புண்யா, காவேரி ஆகிய 58 தீர்த்தங்களுக்கும் தலைவி களாகிய பெண்களும், பிரயாகை, வாரணாசி, அவந்தி, புஷ்கரா, மதுரா முதலிய 10 நகரங்களின் தலைவிகளும் வந்து நின்றனர். இந்திரன் அவர்களைப் பார்த்துப் பெண் கொலை, சிசுக் கொலை, பிராமணக் கொலை, பசுக் கொலை முதலிய பெரும் பாவங்களைச் செய்தவர்களுள் உங்களில் யாரிடம் வந்தால் அனைத்துப் பாவங்களையும் தீர்க்க முடியும் என்பதை எனக்குத் தெரிவிக்க வேண்டும் என்றான். அவர்கள் இத்தனையும் தீர்க்கும் ஒரே தீர்த்தத்தையோ ஒரே நகரையோ எங்களால் குறிப்பிட்டுக் காட்ட முடியாது. ஒன்றை மட்டும் சொல்ல முடியும். மிகவும் தெய்வீகமானது என்று சொல்லக் கூடியவை பிரயாகை, புஷ்கரா, அர்க்ய தீர்த்தா, வாரணாசி என்பனவாகும்.

இதைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு ஒரு கதையும் உண்டு. பாஞ்சால நாட்டில் வாழ்ந்த விதுரன் மிக்க கோபத்தால் ஒரு பிராமணனைக் கொன்று விட்டான். அதன்பிறகு தன் பாவத்தைப் போக்கிக் கொள்ளத் தீர்த்த யாத்திரை புறப்பட்டான். போகும் வழியில் தன் ஆசிரியரைக் கொன்ற சந்திரசர்மா என்பவனைச் சந்தித்து இருவருமாக யாத்திரை தொடங்கினர். மணம் செய்து கொள்ளக் கூடாத பெண்ணை மணம் செய்து கொண்ட வேதசர்மா என்பவனும் இந்த இருவருடன் சேர்ந்து கொண்டான். வஞ்சுலா என்ற குடிகாரனும் இம்மூவருடன் சேர நால்வரும் தங்கள் பாவம் போக்கும் தீர்த்தத்தை நாடிச் சென்றனர். இந்த நால்வரும் வழியில் ஒரு முனிவரைச் சந்தித்துத் தங்கள் கதைகளைச்

சொல்லி எந்தத் தீர்த்ததில் நீராடினால் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்ள முடியும்? என்று கேட்டனர். அவர் பிரயாகை, புஷ்கரா, அர்க்யதீர்த்தா, வாரணாசி என்ற நான்கையும் கூறி அங்கே சென்றால் உங்கள் பாவங்களைக் கழுவிக் கொள்ளலாம் என்றனர். இவர்கள் நால்வரும் அங்கெல்லாம் சென்று நீராடினர். அவர்கள் பாவம் போக வில்லை. அதன் எதிராக, இவர்கள் பாவம் காரணமாக அந்த நான்கு இடங்களும் தூய்மையை இழந்தன. இந்த நான்கு தீர்த்தங்களும் கறுப்பு அன்னங்களாக வடிவெடுத்து, இந்த பாபிகளைப் பின் தொடர்ந்தன. இந்த நால்வரும் எங்கெங்கு சென்று குளித்தார்களோ அந்தத் தீர்த்தங் களெல்லாம் பாவப்பட்டுக் கறுப்பு அன்னங்களாக மாறி இவர்களைப் பின் தொடர்ந்தன. இவர்கள் நீராடாத தீர்த்தங்களும் என்ன நடக்கிறதென்று பார்க்கத் தாங்களும் அன்னப்பறவை வடிவெடுத்து இவர்களைத் தொடர்ந்தன. இவர்கள் பாவம் படாததால் அவை வெண்மையான அன்னமாக இருந்தன. இந்த முறையில் 64 தீர்த்தங்கள் கறுப்பும் வெள்ளையுமான 64 அன்னங்களாக இந்த நால்வரைத் தொடர்ந்தன.

இறுதியாக, இந்த நால்வரும் மிகப் புனிதமான மானசரோவர் நதியில் குளிக்க மானசரோவரும் தூய்மை கெட்டு அதுவும் ஒரு கரிய மிகப் பெரிய அன்னப்பறவையாக வடிவெடுத்தது. இறுதியாக இந்த நான்கு பாபிகளும் நர்மதா நதியும், ரேவா நதியும் சங்கமம் ஆகின்ற இடத்தில் குளித்தனர். உடனே அவர்கள் பாவங்கள் அவர்களை விட்டு நீங்கின. இதைப் பார்த்த கறுப்பு அன்ன வடிவில் இருந்த ஏனைய தீர்த்தங்களும் அங்குக் குளித்தவுடன் தூய்மையான நிறம் பெற்றன. மானசரோவரில் நின்று அழுது கொண்டிருந்த

நான்கு பெண் பூதங்களும் இங்கு குளித்தவுடன் பாவங்கள் நீங்கி இறந்தனர். இந்த இடம் 'குப்ஜ தீர்த்தம்' என்று அழைக்கப்படுகிறது. மகனே! நீ பார்த்த காட்சி இதுதான் என்பதை இப்பொழுது அறிந்து கொண்டிருப்பாய். இது ஒரு உருவகக்கதை (allegory) என்பதை நீ அறிய வேண்டும்" என்று தந்தைக் கிளி கூறி முடித்தது.

## மூன்றாவது கிளிக்குஞ்சு சொன்ன கதை

தந்தைக் கிளியான குஞ்சலா தனது மூன்றாவது மகனான விஞ்வலாவைப் பார்த்து, "மகனே, நீ எங்கு இரை தேடப் போகிறாய்? நீ பார்த்த அதிசயம் ஏதேனும் உண்டா?" என்று கேட்டது.

**மூன்றாவது மகன் :** ஆம் தந்தையே, நான் இரை தேடுவதற்காகச் சுமேரு மலையில் அனந்த கானகம் என்ற ஒரு வனம் உள்ளது, அப்பக்கம் தினமும் செல்கிறேன். மிக அற்புதமான இடமாகிய அதில் இயற்கை எழில் பூத்துக் குலுங்குகிறது. ஒரு அற்புதமான குளமும் இருக்கிறது. அந்தக் குளத்தில் பூக்கள், அன்னப்பறவைகள் ஆகியவை நிறைந் துள்ளன. கந்தர்வர்கள், வித்தியாதரர்கள், ஏனைய தேவர்கள் ஆகிய பலரும் தினமும் அங்கு வருகிறார்கள். பொன் மயமான தேவலோகத்து விமானங்களும் அங்கு வருகின்றன. குளத்தின் பக்கத்தில் ஒரு மரத்தில் அமர்ந்து குளத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று மிக ஒளி பொருந்திய விமானம் ஒன்றில் ஒரு அழகிய இளைஞனும், ஒரு பெண்ணும் வந்து இறங்கினார்கள். ஒளி படைத்த தேகமுடைய அவ் விருவரும் அக்குளத்தில் நீராடி மிக அற்புதமாக உடைகளை அணிந்து கொண்டனர். கையில் ஆளுக்கொரு பெரிய கத்தியை ஏந்திக் கொண்டனர். இந்த அமைதியான சூழ்நிலையில் கத்தி

எதற்கு என்று நான் சிந்தித்துக் கொண்டிருக்கும்போதே ஒரு கொடூரமான காட்சியைக் கண்டேன். குளத்துக் கரையில் இரு சடலங்கள் கிடந்தன. அவர்கள் யார் என்று நான் பார்த்த பொழுது வியந்தேன். விமானத்திலிருந்து இறங்கிய அந்த இருவரின் முகம், அங்க அடையாளங்கள் அப்படியே அந்த சடலங்களில் இருந்தன. நான் ஆச்சரியப்பட்டுக் கொண் டிருக்கும்போதே மிகக் கொடுமையான செயல் ஒன்று நடந்தது. அந்தப் பெண், பெண் சடலத்தின் சில பகுதிகளை வெட்டித் தின்று கொண்டிருந்தாள். அந்த ஆண்மகன், அந்த ஆண் சடலத்தின் சில பகுதிகளை வெட்டித் தின்று கொண்டிருந் தான். திடீரென்று இரண்டு அழகிய பெண்கள் அங்கே வந்து இவர்கள் செய்யும் செயலைப் பார்த்து எள்ளி நகையாடிக் கொண்டிருந்தனர். பேய் வடிவம் கொண்ட இரு பெண்கள் 'எங்களுக்கும் கொஞ்சம் கொடு' என்று இவர்களிடம் வேண்டிக் கொண்டிருந்தார்கள். வெட்டிய தசையைத் தின்று முடித்தவுடன், கத்தியை வைத்து விட்டு அவ்விருவரும் விமானத்தில் சென்று விட்டனர். இந்தக் கொடுமையான நாடகம் தினமும் நடைபெறுகிறது. இதன் அடிப்படை எனக்கு ஒன்றும் புரியவில்லை. தாங்கள் இதனை விளக்க வேண்டுகிறேன்.

**தந்தை :** ஆம் மகனே! இதன் அர்த்தம் எனக்குத் தெரியும். நான் சொல்வதை கவனமாகக் கேள். சோழநாட்டைச் சுவாகு என்ற மன்னன் ஆண்டு கொண்டிருந்தான். அவன் மனைவி பெயர் தார்க்ஷி. மன்னன் தன் குருவாகிய ஜைமினி முனிவரின் உதவியுடன் பல யாகங்களைச் செய்தான். ஒருநாள் ஜைமினி முனிவர் அரசனைப் பார்த்து, 'இந்த யாகங்கள் செய்வதைவிட அதிக புண்ணியம் தான, தருமம் செய்வதால் கிடைக்கும். ஆகவே, இவற்றைச் செய்வதைவிட என் போன்ற

வர்களுக்கு தானம் கொடுப்பது மிக நல்லது' என்றார். அரசன் குருவைப் பார்த்து, 'அவ்வாறு செய்வதால் எனக்கு என்ன பயன் கிட்டும்?' என்று கேட்டான். குரு, 'உனக்குப் பெரும் புண்ணியம் கிடைக்கும். அப் புண்ணியத்தின் உதவியால் நீ சொர்க்கலோகம் செல்லலாம்' என்றார். அரசன் அவரைப் பார்த்து, 'நான் சொர்க்கலோகம் சென்றால் நிலையாக அங்கேயே இருந்துவிட முடியுமா?' என்று கேட்டான். குரு, 'அது முடியாது. உன் புண்ணியம் தீர்ந்தவுடன் மறுபடியும் உலகில் பிறந்துதான் ஆகவேண்டும்' என்று கூறினார். அதைக் கேட்ட அரசன், 'தாற்காலிகமான பலனை அளிக்கும் இந்தப் புண்ணியம் எனக்கு வேண்டாம்' என்று கூறிவிட்டான். அதன் பிறகு மன்னன் நிலையான இன்பத்தைப் பெற என்ன வழி என்பதை ஆராய்ந்து, விஷ்ணுவை தியானிப்பதுதான் நிலையான இன்பத்தைத் தரும் என்பதைக் கண்டு கொண்டான். உடனே, அரசைத் துறந்துவிட்டு அரசனும், அவன் மனைவியும் காடு சென்று விஷ்ணுவை தியானித்துக் கடுந்தவம் இயற்றினர். உரிய காலத்தில் அவர்கள் இருவரும் இந்த உடலை நீத்து 'விஷ்ணுலோகம்' சென்றனர். மிக அற்புதமான அந்த உலகத்தில் வாழத் தொடங்கிய இருவருக்கும் ஒரு பெரிய பிரச்சனை உருவாயிற்று. அங்கே வாழ்ந்த மற்றவர்கள் எதையும் உண்பதுமில்லை; தண்ணீர் முதலிய வற்றைப் பருகுவதுமில்லை. காரணம் அவர்கட்குப் பசி, தாகம் என்பதில்லை. ஆனால் மன்னனையும், அவன் மனைவியையும் பசியும், தாகமும் வாட்டிற்று. செய்வதறியாது திகைத்த அவர்கள் இறுதியாக வாமதேவன் என்ற முனிவர் தவம் செய்து கொண்டிருந்த பர்ணசாலையைக் கண்டு (மன்னனும், அவன் மனைவியும்) தம் பிரச்சனையை அவரிடம் கூறினர். அவர், 'நீ கடுந்தவம் இயற்றியது உண்மைதான். அதனால் விஷ்ணுலோகம் வந்தாய். ஆனால் நீ உயிருடன் இருக்கும்

போது, பசியோடும் தாகத்தோடும் வந்த ஏழைகளின் பசியையோ, தாகத்தையோ போக்க மறுத்துவிட்டாய். அவ்வாறு பிற உயிர்கட்கு இவற்றைப் போக்கி இருந்தால் அந்தப் பசியும், தாகமும் இப்போது உனக்கிராது' என்று கூறினார். இதை அறிந்து கொண்ட அரசன் அவரைப் பார்த்து, 'இப்பொழுது இது தீர என்ன வழி?' என்று கேட்டான். 'வழி ஒன்று மில்லை. காட்டில் நீங்கள் இருவரும் விட்டு வந்த சடலங்கள் இப்பொழுது சுமேருவில் உள்ள குளக்கரையில் உள்ளன. அங்கு சென்று உங்கள் உடலையே வெட்டி உண்டு உங்கள் பசியைத் தணித்துக் கொள்ளுங்கள்' என்று கூறினார். வேறு வழியில்லை என்பதை அறிந்த அரசன் 'இதற்கு எப்பொழுது விமோசனம்?' என்று கேட்டான். முனிவர், 'என்றாவது ஒரு நாள் யாரோ ஒருவர் விஷ்ணுவின் மந்திரங்களை உங்கள் காதுகளில் படும்படியாகப் பாடினால், அதைக் கேட்டவுடன் உங்கள் பிரச்சனை தீர்ந்துவிடும்' என்று கூறினார். அந்த மன்னனும் மனைவியும், விஷ்ணுலோகத்தில் இருந்து தினமும் வந்து தங்கள் உடல்களைத் தாங்களே வெட்டித் தின்பதைத் தான் நீ பார்த்தாய். 'எங்களுக்குக் கொஞ்சம் தா!' என்று கேட்கும் இரண்டு பேய்களும் பசி, தாகம் என்பவையாகும். கைகொட்டிச் சிரிக்கும் இரண்டு பெண்களும் பிரக்ஞை, சிரத்தை என்பவையாகும்.

மகனே! நாளைக்கு அந்த மந்திரத்தை உபதேசிக்கிறேன். நீ சென்று அவர்கள் காதில் படும்படி இந்த மந்திரத்தைப் பாடி அவர்கள் துயரம் நீங்க உதவி புரிவாயாக. மறுநாள் அந்தக் குஞ்சுக்கிளி அரசன், அவன் மனைவி இருவரும் பிணத்தைத் தின்ன வரும்பொழுது அவர்கள் காதில் படும்படி அந்த மந்திரத்தைப் பாட அவர்கள் இருவரும் இக்கொடுமை யிலிருந்து மீண்டு விஷ்ணுலோகம் சென்றனர்.

**அழுகையில் மலர்ந்த மலர்கள் :** ஆலமரத்தில் இருந்த குஞ்சலா என்ற தந்தைக் கிளி. கபிஞ்சலா என்ற நான்காவது மகனைப் பார்த்து, மகனே! நீ எங்கேயிருந்து வருகிறாய்? ஏதாவது அதிசயத்தைப் பார்த்தாயா என்றது.

**கபிஞ்சலா :** ஆம் தந்தையே, நான் தினமும் கைலாச மலைக்குச் செல்கிறேன். கைலாயம் மிக அற்புதமான அழகுடன் இயற்கை எழில் கொஞ்சும் நிலையில் உள்ளது. கங்கை முதல் நூற்றுக்கணக்கான புண்ணிய நதிகள் அங்கே ஓடுகின்றன. கைலாயத்தின் ஒரு புறத்தில் ஒரு பெரிய ஏரியில் நீர் நிறைந்துள்ளது. அந்த ஏரியில் மலர்கள் பூத்துக் குலுங்கு கின்றன. அதன் ஒருபுறத்தில் ஒரு கற்பாறை உள்ளது. அதன் மேல் ஒரு பெண் அமர்ந்து அழுது கொண்டிருக்கிறாள். அவள் கண்ணீர் ஏரியில் வந்து விழுந்தவுடன் தாமரை மலர் போன்ற ஒரு மலர் பூக்கின்றது. அந்தப் பாறையின் பக்கத்தில் சிவனுடைய விக்கிரகம் உள்ளது. அந்த மலர்ந்த மலரை ஒரு தவசி எடுத்துச் சிவனுக்குச் சாத்துகிறார். பல மலர்களைச் சாத்திய பிறகு பாடுகிறார்; நடனம் ஆடுகிறார். பிறகு ஓவென்று கதறி அழுகிறார். அவர் உடம்பு வெறும் எலும்புக் கூடாகத் தான் இருக்கிறது. காய்ந்து போன சருகுகளையே அவர் உண்கிறார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. அந்தப் பெண் ஏன் அழுகிறாள்? அவள் கண்ணீர் ஏன் மலராக மலருகிறது? அந்தத் தவசி ஏன் அழவேண்டும்? இதன் விளக்கத்தை அறிய வேண்டுகிறேன்.

**தந்தை :** மகனே கபிஞ்சலா! கைலாயத்தில் மிக அற்புதமான ஒரு நந்தவனம் உண்டு. மிக அற்புதமான மரங்கள் அங்கே பூத்துக் குலுங்கும். ஒருநாள் சிவனும், பார்வதியும் அதைப் பார்க்க வந்தனர். எல்லா மரங்களையும் பார்த்து மகிழ்ந்து வந்த பார்வதி ஒரு குறிப்பிட்ட மரத்தைப் பார்த்து

அதிசயித்து நின்றாள். 'இது என்ன மரம்?' என்று சிவனைக் கேட்டாள். சிவன், 'இது கற்பக மரம்; என்ன வேண்டுமென்று கேட்கின்றாயோ அதைக் கொடுக்கும்' என்று கூறியவுடன், பார்வதி அந்த மரத்தைப் பார்த்து, மிக அழகான பெண் ணொருத்தி வேண்டும் எனக் கேட்டாள். அந்தக் கணமே ஈடு இணையில்லா அழகுடன் ஒரு பெண் வந்து பார்வதியை வணங்கி, 'என் பணி யாது?' எனக் கேட்டாள். பார்வதி, 'இந்த வனத்திலேயே இருந்து வருவாயாக, நகுஷன் என்ற மன்னன் உன்னை வந்து மணம் செய்துகொள்வான்' என்று கூறிவிட்டு, அசோகசுந்தரி என்று அப்பெண்ணிற்குப் பெயரிட்டு மறைந்தாள். அசோகசுந்தரி அந்த வனத்தில் இருந்து வந்தாள்.

விப்ரசித்தி என்ற அசுரனுக்கு ஹீண்டா என்ற மகன் இருந்தான். அவன் ஒருநாள் கைலாசத்தில் உள்ள நந்தவனத் திற்குச் சென்றான். உடனே அசோகசுந்தரிமேல் காதல் கொண்டு தன்னை மணம் புரிந்து கொள்ளுமாறு வற்புறுத்தி னான். அசோகசுந்தரி மறுக்கவே பல மந்திர தந்திரங்கள் தெரிந்த ஹீண்டா ஒரு பெண் வடிவு எடுத்து, அவளைச் சந்தித்தான். அப் பெண் வடிவை 'யார்' என்று அசோகசுந்தரி கேட்க, அப் பெண் 'தான் ஒரு விதவை' என்றும், தன் ஆசிரமத்தில் தவம் புரிவதாகவும் கூறிவிட்டு, அசோக சுந்தரியைத் தன் ஆசிரமத்திற்கு அழைத்தாள். அந்த வார்த்தை களை நம்பிக் கொண்டு அப் புதிய பெண்ணுடன் சென்ற அசோகசுந்தரிக்குப் பெரிய இடையூறு வந்தது. தன் இடம் போனதும், ஹீண்டா தன் பழைய வடிவை எடுத்துக்கொண்டு அசோகசுந்தரியை பலாத்காரம் செய்ய முயன்றான். 'தன் கணவன் நகுஷன் வந்து கொல்வான்' என்று கூறித் தப்பித்து வந்தாள்.

இது நடைபெறுகின்ற காலத்தில் நகுஷன் பிறக்கவே இல்லை. அயு என்ற அரசனுக்கும் இந்துமதி என்ற அரசிக்கும் பிறந்தவன் நகுஷன். நகுஷன் தன்னைக் கொல்லப் பிறந்தவன் என்பதனை அறிந்த ஹீண்டா அந்த இளம் பிள்ளையைக் கடத்திச் சென்றுவிட்டான். தன் வீட்டில் சமையல் செய்யும் பெண்ணிடம் குழந்தையைக் கொடுத்துச் சமைக்கச் சொன்னான். குழந்தைமேல் இரக்கப்பட்ட அவள் மான் கறியை சமைத்து ஹீண்டாவிற்குக் கொடுத்துவிட்டு, குழந்தையை எடுத்துச் சென்று வசிட்டரிடம் ஒப்படைத்தாள். ஓர் அரசனுக்கு வேண்டிய அனைத்துக் கலைகளையும், ஆயுதப் பிரயோகங் களையும் வசிட்டர் நகுஷனுக்குக் கற்பித்தார். எதைக் கண்டாலும் பயந்து கொண்டிருந்த குழந்தைக்கு ந + ஹுஷன் = நகுஷன் (அச்சமில்லாதவன்) என்ற பெயரைத் தந்தார். நாளாவட்டத்தில் நகுஷன் பெரியவனாக அசோகசுந்தரியைத் திருமணம் செய்துகொண்டான். அவளை அடைவதற்காகச் செய்த போரில் ஹீண்டாவைக் கொன்றுவிட்டான். நகுஷனுக்கும், அசோகசுந்தரிக்கும் பிறந்த குழந்தைதான் பிரசித்தி பெற்ற யயாதி ஆவான்.

இறந்து போன ஹீண்டாவின் மகன் விகுண்டன் பெரியவனாகி தன் தந்தையைக் கொன்ற நகுஷனைக் கொல்வதற்காக சக்தி பெற விஷ்ணுவைக் குறித்துத் தவம் புரிந்தான். அத் தவம் பலித்தால் அதனால் ஏற்படப் போகும் பெரிய பிரச்சனை கருதி விஷ்ணுவே தவத்தைக் கலைக்கப் புறப்பட்டார். ஓர் அழகிய பெண் வடிவை எடுத்துக் கொண்டு நடமாடினார். அந்தப் பெண்ணின் அழகைக் கண்ட விகுண்டன், 'அவள் தன்னை மணம் புரிந்து கொள்ள வேண்டும்' என்று வேண்டினான். அப்பெண் 'தடையொன்று மில்லை. ஆனால் ஏழுகோடி கமோடா பூக்களைக் கொண்டு

*சிவனை அருச்சித்துவிட்டு அதை ஒரு மாலையாகக் கட்டி என் கையில் கொடுத்தால் உன்னை மணந்து கொள்வேன்' என்றாள். சரி என்று ஒப்புக்கொண்ட விகுண்டன் கமோடா புஷ்பங்களைத் தேடினான். காட்டில் அப்படி ஒரு பூ இல்லை என்று அறிந்து கொண்ட நிலையில், தன் குல குருவான சுக்ராச்சாரியாரை நாடினான். அவர் 'இது மண்ணில் பூக்கும் பூ அன்று' என்று கூறிவிட்டு, 'பாற்கடல் கடைந்த பொழுது வெளிவந்தவள் கமோதா என்ற பெண். இவள் கங்கைக் கரையில் உள்ளாள். இவள் சிரித்தால், இவள் சிரிப்பிலிருந்து மஞ்சள் நிறமுடைய கமோதா பூக்கள் தோன்றும். அதைச் சிவனுக்கு அர்ச்சித்தால் நினைத்ததெல்லாம் கைகூடும். ஆனால் அப்பெண் அழுதால் மணமில்லாத சிவந்த பூக்கள் வெளிவரும். அதைத் தொடவே கூடாது' என்றார்.*

*கங்கைக் கரையில் கமோதாவைத் தேடிச் செல்லப் புறப்பட்டான், விகுண்டன். நாரதர் எதிரே வந்து, 'நீ அவள் இருக்கும் இடம் தேடிச் செல்ல வேண்டாம். அவளிடமிருந்து வரும் பூக்கள் கங்கையில் மிதந்து வரும். அவற்றை எடுத்து நீ சிவனுக்கு அர்ச்சித்தால் அது போதும்!' என்று கூறினார். விகுண்டன் அதை ஏற்றுக் கொண்டவுடன் நாரதர் கமோதாவிடம் சென்று 'விஷ்ணு உலகத்தில் சென்று பிறக்கப் போகிறார்' என்று கூறிவிட்டார். அதைக் கேட்ட கமோதா, விஷ்ணு அவருடைய லோகத்தில் இருந்து பூலோகம் போகிறார் என்பதைக் கேட்டு, கண்ணீர் சிந்தி அழலானாள். கங்கையில் வந்த பூக்களை எடுத்து சிவ பூசை செய்யத் துவங்கிய விகுண்டன் சுக்ராச்சாரியார் சொன்னதை மறந்துவிட்டான். பூக்கள் கங்கையில் வருவதைப் பார்த்து மகிழ்ந்த அவன், இது கமோதாவின் அழுகையில் பிறந்ததா, சிரிப்பில் பிறந்ததா*

என்று அறிந்து கொள்ளும் அறிவை இழந்து தொடக் கூடாத இந்தப் பூக்களை எடுத்துச் சிவனுக்கு அர்ச்சிக்கத் துவங்கினான். சிவனுக்கு ஆகாத இந்தப் பூக்களை அர்ச்சித்த வுடன் பார்வதி தோன்றித் தன் சூலாயுதத்தால் விகுண்டனைக் கொன்று விட்டாள்.

## தந்தை குஞ்சலாவின் கதை

ஆலமரத்தினடியில் அமர்ந்திருந்த சாயவனன், இக் கிளிகளுக்குள் நடந்த உரையாடலைக் கேட்டு ஆச்சரியப்பட்டுப் போய் தந்தைக் கிளியாகிய குஞ்சலாவைப் பார்த்து, நீ யார்? எப்படி இவ்வளவு விஷயங்களை அறிந்திருக்கிறாய் என்று கேட்டவுடன் குஞ்சலா தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

வித்யாதரன் என்ற பிராமணன் வாசு சர்மா, நாம சர்மா, தர்ம சர்மா என்ற தன் மூன்று பிள்ளைகளுடன் வாழ்ந்து வந்தான். முதலிரண்டு பிள்ளைகளும் தந்தையின் அடிச் சுவட்டைப் பின்பற்றி சாத்திரங்களைப் படித்தனர். ஆனால் மூன்றாவது பிள்ளையாகிய தர்ம சர்மாவிற்கு இதில் நாட்டம் செல்லவில்லை. சோம்பேறியாகவே பொழுதைக் கழித்து விட்டான். நாளாவட்டத்தில் மக்கள் அவனை வெறுக்கத் தொடங்கினர். மக்களின் வெறுப்புணர்ச்சி ஒரு எல்லையைக் கடந்ததால் மனம் நொந்து போன தர்ம சர்மா எப்படியாவது கல்வி கற்க வேண்டுமென நினைத்து ஒரு தக்க ஆசிரியரைத் தேடி அலைந்தான். நல்லாசிரியர் கிடைக்கவே தர்ம சாத்திரங் களைக் கற்றுக் கொண்டான். அப்பொழுது ஒரு வேடன் ஒரு கிளியைப் பிடித்துக்கொண்டு வந்து தர்ம சர்மாவிடம் கொடுத்தான். அன்பு செலுத்த யாரும் இல்லாத நிலையில் இருந்த தர்ம சர்மா, தன் அன்பு முழுவதையும் அக்கிளியிடம்

செலுத்தி வளர்த்தான். துரதிருஷ்டவசமாக அக்கிளியை ஒரு பூனை கொன்று விட்டது. எல்லை மீறிய துயரம் அடைந்த தர்ம சர்மா ஓயாது கிளியையே நினைத்துக் கொண்டிருந்தான். அவன் சாக நேர்ந்த பொழுது கூட கிளியின் நினைவாகவே இறந்தான். கிளியின் நினைவோடு இறந்ததால் மறுபிறப்பில் கிளியாகப் பிறந்தான். அந்தக் கிளி வேறு யாருமல்ல, நான்தான் என்று தந்தைக் கிளி குஞ்சலா, சாயவனனிடம் சொல்லி முடித்தது.

**விஷ்ணுலோகம் சென்ற எலியின் கதை**

திரேதாயுகத்தில் ஒரு விஷ்ணுவின் கோயிலில் எலி ஒன்று வாழ்ந்து வந்தது. அந்த ஊரில் வாழும் ஒரு பக்தன் கோயிலுக்கு வந்து நெய் விளக்கு ஏற்றி விட்டுப் போனான். அவன் போனபிறகு திரி கொஞ்சம் மங்கி எரிந்தது. ஆனால் விளக்கில் இருந்து நெய் வாசம் வெகுதூரம் பரவியது. இந்த வாசனை யால் இழுக்கப்பட்ட எலி, மெல்ல வந்து விளக்கில் இருந்த நெய்யைக் குடிக்க ஆரம்பித்தது. அதன் பயனாக திரி சற்று உயரத்திற்கு வர திடீரென்று அதிக வெளிச்சம் பரவியது. இந்த அதிக வெளிச்சத்தால் விஷ்ணுவின் சிலை 'பளிச்'சென்று தெரிய ஆரம்பித்தது. சிலையைச் சுற்றியிருந்த இருள் அகன்றது. காலாந்திரத்தில் விளக்கில் இருந்து நெய்யைக் குடித்துச் சென்று எதிர்பாராமல் திரியைத் தூண்டிச் சென்ற எலியை ஒரு பாம்பு கடித்து இறந்தது. யம தூதர்கள் வந்து எலியின் ஆவியைக் கட்டி இழுத்துக்கொண்டு யம லோகம் செல்லப் புறப்பட்டனர். திடீரென்று விஷ்ணுவின் பணியாளர் பலர் அங்கே வந்தனர். எமபடர்களைப் பார்த்து, 'நீங்கள் என்ன காரியம் செய்கிறீர்கள்! இந்த எலி ஒருநாள் கோயிலுக்குள் இருக்கும் விளக்கைத் தூண்டி, விஷ்ணுவின் சிலைக்குமேல் அதிகமாக ஒளி படரச் செய்தது. இந்தத் தொண்டினால் அது

செய்த பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டுவிட்டன' என்று கூறிவிட்டு எலியின் ஆவியை விஷ்ணுலோகத்திற்கு அழைத்துச் சென்றனர். பலகாலம் விஷ்ணுலோகத்தில் இருந்து மகிழ்ந்த அந்த எலி பின்னர் ஒரு அரசகுமாரியாகப் பிறந்தது. விஷ்ணு கோயிலுக்கு விளக்கு ஏற்றுவதால் ஏற்படும் மிகப் பெரிய பயனை இக்கதை அறிவிக்கிறது.

திரேதாயுகத்தில் ஸ்ரீதரன் என்ற அரசனும், ஹேமப் பிரபாவதி என்ற அரசியும் சுகமாக வாழ்ந்து வந்தனர். எல்லா சுகம் இருந்தும் தங்கட்குப் பிள்ளை இல்லையே என்ற கவலை வாட்டி வதைத்தது. ஒருமுறை ஸ்ரீதரன் வேத வியாசரை சந்தித்துத் தனக்கு ஏன் பிள்ளை இல்லை என்று கேட்டான். உன்னுடைய பூர்வ ஜென்மத்தில் சந்திரன் என்ற பெயருடைய பிராமணனாக வாழ்ந்தாய். இப்பொழுதுள்ள உன் மனைவி, சங்கரி என்ற பெயருடைய உன் மனைவியாக வாழ்ந்தாள். நீங்கள் இருவரும் ஏதோ ஒரு காரியத்திற்காக அவசரமாகப் புறப்பட்டுச் செல்கையில் ஒரு குழந்தை தண்ணீருக்குள் மூழ்கி இறக்கும் நிலையில் இருந்தது. உங்கள் காரியமே முக்கியம் என்று சட்டை செய்யாமல் போனீர்கள். அதனால் இந்த ஜென்மத்தில் உங்களுக்குப் பிள்ளை இல்லாமல் போய் விட்டது' என்றார். அதுகேட்ட ஸ்ரீதரன் இப்பொழுது என்ன செய்யலாம் என்று கேட்க, பூசணிக்காய், பொன் முதலியவற்றை ஏழைகளுக்கு தானம் செய்தால் குழந்தை பிறக்கும் என்றார். ஸ்ரீதரன் அவ்வாறே செய்து அழகிய பிள்ளை பெற்று வாழ்ந்தான். தருமத்தின் பலன் இது என்று கூறுவது இக்கதை.

### லக்ஷ்மி விரதத்தின் சிறப்பு

துவாபர யுகத்தில் சௌராஷ்டிர தேசத்தில் பத்ராஷ்ரவன் என்ற அரசன் ஆட்சி செய்து வந்தான். அவன் மனைவி பெயர்

சுரதி சந்திரிகா. அவர்களுக்குச் சியாமபாலா என்ற பெண் குழந்தை இருந்தது. ஒருநாள் குழந்தை வெளியே விளையாடச் சென்றிருந்தபொழுது இலட்சுமி தேவி ஒரு வயதான பிராமணத்தி வடிவம் கொண்டு அரண்மனைக்கு வந்தாள். அரண்மனைக் காவல்காரன், 'அம்மா, நீ யார்? இங்கு வந்த காரணம் யாது?' என்று வினவ, 'அரசியின் பழைய பிறப்பையும், இப்பொழுது அவள் செய்யத் தவறிய சில காரியங்களையும் அவருக்கு நினைவூட்ட வந்தேன்' என்றாள். காவல்காரன், 'அம்மா நீங்கள் சொல்வது புரியவில்லை' என்று சொன்னவுடன் இலட்சுமி தேவி விவரமாகப் பின்வருமாறு கூறினாள்:

இப்பொழுது அரசியாக இருக்கும் சுரதி சந்திரிகா, முன் ஜென்மத்தில் ஒரு வைசியனின் மனைவியாக இருந்தாள். எவ்வித நற்பண்புகளும் இல்லாமல் செல்வச் செருக்காக இருந்தாள். கணவனிடம் சண்டை போட்டுக்கொண்டு அவனை விட்டுச் சென்றாள். சென்ற அவளை மனித ரூபத்தில் இருந்த லட்சுமிதேவி, 'துயரம் நீங்க வேண்டுமானால் இலட்சுமி விரதம் இருக்க வேண்டும்' என்று அறிவுரை கூறியவுடன் இந்த வைசியன் மனைவி செம்மையான முறையில் இலட்சுமி விரதம் இருந்தாள். அதன் பயனாக அவள் இறந்தவுடன் விஷ்ணு லோகம் சென்று பல காலம் அங்கே வாழ்ந்தாள். புண்ணிய பயன் தீர்ந்தவுடன் இப்பொழுது சுரதி சந்திரிகா என்ற பெயருடன் இந்த அரசனின் மனைவியாக வாழ்கிறாள். இப்பொழுதும் செல்வச் செருக்கில் எல்லாவற்றையும் மறந்து இலட்சுமி விரதம் இருப்பதையும் மறந்து விட்டாள். அதை அவளுக்கு நினைவூட்டத்தான் வந்தேன்' என்ற கூறியவுடன் காவல்காரன், உடனே அரசியிடம் சென்று, இந்த பிராமண அம்மாள் சொன்னதைச் சொல்லவே, அரசி அவளை உள்ளே

அழைத்து விவரமாக அனைத்தையும் கேட்டாள். இவள் கூறியதைக் கேட்டவுடன் மிகுந்த கோபம் கொண்ட அரசி அவளை அடித்துத் துரத்தி விட்டாள். அழுது கொண்டே வந்த அவளை, தெருவில் விளையாடச் சென்றிருந்த சிறுமி சியாம பாலா 'ஏன் அழுகிறீர்கள்?' என்று கேட்டாள். பிராமணத்தி நடந்ததைக் கூறியவுடன் குழந்தை, 'விரதம் இருக்கும் முறையை எனக்குச் சொல்லிக் கொடுங்கள், நான் செய்கிறேன்' என்றாள். இலட்சுமி விரதம் எப்படி இருக்கவேண்டும் என்பதை பிராமணத்தி சியாமபாலாவிற்குச் சொல்ல, அவளும் அதை அனுஷ்டித்து வந்தாள்.

உரிய காலத்தில் சியாமபாலா, சித்தேஷ்வரா என்பவனின் மகன் மாலதார என்பவனை மணம் செய்து கொண்டு கணவன் வீட்டிற்குப் போய்விட்டாள். குழந்தை போனவுடன் அவள் தாய் தந்தையருக்கு செல்வம் எல்லாம் அழிந்து, வறுமை வாட்டியது. ஒருமுறை அரசன் பத்ராஷ்ரவ தன் மகளைப் பார்க்கச் சென்று நடந்தவற்றைக் கூறியவுடன் மகள் தந்தைக்குச் சிறந்த உணவளித்து, அவர் புறப்படும் பொழுது பொன்னையும், மணியையும் மூட்டையாகக் கட்டிக் கொடுத்தாள். மகிழ்ச்சியோடு மகள் கொடுத்த பரிசினைத் தன் அரண்மனைக்குக் கொண்டு வந்து அரசன் பார்த்தான். அனைத்தும் மண்ணாகவும் கல்லாகவும் மாறியிருந்தது. சில நாட்கள் கழித்து அரசி தன் மகளைப் பார்க்கச் சென்றாள். நல்ல வேளையாக இலட்சுமி விரதம் என்று சொல்லக்கூடிய நாளாக அது அமைந்தது. மகளின் பிடிவாதத்தில் இணங்கி அரசியும் இலட்சுமி விரதம் இருந்தாள். இதனால் அவள் இழந்த செல்வத்தை மீட்டு மகிழ்ச்சியாக வாழ்க்கை நடத்தினாள். லட்சுமி விரதத்தின் மகிமை இதுவே ஆகும்.

**மீண்டு வந்த மகன் கதை**

துவாபர யுகத்தில் மிக சக்தி வாய்ந்த தீனநாதன் என்ற அரசன் ஆட்சி செய்து வந்தான். எல்லா செல்வங்களும் நிரம்பி யிருந்தும், குழந்தைச் செல்வம் இல்லாமையால் மிக மனம் வருந்திக் காலவ முனிவரிடம் தன் குறையைச் சொல்லி வருந்தினான். அவர் நரபலி இடும் ஒரு யாகத்தைச் செய்து அதில் உறுப்பு அழகுகள் சிறிதும் குறைபாடில்லாத ஒருவனைப் பலியிடுவதானால் உனக்குக் குழந்தை பிறக்கும் என்று கூறினார். உடனே அரசனுடைய ஆணைப்படி பணியாளர்கள் நாடு முழுதும் பலியிடுவதற்குரிய ஒருவனைத் தேடிச் சென்றனர். இறுதியாக தாசபுரா என்ற இடத்தில் கிருஷ்ண தேவா — சுசீலா என்பவர்களுக்குப் பிள்ளைகளாகப் பிறந்துள்ள மூன்று பேரைக் கண்டவுடன் பணியாளர் மனம் திருப்தியடைந்தது. அனைத்து அழகுகளும் உடைய மூவரையும் அரசரிடம் அழைத்துச் செல்வது என்ற முடிவுக்கு வந்தனர். தாய், தந்தையர்கள் எவ்வளவு கேட்டும் அவர்கள் இரக்கம் காட்ட மறுத்தனர். இறுதியாக, மூவரில் ஒருவனும் நடுமகனு மாகிய ஒருவனை அழைத்துச் செல்ல ஏற்பாடாயிற்று. மகனை அழைத்துக்கொண்டு பணியாளர் சென்றதும் அத்துயரம் தாங்கமாட்டாத தாய் தந்தையர் கண்களை இழந்தனர். பணியாளரும் பலிக்குரியவனும் செல்கின்ற வழியில் விசுவா மித்திரருடைய ஆசிரமம் குறுக்கிட்டது. விசுவாமித்திரர் அவர்களைப் பார்த்து, "நீங்கள் யார்? மிக வருத்தத்தோடு இருக்கும் இந்த இளைஞன் யார்?" என்று கேட்டார். பணியாளர்கள் தாங்கள் வந்த காரியத்தை விளக்க மாகக் கூறினர். விசுவாமித்திரர், "இந்தப் பையனை விட்டு விட்டு அதற்கு பதிலாக என்னை அழைத்துச் செல்லுங்கள்" என்றார். பலியிடுவதற்கு அழகான இளைஞன் தேவையே தவிர ஒரு கிழவனை அழைத்துப் போவது சரியில்லை என்று

நினைத்த பணியாளர்கள் விசுவாமித்திரரை அழைத்துப் போக மறுத்துவிட்டனர். என்றாலும், விசுவாமித்திரர் அரசனிடம் சென்று நரபலி இடுவது தேவையில்லாத ஒன்று என்று விளக்கிக் கூறித் தானே ஒரு யாகத்தைச் செய்து அவனுக்கு குழந்தைச் செல்வம் கிடைக்க வழி செய்வதாகக் கூறினார். தான் கூறியபடியே ஒரு யாகத்தைச் செய்து முடித்தார், விசுவா மித்திரர். குழந்தை பிறந்தது. பலிக்காக அழைத்து வரப்பட்டவன் பெற்றோரிடம் திரும்பிச் சென்றான். அவன் வரவைக் கண்ட மகிழ்ச்சியில் திளைத்ததால், பெற்றோரின் கண்பார்வை மீண்டு விட்டது. விசுவாமித்திரர் ஒரு மாபெரும் முனிவர் என்பது விளங்கி விட்டது.

பத்ம புராணத்தின் இறுதிப் பகுதி பலப்பல குட்டிக் கதைகளைப் பேசுகிறது. அவற்றுள் பெரும்பாலானவை ஏகாதசி விரதம் மேற்கொள்வதால் கிடைக்கும் பயன்களைப் பேசுகிறது. இக்கதைகளில் ஒரு பொதுத்தன்மை காணப் படுகிறது. விரதம் இருப்பதின் சிறப்பை அறிந்து அதை மேற்கொண்டாலும், எதிர்பாராதவிதமாக அன்று ஏகாதசி என்று கூடத் தெரியாத நிலையில் பட்டினி இருந்தாலும், இரண்டு சாராரும் விஷ்ணுலோகம் செல்கின்றனர் என்பதே இக் கதைகளின் பொதுத்தன்மை.

அடுத்துள்ள சில கதைகள் விஷ்ணு பக்தி என்று தனியே இல்லாவிட்டாலும், விஷ்ணுவிற்கு அபிஷேகம் செய்த தண்ணீரைக் குடித்த காக்கை விஷ்ணுலோகம் சென்றது. அதிக தாகத்தினால் துளசிச் செடியில் நிறைந்திருக்கின்ற தண்ணீரைக் குடித்த சண்டாளன் விஷ்ணுலோகம் போனான் என்பன போன்ற கதைகள் அமைந்துள்ளன. இந்தக் கதைகள் துவாபர யுகத்திலும், திரேதாயுகத்திலும் நடந்தவை என்று பத்ம புராணம் கூறிச் செல்கிறது.

பத்ம புராணத்தின் முடிவுரையை அதனைத் தொடங்கிய உரோமஹர்ஷனரே எடுத்துச் சொல்கிறார். பத்ம புராணத்தின் ஒரு பாடலைப் படித்தால் அல்லது கேட்டால் ஒருநாள் செய்த பாவம் விலகும். ஒரு அத்தியாயத்தைப் படிக்கவோ, சொல்லவோ கேட்டால் ஆயிரம் பசுக்களை தானம் செய்த புண்ணியம் கிடைக்கும். புராணம் முழுவதையும் படிக்கவோ, கேட்கவோ செய்தால் ஓர் அசுவமேத யாகம் செய்த பயன் கிட்டும் என்று உரோமஹர்ஷனர் கூறியவுடன் அதைக் கேட்டுக் கொண்டிருந்த முனிவர்கள் மிகவும் திருப்தி அடைந்து தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றனர்.



# 3. விஷ்ணு புராணம்

## இப்புராணம் பற்றி...

பதினெண் புராணங்களுள் இப்புராணம் மிகவும் முக்கியமானதென்று வைணவர்கள் கூறுவர். இந்தப் புராணத்திலும், பின்னர் வரும் பாகவத புராணத்திலும் ஸ்ரீகிருஷ்ணன் வரலாறு மிக விரிவாகப் பேசப் படுகிறது. ஆதிசங்கர பகவத் பாதாள் தம்முடைய மஹாபாஷ்யத்தில் விஷ்ணு புராணத்தில் இருந்து பல மேற்கோள்களை எடுத்துக் காட்டுகிறார். ஆதி சங்கரர் காலம் 8ஆம் நூற்றாண்டு என்பது ஆய்வாளர்கள் கண்ட முடிவாகும். எனவே இந்தப் புராணம் அவரது காலத்துக்கு முன்னரே அதாவது 5, 6ஆம் நூற்றாண்டு களில் மக்களிடையே நன்கு பரவி இருக்க வேண்டும். 5, 6ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியது என்ற காரணத்தால் இந்திய நாகரிகம், பண்பாடு என்பவற்றின் கருவூலம் இப்புராணங்கள் என்ற கருத்துக்குத் தடை ஏதுமில்லை.

இப்பொழுது கிடைக்கின்ற முறையில் இப்புராணம் 6,000 பாடல்களைக் கொண்டதாகும். இப்புராணம் வியாச பகவானின் மகனாகிய பராசர முனிவரால் சொல்லப்பட்டதாகும். மைத்ரேயி முனிவர் பராசர முனிவரிடம் பாரத நாட்டுத் தோற்றம் பற்றிக் கேட்க,

*பராசரர் விடை சொல்வதுபோல் அமைந்துள்ளது இப் புராணம்.*

*இப்புராணம் ஆறு பகுதிகளாகவும், 126 அதிகாரங் களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. நாலாவது பகுதி மட்டும் உரைநடையில் உள்ளது. இந்நாட்டுப் பழங்கால மன்னர் களின் வம்சாவளி பற்றிக் கூறுவதாகும் அது.*

*ஒரு புராணத்திற்குரிய ஐந்து பண்புகளும் விஷ்ணு புராணத்தில் முழுவதுமாக அமைந்துள்ளன. முதற் பகுதி– பிரபஞ்சம் தோற்றம் பற்றியதாகும். இரண்டாம் பகுதி– இந்நாட்டுப் புவியியல் பற்றியும், வானியல் பற்றியும் கூறுவது; மூன்றாவது பகுதி– மன்வந்திரங்கள், யுகங்கள் பற்றிய விளக்கமாகும். இதனுடன் இந்நாட்டின் சமுதாய அமைப்பு, நால்வகை வர்ணம் ஆகியவை பற்றியும் பேசப்பட்டுள்ளன. நான்காவது பகுதியில் சூரிய, சந்திர வம்ச மன்னர்கள் பற்றிய பட்டியல் தரப் பட்டுள்ளது. ஐந்தாவது பகுதியில் கிருஷ்ணனுடைய வரலாற்றுப் பகுதியும் குப்த மன்னர்கள் பற்றிய செய்தியும் பேசப்பட்டுள்ளது.*

*ஆறாவது பகுதி, கலியுகத்தில் மக்கள் வாழ்க்கை பற்றிப் பேசுகிறது.*

**ப**ராசர முனிவரைப் பார்க்க ஒருமுறை மைத்ரேய முனிவர் வந்தார். மைத்ரேயர் பராசரரைப் பார்த்து, ‘படைப்பு எப்படித் தொடங்கிற்று என்பதைத் தாங்கள் சொல்ல வேண்டுகிறேன்’ என்று கேட்டுக் கொண்டார். பராசரர் பதில் கூறத் துவங்கினார்.

தொடக்கத்தில் எங்கும் நீரே நிரம்பி இருந்தது. அதில் ஒரு பெரிய முட்டை இருந்து கொண்டிருந்தது. முட்டையினுள் இந்த உலகத்தில் நாம் காண்கிற சர, அசரப் பொருள்கள்

எல்லாம் வகைக்கு ஒன்றாக இருந்தன. அவற்றோடு சேர்ந்து விஷ்ணுவும் அதனுள் இருந்தார். வெளியே ஆகாயம், காற்று முதலிய ஐந்தும் இருந்தன. பூமி நீருக்கடியில் பாதாள லோகத்தோடு சேர்ந்து இருந்தது. பூமியை மேலே கொண்டுவர விரும்பிய விஷ்ணு வராக வடிவம் எடுத்துப் பாதாளத்திற்குச் சென்றார். அங்கிருந்த பூமி தன்னை விடுவிக்குமாறு அவரை வேண்டிக் கொண்டது. பூமியை எடுத்துத் தனது இரண்டு தந்தங்களின் நடுவே வைத்துக் கொண்டு மேலே வந்த விஷ்ணு, பூமியை நீரில் மிதக்க விட்டார். நீரில் மிதந்து கொண்டிருந்த காரணத்தால் நாராயணன் என்ற பெயர் பெற்ற விஷ்ணு, பிரம்மன் வடிவைத் தாங்கி உலகத்து உயிர்களை எல்லாம் படைக்கத் தொடங்கினார். முதலில் படைக்கப்பட்டவர்கள் அவர் வாயிலிருந்து வந்த தேவர்களும், தொடையிலிருந்து வந்த அசுரர்களும், விலாவிலிருந்து வந்த பிறர்களும் ஆவர். படைக்கப்பட்ட யட்சர்கள் படைத்தவனாகிய பிரம்மனையே தின்ன முற்பட்டனர். ஆனால் அவ்வாறு செய்யக் கூடாது என்று ராட்சதர்கள் தடுத்தனர். இதன்பிறகு பிரம்மனின் தலையில் இருந்து விழுந்த ரோமத்தில் கந்தர்வர்கள் உண்டாகினர். பிரம்மனின் நெஞ்சிலிருந்து செம்மறி ஆடுகளும், வாயிலிருந்து வெள்ளாடுகளும், வயிற்றி லிருந்து கால்நடைகளும், பாதத்திலிருந்து யானை, குதிரை, மான், ஒட்டகம் ஆகியவையும் உண்டாயின.

## உருத்திரனின் தோற்றம்

ஒரு காலத்தில் பிரம்மன் தமக்கு ஒரு அழகிய புத்திரன் வேண்டும் என்று நினைத்தார். உடனே அவர் மடியில் அழகிய ஆண் குழந்தை ஒன்று கிடந்தது. கிடந்த குழந்தை ஓயாது அழுது கொண்டே இருந்தது. அழுகையை நிறுத்த வேண்டுமானால் தனக்கு ஒரு பெயர் சூட்டப்பட வேண்டும் என்று அக்குழந்தை

சொல்லிற்று. நான்முகன் அழுகின்ற குழந்தைக்கு 'ருத்திரன்' என்று பெயரிட்டார். சிலநேரம் மகிழ்ச்சியாக இருந்த குழந்தை மறுபடியும் அழத் துவங்கியது. நான்முகனால் அவ்வழுகையை நிறுத்த முடியவில்லை. முன்னமும் தனக்கு ஒரு பெயர் சூட்டப்பட வேண்டும் என்றுதானே இந்தக் குழந்தை அழுதது. எனவே புதுப்புதுப் பெயராக பிரம்மன் பெயர் சூட்டினார். ஆனால் குழந்தை அழுகையை நிறுத்தவில்லை. ஏழாவது பெயர் சூட்டப்பட்டவுடன்தான் குழந்தையின் அழுகை நின்றது. பிரம்மன் ருத்திரனுக்கு சூட்டிய ஏழு பெயர்கள் வருமாறு:

பவ, சர்வ, மகேச, பசுபதி, பீம, உக்ர, மகாதேவ என்பனவாம். உருத்திரன், சதி என்பவளை மணந்து கொண்டான். சதியின் தந்தையாகிய தட்சன் செய்த யாகத்தில் உருத்திரனை அவமானம் செய்ததால் சதி உயிரை விட்டு, மறுபடியும் 'உமா' என்ற பெயருடன் இமயமலை மகளாகப் பிறந்தாள். அவளை விரும்பி ருத்திரன் மணந்து கொண்டார்.

## இலக்குமியின் தோற்றம்

முன்னொரு காலத்தில் மகாதேவன் வழியில் வந்த துர்வாச முனிவர் உலகம் முழுவதிலும் சுற்றித் திரிந்தார். ஒருமுறை ஒரு அழகிய பெண், வனப்பு வாய்ந்த மாலையைக் கையில் ஏந்திக் கொண்டு துர்வாசர் எதிரில் வந்தாள். அம் மாலையில் விருப்பம் கொண்ட துர்வாசர் அம்மாலையைக் கேட்டார். அப்பெண் மகிழ்ச்சியுடன் அம்மாலையை துர்வாசருக்குத் தந்தாள். அவள் தந்த மாலையைத் தலையில் அணிந்துகொண்டு பலவிடங்களிலும் சுற்றித் திரிந்தார் துர்வாசர். ஒருமுறை தன்னுடைய யானையாகிய ஐராவதத்தில் எதிர்கொண்டு இந்திரன் ஊர்வலம் வந்தான். துர்வாசர் தன்னுடைய தலையில் இருந்த அந்த மாலையை எடுத்து இந்திரனுக்குக் கிடைக்குமாறு தூக்கிப் போட்டார். அதன்

சிறப்பை அறியாத தேவர்கள் தலைவன், அந்த மாலையை வாங்கி ஐராவதத்தின் மத்தகத்தின் மேல் வைத்து விட்டான். அற்புதமான வாசனையைக் கண்ட ஐராவதம் மேலும் அந்த வாசனையை அனுபவிப்பதற்காக மாலையின் பக்கமாகத் தனது துதிக்கையை நீட்டிற்று. ஆனால் மாலை தவறிக் கீழே விழுந்து விட்டது. மண்ணில் விழுந்த மாலையைக் கண்ட துர்வாசர் மிக்க சினம் கொண்டார். இந்திரன் எவ்வளவு மன்றாடி மன்னிப்புக் கேட்டும் அவர் கோபம் அடங்கவில்லை. இலட்சுமி உன்னை விட்டுப் போய்விடுவாள் என்று சாபமிட்டார். இந்திரன் அமராவதி திரும்பிச் சென்றவுடன் அந்நகரமே பாழ்பட்டுச் சீரழிந்து காணப்பட்டது. காரணம், இலக்குமி அதை விட்டுப் போய்விட்டதுதான். திகைத்துப் போன இந்திரன் தேவருடன் சேர்ந்து பிரம்மனிடம் சென்று நடந்ததைக் கூறினான். நான்முகன் இது என்னால் தீர்த்து வைக்கப்படக் கூடியது அன்று. வாருங்கள். விஷ்ணுவிடம் சென்று தீர்த்துக் கொள்ளலாம் என்று கூறி இந்திரன் முதலானவர்களை அழைத்துக் கொண்டு விஷ்ணுவிடம் சென்றார். விஷ்ணு பாற்கடலைக் கடைந்து அமிர்தத்தை உண்டால் அசுரர்களை வெல்லலாம் என்று கூறினார். அப்படியே செய்வதென்று முடிவாயிற்று. ஆனால் பாற்கடலை தேவர்கள் மட்டும் கடைய முடியாது. அசுரர்களின் உதவியும் தேவை. எனவே அசுரர்களை அழைத்து இதனைச் செய்தால் கிடைக்கும் அமிர்தத்தில் அவர்களுக்கும் பங்கு தருவதாக தேவர்கள் பொய் கூறினார்கள். இதை அறியாத அசுரர்கள் முயற்சியுடன் கைகொடுக்க முன்வந்தனர். மேரு மலையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி திருமால் கொண்ட மிகப் பெரிய கூர்மம் (ஆமை) முதுகில் மேரு மலையை நிறுத்திக் கடைந்தார்கள். வாசுகியின் தலைப் பக்கத்தை அசுரர்களும், வால் பக்கத்தை தேவர்களும் பிடித்துக் கொண்டனர். கயிறாகப் பயன்பட்டதால் வாசுகி பெருந்துன்பமுற்று விஷப்

புகையைக் கக்கிற்று. அது ஆகாயத்தில் சென்று மழையாய்ப் பெய்தது. கடையும் பொழுது முதலில் சுரபியும் (பசு), அடுத்து வருணி என்ற தேவதையும், தொடர்ந்து பாரிஜாதமாயும் அடுத்து அப்ஸரஸ்களும் அடுத்து சந்திரனும் வந்தான். இவற்றோடு பல தீய பொருட்கள் தோன்றின. இதன் பிறகு தன்வந்திரி அமுத கலசத்தை ஏந்திக் கொண்டு வந்தான். தேவர்களும் அசுரர்களும் ஒருசேர மகிழ்ந்தனர். தன்வந்திரியை அடுத்து அழகிய தாமரைப்பூவில் ஒளி பொருந்திய இலக்குமி கையில் ஒரு தாமரை மலரை ஏந்திக்கொண்டு தோன்றினாள். திசை யானைகள் எட்டும் இலக்குமிக்கு அபிஷேகம் செய்தன. விஸ்வகர்மா இலக்குமிக்கு ஏற்ற ஆபரணங்களைச் செய்து வந்தார். இலக்குமி விஷ்ணுவைத் தழுவிக் கொண்டதாலும், தேவர்களைப் பார்த்துப் புன்சிரிப்புச் செய்ததாலும் இலக்குமி யின் கிருபை தேவர்களுக்கு மட்டும் கிடைத்தது. இது நடை பெறுகின்ற நேரத்தில் தன்வந்திரியிடமிருந்த அமுத கலசத்தை அசுரர்கள் பறித்துக் கொண்டனர். ஒன்றும் செய்ய இயலாது தேவர்கள் கலங்கி நிற்கையில் விஷ்ணு ஒரு பெண் வடிவுடன் சென்று அசுரர்களை மயக்கி, அமுத கலசத்தைக் கொண்டு வந்து தேவர்கள் உண்ணுமாறு செய்தார். அமிர்தம் உண்ட தேவர்கள் அதிக பலம் பெற்று அசுரர்களை விரட்டியடித்தனர். பிறகு இலட்சுமியை வணங்கிய இந்திரன் சில வரங்களைப் பெற்றுக் கொண்டான். முதலாவது, இலக்குமி தேவருலகம் முதலியவற்றை விட்டுப் பிரியக் கூடாது. இரண்டாவது, யார் இலக்குமியைப் போற்றி வழிபட்டாலும் அவள் அவர்களுக்கு அருள் தர வேண்டும்.

### துருவனின் கதை

பிரம்மாவின் உடம்பிலிருந்து ஒரு ஆணும், பெண்ணும் தோன்றினர். மனு என்ற பெயரைப் பெற்றிருந்த அவர்கள்

மரபில் பல மக்கள் தோன்றினர். மனுவின் மரபில் தோன்றியதால் அவர்கள் 'மானவர்கள்' என்று அழைக்கப் பட்டனர். இவர்களுள் உத்தானபாதன் என்ற மன்னன் சுனிதி, சுருச்சி என்ற இரு மங்கையரை மணந்து ஆட்சி செலுத்தி வந்தான். இளையவளாகிய சுருச்சியின் மகன் உத்தமன், அரசன் மடியில் அமர்ந்திருந்தான். மூத்தவளான சுனிதியின் மகன் துருவன் தானும் தந்தையின் மடியில் அமர விரும்பினான். அப்படி அமர விரும்பும் போது இளையவளாகிய சுருச்சி அவனைத் தடுத்துவிட்டாள். அரசன் மடியில் அமரும் உரிமை உத்தமனுக்கு மட்டும் என்றும், அடுத்தபடியாக ஆளப் போகிறவன் அவன்தான் என்றும் கூறினாள். மிக்க வருத்தத்தோடு தாயிடம் வந்த துருவன் நடந்ததைக் கூறினான். தாய் சுனிதி 'மகனே! இதில் வருத்தப்பட ஒன்றுமில்லை. போன பிறப்பில் நல்ல காரியங்களைச் செய்தவர்கள் இந்தப் பிறப்பில் நல்ல பதவிகளையும், செல்வாக்கையும் அடைகின்றனர். சுருச்சியும் அவள் மகன் உத்தமனும் போன பிறப்பில் புண்ணியம் செய்ததால் இப்பிறப்பில் இந்நிலையில் உள்ளனர். நானும் நீயும் அவ்வாறு செய்யவில்லை. எனவே இப்பொழுது நல்ல காரியங்கள் செய்தால் அடுத்த பிறவியில் நல்ல நிலையை அடையலாம்' என்றாள். அதைக்கேட்ட துருவன் தவம் செய்யவேண்டும் என்ற உறுதியுடன் பக்கத்தில் உள்ள காட்டிற்குச் சென்றான். அங்கே சப்த ரிஷிகள் என்று சொல்லப்படும் முனிவர்களைச் சந்தித்தான். ஐந்து வயது பாலகனாகிய அவன் காட்டிற்குள் வந்ததைப் பார்த்து வியந்து அவன் வந்த காரணத்தை வினவினர். நடந்த காரியத்தைக் கூறிய துருவன், தான் தவம் செய்து உரிய இடத்தைப் பெறுவதற்கு வந்ததாகக் கூறினான். அவன் முடிவை மாற்ற முடியாது என்பதை அறிந்த முனிவர்கள் உன் எண்ணம் நிறைவேற வேண்டுமானால் நீ விஷ்ணுவைக் குறித்துத் தவம்

செய்ய வேண்டும் என்று கூறி ஒரு மந்திரத்தையும் உபதேசித்தனர். துருவன் ஓரிடத்தில் அமர்ந்து விஷ்ணுவையே தியானம் செய்து மந்திரத்தை ஜெபிக்கலானான். நாட்கள் நகர்ந்தன. துருவன் தவ வலிமை தேவர்களையும் அச்சம் கொள்ளச் செய்தது. அவன் ஒருவேளை இந்திரப் பதவிக்கு ஆசைப்படுகிறானோ என்று சந்தேகித்த தேவர்கள் அவன் தவத்தைக் கலைக்க அரும்பாடு பட்டனர். இவர்களையல்லாமல் அசுரர்களும் அவன் தவத்தைக் கலைக்க முயன்றனர். எதுவும் செய்ய முடியாத நிலையில் விஷ்ணு துருவன் முன் தோன்றினார். விஷ்ணுவை நேரே தரிசனம் செய்தான் துருவன். 'என்ன வரம் வேண்டும்?' என விஷ்ணு கேட்க, தங்களைத் தரிசித்ததே போதுமானது, இதற்கு மேல் ஒன்றும் வேண்டாம் என்று கூறிவிட்டான் துருவன். இருந்தாலும் ஏதாவது ஒரு வரத்தைக் கேள் என்று விஷ்ணு கூற எவரும் அடைய முடியாத இடத்தை தான் அடைய வேண்டும் என்று துருவன் கேட்டான். அவன் விருப்பத்தை நிறைவேற்றும் முறையில் அசையாத துருவ நட்சத்திரமாக அவனை மாற்றி, சப்த ரிஷி மண்டலத்தின் அடியில் இருக்குமாறு வரம் தந்தார். சப்த ரிஷி மண்டலம் உட்பட எல்லா நட்சத்திரங்களும் இன்றும் துருவனைச் சுற்றி வருவதைக் காணலாம்.

**பிரகலாதன் கதை**

தைத்தியர்கள் என்றழைக்கப்பட்ட அசுரர்கள் பரம்பரையில் வந்தவன் ஹிரண்யகசிபு என்பவன். மாபெரும் தவங்கள் செய்து மூன்று லோகங்களையும் ஆளும் சக்தியைப் பெற்றான். அன்றியும் இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன் ஆகிய தெய்வங்களையெல்லாம் வென்று அவர்கள் இருக்கும் இடத்திலிருந்து துரத்தி விட்டான். அவர்கள் அனைவரும் இங்குமங்குமாக அலைந்து திரிந்து கடைசியில் விஷ்ணுவிடம் சரணடைந்தனர்.

எல்லோரையும் வென்று விட்ட காரணத்தால் ஹிரண்ய கசிபு தனக்குமேல் யாரும் இல்லை, இருக்கவும் முடியாது என்ற முடிவுக்கு வந்து விட்டான். அதனால் தைத்தியர்கள், தேவர்கள் ஆகிய அனைவரும் தன்னையே வணங்க வேண்டும், தன் பெயரையே உச்சரிக்க வேண்டும் என்று ஆணையிட்டான். மேலும் தைத்திய குலத்திற்கு விஷ்ணு விரோதியாகக் கருதப் பட்டான். எனவே பகைவனின் பெயரை யாரும் சொல்லக் கூடாது என்பது ஹிரண்யனின் கட்டளை. இந்நிலையில் பிரகலாதன் என்ற குழந்தை பிறந்தது. குழந்தை ஓரளவு வளர்ந்தவுடன் ஓர் ஆசிரியனை நியமித்து அக்குழந்தைக்குக் கல்வி புகட்ட உத்தரவிட்டான். கல்வியைத் தொடங்கும் பொழுது விஷ்ணுவின் பெயரைச் சொல்லக் கூடாது என்றும், ஹிரண்யன் பெயரைச் சொல்ல வேண்டும் என்றும் குரு கட்டளையிட்டார். ஆனால் பிரகலாதன் அதற்கு இசைய வில்லை. அவன் விஷ்ணுவின் பெயரையே சொல்லிக் கொண்டிருந்தான். சில காலம் கழித்து மகனின் கல்வி வளர்ச்சி எவ்வளவு தூரம் இருக்கிறது என்பதை அறிய ஹிரண்யன் பிள்ளையையும், ஆசிரியரையும் வரவழைத்தான். மகனுடைய கல்வியைச் சோதிக்க எண்ணிய ஹிரண்யன் 'என்ன கற்றுக் கொண்டாய்?' என்று கேட்டான். பிரகலாதன் விஷ்ணுவின் நாமத்தைச் சொல்லி அவன் பெருமையைச் சொல்லத் துவங்கினான். எல்லையற்ற கோபம் கொண்ட ஹிரண்யன் 'யார் அந்த விஷ்ணு?' என்று கேட்டான். பிரகலாதன், 'தந்தையே! அந்த விஷ்ணு உன்னுள்ளும் இருக்கிறான், என்னுள்ளும் இருக்கிறான். காணப்படுகின்ற எல்லாவற்றுக் குள்ளும் இருக்கிறான்,' என்று கூறினவுடன் எல்லையற்ற சினம் கொண்டான் ஹிரண்யன். தைத்திய சேனையை விட்டு இப்பிள்ளையைக் கொன்று விடுங்கள் என்றான். அவர்கள் எத்தனை ஆயுதங்களைப் பயன்படுத்தியும் ஒன்றும் நடைபெற

வில்லை. ஆயிரக்கணக்கான விஷப் பாம்புகளை விட்டுப் பிரகலாதனைக் கடிக்கச் செய்தார்கள். ஒன்றும் நடைபெற வில்லை. கையையும் காலையும் கட்டி அரண்மனையில் இருந்து கீழே எறிந்தார்கள். அப்போதும் ஒன்றும் நடக்கவில்லை. ஆசிரியரை அழைத்து, 'மறுபடியும் இவனைக் கூட்டிக் கொண்டுபோய் நல்ல முறையில் கல்வி கற்பியுங்கள்' என்று கூறினான். எவ்விதப் பயனும் விளையவில்லை. இம்முறை சுக்ர நியதியின்படி பகைவர்களை எப்படி வெல்ல வேண்டும் என்று ஆசிரியர்கள் கற்பித்தார்கள். பல நூறு ஆண்டுகள் கழித்து மறுபடியும் பிள்ளையை வரவழைத்தான். இந்த முறை விஷ்ணுவைப் பற்றிப் பேச்செடுக்காமல் 'சுக்ரநீதியின்படி பகைவர்களை எவ்வாறு வெல்வது?' என்று கேட்டான் ஹிரண்யன். அதற்குப் பிரகலாதன் "பகைவர்கள் என்று யாரும் இல்லை. எல்லோரிலும் விஷ்ணுவே இருக்கின்றார். ஆதலால் யார் யாருக்கு பகை?" என்று பிள்ளை பதில் கூறினான். கோபம் கொண்ட ஹிரண்யன், பிரகலாதன் உடம்பைப் பாம்புகளால் கட்டச் செய்து அவனை சமுத்திரத்துக்குள் போட்டுவிட்டு அவன் மேலே வராமல் இருக்க மலைகளை எடுத்து அவன்மேல் போடுமாறு செய்தான். இத்தனை இடையூறுகளையும் கடந்து பிரகலாதன் வெளியே வந்ததைப் பார்த்த ஹிரண்யன் 'மகனே! இத்தனை ஆபத்துக்களையும் வெல்லக் கூடிய சக்தியை எங்கிருந்து பெற்றாய்?' என்று கேட்டான். அதற்குப் பிரகலாதன், "தந்தையே! இதில் என்னுடைய சக்தி எதுவுமே இல்லை. எல்லாம் விஷ்ணுவின் செயல்தான்" என்று கூறினான். இந்த நிலையில் விஷ்ணு நரசிம்ம அவதாரம் எடுத்து ஹிரண்யனைக் கொன்று பிரகலாதனுக்கு முடிசூட்டினார். இந்தப் பிரகலாதன் பரம்பரையில் வந்தவர்தான் மாபலி சக்கரவர்த்தி. நரசிம்ம மூர்த்தி பிரகலாதனைப் பார்த்து, 'உனக்கு என்ன வரம்

வேண்டும்?' என்று கேட்க, பிரகலாதன், "ஐயனே! இமைப் பொழுதும் உன்னை மறவாதிருக்க வேண்டும்" என்றான். "வேறு என்ன வேண்டும்?" என்று விஷ்ணு கேட்க, "என் தந்தையின் குற்றங்களையெல்லாம் மன்னிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். விஷ்ணுவும் அவ்விதமே செய்தார்.

## பிற உலகங்கள் பற்றிய குறிப்புக்கள்

பூமிக்கு மேல் பல மைல்களுக்கு அப்பால் உள்ளது சூரிய உலகம். அடுத்து சந்திரன், செவ்வாய், புதன், வியாழன் (குரு), வெள்ளி (சுக்கிரன்), சனி, சப்தரிஷி, துருவ மண்டலங்கள் ஆகியவை உள்ளன. சப்தரிஷி மண்டலம் முதலான உலகங்கள் துருவ நட்சத்திரத்தைச் சுற்றி வருகின்றன. துருவ லோகத்திற்கு மேல் ஞான உலகமும், அதற்குமேல் தேவர்கள் வசிக்கும் தவ உலகமும் உள்ளன. இவை அனைத்திற்கும் மேலே சத்திய உலகம் உள்ளது. அது இரண்டாகப் பிரிக்கப்பட்டு பிரம்ம லோகம், வைகுண்ட லோகம் என்று உள்ளது. பிரம்ம உலகத்தில் பிரம்மனும், வைகுண்ட உலகத்தில் விஷ்ணுவும் உள்ளனர். துருவ உலகம் முதல் சத்திய உலகம் வரை உள்ள நான்கு உலகங்களும் யுக முடிவில் அழிவதில்லை. இவற்றிற்குக் கீழே உள்ள பூ, புவர், சுவர் ஆகிய உலகங்கள் பிரளய காலத்தில் அழிந்துவிடும் இயல்புடையன. உண்மையில் இப் பேரண்டம் என்பது முன்னர் குறிப்பிடப்பட்ட ஏழு உலகங்களையும் இவற்றிற்குக் கீழே ஏழு பாதாள உலகங்களையும் தன்னுள் அடக்கியுள்ளது. கீழும், மேலுமாக உள்ள இந்தப் பதினான்கு உலகங்களையும் அடக்கி உள்ள அண்டம் இருளால் சூழப் பட்டுள்ளது. அவ்விருளைக் கடந்து தண்ணீரும், நீரைக் கடந்து நெருப்பும், நெருப்பைக் கடந்து காற்றும், காற்றைக் கடந்து ஆகாயமும் சூழ்ந்துள்ளன.

## ஜடபரதன் கதை

*முன்னொரு காலத்தில் சாலக்கிரமா என்ற ஊரில் ரிஷபா என்ற மன்னனுக்கு பரதன் என்றொரு மகன் இருந்தான். அவன் எப்பொழுதும் விஷ்ணுவை தியானிப்பதிலேயே இருந்தான். ஒருநாள் பரதன் நீராடுவதற்காக ஆற்றிற்குச் சென்றான். அங்கு கருவுற்றிருந்த ஒரு மானும் நீர் அருந்து வதற்காக வந்திருந்தது. அச்சமயத்தில் ஒரு சிங்கத்தின் கர்ஜனை கேட்டு பயந்த மான் தன் குட்டியை ஈன்ற உடன் இறந்து விட்டது. ஆற்றில் விழுந்துவிட்ட மான் குட்டியை பரதன் தன் ஆசிரமத்திற்குக் கொண்டு வந்து வளர்த்தான். நன்கு உண்டு வளர்ந்த மான் பெரியதாகிச் சுற்றுப்புறங்களுக்குச் சென்று உணவருந்தி வந்தது.*

*தன்னுடைய அரச பதவி, மக்கள், உறவினர்களை மறந்த பரதன் மானை மட்டும் மறக்காமல் பார்த்துக் கொண்டான். பல ஆண்டுகள் கழித்து மானைப் பற்றி நினைத்துக்கொண்டே உயிர் நீத்தான் பரதன். மானின் நினைவாகவே உயிர் நீத்ததால் மறுபிறப்பில் ஜாதிஸ்மராமானாக (பூர்வ ஜென்ம நினைவு களும்) பிறந்து தன் பழைய ஊராகிய சாலகிரமாவிற்குச் சென்று அங்கு வாழ்ந்து வந்தான். சில காலம் கழித்துப் பூர்வ ஜென்ம நினைவுகளுடன் பிராமணனாகப் பிறந்து வேத சாத்திரங்களில் நன்கு தேர்ச்சி பெற்றான். பரப் பிரம்மம் பற்றிய ஞானம் பெற்றதால் வேதங்கள் படிப்பதில் நாட்ட மில்லாமல் துர்நாற்றமுடைய தோற்றத்துடன் உலவி வந்தான். அவன் தந்தையின் மரணத்திற்குப் பிறகு உறவினர்கள் அவனுக்குக் கெட்டுவிட்ட உணவையே தந்தனர்.*

*இகவுமதி ஆற்றின் கரையில் கபில முனிவரின் ஆசிரமம் இருந்தது. ஒருநாள் சௌபிர என்ற அரசன் ஞானம் பற்றித் தெரிந்து கொள்ளப் பல்லக்கில் ஏறி, கபில முனிவரை*

தரிசிக்கச் சென்றான். பல்லக்குத் தூக்குபவர்களில் ஒருவன் குறைந்ததால் அழுக்கு உடம்புடன் இருந்த இந்த பிராமணனைப் பல்லக்குத் தூக்கும்படி செய்தான்.

பல்லக்கைத் தூக்கிச் சென்றவர்கள் வேகமாக செல்லவும், பரதன் மட்டும் சற்று மெதுவாக நடந்ததால் பல்லக்கு ஒரே சீராக நகர முடியவில்லை. இதனால் பரதனை மற்றவர்கள் கோபித்தனர். கோபம் கொண்ட அரசன் 'மிகுந்த பலமுடைய வனாகத் தோற்றமளிக்கும் நீ, சிறிது தூரம் பல்லக்கை சுமந்து வந்ததில் எப்படிக் களைப்புற்றாய்?' என்று கேட்டான். அதற்கு பரதன், 'பல்லக்கை நான் சுமக்கவில்லை, எனக்குக் களைப்பும் இல்லை, நான் பலமுடையவனும் அல்ல' என்றான். இதைக்கேட்ட அரசன் வியப்போடு, 'நீ பல்லக்கை சுமந்து செல்கிறாய், நீ பலமுள்ளவனாக இருக்கிறாய். இதை எப்படி மறுக்க முடியும்?' என்றான்.

பரதன் பதில் கூறத் துவங்கினான், "நான் யார்? நீ யார், நீ பார்த்தது என்னுடைய உடம்பும், உன்னுடைய உடம்புமே. நான் என்பது என் உடம்பும் அல்ல. நீ என்பது உன் உடம்பும் அல்ல. நம்முடைய ஆத்மாதான் நாம் யார் என்பதை அறிவிக்கும். அந்த ஆத்மாவிற்குக் களைப்போ, பலமோ எதுவு மில்லை. அந்த ஆத்மா பல்லக்கைத் தூக்கிச் சுமப்பதும் இல்லை!'— இதைச் சொல்லிவிட்டு பரதன் அமைதியாகி விட்டான். வியப்படைந்த அரசன் கீழே இறங்கி அந்த பிராமணனை விழுந்து வணங்கினான். இவ்வளவு ஞானம் பெற்ற இந்த மனிதன் யார் எனத் தெரிந்து கொள்ள விரும்பினான் அரசன். உடனே பரதன் ஆத்மாவைப் பற்றிக் கூறினான். ஒவ்வொரு பிறப்பிலும் ஓர் உடம்பிலிருந்து மறு உடம்பிற்குச் செல்லுகின்ற இந்த ஆத்மாவிற்கு அழிவே கிடையாது. இதுவே ஜீவாத்மா எனப்படும். எங்கும் வியாபித்

திருக்கும் பரம்பொருளாகிய விஷ்ணுவே பரமாத்மா எனப் படுபவர். முழுமையான ஞானம் பெற்றவனுக்கு ஜீவாத்மா விற்கும் பரமாத்மாவிற்கும் வேறுபாடில்லை. மாயையில் அகப்பட்டிருப்பவனுக்கே ஜீவாத்மாவும், பரமாத்மாவும் வேறுபட்ட பொருள்களாகத் தெரியும்.

பரதன் ஒரு கதையையும் அரசனுக்குக் கூறினான். பல ஆண்டுகளுக்கு முன்பு பிரம்மனின் மகனாகிய ரிபுவும், ரிபுவின் சீடனும் புலத்தியனின் மகனுமான நிடகாவும் தேவிகா நதியின் கரையோரத்தில் அமைந்துள்ள விராநகரா என்னுமிடத்தில் வசித்தனர். பரப் பிரம்மம் பற்றி அறிந்து கொள்வதற்குத் தயாராக இல்லாத காரணத்தால் நிடகாவை ஊருக்குள் சென்று வசிக்கும்படி கூறினான் ரிபு.

ஒருநாள் தன் சீடனாகிய நிடகாவைக் காணச் சென்றான் ரிபு. தன்னைக் காணவந்த தன் ஆசிரியனை உண்ண அழைத்தான், நிடகா. அவனைப் பார்த்து ரிபு 'என்ன உணவு படைக்கப் போகிறாய்? தூய்மையானதா?' என்றான். அதற்கு நிடகா அரிசி, பழங்கள் மற்றும் இனிப்புகள் இருப்பதாகக் கூறினான். இது அசுத்தமான உணவு. அரிசியில் செய்யப் பட்ட உணவு. மற்றும் தயிர் கொடுக்குமாறு கூறினான் ரிபு. ரிபு உணவு உண்டபின் தன் ஆசிரியனைப் பார்த்துப் பசி அடங்கிவிட்டதா என்றும், இங்கு எதற்காக வந்தீர்கள் என்றும் கேட்ட நிடகாவைப் பார்த்து, "பசியோடு இருப்ப வர்களுக்கே உணவு உண்டபின் பசி அடங்கிவிடும். எனக்குப் பசியில்லை. அதனால் இந்தக் கேள்விக்கே இடமில்லை. உடம்பிற்குதான் பசி எடுக்கும். நான் உடம்பல்ல. நான் எங்குச் செல்கிறேன் என்று வினவினாய். என்னுடைய ஆத்மா எங்கும் நிறைந்திருக்கிறது. நீ காணும் நான் நானல்ல. நீ நீயல்ல.

நீ அளித்த உணவைப் பற்றிக் கவலையில்லை. ஏனெனில் அனைத்துமே ஒரே மூலப் பொருளில் இருந்து செய்யப் பட்டவை. இதுவே உண்மையான ஞானம்" என்றான். இதைக் கேட்ட நிடகா, அஞ்ஞானம் அகன்று தன் ஆசிரியனைப் பணிந்து வணங்கினான்.

ஆயிரம் வருடங்களுக்குப் பிறகு நிடகாவைக் காண வந்தான் ரிபு. ஊருக்கு வெளியே புல்லைத் தின்று கொண்டு, மிகவும் மெலிந்த தோற்றத்துடன் காணப்பட்ட நிடகா மற்றவர்களுடன் கலக்காமல் தனித்து வாழ்ந்து வந்தான். பரமாத்மாவினின்று வேறுபட்டது எதுவுமில்லை என்ற உண்மையான ஞானத்தை போதித்து விடை பெற்றான் ரிபு.

இக்கதையைக் கூறிய பரதன், 'ஓர் அரசன் அறிந்து கொள்ளவேண்டிய ஞானம் இதுவே. மேகம் ஒன்றேயாயினும் சில சமயம் நீலமாகவும், சில சமயம் வெள்ளையாகவும் தோன்றுகிறது. அதுபோல் மாயையின் வசப்பட்டவர்கள் ஆத்மாவை வேறு வேறு என நினைக்கின்றனர். உண்மையில் ஆத்மா என்பது ஒன்றுதான். ஆத்மாவைத் தவிர உலகில் வேறு எதுவுமில்லை, நாம் அனைவரும் இந்த ஆன்மாவின் பிரிவுகளே' என்று கூறினான்.

### வேதவியாசர் பலர்

ஒவ்வொரு மன்வந்திரத்திலும் விஷ்ணு வேதவியாசராக உருவெடுக்கிறார். உருவெடுத்த பின்பு வேதங்களை வகைப் படுத்துகிறார். வைவஸ்வத மன்வந்திரங்களாகிய இந்தக் கால கட்டத்தில் வேதவியாசர் வேதங்களை 28 முறை வகைப்படுத்தி விட்டார். இதுவரை தோன்றியுள்ள வேதவியாசர்கள் இருபத்தெட்டு பேர் ஆவர். அவர்கள் சுவயம்பு வேதவியாசர், பிரஜாபதி வேதவியாசர், பிருஹஸ்பதி வேதவியாசர், மிருத்யு

வேதவியாசர், பரத்வாஜ வேதவியாசர், கிருஷ்ண துவை பாயன வேதவியாசர் முதலானோர். விஷ்ணு புராணத்தின் படி வரப்போகும் வேதவியாசர் துரோணரின் மகனாகிய அசுவத்தாமன் ஆவார். அவர் சிரஞ்சீவி ஆவார்.

'ஓம்' என்ற பிரணவம் நான்கு வேதங்களின் சாரம் எனப்படும். பரப் பிரம்மம் எங்கும், எப்பொழுதும் எப் பொருளிலும் நிறைந்திருந்தாலும் காண்பவர்க்குரிய மன வளர்ச்சி, அறிவு முதிர்ச்சி ஆகியவற்றிற்கேற்ப பல வடிவ மாகத் தெரிபவர். ரிக், யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலும் 1 இலட்சம் பாடல்கள் உள்ளன. கிருஷ்ண துவைபாயன வேதவியாசர் இந்த வேதங்களைப் பிரிக்க வேண்டுமென்று முடிவு செய்தவுடன் அவரைச் சுற்றி நான்கு முக்கியமான சீடர்கள் அமர்ந்திருந்தனர். பைலா என்பவருக்கு ரிக் வேதமும், வைசம்பாயனருக்கு யஜுர் வேதமும், ஜைமினிக்குச் சாமமும், சுமந்துவிற்கு அதர்வணமும் கற்பிக்கப்பட்டன. கிருஷ்ண துவைபாயன வியாசர் உரோமஹர்ஷனருக்குப் புராணங்களைக் கற்பித்தார்.

### யாக்ஞவல்கியர் கதை

முன்னொரு காலத்தில் அனைத்து ரிஷிகளும் ஓரிடத்தில் கூடினர். பெரிய ஆராய்ச்சிகள் நடைபெற வேண்டியிருப்பதால், யாரும் இக்கூட்டத்திற்கு வராமல் இருந்துவிடக் கூடாது. அப்படி வராமல் இருந்துவிட்டால், எட்டாவது நாள் ஒரு பிராமணனைக் கொன்ற பாவம் அவர்களைச் சேரும் என்று ரிஷிகள் அறிவித்தனர். என்ன காரணத்தாலோ வைசம்பாயன மகரிஷி இக்கூட்டத்திற்கு வர முடியவில்லை. யாக்ஞவல்கியர் உள்ளிட்ட இருபத்தேழு சீடர்களுக்கு யஜுர் வேதத்தை இருபத்தி ஏழு பங்காகப் பிரித்து அவர் கற்றுத் தந்திருந்தார். கூட்டத்திற்கு வராத காரணத்தால் எட்டாம் நாள் வைசம்பா

யனர் தவறுதலாக அவர் மைத்துனர் தலைமேல் காலை வைத்து அவரைக் கொன்றுவிட்டார். இந்த பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்க விரும்பிய வைசம்பாயனர் தன் இருபத்தேழு சீடர்களையும் அழைத்து இந்த தோஷம் என்னை விட்டுப் போவதற்கு ஒரு யாகம் செய்யவேண்டும். அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள் எனக் கட்டளையிட்டார். இக் கட்டளையைக் கேட்டவுடன் அந்த இருபத்து ஏழுபேரில் ஒருவராகிய யாக்ஞவல்கியர் எழுந்து "சுவாமி, யாகத்தை நன்கு செய்து முடிக்க இவர்களுக்கு ஆற்றல் போதாது, நானே இதைச் செய்து முடிக்கிறேன்" என்று கூறினார். இதுகேட்ட வைசம்பா யனர் மிகவும் கோபமடைந்து, "என்னுடைய மற்ற சீடர்களை நீ எவ்வாறு குறை கூறமுடியும்? இவ்வளவு அகங்காரம் உள்ள நீ என் சீடனாக இருப்பதற்குத் தகுதியில்லை. ஆகவே என்னிடம் கற்றுக் கொண்டதைத் திருப்பிக் கொடுத்துவிடு' என்று கூறினார். யாக்ஞவல்கியர், 'சுவாமி உங்களுடைய நன்மைக்காகத்தான் நான் இவ்வாறு கூறினேன். அதைப் புரிந்து கொள்ளும் சக்தி உங்களுக்கு இல்லை. அதற்கு பதிலாக என்மேல் சினம் கொண்டீர்கள். சொல்வதைப் புரிந்து கொள்ளாத குரு எனக்கும் தேவை இல்லை. ஆகவே உங்களிடம் கற்றுக் கொண்டதை இதோ உமிழ்ந்து விடுகிறேன்' என்று கூறி உமிழ்ந்தார். அவர் உமிழ்ந்ததை ஏனைய சீடர்கள் தைத்திரப் பறவை வடிவுடன் வந்து உண்டுவிட்டார்கள். இதனால் யஜுர் வேதத்திற்கு மட்டும் 'தைத்திரிய சம்ஹிதை' என்று பெயர் வழங்கலாயிற்று. யஜுர் வேதத்தை இழந்துவிட்ட யாக்ஞவல்கியர் சூரியனையே குருவாக வரித்துத் தவம் செய்தார். அதன் பயனாகச் சூரியன் தோன்றி, யாக்ஞவல்கிய ருக்கு யஜுர் வேதத்தைக் கற்றுத் தந்தார். சூரியனே கற்றுக் கொடுத்ததால் வைசம்பாயனருக்குக் கூடத் தெரியாத பல அர்த்தங்கள் யாக்ஞவல்கியருக்குத் தெரியலாயின.

## புராணங்கள் தோன்றிய கதை

*இந்த விஷ்ணு புராணத்தின் ஒரு பகுதியில் இந்தப் புராணமும், ஏனைய புராணங்களும் தோன்றிய வரிசை சொல்லப்படுகிறது. புராண சம்ஹிதை என்ற மூல நூலை வேதவியாசர் தம் மாணவனாகிய லோமஹர்ஷனருக்குக் கற்றுக் கொடுத்தார். லோமஹர்ஷனரிடம் பயின்ற சுமதி, அக்னிவர்சா, மைத்ரேயு, சவர்னி, அக்ரிதவர்னா, சம்சபயனா ஆகிய ஆறு சீடர்களும் தாங்கள் கற்றுக் கொண்ட புராண சம்ஹிதை யிலிருந்து ஒவ்வொரு புராணத்தை விரிவாகச் சொல்லினர். இந்த அடிப்படையில்தான் விஷ்ணு புராணமும் சொல்லப் பட்டது. பத்ம புராணத்தை அடுத்து வருகிற விஷ்ணு புராணம் விஷ்ணுவின் சிறப்புக்களை விரிவாக எடுத்துக் கூறுகிறது. இப்புராணத்தின்படி ஞானம் பதினான்கு வகைப்படும். இவை நான்கு வேதங்கள், ஆறு வேத அங்கங்கள், மீமாம்சை, நியாயம், புராணம், தர்ம சாத்திரம் ஆகியவை ஆகும். இந்த பதினான்கோடு, ஆயுர் வேதம், தனுர் வேதம், சங்கீதம், அர்த்த சாஸ்திரம் ஆகிய நான்கையும் சேர்த்துப் பேசுவதும் உண்டு. ரிஷிகளுள் பிரம்ம ரிஷிகள், தேவ ரிஷிகள், ராஜ ரிஷிகள் என்ற மூன்று வகையினர் உண்டு.*

## யமன் கதை

*உலகத்தில் இறந்தவர்களையெல்லாம் கொண்டு சென்று அவர்கள் செய்த குற்றங்களுக்கு ஏற்ப நரகத்தில் தள்ளி அக் குற்றங்களுக்குரிய தண்டனையை அவர்கள் அனுபவித்த பிறகு மறுபிறப்பை அவர்களுக்குக் கொடுப்பதுதான் யமனுடைய வேலை. இப்படிப்பட்ட நரக வேதனையை அனுபவிக்காமல் இருக்கவும், யமனிடம் போகாமல் இருக்கவும் ஏதேனும் வழி உண்டா என்று மைத்ரேயு பராசரரைக் கேட்க, தான் ஏற்கெனவே இதுபற்றிக் கேட்ட உரையாடலைப் பராசரர் கூறினார்.*

பாண்டவர்களுள் ஒருவராகிய நகுலன், தாத்தாவாகிய பீஷ்மரைப் பார்த்து இதே கேள்வியைக் கேட்கிறான். அதற்கு பதில் கூறவந்த பீஷ்மர் நகுலனைப் பார்த்து, 'கலிங்க நாட்டில் எனக்கொரு பிராமண நண்பர் இருந்தார். அந்த பிராமண னுக்கு ஒரு முனிவர் நண்பராக இருந்தார். அந்த முனிவர் இறந்த காலத்தையும், பழம் பிறப்பையும் அறியும் ஆற்றல் உள்ளவர். இந்த சக்திகளின் துணை கொண்டு யமனுக்கும், ஒரு யமதூதனுக்கும் நடந்த உரையாடலை அம்முனிவர் அறிந்திருந்தார். தாம் அறிந்ததை அம்முனிவர் என் பிராமண நண்பருக்குச் சொல்ல அதை அவர் எனக்குச் சொன்னார். அதை நான் இப்பொழுது உனக்குச் சொல்கிறேன். அந்த உரையாடல் விவரம் வருமாறு:

**யமன் :** விஷ்ணுபக்தர்கள் பக்கத்திலேயே நீ போகாதே. என்னைப் பொறுத்தவரை இந்த விஷ்ணு பக்தர்களைத் தவிர மீதமுள்ள அனைவருக்கும் நான்தான் தலைவன். உண்மையில் நான் சுதந்திரமானவன் அல்ல. நான் செய்யும் பணிகளை விஷ்ணுதான் மேற்பார்வை செய்கிறார். அது மட்டுமல்லாமல் என்னை தண்டிக்கும் உரிமையும் உடையவர் அவர். விஷ்ணுவின் கமலப் பாதங்களை வணங்கும் பக்தர்கள் பக்கம் செல்லாதே.

**எமதூதன் :** ஒருவன் எப்படி விஷ்ணு பக்தன் ஆவது?

**யமன் :** அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட வர்ணாஸ்ரம தர்மத்தை யார் மீறுவதில்லையோ, யாருடைய மனத்தில், அகங்காரம், பொறாமை முதலியவை இல்லையோ, யார் பகைவர் நண்பர் என்ற வேறுபாடு பாராட்டாமல் அனைவருடனும் சமத்துவமாக இருக்கிறார்களோ, யார் அகிம்சையைக் கடைப்பிடிக்கிறார்களோ, யார் கோபத்தை விட்டொழித்தார்களோ அவர்களே விஷ்ணு பக்தர்கள்

ஆவார்கள். ஓயாது விஷ்ணுவை தியானிப்பதால் அவர்கள் வனப்பு வாய்ந்த வடிவத்தைப் பெறுகின்றனர். இதயத்தில் விஷ்ணுவை வைத்துப் பூஜிப்பவர்கள் குற்றம் செய்வதே இல்லை. அத்தகைய பக்தர்கள் பக்கத்தில் செல்லாதே. அப்படிச் சென்றால் வலிமை பொருந்திய விஷ்ணுவின் சக்கரம் உன்னையும் என்னையும் பழி தீர்த்துவிடும்.

**நான்கு வர்ணங்கள்**

விஷ்ணு பக்தர்கள் என்பவர்கள் விஷ்ணுவால் நியமிக்கப் பட்ட வர்ணாசிரம தர்மங்களைத் தவறாமல் கடைப்பிடிப்பர். நான்கு வர்ணங்கள் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்பவை ஆகும். **பிராமணர்கள் கடமையாவன :** கற்றல், கற்பித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறும் ஆகும். **சத்ரியர்கள் கடமையாவன :** கற்றல், வேட்டல், வேட்பித்தல், ஈதல் இவற்றோடு தனுர் வேதம் அறிந்து நாட்டைக் காக்கப் போர் புரிதல். அரசனுடைய கடமை தீயவர்களை தண்டிப்பதும், நல்லவர்களைக் காப்பதும் ஆகும். வைசியர்கள் விவசாயம், ஆடுமாடு வளர்த்தல், வாணிபம் என்பவற்றுடன் கற்றல், யாகம் செய்தல், ஈதல் என்பவற்றைச் செய்ய வேண்டும். சூத்திரர்கள் கடமை ஏனைய மூவருக்கும் தொண்டு புரிதல் ஆகும். இவற்றையல்லாமல் சூத்திரர்கள் வாணிபம், கைத்தொழில் என்பவற்றிலும் ஈடுபடலாம். நால்வருக்கும் பொதுவான சில கடமைகளும் உண்டு. அவை யாவன: பிறரிடம் அன்பு பாராட்டல், தூய்மையோடு இருத்தல், கடினமாக உழைத்தல், சத்தியத்தைக் கடைப்பிடித்தல், நட்புப் பாராட்டல், துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுதல் ஆகியவை யாகும்.

இவற்றையல்லாமல் பிரம்மசரியம், கிரகஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம் என்ற நான்கு நிலைகளையும் ஒருவன்

மேற்கொள்ள வேண்டும். முதலாவது நிலை பிரம்மசரியம். பூணூல் அணிந்தவுடன் குருவை நாடிச் சென்று அவருடனேயே தங்கி, அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்தல், குரு உறங்கிய பின் உறங்கி, அவர் எழுமுன் எழுந்து காலைக் கடன்களை முடித்து மலர் தண்ணீர் முதலியவற்றைக் கொண்டு வரவேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் குருவை மறுத்துப் பேசவோ, எதிர்க்கவோ கூடாது. எல்லாச் சாத்திரங்களையும் கற்ற பிறகு குருதட்சணை கொடுத்துவிட்டு அவரது உத்தரவின்பேரில் கிரகஸ்தனாக ஆக வேண்டும். இதுவே இரண்டாவது நிலை. கிரகஸ்தனானவன் தக்க ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து மணம் புரிந்து இல்லறம் நடத்த வேண்டும். புதல்வரைப் பெறுதல், வேள்வி செய்தல், மேலும் கற்றல், விருந்தினர்களை உபசரித்தல் ஆகியவை இதன்பாற்படும். மற்ற நிலைகளைக் காட்டிலும் கிரகஸ்தனின் நிலையே உயர்ந்த தாகும். பிராமணர்களும், பிரம்மசாரிகளும் பிச்சை ஏற்பதை மேற்கொள்ளலாம். மூன்றாவது நிலை வானபிரஸ்தம். நிறைவான வாழ்க்கைக்குப் பிறகு ஒருவன் காட்டிற்குச் சென்று தவம் செய்யலாம். அவ்வாறு செல்லும்போது மனைவியை அழைத்துக் கொண்டோ அல்லது மகனின் பாதுகாப்பிலோ விட்டுச் செல்லலாம். வானப்பிரஸ்தர்கள் காய் கனி கிழங்குகளை உண்டு, முடியினை வெட்டாது இருத்தல் வேண்டும். தெய்வங்களை வழிபடுவதோடு தன்னை நாடி வரும் விருந்தினர்களுக்குத் தன்னிடம் இருப்பதைக் கொடுக்க வேண்டும். அவனுடைய தலையாய கடமை தியானம் செய்வதே யாகும். கடைசி நிலையாக வருவது சந்நியாச நிலையாகும். பந்த பாசங்களை விட்டுவிட்டு, நிலையில்லாத உலகப் பொருட் களின் மீதுள்ள ஆசையினையும் துறந்தவனே சந்நியாச நிலையினை ஏற்க முடியும். சந்நியாசியைப் பொறுத்தவரை எல்லா ஜீவன்களுமே ஒன்றுதான். அவற்றிற்கு எந்தத் தீங்கும்

செய்ய மாட்டான். தனிமையில் அமர்ந்து யோகத்தில் ஈடுபடுவதே அவன் கடமையாகும். அவன் ஓர் இரவுக்கு மேல் ஒரு கிராமத்திலும், ஐந்து நாட்களுக்கு மேல் ஒரு நகரத்திலும் தங்கக் கூடாது. சந்நியாசி நிலையில் உள்ளவன் பிச்சை எடுத்தே தன் உணவை உண்ண வேண்டும். ஆனால் ஒரு வீட்டில் பிச்சை எடுக்குமுன்பு, அவ்வீட்டில் உள்ளவர்கள் உண்டுவிட்டார்கள் என்பதை உறுதியாகத் தெரிந்து கொண்டே அவ்வீட்டில் பிச்சை எடுக்க வேண்டும்.

**சடங்குகள்**

ஒரு குழந்தை பிறந்த பொழுதும், ஒருவன் மரித்த பொழுதும் வெவ்வேறு வகையான சடங்குகள் செய்யப் படுகின்றன. குழந்தை பிறந்த பத்தாம் நாள் தந்தை குழந்தைக்குப் பெயர் சூட்டுகின்றான். திருமணங்கள் எட்டு வகைப்படும். அவை பிரம்மம், தெய்விய, அர்ஷ, பிரஜாபத்ய, அசுர, காந்தர்வ, ராட்சச, பைசாச என்பவை ஆகும். ஒவ்வொரு வர்ணத்திற்கும் குறிப்பிட்ட வகைத் திருமணங்கள் குறிக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு குடும்பத் தலைவனுக்கும் சில கடமைகள் வகுக்கப்பட்டுள்ளன. கடவுளை வணங்குதல், பசு, பிராமணர்கள், முனிவர்கள், வயது முதிர்ந்த ஆசிரியர்கள் ஆகியோரை வணங்க வேண்டும். திருடுதல், பொய் பேசுதல், பிறரை நோகச் செய்தல் ஆகியவற்றைச் செய்யக் கூடாது. பிறர் குற்றம் கூறக் கூடாது. பிறருடைய செல்வம் கண்டு பொறாமைப்படக் கூடாது. தீயவர் சேர்க்கை கூடாது. தீப்பிடித்த வீட்டிற்குள்ளோ, மரத்தின் உச்சிமீதோ நுழையவும், ஏறவும் கூடாது. வாய் பொத்திக் கொட்டாவி விட வேண்டும். கொடிகளையும், வணக்கத்திற்குரிய தெய்வங்களின் நிழல்களையும் மிதிக்கக் கூடாது. வீட்டிலும் காட்டிலும் தனித்து வாழக் கூடாது. கொடிய விலங்குகள் அருகே செல்லக்கூடாது.

வீட்டை விட்டுப் புறப்படுமுன் வீட்டின் தலைவன், தெய்வம், மலர், ஆபரணம், நெய் அல்லது மதிக்கத் தகுந்த ஒருவர் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பார்த்துவிட்டுப் புறப்பட வேண்டும். நாட்டிலும், காட்டிலும் நடக்கும் பொழுது கையில் ஒரு தடிக் கொம்புடனும், காலில் செருப்புடனும் நடக்க வேண்டும். ஒருவன் உண்மையே பேச வேண்டும். அந்த உண்மை பேசுவதால் பிறருக்குத் தீங்கு உண்டாகும் என்ற நிலை வந்தால் பேசாமல் இருக்க வேண்டும்.

மகன், மகள் ஆகியோர் திருமணம், புதுமனை புகுதல், குழந்தைகட்குப் பெயர் சூட்டல், முதன்முறையாகப் பிறந்த சிசுவைப் பார்த்தல் ஆகியவை நிகழும் பொழுது அவ்வவற்றிற்குரிய சடங்குகளைச் செய்ய வேண்டும். ஒருவர் இறந்த பொழுது ஒற்றைப் படை எண்ணுள்ள பிராமணர்களுக்குச் சாதாரண உணவு படைத்தால், பிதுர்கள் ஒரு மாதத்திற்கும் மீன் விருந்து கொடுத்தால், இரண்டு மாதத்திற்கும் முயல் கறி கொடுத்தால், மூன்று மாதத்திற்கும் பறவைக் கறி தந்தால், நான்கு மாதத்திற்கும் பன்றிக் கறி கொடுத்தால், ஐந்து மாதத்திற்கும் ஆட்டுக் கறி கொடுத்தால், ஆறு மாதத்திற்கும் மான் கறி கொடுத்தால், ஏழு மாதத்திற்கும் சிறப்பான மான் கறி தந்தால், எட்டு மாதத்திற்கும் கயல் இறைச்சி தந்தால், ஒன்பது மாதத்திற்கும் வெள்ளாட்டுக் குட்டி கறி கொடுத்தால், பத்து மாதத்திற்கும் மாட்டுக்கறி கொடுத்தால், பதினோரு மாதத்திற்கும் குறிப்பிட்ட பறவையின் இறைச்சி கொடுத்தால், கால முழுவதற்கும் திருப்தி அடைவார்கள். சிரார்த்தம் செய்வதற்குச் சிறந்த இடம் கைலை என்ற ஊரேயாகும்.

## ககுத்தனின் முன்னோர்

மனுவின் தும்மலில் பிறந்தவன் இட்சவாகு. இட்சவாகுவின் மகன் விருக்சி. விருக்சிக்கு மிகவும் தைரியம் வாய்ந்த

மகன் பிறந்தான். அவன் பெயர் பரஞ்செயன். ஒருமுறை தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் கடும் போர் நடந்தது. போரில் வெல்ல முடியாத தேவர்கள் விஷ்ணுவை வேண்டினர். அவர்களிடம் விஷ்ணு, தான் பரஞ்செயன் என்ற பெயரில் பூமியில் அவதரித்திருப்பதாகவும், அவ்வாறு அவதரித்த பரஞ்செயன் தலைமையில் தேவர்கள் அசுரர்களை வெல்ல முடியும் என்றும் கூறினார்.

அதனால் தேவர்கள் பரஞ்செயனிடம் வந்து தங்களுக்குத் தலைமை ஏற்றுப் போரிட வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அதற்குப் பரஞ்செயன் 'இந்திரனின் தோளில் ஏறித் தான் போரிட வேண்டும் என்றும், அதனை தேவர்கள் ஒப்புக் கொண்டால் அவர்களுக்குத் தான் தலைமை ஏற்றுப் போரிடத் தயார்' என்றும் கூறினான். உடனே இந்திரனும் காளை உருவெடுக்க, அதன்மீது அமர்ந்து அசுரர்களை வென்றான் பரஞ்செயன். தோள் என்ற பொருளுடையது 'ககுத்' என்ற சொல். தோளின்மீது அமர்ந்து போரிட்டதால், பரஞ்செயன் அன்று முதல் 'ககுத்தன்' என்று அழைக்கப் பட்டான்.

ககுத்தனின் வழியில் வந்தவன் யுவனசா என்ற அரசன். நீண்ட நாள் குழந்தைப் பேறு இல்லாமையால், அதற்கு வேண்டிய யாகம் செய்யுமாறு முனிவர்களிடம் கூறினான். சடங்குகள் நடு இரவில் முடிவு பெற்றதால், முனிவர்கள் புனித நீரினை இரவு முழுவதும் ஒரு பானையில் வைத்திருந்தனர். யுவனசாவின் மனைவிக்கு அந்தப் புனித நீரினைக் கொடுத்தால் பலம் வாய்ந்த மகன் பிறப்பான் என்று கருதிய முனிவர்கள், அதனைப் பத்திரமாக வைத்திருந்தனர். ஆனால் மிகவும் தாகம் எடுத்த காரணத்தினால், அப்பானையில் உள்ள நீர் புனித நீர் என்பதை அறியாத மன்னன் யுவனசா அதைக் குடித்து விட்டான். இதனால் ஒரு குழந்தை யுவனசாவின்

உடலில் புகுந்து மேலும் மேலும் பெரிதாக வளர்ந்தது. அக்குழந்தை இவ்வுலகில் ஜனனம் செய்யவேண்டிய வேளை யில் அம்மன்னனின் வலது பக்கத்தைப் பிளந்துகொண்டு இவ்வுலகிற்கு வந்தது. ஆனால் மன்னன் இதனால் இறக்க வில்லை. ஆயினும் அக்குழந்தைக்குத் தாய் யார் என்ற கேள்வி எழுந்தது. இச்சூழ்நிலையில் இந்திரனே அக் குழந்தைக்குத் தாயாக இருப்பதற்கு ஒப்புக் கொண்டான். அக்குழந்தை 'மாந்தாதா' என்று பெயர் பெற்றது. இந்திரன் வளர்த்ததால் அக்குழந்தை ஒரே நாளில் முழு வளர்ச்சி அடைந்தது. முழு உலகத்தையும் அவனே ஆட்சி செய்தான்.

மாந்தாதாவின் காலத்தில் 'சௌபரி' என்ற முனிவன் பன்னிரண்டு ஆண்டுகள் நீருக்கு அடியில் வாழ்ந்து வந்தான். நீரில் மீன்களின் அரசன் தன் குழந்தைகள், பேரக் குழந்தை களுடன் விளையாடுவதைப் பார்த்தான். உடனே தானும் திருமணம் செய்து கொண்டு குழந்தைகள், பேரக் குழந்தைகள் பெற வேண்டுமென விரும்பினான். மாந்தாதா அரசனுக்கு ஐம்பது பெண்கள் இருந்தனர். அவர்களில் ஒருவரைத் தனக்குத் திருமணம் செய்து வைக்கும்படி கேட்டான். ஆனால் வயது முதிர்ந்த தோற்றம் உடைய முனிவனுக்குத் தன் மகளை மணம் செய்து கொடுக்க விரும்பாத அரசன், காரணத்தைக் கூறினால் தன்னைச் சபித்து விடுவானோ என்று நினைத்தான். அதனால் அம்முனிவரிடம் தங்கள் குல வழக்கப்படி அவர்கள் தேர்ந்தெடுக்கும் மணமகனுக்கே மணமுடிப்பதாகக் கூறினார். ஆனால் அரசனின் எண்ணத்தைத் தெரிந்து கொண்ட முனிவன் ஒருமுறை அரசனது மகளைப் பார்க்க அனுமதி கொடுத்தால் அவர்களைப் பார்ப்பதாகவும், அவர்களில் யாரேனும் தன்னை விரும்பினால் ஏற்றுக் கொள்வதாகவும் கூறினான். அவர்கள் அனைவரும் மறுத்துவிட்டால் தான் சென்று விடுவதாகவும் கூறினான். இதற்கு அரசனும் ஒப்புக்

கொண்டான். மிகுந்த தவ வலிமையுடைய சௌபரி முனிவன், அரசனது பெண்களைப் பார்க்கச் செல்லுமுன் தன்னை மிகுந்த அழகுள்ள இளைஞனாக மாற்றிக் கொண்டான். அவ்வாறே ஒவ்வொரு பெண்ணையும் பார்த்து வர அவர்கள் அனைவரும் தனித்தனியே அவனை விரும்பினர். அவர்கள் அனைவரையும் மணந்து கொண்டு தன்னுடைய ஐம்பது மனைவிகளையும் தன் ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்ற முனிவன், விஸ்வகர்மாவை அழைத்து ஒவ்வொருவருக்கும் அழகிய மாளிகை அமைக்கச் சொன்னான். ஒவ்வொரு மாளிகையிலும் நீர் நிரம்பிய தடாகம் இருக்க வேண்டும் என்றும், அதில் தாமரை மலர் மற்றும், அன்னப் பறவைகள் இருக்க வேண்டும் என்றான். அதைப் போலவே விஸ்வகர்மா அமைத்துக் கொடுத்தான்.

ஒருநாள் மாந்தாதா அரசன் தன் பெண்களைக் காண வந்தான். அவர்களில் முதல் பெண் தான் மிகுந்த மகிழ்ச்சியுடன் இருப்பதாகவும், தன் கணவன் தன்னுடனேயே இருப்பதால் மற்ற சகோதரிகள் வருந்துவார்கள் என்றே தான் நினைப்பதாகவும் கூறினாள். மற்றொரு மகளிடம் அரசன் கேட்டபோது, அவளும் இதையே கூறினாள். சௌபரி முனிவன் தன் தவ வலிமையால் தன்னைப் போல ஐம்பது உருவங்களை உண்டாக்கி இருந்தான். அவனது தவ வலிமையைக் கண்ட அரசன் அவனை விழுந்து வணங்கினான்.

சில நாட்களுக்குப் பிறகு தன் மக்களிடம் மிகுந்த பாசம் கொண்டிருந்த 'சௌபரி' முனிவன், இந்தப் பாசம் தன்னுடைய தவத்திற்குப் பெரிதும் இடையூறாக இருப்பதை அறிந்து, இது மாயையின் காரணமாகவே ஏற்பட்டது என்று அறிந்து அன்று முதல் விஷ்ணுவை தியானிப்பதிலேயே தன் மீதமுள்ள நாட்களைக் கழித்தான்.

**சகர மன்னன் கதை**

மாந்தாதாவின் பரம்பரையில் வந்தவன் புருட்சா என்ற அரசன். அவன் காலத்தில் நாகலோகத்தில் வசிக்கும் நாகர்களின் மாணிக்கங்களைத் திருடுவதற்காக கந்தர்வர்கள் நாகலோகத்திற்குள் புகுந்து முற்றுகையிட்டனர். கந்தர்வர்களை எதிர்க்க முடியாத நாகர்கள் விஷ்ணுவை வேண்டிக் கொண்டனர். விஷ்ணு அவர்கள் முன் தோன்றி 'உலகை ஆளும் புருட்சாவை அழையுங்கள். அவருடைய உடம்பில் நான் புகுந்து கொண்டு கந்தர்வர்களை அழிக்கிறேன்' என்று கூறினார். நாகர்கள் நர்மதா என்ற பெண்ணை புருட்சாவிடம் அனுப்பினர். அவள் சென்று புருட்சாவை நாகலோகத்திற்கு அழைத்து வந்து விட்டாள். புருட்சாவின் உடலில் புகுந்து இருந்த விஷ்ணுவின் உதவியால் கந்தர்வர்கள் தோற்கடிக்கப் பட்டனர். புருட்சாவை அழைத்துக் கொண்டு வந்ததற்காக நாகர்கள் நர்மதாவிற்கு நன்றி பாராட்டினர். மேலும் அவளை காலை, மாலை வணங்குபவர்களை விஷம் தீண்டாது, பாம்புகளும் கடிக்காது என்ற வரத்தைப் பெற்றனர்.

அந்தப் பரம்பரையில் வந்தவன் பகு என்ற மன்னன். அவன் மைந்தன் சகரன் ஆவான். பெருவலி படைத்தவனாகிய சகரன் உலகம் முழுவதையும் ஆண்டு ஓர் அஸ்வமேத யாகம் செய்ய விரும்பினான். அவன் இரு மனைவிகளுள் ஒருத்திக்கு ஒரு மகனும், மற்றொருத்திக்கு அறுபதினாயிரம் மக்களும் பிறந்தனர். இவர்கள் அனைவருமே தீயவர்களாக இருந்தனர். இந்த நிலையில் அஸ்வமேத யாகத்தின் குதிரையைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பை சகர மன்னன் இப்பிள்ளைகளிடம் ஒப்படைத்தான். குதிரை இங்குமங்கும் அலைய, மக்கள் அதன் பின்னே சென்றனர். திடீரென்று குதிரை காணாமல் போய்விட, தேடிச் சென்ற பிள்ளைகள் கீழுலகிற்குக் குதிரை

சென்றதை அறிந்தனர். அவர்களும் கீழுலகம் செல்ல, குதிரை ஓரிடத்தில் மேய்ந்து கொண்டிருப்பதையும், அதனருகில் கபிலர் என்ற முனிவர் அமர்ந்திருப்பதையும் கண்டார்கள். அறிவு குறைந்த இப்பிள்ளைகள் முனிவர்தான் குதிரையைத் திருடினார் என்று நினைத்து அவர்மேல் ஆயுதங்களைப் பிரயோகித்தனர். முனிவரிடத்திலிருந்து புறப்பட்ட தீப்பிழம்பு பிள்ளைகள் அனைவரையும் எரித்துச் சாம்பலாக்கிவிட்டது. இதை அறிந்த சகரன், தன் மூத்த மனைவியின் மகனாகிய அசமஞ்சனின் பிள்ளையைக் கபில முனிவரிடம் அனுப்பினான். அமுஷ்மனன் என்ற அந்தப் பிள்ளை கபில முனிவரிடம் சென்று வணங்கி மிக்க வினயத்துடன் தன்னுடைய தந்தை, சிறிய தந்தைகள் ஆகிய அனைவரும் மோட்சத்திற்குச் செல்ல வழிசொல்லுமாறு வேண்டிக் கொண்டான். அவன்மேல் இரக்கம் கொண்ட கபிலர் உங்களுடைய பரம்பரையில் ஒரு மன்னன் வரப்போகிறான். அவன் பாகீரதி என்று சொல்லப்படும் கங்கையை தேவ லோகத்திலிருந்து பூமிக்குக் கொண்டு வருவான். இவர்கள் எரிந்த சாம்பலின் மேல் கங்கைத் தண்ணீர் பட்டவுடன் இவர்கள் அனைவரும் மோட்சம் போவார்கள் என்று கூறினார்.

பகீரதன் பரம்பரையில் வந்தவர்களே இராம, இலட்சுமண, பரத, சத்ருக்னன் ஆவர்.

**ஜனக மன்னனின் கதை**

இட்சுவாகுவின் மகனாகிய நிமி ஒரு யாகம் செய்தான். இது ஆயிரம் வருடங்கள் நடைபெற்றது. நிமி ஆயிரம் வருடங்கள் நடத்த வேண்டிய ஒரு யாகத்தைச் செய்ய விரும்பினான். அதற்கு வசிட்டனை ஆச்சார்யனாக வர வேண்டுமென்று கேட்டான். ஐந்நூறு வருடங்கள் நடைபெறும்

ஒரு யாகத்தை இந்திரன் செய்யப் போவதாகவும், அதற்குத் தலைவனாகத் தான் இருக்க வேண்டியிருப்பதால் அது முடிந்த பின்னர் நிமியின் யாகத்தை நடத்தலாம் என்றும் வசிட்டன் கூறினான். அதைக் கேட்டுக் கொண்டு பதில் ஒன்றும் சொல்லாமல் வந்த நிமி, ஐந்நூறு வருடங்கள் காத்திருக்க விரும்பாமல் தன் யாகத்தைத் தொடங்க விரும்பினான். கௌதம முனிவரைத் தலைவராக வைத்துக்கொண்டு மற்ற முனிவர்களையும் வைத்துக் கொண்டு நிமி யாகத்தை நடத்தி னான். இந்திரனுடைய யாகத்தை முடித்துக்கொண்டு நிமியின் யாகத்தைத் தொடங்கலாம் என்று வசிட்டன் நிமியிடம் வந்தான். கௌதமனைத் தலைவனாகக் கொண்டு நிமியின் யாகம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. தன்னைக் கேட்டு தான் சொல்லியபடி நடவாததால் நிமி தன்னை அவமானப்படுத்தி விட்டான் என்ற கோபத்தினால், வசிட்டன் நிமியின் பூதவுடல் இல்லாமல் போகட்டும் என்று சபித்தான். நிமியும் வசிட்டன் கோபம் நியாயமற்றது என்று நினைத்து வசிட்டனுடைய பூதவுடல் இல்லாமல் போகட்டும் என்று சபித்தான். இரண்டு பேரின் பூதவுடல்களும் இல்லாமல் போயின. ஆனால் வருணன் முதலிய தேவர்கள் தயவால் வசிட்டனுக்கு உடனே வேறொரு உடல் கிடைத்தது. நிமியின் உடலைத் தைலத்தில் போட்டு வைத்திருந்தார்கள். அவனுடைய யாகம் முடிந்தவுடன் முனிவர்கள் அவன் உடம்பில் மறுபடியும் அவன் உயிரைச் செலுத்த விரும்பினார்கள். ஆனால், அது தேவையில்லை என்று கூறிவிட்ட நிமி அதற்குப் பதிலாக ஒவ்வொருவருடைய கண் இமையிலும் தான் இருக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அவ்வாறே முனிவர்கள் தந்தார்கள். கண் புருவம் அடிக்கடி கண்ணை மூடுவதால் நிமியின் செயல் அதுவாதலால், 'நிமிஷம்' என்ற சொல்லும் பிறந்தது. நிமிக்குப் பிள்ளைகள் இல்லாததால் ராஜ்ஜியத்தை ஆள ஒருவரும் இல்லை. இதை அறிந்த முனிவர்கள் நிமியின்

உடலைப் பொடி செய்தார்கள். அந்தப் பொடியிலிருந்து தோன்றிய பிள்ளைக்கு ஜனகன் என்று பெயர் வந்தது. அவன் தந்தைக்கு உடம்பு இல்லாததால் ஜனகனுக்கு வைதேகன் என்ற பெயரும் வந்தது. ஜனகன் யாகம் செய்வதற்காகப் பூமியை உழுதான். உழுபடைச்சாலில் இருந்து ஒரு பெண் மகவு வெளி வந்தது. அப்பெண்ணே சீதையாவாள்.

**விசுவாமித்திரர், ஜமதக்கினி கதை**

ஜானுவின் மகனான கதி என்ற அரசனுக்குச் சத்தியவதி என்ற மகள் பிறந்தாள். ரிஷிகா என்ற முனிவன் சத்தியவதியை மணந்து கொள்ள விரும்பினான். ஒரு கிழட்டு முனிவனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்க விரும்பாத கதி அதை நேரிடையாகச் சொல்ல அஞ்சினான். எனவே உடம்பு முழுவதும் வெள்ளையும், கரிய நிறமுடைய காதுகளும் உடைய ஆயிரம் குதிரைகளைப் பரிசாகத் தந்தால் பெண்ணைக் கொடுப்பதாகக் கூறினான். முனிவனால் குதிரைகளைச் சேகரிக்க முடியாது என்ற எண்ணத்தில்தான் அரசன் இதைச் சொன்னான். ஆனால் முனிவன் வருணனை வேண்டி இந்த ஆயிரம் குதிரைகளையும் பெற்றுவிட்டான். குதிரைகளைக் கண்ட மன்னன் வேறு வழியில்லாமல் தன் மகளை முனிவன் ரிஷிகாவிற்கு மணம் செய்து கொடுத்தான்.

சத்தியவதி தனக்கு ஒரு மகன் பிறக்க வேண்டுமென்று முனிவனைக் கேட்டுக் கொண்டாள். முனிவர் ஒரு யாகம் செய்து அதில் கிடைத்த ஒரு கிண்ணம் பாயசத்தைச் சத்திய வதியிடம் தந்தார். அதைப் பார்த்துக் கொண்டிருந்த சத்திய வதியின் தாயார் தனக்கும் ஒரு ஆண் மகவு வேண்டும் என்று மருமகனிடம் வேண்டிக் கொண்டார். மறுபடியும் ஒரு கிண்ணம் பாயசத்தை வரவழைத்த முனிவர் இரண்டு கிண்ணங்களையும் சத்தியவதியிடம் கொடுத்து, இது உன்

தாய்க்கு, இது உனக்கு என்று கூறிவிட்டுக் காட்டுக்குள் சென்று விட்டார்.

அவர் சென்ற பிறகு சத்தியவதியின் தாய்க்கு ஒரு சந்தேகம் வந்துவிட்டது. யாருடைய பாயசம் சிறந்த புதல்வனைத் தரும் என்று ஐயம் கொண்டாள். உடனே மகளைப் பார்த்து, நானோ சத்திரியன் மனைவி. என் வயிற்றில் பிறக்கும் பிள்ளை இவ்வுலகத்தை ஆள வேண்டும். நீயோ பிராமணன் மனைவி. உன் பிள்ளை சாதுவாகத் தவம் செய்யவேண்டும். ஆகவே உன்னுடைய பாயசத்தை எனக்குக் கொடுத்துவிட்டு என்னுடைய பாயசத்தை நீ சாப்பிடு என்று கூறினாள். மகள் சத்தியவதியும் அதற்கு உடன்படவே பாயசக் கிண்ணங்கள் கை மாறின. காடு சென்ற முனிவன் திரும்பி வந்தவுடன் அவன் மனைவி சத்தியவதி நடந்தவற்றைக் கூறினாள். முனிவர் மிக்க வருத்தத்துடன் "சத்தியவதி! உன் தாயின் மனத்தில் தோன்றிய இந்த எண்ணம் என் மனத்தில் முதலிலேயே தோன்றிவிட்டது. ஆக சிறந்த சத்திரியனுக்குரிய இலக்கணங் களோடு ஓர் ஆண் மகவு பிறக்க வேண்டும் என்றுதான் உன் தாய்க்குப் பாயசத்தைத் தயாரித்தேன். துரதிருஷ்டவசமாக நிலைமை மாறிவிட்டது" என்று வருந்தினார். பாயசம் கை மாறியதால் சத்தியவதி வயிற்றில் ஜமதக்கினியும், அவள் தாய் வயிற்றில் விசுவாமித்திரனும் தோன்றினர். தன் மகனை விடத் தன் பேரனுடைய வழித் தோன்றல்கள் சிறந்த வீரர் களாக இருக்கவேண்டும் என்று அவள் தாய் விரும்பியதால், அவள் பேரனாகிய ஜமதக்கினியின் மகன் பரசுராமன் பிராமணனாகப் பிறந்தும் சத்ரியர்களையெல்லாம் ஒழிக்கும் வீரமுடையவனாக இருந்தான்.

### சயமந்தக மணியின் கதை

சத்தியபாமாவின் தந்தையாகிய சத்ராஜித் கடற்கரையில் இருந்துகொண்டு சூரியனைப் பிரார்த்தித்தான். ஆழ்ந்த அந்தப்

பிரார்த்தனைக்கு மகிழ்ந்த சூரியன் சத்ரஜித்தின் முன் தோன்றி னான். ஆனால் சத்ரஜித் கண்களைத் திறந்தவுடன் சூரிய னுடைய ஒளி அவன் கண்களை மூடச் செய்து விட்டது. அவன் சூரியனைப் பார்த்து, 'ஐயனே! உன் கழுத்தில் ஏதோ ஒளி பொருந்தியதாக நகை அணிந்திருக்கிறாய். அந்த ஒளி காரண மாக உன்னை நான் தரிசிக்க முடியவில்லை. உன்னை தரிசிக்கு மாறு எனக்கு அருள்புரிய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டான். உடனே சூரியன் தன் கழுத்தில் இருந்த சயமந்தக மணியைக் கழற்றிவிட்டார். இப்பொழுது சூரியனைக் கண் களால் கண்டு மகிழ்ந்த சத்ரஜித் அவரைத் துதித்தார். அவன் துதியில் மகிழ்ந்த சூரியன் 'உனக்கு என்ன வேண்டும்? கேள், தருகிறேன்!' என்றான். இந்த சயமந்தக மணியை எனக்குத் தரவேண்டும் என்று சத்ரஜித் கூறியவுடன் மறு வார்த்தை பேசாமல் கொடுத்துவிட்டார். அதை அணிந்து கொண்ட சத்ரஜித் துவாரகைக்குள் நுழைந்தான். அவன் மேனி முழுவதும் இந்த மணியின் காரணமாக மிகப்பெரிய ஒளி வீசிற்று. மக்கள் அவனை சூரியன் என்றே நினைத்து விட்டனர். வீட்டிற் கொண்டு சென்று சயமந்தக மணியை ஜாக்கிரதையாக ஒளித்து வைத்திருந்தான். அந்த மணி ஊருக்குள் வந்த காரணத்தினால் துவாரகையில் எவ்வித தீமையும் ஏற்படாமல் மகிழ்ச்சியான வாழ்க்கையை மக்கள் பெறும்படியான சூழ்நிலை உருவாயிற்று.

மன்னன் சத்ரஜித் தன்னிடம் இந்த மணி இருப்பதையும் தன் மருமகனாகிய கிருஷ்ணன் அதை உக்கிரசேனருக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று நினைப்பதை அறிந்து தன் சகோதரனாகிய பிரசேனனிடம் கொடுத்து பத்திரமாக வைக்கச் சொன்னான். அந்த மணியின் சிறப்பு என்ன வென்றால் நல்லவர்கள் கையில் இருந்தால் நாட்டுக்கும் நல்லதை உண்டாக்கி தினமும் ஒரு பொற்காசு தரும். சத்ரஜித்

நல்லவனாக இருந்ததால் அந்த மணி அவனுக்கும், நாட்டுக்கும் நல்லது செய்தது. மணியை வைத்திருந்த பிரசேனன் அதை அணிந்து கொண்டு வேட்டையாடச் சென்றிருந்தான். அவன் நல்லவனல்ல. ஆதலால் காட்டில் ஒரு சிங்கம் அவனைக் கொன்று விட்டது. சிங்கம் மணியை எடுத்துச் செல்ல வேண்டும் என்று முயன்றபோது, கரடிகளில் உயர்ந்தவனாகிய ஜாம்பவான் காட்டிற்கு வந்து சிங்கத்தைக் கொன்று மணியை எடுத்துச் சென்று தன் குழந்தையிடம் விளையாடக் கொடுத்தது.

காடு சென்ற பிரசேனன் நீண்ட நேரம் வராமையால் அவன் இறந்துவிட்டான் என்று முடிவு செய்து விட்டனர். கிருஷ்ணனுடைய எண்ணம் பலருக்கும் தெரியுமாதலால் அவன்தான் பிரசேனனைக் கொன்று மணியை எடுத்துக் கொண்டான் என்று பலரும் நினைத்தனர்.

இப்பிரச்சினைக்கு முடிவுகட்ட கிருஷ்ணன் தானே பிரசேனனைத் தேடிக் காட்டிற்குச் சென்றான். இறந்து கிடந்த பிரசேனன், சிங்கம் ஆகிய இரு உடல்களையும் பார்த்தான். நடந்ததை ஒருவாறு ஊகித்துக் கொண்ட கிருஷ்ணன் கால் தடங்கள் பற்றிச் சென்று ஜாம்பவான் இருப்பிடத்தை அடைந்தான். ஜாம்பவானின் குழந்தை மணியை வைத்து விளையாடிக் கொண்டிருந்தது. கிருஷ்ணனைக் கண்டு குழந்தை அலறவே, ஜாம்பவான் வந்தது. இருவருக்கும் பெரும் போர் நடந்தது. அப்போர் இருபத்தியோரு நாட்கள் நீடித்தது. கிருஷ்ணன் வராமையால் அவனைத் தேடி வந்த யாதவர்கள் ஜாம்பவான் வீடுவரை கிருஷ்ணன் சுவடு இருப்பதையும் அதன்பிறகு அது காணாமல் போனதையும் பார்த்தார்கள். இதற்குள் கிருஷ்ணன் சென்று ஒருவாரம் ஆகிவிட்டபடியால் அவன் இறந்துவிட்டான் என்று நினைத்து யாதவர்கள் பலரும் கூடி கிருஷ்ணனுக்கு சிரத்தி சடங்கு செய்தார்கள். சிரத்தையில் ஏற்படுகின்ற புண்ணியம் கிருஷ்ணனைச் சென்று

அடைந்ததால் அவன் மிக்க பலத்துடன் போர் செய்து ஜாம்பவானைத் தோற்கடித்தான். இறுதியில் தோல்வியை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்ட ஜாம்பவான் கிருஷ்ணன் வீரத்தை மெச்சித் தன் பெண் சாம்பவதியை அவனுக்கு மணம் செய்து கொடுத்து அந்த மணியையும் பரிசளித்தான். கிருஷ்ணன் தன் மனைவியோடு துவாரகைக்கு வந்தான்.

கிருஷ்ணனின் மீட்சியைக் கண்ட யாதவர்கள் பெரும் மகிழ்ச்சி அடைந்தனர். நடந்தவற்றை அறிந்த சத்ரஜித் கிருஷ்ணனை சந்தேகித்ததற்காக வருந்தினான். அதற்காகத் தன் மகள் சத்யபாமையை மணம் செய்து கொடுத்தான். சயமந்தக மணி மீண்டும் சத்ரஜித்தை அடைந்தது. சத்தியபாமையைத் தாங்கள் அடைய வேண்டும் என்று கருதி இருந்த அக்ருவர், கிருதவர்மா மற்றும் சடதன்வா ஆகியோர் கிருஷ்ணன் மேல் பொறாமையும் வெறுப்பும் கொண்டிருந்தனர்.

இந்த நிலையில் பாண்டவர்கள் வாரணாவதத்தில் அரக்கு மாளிகையில் எரிந்து போனார்கள் என்பதைக் கேள்விப்பட்டுக் கிருஷ்ணன் அங்கே சென்றான். கிருஷ்ணன் இல்லாத அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, சடதன்வா சத்ரஜித்தைக் கொன்று மணியைக் களவாடி விட்டான்.

தன் தகப்பன் கொல்லப்பட்டதை அறிந்த சத்தியபாமா கடுஞ்சினம் கொண்டு ஒரு ரதத்தில் ஏறி வாரணாவதம் சென்று கிருஷ்ணனிடம் நடந்தவற்றைக் கூறினாள். மீண்டுவந்த கிருஷ்ணன் தன் சகோதரன் பலராமனிடம் நடந்தவற்றைக் கூறி நாம் இருவரும் ஒன்று சேர்ந்து சடதன்வாவைக் கொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். இருவரும் சடதன்வாவை எதிர்த்தனர். இவர்கள் எதிர்ப்பை சமாளிக்க

முடியாத சடதன்வா அக்ருவரிடம் மணியைக் கொடுத்து வைத்திருக்கச் சொன்னான். தன்னிடம் மணி இருப்பதை யாரிடமும் சொல்லக் கூடாது என்று உறுதி பெற்றுக் கொண்ட அக்ருவர் மணியை வைத்துக் கொண்டான். சடதன்வா கிருஷ்ணனுக்கு அஞ்சி குதிரையில் ஏறி ஓடினான். கிருஷ்ணனும், பலராமனும் பின் தொடர்ந்தனர். காட்டின் எல்லையில் குதிரை இறந்து விடவே அவன் இறங்கி ஓடினான். காட்டிற்குள் ரதம் செல்லாது ஆதலால் பலராமனை ரதத்தோடு இருக்கச் சொல்லி கிருஷ்ணன் தான் மட்டும் ஓடினான். இறுதியில் சடதன்வாவைக் கண்டு அவன் தலையை சீவி விட்டான். அவன் உடல் முழுதும் தேடிப் பார்த்தும் மணி அங்கு இல்லை என்று கண்டு கொண்டான். பலராமனிடம் மீண்டுவந்த கிருஷ்ணன் நடந்தவற்றைக் கூறினான். கிருஷ்ணனின் வார்த்தைகளைக் கேட்ட பலராமன், 'உன் வார்த்தைகளை நம்பத் தயாராக இல்லை. இன்றிலிருந்து நீ யாரோ, நான் யாரோ! நீ உன் வழியில் செல், நான் என் வழியில் செல்கிறேன்' என்று கூறிவிட்டு விதேக நாட்டிற்குச் சென்று மன்னன் ஜனகனிடம் விருந்தினனாக இருந்தான். அங்கு வந்த துரியோதனன் பலராமனிடம் கதாயுதப்போர் முறையைக் கற்றுக் கொண்டான்.

துவாரகையிலிருந்த யாதவர்கள் பலர் கிருஷ்ணனிடம் மணியில்லை என்பதை அறிந்து கொண்டு பலராமனைச் சமாதானப்படுத்தி துவாரகைக்கு அழைத்து வந்தனர். இதனிடையில் தன்னிடம் மணி இருப்பதைக் கிருஷ்ணன் சந்தேகித்து தன்னைக் கொன்று விடுவான் என்று அஞ்சிய அக்ருவன் ஒன்றன் பின் ஒன்றாகப் பல யாகங்களைச் செய்தான். எத்தகைய பகைவர்களையும் யாகம் செய்யும் பொழுது கொல்லக் கூடாது என்பது தர்ம சாஸ்திரம். அக்ருவரிடம் மணி இருந்ததால் துவாரகை செழிப்பாக

இருந்தது. யாதவர்கள் தங்களுக்குள் செய்துகொண்ட சண்டை யால் ஒருசில யாதவர்கள் துவாரகையை விட்டு ஓடிவிட்டனர். அவர்களுடன் அக்ருவரும் ஓடிவிட்டான். மணி துவாரகையை விட்டுப் போய்விட்டதால் நாட்டில் கொடிய விலங்குகளும், பஞ்சமும் புகுந்து விட்டன. இதை அறிந்த யாதவர்கள் அக்ருவனைத் திரும்ப நாட்டிற்குள் அழைத்து வந்தனர். நாடு மறுபடியும் செழிப்படைந்தது. இதை அறிந்த கிருஷ்ணன் யாதவர்கள் பலரையும் தன் வீட்டிற்கு அழைத்து அக்ருவனைப் பார்த்துப் பின்வருமாறு பேசினான், "அக்ருவா! உன்னிடத்தில் மணி இருப்பதால் நீ இங்கு இருக்கும் வரை நாடு செழிப்பாக இருந்தது. எனக்கு அந்த மணி தேவையில்லை. நல்லவனாகிய உன்னிடம் இருப்பதுதான் நல்லது. இருந்தாலும் பலராமன் என்மீது சந்தேகப்படுகிறான். அவன் சந்தேகம் நீங்க மணியினை எடுத்து எல்லோரிடமும் காட்டு' என்றான். வேறு வழி யில்லாமல் அக்ருவரும் மணியைக் காட்டினான். மணியைப் பார்த்த பலராமன் அதைத் தான் எடுத்துக் கொள்ள வேண்டுமென விரும்பினான். தன் தந்தையாகிய சத்ரஜித் தான் அந்த மணிக்குச் சொந்தக்காரர் என்பதால் தனக்குரியது என்று கருதினாள் சத்யபாமா. விவகாரம் போகிற போக்கை அறிந்த கிருஷ்ணன் அதற்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்க விரும்பினான். எல்லோரையும் பார்த்து, "இந்த மணி நல்லவர்கள் கையில் இருந்தால் எல்லோருக்கும் நன்மை செய்யும். அல்லாதவர் கைக்குப் போனால் எல்லோருக்கும் கெடுதல் செய்யும். பதினாறாயிரம் பெண்களை மணந்த நான் நல்லவன் அல்லன். என் மனைவி சத்யபாமைக்கும் இந்தக் காரணம் பொருந்தும். நாள் முழுவதும் குடித்துக் கொண்டே இருக்கும் பலராமனும் நல்லவன் அல்ல. எனவே, இந்த மணி அக்ருவரிடம் இருப்பதே எல்லோருக்கும் நன்மை செய்யும். இதை அவனே வைத்துக் கொள்ளட்டும்" என்று கூறினான்.

## சந்தனுவின் கதை

குரு வம்சத்தில் வந்த பிரதிபாவின் மகனாகிய சந்தனு இரண்டாவது மகனாகப் பிறந்தும் முதல் மகனாகிய தேவபி காட்டிற்குச் சென்றுவிட்டதால் அரசுப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். சந்தனு கங்கையையும், சத்தியவதியையும் மணந்தார். கங்கையின் மகனாக பீஷ்மன் பிறந்தான். சத்திய வதியின் வயிற்றில் விசித்ர வீரியனும், சித்ராங்கதனும் பிறந்தனர். விசித்திர வீரியன் மரபில் திருதிராஷ்டனும், பாண்டுவும் தோன்றினர். திருதிராஷ்டன் புதல்வர் துரியோதனன் முதலிய நூறு பேர், பாண்டுவின் புத்திரர்கள் ஐவர். அவர்களே பஞ்ச பாண்டவர்கள்.

## கலியுகத்தின் தோற்றம்

விஷ்ணு புராணத்தின் நாலாம் பகுதி கலியுகத்தில் நடைபெறப் போகும் நிகழ்ச்சிகளை விரிவாகத் தெரிவிக்கிறது. பத்மாநந்தன் என்ற மன்னன் தோன்றி, சத்ரியர்கள் அனைவரையும் இரண்டாவது பரசுராமனைப் போல ஒழித்து விடப் போகிறான். அவனுக்கு 8 பிள்ளைகள் தோன்றுவார்கள். சத்ரியனுக்குப் பிறகு இவர்களே நூறு ஆண்டுக்காலம் ஆட்சி செய்வார்கள். ஆனால் கௌடில்யன் என்னும் பிராமணன் இவர்களைக் கொன்று விடுவான். அதன்பிறகு 'மௌரியர்கள்' எனப்படும் சூத்திரர்கள் ஆளுவர். சந்திரகுப்தனையே கௌடில்யன் அரசனாக நியமிப்பான். மௌரியர்கள் நூற்றி முப்பத்திஏழு ஆண்டுகளும், பிறகு வரும் அங்க அரசர்கள் நூற்றிப் பன்னிரண்டு ஆண்டுகளும், கன்வ அரசர்கள் நானூற்றி ஐம்பத்தி ஆறு ஆண்டுகளும் அரசாள்வர். அதன்பிறகு வேறு வேறு பரம்பரையினர் ஆள்வர்.

கலி மிகக் கொடுமையான யுகமாக இருக்கும். ஆட்சி செய்பவர்கள் போடும் வரிக் கொடுமை தாங்காமல் மக்கள்

மலைகளுக்குள் ஓடிவிடுவர். உண்ண உணவும் உடுக்க உடையும் இன்றி வருந்துவர். தர்மம் அழிக்கப்படும். மறுபடியும் விஷ்ணு கல்கி அவதாரம் எடுப்பார். இதன்பிறகு மறுபடியும் தருமம் நிலை நிறுத்தப்படும். கலியுகம் மூன்றுலட்சத்து அறுபது ஆண்டுகள் நீடிக்கும்.

தேவக அரசனின் மகளாகிய தேவகியை மணந்தார், வசுதேவர். இவர்களை ஏற்றிக் கொண்டு ரதத்தை செலுத்தினான் கம்ஸன். அப்பொழுது வானில் அசரீரி, 'முட்டாள் கம்ஸனே! யாரை நீ ரதத்தில் ஏற்றிச் செல்லு கிறாயோ அவளுடைய எட்டாவது மகனே உன்னைக் கொல்லுவான்' என்றது. இதைக்கேட்ட கம்ஸன் வாளை எடுத்து தேவகியைக் கொல்லப் போனான். உடனே வசுதேவர் அவனைத் தடுத்து அவளுக்குப் பிறக்கும் எல்லா குழந்தை களையும் அவனிடம் ஒப்படைப்பதாகக் கூறினார்.

சுமேரு மலையிலுள்ள தேவதைகளிடம் பிருத்வி ஆகிய பூமி சென்று தைத்தியர்களின் கொடுமை தாங்கவில்லை. முன்னொரு காலத்தில் விஷ்ணு 'கலாநேமி' என்ற அசுரனைக் கொன்றார். அந்தக் கொடியவன் இப்பொழுது உக்கிர சேனனின் மகனாகிய கம்ஸனாகப் பிறந்துள்ளான். கொடிய ஏனைய தைத்தியர்களாகிய அரிஷ்டா, தேனுகா, கேசி, நரகா, சுந்தா ஆகியவர்களோடு சேர்ந்து கம்ஸன் செய்யும் கொடுமைகள் பொறுக்கக் கூடியதாக இல்லை' என்று முறையிட்டது.

இவர்கள் கூறியதை உண்மை என்று பிரம்மாவும் கூறினான். எல்லா தேவதைகளும் சேர்ந்து வடக்கே உள்ள கடற்கரைக்குச் சென்று விஷ்ணுவை வேண்டிக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தனர். உலகத்தில் இப்படிப்பட்ட கொடுமைகள் நிகழ்ந்த பொழுதெல்லாம்

விஷ்ணுவே பல அவதாரங்கள் எடுத்து பூமியைக் காப்பாற்றி உள்ளார்.

பிரம்மன் முதலிய தேவர்களின் பிரார்த்தனையைக் கேட்ட விஷ்ணு அவர்கள் எதிரே வந்தார். தன் தலையிலிருந்து இரண்டு முடிகளை எடுத்துக் கீழே போட்டு, 'இரண்டும் பூமியில் தீங்கு செய்பவர்களை அழிக்கும். நானே தேவகியின் எட்டாவது மைந்தனாகப் பிறக்கப் போகிறேன் கவலை வேண்டாம்' என்று சொன்னார். அசரீரிக்கு பயந்த கம்ஸன் வசுதேவனையும், தேவகியையும் சிறைக்குள் அடைத்து வைத்தான். தேவகிக்குப் பிறந்த ஆறு ஆண் குழந்தைகளையும் வசுதேவன் வாக்குப்படி கம்ஸனிடம் ஒப்படைக்க அவன் அத்தனை குழந்தைகளையும் கொன்று தீர்த்தான். தேவகியின் ஏழாவது குழந்தை சங்கர்ஷன் என்ற பெயருடன் சிறையை விட்டு வெளியே சென்று மறைந்து, வசுதேவரின் இரண்டாவது மனைவியாகிய ரோகினியிடம் வளர்ந்து வந்தது. தேவகிக்குப் பிறந்த எட்டாவது குழந்தை வசுதேவரால் நந்தகோபன் வீட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டது. நந்தகோபன் வீட்டில் அவருடைய மனைவி யசோதை பெற்ற பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு அதற்குப் பதிலாக இந்த ஆண் குழந்தையை தேவகியிடம் விட்டுவிட்டு வசுதேவர் சிறைச் சாலைக்கு மீண்டார். விடியற்காலையில் குழந்தை பிறந்த சேதி அறிந்த கம்ஸன், இது பெண் குழந்தை என்று கூடப் பார்க்காமல் கொல்ல யத்தனிக்கையில் அக்குழந்தை ஆகாயத்தில் மறைந்து எட்டுக் கைகளுடைய காளிதேவியாக மாறி, 'முட்டாள் கம்சனே! போன ஜென்மத்தில் உன்னைக் கொன்ற அதே ஆள் இப்பொழுது பிறந்து விட்டான். அவன் தான் உன்னைக் கொல்லப் போகிறான்' என்று கூறிவிட்டு மறைந்தது. எட்டுக் குழந்தைகளும் பிறந்துவிட்ட காரணத்தால் தேவகியையும், வசுதேவரையும் கம்சன் விடுதலை செய்தான்.

தன்னுடைய தோழர்களை அழைத்து, 'என்னுடைய ஆற்றலில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. என்னுடன் போர் தொடுக்க முடியாமல் இந்திரன் ஓடிய ஓட்டத்தைப் பார்த்தீர்கள் அல்லவா? நான் யாருக்கும் அஞ்சப் போவதில்லை. இருந்தாலும் முன் ஜாக்கிரதையாக இப்பொழுது மதுராவில் பிறந்துள்ள எல்லா ஆண் குழந்தைகளையும் கொன்று விடுவோம்' என்று கூறினான். என்னுடைய குருவாகிய ஜராசந்தனைத் தவிர வேறு யாருக்கும் அஞ்சவும் மாட்டேன், வணக்கம் செய்யவும் மாட்டேன்' என்று கூறி மகிழ்ந்தான்.

### பாலகிருஷ்ணன் லீலைகள்

இதன் பிறகு பாலகிருஷ்ணனும் பலராமனும் கோகுலத்தில் வளர்ந்த வரலாறும், பூதனை என்ற அரக்கி கிருஷ்ணனுக்குப் பாலூட்ட முயன்று இறந்ததும், சகடம் உதைத்ததும், கன்றால் விளாங்கனி அடித்ததும் ஆகிய கிருஷ்ண லீலைகள் விஷ்ணு புராணத்தில் இந்தப் பகுதியில் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. யசோதை 'தாமு' என்று வடமொழியில் பெயர் கூறப்படும் கயிற்றினால் கண்ணனைக் கட்டிப் போட்டதால் 'தாமோதரன்' என்ற பெயர் கிருஷ்ணனுக்கு வழங்கலாயிற்று.

### காளிங்க நர்த்தனம்

காளிங்க நர்த்தனக் கதையை விஷ்ணு புராணம் வேறு வகையாகச் சொல்லிச் செல்கிறது. முன்னொரு காலத்தில் கருடனால் கொல்லப்பட்ட காளிங்கன் என்ற பாம்பு கடலை விட்டுவிட்டு யமுனையில் குடிபுகுந்தது. ஒரு பகுதியில் காளிங்கனும், அதன் குடும்பமும், உறவினர்களும் ஒரு மடுவில் வசித்ததால் யமுனையின் அப்பகுதி நீர் முற்றிலும் விஷமாக மாறிவிட்டது. இந்த நிலையில் கிருஷ்ணன் நீருக்குள் புகுந்தான். காளிங்கனும் மற்ற பாம்புகளும் கிருஷ்ணன் உடலைச் சுற்றிக் கொண்டு அவனைக் கடிக்கத் துவங்கின. நந்தன், யசோதா,

பலராமன் இதைப் பார்த்துக் கதறினர். எல்லோரும் துயரத்தின் எல்லையை அடைந்த பொழுது, பலராமன் 'கிருஷ்ணா! விளையாட்டு போதும், சீக்கிரம் அவற்றை அழித்துவிட்டு வா' என்றான். உடனே கிருஷ்ணன் எல்லாப் பாம்புகளையும் அழித்து, காளிங்கன் தலையில் ஏறி நடனமாடி அதன் உயிரைப் போக்கும் நிலைக்குக் கொண்டுவந்தான். காளிங்கனும், அவன் மனைவிமார்களும் வேண்டிக் கொண்டதால் கிருஷ்ணன் அவர்களை மன்னித்து, 'யமுனையில் இனி நீங்கள் தங்கக் கூடாது; கடலுக்கு ஓடிவிடுங்கள்!' என்று ஆணையிட்டு விடுதலை செய்தான். கிருஷ்ணன் பாம்பின் படத்தின்மேல் ஆடியதால் அந்தப் பாதத்தின் சின்னம் எல்லா நாகங்களின் படத்திலும் அமைந்து விட்டதால் அதைப் பார்த்த கருடன் அவற்றை ஒன்றும் செய்யாமல் விட்டு விட்டான்.

பாகவதம் முதலியவற்றில் கன்றுக்குட்டி வடிவில் கண்ணனைக் கொல்ல வந்த அசுரனை அக்கன்றின் காலைப் பிடித்து சுழற்றி விளாமரத்தின் மேல் எறிந்து விளாங்காய் களை உதிர்த்தான் என்று பேசப்படுகிறது. அந்தக் கதை விஷ்ணு புராணத்தில் சில மாற்றங்களுடன் தரப்பட்டுள்ளது. தேனுகா என்ற அசுரன் கழுதை வடிவு கொண்டு விளா மரங்களைக் காவல் செய்தான் என்ற வேறுபாட்டுடன் அதே கதை பேசப்படுகிறது.

கிருஷ்ணனும் பலராமனும் அவன் நண்பர்களும் ஓட்டப் பந்தயம் வைத்து விளையாடிக் கொண்டிருந்தனர். பந்தயத்தில் தோற்றவர் வென்றவரைத் தோளில் தூக்கிக் கொண்டு செல்ல வேண்டும் என்பது பந்தய ஏற்பாடு. பிரலம்பா என்ற அசுரன் கிருஷ்ணன், பலராமன் இருவரையும் கொல்ல வந்து ஆயர்பாடிச் சிறுவர்களைப் போல் அவர்களுடன் சேர்ந்து விளையாடினான். ஓட்டப்பந்தயத்தில் தோற்றதால் பலராமனை

முதுகில் தாங்கிக் கொண்டு ஓடப் புறப்பட்டான். திடீரென்று அசுர வடிவத்தைப் பெற்று மலைபோன்று ஒரு மேனியைப் பெற்றுக் கொண்டான். என்ன செய்வதென்று அறியாத பலராமனைப் பார்த்துக் கிருஷ்ணன், 'உன் சக்தியை உபயோகித்து அவனைக் கொன்று விடு' என்றான். கிருஷ்ணனின் அறிவுரைப்படி உள்ளங்கையை மடக்கி அவன் தலையில் குத்தி அவனைச் சாகடித்தான் பலராமன்.

இதற்கு அடுத்தபடியாக கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்த கதையை விஷ்ணு புராணம் பேசுகிறது. இப்பகுதியில் சில புதுமைகள் காணப்படுகின்றன. அவை வருமாறு: மழை ஓய்ந்த பிறகு கிருஷ்ணன் கோவர்த்தன கிரியை அதன் இருப்பிடத்தில் வைத்துவிட்டான். கிருஷ்ணனை வந்து வணங்கிய இந்திரன், "ஐயனே! கோக்களாகிய பசுக்களை ஏழு நாட்கள் நீ காத்தமையால் இன்றிலிருந்து 'கோவிந்தன்' என்ற பெயரும் உனக்கு ஏற்படுவதாகும். கிருஷ்ணா! என்னுடைய மகன் அர்ஜுனன் என்ற பெயரில் பூவுலகில் பிறந்துள்ளான். அவனைக் காக்க வேண்டியது உன் பொறுப்பாகும்" என்று கூற, கிருஷ்ணனும் அதை ஏற்றுக்கொண்டான்.

கிருஷ்ண லீலைகள் மேலும் பலவற்றைப் பற்றி விஷ்ணு புராணம் விரிவாகப் பேசுகிறது. அவற்றுள் சில வருமாறு: அரிஷ்டா என்ற அசுரன் மிகப் பெரிய பாய்ச்சலுடன் காளை வடிவு கொண்டு, கோகுலத்துள் புகுந்து பல அட்டூழியங்களை மிகச் செய்தான். மிக உயரமான அந்த எருதை அடக்க யாரும் முன்வரவில்லை. கிருஷ்ணன் கைகளைத் தட்டி அந்த எருதைத் தன்புறமாக வரவழைத்து அதன் கொம்பை உடைத்து, அதன் உடலையும் பிளந்தான். கேசி என்ற அசுரன் மிகப் பெரிய குதிரை வடிவம் கொண்டு விண்ணையும், மண்ணையும் சாடுகின்ற அளவில் கோகுலத்தில் புகுந்தான். கிருஷ்ணன் அவன் வாய்க்குள் கையைவிட்டு ஒவ்வொரு பல்லாக

உதிர்த்துக் கேசியை சாகடித்தான். அதனால் கிருஷ்ணனுக்குக் கேசவன் என்ற பெயர் வந்தது.

இவற்றையெல்லாம் அறிந்த கம்ஸன் சனுரா, முஷ்டிகா என்ற இரண்டு மல்லர்களைத் தயார் செய்து கிருஷ்ண, பலராமனைக் கொல்ல முடிவு செய்தான். அது வெளியில் தெரியாமல் இருக்க யாகம் செய்வதாக எல்லோருக்கும் சொல்லி, அக்ருவர் மூலம் கிருஷ்ண, பலராமன் இருவரையும் மதுராவிற்கு வரவழைத்தான். கிருஷ்ண, பலராமர்கள் இரண்டு மல்லர்களையும் சாகடித்ததோடு 'குவலயாபீடம்' என்ற கம்ஸனுடைய யானையின் கொம்புகளை உடைத்துக் கொன்று விட்டனர்.

மதுராவிற்குள் நுழைந்த பலராமனும் கிருஷ்ணனும் கம்ஸனின் சலவைத் தொழிலாளர்களைக் கொன்று அவரிடம் இருந்த சிறந்த உடைகளைப் பறித்து அணிந்து கொண்டனர். கம்ஸனுக்கு வாசனைச் சந்தனம் அளிக்கும் கூன் விழுந்த அழகிய பெண்ணின் கூனை நிமிர்த்தினர். மல்லர்களை முறியடித்த பின் கிருஷ்ணன் மேடை மீது ஏறிச் சென்று கம்ஸனின் முடியைப் பிடித்து உலுக்கி கையால் அவனைக் குத்திக் கொன்றுவிட்டான். இறந்த கம்ஸனின் உடம்பை அந்த விளையாட்டு அரங்கத்திலேயே புதைத்து விட்டனர். கம்ஸன் இறந்ததனால் அவனால் சிறை வைக்கப்பட்டிருந்த அவன் தந்தை உக்கிரசேனர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்.

கம்சவதம் முடிந்த பிறகு, பலராமனும் கிருஷ்ணனும் சாந்தீபன் என்ற முனிவரிடம் கல்வி கற்கச் சென்றனர். பல ஆண்டுகள் கற்க வேண்டியதை 64 நாட்களில் கற்றுக் கொண்ட அவர்கள் குருதட்சணையாக சாந்திபனுக்குப் பல காலத்திற்கு முன்னர் இறந்துபோன அவருடைய மகனை மீட்டுத் தந்தனர். இந்த மகனை மீட்க கடலின் அடியில் 'பஞ்சஜன்யன்' என்ற

அசுரனை வென்று, 'பாஞ்சஜன்யம்' என்ற சங்கைக் கண்ணன் பெற்றான்.

கம்ஸன் ஜராசந்தன் என்ற மன்னனுடைய அஸ்டி, பிரப்டி என்ற இருமகள்களையும் மணந்திருந்தான். மருமகன் கொல்லப் பட்டதை அறிந்திருந்த ஜராசந்தன் பெரும் படையோடு மதுராவை எதிர்த்தான். கிருஷ்ணனுக்குத் தேவருலகத்திலிருந்து இரண்டு தேர்களும், 'சார்ங்கம்' என்ற வில்லும், 'கௌமேதகி' என்ற ஓர் ஆயுதமும், எடுக்கக் குறையாத இரண்டு அம்பறாத் தூணிகளும் வந்து சேர்ந்தன. இவற்றை வைத்துக்கொண்டு சகோதரர்கள் இருவரும் ஜராசந்தனைத் தோற்கடித்தனர். இதேபோல ஜராசந்தன் 18 முறை படையெடுத்துப் பதினெட்டு முறைகள் தோற்றுப் போனான்.

'கார்கியா' என்ற பிராமணன் யாதவர்களால் மிகவும் அவமானப்படுத்தப்பட்டான். தென் கடற்கரைக்குச் சென்று 12 ஆண்டுகள் இரும்புத் தூள்களைத் தின்று தவம் புரிந்தான். தவத்தின் முடிவில் மகாதேவர் தோன்றி, 'என்ன வரம் வேண்டும்?' என்று கேட்க, யாதவர்களை வெல்ல ஒரு மகன் வேண்டும் என்றார். அப்படியே மகாதேவர் வரமளித்தார். கரிய நிறமுடைய ஒரு பலசாலியான பிள்ளை பிறந்தான். யவன அரசன் பிள்ளை இல்லாததால் இந்த பிராமணன் மகனைத் தன் மகனாக ஏற்றுக் கொண்டு 'காலயவனன்' என்ற பெயரும் தந்தான். இப்பிள்ளை பெரியவன் ஆனதும் நாரதனைப் பார்த்து மிக பலமுடைய அரசர் யார் யார் என்று வினவினான். அரசர்கள் பட்டியலை நாரதரிடம் தெரிந்து கொண்டு மதுராவை எதிர்க்கத் திட்டமிட்டான். இதை அறிந்த கிருஷ்ணன் காலயவனன் தந்தை பெற்ற வரத்தை அறிந் திருந்ததால் அவனை எதிர்ப்பது கஷ்டம் என்று அறிந்து கொண்டார். அதே நேரம் காலயவனன் போர் தொடுக்கும் பொழுது, ஜராசந்தனும் சேர்ந்து கொண்டால், பிரச்சனையைச்

சமாளிக்க முடியாது என்று கிருஷ்ணன் ஒரு தந்திரம் செய்தான். பல காலம் கோட்டைக்குள்ளிருந்தே போர் தொடுக்கக்கூடிய இடமாக சமுத்திரத்தின் நடுவே 'துவாரகை' என்னுமிடத்தை ஸ்தாபித்தான். அங்கே யாதவர்களை வைத்து விட்டுக் காலயவனனைச் சந்தித்தான். ஆனால் அவனைச் சட்டைசெய்யாமல் மேலே நடந்து சென்றதால் காலயவனனும் இவனைப் பின்தொடர்ந்தான். திடீரென்று ஓர் இருண்ட குகை எதிர்ப்பட கிருஷ்ணன் அதனுள் நுழைந்து விட்டான். உள்ளே தேவாசுர யுத்தத்தில் ஈடுபட்டு தேவர்களுக்கு உதவியாக அசுரர்களை வென்றுவிட்டு குகையில் உறங்கிக் கொண் டிருந்தான் முசுகுந்தன் என்ற மன்னன். கிருஷ்ணன் உள்ளே போனதைப் பார்த்த காலயவனன் குகைக்குள் நுழைந்தான். இருட்டில் ஒன்றும் தெரியாததால் உறங்கிக் கொண்டிருந்த முசுகுந்தனைக் கிருஷ்ணன் என்று நினைத்துக் காலால் எட்டி உதைத்தான். தூக்கத்தில் எழுப்பப்பட்ட முசுகுந்தன் மிக்க கோபம் கொண்டு கண்ணை விழித்தனன். கண்பார்வை பட்டவுடன் காலயவனன் எரிந்து சாம்பலானான். யுத்தத்தில் தங்களுக்கு உதவிய முசுகுந்தனுக்கு தேவர்கள் கொடுத்த வரமாகும் இது. உறக்கத்தில் இருந்து யார் அவனை எழுப்பு கிறார்களோ அவர்கள் எரிந்து சாம்பலாவார்கள் என்பது அவ்வரம்.

ஜராசந்தன் உறவினனாகிய பீஷ்மகா தன் மகள் ருக்மணியைச் சிசுபாலனுக்கு மணமுடிக்க விரும்பினான். திருமண ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது கிருஷ்ணன் ருக்மணியைத் தூக்கிச் சென்றுவிட்டார். போர் தொடுத்தவர்களையெல்லாம் பலராமன் வென்று விட்டான். ருக்மணியின் சகோதரனாகிய 'ருக்மி' கிருஷ்ணனை வெல்லாமல் நாடு திரும்புவதில்லை என்று வஞ்சினம் கூறிக் கிருஷ்ணனை எதிர்த்தான். தோற்றுவிட்டபடியால் தன்

நாட்டிற்குத் திரும்பாமல் வேறொரு நாட்டை ஸ்தாபித்து அங்கு வாழ்ந்து வந்தான். கிருஷ்ணனுக்கும், ருக்மணிக்கும் பிறந்த குழந்தை பிரத்யும்னனை, சம்பராசுரன் என்பவன் தூக்கிச் சென்று கடலில் எறிந்து விட்டான். அக்குழந்தை தப்பிச் சென்று பின் சம்பராசுரனைக் கொன்று விட்டது. பிறகு பிரத்யும்னன் ருக்மியின் பெண்ணை மணந்து கொண்டான். அந்த மண விழாவில் ருக்மியும் பலராமனும் சூதாடுகையில், வாய்ச் சண்டை முற்றிவிட பலராமன் ருக்மியையும், அவனுக்கு உதவியாக வந்த அரசர் பலரையும் கொன்று விட்டான்.

பிருத்வியின் மகனாகிய நரகாசுரன் 'பிரத்ஜோதிஷ்புரம்' என்ற தலைநகரில் இருந்து உலகை ஆண்டு வந்தான். மிக்க கொடியவனாகிய அவன் தேவமாதர், அசுரமாதர், மானிட மாதர் என்பவர்களில் பதினாறாயிரம் பெண்களைச் சிறையில் அடைத்து வைத்திருந்தான். ஒருமுறை இந்திரன் கிருஷ்ணனிடம் வந்து நரகாசுரன் கொடுமையைச் சொல்லி வருத்தப்பட்டான். உடனே கிருஷ்ணன் கருடனை நினைத்தார். கருடன் வணங்கி நின்றவுடன் சத்தியபாமாவும் கிருஷ்ணனும், பிரத்ஜோதிஷ் புரத்திற்குச் சென்றனர். மிகப் பெரும் போரை விளைத்து நரகாசுரனை வென்றனர்.

### பாரிஜாத மரம்

நரகாசுரனை வென்ற கிருஷ்ணன் இந்திரனுடைய நகரமாகிய அமராவதிக்கு சத்தியபாமாவுடன் சென்றார். தேவர்கள் வந்து கிருஷ்ணனை வழிபட்டனர். இந்திரன் தாயாகிய அதிதியிடம் இருந்து நரகாசுரன் பறித்துச் சென்ற காதணிகளைக் கிருஷ்ணன் அவளிடம் தந்தார். சத்திய பாமா, கிருஷ்ணன் இருவரையும் அவள் ஆசீர்வதித்தாள். அமராவதியில் இருந்த பாரிஜாத மரத்தைப் பார்த்து அதைத் துவாரகைக்குக் கொண்டு செல்ல விரும்பினார். உடனே

கண்ணன் மரத்தை வேரோடு பறித்து கருடன் முதுகில் வைத்து விட்டார். அந்த மரம் இந்திரன் மனைவியாகிய சச்சிக்குச் சொந்தமானது என்பதால் அவள் கடும் கோபமுற்றாள். கிருஷ்ணனும் சத்தியபாமாவும் வெறும் மனிதர்கள் என்று நினைத்த அவள், தேவர்களையும் இந்திரனையும் ஏவி கிருஷ்ணனுடன் போர் புரியச் செய்தாள். தேவர்கள், குபேரன், அக்னி, எமன், வருணன், மிருத்துக்கள், அஸ்வினிக்கள் ஆகிய அனைவரும் கண்ணனிடம் தோற்று ஓடினார்கள். இறுதியாக இந்திரன் வஜ்ராயுதத்தை எடுத்து விட்டான். கிருஷ்ணன் சக்கரத்தை ஏந்தியவுடன் தேவர்களே கலங்கினார்கள். இந்திரன் வஜ்ராயுதத்தை கிருஷ்ணன்மேல் ஏவினான். கிருஷ்ணன் சக்கரத்தை ஏவாமல் வஜ்ராயுதத்தை ஒரு கையால் பிடித்து விட்டான். உடனே இந்திரன் கிருஷ்ணன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். கிருஷ்ணன், வஜ்ராயுதத்தையும் பாரிஜாத மரத்தையும் திருப்பிக் கொடுத்தான். இந்திரன் வஜ்ராயுதத்தை மட்டும் வாங்கிக் கொண்டு 'இந்த மரம் துவாரகையிலேயே இருக்கட்டும். கிருஷ்ணன் இறந்த பிறகு அது தானே தேவலோகம் வந்துவிடும்' என்று சொன்னான்.

கிருஷ்ணனின் பதினாறு ஆயிரம் மனைவியர்க்கு ஓர் இலட்சத்து எண்பது ஆயிரம் மக்கள் தோன்றினர். அவருள் ருக்மணியின் மகனான பிரத்யும்னன் முக்கியமானவன். அவன் ருக்மியின் மகளை மணந்து அவனுக்கு அநிருத்தன் என்ற மகன் இருந்தான். இதனிடையில் மகாவலியின் மகனாகிய வனாசுரனுக்கு உஷா என்ற பெண் இருந்தாள். ஒருமுறை உஷா, மகாதேவனையும் பார்வதியையும் வணங்கி, எனக்கு எப்படிப்பட்ட கணவன் வருவான் என்று கேட்டாள். பார்வதி, வைகாசி மாதப் பௌர்ணமி அன்று உன் கனவில் ஒருவன் காட்சி அளிப்பான். அவனே உன் மணாளன் ஆவான்

என்றாள். அதுபோலவே உஷா கனவு கண்டாள். ஆனால் அவன் யாரென்று அறிந்து கொள்ள முடியவில்லை. அவளுடைய தோழி சித்ரலேகா தேவர்கள், அசுரர்கள் ஆகிய பலருடைய படங்களையும் அவரிடம் காட்டியபொழுது அவர்கள் யாரும் இல்லை. இப்படங்கள் அவள் கனவில் கண்டவன் இல்லை என்று அறிந்தவுடன், பூலோக வாசிகளில் மனிதர்களுள் அரசகுமாரர் படங்களைக் காட்டினாள். அநிருத்தன் படத்தைப் பார்த்து 'இவன் தான்' என்று கூறி விட்டாள். அநிருத்தன் யாரென்று அறிந்த தோழி, துவாரகை சென்று இரகசியமாக அநிருத்தனை அழைத்து வந்து உஷாவிடம் சேர்த்து விட்டாள். அநிருத்தன் வாணாசுர கோட்டைக்குள் நுழைந்தவுடன் கொடி இரண்டாக உடைந்து விட்டது. ஆயிரம் ஸ்க்களை உடைய வாணாசுரன் யாரிடமாவது போர் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்ட பொழுது, மகாதேவன், 'என்று உன்னுடைய கொடி இரண்டாக ஒடிகிறதோ அன்று உன் விருப்பப்படி சண்டை செய்யலாம்' என்று கூறியிருந்தார். இன்று அநிருத்தனுடன் வாணாசுரன் போர் தொடுத்தான். அநிருத்தன் துணையாக யாதவர்கள், பலராமன், கிருஷ்ணன் ஆகியோர் போர் செய்தனர். மகாதேவனும் கார்த்திகேயனும், வாணாசுரன் பக்கம் நின்று போர் செய்தனர். கிருஷ்ணன் சக்கரம் ஏவி வாணாசுரனின் ஆயிரம் கைகளை வெட்டி விட்டான். அவனைக் கொல்ல எத்தனிக்கையில், மகாதேவன் குறுக்கிட்டு அவனுக்கு உயிர்ப் பிச்சை தருமாறு கேட்டார். கிருஷ்ணனும் அதை ஒப்புக் கொண்டான். இறுதியாக உஷா, அநிருத்தன் இருவரும் துவாரகை சென்றனர்.

**சம்பாவின் திருமணம்**

கிருஷ்ணனின் மகன்களுள் ஒருவனாகிய சம்பா, துரியோதனன் மகளைக் களவாடி மணம் புரியச் சென்று

கௌரவர்களால் கைது செய்யப்பட்டான். இதை அறிந்த யாதவர்கள் கௌரவர்கள்மேல் போர் தொடுக்க விரும்பினர். அதைத் தடுத்து பலராமன் தான் தனியாகச் சென்று காரியத்தை முடித்து வருவதாகக் கூறிவிட்டு அஸ்தினாபுரத்து எல்லையை அடைந்தான். பலராமன் வருவதைக் கேள்வியுற்ற பீஷ்மர், கர்ணன், துரியோதனன் ஆகியோர் நகரத்திற்கு வெளியே வந்து அவனை வணங்கி வரவேற்றனர். உபசரணை முடிவில் பலராமன் 'சம்பாவை விடுவித்துத் தன்னுடன் அனுப்ப வேண்டும்' என்று யாதவர்கள் விரும்புவதாகக் கூறினான். இதைக் கேட்ட கௌரவர்கள் கடுங்கோபம் கொண்டனர். "யாதவர்கள் எங்களுக்குச் சமமானவர்கள் அல்லர். எங்கள் தரத்திற்கு மிகவும் கீழாக உள்ள அவர்கள் எங்களை இவ்வாறு கேட்பது 'வேலைக்காரன் தன் எஜமானை ஏவுவது' போல் இருக்கிறது. பலதேவா, நீ திரும்பிச் செல்லலாம்" என்று கோபத்தோடு கூறிவிட்டு, அவர்கள் நகருக்குள் போய்விட்டனர். அவர்கள் சென்றபிறகு நகர எல்லைக்குள் காலடி எடுத்து வைத்த பலராமன் தன் கலப்பையை பூமியில் ஊன்றி அழுத்தினான். அஸ்தினாபுரம் முழுவதையும் கங்கைக்குள் அமிழ்த்திவிட வேண்டும் என்பதே அவன் விருப்பம். நகரத்தின் ஒரு பகுதி சாய்ந்து கங்கையின் அருகில் போவதைக் கண்ட கௌரவர்கள், கலங்கிப் போய் ஓடி வந்து பலராமன் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். சம்பாவையும், அவன் மனைவியையும் பலராமனோடு அனுப்பி வைத்தனர்.

## விஷ்ணு புராணத்தின் முடிவுரை – யாதவர்கள் முடிவு

பிண்டாரகா என்ற க்ஷேத்திரத்தில் கண்வர், விஸ்வாமித்திரர், நாரதர் ஆகிய முனிவர்கள் தங்கி இருந்தனர். ஆணவம் படைத்த யாதவ இளைஞர்கள் சிலர், கிருஷ்ணனின்

மகனாகிய சம்பாவிற்குப் பெண் வேஷமிட்டு அம் முனிவரிடம் அழைத்துச் சென்றனர். அவர்களைப் பார்த்து 'முனிவர்களே! இப்பெண்ணுக்குப் பிறக்கப்போகும் குழந்தை ஆணா? பெண்ணா?' என்று கேட்டனர். முக்காலமும் உணர்ந்த முனிவர்கள் இத்திமிர் பிடித்த செய்கையைக் கண்டு, "இவள் பெண் அல்ல, ஆண்; இவனுடைய உடம்பில் இருந்து ஓர் இரும்பு உலக்கை தோன்றப் போகிறது. அந்த உலக்கை யாதவ சமுதாயத்தை அழிக்கப் போகிறது" என்று கூறினார். பயந்து போன இளைஞர்கள் அரசர் உக்கிரசேனரிடம் சென்று முறையிட்டனர். முனிவர்கள் சாபத்தை ஒன்றும் மீறமுடிய வில்லை. உரிய காலத்தில் சம்பாவின் உடலில் இருந்து ஓர் இரும்பு உலக்கை வெளியாயிற்று. அரசன் உக்கிரசேனன் அதைக் கண்டு பயந்து அந்த இரும்பு உலக்கையைப் பொடிப் பொடியாகத் தூள் செய்து சமுத்திரக் கரையில் தூவி விட்டான். முழுவதும் பொடியானாலும் ஒரு சிறு பகுதியைப் பொடி செய்யவே முடியவில்லை. அந்தச் சிறு துண்டைக் கடலுக்குள் வீசி எறிந்து விட்டான். கடற்கரையில் தூவப்பட்ட அச்சிறு துகள்கள் மிகக் கூர்மையான— வலிமையுடைய கோரைகளாக முளைத்தன. அக்கோரைகள் முளைத்த இடத்தில் 'பிரபஸ்சா' என்ற க்ஷேத்திரம் அமைந்திருந்தது. ஒருமுறை யாதவர்கள் அனைவரும் இந்த ஸ்தலத்தில் வழிபாட்டிற்காகக் கூடினர். இவர்களுள் ஒருவனான 'உத்தவர்' என்பவன் மட்டும் இக்கூட்டத்தில் கலந்து கொள்ளாமல் 'கந்தமாதனம்' என்ற மலையில் தவஞ்செய்யச் சென்று விட்டான். அவனைத் தவிர கூடியிருந்த யாதவர்கள் அனைவரும் அளவுக்கு மீறிக் குடித்துக் களித்தனர். எல்லை மீறிக் குடித்ததன் விளைவாக அறிவை இழந்து தங்களுக்குள் சண்டையிடத் தொடங்கினர். கைச்சண்டை முற்றி இரும்புப் பொடியில் இருந்து முளைத்த கோரையைப் பிடுங்கி ஒருவரை

ஒருவர் அடித்துக் கொண்டு இறந்துவிட்டனர். கிருஷ்ணனும், அவன் நண்பன் தாருகனும் எவ்வளவு முயன்றும் இச் சண்டையை நிறுத்த முடியவில்லை. இறுதியில் இவர்கள் இருவர், எங்கோ அமர்ந்திருந்த பலராமன் தவிர யாரும் மிஞ்சவில்லை. யாதவர்களின் மிகப் பெரும் பகுதி இவ்வாறு அழிந்துவிட்டது. இந்த நிலையில் கிருஷ்ணனும், தாருகனும் பலராமனைத் தேடிச் சென்றனர். பலராமன் பக்கத்தில் சென்றதும் ஓர் அதிசயக் காட்சி நடைபெற்றது. பலராமன் வாயில் இருந்து ஒரு மிகப் பெரிய பாம்பு வெளிப்பட்டுக் கடலுக்குள் சென்றது. தங்களுடைய முடிவை அறிந்து கொண்ட கிருஷ்ணன், தாருகனை அழைத்துப் பின்வருமாறு பேசினான்: "தாருகா! பலராமன் முடிந்தபிறகு என்னுடைய காலமும் நெருங்கி விட்டதை அறிகிறேன். நீ துவாரகைக்குச் சென்று மன்னர் உக்கிரசேனரிடம் நான் சொன்னதைச் சொல்வாயாக. இங்கு வந்த யாதவர்கள் அனைவரும் மடிந்து விட்டனர். இன்னும் சிறிது நேரத்தில் நானும் சென்று விடுவேன். நான் சென்ற பிறகு துவாரகையைக் கடல் பொங்கி எழுந்து மூடிவிடும். அதற்குள் ஓடிச்சென்று அருச்சுனனை அழைத்து வா. துவாரகையில் எஞ்சி இருக்கிற யாதவர்களைத் தன்னுடன் அழைத்துச் செல்லுமாறு அருச்சுனனுக்குச் சொல். உடனடியாக அவர்கள் துவாரகையைக் காலி செய்ய வேண்டும்" என்று கூறித் தாருகனை அனுப்பி வைத்தான். அதன்பிறகு கிருஷ்ணன் ஓய்வெடுத்துக் கொள்ள பலராமனின் பக்கத்தில் படுத்திருந்தான்.

மன்னர் உக்கிரசேனர் இரும்பு உலக்கையைப் பொடி செய்த பொழுது, பொடியாகாத ஒரு பகுதியைக் கடலில் தூக்கி எறிந்தார் அல்லவா? அதனை ஒரு மீன் உண்டது. அந்த மீனை ஒரு வேடன் பிடித்து அரியும்பொழுது அதில் இருந்து இரும்புத் துண்டை எடுத்து ஓர் அம்பாகத் தீட்டினான்

படுத்திருந்த கிருஷ்ணனின் பாதம் ஒரு மான் போல அந்த வேடனுக்குத் தெரியவே, தான் தீட்டி வைத்திருந்த அம்பை மான் என்று நினைத்து கிருஷ்ணன் பாதத்தில் ஏவி விட்டான். அதனால் கிருஷ்ணன் இறக்க நேரிட்டது. தான் எய்த அம்பு கிருஷ்ணனின் மேல் பாய்ந்து விட்டது என்று அறிந்த வேடன் கிருஷ்ணனிடம் மன்னிப்புக் கேட்டான். கிருஷ்ணன் அவனை மோட்சத்துக்கு அனுப்பிவிட்டான்.

துவாரகைக்கு வந்த அருச்சுனன் கிருஷ்ணன், பலராமன், யாதவர்கள் இறந்ததைக் கண்டு அவர்களுக்கு இறுதிக் கடன் செய்தான். உக்கிரசேனர், வசுதேவர், தேவகி, ரோகிணி முதலானோர் தீப்பாய்ந்து தங்கள் வாழ்நாளை முடித்துக் கொண்டனர். கிருஷ்ணன் வீட்டில் வளர்ந்த பாரிஜாத மரமும், சுதர்மா என்ற மண்டபமும் தேவலோகத்தைச் சென்று அடைந்து விட்டன. இந்த நிகழ்ச்சி நடந்து முடிந்தவுடன் கலி யுகம் பிறந்து விட்டது. கடல் கொந்தளித்து கிருஷ்ணனுடைய வீட்டைத் தவிர துவாரகை முழுவதையும் மூழ்கடித்து விட்டது. எஞ்சியவர்களை அழைத்துக்கொண்டு அருச்சுனன் புறப்பட்டுச் செல்கையில், கொள்ளைக்காரர்கள் இவர் களுடைய சொத்துக்களைக் கொள்ளை அடிப்பதற்காக வளைத்துக் கொண்டார்கள். அருச்சுனன் தன் வில்லை எடுத்தான். ஆனால் அம்பு எய்யும் சக்தியை இழந்துவிட்டதை அறிந்து கொண்டான். கிருஷ்ணன் போன பிறகு தன் பலம் முழுவதும் போய்விட்டது என்பதை அருச்சுனன் உணர்ந்தான்.

**கலியுகம்**

கலியுகம் பிறந்து விட்டதால் அது எவ்வாறு இருக்கும் என்று மைத்ரேயி கேட்க பராசர முனிவர் பதில் சொல்ல ஆரம்பித்தார். தர்ம சாத்திரங்களில் சொல்லப்பட்ட வர்ணாச்சிரம தர்மம் கலியுகத்தில் பின்பற்றப்பட மாட்டாது.

கடவுளை ஒருவரும் வழிபட மாட்டார்கள். குரு சிஷ்யர் களுக்கிடையே உள்ள உறவு முறிந்துவிடும். தடி எடுத்தவன் தண்டல்காரன் ஆவான். பெண்கள் கூந்தலை அழகு செய்வதிலேயே காலம் தள்ளுவர். பணம் பாதாளம் வரை பாயும். பணத்தைப் பிறர் பொருட்டுச் செலவு செய்யாமல், செல்வந்தர்கள் தன்னலத்திற்கே அதைப் பயன்படுத்துவார்கள். பணத்தை அறவழிகளில் சம்பாதிக்காமல் தீய வழிகளிலேயே சேர்ப்பார்கள். ஆண்கள் சாப்பிடுமுன் குளிக்கக்கூட மாட்டார்கள். ஆண்களும், பெண்களும் குட்டையாகி விடுவர். பெண்கள் கணவனுக்குப் பணிந்து நடக்க மாட்டார்கள். அரசர்கள் குடிமக்களைக் காப்பாற்ற மாட்டார்கள். அதற்கு பதிலாக வரி என்ற பெயரில் கொள்ளையடிப்பதையே தொழிலாகக் கொள்வர். இளமையிலேயே முதுமை அடைவர். யாரும் விஷ்ணுவை வணங்க மாட்டார்கள்.

சத்திய யுகத்தில் பத்து ஆண்டுகள் தவம் செய்து பெறும் பயனை— திரேதாயுகத்தில் ஓர் ஆண்டிலும், துவாபரயுகத்தில் ஒரு மாதத்திலும், கலியுகத்தில் ஒரு நாளிலும் தவம் செய்து அதே பலனை அடைய முடியும். இதுவே கலியின் சிறப்பு அம்சமாகும்.

**பிரளயங்கள்**

மூன்று வகையான பிரளயங்கள் உண்டு. முதலாவது பிரளயம், பிரம்மனுடைய ஒரு நாள் கழிந்தவுடன் நடைபெறுவ தாகும். இதற்கு நைமித்திக்க பிரளயம் என்று பெயர். இந்தப் பிரளயம் தொடங்குவதற்கு முன்னர் நூறு ஆண்டுகள் மழை என்பதே இல்லை. இப்பொழுது விஷ்ணு ருத்ர சொரூபம் எடுத்து ஆறு, கடல் எல்லாவற்றிலும் உள்ள நீரைக் குடித்து விடுவார். சூரியனுடைய ஏழுவகைப்பட்ட கிரணங்களும் தனித் தனியாக ஒரு சூரியன் போல் இருந்து நிலத்தைக் கொளுத்தும்.

இந்தச் சூரிய கிரணங்கள் இந்த பூலோகத்தை அல்லாமல், புவர், புவர், சுவர் ஆகிய மூன்று லோகத்தையும் கொளுத்தி விடும். இதன்பிறகு கரிய மேகங்கள் சூழ்ந்து நூறு வருடங்கள் வரை விடாது மழை பெய்யும். மறுபடியும் உலகம் தோற்றுவிக்கப்படும் வரை விஷ்ணு தண்ணீரின்மேல் மிதந்து உறங்கிக் கொண்டிருப்பார்.

இரண்டாவது பிரளயம், பிரகிருத பிரளயம் எனப்படும். தாமசம், ராஜசம், சத்துவம் ஆகிய மூன்று குணங்களும் தம்முள் அளவொத்து இருப்பது பிரகிருதி எனப்படும். பிரளய காலத்தில் பிரகிருதி பரமாத்மாவிடம் சென்று அடங்கி விடும். இதுதான் பிரகிருத பிரளயம் என்று சொல்லப்படும்.

மூன்றாவது பிரளயம், அத்யதிக பிரளயம் எனப்படும். ஆதி ஆத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்று சொல்லப்படும் மூன்று வகைத் துன்பங்களும் மறைந்துவிடும் சூழ்நிலை ஏற்படும். ஆதி ஆத்மிகம் என்பது உடம்பைப் பற்றிய நோய்களாகும். ஆதிதைவிகம் என்பது குளிர்ச்சி, சூடு என்பவற்றால் ஏற்படுவதாகும்; ஆதி பௌதிகம் என்பது பிற உயிர்களால் வரும் துன்பங்கள். அதி அந்திகா என்ற மூன்றாவது பிரளயத்தில் மேலே சொல்லப்பட்ட அனைத்தும் போய்விடும்.

விஷ்ணு புராணத்தின் இறுதிப் பகுதி புராணம் யாரிடம் தோன்றி, யார் யார் மூலமாக யார் யாருக்குக் கிடைத்தது என்று ஒரு பெரிய பட்டியல் போட்டுக் காட்டி, பிரம்மனிடத்தில் தொடங்கி மைத்ரேய முனிவர் வரை வந்த வரலாற்றைச் சொல்கிறது.

(விஷ்ணு புராணத்தில் காணப்பெறும் மிக முக்கியமான செய்தி ஒன்று இங்கே குறிக்கப்பட வேண்டும். மற்ற புராணங்கள் நான்கு வர்ணத்தைப் பற்றிப் பேசி, சூத்திரர்கள்

தாழ்ந்த பிறப்பினர் என்றும், பெண்கள் ஒருவருடைய ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறார்கள் என்றும் கூறிச் செல்கின்றன. இதன் எதிராக விஷ்ணு புராணம் இதுபற்றிக் கூறும் அரிய செய்தியினைக் கீழே தந்துள்ளோம்).

ஒருநாள் பல முனிவர்கள் கூடி பகவான் வேத வியாசரைச் சந்திக்க வந்தார்கள். அவர்கள் வருகின்ற நேரத்தில் வேதவியாசர் கங்கையில் குளித்துக் கொண்டிருந்தார். தம்மிடம் சில முக்கியமான செய்திகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வருகிறார்கள் என்பதைத் தம் ஞான திருஷ்டியால் அறிந்த வேதவியாசர் அவர்கள் காதில் விழும்படியாக மிக உரத்த குரலில், "சூத்திரர்கள் உயர்ந்தவர்கள்; பெண்கள் உயர்ந்தவர்கள்; கலியுகம் மிக உயர்ந்தது" எனக் கூறினார். அவர் குளித்துக் கரைக்கு வந்தவுடன் அவர் கூற்றைக் கேட்டுக் குழப்பமடைந்த முனிவர்கள், "நாங்கள் இதுவரையில் கேள்விப்பட்டது வேறாக உள்ளதே. கலியுகம் மிக மோசமானது, சூத்திரர்கள் தாழ்ந்த பிறப்பினர் என்றெல்லாம் கேள்விப் பட்டிருந்தோம். எங்கள் சந்தேகங்களைப் போக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர்.

வியாசர் சொல்ல ஆரம்பித்தார்: "சத்திய யுகம் முதலிய வற்றில் எல்லாரும் நேர்மை உடையவர்களாகவும், அந்தந்த வர்ணத்திற்குக் குறிக்கப்பட்ட ஒழுக்கங்களைப் பின்பற்றுப வர்களாகவும் இருந்தார்கள். கலியுகத்தில் இந்த ஒழுங்கு முறைகளைப் பின்பற்றி நடப்பது முதல் மூன்று வர்ணத்தாருக்கும் மிகக் கடினமாக உள்ளது. ஆடம்பரம், செல்வச் செருக்கு, அதிகாரம் என்பவற்றில் சிக்கிய மூன்று வர்ணத்தாரும் இத்தனையையும் மீறித் தம் வர்ணத்திற்கு வகுக்கப்பட்ட வழிகளில் செல்வது ஏறத்தாழ முடியாத காரியம். ஆனால் சூத்திரர்களைப் பொறுத்தமட்டில் அவர்களுக்கு என்று தனியாக எந்தக் கடமையும் விதிக்கப்படவில்லை. ஆகவே

அவர்கள் தாங்கள் செய்யும் வேளாண்மை முதலிய தொழில் களில் முழு ஈடுபாட்டோடு பணிபுரிந்து பிறருக்கு உபகாரமான வாழ்க்கையையும், எளிமை நிறைந்த வாழ்க்கையையும் கைக் கொள்கிறார்கள். இவ்வாறு செய்வதால் கடமையிலிருந்து தவறிய முதல் மூன்று வர்ணத்தாரைவிட இவர்கள் உயர்ந்து விடுகிறார்கள். இதனால் சூத்திரர்கள் உயர்ந்தவர்கள் என்று கூறினேன். பெண்களைப் பொறுத்தமட்டில் அவர்களுக் கென்று தனியாக எதையும் செய்ய வேண்டியதில்லை. அவர்கள் கணவன்மார்களுக்கும், குடும்பத்திற்கும் வேண்டியதைத் தன்னலம் இல்லாமல் அன்போடு செய்வதால் ஏனையோரைவிட அவர்கள் உயர்ந்து விடுகிறார்கள். அனைவரும் செம்மையாக நடந்து கொள்ளும் மற்ற யுகங்களில் தனிப்பட்ட ஒருவர் செம்மையாக நடந்து கொள்கிறார் என்று கூறுவதால், தனிச் சிறப்பு ஒன்றும் ஏற்படுவதில்லை. ஆனால் பலரும் கடமை மறந்து செல்வச் செருக்கில் ஈடுபட்டு, பிறருடைய நன்மையைக் கருதாமல் வாழுகின்ற இந்தக் கலியுகத்தில், ஒருசிலர் பண்புடையவர்களாக வாழ்வதால் அவர்கள் தனியே சிறப்பிக்கப்படுகிறார்கள். அதனால்தான் கலியுகம் சிறந்தது என்று கூறினேன்.”



# 4. வாயு புராணம் (சிவ புராணம்)

## இப்புராணம் பற்றி...

*வாயு புராணம், சிவ புராணம் என்றும் கூறப்பெறும். மிகப் பழைமையான புராணங்களில் இதுவும் ஒன்று. இதில் 24,000 பாடல்கள் உள்ளன என்று ஸ்கந்த புராணம் கூறுகிறது. பதினெட்டு மகா புராணங்களில் இதுவும் ஒன்று. இந்தப் புராணமும் நட்சத்திரங்களை எண்ணுவதில் கிருத்திகையில் ஆரம்பித்து, பரணியில் முடிகிறது. கி.மு. 550இல் இருந்த கார்காவின் காலத்திலிருந்து, அஸ்வினியை முதலாக வைத்து எண்ணும் பழக்கம் ஏற்பட்டதால், இப்புராணம் அதற்கு முற்பட்டது என நினைக்க இடமுண்டு. புராணங் களுக்குரிய ஐந்து பொருள்களைப் பற்றி இதுவும் பேசுகிறது.*

*இப்புராணத்தில் காணப்படுகின்ற பல பாடல்கள் மார்க்கண்டேய புராணத்திலும் காணப்படுகின்றன. ஸ்காந்தம் இதில் 24,000 பாடல்கள் உள்ளன என்று கூறினாலும், இப்பொழுது நமக்குக் கிடைக்கும் வாயு புராணத்தில் 12,000 பாடல்களே உள்ளன. இது நான்கு பெரும் பாகங்களையும், 112 அதிகாரங்களையும் கொண்டது.*

*பாசுபத யோகம் பற்றியும் இப்புராணம் பேசுகிறது. இப்புராணத்தில், விஷ்ணுவாகிய தானும், பிரம்மனும் தெய்வங்கள் என்றாலும் சிவனே இருவருக்கும் மேலான தெய்வம் என்றும், அச் சிவனே எல்லாவற்றிற்கும் மூலமாக உள்ளார் என்றும், விஷ்ணுவாகிய தானும், பிரம்மனும் சிவனிடத்தில் இருந்தே தோன்றினர் என்றும் விஷ்ணு பிரம்மனுக்குக் கூறுவதாக இப்புராணம் கூறுகிறது. மனித குலத்தின் நன்மைக்காகவே சிவன் உள்ளார் என்றும், சிவன் என்ற பெயருக்கு மங்களம், நன்மை செய்பவர் என்ற பொருளுண்டு என்றும் இப்புராணம் பேசுகிறது.*

**நை**மிசாரண்ய வனத்தில் கூடியிருந்த முனிவர்கள் லோம ஹர்ஷனரைச் சந்தித்து, "முனிவரே! வேதவியாசரிடத்தில் நேரிடையாக புராணங்களைக் கற்கும் பாக்கியம் பெற்றவர் நீங்கள். இதுவரை தாங்கள் பலவற்றைச் சொல்லியும், மேலும் தெரிந்து கொள்ள வேண்டிய ஆசையும், பலவற்றைத் தெரிந்து கொள்ளவில்லையே என்ற எண்ணமும் எங்களை வாட்டு கிறது. சிவனைப் பற்றி எங்களுக்கு ஒன்றும் தெரியவில்லை" என்று அவர்கள் கேட்டவுடன், லோமஹர்ஷனர் 'எனக்குத் தெரிந்த அனைத்தையும், ஒன்றையும் மறைக்காமல் உங்களுக்குச் சொல்லப் போகிறேன்' என்று சொல்லிவிட்டுப் பின்வருமாறு பேசத் துவங்கினார். வெகு காலத்திற்கு முன்னர் பிரம்மனின் புத்திரனாகிய நாரதர் தம் தந்தையைப் பார்த்து, சிவ பெருமானைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கூறினார். பிரம்மன், நாரதருக்குக் கூறியதை இப்பொழுது அப்படியே உங்களுக்குக் கூறுகிறேன்.

பிரபஞ்சத் தோற்றத்தின்போது எங்கும் நீரே நிறைந் திருந்தது. அதில் விஷ்ணு படுத்துறங்கிக் கொண்டிருந்தார். அவர் தொப்புளில் இருந்து பொன்னிறத்துடன் ஜொலிக்கும்

*தாமரைத் தண்டு ஒன்று மிக உயர்ந்து நின்றது. ஆயிரக் கணக்கான இதழ்களை உடைய அத் தாமரையில் பிரம்மன் இருந்தான். அந்த பிரம்மன் தான் யார், எங்கிருக்கிறோம், ஏன் இங்கு இருக்கிறோம் என்ற சந்தேகங்களுடன் சுற்று முற்றும் பார்த்து ஆராயத் தொடங்கினான். மெதுவாக அத் தாமரைத் தண்டைப் பிடித்துக் கீழே இறங்கிய பிரம்மன் அதைச் சுற்றி நூறு ஆண்டுகள் தேடினான். தாமரைத் தண்டின் தொடக்கத்தைக் காணமுடியவில்லை. இப்பொழுது தான் பிறந்த தாமரைப் பூவில் தான் பிறந்த நடுப்பகுதியைத் தேட முயன்றான். நூறு ஆண்டுகள் தேடியும் தான் புறப்பட்ட இடத்தை அடைய முடியவில்லை. களைத்துப் போன பிரம்மன் ஒரு இடத்தில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டான். அப்பொழுது "பிரம்மனே! தவம் செய்" என்று ஒரு குரல் கேட்டது. யார் அக்குரலுக்குரியவர் என்று தெரியாவிட்டாலும் பிரம்மன் 12 ஆண்டுகள் தவம் செய்தான். தவம் முடிந்தவுடன் விஷ்ணு எதிரே நின்றார். விஷ்ணுவைப் பார்த்த பிரம்மன் 'நீ யார்?' என்று கேட்டான். உடனே விஷ்ணு "என் கைகளைப் பார். சங்கு, சக்கரம், கதாயுதம், தாமரை ஆகியவற்றை நான்கு கைகளிலும் ஏந்திக் கொண்டிருக்கும் என்னைத் தெரிய வில்லையா? நான்தான் விஷ்ணு. என்னுடைய உடம்பிலிருந்து தான் நீ தோன்றினாய்" என்றார். அந்த வார்த்தைகளை நம்பாத பிரம்மன் விஷ்ணுவுடன் சண்டை போடத் துவங்கினான்.*

## இலிங்கத் தோற்றம்

*பிரம்மனும் விஷ்ணுவும் தம்முள் சண்டையிட்டுக் கொண்டிருக்கும் பொழுது ஜோதி வடிவமான லிங்கம் ஒன்று வந்து நின்றது. பிரம்மனும் விஷ்ணுவும் தங்கள் சண்டையை நிறுத்திக் கொண்டு, இடையே வந்தது யார் என்று நினைத்தனர். அந்த ஜோதி ஸ்வரூபம் கண்ணுக்கெட்டிய தூரம் உயர்ந்தும்,*

மிகக் கீழே சென்றும் காட்சி அளித்தது. அதைப் பார்த்த விஷ்ணு, 'பிரம்மனே! நம்முடைய சண்டையை நிறுத்திக் கொள்வோம். இந்த வடிவத்தின் ஆதியையும், அந்தத்தையும் நாம் காணவேண்டும். நான் காட்டுப் பன்றி வடிவெடுத்து இதன் அடியைக் காண விரும்புகிறேன். நீ அன்னப் பறவை வடிவெடுத்து, இதன் முடி எங்கிருக்கிறதென்று பார்த்து வா' என்று கூறினார். விஷ்ணுவின் யோசனையைக் கேட்ட பிரம்மன் உடனே அன்னப் பறவையாக மாறி மேலே மேலே பறந்து சென்றான். விஷ்ணு, ஆண்பன்றி வடிவாகி பூமியைத் துள்ளத்துக் கொண்டு கீழே சென்றார். 4,000 ஆண்டுகள் அவர்கள் இருவரும் தேடும் பணியில் ஈடுபட்டும் லிங்கத்தின் அடி முடியைத் தேட முடியவில்லை. பிறகு இருவரும் பழைய இடத்திற்கு வந்து சிவனைத் துதித்தனர். அப்பொழுது 5 முகங்களும், 10 கைகளும் கொண்ட லிங்க வடிவில் பரமேஸ்வரன் தோன்றினார். இவர்களைப் பார்த்து, "பிரம்மனே, விஷ்ணுவே, நீங்கள் இருவரும் என்னில் ஒவ்வொரு பகுதியாவீர்கள். நாம் மூவரும் ஒன்றுதான். பிரம்மனாகிய உனக்குப் படைக்கும் தொழில், விஷ்ணுவாகிய உனக்குக் காக்கும் தொழில் கொடுக்கப்பட்டுள்ளது. சிவனாகிய நான் அனைத்தையும் அழிக்கும் தொழில் செய்கிறேன். என்னிடத்திலிருந்து 'ருத்ரன்' என்பவன் தோன்றுவான். அவனும் நானும் ஒன்றுதான். அவன் இந்த அழித்தல் தொழிலைச் செய்வான். நாம் அனைவரும் ஒன்றுதான் என்பதையும், ஒரு பணியைச் சேர்ந்து செய்கிறோம் என்பதையும் அறிந்து கொள்ளல் வேண்டும்" என்றார்.

### பிரபஞ்சத் தோற்றம்

எங்கும் நிரம்பி இருந்த நீரில் விஷ்ணு ஒரு மிகப் பெரிய முட்டையை உண்டாக்கினார். பிறகு விஷ்ணு மிகப் பெரிய

வடிவெடுத்து அந்த முட்டைக்குள் சென்று அமர்ந்து கொண்டார். இதனிடையே பிரம்மன் தியானத்தின் மூலமாகவே கர்தமன், தட்சன், மரீச்சி ஆகிய முனிவர்களை உண்டாக்கினான். மரீச்சியின் பிள்ளை காசிபன் தட்சனின் 60 பெண்களுள் 13 பேரை மணந்து கொண்டான். காசிபனின் பிள்ளைகளும், தட்சனின் மற்றப் பெண்களும், ஆதித்தர் களாகவும், தைத்தியர்களாகவும், தானவர்களாகவும், மரங் களாகவும், பறவைகளாகவும், பாம்புகளாகவும் ஆயினர்.

ருத்ரன் என்ற பெயரில் சிவனே பிரம்மாவினின்று தோன்றினான். இந்த ருத்ரன் தட்சனின் மகளாகிய சதியைத் திருமணம் செய்து கொண்டான். ஆனால் ருத்ரனும் தட்சனும் ஒருவரையொருவர் வெறுத்தனர். ருத்ரனைத் தள்ளி வைத்து விட்டு தட்சன் யாகம் ஒன்று ஏற்பாடு செய்தான். சதியை அழைக்காவிடினும், அவள் சென்று அதில் கலந்து கொண்டாள். தட்சன் அவளைப் பேசிய ஏச்சுக்களால் சதி தன் உயிரை விட்டு விட்டாள். இதனால் கோபமுற்ற ருத்ரன் தன்னுடைய துணைவனை அழைத்து தட்சனுடைய யாகத்தை அழித்து அவனையும் கொன்று வருமாறு கட்டளையிட்டான். தட்சன் யாகம் அழிக்கப்பட்டு அங்கு வந்த தேவர்கள் அனைவரும் கொல்லப்பட்டனர். இறுதியில் ருத்ரன் கோபம் தணிக்கப்பட்டு தேவர்கள் பிழைக்கச் செய்யப் பெற்றனர். சதி— இமவானுக்கும், மேனகைக்கும் மகளாகப் பார்வதி என்ற பெயருடன் பிறந்தாள். மறுபடியும் சிவபெருமானை மணந்தாள்.

**தாரகாசுரன் கதை**

தாரா என்ற அசுரனுக்குத் தாரகன் என்ற பிள்ளை தோன்றினான். தாரகன் தேவர்களை வெல்ல வேண்டும் என்று கடுந்தவம் செய்ய முடிவு செய்தான். ஒரு காலைக் கட்டை விரலில் ஊன்றிக் கொண்டு, மற்றொரு காலை மடக்கிக்

கொண்டு, இரண்டு கைகளையும் உயர்த்தி சூரியனைப் பார்த்தபடியே, தண்ணீரை மட்டும் பருகிக் கொண்டு நூறு ஆண்டுகள் தவம் செய்தான். அதன்பிறகு தண்ணீர் குடிப்பதையும் நிறுத்திவிட்டுக் காற்றை மட்டும் உட்கொண்டு இன்னொரு நூறாண்டு தவம் செய்தான். நீரின் நடுவே நின்றும், பஞ்சாக்கினி மத்தியில் நின்றும் நூறு நூறு ஆண்டுகள் தவம் செய்தான். ஒரு மரக்கிளையில் தலைகீழாகத் தொங்கி மற்றுமொரு நூறு ஆண்டுகள் தவம் செய்தான். இறுதியாக பிரம்மன் தோன்றி, "உன் தவத்தைக் கண்டு மகிழ்ந்தேன். உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான். தாரகன் 'சிவபெருமானின் பிள்ளையைத் தவிர வேறு யாராலும் எனக்கு சாவு வரக் கூடாது என்ற வரத்தையும், என்னளவு பலமுடைய மற்றொருவனைப் பிரம்மன் படைக்கக் கூடாது' என்ற வரத்தையும் கேட்டுப் பெற்றுக் கொண்டான். சிறிது காலத்தில் தேவர் உலகம் உள்பட எல்லா உலகங்களையும் ஜெயித்து தேவர்களை எல்லாம் தனக்கு அடிமைகள் ஆக்கினான். நொந்து போன தேவர்கள் பிரம்மனிடம் சென்று முறையிட்டனர். பிரம்மன், 'நான் கொடுத்த வரத்தை மீற என்னால் முடியாது. மேலும் மகாதேவன் இமயமலையில் தவம் செய்து கொண்டிருக்கிறார். பார்வதி தனியே தவம் செய்து கொண்டிருக்கிறார். இவர்கள் இருவரும் சேர்ந்து ஒரு மைந்தனைப் பெற்றால் ஒழிய தாரகனை யாரும் வெல்ல முடியாது' என்று சொல்லி விட்டார். தேவர்கள் அனைவரும் சேர்ந்து 'கந்தர்பன்' என்ற பெயருடைய மன்மதனிடம் சென்று 'எப்படியாவது மகாதேவருடைய நிஷ்டையைக் கலைத்து, பார்வதியை மணந்து கொள்ளுமாறு செய்வாயாக!' என்று வேண்டினர்.

அவர்கள் விருப்பப்படியே மன்மதன் சிவனிருக்கும் இடம் சென்றான். அவன் வரவால் இயற்கையும் கூடக் கால

*மாறுதலைச் செய்தது. திடீரென்று இளவேனிற்காலம் வந்தது. தென்றல் வந்தது. மரங்கள் மலர்கள் பூத்தன. வண்டுகள் ரீங்காரமிட்டன. பறவைக் கூட்டங்கள் ஜோடி ஜோடியாக இசைபாடிக் களித்தன. சிவபிரான் கண்ணை விழித்தார். அதே நேரத்தில் மற்றொரு பக்கத்தில் தவம் செய்து கொண் டிருந்த பார்வதியும் இங்கு வந்து சேர்ந்தார். கண்விழித்த சிவபெருமானுக்குச் சுற்றுமுற்றும் பார்க்கையில் திடீரென்று தோன்றிய வசந்தகாலம் யாரால் வந்தது என்று பார்த்தார். தன் தவம் கலைக்கப்பட்டதைப் பார்த்தார். மன்மதன் இங்குமங்கும் ஓடி ஒளிந்து கொள்ள முயற்சிப்பதையும் பார்த்தார். உடனே அவர் நெற்றிக்கண் திறந்தது. மன்மதன் எரிந்து சாம்பலானான். அவன் மனைவியாகிய ரதி ஓலமிட்டு அழத் துவங்கினாள். தேவர்கள் சிவபிரானை வந்து வணங்கி, "ஐயனே! தாரகாசுரன் கொடுமையைத் தாங்க முடியாத நாங்கள் செய்த சூழ்ச்சிதான் அது. எங்கள் வேண்டுகோளை ஏற்றுத்தான் மன்மதன் இவ்வாறு செய்தான். அவனை மன்னித்து உயிர்ப் பிச்சை தர வேண்டும்" என்று வேண்டினர்.*

*சிவபிரான், "அது நடவாத காரியம். நடந்தது நடந்து விட்டது. மன்மதன் கிருஷ்ணனின் பிள்ளை பிரத்யும்னனாகத் தோன்றுவான். அதுவரையில் ரதி பொறுத்திருக்க வேண்டும்" என்று கூறிவிட்டார். தேவர்கள் எண்ணம் நிறைவேறவில்லை. சிவன் – பார்வதி திருமணம் நடைபெறவில்லை. மன்மதன் சாம்பலானதுதான் மிச்சம்.*

**பார்வதியின் தவம்**

*சிவபிரானிடம் மனத்தைப் பறிகொடுத்த பார்வதி, மன்மதனும் எரிந்து விட்டதால் என்ன செய்வது என்று அறியாமல் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தாள். அப்பொழுது நாரதர் தோன்றி, "அம்மா! நான்முகனும், விஷ்ணுவும் கூட*

சிவனைப் பார்க்க முடியாது. கடும் தவம் ஒன்றினால்தான் அவரைக் காண முடியும். அதைவிடக் கடுமையான தவத்தை மேற்கொண்டால்தான் அவரைத் திருமணம் செய்து கொள்ள முடியும். எனவே தாங்கள் 'கௌரிசிகரம்' என்ற மலையுச்சியை அடைந்து தவத்தில் ஈடுபடுங்கள்'' என்று கூறிவிட்டுப் போனார். பார்வதியும் தாய் தந்தையரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு, தம் அணிகலன்கள், ஆடைகள் அனைத்தையும் துறந்து மரஉறி உடுத்தி கௌரிசிகரம் என்ற மலை உச்சி சென்று கடும் தவம் இயற்றினாள். வெயில், மழை, குளிர், பனி போன்ற எதைக் கண்டும் துவளாமல் தவத்தை மேற் கொண்டாள். அவளுடைய தவத்திற்கு அஞ்சிக் கொடிய விலங்குகளும் அப்பால் சென்றுவிட்டன. தேவர்கள் அனைவரும் கூடி சிவபெருமானிடம் சென்று, 'ஐயனே! பார்வதியின் கடுந் தவத்திற்குப் பரிசாகத் தாங்கள் அவளை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று வேண்டினர். அதற் கிணங்கிய சிவன், கிழட்டு அந்தணர் வேடம் பூண்டு பார்வதி தேவியின் பர்ணசாலை சென்றார். அந்தணரைக் கண்ட பார்வதி அவருடைய பாதங்களுக்கு மலரிட்டு வழிபட்டாள். அந்த வேதியர், 'அம்மா, நீ எதற்குத் தவம் செய்கிறாய்?' என்று கேட்டார். பார்வதி தன் கருத்தைக் கூறியதும், 'அம்மா நீ பெருந்தவறு செய்துவிட்டாய். சிவபிரான் ஒரு பைத்தியக் காரன். ஐந்து முகங்களும், சாம்பல் பூசிய உடம்பும், ஜடா முடியும், பாம்பை அணிந்தவனுமாகிய அவனை மணக்க நினைப்பது முட்டாள்தனம்' என்று கூறினார். கடும் கோபம் கொண்ட பார்வதி, 'கிழட்டுப் பிராமணரே, நீர்தான் முட்டாள். சிவபிரானின் பெருமை தெரியாமல் உளருகின்ற உம்மைப் பெரியவர் என்று மதித்து மலரிட்டு வணங்கியது என் தவறு. உம்முடைய முகத்தில் விழிப்பதே பாவம். நான் வெளியே போய் விடுகிறேன்' என்றாள். அவள் திரும்பியதும் சிவபிரான்

தம்முடைய உண்மையான வடிவத்தைப் பெற்றுக்கொண்டு, "பார்வதி, திரும்பிப்பார். நீ யாரை நினைத்துத் தவம் செய்தாயோ, நானே வந்திருக்கிறேன்" என்றதும், பார்வதி திரும்பிப் பார்த்துப் பெருமகிழ்ச்சியடைந்தாள். சிவன் 'என்ன வரம் வேண்டும்?' என்று கேட்க, பார்வதி, 'எல்லார் எதிரிலும் என்னை மணக்க வேண்டும்' என்றாள். சிவபெருமான் அதனை ஏற்றுக் கொண்டார்.

## சிவ – பார்வதி திருமணம்

கைலையில் இருந்த சிவன் சப்தரிஷிகள் என்று சொல்லப்படும் ஏழு முனிவர்களை அழைத்து, இமவானிடம் சென்று அவனுடைய மகளான பார்வதியைத் தான் மணக்க விரும்புவதாகச் சொல்லுமாறு பணித்தார். மிக்க மகிழ்ச்சி கொண்ட முனிவர்கள் இமவானைக் கண்டு சொல்ல, அவனும் பெரு மகிழ்ச்சி கொண்டான். திருமணத்திற்குரிய நாள் குறிப்பிடப்பட்டது. திருமணத்தன்று முனிவர்கள், யோகிகள், ரிஷிகள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள், தேவர்கள், திக்பாலர்கள் ஆகியவர்களும்; திருமால், நாரதர், பிரம்மன் ஆகியவர்களும் வந்து கூடினர். பார்வதியின் தாயாகிய மேனைக்குத் தன் மருமகனாகிய சிவபிரானைப் பார்க்க வேண்டும் என்று விருப்பம். அப்போது ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டு வந்தாள். கந்தர்வர்களின் தலைவனாகிய விஸ்வவசு அழகாக இருந்ததால் அவன்தான் மருமகன் என்று நினைத்தாள். நாரதர் இல்லை என்றவுடன் அவனை விட அழகான குபேரனைப் பார்த்தாள். அழகில் ஒருவரை ஒருவர் விஞ்சும்படியாக இருந்த வருணன், அக்னி, இந்திரன், சந்திரன், சூரியன், பிரம்மன், பிரகஸ்பதி, விஷ்ணு ஆகியோரை ஒவ்வொருவராகப் பார்த்து ஒருவரைவிட ஒருவர் அழகாக இருப்பதால் இவர்கள்தான் மாப்பிள்ளையோ என்று சந்தேகப்பட்டாள். நாரதர், 'இவர்கள்

அனைவரும் சிவனுடைய பணியாட்கள். அதோபார் சிவபிரான் வருகிறார்' என்றார். மேனகை திரும்பிப் பார்த்தாள். என்ன கொடுமை, ஒரே பிசாசுக் கூட்டங்கள். எல்லாம் கறுப்பு நிறம். அந்தக் கூட்டத்தின் நடுவே ஐந்து தலைகளுடனும், பத்துக் கைகளுடனும் ஒரு வடிவம். அந்த வடிவமெல்லாம் சாம்பல் பூசப்பட்டிருந்தது. கழுத்தில் எலும்பு மாலை, பாம்புகள்; இடுப்பில் புலித்தோல், தலையில் சடை— இவர்தான் மாப்பிள்ளை என்று நாரதர் சொல்லியவுடன், மேனகை மயங்கியே விழுந்துவிட்டாள். மயக்கம் தெளிந்து எழுந்தவுடன், "என்ன ஆனாலும் சரி, இந்தப் பைத்தியத்திற்கு என் பெண்ணைக் கொடுக்க மாட்டேன். இந்திரன் முதலிய யாரை வேண்டுமானாலும் திருமணம் செய்து கொள்ளட்டும். இல்லை என்றால் அவளை விஷத்தைக் கொடுத்துக் கொன்று விடுவேன். என்ன ஆனாலும் இந்தத் திருமணத்தை நடக்க விடமாட்டேன்" என்று கூறினாள். இதைக் கேட்ட நாரதர் சிவபிரானிடம் சென்று மிக்க பணிவோடு, "ஐயனே! தயவு செய்து தங்களின் உருவத்தை மாற்றிக் கொண்டு மேனகையின் துயரத்தைப் போக்குங்கள்" என்று வேண்டிக் கொண்டார். ஒரு விநாடி நேரத்தில் தன்னுடைய உருவத்தை மாற்றிக் கொண்டார், சிவபிரான். அழகே வடிவாக மாறிவிட்ட அவரைப் பார்த்து மேனகை காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். பிரம்மன் சடங்குகள் செய்ய சிவ— பார்வதி திருமணம் இனிதே நிறைவேறியது.

### திரிபுரத்தின் அழிவு

தாரகாசுரனின் மைந்தர்களாகிய வித்யுன்மாலி, தாரகாட்சன், வீர்யவனா ஆகிய மூவரும் கடும் தவம் புரிந்தனர். ஒரே காலில் நின்றும், நீரில் இருந்தும், தலைகீழாக நின்றும் ஆயிரக்கணக்கான வருடங்கள் தவம் செய்தனர். தவத்தின்

முடிவில் எதிர்ப்பட்ட பிரம்மனிடம் தாங்கள் சிரஞ்சீவியாக இருக்க வரம் வேண்டினர். அப்படி ஒரு வரத்தைத் தர தனக்கு ஆற்றலில்லை என்று பிரம்மன் கூறியவுடன், அப்படியானால் தங்கம், வெள்ளி, இரும்பு ஆகியவற்றால் ஆன மூன்று பெரிய கோட்டைகளை அமைத்துக்கொண்டு தாங்கள் ஆயிரம் வருடங்கள் அவற்றுள் வாழ வேண்டும் என்றும், அதன்பின் இந்த மூன்று கோட்டைகளும் ஒரே கோட்டையில் அடங்கி பலம் பெற்றதாக இருக்கவேண்டும் என்றும் கேட்டனர். மேலும் யாராவது தன்னை அழிக்க வந்தால் ஒரே அம்பை மட்டும் பயன்படுத்தி ஒன்றுக்குள் ஒன்றாக இருக்கும் இந்த மூன்று கோட்டைகளை அழித்தால் அதை ஏற்றுக் கொள்வதாகவும் கூறினர். பிரம்மன் தந்த வரத்தின்படி மூன்று கோட்டைகளை அமைத்து ஆயிரக்கணக்கான தைத்தியர்கள் அவற்றுள் வாழ வழிசெய்தனர். பல்லாண்டுகள் கழித்தவுடன் அவர்கள் சிவபூசை செய்வதை மறந்து அகங்காரம் மிக்கவர்களாக தங்களை யாரும் அழிக்க முடியாது என்ற காரணத்தால் தவறான வழிகளில் செல்ல முற்பட்டனர். தேவர்கள், பிரம்மா, விஷ்ணு ஆகிய அனைவரும் சிவனிடம் சென்று முறை யிட்டனர். கடவுள் வழிபாட்டை மறந்து தவறான வழிகளில் செல்லும் அவர்களை அழிக்க சிவன் ஒத்துக்கொண்டார். விஸ்வகர்மா முழுதும் தங்கத்தால் ஆன தேரைத் தயாரித்தான். பிரம்மனே சாரதியாக இருந்து தேரை இயக்க முன் வந்தான். திரிபுரத்தை நோக்கிச் சென்ற அத்தேரிலிருந்து 'பாசுபதம்' என்ற ஒரே அஸ்திரத்தை செலுத்தவே திரிபுரம் எரிந்து சாம்பலாயிற்று.

## சிவன் ஏற்காத சம்பங்கிப் பூ

லோமஹர்ஷன முனிவர் உடனிருந்த முனிவர்களுக்குச் சிவ புராணத்தைச் சொல்லிக்கொண்டு வருகையில், "சிவ

பெருமானைத் திருப்தி அடையச் செய்வது மிகமிக எளிது. சம்பங்கிப் பூவைத் தவிர வேறு எந்தப் பூ கிடைத்தாலும் அதைச் சிவனுக்கு அர்ப்பணித்தால் அதை அவர் ஏற்று மகிழ்வார்" என்று கூறினார். முனிவர்கள், "அது ஏன் சம்பங்கிப் பூவை சிவன் ஏற்பதில்லை?" என்று கேட்டார்கள். அதற்குரிய நிகழ்ச்சியை லோமஹர்ஷனர் பின்வருமாறு கூறினார்.

இராம, இலக்குவர்கள் சீதையை அழைத்துக் கொண்டு வனவாசம் வந்தனர். அவர்கள் காட்டில் இருக்கும் பொழுது தசரதன் இறந்துபோன செய்தி அவர்களை எட்டிற்று. உடனே இராமன் இலக்குவனைப் பார்த்து அருகில் இருக்கும் கிராமம் சென்று சிரார்த்தம் செய்யும் பொருள்களைப் பெற்றுவா என்று கூறினார். இலக்குவன் சென்று நெடுநேரம் ஆகிவிட்ட படியாலும், உச்சி நேரத்திற்கு முன், சிரார்த்தத்தைச் செய்து முடிக்க வேண்டும் ஆதலாலும், இராமன் இலக்குவனைத் தேடிச் சென்றான். நெடுநேரம் அவனும் வராமையால் உச்சிக்காலம் நெருங்குவதை அறிந்து சீதாவே சிரார்த்தத்தைச் செய்து முடிக்கச் சென்றாள். பால்கு நதியில் குளித்து விட்டு ஒரு விளக்கை ஏற்றிப் பக்கத்தில் இருந்த சம்பங்கிச் செடியில் இருந்து பூக்களைப் பறித்து சிரார்த்தத்தை முடித்தாள். சிரார்த்தத்தின் முடிவில் ஆகாயத்தில் இரண்டு கைகள் மட்டும் தோன்றி அவள் அளித்த பூக்களை ஏற்றுக் கொண்டன. அசரீரி, "சீதா! நான் மகிழ்ச்சி அடைந்தேன். உன்னை வாழ்த்துகிறேன்" என்று கூறிற்று. சீதாவிற்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. அந்தக் கைகளையும், அசரீரியையும் பார்த்து, "நீங்கள் யார் என்று எனக்குத் தெரியவில்லையே?" என்றாள். அசரீரி, 'மருமகளே! நான்தான் உன் மாமனார். நீ சிரத்தையுடன் செய்த இறுதிச் சடங்கை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டேன்' என்று கூறிற்று. உடனே சீதை, "என் கணவரும், என் மைத்துனரும் இதை நம்ப மாட்டார்களே" என்று கூறினாள். அதற்கு அசரீரி,

'கவலை வேண்டாம். இந்த நதி, இந்த விளக்கில் உள்ள சுடர், சம்பங்கிப்பூ, பக்கத்தில் நிற்கின்ற பசு ஆகிய நான்கும் இது நடந்தது என்பதற்கு சான்று கூறும்,' என்று கூறி மறைந்து விட்டது.

சற்று நேரத்தில் இராம, இலக்குவர்கள் திரும்பினார்கள். சீதாவை நோக்கி. "விரைவாக சமையல் செய். உச்சிப் பொழுதிற்குள் சிரார்த்தச் சடங்கு செய்ய வேண்டும்" என்றனர். சீதை, அது தேவையில்லை. சடங்கு நடந்து முடிந்து விட்டது என்று கூறி, நடந்ததை விவரமாகச் சொன்னாள். சகோதரர்கள் அதைச் சிறிதளவும் நம்பாமல், மறுபடியும் சமையல் செய்யச் செய்து தர்ப்பணத்திற்குப் போவதற்கு முன் அவள் கூறிய சாட்சிகளை அழைத்து, "நடந்ததை நடந்தபடி கூறச் சொல்" என்றார்கள். சீதையும் முறைப்படி இந்த நான்கையும் ஒவ்வொன்றாக வரவழைத்தாள். அந்த நான்கும் ஒன்றும் நடைபெறவில்லை என்று பொய்ச்சான்று கூறின. இராம இலக்குவர்கள் சமைத்த உணவை எடுத்துக் கொண்டு காட்டிற்குச் சென்று சிரார்த்தச் சடங்கை ஆரம்பித்தனர். இப்போது தசரதன் அசரீரியாய்ப் பேசத் துவங்கினான். "மகனே! மருமகள் அளித்த பிண்டத்தை ஏற்றுக் கொண்டு நான் திருப்தி அடைந்து விட்டேன். மறுபடி எதற்காக என்னை அழைக்கிறாய்?" என்று கூறியவுடன் இராம, இலக்குவர்கள், "இது உண்மை என்றால் ஏன் ஆறு, பசு, விளக்கு, பூ என்பவை சான்று பகரவில்லை?" என்று தசரதனைக் கேட்டனர். தசரதன் "இன்னும் சந்தேகம் இருந்தால் சூரியனைக் கேள்" என்றான். இராமன் சூரியனைக் கேட்க அவனும் நடந்ததை ஒப்புக் கொண்டு சான்று பகர்ந்தான். சகோதரர்கள் இருவரும் சீதையிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். அவள் கற்பின் திண்மையைப் போற்றிப் புகழ்ந்தார்கள். இந்த நான்கின் மேலும் சினம் கொண்ட சீதை பால்கு நதியைச் சபித்து

பூமிக்குள் மறைந்து விடுமாறு கூறினாள்; விளக்கில் இருந்த சுடரை 'நீ எதைப் பற்றினாலும் தாரதன்மயம் பாராமல் எல்லாவற்றையும் அழித்துவிடும் கொடிய சக்தியைப் பெறுவாய்' என்று சபித்தாள்; பசுமாட்டைப் பார்த்து உன் வாய் பொய்ச் சாட்சி சொன்னதால் அது தூய்மை யற்றுப் போகட்டும். உன் பின் பகுதியே பூஜைக்குரியதாகட்டும் என்றாள்; சம்பங்கிப் பூக்களைப் பார்த்து இன்றிலிருந்து நீங்கள் சிவபிரானுக்கு ஏற்காத பூக்களாகி விடுங்கள் என்று சபித்தாள். அன்றிலிருந்து சம்பங்கிப் பூவைச் சிவபிரான் ஏற்பதில்லை.

## நாரதரும், சம்பங்கி மரமும்

ஒருமுறை நாரதர் திருக்கோகர்ணம் சென்று சிவனை வணங்கப் புறப்பட்டார். வழியில் ஓர் அழகான சம்பங்கி மரம் பூத்துக் குலுங்கி நின்றது. அந்த அழகைக் கண்டு ரசித்துக் கொண்டிருந்தார். அதன் அருகில் ஒரு பிராமணன் வந்தான். அவன் கையில் ஒரு பாத்திரம் இருந்தது. நாரதர் அவனைப் பார்த்து, "நீ யார்? எங்கே போகிறாய்?" என்று கேட்டார். அந்த பிராமணன் "நான் பிச்சை எடுக்கப் போகிறேன்" என்று பொய் கூறினான். அதை நம்பிய நாரதர், கோயிலுக்குச் சென்று சிவனை வணங்கிவிட்டு மீண்டார். கையில் உள்ள பாத்திரத்தில் சம்பங்கிப் பூவை நிறைத்துக் கொண்டு அதை மூடி வைத்திருந்தான். மறுபடியும் அவனைப் பார்த்து "எங்கே போகிறாய்?" என்றார். "பிச்சை கிடைக்கவில்லை. வீட்டிற்குப் போகிறேன்" என்றான்.

அவனுடைய வார்த்தைகளில் சந்தேகப்பட்டு நாரதர் சம்பங்கி மரத்தினிடம், "ஏ மரமே! அந்த பிராமணன் உன் பூக்களைப் பறித்தானா?" என்று கேட்டார். பிராமணனைப் போலவே அந்த மரம், "பிராமணனா, அப்படி ஒருவரும்

இங்கு வரவில்லை. என் பூக்களை யாரும் பறிக்க வில்லை" என்று துணிந்து பொய் கூறிற்று. நாரதர் சந்தேகம் வலுக்கவே மறுபடியும் கோயிலுக்குச் சென்று பார்த்தார். சிவலிங்கத்தின் தலையில் புதிய சம்பங்கிப் பூ வைக்கப் பட்டிருந்தது. பக்கத்தில் தியானம் செய்து கொண்டிருந்த ஒரு அன்பரைப் பார்த்து, "இந்தப் பூவை யார் லிங்கத்தின் தலையில் வைத்தார்கள்?" என்று நாரதர் கேட்டார். அந்த அன்பர், "மிகத் தீயவனும், பொய் பேசுபவனும் ஆகிய ஒரு பார்ப்பான் இருக்கிறான். சிவன் தயவை வைத்துக் கொண்டு இந்த ஊர் ராஜாவை கைக்குள் போட்டுக் கொண்டான். அந்த ராஜாவை ஏமாற்றிப் பணம் பறிப்பதுடன் மக்களையும் ஏமாற்றுகிறான்" என்று கூறினார். உடனே நாரதர் சிவலிங்கத்தைப் பார்த்து "இந்த அநியாயம் நடைபெற நீங்கள் உதவியாக இருக்கலாமா?" என்று கேட்டார். "என்னை வந்து பூஜிப்பவர்களை நான் கெடுக்க முடியாது" என்று சிவன் கூறிவிட்டார்.

இதனிடையில் ஒரு பார்ப்பினி, 'ஓ!' என்று அழுது கொண்டு கோயிலுக்கு வந்தாள். தன் கணவன் பக்கவாத நோயால் அவதிப்படுவதையும், தன் மகனின் கல்யாணத்திற்கு அரசனிடம் முறையிட்டுக் கொஞ்சம் பணமும், ஒரு பசுவும் அன்பளிப்பாகப் பெற்றதையும், அந்தப் பணத்தில் பாதியை அந்தத் தீய பார்ப்பான் பிடுங்கிக் கொண்டதையும் சொல்லி அழுதாள். கோபம் கொண்ட நாரதர், அந்தத் தீய பார்ப்பானை விராதன் என்ற அரக்கனாகப் போகுமாறு சபித்தார். சம்பங்கி மரம் பொய் சொன்னதால் அந்தப் பூவை சிவன் இனிமேல் ஏற்றுக் கொள்ளமாட்டார் என்றும் கூறினார். சாபம் அடைந்த பார்ப்பான் சிவன்மேல் தினம் பூக்களைப் போட்டதால், இராமன் வந்து விராதனைக் கொன்று சாபநீக்கம் செய்வான் என்றும் கூறினார்.

## கணேசர் தோற்றம்

பார்வதிக்குத் தனியாக ஓர் அரண்மனை இருந்தது. அவ்வரண்மனைக் காவலர்களாக நந்தியும், பிருங்கியும் காவல் செய்தனர். அவர்கள் உத்தரவு இல்லாமல் யாரும் பார்வதியைப் பார்க்க முடியாத நிலைமை நீடித்தது. பார்வதியின் தோழிகளான ஜெய, விஜயா என்பவர்களுக்கு இந்த நிலை நீடிப்பதில் விருப்பமில்லை. எனவே, பார்வதியிடம் சென்று முறையிட்டனர். அவர்கள் பேசிய பிறகு பார்வதி அருகில் இருந்த குளத்தில் இருந்து களிமண்ணை எடுத்து, அழகிய பிள்ளை வடிவை உண்டாக்கினாள். பிறகு அப் பிள்ளைக்கு நன்றாக அலங்காரம் செய்து, "நீ என் மகன்; உனக்கு கணேசன் என்று பெயர் வைக்கிறேன். இன்றுமுதல் நீ என் மெய்க்காவலன்" என்று கூறினாள். அப் பிள்ளை ஒரு தடிக்கம்பை எடுத்துக் கொண்டு காவல் தொழிலை ஆரம்பித்தான். யாரையும் உள்ளே அனுமதிக்கவில்லை. சிவன் வந்த பொழுதும் தடுத்து நிறுத்தி விட்டான். சிவபிரான் நான்தான் சிவபிரான் என்று கூறியும், அப்படி யாரையும் எனக்குத் தெரியாது என்று கூறிவிட்டான். சிவபிரான் எவ்வளவு சொல்லியும் அவன் கேளாமையால் அவனை மீறிக்கொண்டு உள்ளே நுழைய முயன்றார். கணேசன் அவரை விட மறுத்துத் தடியால் அடித்துத் துன்புறுத்தினான். உதவிக்கு வந்த நந்தி முதலானவர்களையும் தண்டித்தான். பின்னர் வந்த பிரம்மா, விஷ்ணு ஆகியவர்களையும் அவன் விடவில்லை. ஒரு பெரும் போரே மூண்டுவிட்டது. பிரம்மா முதலியவர்கள் பயன்படுத்திய எந்த ஆயுதமும் அவனை ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்நிலையில் விஷ்ணு ஒரு சூழ்ச்சி செய்தார். தந்திரத்தால்தான் இவனை வெல்ல முடியும். ஆகவே நாங்கள் முன் பக்கம் சண்டை செய்யும் பொழுது பின்புறமாக வந்து இவனை அடக்கினால்தான் உண்டு என்று விஷ்ணு தந்திரம்

சொல்லிக் கொடுத்தார். விஷ்ணுவின் சக்கரம் கூடப் பயன் படவில்லை என்று தெரிந்து கொண்டபின் பிள்ளையின் பின்புறம் வந்த சிவன் தன் சூலாயுதத்தால் பிள்ளையின் கழுத்தை வெட்டி விட்டார். போர் அமளியில் பிள்ளையின் தலையும் எங்கோ போய் விழுந்து விட்டது.

அப்பொழுது பார்வதி மிக்க கோபத்துடன் தன் பிள்ளையைக் கொன்றவர்களை, தான் பார்க்கவோ மன்னிக்கவோ போவதில்லை என்று முடிவு செய்து இந்தப் பிரபஞ்சத்தையே அழித்துவிடத் தயாரானாள். நாரதர் நிலைமையைப் புரிந்துகொண்டு பார்வதியை சமாதானம் செய்து போருக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தார். தாம் விதிக்கும் இரண்டு நிபந்தனைகளுக்குச் சிவன் உட்பட்டால் தன் கோபத்தை அடக்கிக் கொள்வதாகப் பார்வதி கூறினாள். என்ன நிபந்தனைகள் என்று நாரதர் கேட்க, பார்வதி பின்வருமாறு கூறினாள்: 1. என் பிள்ளையின் உயிரைத் திருப்பித் தர வேண்டும்; 2. சிவ கணங்கள் அனைத்திற்கும் அவனைத் தலைவனாகச் செய்ய வேண்டும். இரண்டு நிபந்தனைகளையும் சிவன் ஒப்புக் கொண்டார். முதல் நிபந்தனையை நிறைவேற்றுவதில் சிக்கல் எழுந்தது. பிள்ளையின் தலை எங்கோ போய்விட்டதால் தேடி எடுக்க முடியவில்லை. உடனே சிவன் தன் உடன் வந்தவனை அழைத்து எந்த ஒரு வடிவத்தை நீ முதலில் சந்திக்கிறாயோ அந்த வடிவத்தின் தலையைக் கொய்து கொண்டு வா என்று கட்டளையிட்டார். அவ்வாறு போன துணைவனுக்கு முதன் முதலில் கிடைத்தது ஒரு யானையின் தலையாகும். அந்த யானையின் தலையை இந்த இளைஞனின் தலையில் பொருத்தி சிவன், விஷ்ணு, பிரம்மன் ஆகிய மூவரும் கூடி அதற்கு உயிர் உண்டாக்கினர். சிவ புராணத்தின்படி இதுவே கணேசன் பிறந்த கதை.

**கணேசன் – கார்த்திகேயன் இருவரிடையே மாறுபாடு**

சிவனுக்கும் பார்வதிக்கும் கணேசன், கார்த்திகேயன் என்று இரு குமாரர்கள் இருந்தனர். பருவம் அடைந்த இருவரும் திருமணம் செய்துவைக்கும்படி தாய் தந்தையரை வற்புறுத்தினர். இவர்களுள் யாருக்கு முதலில் திருமணம் செய்வது என்று பெற்றோருக்குப் பிரச்சனை. ஒருவருக்கு முதலில் செய்தால் மற்றவருக்கு மனவருத்தம் ஏற்படும் என்பதை அறிந்த பெற்றோர், இதற்கு ஒரு வழியைக் கண்டனர். இருவரையும் அழைத்து சிவன், "நீங்கள் இருவரும் உலகைச் சுற்றி வர வேண்டும். யார் முதலில் வருகிறீர்களோ அவர்களுக்கு முதலில் திருமணம் செய்து வைக்கப்படும்" என்றார். இந்த வார்த்தையைக் கேட்ட கார்த்திகேயன் உடனே புறப்பட்டு விட்டார். கணேசன் சிறிது தூரம்கூடத் தன்னால் களைப்படையாமல் போக முடியாது என்பதை உணர்ந்தார். ஆதலால் சிறிது நேரம் கண்ணை மூடிக்கொண்டு யோசனையில் ஆழ்ந்தார். உடனே குளித்துவிட்டு வந்து தாய், தந்தை இருவரையும் பக்கத்தில் பக்கத்தில் அமரச் செய்தார். அவர்களை ஏழுமுறை சுற்றி வந்து எதிரிலே நின்று வணங்கி உடனே திருமணத்திற்கு ஏற்பாடு செய்யச் சொன்னார். அவரைப் பார்த்துச் சிவன், "உலகைச் சுற்றிவருமாறு உங்களுக்குக் கட்டளையிட்டோம். நீ இன்னும் இங்கேயே இருக்கிறாய். கார்த்திகேயன் முன்னரே புறப்பட்டுச் சென்று விட்டான். உடனே புறப்பட்டுப்போ" என்றார். கணேசன் அவரைப் பார்த்து, "என் அருமைப் பெற்றோரே! தாய் தந்தையை ஒருமுறை பிரதட்சணம் செய்தால் உலகையே ஒருமுறை வலம் வந்ததாக அர்த்தம் என்று வேதங்களில் சொல்லியிருக்கிறது. நானோ என் பெற்றோரை ஏழுமுறை சுற்றி வந்து விட்டேன். அப்படியிருக்க, நான் உலகை வலம் வரவில்லை என்று சொன்னால் வேதத்தில் சொல்லியது

பொய் என்று ஆகிவிடும். உடனே திருமணத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று கேட்டுக் கொண்டார்.

அவர் கூறியதற்கு மறுப்புக் கூற முடியாமையால் சிவன் அவர் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார். காசிப முனிவனின் மகன் விசுவரூபனின் பெண்களாகிய சித்தி, புத்தி என்ற இருவரையும் கணேசருக்கு மணம் செய்வித்தனர். சித்திக்கு 'லக்ஷா' என்ற மகனும், புத்திக்கு 'லபா' என்ற பிள்ளையும் பிறந்தனர்.

உலகைச் சுற்றச் சென்ற கார்த்திகேயன் அப்பணியை முடித்துக் கொண்டு தாய் தந்தையரிடம் வந்து சேர்ந்தார். ஏற்கெனவே கணேசருக்குத் திருமணம் முடிந்து பிள்ளைகளும் பிறந்திருப்பதைப் பார்த்து 'பெற்றோருடன் தங்குவதில்லை' என்று சொல்லிவிட்டு கிரௌஞ்ச மலைக்குச் சென்று தங்கிவிட்டார். இனித் திருமணம் செய்து கொள்வதில்லை என்றும் முடிவு செய்துவிட்டார். சிவனும் பார்வதியும், தனியே இருக்கும் மைந்தனைக் காண முறையே அமாவாசை அன்று ஒருவரும், பௌர்ணமி அன்று ஒருவருமாக கிரௌஞ்ச மலை சென்று பார்த்து வருகின்றனர். இதனால்தான் வடநாட்டில் உள்ள கார்த்திகேயன் கோயிலுக்குள் பெண்கள் அனுமதிக்கப் படுவதில்லை.

**லிங்க வடிவங்கள்**

பக்தர்கள் எங்கே கூடினாலும் அங்கே சிவன் லிங்க வடிவில் தோன்றுகிறார். ஆயிரக்கணக்கான இடங்களில் சிவன் இருந்தாலும் 12 முக்கியமான லிங்கங்கள் "ஜோதிர் லிங்கங்கள்" என்ற பெயரில் போற்றப்படுகின்றன. அவை, சோமநாதம், மல்லிகார்ஜுனம், மகாகாளன், ஓம்காரம், கேதாரம், பீமசங்கரன், விசுவநாதன், திரியம்பகம், வைத்தியநாதன், நாகேசுவரன், இராமேஸ்வரம், குஷ்மேஷா ஆகியவை.

## நந்திகேசுவர தீர்த்தம்

வெகு காலத்திற்கு முன் கர்ணகி என்ற இடத்தில் ஒரு வேதியன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தன. மனைவியுடன் இரண்டு பிள்ளை களையும் கர்ணகியில் விட்டு விட்டு பிராமணன் வாரணாசி சென்றான். அவன் அங்கேயே இறந்து விட்டதாகத் தெரிய வந்ததால் அங்கேயே சடங்குகளைச் செய்தனர். அவனுடைய மனைவி இறப்பதற்குரிய நேரம் வந்ததும் உயிர் பிரியாமல் அவதிப்பட்டாள். அவள் பிள்ளைகள், "தாயே! உன்னுடைய ஏதோ ஒரு விருப்பம் நிறைவேறாததால் உன் உயிர் பிரிய மறுக்கிறது. அது என்னவென்று தெரிவித்தால், நாங்கள் அதனைச் செய்கின்றோம்" என்றனர். கிழவி, "பிள்ளைகளே! இறப்பதற்குள் உங்கள் தந்தையைப் போல வாரணாசி போய் வர நினைத்தேன். அது இயலாமல் போய்விட்டது. இப்பொழுது என்னுடைய எலும்புகளையாவது வாரணாசியில் கொண்டு சேர்ப்பதானால் நான் அமைதியாகச் சாவேன்" என்றாள். பிள்ளைகள் அவ்வாறு செய்வதாகக் கூறியவுடன் அவள் உயிர் நீத்தாள். அவள் மூத்த பிள்ளையாகிய சுவடி அந்த எலும்புகளை எடுத்துக் கொண்டு வாரணாசிக்குப் புறப்பட்டான். மிக நீண்ட தூரம் ஆகையால் வழியில் தங்கிச் செல்ல நேர்ந்தது. ஓர் இரவு ஒரு பிராமணன் வீட்டில் தங்கினான். வீட்டுக்கார பிராமணன் காலையில் பால் கறக்க முற்படுகையில் கன்றுக்குட்டி அடம் பண்ணி அவனைப் பாலைக் கறக்க விடாமல் செய்தது. கோபம் கொண்ட பிராமணன் கன்றுக்குட்டியை நன்றாக அடித்து விட்டு, பாலைக் கறந்து கொண்டு வீட்டிற்குள் சென்றான். இப்போது அடிபட்ட கன்றுக்குட்டியுடன் பசுமாடு பேச ஆரம்பித்தது. திண்ணையில் படுத்திருந்த சுவடிக்கு இந்த உரையாடல் நன்கு கேட்டது. பசு கன்றுடன் பின்வருமாறு பேசிற்று: "என்

அருமைக் கன்றே! அந்தக் கொடிய பார்ப்பான் உன்னை நன்றாக அடித்து விட்டான் என்று நீ வருந்த வேண்டாம். நான், இதற்குப் பழி வாங்கும் முறையில் இவனுடைய மகனை என் கொம்புகளால் குத்திக் கொன்று விடுகிறேன்'' என்று கூறிற்று. இதைக் கேட்ட சுவடி எல்லையற்ற வியப்படைந்து, மறுநாள் என்ன நடக்கிறது என்று பார்க்க அங்கேயே தங்கி விட்டான். மறுநாள் விடியற்காலம் பார்ப்பானின் மகன் பால் கறக்க வந்தான். பசுமாடு தன் கொம்புகளால் அவனைக் குத்திக் கொலை செய்து விட்டது. சுவடி வியப்புடன் இதைப் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே வெண்மை நிறமுடைய அப்பசு கருமை நிறமானது. பார்ப்பனனைக் கொன்றதால் 'பிரம்மஹத்தி' தோஷம் பசுமாட்டைப் பற்றிக்கொண்டது. திடீரென்று அப்பசு வீட்டை விட்டுப் போகத் துவங்கியது. பார்த்துக் கொண்டிருந்த சுவடி அது எங்கே போகிறது என்று அறிந்து கொள்ள அதன் பின்னே போனான். நெடுந்தூரம் போன பசு, நர்மதை ஆற்றில் நந்தி தீர்த்தம் என்ற இடத்தில் இறங்கிக் குளித்தது. உடனே அதன் கறுமை நிறம் மாறி வெள்ளை நிறம் அடைந்தது. நந்தி தீர்த்தத்தில் மூழ்கினால் பிரம்மஹத்தி தோஷம்கூடப் போய்விடும் என்பதை அறிந்தான். தான் மட்டும் அங்கே குளித்து விட்டு வாரணாசிக்குப் புறப்பட்டான். அந்நிலையில், ஓர் அழகிய பெண் அவனெதிரே தோன்றினாள். "சுவடி! உன் தாயின் எலும்புகளை எடுத்துக் கொண்டு எங்கே போகிறாய்?'' என்று கேட்டாள். தன் பெயரைச் சொல்லி அழைத்த அந்தப் பெண்ணைக் கண்டு வியப்படைந்த சுவடி, "நான் என் தாயின் எலும்புகளை கங்கையில் கரைக்கப் போகிறேன். நீ யார்?'' என்று கேட்டான். அப்பெண் "நான் தான் கங்கை; நீ கங்கை வரை செல்லத் தேவையில்லை. உன் தாயின் எலும்புகளை இந்த நந்திகேசுவரத்திலேயே கரைத்து விடு'' என்று கூற, சுவடியும் அப்படியே

செய்தான். அவன் தாய் ஆகாயத்தில் தோன்றி, "மகனே! நான் முழுத் திருப்தி அடைந்து விட்டேன். இதோ மோட்சம் போகிறேன்" என்று கூறி மறைந்தாள்.

'நந்தி தீர்த்தம்' இவ்வளவு சிறப்புப் பெற்றதற்கு ஒரு காரணம் உண்டு. முன்னொரு காலத்தில் ஒரு பிராமணப் பெண் சிவனை நோக்கி மிகக் கடுமையான தவம் செய்தாள். அப்படி தவம் செய்த இடம்தான் 'நந்தி தீர்த்தம்.'

**அத்ரிஈசுவர தீர்த்தம்**

கமதா என்றொரு வனாந்திரம் இருந்தது. அங்கு 100 ஆண்டுகளாக மழை பெய்யாததால் மரங்கள் கருகி அங்குள்ள உயிரினங்கள் மிகவும் துன்புற்றன. அவ்வனத்தில் அத்ரி முனிவரும், அவர் மனைவி அனுசுயாவும் வாழ்ந்து வந்தனர். மழை வேண்டி சிவனைக் குறித்து அத்ரி தவம் இயற்றினார். அன்ன ஆகாரமின்றி அவர் தவம் இயற்றுவதைப் பார்த்து அனுசுயாவும் சிவனைப் பார்த்துத் தவம் இயற்றினாள். 54 ஆண்டுகள் தவம் நீண்டது. திடீரென்று அத்ரிக்கு அதிக தாகம் எடுக்கவே அனுசுயாவைப் பார்த்து, "எங்காவது சென்று கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா!" என்றார். குடத்தை எடுத்துக் கொண்டு காட்டினுள் சென்ற அனுசுயாவின் எதிரே ஒரு பெண் வந்தாள். அப்பெண் இவளைப் பார்த்து, "அனுசுயா! நான்தான் கங்கா தேவி. உன் தவத்திற்கு மிகவும் மெச்சினேன். வேண்டும் வரத்தைக் கேள்" என்று சொன்ன வுடன், அனுசுயா அப்பெண்ணைப் பார்த்து, "நீதான் கங்கை என்றால் இங்கே ஒரு குளத்தை உண்டாக்கி அதை கங்கை நீரால் நிரப்புக!" என்றாள். அவ்வாறே நடந்தது. அனுசுயா குடம் நிறைய அந்நீரை எடுத்துக் கொண்டு கணவனிடம் சென்றாள். அதைக் குடித்துப் பார்த்த அத்ரி முனிவர், "இது நாம் வழக்கமாகச் சாப்பிடும் தண்ணீர் இல்லையே, எங்கே

கிடைத்தது?" என்றார். நடந்ததைக் கூறிய அனுசுயாவுடன் குளக்கரைக்குச் சென்றார். அங்கு இருந்த கங்கையைப் பார்த்து, "தாயே! நீ இங்கேயே இருக்க வேண்டும்" என்று வேண்டினார். கங்கையும் ஒப்புக் கொண்ட பிறகு சிவன் அனுசுயாவிடம் "உன் தவத்திற்கு மெச்சினேன்; வரம் என்ன வேண்டும்?" என்று கேட்க, "தாங்களும் இந்த வனத்திலே தங்கிவிட வேண்டும்" என்று அனுசுயா வேண்ட சிவனும் ஒப்புக் கொண்டார். சிவனும் கங்கையும் தங்கிய இந்த இடத்திற்கு "அத்ரிஈசுவர தீர்த்தம்" என்ற பெயர் வந்தது.

**ஜோதிர்லிங்கங்களின் கதை :**

**1. சோமநாதர்**

தட்சனுடைய 27 பெண்களையும் மணந்துகொண்ட சந்திரன் (சோமன்), அவர்களுள் ரோகிணியிடம் அதிக அன்பு பாராட்டி மற்றவர்கள் மனம் வருந்துமாறு செய்துவிட்டான். அந்தப் பெண்கள் தங்கள் தந்தையாகிய தட்சனிடம் சென்று முறையிட்டனர். தட்சன் எல்லாரிடமும் சமமாக நடந்து கொள்ள வேண்டுமென்று பலமுறை சந்திரனை எச்சரித்தும் அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. ரோகிணி யிடம் இருந்துவிட்டான். கோபம் கொண்ட தட்சன் சந்திரனைப் பார்த்து "நீ தேய்ந்து (க்ஷீணித்து) போவாயாக" என்று சாபமிட்டான். பயந்து போன சந்திரன் பிரம்மனிடம் சென்று முறையிட்டான். பிரம்மன் "உனக்கு உதவும் சக்தி எனக்கில்லை. நீ சிவனிடம் சென்று முறையிடுக!" என்று அறிவுரை கூறினான். சோமன் சரசுவதி நதியின் கரையில் பிரபச தீர்த்தத்தில் ஒரு லிங்கம் அமைத்து ஆறு மாதங்கள் தீவிரமாக வழிபட்டான். சிவன் நேரில் தோன்றி "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். சோமன் நடந்த வற்றைக் கூறி தன்னைக் காக்குமாறு வேண்டினான். செய்த

*தவறுக்குத் தண்டனையாக வழங்கப்பட்ட சாபத்தைப் போக்க முடியாது என்று கூறிய சிவன், "இதற்கு ஒரு வழி காணலாம். கிருஷ்ணபட்சம் 14 நாட்களும் உன் மாமனார் சாபப்படி நீ தேய்ந்து (க்ஷீணித்து) போவாயாக. சுக்கிலபட்சம் 14 நாட்களும், நீ வளர்ந்து முழுவடிவம் பெறுமாறு நான் வரம் தருகிறேன்" என்றார். அதிலிருந்து சந்திரன் தேய்வதும், வளர்வதும் நிலைத்து விட்டன. சோமன் வழிபட்ட இடம்தான் சோமநாதர் இருக்குமிடம்.*

**2. மல்லிகார்ஜுனர்**

*தனக்கு முன்னர் கணேசனுக்குத் திருமணம் ஆகி விட்டதால் பெற்றோர்கள் தன்னை ஏமாற்றி விட்டார்கள் என்று கோபம் கொண்ட கார்த்திகேயன், கிரௌஞ்ச மலையில் வந்து தங்கினான். பெற்றோர்கள் மகனைப் பிரிந்த துயரத்தால் அடிக்கடி பார்க்க வந்த பொழுது, கார்த்திகேயன் அவர்களை நெருங்க விடவில்லை. தூரத்தில் இருந்து அடிக்கடி வருவது கஷ்டம் என்பதால், கிரௌஞ்ச மலைக்கு மிகச் சமீபத்தில் இருக்கும் மல்லிகார்ஜுனத்தில் சிவனும், பார்வதியும் வந்து தங்கினர்.*

**3. மகாகாளர்**

*சிப்ரா நதிக் கரையில் உள்ள அவந்தியில் வேதப்பிரியா என்ற பிராமணன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு தேவப்பிரியா, பிரியமேதா, சுவரிதா, சுவரதா என்ற 4 பிள்ளைகள் இருந்தனர். இந்த பிராமணன் வேத வழியைப் பற்றி சிவனை வழிபட்டதோடு, தன் பிள்ளைகளையும் அதே வழியில் பழக்கி இருந்தான். இவர்கள் வாழ்ந்த இடத்திற்குப் பக்கத்தில் 'ரத்னமலை' என்று ஒரு மலை இருந்தது. அம்மலையில் துஷ்ணன் என்ற ஓர் அரக்கன் வாழ்ந்து வந்தான். இந்த பிராமணர்கள் சிவ வழிபாடு செய்வது அவனுக்குப் பிடிக்க*

வில்லை. இதனிடையில் இந்தப் பிள்ளைகளின் தந்தை இறந்து விட்டார். என்றாலும், பிள்ளைகள் சிவனை வணங்குவதில் தீவிரமாக இருந்தனர். இதைக் கண்ட அரக்கன் அவந்தியை முற்றுகையிட்டு இவர்களை அழிக்க முயன்றான். நால்வரும் சிவலிங்கத்திடம் சென்று தங்கள் குறைகளைக் கூறி வேண்டினர். திடீரென்று ஒரு பெரிய சப்தம் கேட்டது. அங்கு வெளிப்பட்ட சிவபெருமான் அரக்கனான துஷ்ணனை எரித்துச் சாம்பலாக்கி விட்டார். அன்றிலிருந்து பக்தர்களின் வேண்டுகோளின்படி மகாகாளர் அங்கேயே தங்கிவிட்டார்.

### 4. ஓம்கார லிங்கம்

விந்திய மலை எல்லா மலைகளையும்விடத் தான் உயர்ந்த தாகவும், தன்னிடம் எல்லாப் பொருளும் இருக்கின்றன என்றும் அதிகக் கர்வம் கொண்டிருந்தது. ஒருமுறை நாரதர் அங்கே வந்த பொழுது விந்தியம் தன் பெருமையைச் சொல்லிக் கொண்டது. உடனே நாரதர், "அதிக கர்வம் பட வேண்டாம். சிவன் வாழ்கின்ற காரணத்தால் மேருமலை உன்னை விட உயர்ந்தது" என்று கூறினார். அதைக் கேட்ட விந்தியம் உடனே சிவனை நோக்கித் தவம் செய்தது. ஆறு மாதம் தவம் செய்த பின் சிவன் வெளிப்பட்டார். விந்தியம் தன்னிடத்தில் சிவன் தங்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டதால் ஓம்கார லிங்கமாக அங்கேயே தங்கிவிட்டார்.

### 5. கேதார லிங்கம்

விஷ்ணு ஒருமுறை தன்னையே நரன் என்றும், நாராயணன் என்றும் இரு முனிவர்களாக மாற்றிக் கொண்டார். இமயமலையில் உள்ள 'பத்ரிகாசரமம்' என்ற இடத்தில் இந்த இரு முனிவர்களும் சிவனைக் குறித்து நெடுங்காலம் தவம் செய்தனர். கடைசியாக சிவன் தோன்றி, "என்னை ஏன் அழைத்தீர்கள்? நீங்களே வணங்கத் தகுந்த

வர்கள் தானே?" என்றார். இருவரும் ஆசிரமத்தின் பக்கத்தில் உள்ள கேதாரம் என்னும் மலை உச்சியில் சிவன் என்றும் லிங்க வடிவில் இருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அவர் அவ்விதம் தங்கிய இடமே கேதாரம். அந்த லிங்கத்தின் பெயரே கேதார லிங்கம்.

**6. பீம சங்கர லிங்கம்**

சகிய என்ற மலையில் பீமன் என்ற அரக்கனும், அவன் தாயும் வாழ்ந்து வந்தனர். ஒருநாள் பீமன் தன் தாயைப் பார்த்து, "நாம் ஏன் தனியாக இங்கு வாழ்கிறோம்? என் தந்தை யார்?" என்று கேட்டான். மிக்க வருத்தத்துடன் தாய் கர்கதி தன் வரலாற்றைச் சொன்னாள். விராதன் என்ற ராட்சச னுக்குத் தான் மனைவியாக இருந்ததாகவும், விராதனை இராமன் கொன்று விட்டபடியால் இராவணன் தம்பியான கும்பகர்ணனைத் தான் மணந்து பீமன் என்ற இப்பிள்ளை யைப் பெற்றதாகவும், இலங்கைக்குச் சென்ற கும்பகர்ணனை இராமன் கொன்றுவிட்டான் என்றும், அதனால் வேறு போக்கிடம் இல்லாமல் காட்டிலே இருப்பதாகவும் கூறினாள். இராமன் விஷ்ணுவின் அவதாரம் ஆகையால், விஷ்ணுவைப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பீமன் 1000 ஆண்டுகள் தவம் புரிந்தான். பிரம்மன் வெளிப்பட்டவுடன் அனைவரையும் வெல்லக்கூடிய சக்தி தனக்கு வேண்டுமெனக் கேட்டுக் கொண்டான். அது கிடைத்தவுடன் பக்கத்தில் உள்ள விஷ்ணு பக்தனாகிய அரசன் காமரூபனை வென்று அவனைச் சிறையிலும் அடைத்துவிட்டான். சிறையில் அகப்பட்ட காமரூபன் தினமும் சிவனை வழிபட்டு வந்தான். இதை அறிந்த பீமன் சிறைக்குள் வந்து காமரூபனை வாளால் வெட்ட முயன்றான். சிவன் எதிரே தோன்றி தன்னுடைய சூலாயுதத்தால் பீமனுடைய வாளைக் கீழே விழச் செய்தான். பீமன் பயன்படுத்திய எல்லா ஆயுதங்களும், சிவனுடைய

திரிசூலத்தால் பொடியாயின. இறுதியில் சிவன் பீமனைக் கொன்று விட்டான். காமரூபனின் வேண்டுகோளின்படி பீமசங்கரன் என்ற பெயருடன் அங்கேயே லிங்க வடிவாகத் தங்கிவிட்டார். பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களுள் இது ஆறாவது ஆகும்.

**7. விசுவநாதரும் வாரணாசியும்**

ஏழாவது ஜோதிர்லிங்கம் வாரணாசியில் உள்ள விசுவ நாதர் ஆகும். புண்ணியத் தலங்களில் எல்லாம் மிகச் சிறப்பு உடையதாகும். ஒருமுறை பிரம்மாவே இங்கிருந்து தவம் செய்தார். மிக உக்கிரமானதும், பிறர் எளிதில் செய்ய முடியாததும் ஆன அத்தவத்தைக் கண்டு விஷ்ணுவே தலையை உலுப்பிக்கொண்டார். உலுப்பிய பொழுது அவர் காதில் இருந்து ஒரு மணி வாரணாசியின் ஒரு பகுதியில் விழுந்தது. அப்பகுதிக்கு 'மணிக்கரணிகை' என்று பெயர் வந்தது. பிரளயகாலத்தில் உலகம் முழுதும் நீரில் மூழ்கி விடும் பொழுது, சிவன் தன்னுடைய சூலத்தால் வாரணாசியைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறார். பிரளயம் முடிந்து உலகம் படைக்கப்படும் பொழுது வாரணாசியை அந்த இடத்தில் வைக்கிறார்.

ஒருமுறை சிவனையும், பார்வதியையும் கண்ட பிரம்மன், தன் ஐந்து முகங்களாலும் சிவனுடைய பெருமையைப் பாடினார். அதில் ஒரு தலை மந்திரங்களைத் தவறாகச் சொன்னதால் சிவன் அந்தத் தலையைக் கிள்ளிவிட்டார். பிராமணனாகிய பிரம்மனின் தலை கொய்யப்பட்டதால் சிவனை, பிரம்மஹத்தி தோஷம் பற்றிக் கொண்டது. சிவனிடம் ஒட்டிக் கொண்ட அந்தத் தலை என்ன செய்தும் கீழே விழவில்லை. சிவன் வாரணாசி பக்கம் வந்த பொழுது தலை தானே கீழே விழுந்து விட்டது. எனவே வாரணாசியின்

பெருமையை அறிந்த சிவன், விசுவநாதராக அங்கேயே தங்கிவிட்டார்.

### 8. திரியம்பகமும் கௌதமனும்

நாட்டின் தென்பகுதியில் பிரம்ம பர்வதம் என்ற ஒரு மலை இருந்தது. அதன் ஒரு பகுதியில் கௌதம முனிவரும், அவன் மனைவி அகல்யையும் தவம் செய்து கொண்டிருந்தனர். பல ஆண்டுகளாக மழை இன்மையால் காடெல்லாம் கரிந்து சாம்பலாகும் நிலை வந்தது. அப்பொழுது கௌதமரும், அகல்யையும் வருணனைக் குறித்துத் தவம் செய்தனர். வருணன் எதிர்ப்பட்டவுடன் "நாடு முழுவதும் மழை பெய்ய வேண்டும்" என்று வரம் கேட்டார். வருணன் "அது தன்னுடைய சக்திக்கு அப்பாற்பட்டது" என்றும், "தன்னால் முடிந்தது ஒரு நீர் நிறைந்த குளம் அங்கு இருக்குமாறு செய்வதுதான்" என்றும் கூறினான். நீர் நிறைந்த குளம் உண்டாயிற்று. இந்தக் குளத்தை ஏனைய முனிவர்களும் பயன்படுத்தி வந்தனர். கௌதமரின் சீடர்களும் தண்ணீர் கொண்டுவரச் சென்று மிகவும் காலம் தாழ்த்தி வந்தனர். ஏன் என்று முனிவர் கேட்டபொழுது ரிஷிகளின் மனைவிமார்கள் தங்களைத் தண்ணீர் எடுக்க விடுவதில்லை என்று கூறினர். அன்றிலிருந்து அகலிகையே தண்ணீர் கொண்டுவரப் புறப்பட்டாள். அவளையும் அப் பெண்கள் எளிதில் நீர் எடுக்க விடவில்லை. அவளையும், கௌதமரையும் அந்த இடத்தை விட்டுத் துரத்திவிட வேண்டும் என்று மனைவிமார்கள் தங்கள் கணவன்மார்களை நச்சரித்தனர். வேறு வழியில்லாமல் முனிவர்கள் கணேசனை நோக்கி வேண்டினர். கணேசன் வந்த பொழுது கௌதமரையும், அகல்யையையும் அந்த எல்லையை விட்டுப் போக வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். அந்த வேண்டுகோள் தவறானது என்பதை அறிந்த கணேசன், இவர்களுக்கு புத்தி கற்பிப்பதற்காகத் தானே ஒரு பசுமாட்டு

உருவம் எடுத்து அவர் ஆசிரமத்திற்குப் பக்கத்தில் வைத்திருந்த தானியத்தைத் தின்னத் தொடங்கிற்று. ஒரு புல்லை எடுத்து கௌதமர் விரட்ட, அது அங்கேயே விழுந்து செத்து விட்டது. பசுவதை செய்ததால் கௌதமரையும், அகல்யையையும் அவ்விடத்தை விட்டு விரட்டி விட்டனர். பசுவதைக்குப் பிராயச்சித்தம் செய்ய விரும்பிய கௌதமர், பிரம்ம பர்வதத்தை நூறுமுறை சுற்றி வரவேண்டும் என்றும், இன்னும் சில கடுமையான கடமைகளையும் முனிவர்கள் கூறினார்கள். சொல்லப்பட்ட சடங்குகளை எல்லாம் முடித்தபிறகு கௌதமரும் அகல்யையும் சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தனர். சிவன் தோன்றிய பொழுது, தங்களுடைய ஆசிரமத்திற்குப் பக்கத்தில் கங்கைநதி ஓட வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். உடனே கங்கை, சிவனும் பார்வதியும் இங்கே தங்குவதானால் தான் இங்கே ஓடுவதாக ஒத்துக் கொண்டாள். சிவன் தங்கிய இடம் 'திரியம்பகம்' என்று போற்றப்பட்டது. கோதாவரி என்ற பெயருடன் கங்கை அங்கே ஓடிக் கொண்டிருக்கிறது. கொடுமை செய்த முனிவர்களையும், அவர்கள் பத்தினிமார்களையும் மன்னிக்குமாறு கௌதமர் வேண்டிக் கொண்டார்.

### 9. இராவணனும் வைத்தியநாதனும்

இராவணன் இமயமலையில் பலகாலம் தவம் புரிந்தான். சிவன் வெளிப்படவில்லை. இன்னும் தெற்கே வந்து விருட்ச கந்தகம் என்னும் இடத்தில் தவம் புரிந்தான். அங்கும் வெளிப் படவில்லை. இன்னும் தெற்கே வந்து ஒரு பெரிய குழியைத் தோண்டி அதனுள் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டான். அப்போதும் சிவன் வெளிப்படவில்லை. இது கண்ட இராவணன் உயிரோடு இருந்து பயனில்லை என்று நினைத்துப் பெரிய தீயை வளர்த்து தன் ஒவ்வொரு தலையாக

அறுத்து அக்னியில் போட்டான். ஒரு தலை மிஞ்சி இருக்கும் பொழுது சிவன் தோன்றினார். "போதும் நிறுத்து. உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். "யாவரையும் வெல்லும் வலிமையையும், எரிந்துபோன ஒன்பது தலைகளும் வேண்டும்" என்று கேட்டான். சிவன் அப்படியே கொடுத்தார். குழி வெட்டிய இடத்தில் இருப்பவர்தான் ஒன்பதாவது ஜோதிர்லிங்கமாகிய வைத்தியலிங்கம்.

மிக்க மகிழ்ச்சியோடு இராவணன் இலங்கையில் இருக்கும்போது அவனைக் கண்டு அஞ்சிய தேவர்கள், நாரதரை ஏதாவது வழி செய்யுமாறு வேண்டினர். உடனே நாரதர் இலங்கைக்குச் சென்று இராவணனைச் சந்தித்து "சிவனுடைய வரங்களுக்கு இவ்வளவு மதிப்புத் தர வேண்டாம். இவ்வரங்கள் உண்மையா என்று சோதிக்க ஒரு வழி உண்டு. சிவன் அமர்ந்திருக்கும் கைலை மலையை நீ தூக்கிப் பார்" என்று சொன்னார். இராவணன் அப்படிச் செய்ய, "உன்னை அழிக்க ஒரு மனிதன் தோன்றுவான்" என்று சிவன் சாபம் கொடுத்தார்.

**10. நாகேச லிங்கம்**

மேலைக் கடற்கரையில் தாருகன் என்ற அரக்கனும், அவன் மனைவியாகிய தாருகியும் வாழ்ந்து வந்தனர். பார்வதியிடத்தில் அவள் பெற்ற வரத்தினால் அவள் எங்கே சென்றாலும், ஒரு பெரிய காடு அவள் பின்னேயே செல்லும். இந்த வர பலத்தால் நல்லவர்கள் இருக்கும் இடம், வேள்விகள் நடக்கும் இடம் ஆகியவற்றிற்குத் தாருகி சென்று அந்த இடமெல்லாம் காடாக ஆக்கி அவர்களை அழித்து வந்தாள். இந்நிலையில் அச்சமடைந்த தேவர்கள் அவுர்வா என்ற முனிவரிடத்தில் சென்று தங்களைக் காக்குமாறு வேண்டினர். முனிவர்,

அரக்கர்கள் யாரிடம் போர் புரிந்தாலும் அழிந்து விடுவார்கள் என்று சாபமிட்டார். அரக்கர்கள் பயந்து கொண்டு அமைதியாக இருந்த பொழுது, தேவர்கள் அவர்களைத் தாக்கினர். அசுரர்களுக்கு தர்ம சங்கடம். தேவர்களுடன் போரிட்டால் அழிய நேரிடும். போரிடாவிட்டால் தேவர்கள் கை ஓங்கி விடும். இந்த தர்ம சங்கடத்தில் இருந்து தப்பிக்க சமுத்திரத்தில் சென்று வாழ அரக்கர்கள் ஓடினர். ஆனால் கடல் மூலம் பயணம் செய்யும் மக்களைத் துன்புறுத்தினர். ஒருமுறை கப்பலில் சென்ற வைசியனை இவர்கள் பிடித்துச் சிறையில் அடைத்தனர். அந்த சுப்ரியா என்ற வைசியன் சிவ வழிபாடு செய்யும் பழக்கமுள்ளவன். எனவே சிறைக்குள் இருந்தபடியே சிவ பூசை செய்தான். இதை அறிந்த அரக்கர்கள் அவன் பூசையைக் கெடுப்பதற்காக அவனைக் கொல்ல பல ஆயுதங்களைப் பயன்படுத்தினர். சிவன் தந்த பாசுபதத்தைக் கொண்டு சுப்ரியா என்ற வைசியன் அரக்கர்களை அழித்தான். வைசியன் வழிபட்ட லிங்கமே நாகேச லிங்கமாகப் போற்றப் படுகிறது.

### 11. இராமனும் இராமேசுவரமும்

இராமன் வானர சேனைகளுடன் இலங்கைமேல் படையெடுத்துச் செல்ல கடற்கரைக்கு வந்து சேர்ந்தான். நீர் தாகமெடுத்ததால் குரங்கிடம் சொல்லி தண்ணீர் கொண்டு வருமாறு பணித்தான். தண்ணீர் வந்தவுடன் சிவனுக்குப் படைக்காமல் எதையும் உண்ணாதவனாகிய இராமன், ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து அதற்கு அந்நீரைப் படைத்தார். வழிபாடு முடிந்ததும், சிவனும் பார்வதியும் தோன்றி இராமனை வாழ்த்தினார்கள். அதே இடத்தில் சிவபெருமான் நிலையாக இருக்க வேண்டுமென்று

இராமன் வேண்டிக் கொண்டதால், இராமலிங்கமாக சிவன் அங்கேயே தங்கிவிட்டார்.

### 12. குஷ்மேஸ லிங்கம்

தென்பகுதியில் சுதர்மா என்ற பிராமணன் சுதேஹா என்ற தன் மனைவியுடன் வாழ்ந்து வந்தான். நீண்ட காலமாக இருவருக்கும் குழந்தையில்லை. எனவே அவன் வருத்தத்தை விட அவள் வருத்தம் பெரிதாக இருந்தது. பிற பெண்கள் அவளைக் கேலி செய்யத் தொடங்கினர். அதனால் வருத்தம் அடைந்த அவள் தன் உறவினராகிய குஷ்ணா என்பவளை அவன் மறுமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினாள். சுதர்மா "அப்படியே மணம் புரிந்து கொண்டு அவளுக்கு ஒரு குழந்தை பிறந்து விட்டால், நீ அதனைத் தாங்க மாட்டாய், பொறாமையால் மிகவும் துன்புறுவாய்" என்று கூறித் தடுத்தான். "அது பற்றிக் கவலை வேண்டாம். நான் தானே இதை முன்னின்று செய்கிறேன்" என்று கூறிவிட்டு, குஷ்ணாவை இரண்டாம் தாரமாக மணமுடித்து வைத்தாள். குஷ்ணா பெரிய சிவ பக்தை. தினமும் களி மண்ணால் 108 சிவ லிங்கங்கள் செய்து அவற்றைப் பூசை செய்துவிட்டு, பக்கத்தில் உள்ள குளத்தில் லிங்கங்களைப் போட்டு விடுவது அவள் வழக்கம். இவ்வாறு ஓர் இலட்சம் லிங்கங்களைப் பூசை செய்து குளத்தில் போட்டிருந்தாள். உரிய காலத்தில் ஓர் அழகிய ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை வளர வளர முதல் மனைவியின் மனத்தில் பயங்கரமான பொறாமை உருவெடுத்தது. இதன் முடிவில் ஒரு நாள் மூத்தவள் குழந்தையின் கழுத்தை வெட்டி அந்த உடலைப் பக்கத்தில் உள்ள குளத்தில் போட்டு விட்டாள். மறுநாள் விழித்ததும் என்ன நடந்ததென்றே தெரியாமல் பூஜை செய்யத் தொடங்கி

விட்டாள் குஷ்ணா. இதனிடையில் குழந்தை இல்லை என்று கண்டவுடன் அனைவரும் பெருங் கூச்சலிட்டுத் தேடுவாராயினர். இத்தனைக் கூச்சலிலும், குழப்பத்திலும் ஒரு சிறிதும் ஈடுபடாமல் குஷ்ணா சிவ பூஜையில் ஈடுபட்டிருந்தாள். அவள் பூசையை ஏற்றுக் கொண்ட சிவன் அவள் பிள்ளையைப் பிழைக்கச் செய்து அவளிடம் சேர்ப்பித்தார். மூத்தவளை தண்டிக்கத் துவங்கியபோது, அவளை மன்னித்து விடும்படி குஷ்ணா வேண்டிக் கொண்டாள். இந்தப் பெருந்தன்மையில் மகிழ்ச்சி அடைந்த சிவன், மற்றொரு வரம் கொடுக்கத் தயாரானார். குஷ்ணா சிவன் கொடுப்பதாகக் கூறிய வரத்தைப் பயன்படுத்தி அந்தக் குளத்தங்கரையிலேயே லிங்க ரூபமாகச் சிவன் இருக்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். பன்னிரெண்டாவது ஜோதிர் லிங்கமாகக் குஷ்மேஸா என்ற பெயருடன் சிவன் அங்கே இருக்கிறார்.

**சுதர்சன சக்கரக் கதை**

முன்னொரு காலத்தில் நடைபெற்ற தேவாசுர யுத்தத்தில் தேவர்கள் மிகவும் நலிந்து போனார்கள். அவர்கள் அனைவரும் ஓடிச்சென்று விஷ்ணுவிடம் முறையிட்டனர். பலம் பொருந்திய அசுரர்களுடன் போர் புரிய வேண்டுமானால், அதற்குரிய ஆயுதம் எனக்கு வேண்டும். அதைக் கொடுக்கக் கூடியவர் சிவபிரானே என்று விஷ்ணு கைலை சென்று சிவனுடைய ஆயிரம் நாமங்களை தினமும் சொல்லி நீண்ட காலம் வழிபட்டார். ஆயிரம் நாமங்களை ஒவ்வொன்றாகச் சொல்லும் பொழுது ஒவ்வொரு தாமரைப் பூவை சிவனுக்கு அர்ச்சனையாகச் செய்தார். ஒரு நாள் ஆயிரம் பூக்களில் ஒன்று குறைந்து விடவே 'தாமரைக் கண்' என்று சொல்லப்படும் தன் ஒரு கண்ணைப் பறித்து அர்ச்சனை செய்து விட்டார். மகிழ்ந்த

சிவபிரான் வெளிப்பட்டு, "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்க, "அசுரர்களை அழிப்பதற்கு ஓர் ஆயுதம் வேண்டும்" என்று கேட்டார். சிவபிரான் மகிழ்ந்து சுதர்சன சக்கரத்தைத் தந்தார்.

## சிவராத்திரி விரதம்

முன்னொரு காலத்தில் ருருத்ரகா என்ற வேடன் காட்டில் வாழ்ந்து வந்தான். கொலை செய்வதும், கொள்ளை அடிப்பதும், மிருகங்களை வேட்டையாடுவதும் அவன் தொழிலாகும். அவனுக்கு யாரிடமும் கருணை காட்டிப் பழக்கமும் இல்லை. ஒருமுறை அவனுடைய குடும்பத்தினர் மிகவும் பசியால் வருந்தியபொழுது அவனிடம் "எதையாவது வேட்டையாடிக் கொண்டு வா" என்றனர். வேடன் வேட்டையாடப் புறப்பட்டான். எந்த விலங்கும் கிடைக்காமையால் நீர் நிறைந்த குட்டையின் பக்கத்தில் நின்ற அவன் எப்படியும் ஏதாவது ஒரு மிருகம் தண்ணீர் குடிக்க வரும், பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்து, ஒரு குடுவையில் தண்ணீர் நிரப்பிக் கொண்டு பக்கத்தில் உள்ள மரத்தில் அமர்ந்து கொண்டான். அது ஒரு வில்வ மரம். எனவே அதனடியில் ஒரு லிங்கம் இருப்பதே அவனுக்குத் தெரியாது. அன்று சிவராத்திரி என்பதும் தெரியாது. பொழுது சாய்ந்ததும் ஒரு பெண்மான் நீர் குடிக்க வந்தது. பெருமகிழ்ச்சி அடைந்த வேடன் தன்னுடைய வில்லைக் கையிலெடுத்தான். அவனுடைய குடுவையில் இருந்த நீர் கொஞ்சம் கீழே விழுந்தது. அவன் அசைந்து எழுந்ததால் மரத்தில் உள்ள வில்வங்கள் கீழே விழுந்தன. இவை இரண்டும் கீழே இருந்த லிங்கத்தின்மேல் விழுந்தன. வேடன் குறிபார்த்தபொழுது, அந்தப் பெண் மான் கூறிற்று: "வேடனே, என்னை இப்போது கொல்ல வேண்டாம். என் கணவரும் பிள்ளைகளும் காத்துக்

கொண்டிருப்பார்கள். நான் போய் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு நிச்சயம் வருவேன்" என்றது. அவன் தன் வார்த்தையை நம்பவில்லை என்று அறிந்தவுடன் பெண் மான் மீண்டும் வருவதாக சத்தியம் செய்தது. மனமிரங்கிய வேடன் அதனைப் போய் வருமாறு பணித்தான்.

அந்தப் பெண் மான் சென்ற சிறிது நேரத்தில் மற்றொரு பெண் மான் வந்தது. முதல் மானுக்கு நடந்த அனைத்தும் இம்மானிடமும் நடைபெற்றது. இரண்டாம் முறை சிவலிங்கத் திற்கு அபிஷேகம், வில்வார்ச்சனை அவனையுமறியாமல் செய்தான். இந்தப் பெண்மானும் முன்னர் வந்த பெண்மானும் சகோதரிகளாகும். ஒரே ஆண்மானுக்கு இந்த இரண்டு பெண் மான்களும் மனைவியாயிருந்தன.

இதற்கு அடுத்தபடியாக ஓர் ஆண் மான் வந்தது. அதே உரையாடல், அதே சக்தியால் மூன்றாம் முறையாக லிங்கத்திற்கு அபிஷேகம், வில்வார்ச்சனை நடைபெற்றது. ஆண் மான் போய் சிறிது நேரத்திற்கெல்லாம் மூன்று மான்களும் தாங்கள் செய்த சத்தியப்படியே வேடனிடம் வந்தன. ஒவ்வொன்றும் அவன் தன்னையே கொல்ல வேண்டும் என வேண்டிக் கொண்டன. இது போதாதென்று அவற்றின் பிள்ளைகளாகிய மான் கன்றுகள் வந்து தாய் தகப்பனில்லாது நாங்கள் உயிர் வாழ முடியாது. எனவே அவர்களை விட்டுவிட்டு எங்களைக் கொல்லுங்கள் என்று கூறின. வேடன் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தான். அந்த நேரத்தில் அவனையும் அறியாமல் செய்த சிவராத்திரி மூன்று கால பூஜையால் சிவன் வெளிப்பட்டு அவன் குற்றங்களை எல்லாம் மன்னித்து இந்த விநாடி முதல் உன்னுடைய பெயர் குகன் என்று வழங்கட்டும். ஸ்ரீராமன் இங்கு வரும்பொழுது அவனுக்குத் தோழனாக நீ இருப்பாய் என்று கூறி மறைந்தார்.

## சந்திரசேகரன்

முன்னொரு காலத்தில் பார்வதி சிவனைப் பார்த்து உங்கள் நெற்றியில் இருக்கும் சந்திரன் எப்படி அங்கே வந்தான் என்று எனக்குச் சொல்ல முடியுமா என்று வினவினாள். உடனே சிவன் அந்தக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

பார்வதி முற்பிறப்பில் சதி என்ற பெயருடன் தட்சனின் மகளாகப் பிறந்திருந்தார். தட்சன் யாகத்திற்குச் சென்ற சதி அவனால் அவமானப்படுத்தப்பட்டு அங்கேயே உயிரை நீத்தார். சதியை இழந்த சிவன் இங்குமங்குமாக அலைந்தார். அங்கு கடுமையான தவம் மேற்கொண்டார். அவருடைய கடுமையான தவத்தினால் மரம், செடி, கொடிகள் ஆகிய அனைத்தும் எரிந்து சாம்பலாயின. மலைகளும் இதில் அடங்கும். தேவர்கள் எல்லாம் கூடி பிரம்மனிடம் இந்நிலையை எடுத்துக் கூறினர். பிரம்மன் சந்திரனை அமுத கலசத்திற்குள் போட்டு, அந்தக் கலசத்தையும், வேறொரு கலசத்தில் விஷத்தையும் நிரப்பிக் கொண்டு சிவனிடம் சென்றார்கள். சிவனிடம் இந்த இரண்டு கலசங்களிலும் இன்னதென்று சொல்லாமல் இந்த இரண்டு கலசங்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றார். சிவன் முதலில் அமுத கலசத்தை எடுத்துக் குடித்தார். அதனுள் இருந்த சந்திரன் திடீரென்று சிவனுடைய நெற்றியில் ஒட்டிக் கொண்டு அவரைக் குளிர்ச்சியடையச் செய்தான். விஷக் கலசத்தில் ஒரு விரலை நனைத்துச் சிவன் தொண்டையில் தொட்டார். உடனே அந்த இடம் நீல நிறமாக மாறி விட்டது. அதிலிருந்து சிவனுக்கு நீலகண்டன் என்று பெயர் வந்தது. நெற்றியில் ஒட்டிய சந்திரன் ஓர் அணியைப் போல இருப்பதால் சிவனுக்குச் சந்திரசேகரன் என்ற பெயர் ஏற்பட்டது.

## சிவன் அணியும் விபூதி

ஒரு காலத்தில் பிருகுவின் பரம்பரையில் வந்த பிராமணர் மிகக் கடுமையான ஒரு தவத்தை மேற்கொண்டார். அவர் தவ வலிமையால் சுற்றிலும் உஷ்ணம் பரவியது. அதன்மேல் மேகம் மழையைப் பொழிந்தது. இந்த உஷ்ணமோ, நீரின் குளிர்ச்சியோ அந்த பிராமணனை ஒன்றும் செய்யவில்லை. தவம் தொடர்ந்தது. கொடிய விலங்குகளில் இருந்து மான் வரை அவரிடம் அச்சமின்றி அன்போடு பழகின. பசி எடுக்கும்போது பிராமணன் அந்த விலங்குகளைப் பார்த்து, "சாப்பிட ஏதாவது கொண்டு வாருங்கள்" என்று சொல்ல, உடனே அந்த மிருகங்கள் அவனுக்குத் தேவையான மாமிசத் தைக் கொண்டு வந்து கொடுத்தன. தவம் மேலும் தொடரவே, மாமிசம் சாப்பிடுவதை விட்டு விட்டுப் பச்சை இலைகளைச் சாப்பிடத் தொடங்கினார். பச்சை இலைகளுக்கு வடமொழியில் 'பர்னா' என்று பெயர். ஆதலால், அதைத் தின்னும் பிராமணர் 'பிரன்னதா' என்று அழைக்கப்பட்டார். மேலும் தவம் தொடர்ந்தது. ஒரு நாள் பிராமணத் தவசி புல்லறுக்கும் கத்தியைக் கொண்டு புற்களை வெட்டிக் கொண்டிருந்தான். அப்போது அந்தக் கத்தி அவர் நடுவிரலை வெட்டி விட்டது. என்ன அதிசயம்? இரத்தம் வருவதற்குப் பதிலாக வெட்டுண்ட விரலில் இருந்து செடி, மரம் முதலிய வற்றிற்கு உள்ளே இருக்கும் தாவர உயிர்ச்சாறு போன்ற ஒரு திரவம் காயத்தின் வழியே கசியத் துவங்கியது. பிராமணர் தான் மிகப் பெரிய நிலையை அடையத் துவங்கி விட்டதாகவும், இரத்தத்திற்குப் பதிலாக தாவர உயிர்ச்சாறு தன் உடம்பில் ஓடுகிறது என்றும் குதிக்கத் தொடங்கிவிட்டார். இதைப் பார்த்த சிவன் இவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்று கருதி பிராமணன் வடிவம் கொண்டு இந்தப் பார்ப்பனன் எதிரே

வந்தார். இவனைப் பார்த்து, "என்ன ஆனந்தம் உனக்கு? ஏன் இப்படித் துள்ளித் துள்ளிக் குதிக்கிறாய்?" என்று கேட்டார். பிராமணத் தவசி நடந்தவற்றைக் கூறித் தவத்தின் உச்ச கட்டத்தை அடைந்துவிட்டேன். அதனால்தான் குதிக்கிறேன்" என்றான். இதைக்கேட்ட பிராமண சிவன், "பூ! இவ்வளவு தானா? இன்னும் உன்னுடைய உடம்பில் நீர்ச்சத்துதானே இருக்கிறது. என்னுடைய உடம்பைப் பார்!" என்று கூறிவிட்டுத் தன்னுடைய விரலை வெட்டிக் கொண்டார். அதிலிருந்து விபூதி பொலபொலவெனக் கொட்டியது. பிராமணன் அகந்தை அடங்கியது. அதிலிருந்து சிவன் மேனி எல்லாம் விபூதி விளங்கத் தொடங்கியது.

**கௌரியின் கதை**

பார்வதி நீல நிறத்தோடு இருந்ததால் சிவன் அவளைக் காளி என்றே அழைத்தார். பார்வதிக்கு இது பிடிக்கவில்லை. ஏன் நான் கறுப்பாக இருக்கிறேன் என்று சுட்டிக் காட்டு கிறீர்கள். என்னை விரும்புவது போல் பாசாங்கு செய்து ஏன் என்னைக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்? இந்த நிறம் எனக்குப் பிடிக்கவில்லை. நான் பிரம்மனை நோக்கித் தவம் செய்து இந்த நிறத்தை மாற்றிக் கொள்கிறேன் என்று சொல்லி விட்டு பிரம்மனை நோக்கித் தவம் செய்தாள். பிரம்மன் எதிர்ப்பட்டு, "என்ன வேண்டும்?" என்று கேட்டபொழுது, இந்த நீல (கறுப்பு) நிறத்தை ஒழித்துவிட்டு நான் கௌரியாக வேண்டும் என்று கூறினார். பிரம்மன் வருவதற்கு முன்பே பார்வதியின் எதிரே ஒரு கொடிய புலி அவளை உண்ண வேண்டும் என்ற எண்ணத்துடன் அவள் எதிரே படுத்திருந்தது. தன்னிடம் அன்பு பாராட்டுகிறது என்று நினைத்து மகிழ்ச்சி அடைந்த பார்வதி புலியின் உடம்பினுள் பிரவேசித்தாள்.

அவளுடைய சக்தி உள்ளே புகுந்ததால் புலி மிகச் சாதுவான பிராணியாக மாறி அவளுடனேயே இருந்து விட்டது. பிரம்மன் பார்வதியைப் பார்த்து, "நீ விரும்பியதை அடைவாய்" என்று கூறியவுடன் பார்வதியின் மேனியிலிருந்து கறுப்பு நிறம் முழுவதும் கீழே உதிர்ந்து விட்டது. அக் கறுப்பை எல்லாம் ஒன்றாகத் திரட்டி பிரம்மன் எடுத்துக் கொண்டான். அவன் வேண்டியதும் அதுதான். காரணம் வருமாறு: இரண்டு அரக்கர்கள்— சும்பன், நிசும்பன் என்ற இரு அரக்கர்கள் பிரம்மனை நோக்கிக் கடுந்தவம் புரிந்து, பிரம்மன் எதிர்ப்பட்ட வுடன் எந்த ஆண் மகனும் தங்களைக் கொல்ல முடியாத வரத்தைப் பெற்றனர். அதன்பிறகு அவர்கள் செய்த கொடுமைக்கு அளவே இல்லை. பிரம்மன் சிவபெருமானிடம் சென்று, நடந்தவற்றைக் கூறிப் பார்வதியின் ஆற்றலின் ஒரு பகுதியைப் பெண்ணாக்கித் தந்தால் சும்ப, நிசும்பர்களை அழிக்க முடியும் என்று வேண்டிக் கொண்டார். பிரம்மனின் இவ் வேண்டுகோளுக்கு இணங்கவே பார்வதியைத் தவம் செய்யுமாறு அனுப்பினார் சிவன். கீழே விழுந்த கறுப்பை யெல்லாம் ஒன்றாகத் திரட்டி கௌசிகி என்ற பெயருடன், பிரம்மனிடம் ஒப்படைத்தார். பார்வதியின் அம்சமாக அவள் இருந்தாள். அவளைக் கொண்டே சும்ப, நிசும்பர்களை அழிக்கச் செய்தான் பிரம்மன். கௌரியாக மாறியவள் புலியையும் அழைத்துக் கொண்டு சிவனிடம் சென்றாள். அப்புலியை ஓர் ஆணாக மாற்றி நந்திக்குத் துணையாக 'சோமநந்தி' என்ற பெயருடன் இருக்கச் செய்தார் சிவன்.

**உபமன்யுவின் கதை**

முன்னொரு காலத்தில் வியாக்ர பாதர் (புலிக்கால் முனிவர்) என்ற முனிவருக்கு உபமன்யு என்ற ஓர் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை வளர்ந்த பொழுது தனக்குப் பால்

வேண்டும் என்று அழுதது. உபமன்யுவின் தாய் பால் போன்ற ஒரு பொருளைக் கொடுத்தாள். குழந்தை அதைச் சாப்பிட்டுப் பார்த்துத் தந்தையிடம் சென்று இது பாலில்லை. பாலின் ருசி இதிலில்லை என்று அடம் பிடித்தது. அப்போது உபமன்யுவின் தாய் 'நானோ வறுமையில் வாடுகிறேன்; பாலுக்கு எங்கே போவது? நான் அரிசிக் கஞ்சிதான் உனக்குத் தந்தேன்' என்றார். உபமன்யு சிவனை நோக்கித் தவம் செய்து பாலைப் பெறப் போகிறேன் என்றார். அவன் தாய் சிவனைக் குறித்துத் தவம் செய்ய ஒரு மந்திரத்தையும், ஆபத்து நேர்ந்தால் காத்துக் கொள்ள அகோராஸ்திர மந்திரத்தையும் சொல்லிக் கொடுத்து அனுப்பினாள். இமயமலையில் ஒரு பகுதிக்குள் சென்று உபமன்யு தவத்தைத் தொடங்கினான். அரக்கர்களும், அசுரர்களும் எவ்வளவு முயன்றும் அவன் தவத்தைக் கலைக்க முடியவில்லை. இறுதியில் அவனைச் சோதனை செய்வதற்காகச் சிவன், இந்திரன் வடிவம் எடுத்துக் கொண்டு அவன் முன் தோன்றினார். உபமன்யு கண்விழித்துப் பார்த்து, 'தேவர்கள் தலைவனே! என்னை நாடி வந்ததில் பெருமகிழ்ச்சி' என்றான். தேவேந்திரனாக வந்தவர், உனக்கு என்ன வேண்டும்? யாரைக் குறித்து நீ கடுந்தவம் செய்கிறாய்?" என்று கேட்டார். உபமன்யு சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்கிறேன் என்றான். அதைக்கேட்ட இந்திரன், 'சிவபிரானா, அவன் ஒன்றுக்கும் உபயோகமில்லாத பயித்தியம், அவனைக் குறித்து ஏன் தவம் செய்ய வேண்டும்?' என்றார். அவர் சிவன் என்று அறியாத உபமன்யு மிக்க கொடியதாகிய அகோராஸ்திர மந்திரத்தைப் பயன்படுத்திவிட்டான். அது சிவனுடைய அஸ்திரம் ஆதலால் உடன் வந்த நந்தி அதை ஏற்றுக் கொண்டார். சிவன் தன் வடிவத்தைக் காட்டிப் பல மந்திரங் களையும் உபதேசித்துப் பாலுக்குப் பஞ்சமில்லாமல் இருக்கும் வரத்தையும் தந்தார்.

நீண்ட காலம் கழித்து கிருஷ்ணன் உபமன்யுவைப் பார்க்க வந்தார். உபமன்யு சிவனைக் குறித்த பல ரகசியமான மந்திரங்களையும் கிருஷ்ணனுக்கு உபதேசித்தார்.

## அந்தகாசுரன் கதை

முன்னொரு காலத்தில் சிவன் தனியே அமர்ந்து எதையோ பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குத் தெரியாமல் மெதுவாகப் பின்புறமாக வந்த பார்வதி அவருடைய இரண்டு கண்களையும் பொத்தி விட்டாள். சிவனின் கண்ணைப் பொத்தியதால் பார்வதியின் உடம்பில் ஏற்பட்ட உஷ்ணத்தால் வியர்வைத் துளிகள் கீழே விழுந்தன. அந்த வியர்வைத் துளிகள் எல்லாம் ஒன்றாகக் கூடி அரக்கனாக உருவாகிக் கூப்பாடு போட்டது. சிவன் கண்களை விடுவித்துக் கொண்டு 'யார் உறுமியது?' என்று கேட்டார். கரிய அரக்கன் ஒருவன் கண்கள் இல்லாமல் இங்கும் அங்கும் அலைந்தான். சிவனுடைய கண்கள் பொத்தப்பட்ட நிலையில், இந்த அரக்கன் பிறந்ததால், அந்தகனாகவே (குருடனாகவே) இருந்தான். அவனுக்கு அந்தகாசுரன் என்ற பெயர் நிலைத்துவிட்டது.

ஹிரண்ய நேத்திரன் என்ற அரசன் தனக்கொரு பிள்ளை வேண்டுமென்று சிவனைக் குறித்துக் கடும் தவம் இயற்றினான். சிவன் தோன்றி, "உனக்கென்று பிள்ளை பிறக்கும் பாக்கியமில்லை. எனவே நான் அவ்வரத்தைத் தரமுடியாது. என்றாலும், அந்தகனாகப் பிறந்த அசுரன் என்னிடம் இருக்கிறான். அவனை வேண்டுமானால் நீ பிள்ளையாக எடுத்துக் கொண்டு வளர்க்கலாம்" என்று சொன்னார். ஹிரண்ய நேத்திரன் மிக்க மகிழ்ச்சியோடு அந்தகாசுரனை எடுத்து வளர்த்தான்.

ஹிரண்ய நேத்திரன் சிவனைக் குறித்துப் பெரும் தவம் செய்து யாராலும் வெல்ல முடியாத வரங்களைப் பெற்று

தேவருலகை வென்று, தேவர்களை அங்கிருந்து விரட்டி விட்டான். கடைசியில் பூமியையே சுருட்டிக் கொண்டு சென்று கடலுக்கடியில் வைத்து விட்டான். தேவர்கள் விஷ்ணுவிடம் முறையிட, விஷ்ணு வராக அவதாரம் எடுத்து கடலுக்கடியில் சென்று அவனைத் தன் கொம்பினால் குத்திக் கொன்று விட்டு, பூமியைத் தன் கொம்புகளுக்கு இடையே வைத்து மேலே கொண்டு வந்து அது இருக்க வேண்டிய இடத்தில் வைத்து விட்டார். பிறகு ஹிரண்ய நேத்திரன் மகனாகிய அந்தகாசுரனை அரசனாக்கி விட்டார்.

இது நிகழ்ந்த பிறகு ஹிரண்ய நேத்திரன் தம்பியாகிய ஹிரண்ய கசிபு பெரு வரங்களைப் பெற்றுத் தன்னை யாரும் கொல்லமுடியாத சக்தி பெற்றதால், தேவர்கள் எல்லாம் ஓடும்படி செய்து விட்டான். தேவர்கள் விஷ்ணுவிடம் முறையிட, அவர் சிங்க வடிவம் கொண்டு பல அரக்கர்களைக் கொன்று தீர்த்தார். இறுதியாக அந்த சிம்மம் ஹிரண்ய கசிபு கோட்டைக்குள் நுழைந்தது. ஹிரண்ய கசிபுவின் பல மைந்தர்களுள் பிரகலாதன் என்று ஒருவன் இருந்தான். புத்திசாலியாகிய அவன், ஒரு சாதாரண சிங்கம் இவ்வளவு பெரிய அழிவினைச் செய்ய முடியாது, ஆகவே விஷ்ணுதான் இப்படி ஒரு சிங்க வடிவுடன் வந்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டான். தன் தந்தையிடம் சென்று சிங்கம் என்பது விஷ்ணுதான் என்றும், அதனிடம் போர் புரியப் போக வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டார். ஆனால் அவன் தந்தை இதைக் கேட்கும் மனநிலையில் இல்லை. தன் வீரர்களை எல்லாம் சிங்கத்திடம் போர் புரிய அனுப்பினார். அவர்கள் அனைவரும் மாண்டனர். கடைசியாகத் தானே சென்று தன்னிடமுள்ள அத்தனை அஸ்திரங்களையும் பயன்படுத்திப் பார்த்தான். அவனுடைய ஆயுதங்கள் அந்த சிங்கத்தை ஒன்றும் செய்ய முடியவில்லை. இறுதியாகச் சிங்கம் தன்னுடைய

நகங்களால் அவனுடைய இருதயத்தைப் பிளந்து கொன்றது. கடைசியில் விஷ்ணு பிரகலாதனுக்குப் பட்டம் சூட்டினான்.

அந்தகாசுரன் சிம்மாசனத்தில் இருக்கும் போது அங்கு வந்த பிரகலாதன் நீயோ குருடன், பெரிய தந்தையார் உன்னைத் தத்து எடுத்துக் கொண்டதே தவறு. குருடனாகிய நீ எப்படி ஆட்சி செய்ய முடியும். ஆகவே உன் ராஜ்ஜியத்தை என்னிடம் கொடுத்துவிடு என்று சொல்லியதோடு அல்லாமல் அந்தகனை விரட்டிவிட்டான். அந்தகன் காடு சென்று பிரம்மனைக் குறித்துத் தவம் செய்தான். பிரம்மன் எதிர்ப்படவில்லை. அக்கினியை வளர்த்துத் தன் உடம்பில் உள்ள சதைகளை யெல்லாம் வெட்டி பலியிட்டான். கடைசியாக பிரம்மன் வெளிப்பட்டு, உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். விலங்குகள், அரக்கர்கள், அசுரர்கள், மனிதர்கள், தேவர்கள் ஆகிய யாராலும் எனக்குச் சாவு வரக் கூடாது. விஷ்ணுகூட என்னைக் கொல்ல முடியாத வரம் வேண்டும் என்று கேட்டான். 'பிறந்தவர்கள் இறந்தே தீர வேண்டும். உனக்கு எப்படி சாவு வேண்டும் என்பதை நீயே முடிவு செய்து சொல்' என்றார் பிரம்மா. அந்தகன், 'என்னைவிட மூத்த பெண் ஒருத்தியிடம் நான் விருப்பம் கொள்வேனானால் அப்போது எனக்குச் சாவு வரலாம்' என்று கேட்டுக் கொண்டான். அப்படியே ஆகட்டும் என்று பிரம்மன் வரம் தந்தார்.

தவத்தால் கண்பார்வை பெற்றுவிட்ட அந்தகன் மூன்று உலகங்களையும் அடிமைப்படுத்தினான். அனைவரையும் துன்புறுத்தினான். சிலகாலம் கழித்து மந்தார மலைக்குத் தனது மூன்று சேனாதிபதிகளுடன் சென்றான். அந்த மலை மிக அழகாக இருந்ததால் அங்கேயே தங்கிவிட விரும்பினான். அவனுடைய சேனாதிபதிகள் அந்த இடத்தைச் சுற்றிப் பார்த்து

வரும்பொழுது ஒரு குகையில் ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தனர். அந்த முனிவன் புலித் தோலை இடையில் கட்டி, மண்டை ஓடுகளை மாலையாக அணிந்திருந்தான். அவனுடைய சடையில் சந்திரன் இருந்தான். அவன் பக்கத்தில் அழகான பெண் ஒருத்தி வீற்றிருந்தாள். இதைக் கண்ட சேனாதிபதிகள் யோகத்தில் இருந்த முனிவனை எழுப்பி, "துறவியாகிய உனக்கு இவ்வளவு அழகான பெண் எதற்காக? எங்களுடைய அரசனுக்கு இவளைக் கொடுத்துவிடு" என்றனர். முனிவர் வேடத்தில் இருந்த சிவன் "அப்படியானால் உங்கள் அரசனே இங்கு வந்து அவளைப் பார்த்துவிட்டு அழைத்துச் செல்லட்டுமே" என்றார். முனிவர் வேடத்தில் இருந்தவர் யார் என்பதையும், அழகிய பெண் யாரென்பதையும் அறியாத அவர்கள் ஓடிச் சென்று முனிவன் சொன்னதை அந்தகனிடம் சொல்லவும், மிக்க ஆசையோடு புறப்பட்டு வந்தான் அந்தகன். 'வயதில் முதிர்ந்தவளை நான் விரும்பினால் எனக்குச் சாவு வரட்டும்' என்று பிரம்மனிடம் கேட்டுக் கொண்டது நடைபெறும் காலம் வந்து விட்டது. அனைத்திற்கும் மூத்தவளாகிய பார்வதிதேவியை விரும்பியதால் முனிவர் வேடத்தில் இருந்த சிவன் எதிரே வந்து நின்றார். அவனுக்குப் பக்கபலமாகப் பல அசுரர்களும் அவர்கள் குருவாகிய சுக்ராச்சாரியாரும் வந்தனர். முனிவன் பக்கமாக நந்தி, விஷ்ணு ஆகியோர் போருக்குத் தயாரா னார்கள். நந்தியே பல அசுரர்களை அழித்தார். அந்தகனின் சேனாதிபதிகளுள் ஒருவனாகிய விகாசா என்பவன் விஷ்ணு உட்பட அனைவரையும் விழுங்கிவிட்டான். இந்நிலையில் சிவன் காளை வடிவம் கொண்டு வந்து விகாசாவின் வயிற்றைக் கிழித்து அனைவரையும் விடுவித்தார். அசுரர் படைகளைக் கொல்லக் கொல்ல, இறந்தவர்களை எழுப்பும் மந்திரங்களைக் கற்ற சுக்ராச்சாரியார் அத்துணை அசுரர்

களையும் மறுபடியும் உயிர்ப்பித்தார். இதைக் கண்ட சிவன் சுக்ராச்சாரியாரை விழுங்கியவுடன் இறந்தவர் உயிர்பெறும் சூழ்நிலை மாறிவிட்டது. இந்திரனுடைய பாணங்கள், விஷ்ணுவின் கதாயுதம் ஆகியவை இவனை ஒன்றும் செய்யாமல் போகவே, சிவன் படைகளை அந்தகன் மீது ஏவினார். அவனது ஒவ்வொரு சொட்டு ரத்தமும் கீழே விழுந்தவுடன் ஒவ்வொன்றும் ஒரு அந்தகனாக உருவாயிற்று. அப்பொழுது சிவன் காளியைப் படைத்து அந்தகாசுரனின் இரத்தம் ஒரு சொட்டுக் கூடக் கீழே விழாதபடி குடிக்கச் செய்தான். இந்த நிலையில் சிவன் தன்னுடைய திரிசூலத்தை அந்தகாசுரன் மேல் செலுத்தி அவனைக் கொன்றார். போருக்குப்பின் சுக்ராச்சாரியாரைத் தன் வயிற்றில் இருந்து எடுத்துச் சிவன் வெளியே விட்டு விட்டார்.

### ருருவின் கதை

முன்னொரு காலத்தில் ருரு என்றொரு அரக்கன் இருந்தான். அவன் தற்செயலாக ஒருமுறை பார்வதியைப் பார்த்துவிட்டு அவளையே தான் மணம் புரிய வேண்டும் என்று கடுந்தவம் இயற்றினான். தவத்தின் முடிவில் வந்த பிரம்மன், உனக்கு என்ன வேண்டும் என்று கேட்டார். ருரு, 'நான் பார்வதியை மணந்து கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும்' என்றார். 'இது என்னால் முடியக் கூடிய காரியம் அன்று' என்று பிரம்மன் போய் விட்டார். ருருவின் தவம் தொடர்ந்தது. அந்தத் தவத்தின் கடுமையில் வெளிப்பட்ட உஷ்ணம் சுற்று வட்டாரம் முழுவதையும் எரித்தது. ருரு தங்கியிருந்த மலையம் என்ற மலையும் எரியத் துவங்கியது. அந்தச் சூடு மேருவைத் தாக்கவே சிவனும் பார்வதியும் கூட ஓட வேண்டியதாயிற்று. அப்போது பார்வதி சிவனைப் பார்த்து, நாம் ஏன் ஓடுகிறோம் என்று கேட்டாள். சிவன்,

ருரு என்ற அசுரன் உன்னை மணந்து கொள்வதற்காகக் கடுந்தவம் புரிகிறான். அதன் விளைவுதான் இது என்று கூறிய வுடன் பார்வதி உடனே இதற்கு ஏதாவது செய்யுங்கள் என்றாள். அதைக்கேட்ட சிவன், 'பார்வதி! இது உன் சம்பந்தமான விஷயம். நீதான் ஏதாவது செய்ய வேண்டும்' என்று கூறியவுடன் பார்வதி சுற்றுமுற்றும் பார்த்தாள். ஒரு சிங்கமும் யானையும் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. சிங்கத்தைக் கொன்று அதன் தோலைப் போர்த்திக் கொண்டாள். சிங்கத்தின் குருதி வடிந்ததால் தலையும், முடியும் ரத்தத்தால் சிவந்தது. இந்த வடிவுடன் பார்வதி ருருவிடம் சென்று, 'ருரு! என்னை மணக்க வேண்டும் என்று தானே தவம் செய்கிறாய். இதோ நான் வந்து விட்டேன். என்ன செய்யப் போகிறாய்' என்று கேட்க, ருரு கண்ணை விழித்துப் பார்த்தான். "நீ யார் என்று எனக்குத் தெரியாது. மகா கோர சொரூபியாய் இருக்கிறாய். பார்வதியின் சந்திரபிம்ப முகமும், தாமரை போன்ற கைகளும் கால்களும் உனக்கில்லை. உன் உருவத்தை நீயே பார்த்துக் கொண்டால் உன் சொரூபம் தெரியும்" என்று கூறிவிட்டுப் பார்வதியை கதாயுதத்தால் சாடினான்.

சினம் கொண்ட பார்வதி ருரு எறிந்த பல்வேறு ஆயுதங் களையும் தடுத்து விட்டுத் தன் பல்லாலும், கையாலும் அவனைக் கொல்ல முயன்றாள். இப்பொழுது ருருவின் உடலிலிருந்து பல்வேறு உருவங்கள் தோன்றின. பார்வதி தன் அம்சமான பல சக்திகளைப் படைத்தாள். அந்தச் சக்திகள் ருருவின் வடிவிலிருந்த பல்வேறு அசுரர்களைத் தின்று தீர்த்தன. பயந்த ருரு, பூலோகம், சொர்க்க லோகம், பாதாள லோகம் ஆகிய இடங்களுக்கு ஓடினான். பார்வதி அவனை எல்லா இடங்களிலும் துரத்தி வரவே ருரு ஒன்றும் செய்ய முடியாமல் நின்று விட்டான். பார்வதி அவன் உடலைக் கிழித்து

அவன் தோலைப் போர்த்திக் கொண்டு வந்து நின்றாள். சிவனிடம் வந்த பார்வதி தான் அணிந்திருந்த சிங்கத்தோலைச் சிவனிடம் கொடுத்து விட்டு, ருருவின் தோலைத் தான் அணிந்து கொண்டாள்.

## யமன் சொல்லிய கதை

ஒரு முறை பிரம்மாவின் மகனாகிய சனத்குமாரர் யமனைக் கண்டு பேசிவிட்டுப் போக வந்தார். அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது பொன்னிறமான விமானத்தில் ஒருவர் வந்தார். உடனே யமன் எழுந்து மிக்க மரியாதையுடன் அவரைக் குசலம் விசாரித்து, பிரம்ம லோகத்தில் உங்கள் இடம் தயாராக உள்ளது. நீங்கள் அங்கே போகலாம் என்று வழியனுப்பிவிட்டு, உட்கார்ந்து பேசத் தொடங்கவும், மற்றொரு விமானத்தில் இன்னொருவர் வந்து சேர்ந்தார். மறுபடியும் யமன் சகல மரியாதையுடன் வரவேற்று பிரம்ம லோகம் அனுப்பினான். இதைக் கண்டு ஆச்சரியப்பட்ட சனத்குமாரர், 'யமனே! உன்னைக் கண்டு எல்லோரும் அஞ்சுகிறார்கள். உன்னிடம் வந்த இவர்களுக்கு இவ்வளவு மரியாதை செய்தது எனக்கு ஆச்சரியமாக உள்ளது. இவர்கள் யார்?' என்று கேட்டார். வைதிஷா என்ற நகரை தாரபாலா என்ற அரசன் ஆண்டு வந்தான். இவன் நாட்டில் ஓடும் விதஸ்தா என்ற நதியும், வேத்ரவதியும் சங்கமம் ஆகும் இடத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, ஒரு நரி பூசை செய்து வந்தது. கைலையில் பார்வதி தவம் செய்யச் சென்ற பொழுது சிவனிடம் வேறு யாரும் தன்னைப் போல் வேஷமிட்டு நெருங்கிவிடாதபடி பார்த்துக் கொள்ளுமாறு ஏவிவிட்டுப் பார்வதி சென்று விட்டாள். அதி என்ற அசுரன் பார்வதியின் வடிவை ஏற்றுக் கொண்டு சிவனிடம் வந்தான். உண்மையான பார்வதிக்கும் போலிப் பார்வதிக்கும் வேறுபாடு தெரியாத நந்தி இந்த

அசுரனை உள்ளே விட்டு விட்டார். நந்தி தன் கடமைகளைச் சரியாகச் செய்யாததால் 12 ஆண்டுகள் பூமியில் நரியாகப் பிறக்குமாறு பார்வதி சாபமிட்டார். அந்தச் சாபத்தால் நரியான நந்தி இப்பொழுது சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து சிவபூசை செய்து வந்தது. அந்த நரியின் செயலை அடிக்கடி பார்த்து வந்த அரசன் தாரபாலா சாப முடிவில், நரி ஜோதி வடிவுடன் சிவனிடம் செல்வதைப் பார்த்தான். சிவபூசை சிறப்பை அறிந்த தாரபாலா, தானும் தீவிரமாக சிவபூசை செய்ய ஒரு கோயிலைக் கட்டி அங்கே புராணப் பிரசங்கங்கள் நிகழ ஏற்பாடு செய்தான். அந்தப் புண்ணிய பலத்தால் இப்போது பிரம்ம லோகம் செல்கிறான்.

பயங்கரமான உலோபியாக வாழ்ந்தவன், ஒருமுறை புராணப் பிரசங்கத்தைக் கேட்டு முழுவதும் மாறிவிட்டான். பல இடங்களில் பலரை ஏற்பாடு செய்து ஆங்காங்கே புராணப் பிரசங்கங்கள் நடக்குமாறு செய்தான். தன் செல்வத்தை எல்லாம் அதற்கே செலவிட்டான். புராணத்தைக் கேட்டதாலும், புராணப் பிரசங்கத்தைப் பிறர் கேட்கச் செய்வதாலும் ஏற்பட்ட புண்ணியத்தால் அவன் இப்பொழுது பிரம்ம லோகம் போகிறான். புராணங்களின் பயன் இது. புராணத்தைக் கேட்பது பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியவர்களை வழிபடுவது போலாகும் என்று கதையை முடித்தான், யமன்.

### சதநிகாவும், சகஸ்ரநிகாவும்

மன்னன் சதநிகா தினந்தோறும் பிராமணர்களுக்கு தானம் செய்தால் புண்ணியம் கிடைக்கும் என்று நினைத்து நூற்றுக்கணக்கான பொற்காசுகளை தானம் செய்தான். இறுதியில் அவன் இறந்து விடவே மகன் சகஸ்ரநிகா பட்டத்துக்கு வந்தான். அவன் தகப்பனைப் போல தானம் செய்வதை நிறுத்தி விட்டான். வருமானத்தை இழந்த

பிராமணர்கள் மன்னனிடம் வந்து உங்கள் தந்தை பிராமணர் களுக்கு தானம் செய்து பெரும் புண்ணியத்தைத் தேடிக் கொண்டார். நீ ஏன் அவ்வாறு செய்யவில்லை என்று கேட்டனர். சகஸ்ரநிகா அவர்களைப் பார்த்து தானத்தைப் பெற்றுக் கொண்டு என் தந்தைக்குப் புண்ணியம் தேடித் தந்தவர்களே, இப்பொழுது என் தந்தை எங்கிருக்கிறார் என்று சொல்ல முடியுமா என்று கேட்டான். அது முடியாது என்று அறிந்த பிராமணர்கள் எப்படியாவது அரசனைத் திருப்திப் படுத்த வேண்டும் என்பதற்காக, பார்க்கவ முனிவரைத் தேடிச் சென்று இறந்த அரசன் எங்கிருக்கிறார் என்பதை அவர் தவ வலிமையால் அறிந்து சொல்லுமாறு கேட்டனர். பார்க்கவ முனிவர் சூரியனின் உதவியை நாடினார். சூரியன் அவரை நரகத்திற்கு அழைத்துச் சென்றான். வழியில் ஒரு பிராமணன் பார்க்கவரைத் தடை செய்தான். நான் இறப்பதற்கு முன்னால் நீர் எனக்கு ஒரு பொற்காசு தரவேண்டியுள்ளது. அதை இப்பொழுது கொடுத்தால் ஒழிய மேலே போக விடமாட்டேன் என்றான். பார்க்கவரிடம் காசு இல்லாததனால் அவர் புண்ணியத்தைச் சிறிது பெற்றுக் கொண்டு மேலே அனுப்பினான். கடைசியாக நரகத்தின் மிக ஆழமான இடத்தில் இறந்து போன அரசன் பெருந் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருந்தான். ஆச்சரியப்பட்ட முனிவர் அரசனைப் பார்த்து, 'நீ பிராமணர்களுக்கு தானம் செய்து பெரும் புண்ணியத்தைச் சேகரித்தாய் என்றல்லவா கேள்விப் பட்டிருந்தேன். உனக்கு ஏன் இந்த கதி?' என்று கேட்டார். அரசன், 'உழைக்கும் ஏழை மக்களிடம் வரி என்ற பெயரில் அநியாயமாகப் பணத்தை சம்பாதித்து, புண்ணியம் சம்பாதிக் கலாம் என்ற நம்பிக்கையில் பிராமணர்களுக்குக் கொடுத்தேன். எவ்விதப் புண்ணியமும் எனக்கு வரவில்லை. ஆனால் இந்த வரியைக் கொடுப்பதற்குப் பாடுபட்ட அந்த ஏழை மக்களின்

கண்ணீர் பெரிய பாவ மூட்டையாக என்னை வந்து அடைந்தது. அதனுடைய பயனை இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்' என்று என் மகனிடம் சொல்லுங்கள் என்றான்.

அதைக்கேட்ட பார்க்கவ முனிவர், நேரே சகஸ்ரநிகாவிடம் வந்து நடந்ததைக் கூறினார். மன்னன் உழைப்பவர்களிடம் கடுமையான வரி வசூலிப்பதையும், பிராமணர்களுக்கு தானம் கொடுப்பதையும் உடனே நிறுத்தி விட்டான். தானும் உழைக்க ஆரம்பித்தான்.



# 5. பாகவத புராணம்

## இப்புராணம் பற்றி...

பதினெட்டுப் புராணங்களில் ஐந்தாவதாக உள்ள பாகவத புராணம் வைணவர்களிடையே மிகவும் பிரபலமாக உள்ளது. இந்தியா முழுவதும் தனித் தனியாகவும், கூட்டமாகவும் இப்புராணத்தைப் படிக்கின்றனர். கிருஷ்ணன் பற்றி விரிவாகப் பேசுகின்றது இப்புராணம். இப்புராணத்தின் தலையாய சிறப்பு, பக்திக்கு முதலிடம் கொடுப்பதுதான்.

வேதவியாசர் பாரதத்தையும், ஏனைய புராணங் களையும் எழுதிய பிறகுகூட மனத்தில் அமைதி யில்லாமல் இருந்தார் என்றும், இப்புராணத்தை எழுதிய பிறகே மன நிறைவு பெற்றார் என்றும் சொல்லப்படுகிறது. வேறு புராணங்களில் காணப்படாத அளவுக்கு பக்திக்கு பாகவத புராணம் இடம் கொடுத்திருக்கின்ற காரணத்தால், பரத கண்டத்திலேயே மிகப் பழங்காலத் திலேயே பக்திக்கு முதலிடம் கொடுத்து வளர்த்த பெருமை தமிழ்நாட்டுக்கு மட்டுமே உண்டு. இவ்வாறு சொல்ல ஒரு முக்கியமான காரணம் உண்டு. பாகவத புராணத்தின் முதல் அத்தியாயத்தின் 48வது பாடல்

*சொல்லும் கருத்தையும், அதற்கு முன்புள்ள சில தகவல் களையும் இங்கு தருகிறேன்.*

*ஒருமுறை நாரதர் பிருந்தாவனம் செல்கிறார். அங்கே வயது முதிர்ந்த இரண்டு பெண்மணிகள் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர். அவர்களைப் பார்த்தவுடன், இவர்களை முன்பு எங்கோ பார்த்திருக் கிறோம் என்ற எண்ணம் நாரதருக்கு வருகிறது. அவர்களிடம் சென்று, 'நீங்கள் யார்? உங்களை முன்பு எங்கோ பார்த்திருக்கிறேன்' என்று கேட்கிறார் நாரதர். மிகவும் வயது முதிர்ந்து கிழடு தட்டிய அந்த இரு பெண்களுள் ஒருத்தி நாரதரைப் பார்த்து பின்வருமாறு பேசுகிறாள்: 'நீங்கள் சொல்வது சரிதான். என் பெயர் பக்தி. இவர் பெயர் வைராக்கியம். நாங்கள் இருவரும் திராவிடத்தில் (தமிழகத்தில்) பிறந்து வளர்ந்தோம். அங்கே அழகும் இளமையும் உள்ளவர்களாக இருந்தோம். நாளாவட்டத்தில் அங்கிருந்து கர்நாடகத் தில் புகுந்தோம். அங்கே எங்கள் இளமைக் கோலம் குறையத் தொடங்கியது. பிறகு மகாராஷ்டிரம் வந்தோம். அங்கே முதுமை தொடங்கியது. பிறகு கூர் நகரத்திற்கு வந்தோம். இங்கு இளமை முழுவதும் அழிந்து அழகு கெட்டு முதுமை தட்டிய நிலையில் உள்ளோம்.'*

*பாகவதத்தில் இந்தப் பாடல் மூலம், பக்தி தோன்றி வளர்ந்ததும், மிடுக்குடன் இளமைப் பொலிவுடன் திகழ்ந்ததும் தமிழகத்தில்தான் என்பதை இப்புராணம் ஏற்றுக் கொள்வதைக் காணலாம். அதனால் ஆராய்ச்சி யாளர்கள் பாகவத புராணத்திற்கும், தமிழ் நாட்டிற்கும் அதிகத் தொடர்பு உண்டு என்று கருதுகின்றனர். பரம்பொருளின் வடிவாக இருந்த கிருஷ்ணனிடம் எல்லையற்ற அன்பும், பக்தியும் கொண்டு வாழ்ந்த சிறப்பை மிகுதியாகக் கூறுவதே பாகவத புராணத்தின்*

*தனி அழகாகும். வேதங்கள் பரப்பிரம்மத்தை வடிவற்ற, உருவற்ற எதனோடும் தொடர்புபடாத தனித்துவம் உடையது என்று கூறுகின்றன. அது அனைத்தும் அறியும் பேராற்றல் என்றே அவை பேசின. வாழும் உயிர்களுக்குப் பரப்பிரம்மம் தொடர்பில்லாத தனிப் பொருளாக இருந்த நிலைமை போகத் தொடர்புடைய பொருளாகக் காணத் தொடங்கியது. பேராற்றல் வடிவமான இப் பரப்பிரம்மத்திடம் இருந்துதான் அனைத்தும் உதயமாகின்றன. உயிர்கள் இயங்குவதற் குரிய ஆற்றலும் அதனிடமிருந்தே இயங்குகிறது. இயக்கமற்ற ஜடப் பொருளிலிருந்து எதுவும் தோன்ற முடியாது. இந்தப் புராணத்தில், இந்தப் பேராற்றல் வாசுதேவன் என்ற பெயருடன் பேசப்படுகிறது. இந்தப் பேராற்றல் எங்கும் நிறைந்ததாய், எல்லாம் அறிந்ததாய், என்றுமுள்ளதாய்க் காட்சி அளிக்கிறது.*

*பகவத் கீதையில் பகவான் கிருஷ்ணன் தானே ஈஸ்வரன் என்றும், அண்டங்களைப் படைத்து, காத்து, அழிக்கும் தலைவன் என்றும் கூறுகிறார். தம்பால் அடைக்கலம் என்று முழு நம்பிக்கையுடன், பேரன்புடன் அணுகும் மனிதர்களின் குற்றங் குறைகளை மன்னித்து ஆட்கொள்பவன் அவனே ஆவான்.*

*பரப்பிரம்மம் நிர்க்குணமாய், வடிவற்றதாய் விளங்கி னாலும், ஈஸ்வரனாக இறங்கி வருகின்ற நிலையில் எல்லையற்ற ஆனந்த வடிவினனாய், அண்டத்தை இயக்கும் ஆற்றலின் இடையே தானே இயக்குகிறோம் என்ற நினைவுடன் தொழிற்படுகிறது. சாக்தர்கள் உண்மையான பாகவதம் இப்புராணம் அன்று, தேவி பாகவதமே உண்மையானது என்று கூறுகின்றனர். இன்னும் சிலர் தேவி பகவதியின் தோற்றம், வரலாறு ஆகியவற்றைக் கூறும் காளிகா புராணமே உண்மை*

*யான பாகவதம் என்று கருதுகின்றனர். இந்த இரு கட்சிக்காரர்கள் கூற்றுக்களை நிரூபிக்க எவ்வித ஆதாரமும் இல்லை. பாகவத புராணத்தில் தேவி பாகவதம் பற்றி எவ்விதக் குறிப்பும் இல்லை. ஆதி சங்கரர் பாடிய கோவிந்தா அஷ்டகத்தில் பாகவதம் பற்றிய குறிப்பு வருகிறது.*

*பாகவத புராணம் 12 ஸ்காந்தங்களையும், 335 அத்தியாயங்களையும், 18,000 பாடல்களையும் உடையது. பாகவத புராணத்தின் 12 ஸ்காந்தங்களில் பத்தாவது ஸ்காந்தம் கிருஷ்ணனுடைய பிறப்பு, வளர்ப்பு, அவனுடைய லீலைகள் ஆகியவற்றை விரிவாகப் பேசுகிறது. பதினொன்றாவது ஸ்காந்தம் யாதவ குலத்தின் அழிவு, கிருஷ்ணன் விஷ்ணு லோகம் செல்லுதல் ஆகியவற்றையும் பேசுகிறது.*

**பொ**துவாக விஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து என்றும், அவற்றுள் ஒன்பது அவதாரங்கள் முடிந்துவிட்டன என்றும், கலியுகத்தின் கடைசியில் பத்தாவதாகிய 'கல்கி' அவதாரம் தோன்றும் என்றும், பேசவும் எழுதவும் பட்டுள்ளன. பாகவத புராணம் ஒன்றுதான் விஷ்ணு எடுத்தவை இருபத்தி ஒன்று எனவும், இனி எடுக்கப் போவது கல்கி அவதாரம் என்றும், மீதி இரண்டு அவதாரங்களுக்கும் பெயரைக் குறிப்பிடாமல் அவை உண்டு என்றும் சொல்கிறது.

பாகவத புராணப்படி விஷ்ணு யாராலும், எக்காலத்தும் காணப்பட முடியாதவர். ஆயிரக்கணக்கான முகங்களும், கைகளும், கால்களும் உடையவர். இந்த ஆயிரக்கணக்கான முகங்களிலிருந்துதான் தேவை ஏற்படும் பொழுது குறிப்பிட்ட அவதாரங்கள் தோன்றுகின்றன.

நாம் அறிந்த பத்து அவதாரங்களை இடை இடையே சேர்த்துக் கொண்டு 22 அவதாரங்களை பாகவத புராணம்

விரிவாகப் பேசுகிறது. அவை வருமாறு: எல்லா வகையிலும் பண்பட்ட ஒரு பிராமணனாகத் தோன்றியது முதல் அவதாரம். இரண்டாவது பன்றியாக உருவெடுத்துக் கடலுக்கடியில் மறைந்து போன பூமியைத் தோண்டி எடுத்து வந்து உரிய இடத்தில் வைத்த வராக அவதாரம். மூன்றாவது நாரதராகத் தோன்றியதாகும். இந்த அவதாரத்தில் விஷ்ணு பக்தியின் அவசியத்தை உலகிற்கு விளக்கினார். நான்காவது, நர-நாராயண அவதாரம். இவர்கள் இருவரும் மிகக் கடுமையான தவத்தை மேற்கொண்டு உலகிற்கு வழிகாட்டினர். ஐந்தாவது கபில முனியாகத் தோன்றிய அவதாரம். கபில முனி மற்றொரு முனிவராகிய அசுரி என்ற முனிவருக்கு உபதேசம் செய்யும் வகையில் 'சாங்கிய தரிசனம்' என்ற கொள்கையைப் பரப்பினார். (மூன்றாவது அவதாரம் பக்திப் பெருக்கையும், நான்காவது அவதாரம் புலன்களை அடக்கித் தவம் செய்வதையும், ஐந்தாவது அவதாரம் அறிவு வளர்ச்சி பெற்று அறிவின் துணை கொண்டு புதிய சிந்தனைகளை வளர்ப்பதைக் காட்டுவதாகவும் அமைந்துள்ளன.)

ஆறாவதாக உள்ளது தத்தாத்ரேயர் அவதாரமாகும். அத்ரி முனிவருக்கும், அனுசுயைக்கும் பிள்ளையாகத் தோன்றிய தத்தாத்ரேயர் அலாகா, பிரகலாதா ஆகியோருக்கு உண்மையான பரம்பொருள் யாது என்பதை அறியும் அறிவைப் புகட்டினார். ஏழாவது அவதாரம் யக்ஞன் என்ற பெயருடன் தோன்றியதாகும். சுவயம்புமனு மன்வந்திரத்தில் ருச்சி, அருதி என்பவர்களுக்குப் பிள்ளையாகப் பிறந்த அவதாரம். முதல் மன்வந்திரத்தில் யக்ஞன், இந்திரன் எனப் பெயர் கொண்டிருந்தான்.

எட்டாவது அவதாரம் ரிஷபர் என்ற பெயருடன் நபிக்கும், மருதேவிக்கும் பிள்ளையாகத் தோன்றியதாகும். மிகப் பெரிய ஞானிகட்கும், கல்விக் கடலைக் கரை கண்டவர்க்கும் தியானம்

என்பதை எவ்வாறு செய்ய வேண்டும் என்று விளக்கியதே ரிஷப அவதாரத்தின் நோக்கமாகும். முனிவர்களும், ரிஷிகளும் விஷ்ணு ஓர் அரசனாகப் பிறந்து பூமியைப் பயனுள்ள இடமாகச் செய்ய வேண்டும் என வேண்ட, பிருத்து என்ற மன்னனாகத் தோன்றிய அவதாரம் ஒன்பதாவது அவதாரம் ஆகும். இந்த அவதாரத்தில் வெறுந்தரையாக இருந்த பூமி தானியங்கள் முதலியவற்றை உற்பத்தி செய்யும் இடமாகப் பிருத்து மன்னன் செய்தார் என்பதும், அதனால் இந்த பூமிக்குப் 'பிருத்வி' என்ற பெயர் வந்தது என்பதும் சொல்லப் பட்டுள்ளன.

பத்தாவது, மச்ச அவதாரம் ஆகும். சாக்கூச மன்வந் திரத்தில், வைவஸ்வத மனுவின் காலத்தில் ஜலப் பிரளயத்தால் பூமி முழுவதும் நீரில் மூழ்கி இருந்த பொழுது தோன்றியது மச்ச அவதாரம். இந்த மீன், வைவஸ்வத மனுவிடம், ஒரு பெரிய படகைக் கட்டி அதில் அவனும், ஏனைய மக்களும் ஏறிக்கொண்டு தப்பிக்க வேண்டும் என்று கூறி உலகைக் காத்தது. பதினொன்றாவது கூர்ம அவதாரம். தேவர்களும், ராட்சசர்களும் பாற்கடலைக் கடைந்து அமிர்தத்தை எடுப்பதற் காக வாசுகியை நாணாகவும், மந்திரமலையை மத்தாகவும் பயன்படுத்த முயன்ற பொழுது, மத்தைத் தூக்கிப் பிடிக்க கூர்ம வடிவம் எடுத்துத் தன் முதுகின் மேல் அந்த மத்தைத் தாங்கினார். பன்னிரண்டாவது தன்வந்திரி அவதாரம். பாற் கடலைக் கடைந்தபோது அதிலிருந்து வெளிப்பட்ட பல்வேறு பொருள்களும் போகக் கடைசியாக அமிர்த கலசத்தைக் கையில் ஏந்திக் கொண்டு வெளிப்பட்டவர் தன்வந்திரி.

பதின்மூன்றாவது அழகிய பெண்ணாக (மோகினி) எடுத்த அவதாரம். பாற்கடலைக் கடையத் தாங்களும் உதவியதால் தங்களுக்கும் அமிர்தத்தில் பங்கு வேண்டும் என்று ராட்சசர்கள்

முரண்டு செய்தனர். அவர்கள் எண்ணத்தைத் திசை திருப்ப விஷ்ணு அழகிய பெண் வடிவுடன் ராட்சசர்கள் பக்கம் செல்ல, அமிர்தத்தை மறந்துவிட்டு அவளைப் பார்ப்ப திலேயே அவர்கள் காலம் சென்று விட்டது. பதினான்காவது நரசிம்ம அவதாரம். இரண்யகசிபு என்பவனைக் கொல்ல சிங்கத்தின் தலையுடன், மனிதனின் உடம்புடன் தோன்றிய இந்த அவதாரம் இரண்யகசிபு மார்பைத் தன் நகத்தாலேயே பிளந்து விட்டது.

பதினைந்தாவது வாமன அவதாரம். தைத்திய மன்னனாகிய மகாபலியிடம் குள்ளனாகச் சென்று மூன்றடி மண் தானம் கேட்டு, அவன் தந்தவுடன் விண்ணுக்கும் மண்ணுக்குமாக வளர்ந்து மூன்று உலகங்களையும் மூவடியால் அளந்த அவதாரம் ஆகும். பதினாறாவது பரசுராமர் அவதாரம். பரம்பரையாக அரசர் பணியை மேற்கொண்ட சத்திரியர்கள், செல்வம், அதிகாரம் என்பவற்றால் மதிமயங்கி மக்களுக்குத் தீமை செய்யத் துவங்கிய போது 21 தலைமுறை வரை சத்திரிய மன்னர்களே இல்லாமல் செய்த அவதாரம் ஆகும் இது.

பதினேழாவது அவதாரம், வேதவியாசர் என்று காரணப் பெயர் கொண்ட அவதாரம் ஆகும். பராசர முனிவருக்கும், சத்தியவதிக்கும் 'கிருஷ்ண துவையம்பாயனர்' என்ற இயற் பெயருடன் பிறந்த இவர், மிக விரிந்தும் பரந்தும் யாரும் கற்க முடியாத நிலையிலும் இருந்த வேதங்களை ஒழுங்குபடுத்தி நான்கு வேதங்களாக வகுத்தமையால் வேதவியாசர் என்ற பெயர் பெற்றார். பதினெட்டாவது இராம அவதாரம். பத்தொன்பதாவது பலராம அவதாரம். இருபதாவது கிருஷ்ண அவதாரம். பதினெட்டாவது இராம அவதாரத்தை இராமாயணத்திலும், பத்தொன்பது, இருபது அவதாரங்கள் பற்றி மகாபாரதத்திலும் விரிவாக அறியலாம்.

இருபத்திஒன்றாவது புத்தரது அவதாரம் ஆகும். இவர் புத்த சமயத்தைத் தோற்றுவித்தவர். இருபத்திரண்டாவது, இனி வரப்போகின்ற 'கல்கி' அவதாரம். விஷ்ணுயாசா என்ற பிராமணனின் மகனாகக் கலியுகத்தின் முடிவில் தோன்றப் போகின்றவர் கல்கி ஆவார். இருபத்திமூன்று, இருபத்தி நான்கு அவதாரங்களின் பெயர்களை பாகவத புராணம் குறிப்பிட வில்லை.

## வேதவியாசரின் அரும்பணி

வேதவியாசருக்குச் சுகதேவர் என்ற ஒரு மகன் இருந்தான். கற்க வேண்டிய அனைத்தையும் கற்று மாபெரும் அறிவாளி யாகிவிட்ட அவர், அதிகம் பேசாத காரணத்தால் மற்றவர்கள் அவரின் அறிவின் ஆழத்தை அறிந்து கொள்ள வாய்ப்பில்லை. பலர் அவரைக் கல்வி ஞானம் இல்லாதவர் என்றும், ஓர் அசடு என்றுமே கருதினர்.

இந்நிலையில் வேதவியாசர் வேதங்களை நான்காகப் பிரித்துப் பைலா என்பவருக்கு ரிக்வேதத்தையும், வைசம்பா யனருக்கு யஜுர் வேதத்தையும், ஜைமினிக்குச் சாம வேதத் தையும், சுமந்தாவிற்கு அதர்வண வேதத்தையும் கற்பித்தார். புராணங்கள் ஐந்தாவது வேதம் என்று கருதப்படுவதால், அவற்றை மற்றொரு சீடராகிய லோமஹர்ஷனருக்குக் கற்பித்தார். லோமஹர்ஷனரின் மகனாகிய சுதா என்பவர் மற்றைய முனிவர்களுக்கு பாகவத புராணத்தைச் சொன்னார். நான்கு வேதங்களையும் தொகுக்கும் பணி, மகாபாரதத்தை எழுதும் பணி ஆகிய மிகப் பெரிய சாதனை களைப் படைத்த வேதவியாசர் தாம் இன்னும் ஏதோ செய்ய வேண்டும் என்று உந்துதல் ஏற்பட, ஒருநாள் சரஸ்வதி நதியில் நீராடிவிட்டுத் தம் பர்ணசாலையில் அமர்ந்திருந்தார். இவ்வளவு செய்தும் அவர் மனத்தில் ஏதோ ஒரு குறை

இருந்தது. அது என்ன குறை என்று அவரால் அறிந்து கொள்ள முடியவில்லை. அந்த நிலையில் நாரதர் உள்ளே நுழைந்தார். வேதவியாசரைப் பார்த்து, “மாபெரும் சாதனைகளைப் படைத்த தாங்கள் ஏன் அமைதியில்லாமல் இருக்கிறீர்கள்” என்று கேட்டார். வேதவியாசர், “காரணம் தெரியாமல்தான் கவலைப்படுகிறேன். அனைத்தையும் அறிந்த தாங்களே அதை விளக்கிச் சொல்லலாமே” என்று கூறினார். அடுத்துப் பேச ஆரம்பித்த நாரதர், ‘வேதவியாசரே! இதுவரை தர்மத்தைப் பற்றி அளவுக்கு மிஞ்சிக் கூறிவிட்டீர்கள். அது தருமத்தின் இலக்கணத்தையும், அதன் இயல்பையும் சொல்கின்றன. ஆனால் மக்கள் மனத்தில் இவை சென்று தங்குவது கடினம். தர்மத்தின் இலக்கணங்களை எழுதுவதைக் காட்டிலும், கிருஷ்ணனுடைய லீலைகளைச் சொல்லி இருந்தால் அது மக்கள் மனத்தைச் சென்று பற்றும். அந்தச் சூழ்நிலை ஏற்படும்போது தருமத்தைப் பற்றிய கருத்துக்களும் மக்கள் மனத்தில் புகுந்து தங்கும். ஆகவே கிருஷ்ணனைப் பற்றிச் சொல்வதுதான் சிறந்த வழியாகும்’ என்று கூறிப் போனார்.

நாரதர் கூறியவை வியாசரின் மனத்திற்கு அமைதியும், தூண்டுதலும் தந்த காரணத்தால் பாகவத புராணத்தைப் பாடி அதைத் தம் மகனாகிய சுகதேவனுக்குக் கற்பித்தார்.

## அசுவத்தாமன் பெற்ற தண்டனை

குருக்ஷேத்திரப் போரில் கௌரவர் படையிலும், பாண்டவர் படையிலும் பல்லாயிரக் கணக்கானோர் மடிந்தனர். இறுதியாக பீமனுக்கும், துரியோதனனுக்கும் தனிப் போர் நடந்தது. பீமன், துரியோதனன் தொடையில் கதையால் தாக்கி அவன் காலை ஒடித்து விட்டான். ஒடிந்த காலுடன் துரியோதனன் யுத்தகளத்தில் படுத்திருந்தான். துரோணர்

மகனாகிய அசுவத்தாமன் துரியோதனன் பக்கம் நின்று சண்டை செய்தவன். இப்போது துரியோதனன் உயிர் போகுமுன் அவனுக்கு மகிழ்ச்சி உண்டாக்க நினைத்தான். எனவே நட்ட நடுநிசியில் பாண்டவர்கள் பாசறைக்குள் ரகசியமாக நுழைந்து இளம் பஞ்ச பாண்டவர்கள் ஐவருடைய கழுத்தையும் வெட்டி அவர் தலைகளைக் கொண்டு வந்து துரியோதனிடம் காட்டினான். திரௌபதியின் ஐந்து பிள்ளைகளும் ஒரே நேரத்தில் கொல்லப்பட்டதால் ஒரே கூப்பாடு போட்ட அவள், உடனே பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று அருச்சுனனை நாடினாள். அருச்சுனன் அசுவத்தாமனைத் தேடிப்பிடித்து 'ஒருவருக்கொருவர் தனித்துப் போரிடலாம்' என்று அறைகூவி அழைத்தான். யுத்தம் தொடங்கியது. அசுவத்தாமன் பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்தினான். அதனால் தனக்கு அழிவு வராமல் இருக்க அருச்சுனனும் பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்தினான். இரண்டு அஸ்திரங்களும் தங்கள் எதிரியைத் தாக்க முடியாமை யால் பூலோகத்தை அழித்துவிடும் சூழ்நிலை உருவாகியது. முனிவர்கள் பலர் வந்து இவ்விருவரையும் பார்த்து 'உலகம் அழிவதற்கு நீங்கள் காரணமாக இருக்கக் கூடாது. தயவு செய்து உங்கள் அஸ்திரங்களைத் திருப்பிப் பெற்றுக் கொள்ளுங்கள்' என்று வேண்டினார்கள். அருச்சுனன் தனது பிரம்மாஸ்திரத் தைத் திருப்பி அழைத்துக் கொண்டான். ஆனால் அசுவத்தாம னுக்கு அப்படையை விடத் தெரியுமே தவிர திருப்பி அழைக்கத் தெரியாது. அதனால் அருச்சுனனைக் கொல்ல முடியாத அப்படை அவன் சந்ததியைத் தாக்க வேண்டும் என்ற குறிக்கோளுடன், அருச்சுனனின் மருமகளாகிய உத்ராவின் கருவுக்குள் நுழைந்தது. அக்கருவில் அருச்சுனன் மகனாகிய அபிமன்யுவின் குழந்தைக் கரு வளர்ந்து கொண்டிருந்தது. இதை அறிந்த உத்ரா, இந்த ஆபத்தைத் தடுப்பதற்காகக்

கிருஷ்ணனிடம் ஓடினாள். வேறு வழியில்லாமல் கிருஷ்ணன் தானே அக்கருவினுள் நுழைந்தான். நுழைந்த கிருஷ்ணன் அக்கருவைக் காப்பாற்றியும் விட்டான். இது ஒருபுறம் நடக்கையில் அருச்சுனன் அசுவத்தாமனைக் கட்டி இழுத்து வந்து திரௌபதி முன் நிறுத்தினான். அருச்சுனன் 'இவனை இப்போது கொல்வது எளிது. ஆனால் நம் ஆச்சாரியரின் மகனைக் கொல்வது பாவம். இவன் சிறப்புக்கெல்லாம் காரணமாக இவன் நெற்றியில் ஒட்டிக் கொண்டிருக்கும் வைரத்தை எடுத்துக் கொண்டு இவனை அனுப்பி விடலாம்' என்று கூறினான். திரௌபதி இதை ஏற்றுக் கொண்டதால் முடிமணி பறிக்கப்பட்டு அவன் விரட்டப்பட்டான். உரிய காலத்தில் உத்ராவிற்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு 'விஷ்ணுரதன்' என்று பெயரிட்டனர். விஷ்ணுரதன் இளமைப் பருவத்திலிருந்தே யாரைப் பார்த்தாலும், தான் கருவில் இருக்கும் பொழுது கண்ட பரம புருஷன் இவன்தானோ என்று சந்தேகப்பட்டு, காணுகின்ற ஒவ்வொருவரையும் பரிட்சித்துப் பார்த்ததால் 'பரிட்சித்து' என்ற காரணப் பெயர் பெற்றான்.

### கிருஷ்ணனின் துவாரகை வரவும், அவன் முடிவும்

குருக்ஷேத்திரப் போருக்குப் பின் பாண்டவர்களுள் மூத்தவனாகிய யுதிஷ்ட்ரன், அஸ்தினாபுரத்தில் முடிசூட்டிக் கொண்டான். சில காலம் அவர்களுடன் இருந்து விட்டுக் கிருஷ்ணன் துவாரகைக்குச் செல்ல முற்பட்டான். கிருஷ்ணன் யாதவ நாட்டிற்கு வருகிறான் என்ற செய்தி அறிந்த யாதவர்கள் பெரும் குதூகலமடைந்தனர். துவாரகை முழுவதும் விழாக் கோலம் பூண்டு அலங்கரிக்கப்பட்டது. அங்கிருக்கும் மரம், செடி, கொடிகள் கூடக் கிருஷ்ணன் வருகையை எதிர்பார்த்து மகிழ்ச்சி அடைவதைப் போலப் பூத்துக் குலுங்கின.

கிருஷ்ணன் துவாரகைக்கு வந்தபின் சில மாதங்கள் கழித்து, அருச்சுனன் துவாரகைக்கு வந்தான். ஏழு மாதங் களாகியும் அவன் அஸ்தினாபுரம் திரும்பவில்லை. இதனிடையே அஸ்தினாபுரத்தில் பல தீய உற்பாதங்கள் தோன்றின. பருவங்கள் உரிய காலத்தில் வரவில்லை. மக்கள் ஒருவரை ஒருவர் பகைத்துக்கொண்டு, காழ்ப்புணர்ச்சியோடு போரிட்டுக் கொண்டனர். மனம் நொந்து போன யுதிஷ்டிரன் அருச்சுனன் திரும்பி வராமை கண்டு கவலை கொள்ளத் துவங்கினான். பீமனை துவாரகைக்குச் சென்று வர ஏற்பாடுகள் செய்தான். பீமன் புறப்படுவதற்குள் அருச்சுனனே வந்துவிட்டான். வந்தவன் எல்லையற்ற சோகத்தில் ஆழ்ந்த வனாய்த் தனித்திருந்து கண்ணீர் வடித்துக் கொண்டே இருந்தான். அவன் மௌனத்தைக் கலைக்க தருமன் பல முயற்சிகள் செய்தும் இயலவில்லை. ஒரு நாள் "அருச்சுனா நீ ஏன் பேச மறுக்கிறாய்? ஏன் கண்ணீர் வடிக்கிறாய்? துவாரகையில் நம் உறவினர்களும், கிருஷ்ணனும் நலமாக உள்ளார்களா?" என்று கேட்க, அருச்சுனன், கிருஷ்ணன் இறந்துவிட்டதையும், யாதவ குலம் முழுவதும் அழிந்து விட்டதையும் கூறிக் கதறிவிட்டான். கிருஷ்ணன் இறந்து விட்டார் என்ற செய்தி காதில் விழுந்த உடனேயே யுதிஷ்டிரனுக்கு அரசாட்சியின் மேல் வெறுப்பு உண்டாயிற்று. பாண்டவர்களும், திரௌபதியும் இமயம் சென்று தவம் புரிய முடிவு செய்தனர். பரிட்சித்துக்கு முடிசூட்டி அரசாட்சியை அவனிடம் ஒப்படைத்து விட்டு, இந்த அறுவரும் இமயம் நோக்கிப் புறப்பட்டனர்.

### பரிட்சித்து மன்னனின் கதை

பாண்டவர்கள் சென்ற பிறகு பலம் பொருந்திய பரிட்சித்து உலகை ஆளத் தொடங்கினான். அவனுக்கு ஜனமேஜெயன்

முதலிய நான்கு பிள்ளைகள் இருந்தனர். தனது பராக்கிரமத் தால் பரிட்சித்து இரண்டு அசுவமேத யாகங்களை நடத்தினான். குரு வம்சத்தின் குருவாக இருந்த கிருபாச்சாரியாரே யாகத்தை முன்னின்று நடத்தினார். திடீரென்று ஒரு நாள் கலிபுருஷன் இவனுடைய நாட்டிற்குள் புகுந்து விட்டதாகக் கேள்விப் பட்டான். போர் புரிவதற்குரிய தளவாடங்களுடன் சென்று, கலியுடன் சண்டை செய்தான். கலி வெவ்வேறு வடிவமெடுத்து ஓட, இறுதியாகப் பரிட்சித்து ஓர் அபூர்வக் காட்சியைக் கண்டான். ஒரு பசுவும், ஒரு எருதும் தம்முள் பேசிக் கொண்டிருந்தன. உலகம் ரொம்பவும் கெட்டுப் போய்விட்டது என்றும், தீமைகள் மிகவும் மலியத் துவங்கி விட்டது என்றும் பேசிக் கொண்டிருந்தன. இப் பசுவும், எருதும் வேறு யாரு மில்லை. பிருத்வி பசுவாகவும், தர்ம தேவதை எருதாகவும் நின்று பேசிக் கொண்டிருந்தனர்.

இந்நிலையில் ஒரு சூத்திரன் இந்தப் பசுவையும், எருதையும் நையப் புடைத்துக் கொண்டிருந்தான். ஓடிச் சென்ற பரிட்சித்து, "அடேய்! நீ யாரென்று நினைக்கிறாய்? நீ செய்யும் அடாத காரியத்தின் விளைவை நீ அறிவாயா? இந்தப் பசுவையும் எருதையும் கொடுமைப்படுத்திய நீ சாகவேண்டியவன்" என்று கூறி, தன்னுடைய வாளை உருவினான். உடனே அந்தச் சூத்திரன் பரிட்சித்து கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, கலிபுருஷன் என்ற தன் சுயரூபத்துடன் நின்றான். "அரசே! என்னைக் கொன்றுவிடாதே. உன்னுடைய பரந்த ராஜ்ஜியத்தில் ஒரு சில இடங்களை எனக்கு ஒதுக்கிக் கொடு. நான் அந்த இடத்தை விட்டு வெளிவராமல் இருந்து கொள்கிறேன்" என்று கூறினான்.

மனமிரங்கிய பரிட்சித்து, "தீயவர்கள் வாழும் இடம், கொலை புரிவோர் வாழும் இடம், சூதாடும் இடம், குடிகாரர்கள் வாழும் இடம் ஆகிய இந்த இடங்களை நீ

தங்குவதற்குரிய இடமாக வைத்துக் கொள். என் ஆட்சியில் இந்த இடங்களைத் தவிர நீ எங்கும் தலைகாட்டக் கூடாது" என்று ஆணையிட்டான்.

இதன் பிறகு ஒருமுறை வேட்டைக்குச் சென்ற பரிட்சித்து மன்னன், ஒரு மானைத் துரத்திக் கொண்டு மிக நீண்ட தூரம் சென்று விட்டான். பசியும், தாகமும் அவனை வாட்டின. சுற்றுமுற்றும் பார்க்கையில் ஒரு குடிசை தென்பட்டது. அங்கே தண்ணீர் கிடைக்கும் என்ற எண்ணத்துடன் அக் குடிசைக்குள் நுழைந்தான். குடிசைக்குள் மான்தோலைப் போர்த்துக் கொண்டு, சடை ஏறிப் போன தலையுடன் 'ஷாமிகா' என்ற முனிவர் தவம் செய்துகொண்டிருந்தார். மன்னன் அதிகாரத் தொனியில் "குடிக்கத் தண்ணீர் கிடைக்குமா?" என்று கேட்டான். பதில் ஒன்றும் வராததால், தன்னை அவமதித்ததாக நினைத்த அரசன் மறுபடியும் உரத்த குரலில் கேட்டான். முனிவனின் தவம் கலையவில்லை. சினம் மிகுந்த பரிட்சித்து கவட்டைக் குச்சியால் பக்கத்தில் செத்துக் கிடந்த பாம்பை எடுத்து முனிவரின் கழுத்தைச் சுற்றி மாலையாகப் போட்டு விட்டுப் போய்விட்டான். அவன் போன சில நேரத்திற்குப் பின் முனிவரின் மகன் குடிசையில் நுழைந்த பொழுது இக்கோரக் காட்சியைக் கண்டான். மகா சக்தி வாய்ந்தவனும், தவ வலிமை உடையவனுமாகிய அவன், "என் தந்தையை இவ்வாறு செய்தவன் இன்னும் ஏழு நாட்களுக்குள் தட்சன் என்ற பாம்பால் இறப்பை எய்துவான்" என்று சாபமிட்டான். கண்விழித்த முனிவர், "மகனே! என்ன காரியம் செய்து விட்டாய்? மிக்க பராக்கிரமசாலியும், நம்மை எல்லாம் காக்கின்ற மன்னனுமாகிய பரிட்சித்துக்கு இவ்வாறு சாபம் கொடுத்து விட்டாயே, அவன் செய்த மிகச் சிறிய குற்றத்திற்கு இவ்வளவு பெரிய தண்டனை பொருத்தமில்லாததாகும்," என்று கூறி வருந்தினார்.

இதனிடையில், அரண்மனை சென்ற பரிட்சித்து தான் செய்த முட்டாள்தனத்தை நினைத்து மிகவும் வருந்திக் கொண்டிருந்தான். அதே நேரத்தில் முனிவர் மகன் இட்ட சாபம் அவன் காதுகளுக்கு எட்டியது. தான் இறப்பதற்கு இன்னும் ஏழு நாட்களே உள்ளன என்பதை அறிந்த அரசன், அந்த ஏழு நாட்களையும் கங்கைக் கரைக்குச் சென்று விஷ்ணுவை தியானிப்பதில் பொழுதைக் கழிக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். தன் மூத்த மகன் ஜனமேஜயனுக்கு அரசைக் கொடுத்துவிட்டு, கங்கைக் கரைக்குச் சென்று விஷ்ணுவை தியானிப்பதற்கு உட்கார்ந்தான். பரிட்சித்துக்குக் கிடைத்த சாபச் செய்தி எங்கும் பரவிவிட, எல்லா முனிவர்களும் அங்கே கூடிவிட்டனர். வேதவியாசரின் மகனும், பதினைந்தே வயது நிரம்பியவருமாகிய சுகதேவமுனிவர் உள்ளே நுழைந்தார். அவரைக் கண்டவுடன் ஏனைய முனிவர்கள் அனைவரும் எழுந்து நின்று அவருக்கு வணக்கம் செலுத்தி அவரது ஆசி பெற்றனர். சுகதேவ முனிவரை வணங்கி, பரிட்சித்து மன்னன், "முனிவரே! சாவை எதிர் நோக்கிக் காத்துக் கொண்டிருக்கும் ஒருவன் கேட்க வேண்டிய ஒன்று எது? தயை கூர்ந்து அதனைச் சொல்லி அருள்க" என்று கூறியவுடன், சுகதேவ முனிவர் சொல்லத் தொடங்கினார்.

**விஷ்ணுவின் கற்பனை கடந்த வடிவம்**

உலகத்திலுள்ள மக்கள் பலரும் அஞ்ஞானத்தில் மூழ்கி இருக்கின்றனர். வீடு, மக்கள், செல்வம் என்ற உலகாயதப் பொருள்கள் "மாயை" என்று தெரியாமல் அவற்றையே சதம் என்று நம்பியுள்ளனர். உண்மையில் அறியப்பட வேண்டிய பொருள் எங்கும் நிறைந்துள்ள விஷ்ணுவேயாகும். இந்த மாயையில் ஈடுபடாமல், விஷ்ணுவை தியானிக்க விரும்புபவர்

களுக்கு "பாகவத புராணம்" உதவுகிறது. அந்தப் புராணத்தை இயற்றிய என் தந்தையாகிய வேதவியாசர் அதை எனக்குச் சொல்லிக் கொடுத்தார். அதை உனக்கு இப்போது சொல்லப் போகிறேன்'' என்று கூறிவிட்டு மேலே தொடங்கினார்:

சாவு வந்து கதவைத் தட்டும் பொழுது, இவ்வுலகப் பொருள்களையும், வாழ்க்கையையும் மறந்துவிட்டு ஒருவன் ஏதாவது ஒரு புண்ணிய க்ஷேத்திரம் சென்று தியானத்தில் அமர வேண்டும். தியானம் என்பது 'ஓம்காரத்தை' தியானிப்ப தாகும். மூச்சை அடக்கி, பிராணாயாம முறையில் இழுத்து விடுவதால் பொறி புலன்கள் ஒருமுகப்படும். அந்த நிலை யில் ஓங்காரத்தைத் திருப்பித் திருப்பி உச்சரிப்பதால் மனம் ஒருநிலைப்படும். யோகம் என்பது மனித ஆத்மாவை தெய்வீக ஆற்றலுடன் இணைவிப்பதே ஆகும். யோகிகள் என்பவர் இந்த ஆத்ம— தெய்வ ஒருங்கிணைப்பை நிலைநிறுத்த முயல்ப வர்கள் ஆவர். யோகி என்பவன் பொருத்தமான பத்மாசனம் போன்ற ஆசனம் போட்டு அமர்ந்து கொள்ள வேண்டும். அதன் பிறகு மூச்சுக் காற்றை சமனப்படுத்தும் பிராணா யாமத்தைச் செய்ய வேண்டும். இவ்வாறு செய்வது விஷ்ணுவின் விஸ்வரூபத்தில் மனத்தைப் பதிய வைக்கிறது.

விஷ்ணுவின் விஸ்வரூபம் எங்கும் நிறைந்துள்ளது. இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் ஆகிய மூன்று காலங்களிலும் அதுவே வியாபித்துள்ளது. ஐம்பூதங்களிலும், விஷ்ணுவின் வியாபகமே நிறைந்துள்ளது. இந்தப் பூரண வடிவுக்குள், யோகத்தின் பயனாக உள்ள சித்துப் பொருள் அமைந்துள்ளது. இந்தப் பரம்பொருளின் பாதமாக அமைந்துள்ளது பாதாள லோகம். பூமி அப்பொருளின் தொடைப் பகுதியிலும், ஆகாயம் என்பது அப்பொருளின் கொப்பூழ்ப் பகுதியிலும் உள்ளது. இந்த மாபெரும் வடிவத்தை "விஸ்வரூபம்" என்று கூறுவர். அப்பொருளின் இருதய ஸ்தானத்தில் அமைந்திருப்பது



நட்சத்திரங்கள் சூழ்ந்துள்ள சொர்க்க லோகமாகும். இதற்கு மேற்குப் பகுதியில், பிரபஞ்சத்தின் உயர்வான பகுதிகள் அமைந்துள்ளன. பிரபஞ்சம் முழுவதும் 14 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றில் ஏழு பகுதிகள் பாதாள லோகங்கள் என்று கூறப்படும். அவையாவன: அதல, விதல, சுதல, தலாதல, மகாதல, ராசதல, பாதாள லோகங்கள் எனப்படும். மேற்பகுதியில் உள்ள 7 உலகங்கள் ஆவன: பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகரலோகம், ஜனலோகம், தபலோகம், சத்யலோகம் ஆகியவை. இந்தப் பரம்பொருளின் தொண்டைப் பகுதியில் உள்ளது மகரலோகம். வாய்ப் பகுதியில் உள்ளது ஜனலோகம், நெற்றிப் பகுதியில் உள்ளது தபலோகம், தலைப் பகுதியில் உள்ளது சத்யலோகம்.

இந்திரன் முதலிய தேவர்கள் அப்பொருளின் கைகளாவர். நான்கு திசைகளும் அப்பொருளின் காதுகளாகும். இரண்டு அஸ்வினிகளும் அப்பொருளின் மூக்காகவும், சுடர்விடும் அக்கினியாக வாயுவும், சூரியன் அப்பொருளின் கண்ணாகவும், பகல் இரவு கண்ணின் இமைகளாகவும் உள்ளன. பரம்பொருளின் புன்சிரிப்பே மாயை எனப்படும். மலைகள் எலும்புகளாகவும், ஆறுகள் அவனுடைய நரம்புகளாகவும், மரங்கள் அவன் உடல் ரோமங்களாகவும், காற்று அவன் மூச்சாகவும், மேகங்கள் அவன் முடியாகவும் உள்ளன. ஒருவன் யோகப் பயிற்சியில் ஒருமுகப்பட்டு தியானிக்க வேண்டியது இந்த விஸ்வரூபமேயாகும்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த பரிட்சித்து மன்னன், தன் மனைவி, மக்கள், அரசு ஆகியவற்றை மறந்து விஷ்ணுவின் தியானத்தில் ஈடுபடலானான். என்றாலும் இப்பரம்பொருள் கிருஷ்ணனாக அவதரித்துச் செய்தவற்றைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் மிகுந்தவனாய், சுகமுனிவரைக் கேட்க அவர் சொல்லத் தொடங்கினார்.

## படைப்பும், படைத்தவனும்

அனாதி காலத்தில் இருந்தது ஒரு மாபெரும் முட்டை யாகும். எங்கும் நீரே நிறைந்திருக்க இந்த முட்டை அதில் மிதந்து கொண்டிருந்தது. அந்த முட்டையிலிருந்து தன்னைத் தானே தோற்றுவித்துக் கொண்டு விஷ்ணு தோன்றினார். ஆயிரக்கணக்கான முகங்கள், கால்கள், கைகள் என்பவற்றுடன் அவர் இருந்தார். பிரம்மாவைத் தன்னுடைய கொப்பூழி லிருந்து தோன்றிய தாமரையினின்று விஷ்ணுவே தோற்று வித்தார். தோற்றுவிக்கப்பட்ட பிரம்மனிடம் படைப்புத் தொழிலை ஒப்புவித்தார். சிவனை உண்டாக்கி அழித்தல் தொழிலை ஒப்புவித்தார். பிரம்மனும், சிவனும் விஷ்ணுவின் கட்டளைக்குட்பட்டே பணி புரிந்தனர். விஷ்ணு சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய முக்குணங்களையும் படைத்தார். அறிவும், அறிவு சார்ந்த பணிகளும் சத்துவ குணத்தின் ஆட்சிக்கு உட்பட்டன. செயல், செயல்முறை ராஜச குணத்தின் ஆட்சிக்குட்பட்டவை. பொறி புலன்கள், ஐம்பூதங்கள் ஆகியவை தாமச குணத்தின் ஆட்சிக்குட்பட்டவை.

## உத்தவரும், விதுரரும்

மகாபாரதக் கதையில் விதுரனின் பங்கு மிக அதிகமாகும். திருதராஷ்டிரன் மகன் துரியோதனன் பாண்டவர்களைக் கொல்ல அரக்கு மாளிகை முதலிய பல வழிகளைக் கையாண்டு முடியாததால் பொய் சூது ஆடவைத்து அவர்கள் ராஜ்ஜியத்தை இழக்குமாறு செய்தான். இந்த நிலையில் அவர்களுக்கு உரிய ராஜ்ஜியத்தைத் திருப்பித் தருவதுதான் நியாயமானது என்று அறிந்த விதுரன் மன்னன் திருதராஷ் டிரனுக்குப் பல அறிவுரைகள் எடுத்துச் சொன்னான். ஆனால் துரியோதனன் மேல் கொண்ட அளவற்ற பாசத்தால் திருதராஷ்டிரன் இதைச் செய்ய முன்வரவில்லை. மன்னனை

நோக்கி விதுரன் பேசுவதைப் பார்த்துக் கோபம் கொண்ட துரியோதனன் அறிவை இழந்த நிலையில் பின்வருமாறு பேசினான்: "வேலைக்காரியின் மகனே! எங்கள் உப்பைத் தின்றுவிட்டுப் பாண்டவர்கள் பக்கமே உன் அன்பு இருக்கிறது. உன்னை இங்கு வைத்திருப்பதே தவறாகும்" என்று விதுரனின் மனம் புண்படப் பேசினான். துரியோதனன் எல்லை மீறிவிட்ட நிலையில் திருதராஷ்டிரன் அவனை ஒன்றும் சொல்லாததால் மனம் ஒடிந்த விதுரன் அஸ்தினாபுரத்திற்கு மீண்டும் வருவதில்லை என்ற சங்கல்பத்துடன் பாரத நாடு முழுவதும் தீர்த்த யாத்திரை என்ற காரணத்தை வைத்துச் சுற்றிவரச் சென்றார். இறுதியாக யமுனை நதியை அடைந்த பொழுது கிருஷ்ணனின் மிக நெருங்கிய நண்பனான உத்தவரைக் கண்டான். கிருஷ்ணனைப் பற்றியும், யாதவரைப் பற்றியும் விசாரித்தார். கிருஷ்ணனுடைய இளமைக் காலத்தை அறிந்தவர் உத்தவர் ஆகையால், விதுரருக்குக் கிருஷ்ணனின் இளமைக் கால லீலைகளைச் சொல்ல ஆரம்பித்தார்.

உத்தவர், விதுரருக்குக் கூறிய கிருஷ்ணனின் இளமைப் பருவம் ஏற்கெனவே விஷ்ணு புராணத்தில் கூறப்பட்டுள்ளது. அங்கு காணப்படாத பகுதிகளை இங்கு தந்துள்ளோம்.

**வராக அவதாரம்**

தீர்த்த யாத்திரையில் விதுரர் மைத்ரேயி முனிவரைச் சந்தித்தார். விஷ்ணுவின் அவதாரங்களைப் பற்றி அறிய வேண்டுமென விதுரர் கேட்டபொழுது மைத்ரேயி சொல்லத் துவங்கினார். ஒரு காலத்தில் பூமியைக் கடலுக்கடியில் ஒளித்து வைத்து விட்டார்கள் தைத்திரியர்கள். மனுவும், சத்ருபனும் பிரம்மாவிடம் வந்து 'எல்லா இடங்களிலும் நீராக இருக்கிறது. தங்குவதற்கு இடமே இல்லை. பூமியோ கடலுக்கடியில் உள்ளது. என்ன செய்யலாம்?' என்றனர். பிரம்மா இது ஆராய

வேண்டிய விஷயம். விஷ்ணுவை வழிபடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தார். அதே நேரத்தில் பிரம்மனுடைய மூக்கில் இருந்து மிக மென்மையான பன்றி வெளிப்பட்டது. பிரம்மனும், ஏனைய முனிவர்களும் அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அந்தப் பன்றி வளர்ந்து ஒரு பெரிய யானையை விடப் பெரிதாக வடிவெடுத்தது. சற்று நேரத்தில் பன்றியின் கொம்புகள் ஜொலிக்க, அதன் கண்களிலிருந்து ஒளிவீச, அதன் பிடரியிலிருந்து மயிர்கள் மேக மண்டலத்தை வருடத் தொடங்கின. திடீரென்று அப்பன்றி மிகப் பெரிய குரலெடுத்து உறுமத் தொடங்கியது. அந்த ஒலி எட்டுத் திசைகளையும் அதிரச் செய்தது.

சிறிது நேரத்தில் அந்த வராகம் கடலில் குதித்தது. கடலே இரண்டாகப் பிளக்குமாறு வராகம் குதிக்கவும் கடல் அலைகள் மிக உயரத்திற்குக் கிளம்பின. கடலுக்குள் குதித்த வராகம் நேரே கீழ் லோகத்திற்குச் சென்று அங்கு ஒரு மூலையில் வைக்கப்பட்டிருந்த பூமியைத் தன் கொம்புகளுக்கு நடுவே வைத்துக் கொண்டு மேலே புறப்பட்டது. அந்த நேரத்தில் அந்தப் பகுதிகளில் வாழ்ந்த தைத்திரியர்களின் தலைவனான இரண்யாக்ஷன் என்பவன் வராகத்தை எதிர்க்க, அவ்வடிவில் இருந்த விஷ்ணு சக்கரத்தைப் பயன்படுத்தி இரண்யாக்ஷனைக் கொன்று, பூமியை மீட்டு வந்து கடலில் மிதக்க விட்டார்.

இரண்யாக்ஷன் யார் என்று விதுரர் கேட்க, மைத்ரேயி சொல்லத் துவங்கினார்: ஒரு காலத்தில் காசிப முனிவனின் மனைவி திதியின் வயிற்றில் இரண்டு அசுரர்கள் கருவில் உதயமாயினர். நூறு ஆண்டுகள் கருவை விட்டு வெளி வராமல் திதியின் வயிற்றில் இருந்தனர். மிகக் கொடியவர்களாகிய அவர்கள் கருவில் இருக்கும் போதே பூமியில் பல பிரச்சினைகளை உண்டாக்கினர். சூரியனும், சந்திரனும் கூட ஒளியிழந்து

போயினர். அந்த நிலையில் அவர்கள் யார் என்று பிரம்மா சொல்ல ஆரம்பித்தார். "முனிவர்களே! ஒரு காலத்தில் பல முனிவர்கள் விஷ்ணு இருக்கின்ற இடமாகிய வைகுண்டத் திற்குச் சென்றனர். பிரம்ம லோகத்தை விட அழகாக வைகுண்ட லோகம் இருந்ததால் அங்கே வந்ததற்கு மிகவும் மகிழ்ச்சி அடைந்த முனிவர்கள் அவ்வளவு தூரம் வந்து விட்டதால் எப்படியாவது விஷ்ணுவை தரிசிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டனர். விஷ்ணுவை தரிசிக்க ஏழு வாயில் களைக் கடந்து செல்ல வேண்டும். முனிவர்கள் ஆறு வாயில் களைச் சுலபமாகக் கடந்து விட்டனர். ஏழாவது வாயிலில் ஜெய, விஜயன் என்ற இருவரும் கதாயுதத்தோடு காவல் புரிந்தனர். எக்காரணம் கொண்டும் முனிவர்கள் உள்ளே போக முடியாது என்று அவர்கள் தடை செய்து விட்டனர். கடுங்கோபம் கொண்ட முனிவர்கள் பூமியில் சென்று அரக்கர்களாகப் பிறப்பீர்கள் என சாபம் இட்டனர். அந்த இருவரும்தான் இரண்யாக்ஷன் என்றும், இரண்யகசிபு என்றும் இரு அரக்கர்களாகத் திதியின் வயிற்றில் தோன்றினர். பூமியை சுருட்டிக் கொண்டு சென்று கடலுக்கடியில் ஒளிந்து பிறகு வராகத்தால் கொல்லப்பட்டவன் இரண்யாக்ஷன். நரசிம்ம அவதாரத்தால் மார்பு பிளக்கப்பட்டு இறந்தவன் பிரகலாதனின் தந்தையாகிய இரண்யகசிபு.

**கபில அவதாரம்**

ஒரு காலத்தில் சுவயம்பு மனுவின் மகளாகிய தேவஹூதியை கர்தமர் என்ற முனிவர் மணந்தார். பதினாயிரம் ஆண்டுகள் 'சரஸ்வதி' நதிக்கரையில், விஷ்ணுவைக் குறித்துத் தவம் இயற்றினார். விஷ்ணு தோன்றி 'உன் மகனாகவே நான் பிறக்கப் போகிறேன்' என்று கூறினார். இதனிடையே முனிவருக்கும், மனைவி தேவஹூதிக்கும் ஒன்பது பெண்கள்

பிறந்தனர். அவர்கள் முறையே கலா, அனுசுயா, சரத்தா, கதி, கியாதி, அருந்ததி, ஹவிர்பு, கிரியா, சாந்தி ஆகியோர். இவர்கள் மாரீச்சி, அத்ரி, அங்கீரா, புலஸ்தியா, புலஹா, கிரது, பிருகு, வசிஷ்டன், அதர்வன் ஆகியோரை மணந்தனர்.

அடுத்து விஷ்ணு பிறக்கப் போகிறார் என்பதால் கர்தம முனிவர் ஒரு சிறந்த இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று நினைத்துப் பல ஆசைகளோடு வசதியாக வாழக்கூடிய விமானத்தைப் படைத்தார். அந்த விமானத்திலேயே முனிவரும், அவர் மனைவியும் தங்கினார்கள். ஒன்பது பெண்களும் பிறந்து அவர்கள் திருமணம் முடிந்த பிறகு 'கபிலா' என்ற பெயருடன் விஷ்ணு அவதரித்தார். சிலகாலம் கழித்து முனிவர் தீர்த்த யாத்திரை சென்று விட்டார். உலக வாழ்க்கையில் ஈடுபாடு குறைந்த முனிவரின் மனைவி மகன் கபிலாவைப் பார்த்து "உலகப் பற்று என்னை விட்டு நீங்கிவிட்டது. உண்மையான ஞானம் எது என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன்" என்றாள். தாய்க்கு விளக்கம் கூறும் முறையில் கபிலா ஒரு புதிய சித்தாந்தத்தை எடுத்துக் கூறினார். அதுவே 'சாங்கிய யோக தத்துவம்' என்று சொல்லப்படும். யோகம் என்பது ஒன்றுடன் ஒன்று பிணைவது என்ற பொருளைத் தரும். ஜீவாத்மாவையும், பரமாத்மாவையும் இணைப்பதே யோகம் எனப்படும். யோகம் என்பது மகிழ்ச்சி, துக்கம் இரண்டையுமே வெற்றி கொள்வது. மனம் என்பது பொருள்களில் ஈடுபட்டு அவற்றோடு ஒட்டிக் கொள்கிறது. இவற்றிலிருந்து மனத்தைப் பிரிப்பது மிகக் கடினமான காரியம். யோகத்தை வளர விடாமல் தடுப்பது இப்பற்றேயாகும். இந்தப் புறப்பற்றுக்களில் இருந்து விடுபடுவதுதான் முக்கியமாகும். இதற்கடுத்தபடியாக அகங்காரம் என்னும் அகப்பற்றை வெல்ல வேண்டும். ஜீவாத்மாவைப் பரமாத்மாவோடு இணைக்கச் செய்யும் ஒரு வழியே பக்தி எனப்படும். பரப்பிரம்மம் என்பது வடிவு, குணம்,

உருவம் எதுவும் இல்லாதது ஆதலின் அதை வருணிக்க முடியாது. பரமாத்மாவிற்கும் ஜீவாத்மாவிற்கும் வேற்றுமை இல்லை என்பதை உணராதவர்கள் பிறந்து பிறந்து உழல வேண்டும்.

கபிலா உபதேசித்த சாங்கிய தத்துவத்தை அறிந்த அவர் தாய்க்குப் பல பற்றுகளும் நீங்கின. இந்த உடம்பு முதலியவை மாயை என்று நன்கு புரிந்தது. சரஸ்வதி நதியின் கரையில் ஓர் ஆசிரமம் அமைத்துக் கொண்டு தவம் செய்து வந்தார். கபிலாவின் தாய் தவம் செய்த இடமே இன்று 'சித்திபாதா' என்ற பெயருடன் விளங்குகிறது.

மனுவிற்கு 3 பெண்கள் பிறந்தார்கள் என்றும், அவருள் தேவஹூதி, கார்தம முனிவரை மணந்தார் என்பதையும் விதுரா நீ அறிவாய். மற்ற இரண்டு பெண்களுள் அகுதி என்பவள் ருச்சி என்ற முனிவரை மணந்து ஒரு பெண்ணையும், ஆணையும் பெற்றாள். அந்த ஆண் பிள்ளை, விஷ்ணுவின் அவதாரங்களில் ஒன்றாகும். இந்தப் பிள்ளையைத் தாத்தாவாகிய சுவயம்பு மனுவே வளர்த்தார். அகுதியின் மகளாகிய தட்சணாவை விஷ்ணுவே மணந்து, 'துஷிதாஸ்' எனப்படும் 12 பிள்ளைகளைப் பெற்றார்.

பிரம்மனின் மகனாகிய தட்சன் மூன்றாவது பெண்ணாகிய பிரசுதியை மணந்தான். இவர்களுக்கு 16 பெண்கள் பிறந்தனர். இவர்களில் 13 பேரை தர்மராஜன் மணந்தார். ஒருத்தியை அக்னிதேவன் மணந்தான். பிதுர்களை ஒருத்தி மணந்தாள். கடைசிப் பெண் சிவனை மணந்து கொண்டாள். தர்மராஜனின் மனைவியருள் ஒருத்தியாகிய மூர்தி இரண்டு முனிவர்களைப் பெற்றாள். அவர்கள் நர, நாராயணன் எனப்படுவர். இவர்கள் இருவரும் விஷ்ணுவின் அவதாரம் எனப்படுவர். அனைவராலும் போற்றப்பட்ட இவர்கள் கந்தமாதன மலையில்

தவம் இயற்றினர். தட்சனின் மகளுள் ஒருத்தியான சதி சிவனை மணந்தாள். தட்சன், சிவனை அவமானப்படுத்தியதால் உயிரை நீத்தாள்.

**தட்சன் யாகம்**

முன்னொரு காலத்தில் பிரம்மனுடைய மகனாகிய தட்சன் மிகப் பெரிய யாகம் ஒன்றை நடத்தினான். அனைத்து முனிவர்களும், பிரம்மன், சிவன் ஆகிய அனைவரும் அங்கே கூடி இருந்தனர். திடீரென்று தட்சன் அங்கே வரவும் எல்லோரும் எழுந்து அவனுக்கு மரியாதை செய்தனர். அவ்வாறு மரியாதை செய்யாதவர்கள் இருவர் மட்டுமே. அவர்கள் பிரம்மன், சிவன் ஆகிய இருவர் மட்டுமே. பிரம்மன் எழுந்திருக்காததில் தட்சனுக்கு வருத்தமில்லை. தந்தை எழவேண்டும் என்று நினைக்கவில்லை. ஆனால் சிவன் எழுந்திருக்காதது அவனுக்கு மன உளைச்சலைத் தந்தது. கூடி இருந்தவர்களைப் பார்த்து, 'இந்தச் சிவனுக்கு, மருமகன் என்ற முறையில் எழுந்து மரியாதை செய்யக் கூடத் தெரியவில்லை. அறிவற்றவன் என்று கூடக் கூறலாம். பயித்தியம் பிடித்தவனாகிய இவன் எலும்பு மாலைகளை அணிந்து கொண்டு பிணங்களைச் சுட்ட சாம்பலைப் பூசிக் கொள்கிறான். இவனுக்குப் பெண் கொடுத்ததே பெரிய தவறு என்று நினைக்கிறேன். என்னை அவமானப்படுத்தியதால் இன்று முதல் யார் யாகம் செய்தாலும் சிவனுக்கு 'அவிர்' கொடுக்கக் கூடாது என்று சாபமிடுகிறேன்' என்று கூறினான். சிவன் அவன் வார்த்தைகளைச் சட்டை செய்யவே இல்லை. ஆனால் சிவனுடன் வந்த நந்தி கூடியிருந்தவர்களைப் பார்த்து, 'சிவனை இப்படி அவமானம் செய்யும் பொழுது தட்சனுக்குப் புத்தி சொல்லாமல் வாயை மூடிக் கொண்டிருந்தீர்கள். ஆகவே இங்கிருக்கும் முனிவர் யாவரும் பூவுலகில் பிறந்து, இறந்து,

பிறந்து உழல்வீர்களாக!' என்று சாபமிட்டான். இந்தச் சாபத்தைப் பொறாத முனிவர்களுள் ஒருவனாகிய பிருகு எதிர் சாபமிட்டான். "இந்த சிவனைப் பின்பற்றுகின்றவர் அனைவரும் சடைப் பிடித்த தலையுடன், உடல் முழுதும் சாம்பலைப் பூசிக் கொண்டு, குடித்துக் கொண்டு திரிவார் களாக! இத்தனைக் கூச்சல் குழப்பங்களுக்கும் இடையே வாய் திறக்காத சிவன் நந்தி முதலான கணங்களையும், தன்னைச் சேர்ந்தோரையும் அழைத்துக் கொண்டு யாகத்தினின்று புறப்பட்டுப் போய்விட்டார். சிவனில்லாமலே யாகம் 1,000 ஆண்டுகள் நடைபெற்றது.

சிவனில்லாமல் தன் முதல் யாகத்தைச் செய்த செருக்கில் தட்சன் மறுமுறை வாஜபேயம் என்ற யாகத்தை வெற்றியுடன் செய்து முடித்தான். இந்த இரு யாகங்களும் சிவனில்லாமல் நடந்து வெற்றி பெற்றதால் மூன்றாவதாக 'பிரகஸ்பதீஸ்தவ' என்றொரு யாகத்தைத் தொடங்கினான். சிவனைத் தவிர அனைவருக்கும் அழைப்புச் சென்றது. கந்தர்வர்கள் தங்கள் விமானங்களில் யாகத்திற்காக ஆகாய மார்க்கத்தில் சென்று கொண்டிருந்தனர். யாகத்தையும், தட்சனையும் அவர்கள் புகழ்ந்து பேசியவுடன் சதிக்கு ஓர் ஆசை பிறந்தது. சிவனிடம் சென்று தந்தை செய்யும் பெரிய யாகத்திற்கு நாமும் போக வேண்டும் என்றாள். தங்களை யாரும் அழைக்கவில்லை என்று சிவன் கூறியதற்கு, "மாமனார் செய்யும் யாகத்திற்கு மருமகனுக்கு அழைப்புத் தேவையா? நாம் போவதில் தவறில்லை. மேலும் என் சகோதரிகளைப் பார்த்துப் பலகாலம் ஆகிவிட்டது. என் தாயைப் பார்த்து எத்தனையோ காலம் ஆகிவிட்டது. எனவே போயே தீர வேண்டும்" என்று அடம் பிடித்தாள். சிவன், தான் வர மறுத்துத் தக்க துணையுடன் சதியை அனுப்பினார்.

சதி சென்ற பொழுது யாகம் தொடங்கிவிட்டது. அவருடைய தாயும், சகோதரிகளும் அவளிடம் பேசிக் கொண்டிருந்தனரே தவிர தட்சன் அவளை மதிக்கவில்லை; பேசவுமில்லை! சினம் கொண்ட சதி, தட்சனின் எதிரே வந்து நின்று, 'என்னுடைய கணவனை அவமானப்படுத்தினாய். ஒரு கற்புடைய பெண் இதைத் தாங்கிக் கொள்ள முடியாது. உன்னுடைய மகள் என்ற காரணத்தால், இந்த உடம்பு நீ கொடுத்ததாகும். இவ்வுடம்போடு நான் இருக்க விரும்ப வில்லை' என்று கூறிவிட்டு அக்னி குண்டத்தின் எதிரே உட்கார்ந்தாள். மூச்சை அடக்கிப் பிரமரந்தரம் என்று சொல்லப் படும் கபாலத்தின் வழியே தன் உயிர் போகுமாறு செய்தாள். உடனே அவள் உடல் தீப்பற்றி எரிந்து சாம்பலாயிற்று. வியப்பும் அதிசயமும் கொண்டு அனைவரும் இதைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

சதியுடன் வந்த சிவ கணங்கள் அங்குள்ள முனிவர்களை யும், பிருகு முனிவனையும் வதைத்தனர். ஆனால் மாபெரும் சக்தி படைத்த பிருகு முனிவர் தன்னுடைய சக்தியைப் பயன்படுத்தி ஆயிரக்கணக்கான தேவ கணங்களை உருவாக்கி சிவ கணங்களோடு போராடச் செய்தார். சிவ கணங்கள் தோற்று ஓடிச் சிவனிடம் நடந்ததைக் கூறினர். பெருங் கோபம் கொண்ட சிவன், தலையில் இருந்து ஒரு முடியைப் பறித்து மிகுந்த உக்கிரத்துடன் அதைக் கீழே எறிந்தார். அதிலிருந்து வீரபத்திரர் என்று ஒருவர் தோன்றினார். ஆகாயத்துக்கும் பூமிக்குமாக இருந்த அவர் எலும்பு மாலைகளை அணிந்து கொண்டிருந்தார். ஈடு இணையற்ற 'திரிசூலம்' என்ற படையைக் கையில் ஏந்தி இருந்தார். மிக்க பணிவுடன் சிவனைப் பணிந்து, 'எனக்கு இடும் கட்டளை என்ன?' என்று கேட்டார். சிவன், 'நடந்ததை நீ அறிவாய் அல்லவா? தட்சனுடைய யாகத்திற்குச் சென்று, அவனைக் கொன்று

யாகத்தையும் அழித்து வருவாயாக!' என்று கட்டளையிட்டார். மிக வேகமாகச் சென்ற வீரபத்திரர் தட்சனுடைய யாகத்தையும், அது நடைபெற்ற மண்டபத்தையும் அழித்தார். அவருடன் சென்ற சிவ கணங்கள் முனிவர்களைப் பிடித்து நையப் புடைத்தார்கள். மாபெரும் சக்தி வாய்ந்த பிருகு முனிவனை ஒரு தூணில் கட்டி அவர் தாடியைப் பிய்த்து எறிந்தார். தட்சனுடைய கழுத்தை வெட்ட முயன்றபோது அது முடிய வில்லை. உடனே அவனைப் பிடித்து யாக பலி மிருகத்தைக் கட்டப் பயன்படும் 'யூபம்' என்ற தூணில் கட்டி தட்சன் தலையை வெட்டியவுடன் அந்தத் தலை யாக குண்டத்தில் விழுந்து சாம்பலாயிற்று. அனைத்தையும் வெற்றியுடன் முடித்த வீரபத்திரர் சிவனிடம் வந்தார். இதனிடையே பயந்து ஓடிச் சென்ற முனிவர்கள் பிரம்மனிடம் நடந்ததைக் கூறி 'என்ன செய்வது' என்று கேட்டனர். பிரம்மன், 'சிவனை மதியாது அகம்பாவத்துடன் நீங்கள் செய்த காரியத்துக்கு இந்த தண்டனை பொறுத்தமானதே. சிவனை எதிர்த்து யாரும் ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் நேரே சிவனிடம் சென்று மன்னிப்புக் கேட்பதைத் தவிர வேறு வழியில்லை' என்று கூறிவிட்டார். அவர்கள் அனைவரும் சிவனிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். மேலும் இரண்டு வரங் களையும் வேண்டினர். ஒன்று, தட்சனைப் பிழைக்க வைப்பது. மற்றொன்று, பிருகுவின் முகத்தில் மறுபடியும் தாடி முளைக்க அருள்வது. ஏற்கெனவே சினம் அடங்கிய சிவன் அவர்களை அழைத்துக் கொண்டு தட்சனின் யாக சாலைக்கு வந்தார். தூணில் கட்டப்பட்டிருந்த பிருகுவிற்கு மறுபடியும் தாடி முளைக்குமாறு செய்தார். ஆனால், தட்சன் வெட்டுண்ட தலை யாக குண்டத்தில் விழுந்து சாம்பலாகி விட்டமையின் ஓர் ஆட்டின் தலையை எடுத்து அவன் உடம்பில் பொருத்தி தட்சனுக்கு உயிர் உண்டாகுமாறு செய்தார். எழுந்த தட்சன்

சிவனின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். யாக குண்டத்தின் எதிரே உயிர் நீத்த சதி இமவானுக்கும், மேனகைக்கும் மகளாகப் பிறந்து சிவனையே மணம் செய்து கொண்டார். தட்சன் யாகம் தொடர்ந்தது. சிவபெருமானை வரவேற்று விஷ்ணுவே ஆச்சாரியனாக இருந்து யாகத்தை முடித்துக் கொடுத்தார்.

*(பாகவத புராணத்தில் இந்தப் பகுதியில் துருவன் கதை விரிவாகப் பேசப்படுகிறது. முன்னரே விஷ்ணு புராணத்தில் இக்கதை பேசப்பட்டுள்ளதால் அதில் இடம் பெறாத பகுதி மட்டும் இங்கு தரப்பட்டுள்ளது.)*

விஷ்ணுவிடம் வரம் பெற்ற துருவனுக்கு விஷ்ணு பின் வருமாறு கூறினார். "நீ இன்னும் உலகில் இருந்து திருமணம் செய்து கொண்டு மகப் பேறு பெற்று 36,000 ஆண்டுகள் ஆட்சி செய்ய வேண்டும். அதன் பிறகு இந்த சித்திகள் எல்லாம் உன்னை வந்து அடையும். எனவே நீ இப்பொழுது உன் தந்தையிடம் செல்லலாம்" என்று கூறினார். அதன்படியே ஊருக்கு மீண்ட துருவனைக் கண்டு அவனுடைய தந்தையும், தம்பி உத்தமனும் பெருமகிழ்ச்சி அடைந்தனர். உத்தான பாதன் அரசுப் பொறுப்பை துருவனிடம் விட்டுவிட்டுத் தவம் செய்யக் காடு சென்று விட்டான். துருவன் ஆட்சிக்காலத்தில் அவன் தம்பி உத்தமன் வேட்டையாடச் சென்ற பொழுது ஒரு யட்சனால் கொல்லப்பட்டான். சீறி எழுந்த துருவன் பெரும் படையுடன் சென்று யட்சர்களை எதிர்த்தான். மாயப் போரில் வல்ல யட்சர்களின் மாயை எல்லாம், நாராயண அஸ்திரத்தின் துணைகொண்டு வென்றான். போர் நீடிக்கவே தேவர்களும் முனிவர்களும் துருவனைச் சமாதானப்படுத்திப் போரை நிறுத்தினர். முனிவர்கள் துருவனைப் பார்த்து விஷ்ணுவின் ஆணையால்தான் உன் தம்பி கொல்லப்பட்டான். அதுவும்

அவனைக் கொன்றவன் ஒரே ஒரு யட்சன். அப்படி இருக்க ஒரு பாவமும் அறியாத அப்பாவி யட்சர்களைக் கொன்று குவிப்பது நியாயமற்றது என்று கூறினர். துருவன் அதை ஏற்றுக் கொண்டு நாடு திரும்பி இரு மனைவியரை மணந்து முப்பத்தாறாயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்து, உலக இன்பத்தில் வெறுப்புற்று வத்ரிக சர்மா என்னும் ஆசிரமத்தில் தவத்தில் இருக்கும்பொழுது விஷ்ணு லோகத்தினின்று வந்த விமானம் அவனை அழைத்துச் சென்றது. விஷ்ணுவின் ஆணையால் சப்தரிஷி மண்டலத்தின் கீழே துருவனுக்கு என்று ராஜ்ஜியம் அமைக்கப்பட்டிருந்தது. இப்பொழுது துருவன் அதன் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டான்.

*(இதை அடுத்து பாகவத புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ள வெனா – பிருத்துவின் கதை ஏற்கெனவே பிரம்ம புராணத்தில் தரப்பட்டுள்ளது.)*

**பிரசேதர்களும் புரஞ்சனனும்**

பிருத்துவின் பரம்பரையில் தோன்றியவன் பிராசீனவர்கி என்ற அரசன். அவனுக்கு 10 மகன்கள் இருந்தனர். அவர்கள் பிரசேதாஸ் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் காட்டு வழியே தவத்தை மேற்கொண்டு செல்லும் பொழுது ஒரு பெரிய ஏரியைக் கண்டனர். தாமரை பூத்துக் குலுங்கும் தடாகத்தில் சிவன் தன் கணங்களுடன் குளித்துக் கொண்டிருந்தார். சிவனை வணங்கிய பிரசேதர்களுக்கு அவர் சில அறிவுரைகளைத் தந்தார். அதை ஏற்றுக் கொண்ட அவர்கள் நீருக்கடியில் தவம் செய்யச் சென்றனர்.

பிராசீனவர்கி, ஆட்சியில் இருக்கும் பொழுது நாரதர் ஒருமுறை அவனிடம் வந்தார். நாரதரைப் பார்த்து மன்னர், 'ஐயனே! உலக இச்சையில் என் மனம் அழுந்திக் கிடக்கிறது.

இந்த மாயையில் இருந்து வெளிவர நான் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்க நாரதர், 'அரசே! நான் இப்பொழுது சொல்லப் போகும் புரஞ்சனன் கதையைக் கேளும். மாயை யினின்று மீள்வதற்கு உமக்குத் தெளிவான வழி கிடைக்கும்," என்று கூறிக் கதையினைச் சொல்லத் துவங்கினார்.

பாஞ்சால நாட்டு மன்னன் புரஞ்சனன் என்பவன் தான் தங்கி வாழ்வதற்குரிய சிறந்த இடம் தேடி ஊர் ஊராக அலைந்தான். அவனுக்கு ஒரே ஒரு நண்பன் இருந்தான். ஆனால் அந்த நண்பனுடைய பெயரைக் கூட யாரும் அறியார்கள். புரஞ்சனன் பல இடங்களில் சுற்றித் திரிந்து இறுதியாக இமயத்தின் அடிவாரத்தில் ஓர் அழகிய நகரைக் கண்டான். கோட்டை, கொத்தளம், அகழி என்பவற்றோடு இயற்கை வளம் நிறைந்த அந்த நகரத்தில் வீடுகள் எல்லாம் வெள்ளியும் மணியும் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. அந்த நகரைப் பார்த்து ஆசைப்பட்ட புரஞ்சனன் அதனுள்ளே செல்ல, அங்கு ஓர் அழகிய பெண்ணைப் பார்த்தான். பத்து வீரர்கள் அவளைக் காவல் காத்து நின்றனர். அவர்கள் இல்லாமல் ஓர் ஐந்தலை நாகம் அவளுக்குக் காவலாக இருந்தது. அவள்மேல் காதல் கொண்ட புரஞ்சனன் அவளை மணக்க விரும்பி அவள் சம்மதத்தைக் கேட்டான். அவள், அவன் அந்த நகரத்தை விட்டுப் போகாமல் இருப்பதானால் அவனை மணம் செய்து கொள்வதாகக் கூறினாள். மணம் நடைபெற்றது. புரஞ்சனன் நூறு ஆண்டுகள் அவளோடு வாழ்ந்தான். பல பிள்ளைகளையும் பெண்களையும் பெற்ற அவன் தளர்ந்து மூப்பு வந்ததால் இறக்கையில் கூடத் தன் அழகிய மனைவியை நினைத்துக் கொண்டே இருந்தான். நரகத்தில் சென்று துன்பங்களை அனுபவிக்கும்போது கூடப் பெண்ணை மறக்காமல் இருந்ததால், மறு ஜென்மத்தில்

விதர்ப்ப நாட்டு மன்னனின் மகளாகப் பிறந்து மலையத் துவஜன் என்ற மன்னனை மணம் செய்து கொண்டான். மலையத்துவஜன் மூப்பு எய்தியதும் தன் மூத்த பிள்ளையிடம் அரசைக் கொடுத்துவிட்டுக் காட்டுக்குச் சென்றான். செல்லும் பொழுது அவன் மனைவியையும் அழைத்துக் கொண்டு சென்றான். தவத்தின் முடிவில் மலையத்துவஜன் இறந்துவிட அவன் மனைவியும் அத்துயரம் தாங்காது உயிர் துறக்க முற்பட்டாள். அப்பொழுது அவ்விடத்திற்கு வந்த பிராமணன், "பெண்ணே! நில், நீ யார்? இறந்து கிடக்கும் இவன் யார்? ஏன் உயிரை விட வேண்டும்?" என்று கேட்டவுடன் அப்பெண், "பிராமணரே! தாங்கள் யார் என்று தெரியவில்லை. என்னை ஏன் தடுக்கின்றீர்கள்?" என்று வினவ, உடனே அந்த பிராமணன், "பெண்ணே! என்னைத் தெரியவில்லையா? இப்போது பெண்ணாக இருக்கும் நீ போன ஜென்மத்தில் புரஞ்சனன் என்ற பாஞ்சால நாட்டு மன்னனாக இருந்தாய். உனக்கிருந்த ஒரே ஒரு நண்பன் நான்தான். இமயமலைச் சாரலில் ஒரு பெண்ணை மணந்து பாஞ்சால நாட்டை மறந்தாய். அப்பெண்ணை மணந்து நூறு வருடங்கள் அவளோடு வாழ்ந்தும், அவளை மறக்க முடியாமல் நரகத்தில் இடர்ப்பட்டு மறுபடியும் பெண் ஜென்மம் எடுத்தாய். இப்போது மலையத்துவஜனுடன் வாழ்ந்து மறுபடியும் தற்கொலைக்கு முயல்கிறாய். உன்னுடைய உண்மையான சொரூபத்தை நீ அறிந்து கொள்ளாததால்தான் இத்தனைக் கேடுகளும் கலக்கங்களும். நீ என்பது உன்னுடைய ஆன்மா; அதற்கு யாரும் உறவுமில்லை, பகையுமில்லை" என்று கூறினான்.

கதையைக் கேட்ட பிராசீனவர்கி அதன் தத்துவத்தைப் புரிந்து கொண்டு ஆத்ம சொரூபத்தை அறிந்து கொள்ளப் புறப்பட்டு விட்டான்.

## பாரத நாடு – பெயர்க் காரணம்

ஸ்வயம்பு மனுவின் மகனாகிய பிரியவ்ரதன் துறவு மேற்கொள்ள விரும்பி உலக வாழ்க்கையை வெறுத்துப் புறப்பட்ட போது, அவன் தந்தை, குரு பிரம்மா, நாரதர் ஆகிய மூவரும் அரசனாகப் பிறந்தவன் கடமையைச் செய்ய வேண்டியது நியாயம் என்றும், அதனைச் செய்து முடித்த பிறகு துறவு மேற்கொள்வதே உத்தமம் என்றும் கூறி அவன் மனத்தை மாற்றினர். அதன்பிறகு அவன் உலகை ஆள ஒப்புக் கொண்டான். சூரியன் தினமும் மேரு மலையைச் சுற்றிவரப் பயன்படுத்திய தேர் பிரியவ்ரதன் தேரே ஆகும். தினந்தோறும் சூரியன் பூமியின் பின்புறம் செல்லும் போது முன்புறம் இருட்டாவது அனைவரும் அறிந்த ஒன்று. பிரியவ்ரதனுக்கு இது பிடிக்கவில்லை. இரண்டு வேளையும் பகலாகவே இருக்க வேண்டும் என்று விரும்பினான். அதனால் தன்னுடைய நெருப்பைக் கக்கும் ரதத்தில் ஏறிக்கொண்டு மிக வேகமாக ஏழு முறை சுற்றி வந்தான். அந்த வேகத்தால் தேரின் சக்கரங்கள் ஏழு இடங்களில் மண்ணைத் தோண்டிக் கடலாக்கியது. அதன் பயனாக உலகம் ஏழு பிரிவுகளாகப் பிரிந்தது. பிரியவ்ரதன் தன் அந்திமக் காலத்தில் தன் ஏழு பிள்ளைகளையும் அழைத்து, உலகின் ஏழு பிரிவுகளையும் காட்டி ஒவ்வொரு பிரிவிற்கும் ஒருவன் அரசனாக இருக்கட்டும் என்று கூறினான். அவர்களுள் அக்னிதரன் பங்கிற்கு ஜம்பூத்வீபம் (நாவலந்தீவு) கிடைத்தது. இந்த அக்னிதரனுக்கு 4 பிள்ளைகள் பிறந்தனர். தன் பங்கிற்குரிய ஜம்பூத்வீபத்தை ஒன்பது பங்காக்கி அவர்களை ஆளச் செய்தான். அவர்களுள் நபி என்ற மகனுக்குக் கிடைத்த ஒன்பதில் ஒரு பகுதியை அவன் ஆண்டு மகன் ரிஷபனுக்கு அதைக் கொடுத்தான். இந்திரன் மகளாகிய ஜெயந்தியை மணந்த ரிஷபனுக்கு நூறு பிள்ளைகள் இருந்தனர்.

அவர்களுள் மூத்தவன் பரதன் எனப்பட்டான். அவன் பெயரை வைத்துத்தான் இப்பகுதிக்கு 'பாரத நாடு' என்ற பெயர் வந்தது.

## ஜட பரதனின் கதை

(விஷ்ணு புராணத்தில் வந்துள்ள பகுதி போக, புதிதாக வந்துள்ளவற்றை இங்கே தந்துள்ளோம்) பைத்தியம் போல் நடித்துக் கொண்டிருந்த பரதன் தன் உடம்பு பற்றி உணர்வே இல்லாமல் வாழ்ந்து வருகின்ற காலத்தில் ஒரு வயலில் அமர்ந்திருந்தான். காளிக்கு பலியிடுவதற்காக ஒரு சூத்திரன் தன் ஆட்களை ஏவி ஒருவனைப் பிடித்து வரச்சொன்னான். அவர்கள் ஒரு இளைஞனைப் பிடித்துச் சூத்திரனிடம் கொண்டு செல்கையில், இரவு நேரத்தில் அந்த இளைஞன் தப்பி ஓடிவிட்டான். என்ன செய்வது என்று அறியாது திகைத்த அப்பணியாளர்கள் பரதனைப் பார்த்தவுடன் அவனை அழைத்துச் சென்றனர். சூத்திரனிடம் கொண்டு போய் நிறுத்திய வுடன் அவனைக் குளிப்பாட்டித் தூய்மையான உடை அணிவித்து பலிக்குத் தயாராக்கினர். இத்தனை நிகழ்ந்தும் பரதன் எவ்வித உணர்ச்சியும் இல்லாமல் நின்று கொண் டிருந்தான். பலி இடும் பூசாரி அவன் கழுத்தை வெட்டு வதற்காக அரிவாளை ஓங்கியவுடன் அது பொறுக்காத காளி தேவி வெளிப்பட்டு பலிபூசை செய்ய வந்த அனைவரையும் கொன்றுவிட்டாள். இந்த அதிசயம் கூடப் பரதனுடைய மனத்தில் எவ்வித உணர்ச்சியையும் உண்டாக்கவில்லை. தேகத்தை மறந்து வாழ்ந்த இந்த ஞானி சிறிது நேரம் அங்கிருந்து விட்டு, பழைய இடத்தில் போய் அமர்ந்து கொண்டான். மனிதனாக இருந்தும் உடம்பின் உணர்ச்சி (தேகப் பிரக்ஞை) இல்லாமல் ஜடப் பொருள் போல் இருந்தமையால் இவனுக்கு "ஜடபரதன்" என்ற பெயர் வழங்கலாயிற்று.

## விருத்ராசுரன் கதை

முன்னொரு காலத்தில் இந்திரன் தனது சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். சுற்றித் தேவர்கள் மற்ற இருக்கைகளில் இருந்தனர். கந்தர்வர்கள் பாட, அப்சரஸ்கள் நடனமாடிக் கொண்டிருந்தனர். இந்த இன்பத்தில் ஆழ்ந்து இந்திரன் தன்னை மறந்திருந்தான். அப்போது தேவகுருவான பிரகஸ்பதி உள்ளே நுழைந்தார். எல்லோரும் எழுந்து மரியாதை செலுத்தினர். இன்ப போதையில் இருந்த இந்திரன் குருவின் வரவைக் கண்டுகொள்ளவே இல்லை. ஆச்சார்ய பீடத்திற்கு ஏற்பட்ட இந்த அவமானத்தைத் தாங்காத பிரகஸ்பதி திரும்பிச் சென்று விட்டார். அவர் போன பிறகுதான் இந்திரனுக்குத் தான் செய்த மாபெரும் தவறு மனத்தில் பட்டது. இந்த அபச்சாரம் எவ்வளவு பெரிய தீங்கை விளைவிக்கும் என்பதை அறிந்த இந்திரன் அவரை எப்படியாவது தேடிப்பிடித்து அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று புறப்பட்டுப் போனான். இந்திரனுடைய கர்வத்திற்கு சரியான பாடம் கற்பிக்க வேண்டும் என்று நினைத்த பிரகஸ்பதி தன் அதீதமான ஆற்றலைப் பயன்படுத்தி மாயமாய் மறைந்து விட்டார். குருவை எங்குத் தேடியும் காணாமையால் கிலி பிடித்த இந்திரன் தன் இருக்கைக்கு வந்து விட்டான். நாட்கள் சென்றன. தேவகுரு காணாமல் போன செய்தி எங்கும் பரவிற்று. இத்தகைய ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அசுரர்கள் தேவலோகத்தின் மீது படையெடுத்து அவர்களை நையப் புடைத்து விரட்டி விட்டார்கள். அடி பொறுக்க மாட்டாத தேவர்கள் பிரம்மனிடம் சென்று முறையிட்டனர். பிரம்மன், அகங்காரத்தால் வந்த இந்தக் குற்றத்திற்கு நான் ஒன்றும் செய்யமுடியாது என்று கூறிவிட்டார். தேவர்கள் தங்களுக்கு உய்கதியே இல்லை என்று அழுது வேண்ட, 'துவஷ்டா என்ற முனிவரின் மகனாகிய விசுவரூபாவையே

தற்காலிக குருவாக வைத்துக் கொள்ளுங்கள்' என்று உபதேசம் செய்தார். தேவர்கள் விசுவரூபாவிடம் சென்று பிரம்மன் பணித்ததையும், தங்கள் வேண்டுதலையும் முன் வைத்தார்கள். விசுவரூபா அவர்களின் வேண்டுதலை ஏற்று தேவகுருவின் பதவியை ஏற்றுக் கொண்டார். ஆனால் அதில் ஒரு சிக்கல் இருந்தது. விசுவரூபனின் தந்தை துவஷ்டா அசுரப் பெண்ணாகிய ஈசனாவை மணந் திருந்தார். விசுவரூபன் முனிவனாயினும், அவனுடைய சித்தி தைத்திய குலத்தைச் சேர்ந்தவளாக இருந்தாள். எனவே, இந்திரனைப் பொறுத்த மட்டில் விசுவரூபாவை முழுவதும் நம்பத் தயாரில்லை. என்றாலும் விசுவரூபாவின் வருகையால் தேவர்கள் அசுரர்களை ஜெயித்து விட்டனர். விசுவரூபாவின் உதவியால்தான் தேவர்களுக்கு இந்த வெற்றி கிடைத்தது என்றாலும், இந்திரன் விசுவரூபாவினை நம்பாமல் இருந்தான்.

விசுவரூபாவிற்கு மூன்று தலைகள் இருந்தன. ஒரு தலை உண்ணவும், மற்றொரு தலை பருகவும் பயன்பட்டன. மூன்றாவது தலை யாகங்களில் கிடைக்கும் சோம ரசத்தைக் குடிப்பதற்கென்றே பயன்பட்டது. தேவர்கள் ஜெயித்த நிலையில் அந்த வெற்றிக்கு உதவிய விசுவரூபாவின் மூன்று தலைகளையும் இந்திரன் வெட்டி விட்டான். விசுவரூபாவின் தந்தையாகிய துவஷ்டா, இந்திரனின் நன்றி கொன்ற செயலைக் கேள்விப்பட்டு, இந்திரனை அழிக்க ஒரு மாபெரும் யாகம் நடத்தினான். அந்த வேள்வியில், விண்ணையும் மண்ணையும் தொட்டுக் கொண்டு ஒரு பூதம் வந்தது. மலைபோன்ற மேனியும், மூன்று உலகங்களையும் விழுங்கக் கூடிய வாயும், நெருப்பை உமிழக் கூடிய கண்ணும் உடையவனாக விருத்ரா சுரன் என்ற பெயருடன் தோன்றினான். அந்த பூதம் 'என் பணி என்ன?' என்று துவஷ்டாவைக் கேட்டது. 'இந்திரனையும்

தேவர்களையும் ஒழித்துக் கட்டு' என்று துவஷ்டா சொல்ல, விருத்ராசுரன் தைத்திய சேனையோடு புறப்பட்டான். தேவர்கள் எந்தவிதமான ஆயுதத்தைப் பயன்படுத்தினாலும், விருத்ராசுரன் அவை அனைத்தையும் விழுங்கி விட்டான். இந்திரன் முதலிய தேவர்கள் ஓட்டம் பிடித்தனர். இம்முறை தேவர்கள் நேரிடை யாக விஷ்ணுவிடமே சென்று விட்டனர். விஷ்ணுவிடம், 'விருத்ராசுரன் இருக்கும் வரை தேவர்கள் வாழவே முடியாது' என்று கூறி முறையிட்டனர். அவர்கள் ஆயுதங்கள் அனைத்தும் பயனற்றுப் போனதையும் விஷ்ணுவிடம் கூறினர். விஷ்ணு, 'ததிச்சி என்ற முனிவர் ஒருவர் இருக்கிறார். மாபெரும் தவசியான அவர் உடம்பிலுள்ள எலும்புகள் பெரும் சக்தி வாய்ந்தவை. அவர் எலும்பைப் பெற்றுப் புதிய ஆயுதம் ஒன்றைத் தயாரித்துக் கொண்டு விருத்ராசுரனுடன் போர் புரிந்தால் வெற்றி காணலாம்' என்றார். ததிச்சி முனிவரிடம் ஓடிய தேவர்கள் விஷ்ணு சொன்னதை அப்படியே சொன்னார்கள். மிக்க மகிழ்ச்சியோடு தம் உடலை நீப்பதாகவும், தேவர்கள் அந்த எலும்பை எடுத்துக் கொள்ளலாம் என்றும் ததிச்சி கூறினார். அப்படியே உடலை நீத்தார்.

விஸ்வகர்மாவின் துணைகொண்டு வஜ்ராயுதம் தயாரிக்கப்பட்டது. புதிய ஆயுதத்துடன் இந்திரன் தேவர் களுடன் போருக்குக் கிளம்பினான். புதிய ஆயுதம் காரணமாக தைத்திய சேனை சிதறலாயிற்று. விருத்ராசுரன், கோழை களாகிய அவர்களை அழைத்து, என்றோ ஒரு நாள் சாகப் போகிறோம். போர்க்களத்தில் இவ்வாறு ஓடுவதால் அவமானம்தான் மிஞ்சும். திரும்பி வாருங்கள் என்று எவ்வளவு சொல்லியும் தைத்திரியர்கள் ஓடிவிட்டனர். விருத்ராசுரன் தனியே போர்க்களத்தில் நின்றான். வஜ்ராயுதத்துடன் ஐராவதத்தில் வந்த இந்திரனைத் தன் கையிலிருந்த சூலாயுதத்

தால் தாக்கினான். ஐராவதம் இரத்தம் கக்கிக் கொண்டு நின்றது. இதே சூலாயுதத்தால் இந்திரன் கையிலிருந்த வஜ்ராயுதத்தைக் கீழே விழும்படி செய்தான். கையில் ஆயுதம் இன்றிப் பரிதாபமாக யானைமேல் அமர்ந்திருந்த இந்திரனைப் பார்த்து, "கோழை இந்திரா! ஏன் நடுங்குகிறாய்? எனக்கு உயிர்துறந்து விஷ்ணுவிடம் செல்ல வேண்டும் என்ற எண்ணம் வலுவடைந்து விட்டது. உடனே வஜ்ராயுதத்தை எடுத்து என்னைக் கொன்றுவிடு. மகிழ்ச்சியோடு இறந்து விஷ்ணுவிடம் போகப் போகிறேன்" என்றான். அவன் கூறிய படியே வஜ்ராயுதத்தை எடுத்து விருத்ராசுரனைக் கொன்று விட்டான் இந்திரன்.

இந்திரனின் பகை முடிந்தது. ஆனால் பாவம் பற்றிக் கொண்டது. விருத்ராசுரன் துவஷ்டாவினால் உண்டாக்கப் பட்ட, பிராமண அசுரன். அந்த பிராமணனைக் கொன்ற 'பிரம்ம ஹத்தி தோஷம்' இந்திரனைப் பற்றிக் கொண்டது. எங்கு சுற்றியும் அந்தத் தோஷத்தைப் போக்கமுடியாத இந்திரன் மானசரோவருக்குச் சென்று அங்குள்ள தாமரை மலர் ஒன்றின் தண்டில் ஒளிந்திருந்தான். தண்டில் ஒளிந்திருந்த காலத்தில நகுசன் இந்திரப் பதவியில் இருந்தான்.

**சித்ரகேது**

சாகும் தருவாயில் இருந்த பரிட்சித்து மன்னன் பாகவத புராணத்தைச் சொல்லிக் கொண்டிருந்த சுகதேவ முனிவரைப் பார்த்து, 'முனிவரே! விருத்ராசுரன் இந்திரனைப் பார்த்து என்னைச் சீக்கிரம் கொன்றுவிடு. நான் விஷ்ணுவிடம் போக வேண்டும் என்று கூறினான் என்றீர்கள். ஓர் அசுரனுக்கு இவ்வளவு விஷ்ணுபக்தி எவ்வாறு வந்தது?' என வினவினான். அதுகேட்ட சுகதேவ முனிவர் 'அரசே! விருத்ரா சுரனின் பழைய பிறப்பை அறிந்தால் உமக்கு இந்தச் சந்தேகம்

வராது. அதைக் கேளுங்கள்' என்று கூறி, சித்ரகேது கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

சுரசேனரால் நிர்மாணிக்கப்பட்ட மதுராபுரியை சித்ர சேனன் என்ற மன்னன் ஆண்டு கொண்டிருந்தான். பல மனைவியரை மணந்தும் அவனுக்குப் புத்திரன் ஒருவன் இல்லாததால் பெருங்கவலையோடு இருந்தான். ஒருமுறை ஆங்கீரச முனிவர் அவன் நாட்டிற்கு வந்தார். அவரை வணங்கி உபசரித்த மன்னன் தன் குறையை எடுத்துக் கூறி ஏதாவது செய்யுமாறு வேண்டினான். ஆங்கீரச முனிவர் ஒரு யாகத்தை நடத்தி அதில் கிடைத்த பாயசத்தை மன்னனின் மூத்த மனைவி யாகிய கிருத்தயுதிக்குக் கொடுத்தார். நாளடைவில் அவள் ஒரு ஆண் மகவைப் பெற்றாள். குழந்தை பிறந்ததும் சித்ரகேதுவும், அவன் மனைவி கிருத்தயுதியும் பெருமகிழ்ச்சி அடைந்தனர். ஏனைய அரசிகளும் சந்தோஷப்படுவது போல பாவனை செய்தாலும் உள்ளுக்குள் புழுங்கினர். தங்களுக்குக் கிடைக்காத குழந்தைச் செல்வம் மூத்தவளுக்குக் கிடைத்ததால் அவள் மேலும், குழந்தை மேலும் அசூசையும், பொறாமையும் கொண்டனர். அவர்களுக்குள் சூழ்ச்சி செய்து விஷத்தைக் கொடுத்துக் குழந்தையைக் கொன்று விட்டனர். மன்னனும் அரசியும் அடைந்த துயரத்திற்கு எல்லையே இல்லை. இந்நிலையில் ஆங்கீரச முனிவரும் நாரதரும் அரசனைச் சந்தித்தனர். நாரதர், "அரசே! யாரைக் குறித்து எதற்காக நீ வருந்துகிறாய்? இந்தப் பிள்ளை பிறப்பதற்கு முன் உனக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? இப்பொழுது இறந்து விட்ட பிறகு உங்களிருவருக்கும் என்ன சம்பந்தம்? இந்தப் பிள்ளையின் ஆன்மா என்றும் அழியாதது. இடையிடையே பிறக்கும் போது எடுக்கின்ற உடல்கள் வெவ்வேறானவை. இந்த உடல்கள்தான் அந்த ஆத்மா என்று நினைப்பது வெறும் மாயையாகும். ஆத்மா அழிவில்லாதது என்றால், அந்த

ஆத்மாவிற்கு நீ ஏன் அழவேண்டும்" என்று பலவாறு கூறித் தேற்றினார். மன்னன் ஓரளவு அமைதி அடைந்தாலும், முழுவதும் அமைதி அடைந்தான் என்று கூற முடியாது. இதை அறிந்த நாரதர், இதோ பார், உன் இறந்த மகனை எழுப்பு கிறேன். அவன் என்ன சொல்கிறான் பார்! என்று சொல்லி விட்டுத் தன் சக்தியால் அக்குழந்தைக்கு உயிர் உண்டாக்கி, 'குழந்தாய்! உன் தாய் தந்தையர் பெரிதும் வருந்துகின்றார்கள். இன்னும் சிறிது காலம் இந்த பூமியில் இருந்து இந்த அரசை நீ ஏற்று ஆள வேண்டும்' என்று கூறினார்.

உயிர் பெற்ற குழந்தை "நாரத முனிவரே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ஏதோ தாய், தந்தை என்றீர்கள். அவர்கள் யார்? அவர்களுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? என்னைப் பொறுத்தவரை தாய் என்றோ, தந்தை என்றோ யாருமில்லை. என் ஆத்மா அழிவற்றது. இதற்கு முன்னர் இருந்த உடல் தோன்றக் காரணமான தாய் தந்தையர் வேறு. அதுபோல எத்தனையோ தாய் தந்தைய்ரைப் பார்த்து விட்டேன். ஏதோ அரசு, செல்வம் என்றெல்லாம் கூறினீர்கள். என்னைப் பொறுத்தவரை இந்த மாயைகளுக்கு என் மனத்தில் ஈடுபாடு இல்லை" என்று கூறிவிட்டு, அந்தக் குழந்தையின் ஆன்மா பிரிந்து போய்விட்டது. மன்னன் சித்ரகேது அஞ்ஞானத்தி னின்று விடுபட்டு, யமுனை நதியின் கரையில் ஓர் ஆசிரமம் அமைத்துக் கொண்டு விஷ்ணுவை நோக்கித் தவம் செய்யத் தலைப்பட்டான். அதே சித்ரகேதுதான் விருத்ராசுரனாகத் தோன்றினான். இதற்குக் காரணம் சித்ரகேது ஒரு காலத்தில் தன் விஷ்ணு பக்தி காரணமாக சிவபெருமானை அவமதித்துப் பேசினான். சிவன் அதைக் கண்டுகொள்ளவில்லை. ஆனால் பார்வதிதேவி, 'நீ அசுரனாகப் பிறக்கக் கடவாய்!' என்று சாபமிட்டார். அந்தச் சாபம் காரணமாகவே சித்ரகேது, விருத்ரா சுரனாகத் தோன்றினார்.

*(ஹிரண்ய கசிபு கதை விஷ்ணு புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதே கதை இங்கேயும் விரிவாகக் கூறப் படுகிறது. இரண்டு கதையும் ஒன்றாயினும் முடிவு— அதாவது நரசிம்மத்தின் வருகை வெவ்வேறாகக் குறிக்கப்பட்டுள்ளது. பாகவத புராணப்படி நரசிம்மன் தூணுக்குள் ஒளிந்திருந்தது என்பதும், விஷ்ணு தூணுக்குள் இருக்கிறானா, இதை உடைக் கிறேன் பார் என்று ஹிரண்யன் சொல்வதும், தூணை ஹிரண்யன் அடிக்க நரசிம்மம் வெளிப்பட்டு அவனைக் கொன்றது என்பதும் அறியக் கிடக்கின்றன.)*

## கஜேந்திர மோட்சம்

முன்னொரு காலத்தில் திரிகுடா என்ற பெரிய மலைத் தொடர் கடல் வரை நீண்டிருந்தது. மிக அடர்த்தியானதும், உயரமானதுமாகிய காடு, அம்மலையில் நிறைந்திருந்தது. அக்காட்டில் பல யானைகளுக்குத் தலைவனாகிய ஓர் ஆண் யானை ஆட்சி செய்து வந்தது. ஒரு நாள் அம்மலையில் உள்ள ஏரியில் குளிக்கச் சென்றது. நீருக்குள் இருந்த முதலை இந்த யானையின் காலைப் பற்றிக்கொண்டது. எவ்வளவு முயன்றும் யானை தன் காலை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. யானையைத் தண்ணீருக்குள் இழுக்கும் சக்தி முதலைக்கு இல்லை. இந்தப் போராட்டத்தில் நெடுங்காலம் சென்றது. பலங் குறைந்த யானை விஷ்ணுவை தியானிக்கத் தொடங்கியது. உடனே விஷ்ணு தோன்றிச் சக்கரத்தால் முதலையின் வாயை அறுத்து யானைக்கு விடுதலை தந்தார். கொலையுண்ட முதலை பழம்பிறப்பில் ஹூஹூ என்ற கந்தர்வனாக இருந்தான். ஒரு முனிவரின் சாபத்தால் முதலையாகப் பிறந்தான். விஷ்ணுவால் சாப விமோசனம் ஏற்படும் என்று முனிவரே கூறியிருந்தார். அதுபோல் இப்பொழுது நடந்தது.

இந்த யானையும் முற்பிறப்பில் இந்திரத் தூய்மனன் என்ற மன்னனாக இருந்தவன். ஒரு முனிவரின் சாபத்தால் யானை யாகப் பிறந்திருந்தான்.

(**பாற்கடல் கடைந்த கதை :** இக்கதை விஷ்ணு புராணத்தில் பேசப்பட்டுள்ளபடியே இங்கும் இடம் பெறுகிறது. ஒரே ஒரு புதிய நிகழ்ச்சி பேசப்பட்டுள்ளது. விஷ்ணு புராணத்தில் விஷவாயு ஆகாயம் வரை பரவியது என்று கூறப்படுகிறது. பாகவத புராணத்தில் விஷம் ஆலகாலம் என்ற பெயருடன் தோன்றியது என்றும், இந்த விஷத்தைக் கண்டு அஞ்சி ஓடிய தேவர், அசுரர் அனைவரும் சிவபிரானிடம் சென்று முறையிட அவர் அந்த ஆலகாலத்தை எடுத்துக் குடித்து விட்டார் என்றும், அந்த விஷம் அவரை ஒன்றும் செய்யவில்லை என்றும், அவர் கழுத்து மட்டும் நீலநிறமாகி விட்டபடியால், சிவனுக்கு நீலகண்டன் என்ற பெயர் வழங்கப் படுகிறது என்றும், அவர் விஷத்தைக் குடிக்கும் பொழுது சிந்திய விஷத்தைப் பாம்பு, தேள் முதலியவை தாம் எடுத்துக் கொண்டன என்றும் கூறப்படுகிறது.

அசுரர்களுக்கு மறுக்கப்பட்ட அமிர்தத்தை ராகு என்ற அசுரன் திருடி உண்ணும் பொழுது, விஷ்ணுவால் அவன் தலை துண்டிக்கப்பட்டது என்றும் கூறப்பட்டுள்ளது. ராகு உண்ட அமிர்தம் அவன் தலை துண்டிக்கப்பட்டதால் அவன் உடலில் இறங்கவில்லை. ஆனால் அவன் வாயில் அமிர்தம் இருந்ததால் தலைமட்டும் அமரத்துவம் பெற்றுவிட்டது. அதனை பிரம்மா கோள்களுள் சேர்த்து விட்டார்).

(**மச்ச அவதாரம் :** விஷ்ணு புராணத்தில் மச்ச அவதாரக் கதை சொல்லப்பட்டதற்கு மேல் இங்கு பேசப்பட்டுள்ள புதிய நிகழ்ச்சி வேதங்களை எடுத்துக் கொண்டு கடலுக்கடியில்

ஒளிந்திருந்த ஹயக்ரீவன் என்ற அசுரனைக் கொன்று வேதங்களை மீட்டார்).

## அம்பரீஷன் கதை

அம்பரீஷன் என்ற அரசன் எல்லாச் செல்வங்களும் பெற்று இப்பூவுலகை ஆண்டு வந்தான். பெரிய விஷ்ணு பக்தன் ஆகையால் அவன் ஆட்சியிலும், செல்வத்திலும் சிறிதும் ஈடுபாடு இல்லாமல் இருந்து வந்தான். வைணவ சமய சம்பந்தமான சடங்குகளைச் செய்வதில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தான். இத்தகைய ஒரு சடங்கில் மூன்று நாட்கள் முழு பட்டினி இருந்து மூன்றாம் இரவு முடிந்தவுடன் சாப்பிட்டு விரதத்தை முடித்துக் கொள்ள வேண்டும் என்பது விதி. இதைச் செய்ய முற்பட்ட அம்பரீஷன் விரதத்தை முடிக்க வேண்டிய நேரத்திற்குச் சற்று முன்னர் துர்வாசர் அங்கு வந்து சேர்ந்தார். அவரை உண்ண அழைத்தான் அம்பரீஷன். இதோ வருகிறேன் என்று சொல்லி, வெளியே சென்றவர் விரதம் முடிக்கும் நேரத்தில் வந்து சேரவில்லை. இரவு முடியும் நேரத்தில் உடனேயே உண்ண வேண்டும் என்பது கட்டளை. ஆனால் வந்த விருந்தினரை, அதிலும் துர்வாசரை விட்டு விட்டுச் சாப்பிடுவது பெரிய அபசாரம். இத் தருமசங்கட நிலையில் மாட்டிக் கொண்ட அம்பரீஷன் இரண்டையும் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக நீரைப் பருகி விரதத்தை முடித்தான். விரத நேரம் கழித்து வந்த துர்வாசர் தன்னை விட்டு விட்டு அவன் நீரைப் பருகினான் என்பதை அறிந்த வுடன் கடுங்கோபம் கொண்டார். அவர் தலையில் இருந்து ஒரு முடியைப் பறித்துப் போட்டு ஒரு அசுரனை உண்டாக்கி னார். அந்த அசுரன் கையில் வாளுடன் அம்பரீஷனைக் கொல்வதற்காக ஓர் அடி முன் வைத்தான். மாபெரும் விஷ்ணு பக்தனாகிய அம்பரீஷனைக் காப்பாற்றுவதற்காக

விஷ்ணுவின் சக்கரம் வந்து அந்த அசுரனைக் கொன்று விட்டு, துர்வாசனையும் துரத்த ஆரம்பித்தது. சக்கரத்துக்கு பயந்த துர்வாசர் எங்கெல்லாமோ ஓடிக் கடைசியாக விஷ்ணுவின் காலடியில் போய் விழுந்தார். விஷ்ணு, "துர்வாசரை மன்னித்து, சக்கரத்திலிருந்து காப்பாற்றும் சக்தி அம்பரீஷன் ஒருவனிடம்தான் உள்ளது" என்று கூறினார். துர்வாசர் ஓடிவந்து அம்பரீஷனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அம்பரீஷன் அவரை மன்னித்து அவரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று சக்கரத்தை வேண்டிக் கொண்டான். சக்கரம் துர்வாசரை விட்டு விஷ்ணுவிடம் சென்றுவிட்டது.

## யயாதி இருவரை மணந்த கதை

அசுரர்களுக்கு அரசனான விருஷபர்வாவிற்கு சர்மிஷ்டா என்ற மகள் இருந்தாள். அசுர குருவான சுக்ராச்சாரிக்கும் தேவயானி என்றொரு பெண் இருந்தாள். இவர்கள் இருவரும் தோழிகள். ஒருமுறை இருவரும் ஒரு குளத்தில் குளிக்கச் சென்றனர். குளித்தபிறகு கழற்றிவைத்த உடைகளை அணியும் பொழுது, குருவின் மகளாகிய தேவயானியின் உடையை தவறுதலாக சர்மிஷ்டா அணிந்து கொண்டாள். இதைக் கண்டு பொறாத தேவயானி 'குருவின் மகளாகிய யான் உங்களைவிட உயர்ந்தவள். என்னைவிடத் தாழ்ந்தவளாகிய நீ எப்படி என் உடையை அணியலாம்?' என்று கேட்டாள்.

இதைக்கேட்ட சர்மிஷ்டா. 'என் தந்தை அரசன் என்பதை மறந்து விடாதே! அரசன் போடுகிற சாப்பாட்டில்தான் குருவும் வயிறு வளர்க்கிறார். எனவே அரசன்தான் உயர்ந்தவன். உன்னைவிட நானே உயர்ந்தவள்' என்று கூறிவிட்டு, சுக்ராச்சாரியார் மகள் தேவயானியைக் கிணற்றில் தூக்கிப்

போட்டுவிட்டுப் போய்விட்டாள். நல்ல வேளையாக அவ்வழியே வந்த யயாதி மன்னன் நீர் குடிக்கலாம் என்று கிணற்றுக்குள் பார்க்க, உள்ளே கிடந்த தேவயானியைக் காப்பாற்றி அவளை மணம் செய்துகொள்ள ஒப்புக் கொண்டான். உயிருடன் மீண்ட தேவயானி தந்தை சுக்ராச்சாரியாரிடம் நடந்தவற்றைச் சொல்ல, அவர் நாட்டை விட்டே புறப்பட ஆயத்தமானார். குரு, நாட்டை விட்டுப் போவதால் ஏற்படக் கூடிய விளைவை அறிந்து நடுக்கமுற்ற விருஷபர்வா, உடனே ஓடிவந்து குருவின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். அவன் மகள் சர்மிஷ்டா தன் மகள் தேவயானிக்குப் பணிப்பெண்ணாக இருக்க ஒப்புக் கொண்டால் நாட்டிலேயே இருப்பதாக சுக்ராச்சாரியார் ஒப்புக் கொண்டார். யயாதி இப்பெண்கள் இருவரையும் மணந்து கொண்டான். தேவயானிக்கு யாது, துர்வாசு ஆகிய இரு மகன்களும், சர்மிஷ்டாவிற்குத் துருயா, புரு ஆகிய மகன்களும் பிறந்தனர்.

### துஷ்யந்தனும், சகுந்தலையும்

பரிட்சித்து மன்னன் சந்ததியில் வந்தவன் துஷ்யந்தன். காட்டில் வேட்டையாடச் சென்ற பொழுது கன்வ முனிவர் ஆசிரமத்தில் சகுந்தலை என்ற அழகிய பெண்ணைக் கண்டு காமுற்றான். விசுவாமித்திர முனிவருக்கும், மேனகைக்கும் பிறந்தவள் அவள் என்று தெரிந்து அவளோடு கந்தர்வ மணம் செய்து கொண்டு, விரைவில் அழைத்துக் கொள்வதாகக் கூறிவிட்டு நாட்டிற்கு வந்தவன், அவளை மறந்தே போனான். நீண்ட நாள் கழித்துத் தன் பிழையை உணர்ந்து ஆசிரமம் வந்து மனைவியையும், குழந்தை பரதனையும் அழைத்துச் சென்றான். துஷ்யந்தனுக்குப் பிறகு பட்டம் பெற்ற பரதன் மாபெரும் சாம்ராஜ்ஜியத்தை ஸ்தாபித்தான்.

## துவாரகையின் தோற்றம்

கிருஷ்ணனால் கொல்லப்பட்ட கம்சனின் இரு மனைவி களையும் பெற்றவன் ஜராசந்தன் என்னும் மகதப் பேரரசன். மருமகனைக் கொன்றதற்காக யாதவர்களைப் பழிவாங்க நினைத்து மாபெரும் சேனையுடன் புகுந்து பதினேழு முறை சூழ்ந்து கொண்டும், வெற்றியடைய முடியாமல் தோற்றே ஓடினான். பதினெட்டாவது முறையாகத் தான் மட்டும் படை யெடுத்து யாதவர்களை அழிக்க முடியாது என்று அறிந்து கொண்ட ஜராசந்தன், காலயவனன் என்ற அரசனின் துணையை நாடினான். போர்க்களத்தில் யாராலும் தனக்குச் சாவு வரக் கூடாது என்ற பெரு வரத்தை மகாதேவனிடம் பெற்றிருந்தவன் காலயவனன். ஜராசந்தனுக்குத் துணையாகக் காலயவனன் வருகிறான் என்றறிந்த கிருஷ்ணன் மகாதேவனின் வரத்தை தான் வெல்ல முடியாது என்பதை அறிந்து கடலின் நடுவே 'துவாரகை' என்ற அழகிய நகரை, விஸ்வகர்மா உதவியோடு ஸ்தாபித்தான். யாதவர்கள் அனைவரும் அங்கே குடியேற்றப்பட்டனர்.

## ஜராசந்தன் முடிவு

குருக்ஷேத்திர சண்டைக்கு முன்னர் நடந்த நிகழ்ச்சி இது. இந்திரப் பிரஸ்த்தம் பாண்டவர்களுக்கு என்று திருதராஷ் டிரனால் கொடுக்கப்பட்ட பிறகு இந்திரபிரஸ்த்தத்தை ஸ்தாபித்து, யுதிஷ்டிரன் ஆட்சி செய்து வந்தான். சிலகாலம் கழித்து, கிருஷ்ணன் துவாரகையில் இருந்து இந்திரப் பிரஸ்த்தம் வந்து சேர்ந்தான். அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் யுதிஷ்டிரன் ஒரு ராஜசூய யாகம் செய்ய வேண்டும் என்ற தனது விருப்பத்தைக் கிருஷ்ணனிடம் சொல்லி அவன் கருத்து என்ன என்று கேட்டான். இது நியாயமானதுதான் என்று கூறிய

கிருஷ்ணன், ராஜசூய யாகம் செய்வதானால், யுதிஷ்டிரனுக்கு சமமான அரசர்கள் யாரும் இருக்கக் கூடாது. அனைவரையும் வென்று அடிமைப்படுத்திய பின்புதான் ராஜசூய யாகம் செய்யப்பட வேண்டும் என்று கூறினான் கிருஷ்ணன், 'உங்களைப் பொறுத்தவரை எதிர்த்துப் போர் புரியவேண்டிய ஒரே ஓர் அரசன்தான் இருக்கிறான். அவன் மகத நாட்டு அரசனான ஜராசந்தன். அவனைக் கொல்வது அவ்வளவு எளிதல்ல. ஒருவருக்கொருவர் தனிப்பட்ட முறையில் செய்யும் போரில்தான் அவனைக் கொல்ல முடியும்' என்று கூறிய கிருஷ்ணன், சகாதேவனையும் நகுலனையும் வடக்குத் திசையில் அனுப்பிவிட்டு, கிருஷ்ணன், அருச்சுனன், பீமன் ஆகிய மூவரும் கிழக்கே மகத நாடு சென்றனர். மூவரும் பிராமணர்கள் போல் வேடம் தரித்துக் கொண்டு ஜராசந்தனிடம் யாசகம் கேட்கச் செல்வது போல் சென்றனர். பிராமணர்கள் யாசகம் கேட்டால் தவறாமல் கொடுக்க வேண்டும் என்பது அக்கால மரபு. அம்முறையில், இம் மூவரும் தங்களுக்கு ஒன்று வேண்டும் என்று ஜராசந்தனிடம் கேட்டார்கள். அவர்கள் மூவரையும் எளிதாக அடையாளம் கண்டு கொண்ட ஜராசந்தன் 'என்ன வேண்டும்' என்று கேட்டான். எங்களில் யாராவது ஒருவருடன் நீ போர் புரிய வேண்டும். அதுதான் நாங்கள் கேட்கும் யாசகம் என்றார்கள். அதனை ஒப்புக்கொண்ட ஜராசந்தன், 'நான் கிருஷ்ணனுடன் போர் புரியமாட்டேன். அவன் கோழை. எனக்கு பயந்துகொண்டு மதுராவைக் காலி செய்து கொண்டு, துவாரகைக்கு ஓடிவிட்டான். அருச்சுனன் என்னைவிட இளையவன். பீமன் எனக்குச் சமமானவன். ஆதலால் அவனுடன் போர்புரிகின்றேன்' என்றான்.

மறுநாள் ஜராசந்தனுக்கும், பீமனுக்கும் போர் தொடங்கியது. முதலில் இருவரும் கதாயுதம் ஏந்திப் போர்

புரிந்தனர். கதாயுதம் தூள் தூளாகப் போயிற்று. பிறகு அவர்கள் மற்போரில் ஈடுபட்டனர். இருபத்தியோரு நாட்கள் பகல் பொழுதெல்லாம் மற்போர் நடைபெற்றது. இரவில் சகஜமான நண்பர்களைப் போல் இருந்தனர். பீமனால் ஜராசந்தனைக் கொல்ல முடியவில்லை. இதற்கான காரணம் ஒன்று உண்டு. விருகதரதா என்ற மன்னனின் மனைவிக்குப் பிரசவ காலத்தில் குழந்தை பிறக்காமல் இரண்டு தசைப் பிண்டங்கள் பிறந்தன. வெறுத்துப்போன அவள் அந்த இரண்டு துண்டங்களையும் குப்பையில் வீசிவிட்டாள். ஜரா என்ற ராட்சசப் பெண் இந்தப் பிண்டங்களைப் பார்த்து தன் வீட்டிற்கு எடுத்துக் கொண்டுபோய் இரண்டு பிண்டங்களையும் ஒன்றாகச் சேர்த்து அதற்கு உயிர் உண்டாக்கினாள். 'சந்தி' என்றால் இரண்டு ஒன்றாகச் சேர்வது என்பது பொருள். ஜரா வளர்த்ததனால் 'ஜராசந்தன்' என்ற பெயர் பெற்றான்.

இந்தப் பிறப்பு ரகசியத்தை அறிந்திருந்த கிருஷ்ணன் பீமனுக்கு மறுநாள் போரில் ஜராசந்தனின் இருகால்களையும் பிடித்து அவனை இரண்டாகப் பிளந்து எறியச் சொன்னான். பீமன் அவ்வாறே செய்ய ஜராசந்தன் இறந்தான்.

ஜராசந்தன் மகனுக்கு முடிசூட்டிவிட்டு, ஜராசந்தனால் சிறைப்பிடிக்கப்பட்ட இருபதாயிரத்து எண்ணூறு சிற்றரசர் களை விடுதலை செய்தார்கள்.

### சிசுபாலன் முடிவு

யுதிஷ்டிரன் ராஜசூய யாகம் செய்ய முற்பட்ட பொழுது பல தேசத்து அரசர்களும் முனிவர்களும் அங்குக் கூடி யிருந்தனர். கூடி இருந்த அரசர்களுள் சிசுபாலனும் ஒருவன். அவன் வசுதேவரின் சகோதரியாகிய 'சிருத்தசர்வா' என்பவளின் மகனாவான். எனவே இவன் கிருஷ்ணனின்

*அத்தை மகனாவான். இந்த உறவிருந்தும், கிருஷ்ணனை யாதவன் என்றே ஏசினான். யுதிஷ்டிரன், 'யாருக்கு முதல் அர்க்கியம் கொடுக்க வேண்டும்' என்று சபையில் உள்ள பெரியவர்களைக் கேட்டபொழுது, அவர்கள் ஒருமுகமாக, "கிருஷ்ணனுக்கே முதல் மரியாதை" என்றனர். யுதிஷ்டிரன் அதனைச் செய்தவுடன், சிசுபாலன் 'எத்தனையோ அரசர்கள் இருக்கும் இந்த அவையில் ஒரு இடையனுக்கு முதல் மரியாதை செய்வது நியாயமில்லை' என்று கூறிக் கிருஷ்ணனை வாயில் வந்தபடி ஏசத் தொடங்கினான். தன் அத்தைக்குக் கொடுத்த வாக்குப்படி சிசுபாலன் அவதூறுகளை எண்ணிக் கொண்டே வந்த கிருஷ்ணன் சக்கரத்தால் சிசுபாலன் கழுத்தை வெட்டினான்.*

**சால்வனின் முடிவு**

*சிசுபாலன் இறந்ததும் அவனுடைய நண்பனாகிய சால்வன் யாதவர்களை அழிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் ஓர் ஆண்டு முழுவதும் மண்ணையே தின்றுகொண்டு கடுந்தவம் புரிந்தான். இறுதியில் சிவன் எதிர்ப்பட்டதும் 'யாதவர்களை அழிக்கத் தனக்கு ஒரு விமானம் தேவை' என்று வேண்டிக் கொண்டான். தைத்தியர்களில் ஒருவனாகிய மாயா என்பவனைக் கொண்டு இரும்பாலான ஒரு ரதத்தைச் செய்யச் சொன்னான். அதை வைத்துக்கொண்டு சால்வன் துவாரகை மீது படையெடுத்து அதன் கோட்டை, கொத்தளங்கள் நந்தவனங்கள் ஆகியவற்றை அழித்தான். கிருஷ்ணன் அப்போது அங்கில்லாததால் கிருஷ்ணனின் மகன் பிரத்யுமநன் சால்வனுடன் பெரும்போர் செய்தான். யாருக்கும் வெற்றி தோல்வி இல்லாமல் போர் நடந்து கொண்டிருக்கும்போது கிருஷ்ணன் துவாரகைக்குத் திரும்பினான். பிரத்யுமநன் போருக்குச் செல்வதைத் தடுத்துத் தானே சென்று கதாயுதத்*

தால், சால்வனின் தேரை அடித்து உடைத்துவிட்டுச் சக்கரத்தால் அவனைக் கொன்றான்.

## ஸ்ரீதமா (குசேலர்) கதை

கிருஷ்ணன் சாந்தீப முனிவரிடம் கல்வி கற்ற காலத்தில் உடன் கற்றவன் ஸ்ரீதமா என்ற பிராமணன். ஸ்ரீதமாவின் குடும்ப வாழ்க்கை மிகவும் மோசமாக அமைந்தது. உண்ண உணவோ, உடுக்க உடையோ இன்றி அவர்கள் வருந்தினர். திடீரென்று ஒருநாள் ஸ்ரீதமாவின் மனைவி கணவனைப் பார்த்து, "உங்கள் பால்ய தோழனான கிருஷ்ணன் இப்பொழுது மிகுந்த வசதியுடன் இருக்கிறான் என்று கேள்விப் பட்டோமே, அவனிடம் சென்று நம் கஷ்டத்தைச் சொன்னால் நிச்சயம் அவன் உதவுவான். ஏன் நீங்கள் போகக் கூடாது?" என்று கேட்டாள். அதற்குடன்பட்ட ஸ்ரீதமா, நண்பனுக்கு ஏதாவது ஒரு பரிசினைக் கொண்டு செல்லவேண்டும் என்று நினைத்து ஒன்றும் இல்லாமையால் இரண்டு பிடி அவலை ஒரு துணியில் மூட்டையாகக் கட்டி எடுத்துச் சென்றான். பெருமகிழ்ச்சியுடன் அவனை வரவேற்ற கிருஷ்ணன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, "இவ்வளவு நாட்கள் கழித்து என்னைப் பார்க்க வந்தாயே, எனக்கு என்ன கொண்டு வந்தாய்?" என்று கேட்டான். கிருஷ்ணனின் அரண்மனை யையும், அதில் உள்ள பொருள்களையும் கண்டுவிட்டு ஸ்ரீதமா, தான் அவல் கொண்டு வந்திருப்பதைச் சொல்ல வெட்கப் பட்டுப் பேசாமல் இருந்துவிட்டான். ஆனால் கிருஷ்ணன் 'அவல் எனக்கு ரொம்பப் பிடிக்கும்' என்று சொல்லிக் கொண்டே அந்த இரண்டுபிடி அவலையும் தின்றுவிட்டான். இரவு நல்ல சாப்பாடு சாப்பிட்டுவிட்டு நல்ல உடை உடுத்திக் கொண்டு அன்று இரவு ஸ்ரீதமா அங்கேயே தங்கி விட்டான். மறுநாள் காலை எதற்காக வந்தோம் என்று சொல்வதற்கே

வெட்கப்பட்டுக் கொண்டு ஸ்ரீதமா ஊருக்குத் திரும்பினான். ஊரில் அவன் வீடு இருந்த இடத்தில் பெரியதொரு தோட்டம். அதன் நடுவே ஒரு மாளிகை. எல்லாவிதமான வசதிகளுடன் கூடிய வாழ்க்கையில் அவன் மனைவி இருப்பதைக் கண்டான். கிருஷ்ணன் சொல்லாமலே இத்தனையும் செய்துவிட்டான் என்பதை அறிந்து பெரும் மகிழ்ச்சி அடைந்தான்.

**சிவனின் தருமசங்கடம்**

விருகா என்ற அசுரன் ஒருமுறை நாரதரிடம் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரில் யார் எளிதாக வரம் கொடுப்பார்கள் என்று கேட்டான். நாரதர் சிவன்தான் என்று கூறிவிட்டுப் போய்விட்டார். உடனே விருகாவும் கேதாரம் என்ற இடத்திற்குச் சென்று தவம் செய்யத் தொடங்கினான். தன் இடுப்பு வரை நெருப்பில் நின்று ஒரு வாரம் தவம் செய்தும் சிவன் வரவில்லை. உடனே அவன் கோடரியை எடுத்துத் தன் கழுத்தை வெட்டி நெருப்பில் போட வேண்டும் என்ற நினைப்பில் கோடரியை எடுத்தவுடன் சிவன் எதிரே தோன்றினார். 'உனக்கு என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டார். "நான் யார் தலையில் கை வைத்தாலும் அவர்கள் உடனே இறந்துவிட வேண்டும். அப்படி ஒரு வரம் வேண்டும்" எனக் கேட்டான். சிவன், "அப்படியே தந்தேன்" என்றார். உடனே அந்த அசுரன் "உம்முடைய தலையிலேயே கை வைத்து வரம் உண்மையா என்று சோதிக்கப் போகிறேன்" என்றான். வேறு வழி இல்லாமல் சிவன் ஓடத் தொடங்கினார். நிலைமையை அறிந்த விஷ்ணு மாறுவேடத்தில் வந்து, 'விருகா, நீ எங்கே ஓடுகிறாய்?' என்று கேட்டார். அவன் நடந்தவற்றைக் கூறி, "சிவன் தலையில் கையை வைத்து அவரைக் கொன்று விட்டுப் பார்வதியை மணந்து கொள்ளப் போகிறேன்" என்றான். மாறுவேடத்தில் இருந்த விஷ்ணு, 'அட

பைத்தியக்காரா! போயும் போயும் சிவனையா நம்புகிறாய். அவர் வரம், சாபம் இரண்டும் ஒரு பலனையும் தராது. நான் சொல்லுவதில் உனக்கு சந்தேகம் இருந்தால் உன் தலையிலேயே கையை வைத்துப்பார். ஒன்றுமே நடைபெறாது' என்று கூறினார். அறிவற்ற மூடனாகிய விருகா தன் தலையில் தன் கையை வைத்த உடனே இறந்து போனான்.

## பிருகு செய்த சோதனை

ஒரு காலத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரில் யார் மேம்பட்டவர்கள் என்ற சந்தேகம் எழுந்தது. அவர்களை மூவர் என்று ஒரே வார்த்தையில் சொன்னாலும் அவர்களுள் ஒருவர் உயர்ந்தவராகத்தான் இருக்கவேண்டும். அது யார் என்று எப்படிக் கண்டுபிடிப்பது என்று ஆராய்ச்சி செய்து கடைசியில் பிரம்மாவின் மகனான பிருகுவை இதைத் தெரிந்து வர அனுப்பினார்கள். பிருகு, தந்தையாகிய பிரம்மா வரும் பொழுது எழுந்து மரியாதை செய்யாமல் உட்கார்ந்து கொண்டே இருந்தான். பிரம்மாவிற்குக் கோபம் வந்தாலும், தன் பிள்ளை என்பதால் பேசாமல் இருந்தார். சிவனிடம் சென்றார். அவர் அவரை அணைத்துக் கொள்ள வந்த பொழுது பிருகு சிவனை வாயில் வந்தபடி ஏசினார். திரிசூலத்தை எடுத்து பிருகுவின் மேல் எரியப் போகும் பொழுது பார்வதி தடுத்து விட்டாள். விஷ்ணுவிடம் அடுத்து சென்றார். விஷ்ணு உறங்கிக் கொண்டிருந்தார். பிருகு அவரின் மார்பில் எட்டி உதைத்தார். விழித்த விஷ்ணு 'உத்தமமான பிராமணரே! தங்களுடைய பாதம் என் மார்பில் பட நான் புண்ணியம் செய்திருக்கிறேன். இந்தப் பாதத்தின் அடையாளத்தை எப்பொழுதும் என் மார்பில் தாங்குவேன்' என்று சொன்னார். பிருகு தேவர்களிடம் வந்து நடந்தவற்றைக் கூறவும், விஷ்ணுதான் உயர்ந்தவர் என்று முடிவு செய்தனர்.

## யார் குரு ?

யாதவகுலத்தின் முதல்வனாகிய யாது ஒருமுறை மிகவும் கற்றவனாகிய ஒரு இளைஞனைப் பார்த்தான். "இந்த வயதில் இவ்வளவு கற்றிருக்கிறாயே உன் குரு யார்?" என்று கேட்டான். அந்த இளைஞன் 'கற்றுக் கொள்வதற்குக் குறிப்பாக ஒரு குருவை நாடிச் செல்ல வேண்டும் என்ற தேவை இல்லை. இதோ பார், இந்தப் பூமியின் மேல் ஆயிரக் கணக்கானோர் தம் பாதங்களால் இந்தப் பூமியை மிதித்துக் கொண்டே இருக்கின்றனர். பொறுமையோடு அத்தனை பேரையும் மன்னித்து விடுகின்றது பூமி. பூமியிலிருந்து மன்னிக்கும் குணத்தை நாம் தெரிந்து கொள்கிறோம். காற்றைப் பார். எல்லா உயிர்களுக்கும் மூச்சுக் காற்றாக உள்சென்று வெளி வருகிறது. ஆனால் எதனோடும் ஒட்டிக் கொள்வதில்லை. இதிலிருந்து பற்றற்று வாழும் வழியை அறிந்து கொள்ளலாம். ஆகாயத்தைப் பார். மேகங்கள் மூடுகின்றன. பிறகு வெளி வருகின்றன. எதனாலும் ஆகாயம் பாதிக்கப்படுவதில்லை. எந்த ஒன்றும் நம்மை பாதிக்காமல் இருப்பதை ஆகாயத்தின் மூலம் கற்றுக் கொள்ளவேண்டும். நீரைப் பார். இது அனைத்தையும் சுத்தம் செய்ய உதவுகிறது. தண்ணீரிலிருந்து தூய்மை செய்வதன் அவசியத்தை அறிந்து கொள்ளவேண்டும். நெருப்பைப் பார். நெருப்புக்கு என்று தனியான வடிவம் இல்லை. எந்தப் பொருளைப் பற்றி நிற்கின்றதோ அந்த வடிவமாக நெருப்பு ஆகிவிடுகின்றது. பரமாத்மாவுக்குத் தனியே வடிவமில்லை. அதுபோல பரமாத்மாவும் எதைப் பற்றி நிற்கின்றதோ அந்த வடிவத்தைப் பெறுகின்றது.

சந்திரனைப் பார். அது பிறைகள் தேய்வதாகவும், வளர்வதாகவும் தெரிகிறது. உண்மையில் அப்படி ஒன்றும் நடைபெறுவதில்லை. மேல் தோற்றத்தைக் கண்டு எதையும் நம்பிவிடக் கூடாது என்பதை சந்திரனிலிருந்து அறிந்து

கொள்கிறோம். ஆத்மனுக்கு எவ்விதமான மாற்றமும் ஏற்படுவ தில்லை. ஏற்படுவதாக நினைப்பது ஒரு மாயையே ஆகும்.

சூரியனைப் பார். கோடையில் சமுத்திரத்திலிருந்து எடுக்கின்ற நீரை, மழைக்காலத்தில் தந்து விடுகின்றது. கற்றவர்கள் பொறி புலன்களால் அனுபவிக்கும் அனுபவங் களைத் திருப்பித் தந்துவிடுகின்றனர். தாங்களே அதை வைத்துக் கொள்வதில்லை.

இதுபோன்ற குருமார்கள் எங்கும் நிறைந்திருப்பதால் அவ்வவற்றிலிருந்து ஒவ்வொரு பாடத்தை அறிந்து கொள்ள வேண்டும். இவற்றை அறிந்து கொள்வதற்குத் தனியாக ஆசிரியர் என்ற பெயரில் ஒருவர் தேவையில்லை.

**பிராமணன் யார்?**

மாளவ தேசத்தில் பெருஞ் செல்வத்துடன் ஒரு பிராமணன் வாழ்ந்து வந்தான். வேளாண்மை, வாணிபம் என்ற இரண்டின் மூலமாகப் பெருஞ் செல்வத்தைச் சேர்த்த அவன் யாருக்கும் எந்த உதவியும் செய்யாத பரம உலோபியாக வாழ்ந்து வந்தான். நாளாவட்டத்தில் அவன் செல்வம் கரைந்தது. எஞ்சியதைத் திருடர்கள் கொண்டுபோய் விட்டனர். அந்தப் பிராமணன் சிந்திக்கலானான். என்னுடைய வாழ்க்கை எதைச் சாதித்தது? இந்தப் பொருட்களை எல்லாம் சதம் என்று எண்ணியது எவ்வளவு தவறு? என்ற சிந்தனையுடன், தனி ஒருவனுக்கு வேண்டிய சில பொருட்களுடன் ஓரிடம் சென்று துறவியாக வாழத் தலைப்பட்டான். பிச்சை எடுத்து வயிற்றுப் பசியைத் தணித்துக் கொண்டான். சில காலம் கழித்து அவன் வைத்திருந்த ஒன்றிரண்டு சாமான்களும் களவு போயின. அவன் பிச்சை எடுத்து வந்த உணவும் களவாடப்பட்டது. அந்த நிலையிலும் அவன் யாரையும் குறை கூறவில்லை. இப் பொருள்களில் எல்லாம் பற்று நீங்கி, பொறிபுலன்கள் அவன்

வசப்பட்ட போது எதுபற்றியும் கவலைப்படாமல் இருக்கப் பழகிக் கொண்டான். நாளடைவில் அவன் பிரம்ம ஞானத்தைப் பெற முடிந்தது. இப்படிப் பற்றற்ற வாழ்க்கை வாழும் பிராமணனே பரப்பிரம்மத்தை அறிய முடியும்.

## கலியுகமும் ஆள்பவர்களும்

பாகவத புராணத்தை சுகதேவமுனிவர் சொல்லி முடிக்க, கேட்டுக்கொண்டிருந்த பரிட்சித்து, கலி தொடங்கிவிட்டது என்றீர்கள். இந்த யுகத்தில் எந்தெந்தப் பரம்பரை ஆட்சி செய்யும் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன் என்றான். கிருஷ்ணன் இறந்த பொழுதே கலியுகம் தொடங்கி விட்டது. அவருக்குப் பின் பிரத்யோத பரம்பரை ஆட்சிக்கு வரும். இதில் 5 அரசர்கள் நூற்றிமுப்பத்தெட்டு ஆண்டுகாலம் ஆட்சி நடத்துவர். சிசுநாக பரம்பரையில் பத்து மன்னர்கள் முந்நூற்றி அறுபது ஆண்டுகள் ஆட்சி செய்வார்கள். நந்தா என்ற சூத்திரன் அரசாட்சி ஏற்று 100 ஆண்டுகள் ஆள்வான். அவனும் அவனது எட்டுப் பிள்ளைகளும் சாணக்கியன் என்ற பிராமணனால் அழிவை எய்துவர். சாணக்கியன் சந்திரகுப்தனை அரசனாக்குவான். இந்தப் பரம்பரையில் 10 மன்னர்கள் 137 வருடங்கள் ஆட்சி புரிவர். மௌரிய பரம்பரையில் கடைசி மன்னனான விருகதரதா, அவனுடைய சேனாதிபதி புஷ்யமித்ரா என்பவனால் கொல்லப்படுவான். இதிலிருந்து சுங்கவம்சத்தின் 10 மன்னர்கள் நூறு ஆண்டு களுக்குமேல் ஆட்சி செய்வர். கன்வர் பரம்பரை 345 ஆண்டுகள் ஆட்சி செய்யும். இதன் பிறகு 456 ஆண்டுகட்கு ஆந்திர மன்னர்கள் ஆள்வர். இதன் பிறகு பல வம்சங்களைச் சேர்ந்த பல மன்னர்கள் பல பகுதிகளைப் பிடித்து ஆள்வர். அவர்கள் அனைவரும் தீயவர்களாகவே இருப்பர். நாடு துண்டாடப்படும்.

தீமை என்பதே கலியுகத்தில் இலக்கணமாக இருக்கும். பொருட்செல்வம்தான் எல்லாவற்றிலும் உயர்ந்தது என்ற எண்ணம் மக்கள் மனத்தில் புகுந்துவிடும். நேர்மையான வாழ்க்கை என்பதே அரிதாகிவிடும். உறவினர்களுக்கும், வேண்டப்பட்டவர்களுக்கும் பதவி அளித்தல், லஞ்ச ஊழல் என்பது மலிந்துவிடும். இந்நிலையில் கல்கி அவதாரம் எடுத்துக் கலியுகத்தை ஒழித்துச் சத்திய யுகத்தைத் தோற்றுவிப்பார்.

கல்கி ஆனவர் சம்பாலா என்ற கிராமத்தில், விஷ்ணுயாசா என்ற பிராமணனின் மகனாகப் பிறப்பார். சுகதேவமுனிவர் பரிட்சித்து மன்னனைப் பார்த்து, 'நீ பிறந்த அன்றிலிருந்து ஆயிரத்து நூற்றுப் பதினைந்து ஆண்டுகள் கழித்து, மகாபத்மநந்தாவுக்கு முடிசூட்டு விழா நடைபெறும்' என்று கூறினார்.

## பரிட்சித்து மன்னன் முடிவு

முடிவுகாலம் நெருங்கியதும் அவன் சுகதேவ முனிவரைப் பார்த்து, 'பாகவத புராணத்தைக் கேட்டதால் தெளிவடைந்து விட்டேன். இறப்புப் பற்றிய அச்சம் ஒரு சிறிதும் இல்லை எனக்கு' என்று கூறியவுடன் சுகதேவமுனிவர் விடை பெற்றுக் கொண்டு சென்றுவிட்டார். பரிட்சித்தைக் கொல்ல வேண்டிய தட்சகன் என்ற பாம்பு ஒரு பிராமண வடிவம் கொண்டு பரிட்சித்தை நெருங்கிற்று. காரணம், பாம்பு வடிவத்துடன் வந்திருந்தால் யாரும் அதனை அரசன் பக்கத்தில் செல்ல அனுமதிக்க மாட்டார்கள். பிராமணர் என்ற காரணத்தால் அரசன் பக்கத்தில் செல்லத் தட்சகனுக்கு முடிந்தது. குறிப்பிட்ட நேரத்தில் பரிட்சித்தைத் தட்சகன் கடித்துக் கொன்றுவிட்டது.

*பரிட்சித்து மன்னன் மகனுக்குத் தட்சகன் மேல் பெருங் கோபம் உண்டாயிற்று. தட்சகனை மட்டுமல்லாமல் பாம்பு களை பலியிடுவதற்குரிய ஒரு யாகத்தைத் தொடங்க முடிவு செய்தான். இதனை அறிந்த தட்சகன் இந்திரனிடம் ஓடிச் சென்று தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டிக்கொண்டது. தேவகுருவான பிரகஸ்பதி ஜனமேஜயனிடம் வந்து சமாதானம் சொல்லி அந்த யாகத்தை நிறுத்திவிட்டான்.*

## பாகவத புராணத்தின் சிறப்பு

*புராணங்களில் சிறந்தது பாகவத புராணம். எல்லா நகரங்களையும்விடக் காசி சிறந்துள்ளது போலவும், எல்லா ஆறுகளையும்விட கங்கை சிறந்துள்ளது போலவும், எல்லா தெய்வங்களையும்விட விஷ்ணு சிறந்துள்ளது போலவும், எல்லாப் புராணங்களையும் விட பாகவத புராணம் சிறந்தது. விஷ்ணு பக்தர்கள் பாகவத புராணத்தைப் படித்தும், கேட்டும் பயனடைய வேண்டும்.*



# 6. நாரத புராணம்

## இப்புராணம் பற்றி...

*இப்புராணம் 2 பகுதிகளாக உள்ளது. முதல் பகுதி நாரதருக்குக் கூறப்பட்டதாகும். 2ஆம் பகுதி மாந்தாதா என்ற மாமன்னனுக்குக் கூறப்பட்டதாகும்.*

*முதற்பகுதியில் வர்ணாஸ்ரம தர்மம், ஆசாரம், சிரத்தை, பிராயசித்தம் என்பவற்றைப் பற்றிப் பேசுகிறது. மேலும் வேத அங்கங்கள் ஆறு பற்றியும், சர்வதர்ஷண சங்கரகம் என்ற பெயருள்ள தத்துவங்களின் தொகுப்புப் பற்றியும் கூறுகிறது. அன்றியும் இராமன், கிருஷ்ணன், சிவன், காளி, அனுமன் ஆகியவர்களின் மந்திரங்கள் பற்றியும் பேசுகிறது.*

*இரண்டாவது பகுதி ருக்மாங்கதன் வரலாறு, பாஞ்சராத்ரா ஆகம அடிப்படையில் வைணவர்கள் மேற்கொள்ள வேண்டிய அனுஷ்டானங்கள் ஆகியவற்றை விரிவாகப் பேசுகிறது.*

*பல்வேறு சாத்திரங்களின் உட்பொருளைக் கூறுவதால் இந்தப் புராணம் மிக முக்கியமானதாகும். புராணங்களின் வளர்ச்சி, வரலாற்றை அறிவதற்கும், இப்புராணம் பயன்படுகிறது. மற்ற புராணங்களின்*

பாடல்களின் சுருக்கமான வரலாற்றை இப்புராணம் விரித்துரைக்கிறது. இதனால் அந்தந்தப் புராணங் களில் எவ்வளவு இடைச்செருகல்கள் பிற்காலத்தில் புகுந்துள்ளன என்பதை அறிய இப்புராணம் உதவுகிறது. நாரத, அக்னி, கருட புராணங்கள் மூன்றும் ஒரு களஞ்சியம் போல் பற்பல விஷயங்களையும் அறிய உதவுகின்றன. பல்வேறு சடங்குகளைச் செய்யும் முறை இப்புராணங்களில் விரித்துப் பேசப்படுகிறது. இப் புராணம் விஷ்ணுவே சிவம் என்றும், சக்தி என்றும் பேசுவதால் குறுகிய நோக்கம் உள்ள சமய நூல் அன்று என்று தெளிய உதவுகிறது.

நாரதர் பிரம்மனின் மனத்தில் பிறந்த மகனாவார். ஓயாது நாராயணனின் பெருமையைப் பாடிக்கொண்டு உலகம் சுற்றுபவராகப் பேசப்படுகிறார். கீர்த்தனைகள் என்று இன்று வழங்கப்படும் பாடல் முறையை முதலில் தோற்றுவித்தவர் நாரதரே ஆவார். எல்லா தெய்வங்கள் பற்றியும் அவர் தோற்றம், இயல்பு, செயல்கள் என்பவை பற்றிக் கீர்த்தனை வடிவில் நாரதர் பாடுவதாகப் பல பாடல்கள் உள்ளன. கீர்த்தனை என்பது ஒரு தனி மனிதனின் இசைக் கச்சேரியாகும். இதன் பயன் சொல்லப்பட்ட விஷயங்கள் பொது மக்களை ஈர்க்கும் வகையில் அமைவதாகும். நாரத புராணத்தில் உள்ள கீர்த்தனைகள் பிற்காலத்தில் பல கீர்த்தனைக்காரர் களை உருவாக்கிற்று. எழுத்தறிவில்லாதவர்கள் கூடக் கீர்த்தனைகளை இயற்றவும், செவி வழியாகக் கேட்ட கீர்த்தனைகளைப் பாடவும் பழகி இருந்தனர். கிராமம் கிராமமாகச் சென்று இறைவன் புகழ்பாடும் கீர்த்தனை களைப் பாடிப் பொதுமக்களைக் கவர்ந்தனர். இப்படிப் பாடும் இவர்களில் தீண்டத்தகாத வகுப்பைச் சேர்ந்தவர் களாகக் கூடப் பலர் இருந்தனர். இவ்வாறு பாடும் இவர்களுக்கு 'நாரதர்கள்' என்ற பெயர் வழங்கிற்று.

இதில் ஒரு வியப்பென்னவென்றால், நாரதர்கள் என்ற பெயருடன் இவர்கள் பாடும்பொழுது பிராமணர்கள் உள்பட பலரும் இவர்களை வணங்கி வரவேற்றனர். வியாசர், வால்மீகி, சுகர் ஆகிய மகான்களைப் பற்றிப் பொதுமக்களுக்கு அறிவிக்கும் பொறுப்பு இந்த நாரதர்களிடையே இருந்து வந்தது. ஆதிநாரதர், வேதங்கள் முதலானவற்றின் உட்பொருளை எல்லாம் கீர்த்தனை வடிவில் வெளியிட்டதுடன் இறையன்பு, இறைபக்தி முதலியவற்றை மக்கள் மனத்தில் தோற்று விக்கும் பெரிய ஆசிரியராக இருந்தார். நாரத பாஞ்சராத்திரம் என்ற நூல் இறைவனுக்கு செய்யும் தொண்டைப் பற்றி விரிவாகப் பேசுகிறது. அத்தகைய நூலின் ஆசிரியர் நாரதர் என்று சொல்லப்படுகிறது. உலகத்தில் உள்ள மக்கள் அனைவரும் பெருமுயற்சி செய்து தாங்கள் விரும்பும் பொருளை அடைய விரும்புகிறார்கள். இந்த முயற்சியின் பயன், 'பொருளை அடைவது' என்றே பலரும் கருதினர். நாரத பாஞ்சராத்திரம் அடைகின்ற பயனைப் பற்றிக் கவலைப்படாமல் இறைவனிடத்து அன்பு செலுத்து வதையே பெரிதாகக் கூறுகிறது. பொருளை அடைய விரும்பி முயற்சி செய்பவர்கள் அந்த முயற்சிக்குப் பலன் கிட்டாதபோது பெரும் வருத்தமும், ஏமாற்றமும் அடைகிறார்கள். முயற்சியையே கூட விட்டு விடுகிறார்கள். இதன் எதிராக பலனைப் பற்றிச் சிந்திக்காமல் செயல்களைச் செய்தால், ஏமாற்றத் திற்கு வழியே இல்லை. மனமகிழ்ச்சியும் குறையப் போவதில்லை. இதனையே நாரதர் உபதேசிக்கிறார்.

பிரம்மனின் மானசீக புத்திரராகிய நாரதர் எல்லோரையும் போலத் திருமணம் செய்துகொண்டு சந்ததியை வளர்க்க வேண்டும் என்று எண்ணினார்கள். ஆனால் நாரதர் அதற்கு இடம் கொடாமல், வீணை

*போன்று ஓர் வாத்தியத்தைக் கையில் வைத்துக் கொண்டு இறைவன் சம்பந்தமான புகழைக் கேட்பவர் நெஞ்சுருகப் பாடிக் கொண்டு பல இடங்களிலும் சுற்றி வரலானார். 'பொறி புலன்களின் மூலம் பெறும் இன்பம் அப்போதைக்கு மகிழ்ச்சியைத் தந்தாலும், அது நிலை பெற்று இருப்பதில்லை. அந்த மகிழ்ச்சி முடிந்தவுடன் ஏக்கத்தையும், துன்பத்தையுமே தருகிறது. இதன் எதிராக, முடிவில்லாத ஆனந்தத்தைத் தொடர்ந்து பெறுவதற்கு இறைவன் புகழைப் பாடுவதுதான் சிறந்த வழி' என்று நாரதர் சுட்டிக்காட்டினார். 'பொறி புலன்கள் மூலம் பெறும் இன்பம் உண்மையான இன்பமல்ல, அது மாயையே ஆகும்.*

*நாரதீய சம்ஹிதை, நாரதீய மகாபுராணம், நாரதீய பக்தி சூத்திரம் என்பன போன்ற பல நூல்களை இவர் இயற்றினார் என்று கூறுகிறார்கள். அவருடைய வாழ்க்கையின் கொள்கை, ஒருவன் எவ்வித சந்தேகத் திற்கும் இடம் கொடாமல் முழு நம்பிக்கையுடன் இறைவன் புகழை மனமுருகிப் பாட வேண்டும், என்பதாகும்.*

**மு**ன்னொரு காலத்தில் நைமிசாரண்ய வனத்தில், ஒரு மாபெரும் முனிவர்கள் சபை கூடியது. பிரசித்தி பெற்ற இருபத்து ஐயாயிரம் முனிவர்களுக்கு மேல் அங்குக் கூடினார்கள். இவர்களை அல்லாமல் இவர்கள் சீடர்கள் பலரும் இக்கூட்டத்தில் இருந்தனர். பரப்பிரம்மத்தைப் பற்றி ஆராய்வதற்காகவே இக்கூட்டம் கூட்டப்பெற்றது. கூட்டம் தொடங்குகையில் சௌனகர் எழுந்து, 'நாம் கூடியிருக்கும் இடத்திற்கு அருகாமையில் மற்றொரு ஆசிரமம் இருக்கிறது. அந்த ஆசிரமத்தில் லோமஹர்ஷனர் மகன் சுதா என்ற முனிவர் இருக்கிறார். அவர் வேதவியாசரிடம் பயின்றவர். புராணங்களைப் பற்றி நன்கு அறிந்தவர். நாம் அவரிடம்

சென்றால் ஏதோ ஒரு புராணத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வசதியாக இருக்கும்' என்று கூறினார். அவர் கூறியதை ஏற்றுக் கொண்ட முனிவர்கள் அனைவரும் முனிவர் சுதாவின் ஆசிரமத்தை நாடிச் சென்றனர்.

சுதா முனிவர் இவர்களை வரவேற்றார். விருந்தினர் களாகிய தங்களுக்கு வேண்டியதை முனிவர் தரவேண்டும் என்று இவர்கள் கேட்டுக் கொண்டனர். என்ன வேண்டும் என்று சுதா முனிவர் கேட்க, 'வியாசரிடம் கற்ற நீங்கள், புராணங்களின் உண்மையான ஞானத்தை எங்களுக்குச் சொல்ல வேண்டும்' என்று கேட்டனர். முனிவரும் அதற்கு இசைந்தார். நாரதர், சனத்குமார முனிவருக்குச் சொல்லியது தான் இந்த நாரத புராணம். புராணங்களைக் கேட்பதால் ஒருவன் செய்த பாவம் போகும். நாரத புராணத்தில் ஒரு பாடலைக் கேட்டால் கூட அன்று செய்த பாவம் போய்விடும். எனவே, நாரத புராணத்தைக் கேட்பது மிகப் பயனுடையது' என்று கூறத் தொடங்கினார்.

## நாரத புராணத் தொடக்கம்

பிரம்மாவின் பிள்ளைகளாகிய சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனாதனர் ஆகிய நால்வரும் ஞானத்தைத் தேடித் தவம் மேற்கொண்டிருந்தனர். ஒருமுறை பிரம்ம லோகத்தில் கங்கையின் உபநதியாகிய 'சீதா' என்ற ஆற்றில் குளித்துக் கொண்டிருந்த பொழுது நாரதர் அங்கே வந்து சேர்ந்தார். இவர்கள் நால்வரும் அவரை வணங்கி, "நாரதரே! தாங்கள் எங்கும் உள்ளவர், எல்லா இடங்கட்கும் சென்று சுற்றி வருபவர். எல்லா இடங்களிலும் நடைபெறும் எல்லாக் காரியங் களையும் பார்த்தவர். ஆகவே விஷ்ணு பக்தராகிய தாங்கள். விஷ்ணுவை நாங்கள் எவ்வாறு தியானிக்க வேண்டும், எவ்வாறு பூசிக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்த

வேண்டும் என்று விரும்புகிறோம்" என்று கூறினார்கள். உடனே நாரதர், நாரத புராணத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

**நாரத புராணம்**

ஆதியில் பரப்பிரம்மம் ஒன்று மட்டுமே எங்கும் நிறைந் திருந்தது. அந்த பரப்பிரம்மம் வடிவமற்றது; உருவமற்றது; குணங்களல்லாதது; வருணனைக்கப்பாற்பட்டது. அந்த பரப்பிரம்மம் பிரபஞ்சத்தை உண்டாக்க வேண்டும் என்று நினைத்தது. உடனே தனது வலப் புறத்திலிருந்து பிரம்மனையும், நடுப் பகுதியில் இருந்து சிவனையும், இடப் பகுதியில் இருந்து விஷ்ணுவையும் தோற்றுவித்தது. படைத்தல் தொழிலை பிரம்மனும், அழித்தல் தொழிலை சிவனும், காத்தலை விஷ்ணுவும் மேற்கொண்டனர்.

மக்கள் சில சமயங்களில் மூலப் பரம்பொருளை பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகிய மூன்று பெயர்களில் ஏதாவது ஒரு பெயராலேயே அழைக்கின்றனர். இவ்வாறு கூறுவது ஒரு மாயையாகும்.

பரம்பொருள்— பரப்பிரம்மத்தின் ஒரு பகுதியாக சக்தி இருக்கிறது. இச்சக்தி ஞானம் (வித்யா), அஞ்ஞானம் (அவித்யா) என இரு கூறுகளாக உள்ளன. அறிவிற் சிறந்த பெரியோர் பரப்பிரம்மத்தின் இந்த இயல்புகளைச் சிந்திக்கின்றனர். மெய்ஞ்ஞானம் என்பது பரப்பிரம்மத்திற்கும், பிரபஞ்சத்திற்கும் உள்ள ஒற்றுமையை அறிவதாகும். இந்த ஒற்றுமையை அறியாமல் இருப்பதே அறியாமை என்று சொல்லப்படும். இந்த அறியாமையே ஒருவனை எல்லையற்ற துன்பத்திற்கு ஆளாக்குவது. சக்தி ஒன்றாகவே இருப்பினும் பல பெயரிட்டு அழைக்கப்படுகிறது. விஷ்ணுவுடன் சேர்க்கும் பொழுது இலட்சுமி என்றும், சிவனுடன் சேர்த்துப் பேசும்பொழுது உமா அல்லது பார்வதி என்றும், பிரம்மனுடன் சேர்த்துப் பேசும்

பொழுது சரஸ்வதி என்று அழைக்கப்பட்டாலும் உண்மையில் இத்தனைப் பெயர்களைத் தாங்கியுள்ள சக்தி ஒன்றேயாகும்.

ஆக்கல் தொழிலை சரஸ்வதியும் பிரம்மனும் சேர்ந்தே செய்கின்றனர்; காத்தல் தொழிலை விஷ்ணுவும் லட்சுமியும் சேர்ந்தே செய்கின்றனர்; அழித்தல் தொழிலை சிவனும் பார்வதியும் சேர்ந்தே செய்கின்றனர். இந்த மூன்று பேர்களோடும் கூடிய இப்பெருஞ் சக்தியை 'மகாமாயா' என்றும், 'பிரகிருதி' என்றும் சொல்கிறார்கள். இப்பிரபஞ்சம் என்பது, வித்தி (நிலம்); அப (நீர்); தேஜா (தீ); மருத் (காற்று); வியோமா (ஆகாயம்). இப்பிரபஞ்சம் பதினான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேல் உலகங்கள் ஏழும், கீழ் உலகங்கள் ஏழும் அப்பகுதிகளாகும். இந்தப் பதினான்கு உலகங்களும் அவ்வவற்றிற்குரிய மலைகள், காடுகள், ஆறுகள் ஆகியவற் றைப் பெற்றுள்ளன. நில உலகம் ஏழு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளன. அவையாவன: ஜம்புதுவிபம், பலக்ஷதுவிபம், ஷல்மலதுவிபம், குஷதுவிபம், கிரௌஞ்சதுவிபம், சகதுவிபம், புஷ்கரதுவிபம் ஆகும். பூலோகத்தில் ஏழு கடல்கள் உள்ளன. அவை: லவண, இக்சு, சுரா, சர்பி, ததி, துக்தா, ஜலா ஆகியவை ஆகும்.

பாரத வர்ஷா ஜம்புதுவிபத்தில் உள்ளது. இது தெற்குப் பகுதியில் லவணக் கடலால் சூழப்பட்டுள்ளது. வடக்குப் பகுதியில் இமயமலை உள்ளது. பாரத வர்ஷா வாழ்வதற்கு மிகுந்த சிறந்த இடமாகும். இது கர்மபூமி என்று அழைக்கப்படும். கர்மபூமி என்றால் செயல்கள் நிகழ்வதற்குரிய இடம் என்று பொருளாகும். இந்தக் கர்மபூமியில் செய்யும் காரியங்களுக்குரிய பயனை அனுபவிக்கும் இடம்தான் போக பூமி எனப்படும். இந்த பாரத வர்ஷமாகிய கர்ம பூமியில் செய்யப்படும் காரியங்கள், பலாபலன்கள் இங்கே கிடைப்பதில்லை. இங்கு செய்யப்படும் நற்காரியங்களுக்குச் சொர்க்கத்தில் சென்று

இன்பத்தை அனுபவிக்கும் பயன் கிடைக்கிறது. இங்கு செய்யப்படும் தீய காரியங்களுக்கு நரகத்தில் சென்று துன்பத்தை அனுபவிக்க வேண்டும்.

பாரத பூமியில் பிறப்பதற்குப் பெரும் புண்ணியம் செய்திருக்க வேண்டும். மிகுந்த அளவில் நன்மைகளைச் செய்வதற்குரிய வாய்ப்பும் சந்தர்ப்பங்களும் பாரத பூமியில்தான் உள்ளன. இந்த நல்ல இடத்தில் பிறந்தும் நல்ல காரியங்களைச் செய்யாமல் இருப்பது ஒரு குடம் அமிர்தத் திற்குப் பதிலாக ஒரு குடம் விஷத்தை வாங்குவது போலாகும். சொர்க்கத்தில் சென்று இன்பம் அனுபவிக்க வேண்டுமானால், இந்தக் கர்ம பூமியில் ஓயாது ஒழியாது, ஊக்கத்துடன் நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும். இவ்வாறு சொல்லியவுடன் சொர்க்கப் பயனை அனுபவிக்க வேண்டும் என்ற பயனைக் கருதியே இங்கு நற்காரியங்கள் செய்தல் கூடாது. பலனைப் பற்றிச் சிந்திக்காமல் நற் காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படுவதே சிறப்புடையதாகும். பலனில் பற்று வைக்காமல் செயல்களில் ஈடுபடுவதை 'நிஷ்காம கர்மம்' என்று கூறுவர். செயல்களின் பயன் அனைத்தும் விஷ்ணுவிடம் உள்ளன.

**மிருகண்டு முனிவரின் கதை**

நம்பிக்கையும், முழு ஈடுபாடும் கொண்டு செய்யப்படும் வழிபாட்டையே விஷ்ணு ஏற்றுக் கொள்கிறார். இவை இரண்டும் இல்லாதவர்கள் எவ்வளவு நைவேத்தியம் செய்து வழிபட்டாலும் விஷ்ணு அவற்றைக் கண்டு கொள்வதே இல்லை. நம்பிக்கையும் ஈடுபாடும் தாய் போன்றது. குழந்தைகள் தாயிடம் சென்று அடைக்கலம் புகுவது போல, விஷ்ணு பக்தி உடையவர்கள் அடைக்கலம் புகுவது பக்தி, ஈடுபாடு என்ற

இவற்றிடையேயாகும். இதைத்தான் மார்க்கண்டேயரிடம் விஷ்ணு கூறினார்.

கதை செல்லிக் கொண்டு வரும் நாரதரை இடைமறித்து, 'மார்க்கண்டேயர் என்பவர் யார்? விஷ்ணு அவரிடம் என்ன சொன்னார்?' என்று சனத்குமாரர் கேட்டார். மிருகண்டு, மார்க்கண்டேயர் என்பவர்களின் கதையை நாரதர் சொல்ல ஆரம்பித்தார்.

சலகிரமா தீர்த்தக்கரையில், மிருகண்டு முனிவர் விஷ்ணுவைக் குறித்து நீண்டகாலம் தவம் புரிந்தார். அவருடைய தவத்தின் ஆற்றல் பெருகப் பெருக இந்திரனும் தேவர்களும் பயந்தனர். மிருகண்டு தவத்தின் முடிவில் விஷ்ணு தோன்றினால், இந்திரப் பதவி வேண்டும் என்று கேட்டு, ஆட்சியிலிருந்து தன்னைத் தள்ளிவிடுவாரோ என்று இந்திரன் பயந்தான். தேவலோகத்திலிருந்து தங்களை எல்லாம் மிருகண்டு விரட்டி விடுவாரோ என்று தேவர்கள் பயந்தனர். ஆகவே இந்திரனும் தேவர்களும், விஷ்ணுவிடம் சென்று தங்கள் பயத்தை வெளிப்படுத்தி, ஒரு வழி சொல்லுமாறு வேண்டினர். அவ்வாறு சென்று பார்க்கும்போது விஷ்ணு பஞ்ச ஆயுதங் களுடன், கோடி சூரியப் பிரகாசமுடைய உடம்புடன் தாமரை போன்ற கண்களுடன் மஞ்சள் பீதாம்பரத்துடன் காட்சி தந்தார்.

தேவர்களின் வேண்டுதலைக் கேட்டு விஷ்ணு, "உங்களுக்குக் கவலை வேண்டாம். மிருகண்டுவை நான் அறிவேன். அவர் இவற்றிற்கெல்லாம் ஆசைப்படுபவர் அல்லர். நீங்கள் கவலை இல்லாமல் போங்கள். தீயவர்கள் கடுந்தவம் இயற்றினால் நீங்கள் பயப்படுவது நியாயம். அந்தத் தவத்தின் பயனாகப் பதவி பிடிக்கும் வேட்டையில் அவர்கள் இறங்கி விடுவார்கள். ஆனால் மிருகண்டு அத்தகையவர் அல்லர்" என்று சொல்லி அனுப்பினார்.

இதன் பிறகு இதே கோலத்துடன் மிருகண்டு முனிவர் முன் விஷ்ணு தோன்றினார். இந்தக் கோலத்தை தரிசித்த மிருகண்டு முனிவர் விஷ்ணுவின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். "ஐயனே! தேவர்கள் முதலானவர்கள் உன்னைத் தரிசிப்பதற்குத் தவம் கிடக்கிறார்கள். அவர்களால் காண்பதற்கரிய நீ, என்னை நாடி வந்தது, என் முன்னே நிற்பது என் மிகப் பெரிய பேறாகும்" என்றார். விஷ்ணு, "முனிவரே! உன் தவத்தை மெச்சினோம். வேண்டிய வரத்தைக் கேட்பாயாக!" என்றார். முனிவர் "ஐயனே! தங்களை நேரே தரிசனம் செய்யும் பேறு கிடைத்த பிறகு இதைவிட மேலான ஒன்று எதுவும் இல்லை. ஆதலால் எனக்கு எந்த வரங்களும் தேவை இல்லை. தங்கள் தரிசனம் ஒன்றே போதுமானது" என்றார். விஷ்ணு, "முனிவரே! 'ஒரு பக்தனிடம் விஷ்ணு சென்றார், ஆனால் வரம் ஒன்றும் தரவில்லை' என்ற பெயர் எனக்கு உண்டாக வேண்டாம். நீயே கேட்காவிட்டாலும், நானே ஒரு வரத்தைத் தரப்போகிறேன். உம்முடைய வம்சத்தில் நான் வந்து தோன்றப் போகிறேன். அது உம்முடைய வம்சம் செய்த பெரும் புண்ணியமாகும்" என்று கூறிவிட்டு மறைந்தார்.

**மார்க்கண்டேயர்**

விஷ்ணுவின் அருளால் மிருகண்டு முனிவரின் புத்திர னாகப் பிறந்தார். மிகவும் இளம் வயதிலேயே வேதங்கள், சாத்திரங்கள் அனைத்தையும் பயின்று விற்பன்னராகிவிட்டார். மார்க்கண்டேயர் பிரளய காலத்தில் நீரின் மேல் படுத்துக் கிடக்கும் வாய்ப்பைப் பெற்றார். பல்லாயிரக்கணக்கான வருடங்கள் இப்படியே நீரில் மிதந்தமையால், நீரைக் கண்டு ஒருவித அச்சமடைந்தார். அந்நிலையில் விஷ்ணு அவர் முன் தோன்றி, "நீ என்னுடைய சிறந்த பக்தன், உன்னைக் கைவிட மாட்டேன்" என்று கூறிவிட்டு, விஷ்ணு பக்தர்கள் எவ்வாறு இருப்பார்கள் என்று சில அடையாளங்களைக் கூறினார்.

விஷ்ணு பக்தர்கள் பொறாமை, காழ்ப்புணர்ச்சி என்ற இரண்டும் அற்றவர்கள். எல்லா உயிர்களையும் போற்றி அன்பு செய்பவர்கள். அவர்கள் மனம், வாக்கு, காயங்களால் மறந்தும் பிறர்க்குத் தீமையை நினைக்க மாட்டார்கள்; சொல்ல மாட்டார்கள்; செய்யவும் மாட்டார்கள். அவர்கள் சமாதான விரும்பிகள். ரிஷிகள், முனிவர்கள், பெரியோர்கள் ஆகியோரிடம் அன்பு பூண்டு பணி செய்வார்கள். அவர்கள் கோயில் கட்டுதல் என்ற நற்பணியுடன் மக்களுக்குத் தேவையான குளம் வெட்டுதல், மரம் நடுதல், சாலைகள் அமைத்தல் ஆகிய தொண்டுகளையும் செய்வார்கள். அவர்கள் புராணங்களைப் படிப்பதுடன், அவற்றை விளக்கமாகப் பிறருக்கு எடுத்துச் சொல்வார்கள். உண்மையைச் சொன்னால், உண்மையான விஷ்ணு பக்தனுடைய எல்லாப் பண்புகளும் உன்னிடம் நிறைந்துள்ளன.

விஷ்ணுவினால் ஆசீர்வதிக்கப்பட்ட மார்க்கண்டேயர் சலகிரமா என்ற தீர்த்தக்கரையில் பெருந்தவம் இயற்றினார். மார்க்கண்டேயர் சிரஞ்சீவித்துவத்தை விஷ்ணுவிடம் பெற்றார் என்று சில புராணங்களும், பிரம்மாவிடம் பெற்றார் என்று சில புராணங்களும் கூறுகின்றன.

### கங்கை – யமுனை சங்கமம்

தீர்த்தங்களுள் சிறந்தது கங்கை. அடுத்த நிலையில் இருப்பது யமுனை. இவை இரண்டும் சங்கமிக்கின்ற இடம் மிக மிகப் புண்ணியமானது என்பார்கள். இந்தச் சங்கமத்தில் குளிப்பவர்கள் நோயற்ற உடம்பையும், மிக நீண்ட ஆயுளையும் பெறுவர். தேவர்கள்கூட இந்தச் சங்கமத்தில் வந்து குளிக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். கங்கை, விஷ்ணுவின் பாதத்தில் இருந்து புறப்படுகிறது. யமுனை, சூரியனின் புத்ரி ஆகும். எனவே இவை இரண்டும் மிகப் புண்ணியமான தீர்த்தம்

என்பதை அறிந்து கொள்ளலாம். கங்கையில் சென்று நீராட முடியாதவர்கள் கூட கங்கா தேவியை மனத்தினால் நினைத்தாலே அவர்கள் பாவம் போய்விடும்.

பிரயாகை என்ற இடம் கங்கைக் கரையில் உள்ளது. இந்த இடத்தில் பிரம்மரே தவம் செய்தார் என்றால், இதன் பெருமையை அறிந்து கொள்ளலாம். பல தீர்த்தங்களில் சென்று நீராடியதன் பயனைப் பிரயாகையில் உள்ள கங்கைத் தண்ணீரின் சில சொட்டுகளே தரமுடியும். இந்தச் சில சொட்டுத் தண்ணீர் ஏனைய தீர்த்தங்களில் கிடைக்கும் புண்ணியத்தைவிடப் பதினாறு பங்கு அதிகமாகும். கங்கைக் கரையில் உள்ள களிமண்ணை எடுத்துத் தலையில் பூசிக் கொள்பவர்கள் சிவனே ஆகிறார்கள். திருமாலுக்கு மூன்று பொருள்கள் மிக முக்கியம். 1. கங்கை, 2. துளசி, 3. திருமால் அடியார்களின் பாதத் தூளி.

கோதாவரி, சரஸ்வதி, காளிந்தி, காவேரி, கிருஷ்ணா, ரேவா, வகுதா, துங்கபத்திரை, பீமரதி, வேத்ரவதி, தாமிரபரணி, விடத்ரு ஆகிய நதிகளிலும் கங்கை கலந்திருக்கிறாள்.

**வஹூ**

விருகா என்ற மன்னனின் மகனாகிய வஹூ மிகச் சக்தி வாய்ந்த பேரரசனாவான். உலகங்களை எல்லாம் ஜெயித்துத் தன் குடைக்கீழ் கொண்டு வந்ததுடன் நில்லாமல், ஏழாகப் பிரிந்துள்ள ஒவ்வொரு துவிபத்திலும் சென்று அஸ்வமேத யாகம் புரிந்தான். தொண்ணூறாயிரம் ஆண்டுகள் அவன் ஆட்சி நேர்மையாக நடைபெற்றது. ஒருவன் அழிவிற்குக் காரணம் நான்கு என்று சொல்லப்படுகிறது. இளமை, அதிகமான செல்வம், குவிந்துவிட்ட அதிகாரம், எதிரது நோக்கும் அறிவின்மை என்ற இந்த நான்கும் பல்லாயிரம் ஆண்டுகள் ஆண்ட வஹூயிடம் சேர்ந்தன. ஆணவம் தலைக்

கேறியது. என்னைப்போல் இதுவரை யாரும் இருந்ததில்லை. நானேதான் கடவுள் என்று எண்ணிக் கொண்டு எல்லை மீறி நடக்கத் தொடங்கினான். லட்சுமி அவனை விட்டுப் போய்விட்டாள். பகை அரசர்கள் காலம் பார்த்திருந்தார்கள். ஹைஹய மன்னனும், தலஜங்க மன்னனும், வஹீயுடன் போர் செய்து தோற்கடித்தனர். அரசை இழந்த வஹீ காட்டிற்கு ஓடினான். அவனுடைய மனைவியும் அவனைப் பின் தொடர்ந்தாள்.

காலங் கடந்த நிலையில் வஹீ தன் பிழைகளை நினைந்து வருந்தினான். முதுமை அவனைப் பற்றிக்கொண்டது. கடைசியாக அந்த வறுமை நிலையில் வஹீ இறந்து விட்டான். அப்போது அவன் சேர்ந்திருந்த இடம் அவுர்வ முனிவரின் ஆசிரமம் ஆகும். இறந்த கணவனுடன் அக்னிப் பிரவேசம் செய்ய அவன் மனைவி முடிவு செய்தாள். ஆனால் அவுர்வ முனிவர், "மகளே! இப்பொழுது நீ கருவுற்றிருக்கிறாய். கருவுற்ற நிலையில் உடன்கட்டை ஏறுவது கொலை புரிதலை ஒத்த பாவமாகும். உன் வயிற்றில் பிறக்கப் போகும் குழந்தை பெரிய அரசனாகப் போகிறான். ஆகவே தீப்பாயும் எண்ணத்தை விட்டுவிடு" என்று கூறினார்.

அவருடைய அறிவுரையை ஏற்றுக் கொண்ட யாதவி தன் எண்ணத்தைக் கைவிட்டு வஹீவிற்கு இறுதிக் கடன்கள் செய்தாள்.

**சௌதசாவின் கதை**

இக்கதை ஏற்கெனவே விஷ்ணு புராணத்தில் கூறப் பட்டுள்ளது. அக்கதையின் தொடர்ச்சியினை இங்கு தருகிறோம்.

சாபத்தால் ராட்சசனாகி விட்ட சௌதசா அலைந்து திரியும் பொழுது, நர்மதை ஆற்றங்கரையில் ஒரு முனிவரின்

ஆசிரமத்திற்குப் பக்கத்தில் சென்றான். உண்ணவேண்டும் என்று அவரைப் பற்றிக் கொண்டான். முனிவரின் மனைவி தன் தவ வலிமையால் இந்த அரக்கனின் பழைய வரலாற்றைக் கூறி, "நீ செளதசா என்ற மன்னன். சாபத்தால் இந்த நிலையை அடைந்தாய். என் கணவராகிய முனிவரைத் தின்று பாவத்தை சேர்த்துக் கொள்ள வேண்டாம். அவரை விட்டு விடு" என்று கெஞ்சினாள். அரக்கனாகிய செளதசா அவள் கூறியதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அம்முனிவரைத் தின்று விட்டான். அதுகண்டு பொறாத முனிவரின் மனைவி இரண்டு சாபங்களைத் தந்தாள். முதலாவது: அரக்கனே! உன் சாபம் நீங்கி நீ செளதசாவாக ஆனபிறகும் உன் மனைவி முகத்தில் எப்பொழுது விழிக்கிறாயோ அப்பொழுதே இறந்து விடுவாய். 2. வசிட்டர் கூறிய பன்னிரண்டு வருடங்களோடு இல்லாமல், மிக நீண்டகாலம் ராட்சசனாகவே இருக்கக் கடவாய் என்பது.

முனிவர் மனைவியின் இரண்டு சாபங்களையும் கேட்ட செளதசா அரக்கன், "அம்மா! நான் உங்கள் கணவரைத் தின்று ஒரு குற்றம் புரிந்தேன். அதற்கு ஒரு சாபம் தருவது நியாயம். இரண்டாவது சாபம், காரணம் இல்லாமல் உங்கள் ஆத்திரத்தின் விளைவால் கொடுத்தீர்கள். எனவே இப்பொழுது நான் உங்களைச் சபிக்கிறேன். நீங்கள் இந்த விநாடியிலிருந்து பிசாசாக மாறி அலைவாயாக" என்று சாபம் கொடுத்தான். உடனே முனிவரின் மனைவி பிசாசாக மாறிவிட, செளதசா அரக்கனும் முனிவரின் மனைவியாகிய பிசாசும் காட்டில் அலைந்து திரிந்தனர். இறுதியாக ஓர் ஆலமரத்தடியில் இருவரும் சென்று தங்கினர். இரண்டு புதியவர்களைப் பார்த்து அந்த ஆலமரத்தில் ஏற்கெனவே இருந்த அரக்கன் 'நீங்கள் இருவரும் யார்? ஏன் இங்கு வந்தீர்கள்?' என்று வினவினான். செளதசா நடந்தவற்றைக் கூறிவிட்டு "அரக்கனே! நீ யார்?" என்றான். அவன் "இதற்கு

முன், மகத நாட்டில் சோமதத்தா என்ற பெயருடன் ஒரு பிராமணனாக வாழ்ந்தேன். ஏதோ காரணத்தால் என் குருவை மதியாமல் அவமானப்படுத்திவிட்டேன். அதன் பயனாக அரக்கனாக மாறினேன்" என்று கூற அந்த இரு அரக்கர்களும், இந்தப் பெண் பிசாசும், மரத்திலேயே வாழ்ந்தனர்.

ஒரு நாள் கலிங்க தேசத்து கார்கா பிராமணன் ஒருவன் அம்மரத்தடியில் தங்கினான். இரு அரக்கர்களும், பெண் பிசாசும் நாக்கைச் சப்பிக் கொண்டு, நல்ல ஆகாரம் கிடைத்தது என்று கும்மாளமிட்டனர். ஆனால் பிராமணன் ஓயாமல் சிவ நாமத்தையும், விஷ்ணு நாமத்தையும் சொல்லிக் கொண்டே இருந்ததால் இவர்கள் அவன் பக்கத்தில் நெருங்க முடிய வில்லை. இறுதியாகத் துணிவை வரவழைத்துக் கொண்டு ஓர் அரக்கன் பின்வருமாறு பேசினான். "ஓ பிராமணா! அரக்கர் களாக உள்ள நாங்கள் இருவரும், உடன் இருக்கும் பெண் பிசாசும் உன்னைக் கண்டதிலிருந்து நல்ல ஆகாரம் கிடைத்தது என மகிழ்ச்சி அடைந்தோம். ஆனால் ஓயாமல் சிவ விஷ்ணு நாமங்களை நீ சொல்லிக் கொண்டிருப்பதால் உன்னை நெருங்க முடியவில்லை. இவ்வளவு சக்தி வாய்ந்த நீ இந்த நர்மதை ஆற்றின் புனித நீரை எடுத்து சிவ விஷ்ணு நாமத்தை உச்சரித்துக் கொண்டு எங்கள் மேல் தெளித்தால் நாங்கள் உய்தி அடைவோம்" என்று வேண்டிக் கொண்டது. பிசாசுகள் பேசுவதையும், நர்மதை நீரைப் புகழ்வதையும் கண்ட பிராமணன் ஒன்றும் புரியாவிட்டாலும் அப்பிசாசுகள் சொன்னவாறே தீர்த்தத்தை எடுத்து, அதனுடன் துளசி இலை கலந்து சிவ விஷ்ணு நாமங்களை உச்சரித்துக் கொண்டே இவர்கள் மூவரின் மேலும் தெளித்தான். உடனே அம் மூவரும் புதிய உடம்பு பெற்றனர். முனிவரின் மனைவியும், பிராமணனும் நேரே சொர்க்கம் சென்றனர். அரசனாக மாறிவிட்ட சௌதசா, மனைவியின் முகத்தில் விழித்தால்

இறக்க நேரிடும் என்ற சாபத்தை மனத்தில் இருத்தி அவளைச் சென்று பார்க்காமல் வாரணாசி சென்று, பிறகு தன் ராஜ்ஜியத்திற்குத் திரும்பினான்.

**அதிதியின் தவம்**

திதியின் மரபில் வந்த வலி அசுரனாக இருந்தாலும், விஷ்ணு பக்தி மிக உடையவனாக இருந்தான். மாபெரும் வலிமை உடையவன் ஆதலால் மூன்று உலகங்களையும் வென்று, தேவர்களைத் தோல்வியுறச் செய்தான். தேவர்களும் இந்திரனும் பூவுலகில் மானுட வடிவம் கொண்டு திரிய லாயினர்.

அதிதியின் மரபில் வந்த தேவர்களும் இந்திரனும் வலியிடம் தோற்று மாறுவேடத்துடன் அலைந்து திரிவதை அறிந்த அதிதி, விஷ்ணுவைக் குறித்துத் தான் தவம் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தாள். இமயமலைக்குச் சென்று கைகளைத் தூக்கிக் கொண்டு நின்றபடியே பல காலமும், ஒரு காலில் நின்றபடியே பல காலமும், அந்த ஒரு காலின் கட்டை விரலில் நின்றபடியே பல காலமும் தவம் செய்து வந்தாள். தவம் தொடங்கிய கொஞ்ச காலத்திலேயே உணவு உண்பதை விட்டுவிட்டுப் பழங்களையே உண்டாள். சில காலம் கழித்து அதையும் நிறுத்திவிட்டுத் தண்ணீரை மட்டும் குடித்து வாழ்ந்தாள். பிறகு அதையும் நிறுத்திவிட்டுக் காற்றை மட்டும் சுவாசித்து வாழ்ந்தாள்.

அதிதியின் கடுமையான தவம் பற்றி வலிக்குத் தகவல் போயிற்று. எப்படியாவது அதிதியின் தவத்தைக் கெடுக்க வேண்டுமென்று வலி முடிவு செய்தான். அவனுடைய ஏவலால் சில அசுரர்கள் தேவர்களைப் போல் உருமாறி அதிதி யிடம் வந்தனர். அதிதியைப் பார்த்து, "தாயே, எங்களுக்காக நீங்கள் ஏன் இவ்வளவு கடுமையான தவம் செய்கிறீர்கள்?

இத் தவத்தினால் ஒருவேளை தாங்கள் இறந்து போய்விட்டால் நாங்கள் யாரிடம் சென்று முறையிட முடியும்?" என்று வேண்டிக் கொண்டார்கள் அந்தப் போலித் தேவர்கள்.

அவர்கள் வேண்டுதல் எதுவும் அதிதியின் மனத்தைக் கலைக்கவில்லை. தங்களால் அவள் மனநிலையை மாற்ற முடியவில்லை என்று கண்டுகொண்ட அந்தப் போலித் தேவர்கள், உண்மையான தங்கள் அசுர வடிவை எடுத்துக் கொண்டு பல ஆயுதங்களை அவள் மேல் ஏவினார்கள். அதிதியின் தவ வலிமையால் அந்த ஆயுதங்கள் எதுவும் அவளை ஒன்றும் செய்ய முடியவில்லை. மிக்க கோபம் கொண்ட அசுரர்கள் வாயிலிருந்து நெருப்புக் கிளம்பிற்று. அந்த நெருப்பும் அவளை ஒன்றும் செய்ய முடியவில்லை. அதற்கு பதிலாக அவள் தவம் செய்த வனத்தையே அந்த நெருப்பு சுட்டுப் பொசுக்கிற்று. அந்த அசுரர்களையும் அதே நெருப்பு கொன்று விட்டது. (இதனை அடுத்துவரும் வலி — வாமனன் கதை முன்னரே பிரம்ம புராணத்தில் கொடுக்கப்பட்டுள்ளது).

**பகீரதனும் கங்கையும்**

சகரர் வழிவந்த பகீரதன் மிகவும் பலம் பொருந்திய மன்னனாக வாழ்ந்தான். நேர்மை நல்லொழுக்கம் விஷ்ணு பக்தி இவற்றை முழுவதும் பெற்றிருந்ததால் அவனுடைய ஆட்சி மிகவும் சிறப்புற்றிருந்தது.

ஒருநாள் இயமன் பகீரதனைப் பார்க்க வந்தான். பகீரதன் எழுந்து இயமனுக்கு வணக்கம் செய்து, "தெய்வங்களுள் ஒருவரான தாங்கள் என்னைப் போல ஒரு சாதாரண மனிதனைத் தேடி வந்தது என் புண்ணியமாகும். தர்மம் என்றால் என்ன? அது எப்படிச் செய்யப்பட வேண்டும்? என்பதை விரிவாகக் கூறினால் பெரும் பயன் விளையும். தயவு செய்து தர்மத்தைப் பற்றி விளக்க வேண்டு

கிறேன்,” என்று கேட்டுக்கொண்டான். இயமன் சொல்ல ஆரம்பித்தான்: “பொதுமக்களுக்குப் பயன்படும்படியான குளம் தோண்டுவது நல்ல தர்மம். சிவன், விஷ்ணு ஆகியவர்களுக்குக் கோயில் கட்டுவது பெரும் புண்ணியம். கல்லால் கட்டினாலும் செம்பு முதலான உலோகங்களால் கட்டினாலும் புண்ணியம். ஏழைகளுக்கு உணவு, உடை, மாடுகள், ஆடுகள் முதலிய வற்றைக் கொடுப்பதும் புண்ணியமாகும். மற்ற புண்ணியத் திற்குரிய செயல்கள் மரம் நடுதல், தோட்டம் உண்டாக்கிப் பாதுகாத்தல் ஆகியவையாகும். துளசிச் செடிகளை நட்டு வளர்ப்பது பெரும் புண்ணியம். துளசி மாலை அணிவதும் புண்ணியமாகும். சிவன் அல்லது விஷ்ணு சிலைகளுக்குப் பால், நெய், இளநீர், கரும்புச் சாறு ஆகியவற்றால் அபிஷேகம் செய்வது பெரும் புண்ணியமாகும். சுக்கிலபட்சக் காலத்தில் பஞ்சமிதிதி, அஷ்டமி, ஏகாதசி, துவாதசி, சதுர்த்தசி, பௌர்ணமி ஆகிய திதிகளில் சிவன்—விஷ்ணு சிலைகட்குப் புண்ணிய நீரால் அபிஷேகம் செய்வது நல்லது. பசி உடையவர் கட்கு உணவும் தண்ணீரும் தருவதும் நல்லது. இப்படித் தருமம் செய்பவர்கள் நரகத்தையே எட்டிப் பார்க்க மாட்டார்கள். தன்னை அடைக்கலம் என்று அடைந்தவர்கட்கு உதவுகிறவர்கள் பெரும் புண்ணியத்தை அடைகிறார்கள். ஒருவன் பெற்ற கல்வி அறிவை மற்றவர்களுக்கு போதிப்பது பெரும் புண்ணியம் தரும். பொன், வெள்ளி முதலியவற்றையும் தேவையுள்ள வர்களுக்கும் வழங்கலாம். சிவன்—விஷ்ணு சிலைகள் செய்து தானம் செய்யலாம். புண்ணியம் செய்தவர்களுக்குச் சில அடையாளங்கள் உண்டு. இதனால் அவர்களை மற்றவர்களில் இருந்து பிரித்து அடையாளம் கண்டு கொள்ள முடியும். அந்த அடையாளங்களாவன: அவர்கள் பிறரைப் பழி தூற்ற மாட்டார்கள். அவர்கள் பொறி புலன்களைக் கட்டுப்படுத்திய வர்கள் ஆவார்கள். அவர்கள் அதிகமாக உண்ணமாட்டார்கள்.

அவர்கள் தன் குருவையும், விருந்தினர்களையும் நன்கு உபசரிப்பார்கள். எப்பொழுதும் விஷ்ணுவையும் சிவனையும் நினைத்துக்கொண்டேயிருப்பார்கள். பாவம் என்பது நரகத்தில் ஒருவரைக் கொண்டு செலுத்தும். பிறர் பொருளைத் திருடுவது பாவம். தருமம் முதலானவற்றைச் செய்வதாக வாக்கு கொடுத்துவிட்டுப் பிறகு செய்யாமல் பின்வாங்குவது பாவம். அகங்காரம் அடைவதும் பாவம். மருத்துவம், சோதிடம் முதலிய வற்றில் நல்ல பயிற்சி இல்லாமல் செய்வதும் சொல்வதும் பாவம். பிறர் பழி தூற்றுதல், பிறரை அவமானமாகப் பேசுதல், ஆடம்பரம், பெய் பேசுதல், பிறரை ஏமாற்றுதல், கொலை ஆகியவையும் பெரும் பாவங்களாகும். ஒரு பாவியுடன் பழகுவதும் பாவம். பாவங்களைப் போக்கத் தவம் மேற் கொள்வது நல்ல வழியாகும்.

"விஷ்ணு பாவம் போக்குகிறார். செய்யும் காரியங்களின் பலாபலன்களை விஷ்ணுவினிடமே விட்டுவிட வேண்டும். விஷ்ணு பக்தி மிக முக்கியமானதாகும். விஷ்ணு பக்தி பல வகைப்படும். அவை சத்துவ, ராஜச, தாமச குணங்களைப் பொறுத்து வேறுபடும். பிறருடைய அழிவுக்காக விஷ்ணுவை வேண்டுவது அதம—தாமச குணமாகும். விஷ்ணுவுக்கு வழிபாடு செய்வது போலப் பாசாங்கு செய்வது மத்தியம—தாமச குணமாகும். மற்றவர்கள் வழிபாடு செய்வதைப் பார்த்துத் தானும் விஷ்ணுவை வழிபடுவது உத்தம—தாமச குணமாகும். விஷ்ணுவை வழிபட்டுப் பொன்னும் பொருளும் வேண்டும் என்பது அதம—ராஜச குணமாகும். பெரிய காரியங்களைச் செய்துவிட்டு அதனால் புகழடைய விரும்பு வதும் மத்தியம—ராஜச குணமாகும். மயக்கம், அஞ்ஞானம் என்பவற்றிலிருந்து விடுபட வேண்டும் என்பது உத்தம—ராஜச குணமாகும். தான் செய்த பாவங்களில் இருந்து விடுதலை வேண்டும் என விரும்புவது அதம—சாத்விக குணமாகும்.

விஷ்ணு மகிழ்ச்சி அடைவார் என்று நினைத்துப் பிரார்த்தனை செய்வது மத்தியம—சாத்விக குணமாகும். எந்த ஒன்றையும் விரும்பாமல் பிரார்த்தனையைப் பிரார்த்தனைக்காகவே செய்வது உத்தம—சாத்விக குணமாகும். இங்குக் கூறப்பட்ட ஒன்பது வகை பக்திகளுக்கும் மேலாக மற்றொரு வகை பக்தி இருக்கிறது. அது உத்தமோதம பக்தி எனப்படும். அதாவது விஷ்ணுவை தியானம் செய்யும்போது, தான் வேறு விஷ்ணு வேறு என்று நினைக்காமல் ஒன்றாகவே இருப்பது உத்தமோதம பக்தியாகும்."

இவற்றை எல்லாம் கூறிவிட்டுக் கடைசியாக பகீரதனைப் பார்த்து இயமன் கூறியதாவது: "ஒ அரசனே! உன் கேள்வி களுக்கெல்லாம் விடை கூறிவிட்டேன். இப்பொழுது புண்ணியத்திற்கும் பாவத்திற்கும் உள்ள வேறுபாட்டை அறிந் திருப்பாய். நேர்மையாகவும், விருப்பு வெறுப்பு இல்லாமலும் நடு நிலைமையோடும் ஆட்சி செய்வாயாக. சிவன், விஷ்ணு என்ற இருவரும் ஒருவரே ஆவர். இவர்களுக்குள் வேற்றுமை பாராட்டுவது மிகப் பெரிய பாவமாகும். உன்னுடைய மூதாதையர்கள் இன்னும் நரகத்தில் விழுந்து கிடக்கிறார்கள். அவருடைய சாம்பலில் நீ எப்பொழுது கங்கை வந்து பாயுமாறு செய்கிறாயோ அப்பொழுதுதான் அவர்கள் மோட்சம் போவார்கள். உசிதம் போல் செய்வாயாக" என்று கூறிவிட்டு இயமன் போய்விட்டான்.

இயமன் யோசனைப்படி பகீரதன் பெருந்தவம் மேற் கொண்டு கங்கையை பூமிக்கு வரவழைப்பதற்காகத் தவம் செய்வதற்குரிய இடத்தை நாடிச் சென்றான். கோதாவரி நதிக் கரையில் பிருகு முனிவரின் ஆசிரமத்தைக் கண்டு அவரிடம் பின்வருமாறு பேசினான்: "முனிவரே! தாங்கள் மிகப் பெரிய தவசி. ஞானியும் கூட. தருமத்தைப் பற்றியும் சத்தியத்தைப் பற்றியும் எனக்கு ஒன்றும் தெரியாது.

என்னைத் தங்களுடைய மகன் போலப் பாவித்து இவற்றிற்கு விடை கூற வேண்டும்."

"சத்தியம் என்றால் என்ன? அஹிம்சை என்றால் என்ன? நல்லவர்கள் என்பவர்கள் யார்? புண்ணியம் என்றால் என்ன? விஷ்ணுவை எவ்வாறு வழிபட வேண்டும்?"

இவ் வினாக்களைக் கேட்ட பிருகு முனிவர் விடை கூற ஆரம்பித்தார்: "சத்தியம் என்பது ஒருவனுடைய சமய அடிப்படையில் சொல்லப்பட வேண்டியவை. அந்தச் சத்தியம் அந்தச் சமயக் கொள்கைகளை மறுப்பதாக இருக்கக் கூடாது. அஹிம்சை என்பது பிற உயிர்கள் எதற்கும் எவ்விதத் தீங்கையும் இழைக்கக் கூடாது என்பதாம். தீயவர்கள் என்பவர்கள் ஒருசிலரைப் பகைவர்கள் என்று கருதி அவர்களுக்குத் துன்பம் செய்வார்கள். இவர்கள் சமயத்திற்கு மாறுபட்டவர்களாய், அறிவீனர்களாய் இருப்பர். தீயவர்களுக்கு எதிரானவர்கள் நல்லவர்கள் என்று போற்றப்படுவர். அவர்கள் வேதங்களைக் கற்பதோடு அவர்கள் சமயத்தில் சொல்லப் பட்டவற்றைப் போற்றிப் பாதுகாப்பார்கள். இவர்கள் பிறருக்குத் தீங்கு செய்ய மாட்டார்கள். இந்த நல்லவர்கள் செய்யும் எல்லாக் காரியங்களும், புண்ணியங்களாக மாறும். விஷ்ணுவை வழிபடுவதற்கு இதுதான் குறிப்பிட்ட வழி என்று ஒன்றும் இல்லை. விஷ்ணுவை வழிபடுவதற்குச் சிறந்த வழி இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள எல்லா உயிர்களிலும், எல்லாப் பொருள்களிலும் விஷ்ணுவே நிறைந்துள்ளார் என்பதை அறிவதாகும். எல்லாப் பொருள்களையும், உயிர்களையும் விஷ்ணுவின் பல வடிவங்களாகவே கருத வேண்டும்."

பிருகு முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டு சென்ற பகீரதன் சில காலம் அந்தக் காட்டிலே தவம் செய்து விட்டுப் பிறகு இமய மலை சென்றான். அங்கே கங்கை புறப்படும்

தீர்த்தமாகிய நாதேஷ்வராவில் தவம் புரிய ஆரம்பித்தான். நாதேஷ்வராவில் தவத்தைத் தொடங்கிய பகீரதன், உணவு, தண்ணீர் முதலியவற்றைத் துறந்ததோடு, பிராணாயாமத்தின் மூலம் மூச்சையும் கட்டுப்படுத்த ஆரம்பித்தான். அவன் தவத்தின் ஆற்றலால் அவன் சுவாசமே நெருப்பாக வெளிவரத் துவங்கியது.

இப்படித் தவம் செய்பவன் இறுதியில் விஷ்ணுவிடம் வரம் பெற்றுத் தங்களையே தேவலோகத்தில் இருந்து துரத்தி விடுவான் என்று பயந்த தேவர்கள் வடகடல் கரைக்குச் சென்று விஷ்ணுவை வேண்டினர். தேவர்களின் பயத்தைப் போக்கிய விஷ்ணு, பகீரதன் முன் தோன்றி, "பகீரதா! உன் மூதாதை யர்களை நரகத்திலிருந்து விடுவிக்க கங்கையைக் கொண்டுவரத் தவம் புரிகிறாய். அதை நான் அறிவேன். இந்த நிலையில் ஒன்றை நீ அறிந்து கொள்ள வேண்டும். சிவனும், விஷ்ணு மாகிய நானும் வேறு வேறு அல்ல. நாங்கள் இருவரும் ஒருவரே. இதை நன்றாக மனத்தில் பதித்துக் கொண்டு இப்பொழுது சிவனை நோக்கித் தவம் செய்வாயாக!" என்று கூறிவிட்டு மறைந்தார்.

சிவனை நோக்கி பகீரதன் தவம் செய்யத் தொடங்கிய சிறிது காலத்தில் சிவன் அவன் முன் தோன்றினார். ஐந்து தலைகள், பத்து கைகள், எலும்பு மாலைகள், பாம்பு மாலைகள், யானைத் தோல் உடை, முடியில் பிறைச் சந்திரன் என்ற கோலத்துடன் சிவன் காட்சி தந்து, "பகீரதா! உன் தவத்திற்கு மகிழ்ந்தேன். நீ சகல சௌகரியங்களும் பெற்றுப் பல காலம் இவ்வுலகில் வாழ்வாயாக!" என்று கூறினார். பகீரதன், "ஐயனே! என் மூதாதையர்கள் நரகத்தில் இருந்து விடுபடத் தேவ ரூபத்தில் பாயும் கங்காதேவி இம்மண்ணிற்கு வரக் கருணை புரிய வேண்டும்" என்றான். சிவனும், "அப்படியே ஆகட்டும்!" என்று கூறி மறைந்தார். மகிழ்ச்சியடைந்த பகீரதன்

புறப்பட்டவுடன் கங்காதேவியும் ஒரு பெண் வடிவு கொண்டு அவன் பின்னேயே சென்றாள். தன் மூதாதையர்கள் எரிந்து சாம்பலான இடத்தை அடைந்தான். அந்தச் சாம்பல் மேல் கங்கை பொங்கிப் பாயவே சகரர்கள் நரகிலிருந்து விடுபட்டுச் சுவர்க்கம் சென்றார்கள்.

## விரதங்கள்

நாரத புராணம் பின்வரும் விரதங்கள் பற்றி விரிவாகக் கூறுகிறது.

### *ஏகாதசி விரதம்*

மாதத்தில் சுக்கிலபட்சத்தில் ஏகாதசி திதி அன்று அனுஷ்டிக்கப்படுவது. இரவு முழுவதும் கண் விழித்திருந்து, காலையில் சாளக்கிரமத்திற்குப் பால் அபிஷேகம் செய்ய வேண்டும். எள்ளை அக்னியில் போடுவதுடன், நல்ல ஆகாரம் தயார் செய்து விஷ்ணுவிற்கும், லக்ஷ்மிக்கும் நிவேதனம் செய்து விஷ்ணு பக்தர்களுக்கு விருந்து செய்ய வேண்டும். துவாதசி அன்றும் இதனையே செய்ய வேண்டும். பல யாகங்கள் செய்வதைக் காட்டிலும் இந்த விரதங்களை மேற்கொள்வதால் அதிகமான புண்ணியம் கிடைக்கும்.

### *பௌர்ணமி விரதம்*

பிராமணர் முதலிய நான்கு வர்ணத்தாரும், பெண்களும் கூட மேற்கொள்ளுகின்ற விரதமாகும். பௌர்ணமி அன்று செய்யப்படுவதால் இது பௌர்ணமி விரதம் என்று சொல்லப் படும். இந்தப் பௌர்ணமி விரதம் எல்லா மாதங்களிலும் கடைப்பிடிக்கப்படலாம். பன்னிரண்டு மாதங்களிலும் விரதம் இருந்து, கார்த்திகை மாதத்தில் இது முடிக்கப்படும் போது விஷ்ணுவிற்கும், லட்சுமிக்கும் பிரசாதங்கள் படைத்து வழிபடு வதால் இது "லஷ்மி நாராயண விரதம்" என்று சொல்லப்படும்.

### கொடியேற்று விழா விரதம்

கார்த்திகை மாதம் சுக்கிலபட்சம் ஏகாதசி அன்று ஒரு கொடியை ஒரு விஷ்ணு கோயிலின் கோபுரத்தின் மேலேயோ, வெளிக் கதவின் மேலேயோ ஏற்றி வைத்து விஷ்ணு பூஜை செய்ய வேண்டும். நூற்றி எட்டு கிண்ணங்களில் பாயசம், மஞ்சள், வாலரிசி, வாசனைப் பூக்கள் ஆகியவற்றை விஷ்ணு விற்குப் படைக்க வேண்டும். இந்த விரதம் நால்வகை வருணத்தாரும், பெண்களும் மேற்கொள்ளலாம். விஷ்ணு வுடன் சேர்த்துச் சூரியன், சந்திரன், கருடன் ஆகியவர்களுக்கும் பூசை செய்யலாம்.

### சுமதி – சத்யமதியின் கதை

சத்ய யுகத்தில் சுமதி என்ற மன்னன், சத்யமதி என்ற தன் மனைவியுடன் இந்த உலகின் ஏழு பிரிவுகளையும் ஆட்சி செய்து வந்தான். நேர்மை, சத்தியம், அன்பு, விருந்தோம்பல் ஆகிய நற்பண்புகளுக்கு இவர்கள் இருவரும் உதாரணமாக இருந்தனர். துவஜா ரோகண விரதத்தை (கொடியேற்று விழா விரதத்தை) இவர்கள் விடாமல் செய்தனர். அந்த விரதத்தின் போது சத்யமதி விஷ்ணு கோயிலில் நடனம் ஆடி வந்தாள்.

ஒருமுறை விபண்டக முனிவர் தன் சீடர்களோடு இவர்களைப் பார்க்க வந்தார். அரசன் செய்த உபசரிப்பில் பெருமகிழ்ச்சி அடைந்த முனிவர் "உன் உபசரிப்பில் மகிழ்ச்சி அடைந்தோம். உன்னிடம் வேண்டிப் பெற வேண்டியது எதுவும் இல்லை. என் மனத்தில் தோன்றிய இரண்டு வினாக்களுக்கு நீங்கள் விடை கூறினால் போதுமானது.

"நீங்கள் ஏன் கொடியேற்று விழா விரதத்தை விடாமல் செய்கிறீர்கள்? உன் மனைவி ஏன் விஷ்ணு கோயிலில் நாட்டியம் ஆடுகிறாள்?"

சுமதி, சத்யமதி ஆகிய இருவரும் ஜதீஸ்மராக்களாக அதாவது பழம் பிறப்பை அறியும் வல்லமை பெற்றவர்களாக இருந்தார்கள். அதன் பயனாக மன்னன் சுமதி, முனிவரிடம் தங்கள் பழம் பிறப்பு வரலாற்றைச் சொல்ல ஆரம்பித்தான். முற்பிறப்பில் சுமதி மாதுலி என்ற சூத்திரனாகப் பிறந்து எல்லாத் தீய பழக்கங்களுக்கும் உறைவிடமாக இருந்தான். திருட்டு முதலிய குற்றங்களைச் செய்ததால் எல்லோரும் அவனைக் கைவிட்டு விட்டனர். எனவே அவன் காட்டில் சென்று வாழ்ந்து வந்தான். அங்கே ஓர் அழகான குளமும், விஷ்ணு கோயிலும் இருக்கக் கண்டான். அந்த இடம் மிகவும் பிடித்துப் போனதால் அங்கேயே தங்கிவிட்டான். வேட்டையைத் தொழிலாகக் கொண்டு, ஓய்ந்த நேரங்களில் அந்தக் கோயிலைப் பழுதுபார்க்கத் துவங்கினான். கோயிலில் பராமரிப்பு வேலை நடைபெறுவதை அறிவிக்க, கோயிலின் வெளிவாசலில் ஒரு கொடியைக் கட்டினான். இம் முறையில் அவன் வாழ்க்கை நடைபெறும் பொழுது, எதிர்பாராத விதமாகக் கோகிலினி என்ற வேட்டுவப் பெண் அங்கே வந்து சேர்ந்தாள். வேடர் குலத்தவளாயினும் கணவனை இழந்ததால், எல்லாரும் அவளை ஒதுக்கி விட்டனர். இந்த நிலையில் வேடன் இருக்கும் இடம் வந்த அவள் அங்கேயே தங்கி விட்டாள். இருவரும் திருப்பணி செய்த நேரம் போக எஞ்சிய நேரத்தில் குடித்துவிட்டு ஆடினார்கள். விஷ்ணுவின் எதிரே கோகிலினி நாட்டியம் ஆடினாள்.

இம்முறையில் அவர்கள் வாழும் பொழுது அவர்கள் இருவருமே இறந்தனர். அவர்கள் இறந்தவுடன் யமபடர்கள் அவர்களை அழைத்துப் போக வந்தனர். ஆனால் விஷ்ணுவின் பணியாளர்கள் அங்கே வந்து, அவர்கள் விஷ்ணு பக்தர்கள் என்றும், அவன் துவஜா ரோகண விரதத்தைக் கடைப் பிடித்தவன் என்றும், விஷ்ணு கோயிலைப் பழுது பார்த்ததால்

அவர்கள் விஷ்ணுலோகம் செல்ல வேண்டியவர்கள் என்றும் கூறினர். இறுதியில் இருவரும் விஷ்ணுலோகம் சென்று எல்லையற்ற இன்பம் அனுபவித்த பிறகு, இப்பிறவியில் சுமதியாகவும், சத்யமதியாகவும் பிறந்தனர். இதுதான் எங்கள் கதை என்று சொல்லி முடித்தான்.

### பத்ரஷிலா

முன்னொரு காலத்தில் நர்மதை ஆற்றங்கரையில் காலவா என்றொரு முனிவர் வாழ்ந்து வந்தார். இவருடைய மகன் பத்ரஷிலா என்பவன் ஜதிஸ்மராவாக, அதாவது பழம்பிறப்பை அறியும் வல்லமை உடையவனாக இருந்தான். சிறு குழந்தையாக இருந்த பொழுது களிமண்ணில் விஷ்ணுவிற்குக் கோயில்கள் கட்டி, அதனை வணங்கி வந்தான். இதில் மகிழ்ச்சி அடைந்த காலவ முனிவர், "மகனே! நீ செய்யும் காரியங்களையும், மேற்கொள்ளும் விரதங்களையும் அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். இவ்வளவு இளம் வயதில் யாரிடமும் கேட்காமல் எப்படி இந்த விரதங்களை மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உனக்கு உண்டாயிற்று?" என்று கேட்டார். காலவ முனிவரைப் பொறுத்தவரை தம்முடைய மகனுக்கு ஜதீஸ்மரா (பழம் பிறப்பு நினைவு) ஆற்றல் உண்டு என்பது தெரியாது. எனவே தந்தையின் கேள்விக்கு விடை அளிக்கலானான்.

"தந்தையே! எனக்கு ஜதீஸ்மரா ஆற்றல் உண்டு. போன ஜன்மத்தில் யமனுடன் பேசிக் கொண்டு இருக்கும் பொழுது இதை அறியலானேன். அந்தப் பிறப்பில் தர்ம கீர்த்தி என்ற பெயருள்ள அரசனாக இருந்தேன். அப்பொழுது என் குருவாக வாய்த்தவர் தத்தாத்ரேய முனிவர் ஆவார். அவர் வழிகாட்டலில் ஆட்சியைத் தொடங்கிய நான், ஒன்பதினாயிரம் வருடங்கள் ஆட்சி செய்தேன். அதிகாரம், செல்வம் சேர்ந்ததால்,

கொஞ்சம் கொஞ்சமாக அறவழியை விட்டுவிட்டுத் தீய வழிகளில் செல்லலானேன். நாளாவட்டத்தில் வேதங்களை மறந்து அதில் சொல்லப்பட்ட வழிகளையும் மறந்து, வாழ்க்கை நடத்திப் பாவத்தைச் சேர்க்கலானேன். அந்நிலையில் என் புண்ணிய மூட்டை குறைந்து, பாவ மூட்டை வளர்ந்து கொண்டே வந்தது. ஓர் அரசனுக்கு அந்நாட்டு மக்கள் சம்பாதிக்கும் செல்வத்தில் ஆறில் ஒரு பங்கு வரியாகச் சேருகிறது அல்லவா? அதைப் போலவே என் நாட்டு மக்களும் தர்மத்தை மறந்து செய்த பாவங்களிலும் ஆறில் ஒரு பங்கு என்னை வந்து அடைவதாயிற்று. ஆகவே என்னுடைய பாவ மூட்டை விரைவில் மிகப் பெரிதாக வளர்ந்தது. இதனிடையில் ஒரு நாள் வேட்டைக்குப் போனேன். பல மிருகங்களைத் துரத்திச் சென்றதால் பசியும் தாகமும் அதிகமாயிற்று. உண்பதற்கோ ஒன்றுமில்லை. ரேலா நதிக்கரையில் ஓர் இடத்தில் பொழுது சாய்ந்து விட்டதால், அந்நதியில் குளித்துக் கரை ஏறும் பொழுது, பல யாத்ரீகர்கள் அங்கு வருவதைக் கண்டேன். அவர்கள் அனைவரும் குளித்துவிட்டு ஒன்றும் உண்ணாமல் விஷ்ணுவை வழிபடக் கண்டேன். என்னைப் பொறுத்தவரை பட்டினி இருக்க வேண்டும் என்று நினைக்கா விட்டாலும், உண்பதற்கு ஒன்றுமில்லாததால் அவர்களோடு சேர்ந்து நானும் விரதம் இருந்தேன். அன்று ஏகாதசி என்று எனக்குத் தெரியாது. மறுநாள் விடியற்காலை பசியால் இறந்து விட்டேன். யமனுடைய படர்கள் யமனுடைய சந்நிதானத்துக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். யமன் சித்ரகுப்தனிடம் என்னுடைய கணக்கைப் பார்க்குமாறு ஆணை இட்டார். சித்ரகுப்தன், "ஐயா! தர்மகீர்த்தி என்ற பெயரில் ஆட்சி செய்த இவன் மிகத் தீயவனாகப் பெரும் பாவ மூட்டையைச் சுமந்து கொண்டு வந்திருக்கிறான். ஆனால் நேற்று ஏகாதசி விரதம் இருக்கையில் இவன் இறந்து விட்டான்" என்று கூறினான்.

அதைக்கேட்ட யமதர்மன் என்னை அழைத்து வந்த யமபடர்களைக் கடுமையாக ஏசினான். "ஏகாதசி விரதம் இருப்பவர்களையும், விஷ்ணு பக்தர்களையும் இங்கு அழைத்து வராதீர்கள் என்று எத்தனை முறை உங்களுக்குக் கூறி இருக்கிறேன்" என்று கூறிவிட்டு, என்னை விஷ்ணுலோகம் அனுப்பினான். பல காலம் அங்கு தங்கி, பிறகு தங்கள் மகனாக இப்பொழுது பிறந்துள்ளேன்.

"ஏகாதசி என்று தெரியாமல் அதனுடைய சிறப்புப் புரியாமல் பட்டினி கிடந்ததற்கே விஷ்ணுலோகத்தில் பல காலம் இருக்கக் கூடுமேயானால், ஏகாதசி என்று தெரிந்து விரதம் இருந்தால், எவ்வளவு சிறப்பு என்று கருதி இப்பொழுது இதனைச் செய்து வருகிறேன்" என்று பத்ரஷிலா கூறவும், காலவ முனிவர் பெருமகிழ்ச்சி அடைந்தார்.

## ஆனந்த மார்க்கம்

இந்த உலகம் துன்பமயமானது. இந்த உலக மாயையிலிருந்து எப்படி ஒருவன் விடுபடுவது, எப்படி வீடுபேற்றை அடைவது என்ற வினாக்களைச் சிந்திப்போர்க்குச் சுதா முனிவர் விடை தருகிறார்.

விஷ்ணுவே வீடுபேற்றைத் தருகிறார். விஷ்ணுவின் ஆணைக்குட்பட்டே படைத்தல் தொழிலை பிரம்மனும், அழித்தல் தொழிலைச் சிவனும் செய்கின்றனர். விஷ்ணுவிற்கு வடிவம் கிடையாது. அறத்தின் அடிப்படை அவரே ஆவார். எல்லா பூதங்களும் அவரிடம் இருந்தே தோன்றுகின்றன. அவரை வழிபடும் மனிதர்கள் தேவர்களாக மாறுகின்றனர். உண்மையான ஞானம் என்பது விஷ்ணுவே அனைத்தும் என்று அறிகின்ற ஞானம் ஆகும். இந்த வகையில் ஞானத்தை வளர்த்துக் கொள்வதன் மூலம் உண்மையான ஆனந்தத்தைப்

பெறலாம். ஞானம் என்பது நம்பிக்கை என்னும் பாறையின் மேல் எழுந்தாலொழிய நிலை பெறாது. நற்செயல்கள் விஷ்ணுவிடம் நம்பிக்கை கொள்ளச் செய்கின்றன. உண்மையில் ஞானத்தை அடைவதற்குச் செயல்களே (கர்மமே) அடிப்படையாகும். நேரடியாக ஞான யோகத்தில் ஈடுபடுபவர்கள் மிக மிகச் சிலரே. ஞானத்தின் முதிர்ந்த நிலையை அடையும்பொழுது எல்லாப் பொருளுடனும் விஷ்ணுவே நிறைந்திருப்பதையும், ஒருயிருக்கும், மற்றோர் உயிருக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை என்பதை அறிய முடியும். எல்லாம் விஷ்ணு மயம் என்பதை அறிகின்ற நிலையே "யோகம்" என்று சொல்லப்படும்.

இந்த உயர்ந்த ஞானத்தை அடைவதைக் குறிக்கோளாகக் கொண்ட ஒருவனையே "முமுக்ஷு" என்று கூறுவர். முமுக்ஷுக் களைத் தெரிந்து கொள்வதற்குச் சில அடையாளங்கள் உண்டு. முமுக்ஷுயிடம் கோபம், பொறாமை, காழ்ப்புணர்ச்சி, வெறுப்புணர்ச்சி என்பவை அறவே இராது. அவன் பொறி புலன்களுக்குக் கட்டுப்பட்டவன் அல்லன். எப்பொழுதும் பிறர் மேல் இரக்கம் கொள்பவன் ஆவான். அவன் மனம் எப்பொழுதும் விஷ்ணுவிடமே லயித்திருக்கும்.

யோகத்தை வேறு ஒரு வகையாகவும் விளக்கலாம். பரமாத்மன் என்று சொல்லப்படுகின்ற ஒன்றிற்கும், வெவ்வேறு உடம்புகளில், வெவ்வேறு குறிகளுடனும் அடையாளங் களுடனும், அந்த உடலுக்குரிய அகங்காரங்களுடனும் இருக்கும் ஜீவாத்மாவுடன் இருக்கும் ஒற்றுமையைக் காண முற்படுவதே யோகமாகும். ஜீவாத்மா உடம்பு என்னும் பருப்பொருளின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கி நிற்கிறது. இந்த உடம்பு கட்டுப்பாடு என்பது, ஒரு மாயை என்று அறிவதே அந்த உடலுக்குள் இருக்கும் ஜீவாத்மாவுக்கு மிக முக்கியமான செயலாகும். இந்த உடலுக்குள் இருக்கும் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றுதான்

என்பதைத் தெளிவாக அறிந்து ஐக்கியப்படுவதே பிரம்ம ஞானம் எனப்படும்.

### யோகம்

யோக மார்க்கம் என்பது எட்டுப் படிகளைக் கொண்டது. முதலாவது **இயமம்** எனப்படும். அஹிம்சை, உண்மை, அன்பு, பிற உயிர்களிடத்தே இரக்கம், பொறிபுலன் அடக்கம் ஆகியவற்றை மேற்கொண்டு, பொறாமை, காழ்ப்புணர்ச்சி ஆகியவற்றை ஒதுக்குவதே இயமம் என்ற படி. இரண்டாவது படி **நியமம்**. மனத்தூய்மை, நாம ஜெபம், தியானம், ஞான நூல்களைக் கற்றல் ஆகியவை நியமம் என்ற இரண்டாவது படி. இயமம், நியமம் ஆகிய இரண்டும் உடலையும் மனத்தையும் தூய்மைப்படுத்தி, தியானத்திற்கு வழி வகுக்கிறது. தியானத்திற்கு உரிய முறையில் உடம்பை இருக்கச் செய்ய வேண்டும். அதுவே **ஆசனம்** எனப்படும் மூன்றாவது படி. மூன்றாவது படியில், யோகம் பயில்பவர்களுக்கு முப்பது வகையான ஆசனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. நான்காவது படி **பிராணாயாமம்** எனப்படும் மூச்சுக் காற்றை கட்டுப்படுத்துவது; தியானத்திற்குப் பெரிதும் உதவுகிறது. **பிரத்யாகாரம்** என்பது ஐந்தாவது படி. பொறிபுலன்களால் ஏற்படும் இன்ப அனுபவத்திலிருந்து மனத்தை மீட்டுக் கொண்டுவரும் படி இந்த ஐந்தாவது படியாகும். **தாரணை** என்பது ஆறாவது படியாகும். எங்கும் நிறைந்துள்ள விஷ்ணுவோடு ஜீவாத்மனை ஒருமுகப்படுத்தி அந்த ஒன்றுபட்ட விஷ்ணுவின் வடிவை தியானிப்பதே தாரணை எனப்படும். தாமரை மலரில் அமர்ந்திருக்கும் விஷ்ணுவின் வடிவை இடைவிடாமல் சிந்தனையில் இருத்து வதற்கு இது உதவிபுரியும். **தியானம்** என்பது ஏழாவது படியாகும். இந்த வடிவத்தை இடையீடு இல்லாமல் சிந்தனையில் இருத்துவதே தியானம் எனப்படும். தியானிப்பு,

தியானிக்கப்படும் பொருள். தியானம் என்ற மூன்றும் இதில் அடங்கி இருக்கக் காணலாம். **சமாதி** என்பது எட்டாவது படி. தியானிப்பவன், தியானிக்கப்படும் பொருள், தியானம் என்ற மூன்றும் மறைந்துவிடும் நிலையே சமாதி எனப்படும். காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்றும் இந்த மூன்றைக் கூறலாம். காண்பானும் காட்சியும், காணப்படும் பொருள் ஒன்றி ஐக்கியமாவதே சமாதி எனப்படும். இந்நிலையில் பொறிபுலன்களால் ஏற்படும் அனுபவங்கள் முற்றிலும் மறைந்து, பிரம்மம் ஒன்று மட்டுமே நிற்கும். அதுவே சமாதி நிலையாகும்.

**தேவமாலி**

ரைவத நாட்டில் தேவமாலி என்றொரு பிராமணன் வாழ்ந்து வந்தான். ஏகப்பட்ட உறவினர்கள், பிள்ளைகள், மனைவி என்பவர்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அவனுக்கு இருந்தது. ஆகவே அவன் வாணிபம் செய்யப் புறப்பட்டான். ஒரு பிராமணன் எந்தெந்தப் பொருட்களைக் கையால் கூடத் தொடக் கூடாதோ அந்தப் பொருட்களையே அவன் வியாபாரம் செய்தான். அளவற்ற செல்வத்தைக் குவித்தான். அந்த முதிர்ந்த வயதில் அவனுக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். யக்ஞமாலி, சுமாலி என்பது அவர்கள் பெயர். அவர்களுக்கும் இந்தத் தீண்டத் தகாத பொருட்களை எப்படி விற்றுப் பணம் சம்பாதிப்பது என்று சொல்லிக் கொடுத்தான்.

ஒருநாள் தன்னிடம் இருந்த பொன்னை எல்லாம் ஒன்றாகக் கொட்டி எண்ணத் தொடங்கினான். கோடிக் கணக்கான தங்க நாணயங்கள் தன்னிடம் இருப்பதை அறிந்தான். இவ்வளவு சேர்த்தும் மேலும் மேலும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை அவனை விட்டுப் போகவில்லை.

எனவே அவன் சிந்திக்கலானான். இவ்வளவு பொருளைச் சேர்த்தும் தன்னுடைய ஆசை அடங்கவில்லை என்பதை அறிந்து கொண்ட அவன் இவ்வாறு பொருளைச் சேர்ப்பதால் தன் வாழ்வில் அமைதியைக் காணவோ இறை நாட்டம் கொள்ளவோ முடியாது என்பதை அறிந்து கொண்ட அவன் திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தான்.

தன்னிடம் உள்ள பொருளை எல்லாம் நான்காகப் பங்கிட்டான். அதில் இரண்டு பங்கு எடுத்து இரண்டு பிள்ளைகளுக்குக் கொடுத்து விட்டு, மீதமிருந்த இரண்டு பங்கைத் தான் வைத்துக் கொண்டான். தான் வைத்துக் கொண்ட பொருளிலிருந்து விஷ்ணுவிற்குக் கோயில் கட்டுதல், குளம் வெட்டுதல், மரம் நடுதல், சாலைகள் போடுதல் என்பன போன்ற நற்காரியங்களில் ஈடுபட்டுத் தன் செல்வத்தைச் செலவழித்தான். ஏழைகளுக்கும் வேண்டுமான அளவு கொடுத்தான். தன் செல்வம் முழுவதும் தீர்ந்த பிறகு கங்கைக் கரையிலுள்ள வத்திரிகாசிரமத்திற்குச் சென்றான். அங்குள்ள முனிவர்கள் பலரோடு சேர்ந்து யோகம் பயிலத் தொடங்கினான். அங்குள்ள ஜனந்தி என்ற முனிவர் யோக மார்க்கத்தின் நுணுக்கங்களை அவனுக்குக் கற்றுத் தந்தார். இந்த யோகப் பயிற்சியின் மூலம் தேவமாலி உலக மாயை யிலிருந்து விடுபட முடிந்தது.

### தேவமாலியின் பிள்ளைகள்

தேவமாலியின் இரு பிள்ளைகளுக்கும் தன் சொத்தில் சரிபாதியை இரண்டாகப் பிரித்துத் தந்திருந்தான் அல்லவா? மூத்தவனாகிய யக்ஞமாலி தன் ஒரு பங்கை வைத்துக் கொண்டு நல்ல முறையில் தான தருமம் செய்து புண்ணியத்தைத் தேடிக் கொண்டான். இளையவனாகிய சுமாலி பெருஞ் சொத்து கிடைத்தவுடன் தீயவர்களுடன் கூட்டுச் சேர்ந்து தகாத

வழிகளில் தன் சொத்தைக் கரைத்தான். பணம் கையை விட்டுப் போனதும் சுற்றி இருந்த உறவினர்களும் நண்பர்களும் அவனைக் கைவிட்டுப் போயினர். இந்த நிலையில் யக்ஞமாலி அவனை அழைத்து, அவன் தகாத செயல்களை எடுத்துக் கூறி, அவன் நேர்வழிக்கு வரவேண்டும் என்று அறவுரை கூறி, தன்னிடம் மிச்சமிருந்த சொத்தில் ஒரு பகுதியைக் கொடுத்து, 'இதை வைத்துப் பிழைத்துக் கொள்' என்று தம்பிக்குத் தந்தான். ஆனால் சுமாலி பழைய வாழ்க்கை முறையை விடாமல் இருந்ததால் இந்தச் சொத்தும் அழிந்தது. இப்பொழுது தமையனைக் கொன்றுவிட்டால் அவனது பெருஞ்சொத்து தனக்கே வரும் என்று நினைத்த சுமாலி, கத்தியை எடுத்துக் கொண்டு அண்ணனைக் கொல்ல நினைத்தான். அந்நிலையில் காவலர்கள் அவனைப் பிடித்துச் சென்று அரசனிடம் ஒப்படைக்க அரசன் அவனை நாடு கடத்தி விட்டான். காட்டில் வாழ்ந்து வந்தான் தேவமாலி.

நாட்டில் உள்ள யக்ஞமாலி நல்ல அறவழிகளில் தன் சொத்துக்களைச் செலவழித்து தானும் ஏழையானான். ஆனால் அவன் அதைப் பற்றிக் கவலைப்படாமல் அனைத்தும் போய்விட்ட நிலையில் ஒரு விஷ்ணு கோயிலுக்குச் சென்று அங்கேயே தங்கி தெய்வப் பணி செய்யலானான். விதியின் விளையாட்டால் சகோதரர்கள் இருவரும் ஒரே நாளில் இறந்தனர். விஷ்ணுவின் பணியாளர்கள் யக்ஞமாலியைப் பொன் விமானத்தில் ஏற்றினர். கீழே பார்த்த யக்ஞமாலிக்கு ஓர் ஆச்சரியம். கீழே அவனுடைய தம்பி சுமாலியை யமபடர்கள் கயிற்றால் கட்டி தடி, கம்பால் அடித்து யம லோகத்திற்கு இழுத்துச் சென்று கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்து மனம் நொந்து, "என்னுடைய தம்பியை விஷ்ணு லோகத்திற்கு அழைத்துக் கொள்ள ஏதாவது வழி உண்டா?" என்று கேட்டான். அவர்கள், "நீ செய்திருக்கும் புண்ணியத்தில்

ஒரு பகுதியை அவனுக்குத் தந்தால் அவனும் விஷ்ணு லோகத்திற்கு வர முடியும்” என்று கூறினார்கள். இதைக் கேட்ட யக்ஞமாலி மிக்க சந்தோஷத்துடன் தன் புண்ணியத்தில் ஒரு பகுதியைத் தம்பிக்குத் தந்தான். அண்ணனுடைய புண்ணியம் தனக்குக் கொடுக்கப்பட்டதால் சுமாலியும் விஷ்ணு லோகத்திற்கு வந்து அந்தப் புண்ணியம் தீரும் வரை இருந்து மறுபடியும் பூமியில் போய்ப் பிறந்து விட்டான்.

**கணிக்கா**

விஷ்ணுவைக் கும்பிடாத வீடு சுடுகாடு போன்றது. விஷ்ணுவை வணங்காதவர்கள் உயிரோடு இருந்தும் நடமாடும் பிணமே ஆவார்கள். மக்களாகப் பிறந்தும் விஷ்ணுவை வணங்காதவர்கள் அரக்கர்களே ஆவார்கள். விஷ்ணு பக்தி தானாக வருவதில்லை. அந்த பக்தி செய்வதற்குக் கூடச் சிறிது புண்ணியம் செய்திருக்க வேண்டும். முழு மனத்தோடு இல்லாமல் ஒப்புக்கு செய்யப்படும் விஷ்ணு பக்தி கூடச் சிறிதளவு புண்ணியத்தைத் தரும். விஷ்ணு பக்தியினால் கிடைக்கும் சிறிதளவு புண்ணியம் கூட ஒருவன் செய்துள்ள பெரிய பாவத்தைப் போக்கும்.

சத்திய யுகத்தில் கணிக்கா என்னும் ஒரு வேடன் இருந்தான். பிறருக்குத் தீமை செய்வது, பிறர் பொருளைக் கொள்ளையடிப்பது, பிறரைக் கொல்வது போன்ற தீய செயல்களைச் செய்வதும், கோயில் சொத்தைத் திருடுவதும் அவனது வழக்கமாக இருந்தது.

ஒருமுறை சௌபிரா என்ற நகருக்குள் வேடன் வந்தான். அங்குள்ள விஷ்ணு கோயிலுக்குள் அவன் நுழைந்தான். தங்கத்தால் செய்யப்பட்ட பாத்திரங்கள் விஷ்ணுவின் எதிரே இருப்பதைக் கண்ட வேடன், அச்சொத்தைக் கொள்ளையடிக்க வேண்டும் என்று முடிவு செய்தான். இரவில் கோயிலைச்

சுற்றி வரும்போது யுதங்கர் என்ற முனிவர் அங்கு படுத்திருப்பதைப் பார்த்து அவரைக் காவல்காரர் என்று எண்ணி அவரைக் கொல்வதற்காக அவரது கழுத்தில் கத்தியை வைத்தான். கண்விழித்த யுதங்கர், "அப்பனே! என்னை ஏன் கொல்லப் பார்க்கிறாய்? நான் உனக்கு என்ன தீங்கு செய்தேன்? இவ்வளவு பாவம் செய்கிறாயே. உன் பாவத்தை யார் பங்கு போட்டுக்கொள்ளப் போகிறார்கள்? நீ கொள்ளை அடித்த சொத்தைப் பங்கிட்டுக் கொள்ளும் உன் உறவினர்கள் உன் பாவத்தைப் பங்கிட்டுக் கொள்ள மாட்டார்கள்" என்று கூறியவுடன் வேடன் அதிர்ச்சி அடைந்தான்.

உடனே முனிவரைப் பார்த்து, "முனிவரே! தாங்கள் சொல்லிய பிறகுதான் எவ்வளவு பாவங்களை நான் செய்திருக்கிறேன் என்ற பயம் உண்டாகிறது. முன் ஜென்மத்தில் செய்த பாவம்தான் இப்பொழுது வேடனாகப் பிறந்திருக் கிறேன். இந்த ஜென்மத்திலும் நான் செய்தது கணக்கிலடங்கா. இந்தப் பாவங்களைப் போக்கிக் கொள்ள நான் என்ன செய்ய வேண்டும்? யாரைச் சென்று வழிபட வேண்டும்? எவ்வாறு செய்ய வேண்டும்? எனக்கு விடுதலையே கிடைக்காதா?" என்று பேசிக்கொண்டிருக்கும்போதே எல்லையற்ற துயரத்தாலும், கழிவிரக்கத்தாலும் தாக்கப்பட்ட வேடன் அப்படியே இறந்து விட்டான். இறந்தவன்மேல் அதிக இரக்கம் கொண்ட முனிவர், விஷ்ணுவின் திருவடிகளுக்கு அபிஷேகம் செய்த நீர் கையில் இருந்ததால் அந்தப் புண்ணிய நீரை இறந்தவன் உடல்மேல் தெளித்தார். அப்புண்ணிய நீர் மேலே பட்டதால் வேடனுடைய ஆன்மா விஷ்ணுலோகத்தை நோக்கிச் சென்றுவிட்டது.

இங்கு நடைபெற்ற அதிசயத்தைக் கண்டு வியப்பால் வாயடைத்துப் போன யுதங்கமுனிவர் முன் விஷ்ணு

தோன்றினார். விரைவில் எல்லாவற்றிலிருந்தும் விடுதலை பெற்று மேலே செல்லக்கூடிய வரத்தை யுதங்கருக்கு அளித்தார்.

**யக்ஞத்துவஜா**

யக்ஞத்துவஜா என்ற அரசன், தான் வாழ்ந்த காலத்தில் பல இடங்களில் விஷ்ணு கோயில் கட்டினான். ரேவா நதிக் கரையிலும் ஒரு கோயில் கட்டினான். அவன் கட்டிய எல்லாக் கோயில்களிலும், கோயிலைச் சுத்தம் செய்யும் பணியும், இரவில் விளக்கேற்றும் பணியும் ஒழுங்காக நடைபெற வேண்டும் என்பதற்காகப் பெருமுயற்சி செய்தான். தன்னுடைய குருவாக இருந்த விதஹோத்ரா என்பவன், "அரசே! விஷ்ணு கைங்கர்யம் என்பதைப் பல வழிகளில் செய்யலாம். அவற்றை எல்லாம் விட்டுவிட்டுக் கோயிலைத் தூய்மை செய்தல், விளக்கேற்றுதல் ஆகிய இரு காரியங்களுக்காக மட்டும் இவ்வளவு கவனம் செலுத்த வேண்டுமா? அது ஏன் என்பது எனக்குப் புரியவில்லை?" என்று கேட்டான். இதைக் கேட்ட யக்ஞத்துவஜா அந்த குருவை நோக்கிச் சொல்ல ஆரம்பித்தான்.

"குருவே! எனக்கு ஜதீஸ்மரா என்ற பழம்பிறப்பை உணரும் ஆற்றல் உண்டு. அதனால்தான் இவ்வாறு செய்கிறேன். சத்திய யுகத்தில் ரைவதா என்ற ஒரு பிராமணன் இருந்தான். எத்தனை குற்றங்கள் புரிய முடியுமோ அத்தனையும் புரிந்தான். எந்தெந்தப் பொருள்களை பிராமணன் தொடக் கூடாதோ அவற்றையெல்லாம் வியாபாரப் பொருளாக்கி விற்றான். அவன் மனைவி பந்துமதி என்பவளும் பிராமணர்களுக்குரிய வாழ்க்கையை மேற்கொள்ளாமல், தன் கணவனைப் போலவே தவறான வழிகளில் காலத்தை ஓட்டினாள். அந்த பிராமணனுடைய வாழ்க்கை முறையைப்

பொறுக்காத மற்ற பிராமணர்களும் ஊர்க்காரர்களும் அவனை ஊரை விட்டே விரட்டினர். அந்த பிராமணன் எல்லாவற்றையும் இழந்து உண்பதற்கு ஒன்றுமில்லாமல் நர்மதை நதிக்கரையில் இறந்து விட்டான். அவனுக்கும் அவன் மனைவிக்கும் தண்டகேது என்றொரு பிள்ளை இருந்தான். அவனும் பெற்றோர்கள் சென்ற வழிகளிலேயே சென்று பெரும் பாவத்தைச் சேர்த்துக் கொண்டான். ஒரு நாள் இரவு ஓய்வெடுப்பதற்காக ஒரு விஷ்ணு கோயிலுக்குச் சென்றான். தான் படுப்பதற்கு ஓர் இடம் தேவைப்பட்டதால் தன்னுடைய உடையைக் கொண்டு கோயிலைச் சுத்தம் செய்தான். இரவில் வெளிச்சம் தெரிய வேண்டும் என்பதற்காக விஷ்ணுவின் எதிரே இருந்த விளக்கைத் தூண்டி விட்டான். இந்த ஏற்பாடு களை அவன் செய்து கொண்டிருக்கும் போது, அந்த ஊர்க் காவலர்கள் அவனைத் திருடன் என்று கருதிக் கொன்று விட்டார்கள். உடனே விஷ்ணுலோகத்திலிருந்து விமானம் வந்து தண்டகேதுவை ஏற்றிச் சென்றது. விஷ்ணுலோகத்தில் சென்று இன்பம் அனுபவித்த தண்டகேது மறுபடியும் பூலோகத்தில் ஓர் அரசனாகப் பிறந்தான். பழம் பிறப்பு நினைப்புடனேயே அவன் பிறந்தான். அவன் வேறு யாருமல்ல; நான்தான்.”

கோயிலைத் துப்புறவு செய்ய வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல், தான் படுத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகச் சுத்தம் செய்தான். விளக்கைத் தூண்ட வேண்டும் என்றில்லாமல் தனக்கு வெளிச்சம் வேண்டும் என்பதற்காகத் தூண்டி விட்டான். அனிச்சையான இந்த இரண்டு செயல் களுக்காக அவன் விஷ்ணுலோகம் சென்று சில காலம் இன்பம் அனுபவித்தான் என்றால், விருப்பத்தோடு இந்தத் திருப்பணி களைச் செய்யும் நான் எவ்வளவு புண்ணியத்தைச் சேர்ப்பேன் என்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா? விதஹோத்ரா என்ற

அந்த குரு இதைக் கேட்டு வியப்படைந்து, தானும் பெரிய விஷ்ணு பக்தனாகி விட்டான்.

இந்த உலகத்தில் பிறந்தவர்கள் அடையும் பெருந் துன்பங்களில் இருந்து விடுதலை பெற வேண்டுமானால், விஷ்ணு பக்தி ஒன்றுதான் அதனைச் செய்யும். நேரடியாக விஷ்ணுவுக்குத் தொண்டு செய்வதைப் போல விஷ்ணு பக்தர்களுக்குத் தொண்டு செய்வதும் பெரும் புண்ணியத்தைத் தரும். விஷ்ணுவையும் இலட்சுமியையும் வழிபடுபவர்கள், விஷ்ணு பக்தர்களை வழிபடுபவர்கள் இவர்களுடைய வீடுகளில் இலட்சுமி நிரந்தரமாக இருப்பாள். துளசிச் செடி வளர்ப்பதும், இத்தகைய பெரும் புண்ணியத்தைத் தரும். சாளக்கிரமம் வைத்து வழிபடுபவர்கள் வீட்டினுள் நிரந்தரமான செல்வம் கொழிக்கும்.

### முடிவுரை

நாரதர் உபதேசித்த இந்தப் புராணத்தை வேதவியாசரின் சீடரும், லோமஹர்ஷனரின் மகனுமாகிய சுதா முனிவர் இப்படிச் சொல்லி முடித்தார். மேலும் அவர், இப்புராணத்தின் ஒரு பாடலைப் படிப்பவர் சகல பாவங்களில் இருந்தும் விடுபடுவர் என்றும்; ஓர் அத்தியாயத்தைப் படிப்பவர் பல யாகங்களைச் செய்த புண்ணியத்தை அடைவர் என்றும்; நாரத புராணத்தை வீட்டில் வைத்திருந்தால் அவ்வீட்டில் பேய், பிசாசுகள் அண்டாது என்றும், அவ்வீட்டில் திருட்டு நடைபெறாது என்றும் சொல்லி முடித்தார்.

□ □ □

# 7. மார்க்கண்டேய புராணம்

## இப்புராணம் பற்றி...

*மார்க்கண்டேய புராணம். பதினெண் புராண வரிசையில் ஏழாவதாக உள்ளது. அது 9,000 பாடல் களைக் கொண்டது என்று சொல்லப்பட்டிருப்பினும், இன்று கிடைப்பது 6,900 பாடல்களே. மிகப் பழைய புராணங்களுள் இதுவும் ஒன்று. காரணம், அஸ்வினியை முதலாவதாக வைத்து எண்ணாமல், கிருத்திகையை ஒன்று என்று வைத்து எண்ணுகின்ற பழங்காலத்தைச் சேர்ந்தது. பல முக்கியமான பகுதிகளைக் கொண்டது இப்புராணம். இன்று பிரபலமாகச் செய்யப்படுகின்ற சண்டி ஹோமத்திற்கு அடிப்படையாக உள்ள துர்க்கா சப்தசதி என்ற பெயருள்ள துர்க்கையைப் போற்றும் 700 பாடல்கள் 81ஆம் அதிகாரத்தில் இருந்து 93ஆம் அதிகாரம் வரை உள்ளன. துர்க்கா சப்தசதி மிகவும் சக்தி வாய்ந்த ஓர் அறிவுரையைத் தருகின்றது. இந்த மாபெரும் சக்தியைப் பணிவு, அன்பு, வணக்கம் இவற்றோடு கூடிய மனத்துடன் வழிபட்டால், எத்தகைய துன்பத்தையும் எதிர்ப்பையும் வெல்லும் சக்தியைத் தருகின்றது. அஞ்ஞானம், ஆணவம் முதலியவற்றால் ஆட்கொள்ளப்பட்டவர்கள் அழிக்கப்படுகிறார்கள்.*

*கருணையே வடிவான அந்த மாபெரும் சக்தி நல்லோரைக் காக்கத் தயாராக இருக்கின்றது. 'யாதேவி! சர்வபூதேஷு...' என்று தொடங்கும் பாடலில், "எல்லா மனிதருடைய இதயக் கமலங்களில் தங்கி இருப்பவளான அந்த மகாசக்தியை நான் வணங்கு கிறேன், வணங்குகிறேன், வணங்குகிறேன்" என்ற ஒரு நம்பிக்கையோடு கூடிய பெரும் சக்தியை நமக்கு அளிக்கின்றது. சப்தசதி.*

*மனிதனிடத்தில் பேராற்றல் உள்ளே மறைந்து நிற்கின்றது. உலக நன்மைக்காக ஒருவன் அதனைப் பயன்படுத்த விரும்பினால் அது வெளிவந்து தொழிற் படும். ஒருவேளை அந்த முயற்சி பயன் தரவில்லை யானால், பெண்சக்தி அதனை வெளிப்படுத்தி அந்தப் பயனைப் பெறுமாறு செய்கிறது. இந்தச் செய்தியை ஓர் உருவகமாகத் தருவதுதான் துர்க்கா சப்தசதி. ஆணுக்குப் பெண் எவ்விதத்திலும் குறைந்தவள் அல்லள் என்பதையும், மிக முக்கியமான நேரத்தில் ஆண் சக்தி தொழிற்பட முடியாமல் திகைக்கும் பொழுது, பெண்சக்தி போரில்கூட வெளிப்பட்டு ஆண் சக்திக்கு உதவி புரியும் என்ற மாபெரும் தத்துவத்தின் உருவகக் கதையே துர்க்கா சப்தசதி ஆகும்.*

*துர்க்கையைப் பற்றி உள்ளது என்பதால் சாக்தர்கள் மட்டும் இதனைப் பாராயணம் செய் கிறார்கள் என்று சொல்லமுடியாது. சைவர்கள், வைணவர்கள்கூட துர்க்கா சப்தசதியைப் பாராயண மாகச் செய்வது, ஹோமமாகச் செய்வது என்ற பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். தசரா பண்டிகைக்கு முன்னர் 9 நாட்கள் துர்க்கையை வணங்கும் பழக்கம் இருந்து வந்தது. இப்புராணம் 137 அதிகாரங்களை உடையது.*

## ஜெய்மினியும் மார்க்கண்டேயனும்

மிகப் பெரிய முனிவராகிய ஜெய்மினி ஒருமுறை மார்க்கண்டேயரைப் பார்க்க வந்தார். வந்தவர், "முனிவரே! எனக்கு அடிப்படையில் சில சந்தேகங்கள் உள்ளன. அவற்றைத் தெளிவுபடுத்திக் கொள்ள விடை கூறக் கூடியவர் தாங்கள் ஒருவரே. விஷ்ணு எங்கும் நிறைந்தவர். வடிவமும் உருவமும் அற்றவர். அப்படி இருக்க, அவர் ஏன் பூலோகத்தில் மனிதனாக கிருஷ்ணர் என்ற பெயருடன் பிறக்க வேண்டும்? பாண்டவர்கள் ஐவரையும் திரௌபதி ஏன் மணக்க வேண்டும்? அவருடைய பிள்ளைகளாகிய இளம் பஞ்ச பாண்டவர்கள் ஐவரும் ஒரே நேரத்தில் ஏன் கொல்லப்படவேண்டும்? இவைகளுக்கு விடைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்" என்றார். அதற்கு விடையாக மார்க்கண்டேயர் கூறியதாவது: "முனிவரே! பிரார்த்தனை செய்யவே எனக்கு நேரம் போதவில்லை. உம்முடைய கேள்வி களுக்கு விடை அளிக்க எனக்கு அவகாசம் கிடையாது. இவ்வினாக்களுக்கு விடை கூறக் கூடியவர்கள் யார் என்று மட்டும் கூறுகிறேன். அவர்களிடம் சென்று உங்கள் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். விந்தியமலையில் நான்கு பறவைகள் வாழ்கின்றன. அவை பிங்கக்ஷா, விபோதா, சுபுத்ரா, சுமகா என்ற பெயர்களால் அழைக்கப் படுகின்றன. அவை துரோணரின் பிள்ளைகள். அங்கே செல்லலாம்." இப்படிக் கூறியவுடன், ஜெய்மினி இடை மறித்து, "முனிவரே! பறவைகள் வேதம், சாஸ்திரம் இவற்றை நன்கு அறிந்துள்ளன என்கிறீர்கள். பறவைகள் எப்படி இவற்றை அறிய முடியும்? பறவைகள் எப்படிப் பேச முடியும்? அவற்றின் தந்தை என்று சொல்லப்படும் துரோணர் யார்?" என்று கேட்டார். மார்க்கண்டேயர் கூறிய விடை வருமாறு:

### பறவைகள்

ஒருமுறை நாரதர் நந்தன கானகம் என்ற பூந்தோட்டத்திற்குச் சென்றார். அங்கே பல அப்ஸரஸ்கள் நாட்டியம் ஆட இந்திரன் அதனை ரசித்துக் கொண்டிருந்தான். நாரதரைக் கண்டவுடன் அவர்கள் எழுந்து மரியாதை செய்தனர். அப்பொழுது இந்திரன் "இவர்கள் அனைவரும் மிகச் சிறந்த நாட்டியக் கலைஞர்கள். யாருடைய நாட்டியத்தைப் பார்க்க விரும்புகிறீர்கள்?" என்று கேட்டான். நாரதர், "நான் வேண்டுவது மிகச் சிறந்த அழகும், நாட்டியக் கலையில் வன்மையும் உடைய ஒரு அப்ஸரஸைத் தேடுகிறேன். உங்களில் யார் இரண்டிலும் சிறந்தவர்கள்?" என்று கேட்க, அவர்கள் அனைவரும் தாம் தாம் என்று வாதிட்டுக் கொண்டனர். இதைப் பார்த்த நாரதர் அவர்களைப் பார்த்து, 'நல்லது, உங்களுக்குள் முடிவு செய்ய முடியாத பொழுது நான் சொல்லும் காரியத்தை யார் நிறைவேற்றுகிறீர்களோ, அவர்கள் தான் இரண்டிலும் சிறந்தவர்கள் என்ற முடிவிற்கு வரலாம்' என்றார். அவர்கள் அனைவரும் ஒப்புக் கொள்ளவே நாரதர் பேசலானார். "இமயமலையில் துர்வாசர் தவம் செய்து கொண்டிருக்கிறார். உங்களில் யார் சென்று அவருடைய தவத்தைக் கலைக்க முடியும்" என்றார். துர்வாசர் பெயரைக் கேட்டவுடன் எல்லாரும் பின்வாங்கி விட்டனர். வபு என்ற அப்ஸரஸ் மட்டும் துணிந்து முன்வந்து, "நீங்கள் சொன்ன காரியத்தை நான் செய்கிறேன்" என்று சொன்னாள். அனைவரும் ஒப்புக் கொள்ளவே வபு இமயமலைக்குச் சென்று துர்வாசர் தவம் செய்யும் இடத்திற்கு நேரே செல்லாமல் சற்று எட்டி இருந்து கொண்டு குயில்போல் கூவ ஆரம்பித்தாள். அந்தக் குயிலோசையைக் கேட்ட துர்வாசர் அந்தக் குரலில் ஐயம் கொண்டு பார்க்க வந்தார். வபு நிற்பதையும், குயில்போல் பாடுவதையும் கண்ட அவர், "என்

தவத்தைக் கலைப்பதற்காகவே நீ வந்துள்ளாய் என்று தெரிகிறது. பறவைபோல் பாடியதால் நீ பறவையாகப் போவாய்! பதினாறு ஆண்டுகள் கழித்து, ஒரு வேடன் உன்னைக் கொல்வான். பிறகு தேவலோகம் திரும்பி வருவாய்!" என்று சாபமிட்டார்.

கருடனின் பரம்பரையில் தோன்றிய கன்கா, காந்தாரா என்ற இரு சகோதரப் பறவைகள் இருந்தன! முதலில் கன்கா என்ற பறவை இமயமலை நோக்கிப் பறந்து சென்றது. அங்கே குபேரனின் பணியாளன் ஆகிய 'வித்யுத்' என்ற அரக்கன் மதனிகா என்ற தன் மனைவியுடன் தனியே அமர்ந்து விளையாடிக் கொண்டிருந்தான். கன்கா அங்கே சென்றதும் தங்கள் சல்லாபத்திற்கு இடையூறாக இருந்ததால், வித்யுத் அப்பறவையைக் கொன்று விட்டான். தன் சகோதரப் பறவை இறந்ததை அறிந்த காந்தாரா, வித்யுத் இருக்குமிடம் வந்து பழி வாங்கும் நோக்கத்துடன் அவனுடன் போரிட்டு அவனைக் கொன்று விட்டது. உடனே அவன் மனைவி யாகிய மதனிகா ராட்சசி ஆகையால், பறவை வடிவம் எடுத்துக் கொண்டு காந்தாராவை மணந்து கொண்டது. இவர்கள் இருவருக்கும் துர்வாசரால் சபிக்கப்பட்ட வபு என்ற அப்ஸரஸ் தர்ஷி என்ற பெயருடன் பெண்ணாகப் பிறந்தது. இந்த தர்ஷி என்ற பெண்ணையே துரோணர் என்ற பிராமணர் மணந்து கொண்டார். ஒருமுறை குருக்ஷேத்திரப் போர் நடைபெறும் பொழுது தர்ஷி அங்கே சென்றது. எதிர்பாராமல் அர்ச்சுனன் அம்புபட்டு தர்ஷி இறக்க நேரிட்டது. அது இறப்பதற்குள் அதன் வயிற்றில் இருந்து நான்கு முட்டைகள் பூமியில் விழுந்தன. பகுதத்தன் என்ற அரசனுடைய சுப்ரதிகா என்ற யானை அந்த இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது. யானையின் கழுத்தில் கட்டி இருந்த பெரிய மணி எதிர் பாராதவிதமாக ஓர் அம்பு பட்டதால் அறுந்து கீழே

விழுகையில் இந்த நான்கு முட்டைகளையும் மூடி மறைத்துக் கொண்டது.

பாரதப் போர் முடிந்து பல காலம் ஆன பிறகு, ஷமிகா என்ற முனிவர் அவ்விடத்தில் நடக்கையில் இந்தப் பெரிய மணிக்குள் பறவைகளின் சப்தத்தைக் கேட்டு மூடியிருந்த மணியை அகற்றினார். நான்கு குஞ்சுகள் உயிருடன் இருப்பதை அறிந்தார். அவற்றை எடுத்துக்கொண்டு தம் ஆசிரமம் சென்று எவ்வித ஆபத்தும் வராதபடி பாதுகாப்பான இடத்தில் வைத்து இக் குஞ்சுகளை வளர்த்தார். அவை பெரிய பறவைகள் ஆனதும், காட்டில் சுதந்திரமான பறவைகளாய்த் திரிந்தன. இருந்தாலும் இரவானதும் ஆசிரமத்தில் வந்து தங்கிவிட்டன. அப்படித் தங்கி இருக்கும் பொழுது அங்கு விவாதிக்கப்படும் வேதங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றை ஓரளவு புரிந்து கொண்டன. ஒருநாள் இந்தப் பறவைகள் நான்கும் ஷமிகா முனிவர் எதிரே சென்று மிக்க வணக்கத்துடன், "முனிவரே! நாங்கள் நால்வரும் இந்த உடம்புடன், உயிருடன் இருப்பது தங்கள் கருணையால்தான். அது மட்டுமல்ல; தாங்கள் எங்களுக்கு இங்கே இடம் தந்ததால்தான் வேத சாஸ்திர புராணங்களைப் பற்றியும் தெரிந்து கொண்டோம்" என்று கூறின.

பறவைகள் பேசுவதைக் கண்டு வியப்பில் ஆழ்ந்து போன ஷமிகா முனிவர், "உண்மையில் நீங்கள் பறவைகள் அல்ல. நீங்கள் யார் என்பதை எனக்குச் சொல்ல வேண்டும்?" என்று கேட்டவுடன் அப் பறவைகள் ஒரு கதையைச் சொல்ல ஆரம்பித்தன.

### பறவைகளின் கதை

நீண்ட காலத்திற்கு முன்னர் சுக்ரிஷா என்றொரு முனிவர் வாழ்ந்து வந்தார். அவருடைய பிள்ளைகளே இந்த நான்கு

பறவைகளும் ஆகும். ஒருநாள் இந்திரன் வயதான, பெரிய பறவை உருவம் எடுத்து அங்கு வந்தான். தனக்கு மிகவும் பசியாக இருப்பதாகவும், மனித மாமிசம் கொடுத்தால் தனக்கு மிகவும் திருப்தியாக இருக்கும் என்றும் அப்பறவை கூறியது. உடனே சுக்ரிஷா முனிவர் தம் பிள்ளைகளை அழைத்து அவர்களையே அப் பறவைக்கு உணவாகும்படிக் கூற, அந்த நால்வரும் இதை மறுத்து விட்டனர். இதனால் கடுங்கோபம் கொண்ட முனிவர், தன்னுடைய நான்கு மகன்களும் பறவை களாகப் பிறக்கும்படி சாபமிட்டு, தன் உடம்பையே பறவையாக வந்த இந்திரனுக்கு உணவாக அளிக்க விரும்பினார். இந்திரன், மன்னிப்புக் கேட்டான். சாபமிடப்பட்ட நான்கு மகன்களும் தங்கள் தந்தையை வணங்கி, தாங்கள் தங்கள் உடல் மீது மிகுந்த பற்றுக் கொண்டுள்ளபடியால், தந்தை கூறியதை ஏற்க மறுத்தனர் என்றும், உண்மையான ஞானத்தைப் பெறும் பொழுது உடல் மீதுள்ள பற்று நீங்கும் என்றும் கருதி, அடுத்த பிறவியிலாவது எங்களுக்கு உண்மை ஞானம் கிடைக்க அருள் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். முனிவரும் 'அப்படியே ஆகட்டும்' என்றார். அந்த நான்கு பிள்ளைகளும் இந்தப் பிறவியில் தர்ஷியின் வயிற்றில் பறவைகளாகப் பிறந்தோம். அந்த நால்வரும் நாங்களே என்று பறவைகள் சொல்ல, முனிவர், "விந்திய மலைக்குச் செல்லுங்கள்" என்று கட்டளை இட்டார்.

இந்த நீண்ட கதையை ஜெய்மினிக்குச் சொல்லிய மார்க்கண்டேயர், நீங்கள் சென்று அந்தப் பறவைகளைப் பாருங்கள் என்று கூறி விடை கொடுத்தார்.

### ஜெய்மினியும் பறவைகளும்

ஜெய்மினி பறவைகளைப் பார்த்து, இரண்டு கேள்வி களைக் கேட்டார்: "பஞ்ச பாண்டவர் யார்? திரெளபதி ஏன்

ஐவரையும் மணம் செய்து கொள்ள வேண்டும்?" அதற்குப் பறவைகள் சொன்ன விடை கீழே தரப்பட்டுள்ளது.

முன்னொரு காலத்தில் துவஷ்டா என்ற அசுரனின் மகன் திரிசரா என்பவன் தலைகீழாக நின்று கடுந்தவம் இயற்றிக் கொண்டிருந்தான். அவனுடைய தவம் நிறைவேறினால் தன் ஆட்சிக்கு ஆபத்து விளையும் என்பதை அறிந்த இந்திரன் மறைவாக நின்று தவத்தில் இருந்த திரிசராவைக் கொன்று விட்டான். திரிசரா பிராமணன் ஆகையினாலும், தவத்தில் இருந்தானாகையாலும் அவனைக் கொன்ற இந்திரனின் ஆற்றலில் ஒரு பகுதி தருமதேவதையிடம் சென்று விட்டது. திரிசரா கொல்லப்பட்டதை அறிந்த துவஷ்டா தன் தலையில் இருந்து ஓர் உரோமத்தை எடுத்து அக்னியில் போட, அதிலிருந்து சர்வ வல்லமை உள்ள விருத்ராசுரன் தோன்றினான். விருத்திரனைக் கண்டு அஞ்சிய இந்திரன், சப்த ரிஷிகளிடம் சென்று முறையிட்டு தனக்கும் விருத்திரனுக்கும் நட்புச்செய்து வைக்குமாறு வேண்டிக் கொண்டான். இருவரும் நண்பர்கள் ஆயினர். மனத்துக்குள் வஞ்சகத்தை நிரப்பி இருந்த இந்திரன், நம்பி இருந்த விருத்திராசுரனை வஞ்சகமாகக் கொன்றுவிட்டான். இந்தத் தவறான கொலையின் காரணமாக இந்திரன் தன் ஆற்றலின் ஒரு பகுதி வாயுவிடம் சென்று விட்டது.

இந்திரன் ஆற்றலின் மற்றொரு பகுதி நேரே அருச்சுன னுக்குச் சென்றது. கௌதமன் என்று நம்பிய முனிபத்தினி யாகிய அகலிகையை ஏமாற்றியதால், இந்திரனிடம் மிஞ்சி இருந்த ஆற்றல் முழுவதும் இரண்டு அஸ்வினிகளிடம் சென்று விட்டது.

இந்த நிலையில் பூமியில் அரக்கர்கள் மிகுதியாகத் தோன்றி விட்டமையால், பூமி தேவி சுமேரு மலைக்குச் சென்று தனது

ஆற்றாமையை வெளியிட்டாள். தேவர்கள் அவளுக்கு பாரத்தைக் குறைப்பதாகக் கூறி தருமதேவதை இந்திரனிடம் பெற்ற ஆற்றலை யுதிஷ்டிரனாகவும், வாயு பெற்ற ஆற்றலை பீமனாகவும், இந்திரன் ஆற்றல் அருச்சுனனாகவும், அஸ்வினி களின் ஆற்றல் நகுல, சகாதேவர்களாகவும் பிறக்குமாறு செய்தார்கள். இந்திரன் மனைவியாகிய சச்சி திரௌபதி யாகவும் பூமியில் பிறந்து ஐவரையும் மணந்து கொண்டாள். யுதிஷ்டிரன் முதல், சகாதேவன் வரை உள்ள ஐவரும் மனிதர்கள் என்ற முறையில் வெவ்வேறானவர்களாக இருப்பினும், இந்திரனுடைய ஆற்றலின் ஒவ்வொரு கூறாகவே இருந்தனர். இந்த ஐவரும் இந்திரன் ஆற்றல்களே. ஆதலால் சச்சி அல்லது திரௌபதி ஐவரையும் மணந்ததாகச் சொன்னாலும், உண்மையில் இந்திரன் ஒருவனையே மணந்தாள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

## அரிச்சந்திரன் கதை

முன்னொரு காலத்தில் திரேதாயுகத்தில் அரிச்சந்திரன் என்ற மன்னன் இந்த நில உலகை ஆண்டு வந்தான். அவன் ஆட்சிச் சிறப்பால் பஞ்சம், நோய், பிணி முதலிய எதுவும் அவன் நாட்டில் தலைகாட்டவில்லை. ஒருமுறை வேட்டைக்குச் சென்ற அவன், தப்பி ஓடிய சில மான்களைத் துரத்திக் கொண்டு காட்டில் வெகுதூரம் வந்து விட்டான். மானின் பின்னே ஓடிக்கொண்டிருந்த மன்னன் காதுகளில், 'எங்களைக் காப்பாற்றுங்கள்' என்ற பெண்களின் அபயக் குரல் விழுந்தது. உடனே, மானின் பின் போவதை விட்டுவிட்டு அபயக் குரல் வந்த திசைப் பக்கம் சென்றான். அங்கே ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருப்பதையும், அவர் எதிரே சில பெண்கள் 'காப்பாற்றுங்கள்' என்று ஓலமிடுவதையும் கண்டான். வில்லில் அம்பைப் பூட்டிய மன்னன் எதிரே இருப்பவர் ஒரு முனிவர்

என்பதை அறிந்து கொண்டான். அந்தப் பெண்கள் உண்மையில் பெண்களே அல்ல. வித்யாஞானத்தின் பல கூறுகளே ஆவர். வித்யா ஞானத்தின் பல்வேறு பகுதிகளையும் உள்ளவாறு அறிந்து கொண்டு அதன் மூலம் உண்மையான ஞானத்தை அடைய விரும்பினார் எதிரிலிருந்த முனிவர் விசுவாமித்திரர். அதனால்தான் வித்யாவின் பல பகுதிகள் வெளிப்பட்டு 'எங்களைக் காப்பாற்றுங்கள்' என்று முறை யிட்டன.

அரிச்சந்திரனைக் கண்டதும் அவர்கள் ஓலம் நின்றது. காரணம் கடுந்தவத்தில் இருந்த விசுவாமித்திரர் மிக்க கோபமாக அப்பெண்களைப் பார்த்தவுடன் அவர்கள் அஞ்சி மறைந்து விட்டனர். பெண்கள் மறைந்தவுடன் வெட்கிப்போன அரிச்சந்திரன் விசுவாமித்திரர் கால்களில் விழுந்து, "என்னை மன்னித்து அருளல் வேண்டும். இங்கு நடந்தது ஒன்றும் தெரியாது எனக்கு. பெண்களின் அபயக் குரலைக் கேட்டு அரசன் என்ற முறையில் அவர்களைக் காக்க முன்வந்தேன்" என்று கூறினான். விசுவாமித்திரர், 'உன்மேல் எனக்கு ஒன்றும் கோபமில்லை. எல்லாவற்றையும் நன்கு அறிந்தவனாகிய உன்னிடம் சில கேள்விகளைக் கேட்க விரும்புகிறேன்" என்றார். மேலும் விசுவாமித்திரர் மூன்று கேள்விகளைக் கேட்டார். "யாருக்கு தருமம் செய்ய வேண்டும்? யாரைக் காப்பாற்ற வேண்டும்? யாருடன் போரிட வேண்டும்?"

இந்த வினாக்களுக்கு விடை கூறப் புகுந்த அரிச்சந்திரன், முதல் கேள்விக்கு பதிலாக, 'தவசிகட்கும், முனிவர்கட்கும், பிராமணர்களுக்கும் தானம் செய்ய வேண்டும். அஞ்சினவர் களைக் காப்பாற்ற வேண்டும். பகைவர்களிடம் போரிட வேண்டும்" என்று கூறி முடித்தவுடன், விசுவாமித்திரர், "அரசனே! நான் பிராமணன் என்பது உனக்குத் தெரியு மல்லவா? உன்னிடம் தானம் கேட்க விரும்புகிறேன்" என்று

கூறியவுடன் அரிச்சந்திரன் மிக்க மகிழ்ச்சியோடு "எதைக் கேட்டாலும் தருகிறேன்" என்று கூறிவிட்டான். விசுவாமித்திரர், "நீ ஆளும் உலகம் முழுவதும் அதிலுள்ள பொருள்கள், ராஜ்ஜியத்தில் உள்ள தேர்கள், யானைகள், குதிரைகள், பொன் ஆபரணங்கள், வெள்ளி ஆபரணங்கள் ஆகிய அனைத்தும் எனக்கு வேண்டும். சுருங்கச் சொன்னால், நீ, உன் மனைவி, உன் மகன் ஆகிய மூவர் தவிர உன் ராஜ்ஜியத்தில் உள்ள மக்கள் அனைவரும் என் உடைமை ஆகவேண்டும்" என்று கூறினார். அரிச்சந்திரன், "இப்பொழுதே தந்து விட்டேன்" என்று கூறினான். "என்னுடைய ராஜ்ஜிய எல்லைக்குள் நீ இருப்பதை நான் விரும்பவில்லை. எனவே இந்த எல்லைக்கப்பால் நீ உன் மனைவி, மகனுடன் சென்று விடுவாயாக!" என்றார் முனிவர். "முனிவர் உத்தரவுப்படியே இந்த நாட்டின் எல்லைக்கப்பால் செல்கிறேன்," என்று புறப்பட்ட அரிச்சந்திரனைத் தடுத்து நிறுத்திய விசுவாமித்திரர், "நீ செய்த ராஜசூய யாகத்தில் எல்லா பிராமணர்களுக்கும் தட்சணை தந்தாய் அல்லவா? என்னுடைய பங்கை இப்பொழுது தரவேண்டும்" என்றார் முனிவர். அரிச்சந்திரன், "முனிவரே! என்னிடம் உள்ள அனைத்தையும் தந்துவிட்டேன். இப்பொழுது என்னைத் தவிர என்னுடையது என்று சொல்லக் கூடியது எதுவுமில்லை. நான் என்ன செய்ய முடியும்?" என்றான். அதைக் கேட்ட விசுவாமித்திரர், "நீ சொல்வதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. என் தட்சிணையைத் தந்தே தீர வேண்டும்" என்றார். ஒரு விநாடி திகைத்து நின்றுவிட்ட அரிச்சந்திரன், "முனிவரே! ஒரு மாதம் அவகாசம் கொடுங்கள். நான் நிச்சயமாக வந்து உங்களுக்குரிய தட்சிணை யைத் தந்து விடுகிறேன்" என்றான். அவன் வாய்மொழியை ஏற்றுக் கொண்டு, "சென்று வா" என்று அனுப்பிவிட்டார் விசுவாமித்திரர்.

நாட்டின் எல்லையை விட்டுப் போய்க் கொண்டிருந்தான் அரிச்சந்திரன். அவன் மனைவி அரசியாகவே இருந்து பழகி விட்ட காரணத்தால், வேகமாக நடக்க முடியாமல் கொஞ்சம் மெல்லவே நடந்து சென்றாள். சினம் கொண்ட விசுவா மித்திரர் "சீக்கிரம் இவ்வெல்லையை விட்டுப் போ" என்று சொல்லிக் கொண்டே அரிச்சந்திரன் மனைவியாகிய ஷைவியாவை ஒரு தடி கொண்டு பலமுறை அடித்தான். அரிச்சந்திரன் இதுபற்றி ஒரு சிறிதும் கவலைப்படாமல், "இதோ போய் விடுகிறோம், கோபம் வேண்டாம் முனிவரே" என்று கூறினான். ஆனால் மேலே இருந்து இந்தக் கொடுமையைப் பார்த்துக் கொண்டிருந்த விஸ்வதேவர்கள் ஐவரும் மன வருத்தம் தாங்காமல், 'விஸ்வாமித்திரர் செய்வது வெட்கக் கேடு, வெட்கக் கேடு' என்று கூறிவிட்டனர். அந்தச் சொற்கள் காதில் விழுந்ததும், விஸ்வாமித்திரர் கோபம் கொண்டு விஸ்வதேவர்கள் ஐவரையும் 'மானிடராகப் பிறக்கக் கடவது' என்று சாபமிட்டார். கலங்கிப் போன ஐவரும் வந்து முனிவரிடம் மன்னிப்புக் கேட்க முனிவர் மனமிரங்கி, "மானிடராகப் பிறந்தாலும் உங்கட்கு மனைவி, குழந்தைகள் என்ற பந்தமிராது. சாதாரண மனிதர்களை ஆட்டிப் படைக்கும் எந்தத் துன்பமும் உங்கள் ஐவரையும் பாதிக்காது" என்றார்.

சாபம் பெற்ற ஐந்து விஸ்வதேவர்களே, பாண்டவர்களின் புதல்வர்களாக— இளம் பஞ்சபாண்டவர்கள் என்ற பெயரில் திரௌபதிக்குப் பிறந்தனர்.

பறவையிடம் அரிச்சந்திரன் கதையை அறிய ஆவலாக இருக்கிறேன் என்று ஜெய்மினி முனிவர் கூறியவுடன், பறவைகள் சொல்ல ஆரம்பித்தன. "நாட்டின் எல்லைக்கு வந்த அரிச்சந்திரன் எங்கே போவது என்று தெரியாமல் தவித்தான். எங்கே சென்றாலும் அது விசுவாமித்திரருக்கு தானம் செய்த

பகுதியாகவே இருந்தது. இந்த நிலையில் வாரணாசி அவன் நினைவுக்கு வந்தது. அந்த ஊர் எந்த அரசனுக்கும் சொந்த மில்லை. சிவனுக்குரிய ஊர். எனவே மனைவியையும் குழந்தை யையும் அழைத்துக் கொண்டு வாரணாசிக்குள் புக முற்பட்டான். விசுவாமித்திரர் தடுத்து நிறுத்தினார். "அரிச்சந்திரா! நீ சொன்ன சொல்லைக் காப்பாற்றவில்லை. ஒரு மாதம் தவணை கேட்டாய். நேற்றோடு இருபத்து ஒன்பது நாட்கள் முடிந்துவிட்டன. இந்த ஒரு நாளில் என்ன செய்யப் போகிறாய்?" என்றான். "முனிவரே! இன்றைய பொழுதுக்குள் உங்களுக்குத் தர வேண்டியதைத் தந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு நகருக்குள்ளே வந்து கலங்கிப் போய் நின்றான். அவன் மனைவி ஷைவ்வியா, "அன்பரே! கலங்க வேண்டாம். என்னை விற்றுக் கடனை அடையுங்கள்" என்றாள். மயங்கி விழுந்த அரிச்சந்திரன் மூர்ச்சை தெளிந்து எழுந்ததும், வேறு வழியின்மையால் மனைவியை விற்கக் கூவ ஆரம்பித்தான். கொடுமையான கிழட்டுப் பிராமணன் ஒருவன் ஷைவ்வியா வையும், அவன் மகன் ரோஹித்தையும் விலை கொடுத்து வாங்கி, இருவரையும் கட்டி இழுத்துக் கொண்டு போனான். கண்ணீர் ததும்பக் கலங்கி நின்ற அரிச்சந்திரனிடம் விசுவா மித்திரர் வந்து பணம் கேட்டார். விற்ற பணத்தை விசுவா மித்திரரிடம் கொடுக்க, விசுவாமித்திரர் கோபம் பொங்க, "அரிச்சந்திரா! என்ன நினைத்து விட்டாய்? இந்தத் தொகையையா என் போன்ற ஒரு முனிவனுக்கு தட்சிணை யாகக் கொடுப்பது? இதை விசிறி அடித்து விடுவேன். இன்னும் நேரமிருக்கிறது. அதற்குள் எனக்குரிய தொகையைத் தர வேண்டும்" என்றார்.

இந்த இக்கட்டான சூழ்நிலையைச் சமாளிக்க தரும தேவதை ஒரு சண்டாள வடிவம் கொண்டு வந்தது. தன்னையே விற்கத் துணிந்த அரிச்சந்திரனிடம் பேசி வாங்க முயன்றான்

அந்தச் சண்டாளன். பழைமையில் ஊறிய அரிச்சந்திரன், ஒரு க்ஷத்திரியன் ஒரு சண்டாளனுக்கு அடிமை ஆவதை விரும்பாமல் இருந்தான். பொழுது செல்லச் செல்ல வேறு வழி இல்லாததால் சண்டாளனுக்குத் தன்னை விற்க முடிவு செய்தான். அந்த நிலையில் அங்கு வந்த விசுவாமித்திரர், சண்டாளனிடம் பணத்தைப் பெற்றுக் கொண்டு கடன் தீர்ந்தது என்று கூறிப் போனார்.

சண்டாளனுடன் சென்ற அரிச்சந்திரன் தனக்குரிய பணி யாது, ஊர் யாது என்பதை அறிந்து கொண்டான். பிணத்தைச் சுட வருகின்றவர்கள் கொடுக்கும் தொகையில் ஆறில் ஒரு பங்கு அரசனுக்குரியதாகும். அரைப் பங்கு சண்டாளனுக்கும், மூன்றில் ஒரு பங்கு அரிச்சந்திரனுக்கும் கொடுக்கப்படும். மிகக் கொடுமையானதும், பேய் பிசாசுகளின் உறைவிடம் ஆனதும், நரிகள் போன்றவற்றின் உறைவிடமும் ஆன அந்த மயானத்தில், அரிச்சந்திரன் பன்னிரண்டு மாதங்களைக் கழித்தான். ஒரு நாள் 'இன்னும் பன்னிரண்டு வருடங்கள் அங்கேயே இருந்த பிறகுதான் தனக்கு விடுதலை கிட்டும்' என்று கனவு கண்டான். இந்தக் கனவின் பயனாக மறுநாள் மனங்கலங்கி, தான் யார் என்பதைக் கூட மறந்து வாழத் தொடங்கினான். அந்த நிலையில் அவன் மகன் ரோஹித்வஷாவைப் பாம்பு கடித்துவிட அவன் உடலை எரிப்பதற்காக ஷைவ்வியா கொண்டு வந்தாள். மனங்கலங்கித் தன்னையே அறியாமல் இருந்த அரிச்சந்திரனுக்கு அது யாருடைய பிணம் என்றோ, அதைக் கொண்டு வந்தவள் யார் என்றோ தெரியவில்லை. வெகு நேரம் கழித்துத்தான் அவர்கள் யார் என்று அவனும், அவன் யார் என்று அவன் மனைவியும் அறிந்து கொண்டனர். ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு 'ஓ' என்று கதறினர். மகனையும் இழந்த நிலையில் வாழப் பிடிக்காமல் அவர்கள் இருவரும் நெருப்பில் வீழ்ந்து உயிர்

விடத் துணிந்தனர். அப்பொழுது இந்திரன், விசுவாமித்திரர் ஆகிய அனைவரும் ஒன்று சேர்ந்து அவனைத் தடுத்து அவன் மனைவி மக்களோடு இந்த உடம்போடு சொர்க்கம் போகலாம் என்று கூறி, ரோஹித்வஷாவின்மேல் அமிர்தம் தெளித்து உயிர் கொடுத்தார். அது கேட்ட அரிச்சந்திரன், "அரசனாக இருந்த நான், என் கீழ் வாழும் மக்களின் சுக துக்கங்களில் பங்கு கொள்வதுதான் முறை. சந்தர்ப்பம் கிடைத்தது என்பதற்காக நான் மட்டும் மோட்சம் போகத் தயாரில்லை!" என்று அவன் கூறியவுடன், இந்திரன் அவனைப் பார்த்து, "அரிச்சந்திரா! நீ கூறுவது சரியில்லை. ஒவ்வொருவர் செய்த பாவ புண்ணியங் களுக்கு ஏற்ப ஒருவர் சொர்க்கம் செல்ல முடிகிறது. எல்லா மக்களும் ஒரே அளவாகப் பாவ புண்ணியங்களைச் செய்ய வில்லை. ஆகவே, நீ நினைப்பது போல நடைபெறுவது கடினம்" என்று கூறினார். உடனே அரிச்சந்திரன் தான் சேகரித்திருந்த புண்ணியத்தின் பெரும் பகுதியைத் தன் குடிமக்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விட்டு, மகன் ரோஹித்வஷாவை அரசனாக்கினான். வந்த விமானத்தில் தான் தன் மனைவியோடு சொர்க்கம் சென்றான்.

## வசிட்டரும் விஸ்வாமித்திரரும்

அரிச்சந்திரனுக்கும், அவனுடைய பரம்பரையினருக்கும் குல குருவாக இருந்தவர் வசிட்டர் ஆவார். விஸ்வாமித்திரர், அரிச்சந்திரனுக்கு இவ்வளவு தொல்லைகள் தந்த பொழுது, குல குருவாகிய வசிட்டர் அரிச்சந்திரனுடன் இல்லை. நீருக்கடியில் நின்று பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்யப் போய்விட்டார். அந்த இடைக் காலத்தில்தான் அரிச்சந்திரனுக்கு இந்தச் சோதனைகள் ஏற்பட்டன. அனைத்தும் முடிந்து, அரிச்சந்திரன் சொர்க்கம் வந்த பிறகு தவத்தில் இருந்து மீண்ட வசிட்டர், நடந்தவற்றைக் கேள்விப்பட்டார். கடுஞ்சினம்

கொண்டார். விஸ்வாமித்திரரை ஒரு பறவையாகப் போகட்டும் என்று சபித்தார். இதை அறிந்த விஸ்வாமித்திரர், வசிட்டரும் ஒரு பறவையாகப் போகட்டும் என்று எதிர் சாபம் கொடுத்தார். இரண்டு பேரும் மாபெரும் தவம் உடையவர்களாதலின் இருவர் சாபமும் பலித்தன. இருவரும் பறவையாயினர். மலை போன்ற உடல் படைத்த மிகப் பெரிய பறவைகளாக ஆயினர். பறவையான பிறகும் ஒருவர்மேல் ஒருவர் கொண்டிருந்த கோபம் தணியவில்லை. இரண்டு பறவைகளும் ஓயாது ஆகாயத்தில் பெரும் போர் புரிந்தன. அப்போரின் விளைவாக பூமியில் உள்ள மலைகள் பிளந்தன. சில இடங்களில் பூமி வெடித்து நீரூற்று பெருகிற்று. இப்போரின் தேவையற்ற தன்மையையும், அதனால் பிற உயிர்கட்கு விளையும் தீமையையும் கண்டு அஞ்சிய பிற முனிவர்கள், தேவர்கள் ஆகியோர் பிரம்மனிடம் சென்று முறையிட்டனர். பிரம்மன் நேரே வந்து போரை நிறுத்துமாறு சொல்லியும், பயன் ஒன்றும் இல்லை. பிரம்மன் உடனே அவர்கள் இருவரையும் அவரவர் சுய வடிவிற்கு மாற்றிவிட்டார். மானிட வடிவு பெற்ற வசிட்டரும், விஸ்வாமித்திரரும் தங்கள் செயலுக்கு வெட்கித் தலைகுனிந்தனர். பிரம்மன் வசிட்டரைப் பார்த்து, விஸ்வாமித்திரர் செய்த காரியத்தால்தான் அரிச்சந்திரன் இந்த உடம்போடு மோட்சம் செல்ல முடிந்தது என்று கூறிய வுடன், வசிட்டரும் அதை ஏற்றுக் கொண்டு, விஸ்வாமித்திர ரைக் கட்டிப் பிடித்து பகைமையை மறந்தார்.

### மகாமதியும் சுமதியும்

பார்க்கவ பரம்பரையில் மகாமதி என்ற பிராமணனுக்குச் சுமதி என்றொரு மைந்தன் இருந்தான். இளைஞனாக வளர்ந்த பிறகும்கூட அவன் வெளியே எங்கும் செல்லாமல், யாரையும் பார்க்காமல், வாய் திறந்து பேசாமல் இருந்து வந்தான்.

மகாமதி, "சுமதி! உடனடியாக வெளி உலகிற்குச் சென்று ஒரு குருவைத் தேடிக்கொள். வேதங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றை நன்கு கற்றுக் கொள். பிறகு ஒரு பெண்ணை மணந்து குழந்தை பெற்ற பிறகு காட்டிற்குச் சென்று தவம் செய்து, பிரம்ம ஞானம் பெற முயற்சி செய்" என்று அடிக்கடி கூறி வந்தார்.

பல நாட்கள், பலமுறை மகாமதி கூறியதைக் கேட்டு ஒரு நாள் மகன் சுமதி, வாய் திறந்து பேச ஆரம்பித்தான். "தந்தையே! தாங்கள் சொல்லும் பிரம்ம ஞானத்தை என்றோ அடைந்து விட்டேன். இப்பிறப்பில் உங்கள் மகனாக இருக்கின்ற நான் இதற்கு முன்னர் எத்தனையோ பிறப்புகள் எடுத்து உள்ளேன். புழுவில் தொடங்கி, விலங்குவரை பிறந்து, அதற்கு மேல் நான்கு வர்ணத்திலும் பல பிறவிகள் எடுத்துள்ளேன். நூற்றுக்கணக்கான தாய் தந்தையர், நூற்றுக்கணக்கான மனைவியர், ஆயிரக்கணக்கான நண்பர்கள் பகைவர்கள் ஆகியவர்களோடு பல பிறவிகள் வாழ்ந்துள்ளேன். பலரைக் கொன்றுள்ளேன். பலரால் பலமுறை கொல்லப்பட்டேன். ஒரு சில பிறப்புகளில் நல்ல குருமார்களைப் பெற்று வேத, சாஸ்திரங்களைப் பயின்றுள்ளேன். இப்பிறப்பில் அதிர்ஷ்ட வசமாக ஜதீஸ்மரா சக்தி எனக்குக் கிடைத்திருப்பதால், என் பழம் பிறப்புகளை எல்லாம் நினைத்துப் பார்க்க முடிகிறது. எனவே இப்பிறப்பில் புதிதாக ஒரு குருவைத் தேடிச் சென்று எதையும் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. முந்தைய பிறப்புகளில் கற்றுக் கொண்ட வேத சாஸ்திர அறிவு என்னுள் நிறைந்துள்ளது" என்று கூறினான்.

அதிசயத்தால் வாயடைத்து நின்ற மகாமதி, மகனுடைய பழம்பிறப்புகளில் சிலவற்றையும், அப்பிறப்பில் நடந்த நிகழ்ச்சிகளையும் கேட்டு அறிந்து கொண்டான்.

### மாண்டவி முனிவரை வென்றவள்

பிரதிஷ்தானா என்ற நகரத்தில் ஒரு பிராமணன் வசித்து வந்தான். அவன் தொழுநோயாளியாக இருந்த போதிலும், அவன் மனைவி அவனுடைய நோய்க்கு மருந்திட்டு அவனைக் காப்பாற்றி வந்தாள். சிடுமூஞ்சியாகிய அந்த பிராமணன் எவ்வளவு மோசமாக நடந்து கொண்டும், கற்பு நிலை வழுவாது அவன் மனைவி அவன்பால் எல்லையற்ற அன்புடையவளாய் நடந்து கொண்டாள். ஒருமுறை மேகங்கள் சூழ்ந்து ஒரே இருட்டாக இருக்கின்ற நேரத்தில், பிராமணன் வெளியே செல்ல வேண்டுமென்று சொன்னான். அவன் மனைவி இருட்டைப் பொருட்படுத்தாமல் அவனைத் தோளில் சுமந்து கொண்டு உலாவுவதற்குப் புறப்பட்டாள். நன்கு வழி தெரியாமையாலும், எதிரே இருப்பவர்கள் யார் என்று அறிய முடியாத இருட்டு ஆகையாலும் நோயாளியைத் தூக்கிச் சென்ற பொழுது, அந்த நோயாளியின் கை மற்றொருவர்மேல் பட்டு அவருடைய தவத்தைக் கலைத்து விட்டது. தவம் கலைந்த மாண்டவி முனிவர், "யாருடைய எந்த உறுப்புப் பட்டு என் தவம் கலைந்ததோ, அந்த உறுப்பை உடையவன் சூரிய உதயமானவுடன் இறந்து விடுவான்" என்று சாபம் கொடுத்தார். இந்தச் சாபத்தைக் காதில் வாங்கிக் கொண்ட பிராமணன் மனைவி, கண் தெரியாத இருட்டில் எதிர்பாராமல் நடந்துவிட்ட இந்த மிகச்சிறிய குற்றத்திற்கு இவ்வளவு பெரிய தண்டனையா என்று மனம் பதறிப் போன அவள், "சூரிய உதயமே ஆகாமல் போகட்டும்" என்று எதிர் சாபமிட்டாள். கற்புடைய பெண்ணின் சாபம் பலித்தது. பத்து நாட்களாகச் சூரியன் வெளிவரவில்லை. தேவர்கள், பிரம்மனிடம் சென்று முறையிட்டார்கள். பிரம்மன் உடனே காரணத்தை அறிந்து கொண்டார். "ஒரு கற்புக்கரசியின் சாபத்தால் இந்நிலை வந்தது. இதில் நாம் தலையிட்டு ஒன்றும் செய்ய முடியாது. மற்றொரு

கற்புக்கரசியாகிய அனுசுயாவிடம் நீங்கள் சென்று வேண்டிக் கொண்டால் அவர் தலையிட்டு ஏதாவது செய்யலாம்'' என்று பிரம்மன் கூறினார். அனைவரும் அனுசுயையிடம் சென்று முறையிட, அனுசுயை அந்த ஏழைப் பிராமணத்தியினிடம் வந்து, அவளுடைய சாபத்தைத் திருப்பிப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டினாள். மேலும் மாண்டவியின் சாபத்தால் அவள் கணவன் இறந்தால், அவன் உயிரை மீட்டுத் தரும் சக்தி தனக்கு உண்டு என்றும் அறிவித்தாள். பிராமணன் மனைவி சாபத்தை மீட்டுக் கொண்டாள். சூரியன் புறப்பட்டான்; தொழுநோயாளியான பிராமணன் இறந்தான். உடனே அனுசுயை தன் ஆற்றலால் பிராமணன் உயிரை மீட்டாள். அதுமட்டுமல்லாமல், அவன் நோய் தீர்ந்து, இளமை யோடு வாழ அருள் செய்தாள். தேவர்கள் அனுசுயையின் உதவிக்கு நன்றி பாராட்டி அவள் வேண்டும் வரத்தைத் தருவதாகக் கூறினர். அனுசுயை, "திரிமூர்த்திகளும் தனக்குப் பிள்ளைகளாகப் பிறக்க வேண்டும்'' என்ற தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். தேவர்கள், "அப்படியே ஆகட்டும்'' என்றனர்.

### அனுசுயா பெற்ற பிள்ளைகள்

தேவர்கள் கொடுத்த வரப்படியே அனுசுயைக்குத் திரிமூர்த்திகளில் ஒருவராகிய பிரம்மன், சந்திரன் என்ற பிள்ளையாகவும்; விஷ்ணு தத்தாத்ரேயர் என்ற பிள்ளை யாகவும்; சிவன் துர்வாசர் என்ற பிள்ளையாகவும் தோன்றினர்.

முன்னொரு காலத்தில் கார்த்தவீரியன் என்ற மன்னன் உலகை ஆட்சி செய்து வந்தான். அவன் இறந்த பிறகு அவனுடைய மகனாகிய அர்ச்சுனன் என்பவன் ஆட்சியை ஏற்க மறுத்துவிட்டான். "எப்படி ஆட்சி செய்தாலும் அரசன் என்பவன் நரகத்திற்கே போக நேரிடும். வரி வசூலிப்பது என்பதும், வரி விதிப்பது என்பதும் எனக்குப் பிடிக்காத

காரியம். வியாபாரிகளிடமிருந்து பன்னிரெண்டில் ஒரு பங்கும் விவசாயிகளிடமிருந்து ஆறில் ஒரு பங்கும் பெறுவது சரி என்று சாஸ்திரம் சொல்லுகிறது. ஆனால், இது சரியா என எனக்குத் தெரியாது. வரி வசூலிப்பது மக்களைக் காப்பாற்றுவதற்கே யாகும். அப்படியிருந்தும் மக்களைக் காப்பாற்ற முடிகிறதா எனத் தெரியவில்லை. அப்படிக் காப்பாற்றாவிட்டாலும் நரகம் போக நேரிடும். எப்படிப் பார்த்தாலும் ஓர் அரசன் நரகம் போவது உறுதி. எனவே இந்த அரசாட்சி எனக்கு வேண்டாம்" என்று கூறினான். அங்கு இருந்த முனிவர்களில் கார்கா என்பவர், "அரசனே! நீ எதற்கும் பயப்பட வேண்டாம். தத்தாத்ரேய முனிவர் சாயா என்ற மலையில் ஒரு குகையில் வசித்து வருகிறார். தத்தாத்ரேயர் எப்படிப்பட்டவர் என்று உனக்குச் சொல்கிறேன், கேள். ஒருமுறை தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஏற்பட்ட போரில் தேவர்கள் நன்றாக அடி வாங்கினர். அவர்கள் ஓடிச்சென்று தத்தாத்ரேயரிடம் முறையிட்டனர். முனிவர் அவர்களைப் பார்த்து இன்னும் ஒருமுறை அசுரர்களோடு போரிடுங்கள். போரிட்டுக் கொண்டே தான் இருக்கும் இடத்திற்கு அவர்கள் வரும்படி செய்யுங்கள் என்று கூறினார். அவர் சொன்னபடியே தேவர்களும் அசுரர்களைப் போருக்கு அழைத்தனர். போர் நடக்கையில் அசுரர்கள் தத்தாத்ரேயர் இருக்கும் இடத்திற்கு வருமாறு செய்தனர். தத்தாத்ரேய முனிவர் மகாவிஷ்ணு அவதாரம் ஆகையால், இலக்குமி அவர் கூடவே இருந்தார். இலக்குமியைப் பார்த்ததும் போர் நடப்பதை மறந்து இலக்குமியைத் தூக்கிக் கொண்டு ஓட முயன்றனர். ஒரு பல்லக்கில் இலக்குமியை வைத்து அப்பல்லக்கைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தனர். முனிவரின் உத்தரவுப்படி தேவர்கள் அந்த நேரத்தில் போர் தொடுத்தனர். அசுரர்கள் யாவரும் அழிந்து விழுந்தனர். இதற்கு ஒரு காரணம்

உண்டு. இலக்குமி ஒருவருடைய கால் பக்கம் இருக்கும் போது, அவனுக்கு வீடு, மனை முதலிய வசதிகள் இருக்கும்; இலக்குமி ஒருவனுடைய தொடைப் பக்கம் இருக்கும்போது அவனுக்குக் குழந்தைகள் பிறக்கும்; இலக்குமி ஒருவனுடைய இதயத்தில் இருக்கும் போது அவன் எல்லா ஞானமும் பெறுவான்; இலக்குமி ஒருவனுடைய தலைப் பக்கம் இருந்தால் அவள் அவர்களை விட்டுப் போகப் போகிறாள் என்று அர்த்தம். இப்பொழுது அசுரர்கள் இலக்குமியைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டதால் அவள் அவர்களை விட்டுப் போய் விட, அசுரர்கள் போரில் மடிந்தனர். கார்கா சொன்னதைக் கேட்ட அருச்சுனன் தத்தாத்ரேயரிடம் சென்று அவரை வழிபட்டு, பல வரங்களைப் பெற்றான். ஒன்று, ஆயிரம் கைகளை உடையவனாக இருப்பது; இரண்டு, ஈடு இணையற்ற உலகத்தின் தலைசிறந்த வீரனாலேயே தான் கொல்லப்பட வேண்டுமென்பது; எல்லா இடங்கட்கும் செல்லக் கூடிய ஆற்றலைப் பெறுவது; பகைவர்கள் இருக்குமிடத்தை மானசீகமாகக் கண்டு அறிவது.

இந்த வரங்களைப் பெற்றுக் கொண்ட அருச்சுனனுடைய முடிசூட்டு விழா மூன்று உலகத்திலும் உள்ள பெரியோர் களெல்லாம் வந்து காணுமாறு நடைபெற்றது. அவன் ஹைஹய நாட்டின் மன்னனாக முடிசூட்டிக் கொண்டான்.

**அலார்க்கா**

முன்னொரு காலத்தில் மிக்க பலம் வாய்ந்த சத்ருஜித் என்ற மன்னன் ஆட்சி செய்து வந்தான். அவனுக்கு ரிதத்துவஜா என்ற மகன் இருந்தான். அரசகுமாரனாகிய அவன் பலத்தில் இந்திரனையும், அழகில் அஸ்வினிகளையும், அறிவுக் கூர்மையில் பிருஹஸ்பதியையும் ஒத்து இருந்தான். நற்பண்புகளுக்கெல்லாம் உறைவிடமான அவனுக்கு பிராமண,

க்ஷத்திரிய, வைசியர்களில் பல பல நண்பர்கள் இருந்தனர். அதே நேரத்தில் நாக லோகத்தில் இருந்து அஸ்வதாரா என்ற மன்னனின் மைந்தர்கள் இருவர் ரிதத்துவஜாவிடம் நட்புக் கொண்டனர். அவனுடைய நற்பண்புகளில் ஈடுபட்ட இருவரும், பகலெல்லாம் இவனுடன் இருந்துவிட்டு இரவு நேரத்தில் மட்டும் தங்கள் உலகிற்குச் சென்றனர். ஒருநாள் அஸ்வதாரா தன் மைந்தர்களைப் பார்த்து, "பிள்ளைகளே! பல நாட்களாகப் பகல் நேரத்தில் உங்களைக் காணவே முடியவில்லை. இரவில் மட்டும் இங்கே வருகிறீர்கள். பகல் பொழுதை எங்கே கழிக்கிறீர்கள்?" என்று கேட்டவுடன், மைந்தர்கள் இருவரும் ரிதத்துவஜா பற்றியும், அவனுடைய பராக்கிரமம், நற்பண்புகள் பற்றியும் கூறினர். இதைக்கேட்ட அஸ்வதாரா, "நல்லது பிள்ளைகளே! பல நாட்களாக அவருடைய உபசரிப்பைப் பெற்றுக் கொண்ட நீங்கள் பதிலுக்கு ஏதாவது செய்ய வேண்டாமா? நம்முடைய நாட்டில் மிகுதியாகக் கிடைக்கின்ற பொன், வெள்ளி, மாணிக்கம், வைரம் ஆகியவற்றை எடுத்துச் சென்று உங்கள் நண்பனுக்குப் பரிசளியுங்கள்" என்று கூறினார். "தந்தையே! இந்தப் பொருள்களை அவன் ஏற்றுக் கொள்வது கடினம். அவனுடைய நாட்டிலேயே இவை ஏராளமாக இருக்கின்றன. மேலும் அவனைப் பற்றி ஒரு நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன், கேளுங்கள்."

ஒருமுறை காலவன் என்ற பிராமணன் ஓர் அதிசயமான குதிரையை சத்ருஜித்துக்குப் பரிசளித்தான். அந்தக் குதிரை செல்லாத இடமே இல்லை. 'நான் வசிக்கும் ஆசிரமத்தில் தைத்திரியர்கள் பல மிருகங்களின் வடிவத்தினை ஏற்றுக் கொண்டு வந்து தொல்லை தருகின்றனர். அப்போது இந்தக் குதிரை ஆகாயத்தில் இருந்து வந்தது. இந்தக் குதிரையை வைத்துக் கொண்டு உன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள் என்று அசரீரி பிறந்தது. அதனால்தான் குதிரையை உங்களிடம்

கொண்டு வந்தேன்' என்று கூறினான் பிராமணன். இதைக் கேட்டு மகிழ்ந்த சத்ருஜித் தன் மகனை அழைத்து, அக் குதிரையை அவனுக்குப் பரிசளித்து, இந்த பிராமணனுக்கு இடையூறு செய்யும் தைத்திரியர்களை அழித்து வருவாயாக என்றான். ரிதத்துவஜா அந்த மாயக் குதிரையில் ஏறிக் கொண்டு அந்த பிராமணர் ஆசிரமத்தை அடைந்தான். தைத்திரியர்கள் பன்றி, புலி, சிங்கம் ஆகிய வடிவங்களில் ஆசிரமத்திற்குப் பக்கத்தில் வந்தனர். அனைவரையும் வீழ்த்திய அரசகுமாரன் ஒரே ஒரு பன்றி மட்டும் தப்பி ஓடுவதை அறிந்து, அதைத் துரத்திச் சென்றான். கடைசியாக அந்தப் பன்றி ஒரு பிலத்திற்குள் நுழைந்தது. அதனுள் சென்ற அரசகுமாரன் இருட்டாக இருந்த பகுதியைக் கடந்து புதிய உலகத்திற்கே வந்து விட்டான். அனைத்தும் பொன்னால் ஆன அரண்மனையில், யாரும் நடமாட்டமே இல்லாதிருப்பதைக் கண்டான். ஆனாலும் அழகே வடிவான ஒரு பெண் ஓரிடத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டான். அவளை யாரென்று கேட்க 'மதலசா' என்ற அப்பெண், தான் விஷ்வவக என்ற கந்தர்வனின் மகள் என்றும், பாதாள கேது என்ற அசுரன் தன்னை இங்கே வைத்திருப்ப தாகவும், தன்னைத் திருமணம் செய்து கொள்ள அவள் ஏற்பாடு செய்வதாகவும் கூறினாள். ரிதத்துவஜா அவளை மணக்க விரும்பினான். மணம் செய்து வைக்கும் ஆச்சாரியன் இல்லை ஆதலால், அப்பெண் தன் குருவான தும்புருவை வேண்டினாள். உடனே அவர் அங்குத் தோன்றி, இருவருக்கும் மணம் செய்வித்தார். மணமக்கள் அந்த இடத்தை விட்டுப் புறப்பட நினைக்கையில், பாதாள கேதுவும் அவன் துணைவர் களும் படையெடுத்து வந்து அரசகுமாரனைக் கொல்ல நினைத்தனர். துவஸ்திரா என்ற அஸ்திரத்தைப் பயன்படுத்தி தைத்திரியர்கள் அனைவரையும் அழித்தான். பிறகு அப் பெண்ணோடு தந்தையை வந்து வணங்கினான். அரசகுமாரன்

இத்தனை சாகசச் செயல்களைச் செய்ய உதவியாக இருந்தது அந்த பிராமணன் கொடுத்த குதிரை. அக்குதிரையின் பெயர் 'குவலயா' என்பதாகும். அக் குதிரையை ஓட்டும் அரசகுமாரன் 'குவலயஷ்வா' என்று பெயர் பெற்றான்.

சில நாட்கள் கழித்து மன்னன் சத்ரஜித் தன் மகனை அழைத்து, "மகனே! நீ பகலில் ஒரு பகுதியில் உலகத்தைச் சுற்றி வந்து தவசிகளுக்குத் துன்பம் தரும் தானவர்களையும் தைத்திரியர்களையும் அழைத்து வருவாயாக!" என்று கட்டளை இட்டான். அன்று முதல் அரசகுமாரன் மதியம் வரை உலகைச் சுற்றி வந்து மாலைப் பொழுதில் தன் மனைவியாகிய மதலசாவுடன் பொழுதைக் கழித்து வந்தான். ஒருமுறை அவன் ஒரு போலி முனிவனைச் சந்திக்க நேர்ந்தது. அந்தப் போலி முனிவன், அரசகுமாரனால் கொல்லப்பட்ட பாதாள கேதுவின் தம்பியாகிய தாலகேது. அவன் முனிவன் வேடத்தில் இருந்ததால், அரசகுமாரன் அவனை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. ஆனால் தாலகேது அரசகுமாரனை அடையாளம் கண்டு கொண்டு பழிவாங்க முடிவு செய்தான். போலி முனிவர், "அரசே! நான் ஒரு பெரிய யாகம் செய்ய வேண்டும். அதற்குப் பொருள் இல்லை. தங்கள் கழுத்தில் இருக்கும் மணிமாலையைத் தந்தால் அதை வைத்து யாகம் செய்ய முடியும்" என்றார். அவன் வஞ்சனையை அறியாத அரசகுமாரன், மாலையைக் கழற்றிக் கொடுத்தான். பெற்றுக் கொண்ட போலித் துறவி, "நான் குளித்து விட்டு வரும் வரை இங்கேயே இரு" என்று சொல்லிவிட்டுப் போனான். குளிக்கச் செல்லாமல் சத்ரஜித் மன்னனிடம் அரசகுமாரனின் மாலையைக் காட்டி அவன் இறந்து விட்டதாக ஒரு கதையைக் கட்டி விட்டான். இதைக் கேட்டவுடன் அரசகுமாரன் மனைவி மதலசா உடனே உயிர் விட்டாள். திரும்பி வந்த போலிச் சாமியார் அரசகுமாரனைப் பார்த்து, 'மிக்க நன்றி. நீ

போகலாம்' என்றான். அரசகுமாரன் தந்தையிடம் வந்த பொழுதுதான் நடந்தது தெரிந்தது. மனமொடிந்த அரச குமாரன் மனைவியை நினைத்தே உருகலானான்.

## நாக மன்னன் தந்த பரிசு

நாகலோக அரசனாகிய அஸ்வதாரா, தன் பிள்ளைகள் மூலம் அரசகுமாரன் கதையினைக் கேள்விப்பட்டு இமயம் சென்று சரஸ்வதியை நோக்கித் தவம் செய்தான். சரஸ்வதி வெளிப்பட்டதும், உலகில் ஈடு இணையற்ற பாடகனாகத் தான் ஆகவேண்டும் என்று வரம் கேட்டான். அந்த வரத்தைப் பெற்றுக் கொண்டு கைலயங்கிரிக்குச் சென்று சிவன் காதில் படும்படியாக அற்புதமாகப் பாடினான். மகிழ்ந்த சிவன், "உனக்கு என்ன வரம் வேண்டும்" என்று கேட்க, "ஐயனே! இறந்து போன மதலசா எனக்கு மகளாக வரவேண்டும். அது குழந்தையாகப் பிறந்து வளராமல், அவள் இறக்கும் பொழுது எந்த வயதுடன் எவ்வளவு அழகுடன் இருந்தாளோ அப்படியே என் மகளாகப் பிறக்க வேண்டும்" என்று வரம் கேட்டான். அப்படியே ஆகட்டும் என்று சிவன் சொல்ல, நாக மன்னனாகிய அஸ்வதாரா உண்மையில் பல தலைகளை (படங்கள்) உடைய நாகம் ஆதலால், ஒரு படத்தில் இருந்து மதலசா வந்தாள். அவளை அழைத்து வந்த அஸ்வதாரா, தன் பிள்ளைகளுக்குக் கூட அவள் வருகையை அறிவிக்க வில்லை. தன் பிள்ளைகளை அழைத்து, "இத்தனை முறை பூலோகம் சென்று ரிதத்துவஜாவுடன் பொழுதைக் கழிக்கிறீர்களே. ஒருமுறை அவனை இங்கு அழைத்து வாருங்கள்" என்றான். பிராமண வடிவுடன் அந்தப் பிள்ளைகள் ரிதத்துவஜாவுடன் இருப்பது வழக்கம். அதே வடிவுடன் சென்று அவனைத் தங்கள் வீட்டிற்கு வருமாறு அழைத்தனர். பின் மூவருமாக அங்கே வந்தனர். நண்பர்கள்

மூவரும் கோமதி ஆற்றின் நடுப் பகுதியில் நாகலோகம் செல்லும் வழி இருந்ததால், அதில் இறங்கினர். இப்பொழுது நண்பர்கள் இருவரும் நாக வடிவு எடுத்ததைக் கண்ட அரசகுமாரன் ஆச்சரியப்பட்டான். நண்பர்கள் இருவரும் தங்கள் கதையைச் சொல்லி, 'நாக லோக மன்னனாகிய தங்கள் தந்தை அஸ்வதாராதான் ரிதத்துவஜாவை அழைத்து வர ஏவினான்' என்ற உண்மையையும் கூறினார்கள். மகிழ்ந்த அரசகுமாரன் நாகலோகத்தில் இறங்கி பாம்பு வடிவத்தில் இருந்த அஸ்வதாரா மன்னன் பொன்னும் மணியும் இறைத்த சிம்மாசனத்தில் இருக்க, வணக்கம் செய்தான். மன்னன் அஸ்வதாரா, "அரசகுமாரனே! என் பிள்ளைகள் மூலம் உன்னுடைய அறிவு, அழகு, பராக்கிரமம் ஆகியவற்றை அறிந்தேன். என் பிள்ளைகளிடம் நீ காட்டிய அன்புக்குரிய பரிசாக ஏதாவது ஒன்றைத் தர விரும்புகிறேன், கேள்" என்றான். அது கேட்ட அரசகுமாரன், "நாக மன்னரே! நன்றி பெரிதும் உடையேன். என் தந்தையிடம் எல்லாச் செல்வங் களும் நிறைந்திருக்கின்றன. எனக்குள் பேராசை கிடையாது. நான் எதையும் விரும்பவில்லை" என்று கூறினான். அது கேட்டு மகிழ்ச்சி அடைந்த நாக மன்னன், "நல்லது அரச குமாரனே. இந்த உலகப் பொருள்களில் உனக்குப் பற்று இல்லை என்பதை அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். இருந்தாலும் நீ வியப்படையக்கூடிய பரிசினை உனக்கு வழங்கப் போகிறேன்" என்று கூறி, மதலசாவை வரவழைத் தான். வியப்பால் திடுக்குற்ற அரசகுமாரன் இது ஏதோ மாயை நாடகம் என்று நினைத்து விட்டான். அவன் குழப்பத்தை அறிந்த மன்னன் நடந்தவற்றைக் கூறி, "இப்பொழுது என் மகளாகப் பிறந்த இவளை ஏற்றுக் கொண்டு நெடுநாள் வாழ்வாயாக" என்று ஆசீர்வதித்தான். அங்குத் தங்கி அவன் உபசரிப்பை ஏற்றுக் கொண்ட அரசகுமாரன், மனைவியோடு தன் நாட்டிற்கு வந்தான்.

*சிலகாலம் கழித்து, சத்ரஜித் காலமாகி விடவே, ரிதத்துவஜா அரசனாகி விட்டான். அரசனான பிறகு குவலயஷ்வா என்று அழைக்கப்படும் ரிதத்துவஜாவிற்கும், அவன் மனைவி மதலசாவிற்கும் ஒருவர் பின் ஒருவராக, விக்ரந்தா, சத்ருமத்தனா, சுவாகு என்ற மூன்று பிள்ளைகள் பிறந்தனர். சிவனுடைய அருளால் மறுபிறவி பெற்ற மதலசா பெரிய ஞானியாக ஆகிவிட்டாள். எனவே இந்த மூன்று மைந்தர்கட்கும் ஆத்மாவின் இலக்கணத்தையும், உலகப் பொருள்களையும், மாயை, நிலையாமை ஆகியவற்றையும் நன்கு சொல்லிக் கொடுத்தாள். அதன் பயனாக அரசகுமாரர்களாகப் பிறந்த இந்த மூவரும் உலக விவகாரங்களில் எவ்வித ஈடுபாடும் இல்லாமல் ஆன்ம விசாரணையில் இறங்கி விட்டனர். இதனை அடுத்து நான்காவது பிள்ளை பிறந்தது. அலார்க்கா என்று பெயரிட்ட பொழுது, மன்னன் குவலயஷ்வா மனைவியைப் பார்த்து ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டிய சத்ரியன் அறிய வேண்டியவற்றை இவனுக்கும் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்றான்.*

*அவன் மனைவி அதை எதிர்த்து, 'இவை அனைத்துமே மாயை. அரசன் என்று ஒருவனுமில்லை. அவனுக்குப் பகை என்று ஒன்றுமில்லை. ஓர் ஆத்மாவிற்கு நண்பன் என்றோ, பகைவன் என்றோ யாருமில்லை. எனவே போர் புரிய வேண்டும் என்ற அவசியமில்லை' என்று கூறினாள்.*

**அலார்க்காவின் துறவு**

*ரிதத்துவஜாவின் நான்காவது பிள்ளையாகிய அலார்க்கா, சத்திரியர்களுக்குரிய கல்வி கற்று அரசை ஏற்றுக்கொண்டான்; அவன் தாய் மதலசா காட்டுக்குப் போகும்போது மகனிடம் ஒரு மோதிரத்தைத் தந்தாள். "மகனே! இதற்குள் ஒரு கடிதம் இருக்கிறது. எப்பொழுதாவது உனக்குப் பெரும் துன்பம் வந்து*

செய்வதறியாது மனம் பேதலித்தால், அந்த நேரத்தில் இதனுள் இருக்கும் கடிதத்தை எடுத்துப் படித்துப் பார்" என்று சொல்லிவிட்டுக் கணவனுடன் காட்டுக்குப் போய்விட்டாள்.

மிக்க பலவானும், அறிவாளனும் ஆகிய அலார்க்கா, மிக்க நேர்மையாகவும் மகிழ்ச்சியுடனும் ஆட்சி செய்து வந்தான். அவனுடைய மூத்த அண்ணன் சுவாகு காட்டில் தவம் புரிந்து கொண்டிருந்தான். தன் தம்பி உலக இன்பங்களில் சிக்கி உழன்று கொண்டிருக்கிறான் என்பதறிந்து அவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க எண்ணினான். நேரே காசிராஜாவிடம் சென்று, அலார்க்காவின் ராஜ்ஜியத்தைத் தனக்குத் தருமாறு ராஜாவைச் சொல்ல வைத்தான். அலார்க்காவிற்கு சுகபோகங்களை விட்டுக் கொடுக்க மனமில்லை. எனவே மறுத்து விட்டான். இப்பொழுது காசிராஜா அலார்க்காவின் ராஜ்ஜியத்தின்மீது படையெடுத்தான். தோல்வி அடைந்த போது தாய் தந்த மோதிரம் நினைவுக்கு வர, அந்தக் கடிதத்தை எடுத்துப் படித்துப் பார்த்தான். 'ஆத்மாவின் இலக்கணம் பற்றியும், ராஜ்ஜியம், யானைப் படை, குதிரைப் படை இவையெல்லாம் மனத்தின் ஆசாபாசங்களைப் பொறுத்ததே என்றும், ஆத்மா இந்த எதனோடும் தொடர்பில்லாதது என்பதை அறிய வேண்டும்' என்றும் எழுதி இருந்தது. உண்மையறிவு பெற்ற அலார்க்கா, காசிராஜாவிடம் சென்று தமயன் சுவாகுவே ராஜ்ஜியத்தை எடுத்துக் கொள்ளலாம் என்று கூறினான்.

சுவாகு சிரித்துக் கொண்டே, என்றுமே தனக்கு இம்மாதிரி பற்றுக்கள் இல்லை என்றும், தம்பியின் போக்கைத் திருத்தவே இந்த நாடகம் ஆடியதாகவும், தம்பி மனம் திருந்தியது கண்டு மகிழ்ச்சி அடைவதாகவும் கூறிவிட்டுக் காட்டிற்குப் போய் விட்டான்.

காசிராஜாவும் சிரித்துக் கொண்டே, சுவாகுவும் தானும் சேர்ந்து ஆடிய நாடகம் இது என்று கூறிவிட்டு, அலார்க்காவின் ராஜ்ஜியத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டான்.

தன் நாட்டிற்குத் திரும்பி வந்த அலார்க்கா நல்ல ஞானம் கைவரப் பெற்றவனாய்ப் பந்த பாசம், அதிகார ஆசை என்பவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டவனாய் ஆகிவிட்டான். மறுபடியும் அரசனாகும் விருப்பம் ஒருசிறிதும் இல்லாத அலார்க்கா, தன் மூத்த மகனுக்குப் பட்டம் கட்டிவிட்டுத் தவம் செய்யக் காட்டிற்குப் போய் விட்டான்.

இக்கதையை சுமதி சொன்னதும் அவன் தந்தை மகாமதி 'இத்தனை யாகங்களைச் செய்து நான் என்ன பயனை அடையப் போகிறேன். இந்த விநாடியே எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் காடு சென்று தவம் செய்யப் போகிறேன்' என்றான். தந்தையும், மகனும் இணைந்தே காடு நோக்கிப் புறப்பட்டு விட்டனர்.

இந்தக் கதைகளை எல்லாம் ஜெய்மினி முனிவருக்கு எடுத்துக் கூறிய நான்கு பறவைகளும் அமைதி அடைந்து விட்டன. ஜெய்மினியின் ஐயங்கள் அனைத்தும் தீர்ந்து விட்டன.

**படைப்பின் கதை**

ஜெய்மினி முனிவர், பல சந்தேகங்களையும் தீர்த்து வைத்த அந்தப் பறவைகளைப் பார்த்து, பிரபஞ்சப் படைப்பின் வரலாற்றை விளக்கமாகக் கூறுங்கள் என்று கேட்க, பறவைகள் சொல்ல ஆரம்பித்தன.

*(பறவைகள் சொல்லிய படைப்பு வரலாறு, பிரம்ம புராணம் முதலியவற்றில் கூறியதை அப்படியே திருப்பிச் சொல்கின்றன. ஆதலின் அதனை விரிவாகச் சொல்லாமல், கருத்தை மட்டும் தந்துள்ளோம்.)*

பரப்பிரம்மம் வாக்கு, மனம், கற்பனை ஆகியவற்றைக் கடந்திருப்பது. வடிவோ உருவோ இல்லாமல் எங்கும், எல்லா வற்றிலும், எப்பொழுதும் ஊடுருவி நிற்பது. தொடக்கமோ முடிவோ இல்லாதது. குணம், குறி கடந்தது.

தொடக்கத்தில் எங்கும் தண்ணீர்— அதில் ஒரு பெரிய முட்டை வளர்ந்து கொண்டே வருதல்— அதனுள் பிரம்மன் தோன்றுதல்— பிரபஞ்சத்தில் உள்ள எல்லாப் பொருட்களும் அதனுள் இருத்தல்— முட்டையினுள் இருந்து வெளியே வந்த பிரம்மன் புல் பூண்டு முதல் ஜடப் பொருள்களையும், புழு, பறவை, பாம்பு, மிருகங்கள் அனைத்தையும் படைத்தல்— இச்சா மாத்திரையாய் பிருகு, அத்ரி முதலிய ஒன்பது முனிவர்களைப் படைத்தார். வேதங்கள், புராணங்கள் ஆகியவற்றைத் தமது நான்கு முகங்களாகப் படைத்தார்— நீரில் உறங்குவதால் நாராயணன் என்ற பெயர் பெறுதல்— ருத்ரன் பிரம்மன் மடியில் தோன்றுதல், பெயர் வேண்டி அழுதல், ருத்ரன் என்று பெயர் பெறுதல்.

**வருதினியின் கதை**

வருணா நதிக் கரையில் உள்ள அருணஸ்பதா என்ற ஊரில் ஒரு பிராமண இளைஞன் இருந்தான். வேத சாஸ்திரங் களில் வல்லவனாய் இருந்ததோடு, அழகிய அஸ்வினிகளைவிட அழகனாக இருந்தான். இவ்வளவு இருந்தும் அந்த இளைஞன் மனத்தில் உலகத்தைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற ஆசை மிகுதியாக இருந்தது— அந்த இளைஞனை நாடி மற்றொரு பிராமணன் விருந்தினனாக வந்தான். வந்தவன் உலகின் பல்வேறு பாகங்களில் தான் கண்ட காட்சிகளை எல்லாம் வருணித்தான். அதைக்கேட்ட இந்த இளைஞன், “உன்னைப் பார்த்தால் இளைஞனாகத்தானே தெரிகிறாய்! அப்படி இருக்க,

இந்த வயதிற்குள் எப்படி உன்னால் இத்தனை இடங்களையும் பார்க்க முடிந்தது?" என்று கேட்டான். வந்தவன் மூலிகைகள், மந்திர உச்சாடனம் என்பவற்றில் தான் கைதேர்ந்தவன் என்றும், குறிப்பிட்ட சில மூலிகைகளைக் காலில் தடவிக் கொண்டால் ஒரு விநாடி நேரத்தில் எத்தனை தூரமாக இருந்தாலும், விரும்பிய இடத்திற்குப் போய்ச் சேரலாம் என்றும் கூறினான். அவ்வாறு சொல்லியதோடு மட்டுமல்லாமல், விருந்தினனாக வந்த அவன் இந்த இளைஞன் காலில் பல மூலிகைகளைத் தேய்த்து விட்டான். இந்த இளைஞன் இமய மலைக்குச் சென்று பார்க்கவேண்டும் என்று நினைத்த மாத்திரத்தில், தான் இமயத்தின் உச்சியில் நிற்பதைக் கண்டான். அங்குள்ள செடி, கொடிகள், மரங்கள், அருவிகள், ஓடைகள் என்பவற்றைப் பார்த்துத் தன்னை மறந்து நின்றான். நின்ற இடம் பனிக் கட்டியும் ஈரமும் இருந்த இடம் ஆதலின், மெல்ல அவன் காலில் தேய்த்திருந்த மூலிகைகள் கரைந்து ஓடிவிட்டன. அதை அறியாத இளைஞன் மாலை நேரத்தில் தன் ஊருக்கு வரவேண்டும் என்று நினைத்தான். காலில் மூலிகை இல்லாததால் அவனால் எங்கும் செல்ல முடியவில்லை.

இந்த நிலையில், அவன் அழகைக் கண்டு மயங்கிய வருதினி என்ற அப்சரஸ் அவனை நாடி தன்னை மணந்து கொள்ள வேண்டும் என்று கேட்டாள். ஆனால் இந்தப் பிராமணன் அவள் அன்பை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. பழைய முறையில் ஆகாய மார்க்கமாக வர முடியாதாகையால், அக்னி தேவனை வேண்டி, அவன் உதவியால் தன் இருப்பிடம் வந்து சேர்ந்தான்.

அவன் போய்விட்டாலும் அவனையே நினைந்து மெலிந்த வருதினி அந்த வனத்திலேயே தங்கி விட்டாள். முன்னர் அவளால் வேண்டாம் என்று ஒதுக்கப்பட்ட கலி என்ற

கந்தர்வன் இப்போது அவள் மனநிலை அறிந்து, அவள் விரும்பிய பிராமண இளைஞனின் வேடம் கொண்டு அவளிடம் வந்தான். உண்மை அறியாத வருதினி அவனை மணந்து கொண்டாள். அவர்களுக்கு ஒரு பிள்ளையும் பிறந்தது. உடனே அக்கலி அவளைவிட்டுப் போய்விட்டான். வருதினியின் மகன் ஸ்வரோச்சா வளர்ந்து பெரியவனாகி சாத்திரங்களை எல்லாம் கற்றுத் தேர்ந்து அழகுள்ள இளைஞனாக இருந்தான்.

ஸ்வரோச்சா ஒருமுறை மந்தார மலைக்குச் சென்ற பொழுது ஓர் இளம்பெண் 'என்னைக் காப்பாற்றுங்கள்' என்று சொல்லி அவன் எதிரே வந்தாள். "ஏன் ஓடி வருகிறாய்? உனக்கு என்ன தீங்கு ஏற்பட்டது?" என்று ஸ்வரோச்சா கேட்ட உடன், அப்பெண் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள். "ஐயா! மனோரமா என்ற நானும், விபவரி, கலாவதி என்ற என் தோழிகளுடன் கைலாசத்தில் சுற்றிப் பார்த்துக் கொண் டிருந்தோம். முனிவர் ஒருவர் பெருந்தவத்தில் ஈடுபட்டிருந்த தால், அவருடைய உடம்பு இளைத்து, கண்கள் குழி விழுந்து பார்ப்பதற்கு பயங்கரமான தோற்றத்துடன் இருந்தார். அவரைப் பார்த்து நான் ஆணவத்தால் கேலி செய்துவிட்டேன். 'ஒரு ராட்சசன் வந்து என்னைப் பிடித்துக் கொள்வான்' என்று சாபமிட்டார். 'இவ்வளவு கொடிய சாபம் தருவது ஒரு முனிவருக்கு அழகல்ல' என்று என் தோழிகள் சொன்னவுடன், அவர் மேலும் கோபம் கொண்டு, 'ஒருத்திக்குக் குஷ்ட ரோகமும், இன்னொருத்திக்கு க்ஷயரோகமும் பிடிக்கட்டும்' என்று சாபமிட்டார்.

"இது நடந்து மூன்று நாட்களாயின. இப்போது ஒரு கொடிய ராட்சசன் என்னைப் பின்தொடர்ந்து வருகிறான். என் கையில் ஓர் அற்புதமான ஆயுதம் இருக்கிறது. இந்த

ஆயுதம் ருத்ரனால், சுவயம்பு மனுவிற்குத் தர, சுவயம்புமனு அதை வசிட்டருக்குத் தர, வசிட்டர் அதை என் தாத்தாவிற்குத் தர, என் தாத்தா எனக்கு அதைத் தந்துள்ளார். எப்படிப் பட்டவரையும் அழிக்கக்கூடிய இந்த ஆயுதத்தை எப்படி வைத்திருப்பது, எப்படிப் பிரயோகிப்பது, எப்படி மீட்டுக் கொள்வது என்பதை நான் உங்களுக்குச் சொல்லித் தருகிறேன்" என்று கூறிவிட்டு, அந்த வித்தையினை அவனுக்குக் கற்றுத் தந்தாள். ஸ்வரோச்சா ஆயுதத்தை வாங்கிக் கொண்டதும் அரக்கன் அப்பெண்ணைப் பிடிக்க வந்தான். முனிவருடைய சாபப்படி பெண்ணைப் பிடிக்கட்டும். பிறகு மீட்டு விடலாம் என்ற நினைவில் ஸ்வரோச்சா சும்மா இருந்தான். அரக்கன் அப்பெண்ணைப் பிடித்துக் கொண்ட வுடன், இவன் ஆயுதத்தைக் கையில் எடுத்தான். அப்போது அந்த அரக்கன், 'என் கதையைக் கேள்' என்று தன் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினான்.

**அரக்கனின் கதை**

"இளைஞனே! என் சொல்லைக் கேட்டு என்னைக் கொன்று விடாமல் விட்டாயே, உனக்கு என் நன்றி. இப் பெண் என்னுடைய மகள்தான். இவளுடைய தந்தையாகிய எனக்கு இந்திவரா என்று பெயர். ஆயுர்வேதத்தில் மிக வல்லவராகிய பிரமமித்ராவிடம் சென்று அவ்வித்தையைக் கற்றுக் கொடுக்குமாறு கேட்டேன். அவர் மறுத்து விட்டார். எனவே அவருக்குத் தெரியாமல் ரகசியமாக மற்ற மாணவர் களுக்குப் பாடஞ்சொல்லும் பொழுது ஒட்டுக் கேட்டேன். இக்கலையை நன்கு தெரிந்து கொண்டேன். நான் இக்கலையில் வல்லவனாகிய செய்தி எப்படியோ பிரமமித்திரருக்குத் தெரிந்து விட்டது. அரக்கனாகப் போகுமாறு சபித்து விட்டார். அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டேன். மனமிரங்கிய

அவர், 'நீ ராட்சசனாகத் திரியும் பொழுது உன் மகள் என்று தெரியாமலேயே அவளைப் பிடித்துத் தின்ன முற்படுவாய். அந்த விநாடியில் உனக்கு விடுதலை கிடைக்கும்' என்று விமோசனம் தந்தார். இப்பொழுது இவள் என் கையில் சிக்கியவுடன் என் சாபம் தீர்ந்து விட்டது. தயைகூர்ந்து என் மகளை நீ திருமணம் செய்து கொள்" என்று கூற, ஸ்வரோச்சா அதற்குச் சம்மதித்தான் என்றாலும் மனோரமா, "என் தோழிகள் இருவரும் இந்தப் பரிதாபமான நிலையில் இருக்கும் பொழுது நான் மட்டும் எப்படி மணம் செய்துகொண்டு மகிழ்ச்சியாக இருக்கமுடியும்?" என்றாள். அதைக்கேட்ட ஸ்வரோச்சா மனோரமாவின் தந்தையான இந்திவராவிடம் கற்றுக்கொண்ட ஆயுர்வேதத்தைப் பயன்படுத்தி, அவள் தோழிகள் இருவரையும் குணப்படுத்தினான். பின்பு மூவரையும் திருமணம் செய்து கொண்டான். இம் மூவருள் விபவரி உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் பேசும் மொழியை அறிந்தவளாதலின், அக்கலையை அவனுக்குக் கற்றுக் கொடுத்தாள்.

### இரண்டாவது மனுவின் கதை

மூன்று மனைவிகளுடன் வாழ்ந்த ஸ்வரோச்சா, மனோரமாவின் மூலமாக விஜயன் என்ற மகனையும், விபவரியின் மூலமாக மேருநந்தா என்ற மகளையும், கலாவதி மூலமாகப் பிரபதா என்ற மகனையும் பெற்றான். இம் மூவரும் பருவம் அடைந்தவுடன் ஸ்வரோச்சா தன் மூன்றாவது மனைவி கலாவதியிடம் கற்றுக் கொண்ட பத்மினி சக்தியைப் பயன்படுத்தி மூன்று நகரங்களை நிர்மாணித்தான். மற்றொரு நாள் ஸ்வரோச்சா வேட்டையாடச் சென்றபொழுது ஒரு காட்டுப் பன்றியைத் துரத்திச் சென்று அதன்மேல் அம்பு எய்கையில், ஒரு மான் எதிரே வந்து, 'ஸ்வரோச்சா! அதன்

மேல் அம்பை எய்யாதே! என் மேல் எய்து என்னைக் கொன்றுவிடு' என்றது. ஆச்சரியம் அடைந்த ஸ்வரோச்சா, "நீ யார்? நான் ஏன் உன்னைக் கொல்ல வேண்டும்?" என்று கேட்டான். அதற்கு அந்த மான், 'நான் உன்மேல் அளவற்ற காதல் கொண்டுள்ளேன்' என்றது. ஸ்வரோச்சா சிரித்துக் கொண்டே "ஒரு மனிதன் மானை எப்படி மணம் புரிய முடியும்?" என்றான். அதற்கு அந்த மான், "உனக்குச் சந்தேகம் இருந்தால் என்னைக் கட்டிப் பிடித்துக் கொள்" என்றது. மான் சொன்னபடியே ஸ்வரோச்சா அதனைக் கட்டிப் பிடித்தான். உடனே அது அழகிய பெண்ணாக மாறிற்று. நான் இந்த வனத்திற்கு அதிதேவதை. என்னை மணந்து கொள் என்று கூறியவுடன் ஸ்வரோச்சா நான்காவது மனைவியாக அப் பெண்ணை ஏற்றுக் கொண்டான். நாளடைவில் அவ்விரு வருக்கும் ஓர் அழகான குழந்தை பிறந்தது. அக்குழந்தை பிறந்த பொழுது கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரஸ்கள் ஆடினார்கள். தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். அக்குழந்தை உடம்பிலிருந்து பரவிய ஒளி எட்டுத் திக்கும் பரவிச் சென்றது. குழந்தைக்கு 'தையுதிமனு' என்று பெயர் இட்டனர். இக் குழந்தை ஸ்வரோசிஷா மன்வந்திரத்தின் தலைவனாக, இரண்டாவது மனுவாக உள்ளவன் ஆவான்.

### மூன்றாவது மனுவின் கதை

துருவனின் தந்தையான உத்தானபாதன், சுருச்சி என்ற இரண்டாவது மனைவி மூலம் பெற்ற பிள்ளை உத்தமன் ஆவான். மிக்க பராக்கிரமசாலியும், நற்பண்புகளும் உடைய உத்தமன் மனைவி வகுளா என்பவள் ஆவாள். உத்தமன் மனைவியைப் பெரிதும் நேசித்தாலும், வகுளா அவனை அவ்வளவு நேசிக்கவில்லை. அவன் எவ்வளவு பரிசுகள் தந்தாலும் அவள் அதனால் திருப்தி அடையவில்லை. ராஜ

சபையில் உத்தமனும் வகுளாவும் அமர்ந்திருக்கும் பொழுது திராட்சைரசம் அருந்திக் கொண்டிருந்த உத்தமன் அதில் கொஞ்சம் வகுளாவிற்கும் தந்தான். ஆனால் வகுளா அந்த உபசரிப்பை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டாள். பலர் முன்னிலையில் தான் அவமானப்படுத்தப்பட்டதாக நினைத்துச் சினம் கொண்ட உத்தமன், காவலர்களை அழைத்து வகுளாவைக் காட்டில் விட்டுவரச் செய்து விட்டான். வேறு மணம் செய்து கொள்ளாமல், ஆட்சி நடத்தி வந்தான்.

ஒரு நாள், அரச சபையில் ஒரு பிராமணன் வந்தான். “அரசே! என்னுடைய மனைவியை யாரோ கவர்ந்து சென்று விட்டார்கள். அவளை எப்படியாவது மீட்டு வரவேண்டும்” என்றான். “ஆயிரக்கணக்கான பெண்கள் உள்ள நாட்டில் உன் மனைவியை எங்கே தேடுவது? அது முடியாத காரியம்” என்றான் அரசன். அதைக்கேட்ட பிராமணன், “அரசே! எங்கள் வருமானத்தில் ஆறில் ஒரு பங்கு உனக்கு வரியாகச் செலுத்து கிறோம். எதற்காக அதைச் செலுத்துகிறோம்? எங்களைக் காப்பாற்ற வேண்டியது உன் பொறுப்பு” என்றான். இதைக் கேட்ட அரசன் வேறு வழியில்லாமல் “உன் மனைவியின் அடையாளத்தைச் சொல்!” என்றான். பிராமணர், “அவள் ஒல்லியாக, அழகே இல்லாத முகத்துடன், அவலட்சணமாக இருப்பாள்” என்றான். அரசன், “இப்படிப்பட்ட ஒரு மனைவி போய்விட்டதற்காக நீ ஏன் வருந்த வேண்டும்?” என்று கேட்டான். பிராமணன் அதற்கு, “அவள் எப்படி இருந்தாலும் என்னுடைய மனைவி, அவளைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை” என்றான். வேறு வழியில்லாமல் உத்தமன் ரதத்தில் ஏறிப் புறப்பட்டான். எங்கெல்லாம் தேடியும் கிடைக்காமையால் காட்டில் இருந்த ஒரு முனிவரிடம் சென்றான். அரசனை வரவேற்ற முனிவர் தன் சிஷ்யனைப் பார்த்து, ‘உபசரிக்கின்ற பொருட்களைக் கொண்டு வா!’ என்றார். சிஷ்யன் அரசன்

முகத்தைப் பார்த்துவிட்டு, 'அதற்குத் தேவையில்லாத பாத்திரம் இது' என்று கூறிவிட்டுப் போய்விட்டான். இருந்தாலும் முனிவர் அரசனை அமரச் செய்து வந்த விஷயம் என்ன என்று விசாரித்தார். முனிவர், "முக்காலமும் அறிந்தவன் நான். என் சீடனுக்கும் இதைச் சொல்லிக் கொடுத் திருக்கிறேன். உன் வாழ்க்கை முழுவதையும் என்னால் பார்க்க முடிகிறது. அதனால்தான் உன் முகத்தைப் பார்த்து, 'உபசரிப்புக்குத் தகுதியில்லாதவன் நீ' என்று கூறிவிட்டான். இருந்தாலும் உன்னைப் பற்றிக் கவலை கொள்ளாமல் பிராமணன் மனைவியைத் தேடி வந்திருக்கிறாய். ஆதலால் உனக்கு உதவ வேண்டியது என் பொறுப்பாகிறது. வலகா என்ற ராட்சசன், உட்பலவதா என்ற காட்டில் அவளை ஒளித்து வைத்திருக்கிறான். நீ சென்று அவளை மீட்டுப் போ" என்று கூறிவிட்டார்.

அசுரன் இருக்குமிடத்தை நாடிச் சென்றான் உத்தமன். அந்த ராட்சசன் அரசனைக் கண்டதும் விழுந்து வணங்கி, "அரசே! என் இருப்பிடம் தேடி வந்த காரணம் யாது?" எனக் கேட்டான். உத்தமன், "நீ பிராமணன் மனைவியை அபகரித்துக் கொண்டு வந்திருக்கிறாய். அவளைத் தின்னப் போகிறாயா? அல்லது மணம் செய்து கொள்ளப் போகிறாயா?" என்று கேட்டான். அதற்கு ராட்சசன், "அரசே! நீங்கள் நினைப்பது போல் நரமாமிசம் தின்னும் ராட்சசன் அல்ல நான். பிராமணன் மனைவியைத் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை. அழகான மனைவியர் பலர் எனக்கிருக் கின்றனர்" என்றான். உத்தமன், "அப்படியானால் இவளை ஏன் சிறைப்பிடித்தாய்?" என்று கேட்க, அரக்கன், "அரசே! எனக்கு அதீத சக்திகள் பல உண்டு. ஒருவரைக் கண்டால் அவரிடம் உள்ள தீய குணங்களை எல்லாம் உறிஞ்சி விடுவேன். அந்தப் பிராமணப் பெண்ணின் தீய குணங்களை

உறிஞ்சிவிட்டேன். இவளைக் கொண்டு வந்ததற்கு முக்கிய காரணம் உண்டு. இவள் கணவன் ராட்சசர்களை ஒழிப்பதற்கும், துன்புறுத்துவதற்கும் நிறைய யாகங்கள் செய்கிறான். இந்த யாகங்களில் முக்கியமானது என்ன வென்றால், ஒருவன் மனைவியோடு இருந்துதான் யாகம் செய்ய வேண்டும். இவளைத் தூக்கி வந்துவிட்டபடியால், பிராமணன் இனி யாகம் செய்ய முடியாது. இப்போது அவளை உன்னுடன் அனுப்புவதில் தடையில்லை" என்று கூறி அனுப்பிவிட்டான்.

பிராமணன் கூறியதும், முனிவர் கூறியதும் உத்தமன் மனத்தை வாட்டிக் கொண்டிருந்தது. இறுதியாக உத்தமன் அந்த முனிவரிடம் சென்று "என் மனைவி எங்கிருக்கிறாள்" என்று கேட்டான். முனிவர், "அவள் காட்டில் திரிந்து கொண்டிருக்கும் பொழுது கபோதகா என்ற நாக அரசன் அவளை எடுத்துச் சென்று மணம் செய்து கொள்ளும் நோக்கத்தில் வைத்திருந் தான். ஆனால் கபோதகனுக்கு ஏற்கெனவே மனோரமா என்ற மனைவியும், நந்தா என்ற மகளும் இருந்தனர். நந்தா என்ற அந்தப் பெண் தன் தாயை விட்டு விட்டுத் தன் தகப்பன் வேறொரு பெண்ணை மணப்பதை விரும்பவில்லை. எனவே, உத்தமன் மனைவியாகிய வகுளாவை ஒளித்து வைத்து விட்டாள். கபோதகா கேட்ட பொழுது அவள் கூட்டிவர மறுத்து விட்டாள். அதனால் சினம் கொண்ட கபோதகன் மகளை ஊமையாகப் போகுமாறு சாபமிட்டான். இதுதான் உன் மனைவியின் நிலை" என்று முனிவர் சொல்ல, உத்தமன், பிராமணன் மனைவியைத் திருப்பித் தந்த ராட்சசன் உதவியை நாடினான். அந்த ராட்சசன் நாகலோகம் சென்று, கபோதகனின் கெட்ட குணத்தையும், வகுளாவின் குணத்தையும் மாற்றி விட்டான். பிறகு வகுளாவையும், கபோதகன் மகளையும் அழைத்து வந்த ராட்சசன் உத்தமனிடம்

ஒப்படைத்தான். பேச்சை இழந்துவிட்ட கபோதகன் மகள் நந்தாவை மறுபடியும் பேச வைப்பதற்காக பிராமணனைக் கொண்டு யாகம் செய்வித்து, பேசுமாறு செய்தான். உடனே அந்தப் பெண் வகுளாவிற்கு வரம் தந்தாள். "உன் வயிற்றில் மூன்றாவது மனுவாகப் பிரபஞ்சத்தை ஆட்சி செய்யப் போகும் ஓர் அழகிய மகன் பிறப்பானாக!" என்று கூறிவிட்டுப் போய்விட்டாள்.

காலாந்திரத்தில் உத்தமனுக்கும் வகுளாவிற்கும் 'ஔத்தமா' என்ற மகன் பிறந்தான். தேவர்கள் மலர் மாரி பொழிந்தனர். அவனே மூன்றாவது மனுவாகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டான். அவன் காலத்தில் இந்திரப் பதவி வகித்தவன் சுஷந்தி என்று அழைக்கப்பட்டான்.

### நான்காவது மனுவின் கதை

முன்னொரு காலத்தில் மிக்க பராக்கிரமம் வாய்ந்த சுவரஷ்டிரா என்ற மன்னன் ஆட்சி செய்துவந்தான். அவனுக்கு மட்டும் நீண்ட ஆயுள் இருந்ததே தவிர, அவன் நூறு மனைவிமார், அமைச்சர்கள் ஆகிய யாவரும் காலாந்திரத்தில் இறந்து விட்டனர். தனியாக விடப்பட்ட மன்னனுடைய சக்தியும் குறையலாயிற்று. இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, வியர்தா என்ற பகை மன்னன் போரில் இவனைத் தோற்கச் செய்து, இவன் நாட்டையும் எடுத்துக் கொண்டான்.

எல்லாவற்றையும் இழந்த சுவரஷ்டிரா காட்டில் தவம் புரியலானான். மழைக் காலத்தில் வெட்ட வெளியில் நின்று தவம் செய்யும் பொழுது, பல நாட்கள் ஓயாது மழை பெய்து, பெருவெள்ளம் வந்தது. அந்த வெள்ளம் அடித்துச் செல்ல நடு வெள்ளத்தில் அகப்பட்ட அவன் மிகவும் கவலைப் பட்டான். அவ் வெள்ளத்தில் ஒரு மான் வர, அதன் வாலைப்

பிடித்துக் கொண்டு வெள்ளத்தைக் கடக்க முயன்றான். ஆனால் மான் தண்ணீருக்குள் புகுந்து பாதாள லோகம் சென்றது. பொன்மயமான அந்த நகருக்கு அழைத்துச் சென்ற மான், தன் கதையைச் சொல்லிற்று. போன ஜென்மத்தில் அந்த மான் உத்பலவதி என்ற பெயருடன் அவன் மனைவியாக இருந்தவள். அவள் சிறுமியாக இருந்தபொழுது அவள் அடுத்த பிறப்பில் மானாகப் பிறக்கக் கடவள் என்று சுதபா முனிவர் சாபம் கொடுத்தார். இப்பொழுது சுவரஷ்டிராாவிற்கும், அந்த மானுக்கும் ஒரு மகன் பிறந்தான். அந்தப் பிள்ளை பிறக்கின்ற நேரத்தில் உலகம் முழுதும் இருண்டு கிடந்ததால் தாமசமனு என்று பெயரிடப்பட்டான். அந்தக் குழந்தை பெரியவனாகி சூரியனை நோக்கித் தவம் இருந்து பல ஆயுதங்களைப் பெற்று, தன் தந்தையை வென்றவனைப் பழி வாங்கி உலகம் முழுவதையும் வென்றான். இந்த நான்காவது மனுவின் காலத்தில் இந்திரப் பதவியில் இருந்தவன் ஷிகி என்பவன் ஆவான்.

### ஐந்தாவது மனுவின் கதை

ரிதவக் என்ற முனிவர் நீண்ட காலம் மகப்பேறு இல்லாமல் இருந்தார். ரேவதி நட்சத்திரத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. எல்லாக் கெட்ட பழக்கங்களையும் பெற்ற அவன் தீயவனாக வாழ்ந்தான். இதனால் மனத்துயர் அடைந்த முனிவர் நோய்வாய்ப்பட்டார். அவர் மனைவி தொழுநோயால் பீடிக்கப்பட்டாள். இதன் காரணத்தை அறிய விரும்பிய ரிதவக் முனிவர், கார்க முனிவரை அடைந்து, "நான் நேர்மையானவன், தவம் செய்தவன். எனக்கு இப்படி ஒரு பிள்ளை பிறந்துள்ளது. நான் செய்த பாவத்தினாலா அல்லது என் மனைவி செய்த பாவத்தினாலா, அல்லது குழந்தை செய்த பாவத்தினாலா? எதனால் இப்படி ஒரு குழந்தை

பிறந்துள்ளது?" என்றார். கார்க முனிவர், "ரிதவக் முனிவரே! இப்பிள்ளை இப்படி இருப்பதற்கு நீங்கள் சொல்லிய எதுவும் காரணமன்று. அவன் பிறந்த பொழுது, விண்ணில் ஆட்சி செலுத்திய ரேவதி நட்சத்திரம்தான் அந்தக் கோளாறுக்குக் காரணம்" என்றார். அதைக் கேட்ட ரிதவக் முனிவர் "இப்படித் தீய விளைவுகளை ஏற்படுத்தும் ரேவதி நட்சத்திரம், ஆகாயத்தில் இருந்து கீழே விழுந்து விடட்டும்" என்று சபித்தார்.

அதிசயத்திலும் அதிசயம் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே ரேவதி நட்சத்திரம் குமுத மலையின் மேல் விழுந்தது. அதனால் அம்மலையும், அதைச் சுற்றியுள்ள பிராந்தியமும் ஒளி வெள்ளத்தில் மூழ்கியது. இந்த இடத்தில் புதிய தாமரைக் குளங்கள் தோன்றலாயின. அதனால் அந்த இடம் 'ரைவதக' என்று பெயர் பெற்றது. இந்தக் குளங்களில் உள்ள தாமரையில் இருந்து ரேவதி என்ற அழகான பெண் வெளிவந்தாள். பிரமுச்சா என்ற முனிவர் அவளை வளர்த்து வந்தார். அவள் மணப் பருவத்தை அடைந்தவுடன், அவளுக்கு ஏற்ற கணவனைத் தேட விரும்பினார் முனிவர். அக்னி தேவனை அழைத்து தன் மகளுக்கு ஏற்ற மணாளன் யார் என்று கேட்டார். "'துர்கமா' என்ற மன்னன் எல்லா விதத்திலும் ரேவதிக்கு ஏற்றவன்" என்று கூறினான், அக்னி. இது நடைபெற்ற சில நாட்கள் கழித்து துர்கமா என்ற மன்னனே வேட்டையாட வந்தான். பிரமுச்ச முனிவரின் ஆசிரமத்தில் நுழைந்தான். அவனைக் கண்ட முனிவர் தன் பெண்ணின் கதையைச் சொல்லி, அக்னி தேவன் கூறியதைச் சொன்னார். மன்னன் மணம் புரிய ஒப்புக் கொண்டான். ரேவதி ஓர் ஒப்பத்தக்க வரையறை விதித்தாள். அதன்படி கீழே விழுந்த ரேவதி நட்சத்திரம் பழையபடி ஆகாயத்தில்

தன்னிடத்திற்குப் போகக் கூடுமேயானால் மணத்தை ஏற்றுக் கொள்வதாகக் கூறினாள். பிரமுச்ச முனிவர் தன் தவ வலிமையால் ரேவதியை ஆகாயத்திற்கு ஏற்றினார்.

துர்கம மன்னனைப் பார்த்து, மகளை மணம் செய்து கொண்ட மகிழ்ச்சியில் "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு அந்த மன்னன், "முதல் மனுவாகிய சுவயம்பு மனுவின் பரம்பரையில் வருகிறவன் நான். அடுத்த மனு என் மகனாகப் பிறக்க வேண்டும்" என்றான். 'அப்படியே ஆகட்டும்!' என்றார் முனிவர்.

துர்கமாவுக்கும், ரேவதிக்கும் பிறந்த குழந்தை 'ரைவத' மனு என்ற பெயரைப் பெற்று உலகை ஆட்சி செய்தது. இந்த மனுவின் காலத்தில் இருந்த இந்திரனுக்கு ரிபு என்ற பெயர் இருந்தது.

## ஆறாவது மனுவின் கதை

சக்ஷீசா என்ற பெயருடன் வாழ்ந்த ஆறாவது மனுவின் கதை. இந்த மனு பழம்பிறப்பில் பிரம்மாவின் கண்ணி லிருந்து தோன்றியதால், இவனுக்கு சக்ஷீசா என்று பெயர். (சக்ஷீ—கண்). அனமித்ர என்ற முனிவருக்கும், பத்ரா என்ற மனைவிக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு ஜதீஸ்மரா சக்தி உண்டு. பத்ரா, குழந்தையை மடியில் போட்டுக் கொஞ்சிக் கொண்டிருந்தாள். திடீரென்று குழந்தை சிரித்தது. ஆச்சரியப்பட்ட தாய் "ஏன் சிரிக்கிறாய்?" என்றாள். "சிரிக்காமல் என்ன செய்வது? பக்கத்தில் இருக்கும் பூனை சந்தர்ப்பம் கிடைத்தால் என்னைத் தின்னலாம் என்று பார்க்கிறது. ஜதஹார்ணி என்ற பெண் பிசாசும் சந்தர்ப்பம் கிடைத்தால் என்னைத் தின்னப் பார்க்கிறது. நீ மட்டும் என்ன? என்னைக் கொஞ்சுவதால் உனக்கு சந்தோஷம் உண்டாகிறது.

நான் வளர்ந்தவுடன் தாய் என்ற முறையில், 'இது வேண்டும், அது வேண்டும்' என்று கேட்கப் போகிறாய். உலகத்தில் உள்ள அனைவரும் சுயநலவாதிகளே தவிர வேறு இல்லை." இதைக் கேட்ட பத்ரா மிக்க கோபத்துடன் குழந்தையைக் கீழே போட்டு விட்டு அப்பால் சென்றுவிட்டாள். இந்தச் சந்தர்ப்பத்தை எதிர் பார்த்திருந்த ஜதஹர்ணி பிசாசு, இக்குழந்தையைத் தூக்கிச் சென்று, விக்ரந்தா மன்னனின் மனைவியின் பக்கத்தில் இருக்கும் குழந்தைக்குப் பதிலாக இந்தக் குழந்தையைப் போட்டுவிட்டு, மன்னனின் குழந்தையை எடுத்துச் சென்றது. அக்குழந்தையை ஒரு பிராமணன் வீட்டில் போட்டுவிட்டு, பிறந்த குழந்தையினை எடுத்துத் தின்ன ஆரம்பித்தது. இது மாதிரி காரியங்களை இப்பிசாசு அடிக்கடி செய்து வந்தது.

விக்ரந்த மன்னன் தன் மனைவியின் பக்கத்தில் இருந்த குழந்தையைத் தன் குழந்தை என்று நினைத்து, ஒரு சத்திரியக் குழந்தைக்கு வேண்டிய அனைத்தையும் செய்தான். ஆனந்தன் என்று பெயரிட்டான். குழந்தை ஆனந்தனுக்கு ஒரு குரு நியமிக்கப்பட்டார். முதல் நாள் அந்த குரு ஆனந்தனைப் பார்த்து, "முதலில் உன் தாய் தந்தையருக்கு வணக்கம் சொல்லி வா" என்று கூறினார். ஆனந்தன் சிரித்துக்கொண்டே, "எந்தத் தாய், தந்தையரை வணங்குவது? பெற்றவர்களையா அல்லது வளர்த்தவர்களையா?" என்று கேட்டான். குரு குழப்பம் அடைந்தார். ஆனந்தன் நடந்தவற்றைக் கூறினான். அரசனுடைய உண்மையான குழந்தை பிராமணன் வீட்டில் வளர்கிறது என்று கூறினான். இந்தச் சிக்கலை எப்படித் தீர்க்கலாம் என்று குரு கவலைப்பட்ட பொழுது பிராமணன் வீட்டில் வளரும் சைத்ரா என்ற பையன்தான் உண்மையான அரசகுமாரன் என்று சொன்னான். மேலும், சைத்ராவைக் கொண்டு வந்து அரசனிடம் சேர்த்து விட்டு, முனிவர்

மகனாகிய தான் தவம் செய்யக் காட்டுக்குப் புறப்பட்டான். பிரம்மன் எதிரே வந்து, அவனைத் தடுத்து, "நீ காட்டிற்குப் போகக் கூடாது. சக்ஷீச மனு என்ற பெயருடன் இந்த உலகை ஆள வேண்டும். இந்தக் காலகட்டத்திற்கு சக்ஷீச மன்வந்திரம் என்ற பெயர் ஏற்படும்" என்று கூறினான். ஆனந்தன் இதை ஏற்றுக் கொண்டு, மன்னன் உக்கிரனுடைய மகளாகிய விதர்பாவை மணந்து உலகை ஆட்சி செய்தான். இந்த சக்ஷீச மனுவின் காலத்தில் இருந்த இந்திரனுக்குப் பெயர் மனோஜவா என்பதாகும்.

## ஏழாவது மனுவின் கதை

வைவஸ்வத மனுவின் கதை முன்னரே புராணத்தில் கூறப்பட்டுள்ளது. சாயாவுக்குப் பதிலாக இப்பொழுது சம்ஜனாவே மறுபடியும் சூரியனிடம் வந்து விட்டாள். இருந்தாலும், சூரியனுடைய மிகுதியான சக்தி அவளை வருத்தியது. அவளுடைய தந்தையாகிய விஸ்வகர்மா அவள் தாங்குமளவிற்குச் சூரியனின் ஆற்றலைக் குறைத்தார். அதிகப்படியாக சூரியனிடமிருந்து பெற்ற ஆற்றலை எல்லாம் ஒன்று திரட்டி சிவனுக்குரிய திரிசூலமாகவும், விஷ்ணுவின் சக்கரமாகவும், அஷ்ட வசுக்களுக்கும், சிவனுக்கும், அக்னிக்கும், சக்திகளாகப் பெற்றுக் கொடுத்தார். இவை அனைத்தும் போக எஞ்சிய சக்தியைப் பல தெய்விக ஆற்றல்களாகவும், குபேரனுக்குரிய பல்லக்காகவும் செய்து தந்தார். இப்பொழுது நடைபெறும் வைவஸ்வத மனுவின் மன்வந்திரத்தில் இந்திரனுக்கு உருஜஸ்வி என்பது பெயராகும்.

## எட்டாவது மனுவின் கதை

ஒவ்வொரு கர்ப்பத்திலும் பதினான்கு மனுக்கள் தோன்றுவர். அவர்களுடைய காலம் மன்வந்திரம் எனப்படும்.

இதுவரை ஏழு மனுக்களில் ஏழு மன்வந்திரங்கள் விளக்கப் பட்டன. எட்டாவது மன்வந்திரம், சூரியனுக்கும் சாயாவுக்கும் பிறந்த சுரன்னி என்பவனுடைய மன்வந்திரம் ஆகும். இந்த மன்வந்திரத்தில் தைத்திய மன்னனாகிய வலி இந்திரனாவான்.

**மது, கைடபன், மகாமாயா**

இரண்டாவது மன்வந்திரமாகிய ஸ்வரோசிஷா மன்வந்திரத்தில், சரதா என்று ஓர் அரசன் ஆட்சி செய்து வந்தான். சிலகாலம் கழித்துப் பகை அரசர்கள் அவனைத் தோற்கடித்து அவன் நாட்டைக் கைப்பற்றினர். மன்னன் தோல்வி அடைய அவனுடைய அமைச்சர்களில் சில துரோகிகளும் காரணமாக இருந்தனர். எல்லாவற்றையும் இழந்த மன்னன் காட்டிற்கு வந்து மேத்தா என்ற முனிவரின் ஆசிரமத்தில் தங்கி இருந்தான். அங்கு தங்கி இருந்தாலும் ஓயாமல் தன் நாட்டையும் மக்களையும் நினைத்துக் கொண்டே இருந்தான். ஒரு நாள் ஆசிரமத்திற்கு வெளியே வந்த பொழுது சமாதி என்ற வைசியனைச் சந்தித்தான். அவன் பெரிதும் வருந்தி இருந்ததால், நாட்டு மக்களின் நிலைமை எவ்வாறு உள்ளது என்று கேட்டான். தன்னுடைய மனைவி, பிள்ளைகளுமே தன் சொத்துக்களை எல்லாம் பறித்துக் கொண்டு தன்னை விரட்டி விட்டதை சமாதி சொல்லி அழுதான். இருவரும் சென்று முனிவர் மேத்தாவிடம் நடந்தவற்றைக் கூறி, 'ஏன் இப்படியெல்லாம் நடக்கிறது?' என்று கேட்டார்கள். அவர்கள் துயரக் கதையைக் கேட்ட மேத்தா முனிவர், "இது மகாமாயையின் திருவிளையாடலால் நடைபெறுகின்ற செயல்களாகும். இவை அனைத்தும் மாயையே. அதைப் புரிந்து கொண்டால் இதில் வருத்தப் படுவதற்கு எதுவுமே இல்லை" என்று கூறிவிட்டு, மகா மாயையின் திருவிளையாடலை விளக்க, மேத்தா முனிவர்

மது, கைடபர்கள் கதையைச் சொல்ல ஆரம்பித்தார். “இரண்டாவது மன்வந்திரத்தில் எங்கும் நீராக இருந்த பொழுது, விஷ்ணு அந்த நீரில் உறங்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவரது இரண்டு காதுகளில் இருந்தும் இரண்டு அசுரர்கள் வெளிப்பட்டனர். அவர்கள் திருமாலின் உந்தியில் இருந்த பிரம்மனைத் தாக்கினார்கள். நீண்ட போரில் அவரை வெல்ல முடியாத நிலையில் பிரம்மன் கண்களை மூடி மகாமாயையை தியானித்தார். உறங்கிக் கொண்டிருந்த விஷ்ணுவின் கண் இமைகளில் இருந்தும், வாயிலிருந்தும், புஜங்களிலிருந்தும் மகாமாயை வெளிப் பட்டாள். மகாமாயை வெளிப்பட்டதால், விஷ்ணுவே உறக்கத்தினின்று விழித்து விட்டார். நிலைமையைப் புரிந்து கொண்டு மது, கைடபர்களுடன் தானே போர் புரியத் துவங்கினார். இந்தப் போர் ஐயாயிரம் ஆண்டுகள் நீடித்தது. இறுதியாக மகாமாயையின் சக்தியால் மது, கைடபர்கள் உள்ளத்தில் தாங்களே வெற்றி பெற்றது போல ஒரு மாயத் தோற்றம் உண்டானது. அதை நம்பி அவர்கள் எக்களிப்புடன் விஷ்ணுவைப் பார்த்து, “நாங்கள் இருவரும் உனக்கு ஒரு வரம் தருகிறோம். நீ எது கேட்டாலும் தருகிறோம்” என்றார்கள். உடனே விஷ்ணு, “நீங்கள் இருவரும் என் கையால் சாக வேண்டும்” என்றார். மது, கைடபர்கள் ஏற்கெனவே வாக்குக் கொடுத்துவிட்டபடியால், வேறு ஒன்றும் செய்ய முடியாமல் “நீ கேட்ட வரத்தைத் தருகிறோம். அதில் ஒரு சிறு வரையறை உள்ளது. தாங்கள் எங்களைக் கொல்வது, எங்களுக்குத் திருப்தி அளிக்கக் கூடியதுதான். ஆனால் தண்ணீர் இல்லா இடத்தில்தான் எங்களைக் கொல்ல வேண்டும்” என்றனர். உடனே விஷ்ணு அந்த அசுரர்களைத் தன் தொடைமீது வைத்துத் தன் சக்கரத்தினால் அவர்களைக் கொன்றார்.

**மகிஷாசுர வதம்**

மேத்தா முனிவர் அரசிழந்த சுரதாவுக்கும், வீடிழந்த சமாதிக்கும் மகிஷாசுரன் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

முன்னொரு காலத்தில் புரந்தரன் என்பவன் இந்திரப் பதவி வகித்து வந்தான். மகிஷாசுரன் அசுரர் தலைவனாக இருந்தான். வழக்கம் போல் தேவாசுர யுத்தம் நூறு ஆண்டுகள் நடந்தன. அசுரர் கை ஓங்கியது. இந்திரர்களும் தேவர்களும் தேவருலகத்தில் இருந்து விரட்டப்பட்டனர். அவர்கள் பூவுலகைச் சுற்றித் திரிந்தார்கள்.

இந்திரனும், ஏனைய தேவர்களும் கூடி பிரம்மனிடத்தில் தங்கள் பரிதாப நிலையைக் கூறினர். தான் தனியே ஒன்றும் செய்ய முடியாது என்பதை அறிந்த பிரம்மன், அனைவரையும் அழைத்துக் கொண்டு சிவனும் விஷ்ணுவும் இருக்குமிடம் சென்றார். நடந்ததைக் கேட்ட சிவனும் விஷ்ணுவும் பெருங் கோபம் அடைந்தனர். அப்போது, அவர்கள் ஒவ்வொருவரிடம் இருந்தும் மாபெரும் ஆற்றல் வெளிப்பட்டது. சிவன், விஷ்ணு, பிரம்மன் ஆகிய மூவரிடம் இருந்தும் வெளிப்பட்ட ஆற்றல் களோடு, இந்திரன் முதலிய எட்டுத் திக்குபாலர்களிடமிருந்தும் ஆற்றல் வெளிப்பட்டது. இந்தச் சக்திகள் அனைத்தும் ஒன்று கூடியவுடன் அழகிய பெண் வடிவு கொண்டு நின்றது. இந்த மகாசக்தியின் வடிவில் சிவனுடைய ஆற்றல் முகமாகவும், விஷ்ணுவின் ஆற்றல் கைகளாகவும், யமனுடைய ஆற்றல் முடியாகவும், சந்திரன் ஆற்றல் மார்பகங்களாகவும், இந்திரன் ஆற்றல் இடையாகவும், வருணன் ஆற்றல் தொடையாகவும், பிரம்மனின் ஆற்றல் பாதங்களாகவும், சூரியனின் ஆற்றல் கால் விரல்களாகவும், அஷ்ட வசுக்களின் ஆற்றல் கைவிரல்

களாகவும், குபேரனின் ஆற்றல் மூக்காகவும், அக்னியின் ஆற்றல் மூன்று கண்களாகவும், பவனனின் ஆற்றல் காதுகளாகவும் உருவெடுத்தன. தங்கள் ஆற்றல் மூலம் வெளிப்பட்ட இப்பெண் உருவைப் பார்த்து தேவர்கள் பெரிதும் மகிழ்ந்தனர்.

இப்பெண்ணிற்குச் சிவன் திரிசூலத்தையும், விஷ்ணு சக்கரத்தையும், வருணன் சங்கையும், அக்னி சக்தியையும், வாயு அம்பு, வில், அம்பறாத்தூணி ஆகியவற்றையும், இந்திரன் வஜ்ராயுதத்தையும், ஐராவதம் என்ற யானையின் கழுத்தில் கட்டப்பட்டிருந்த மணியையும், யமன் நீண்ட கம்பையும், வருணன் பாசக் கயிற்றையும், தட்சன் மணிகள் பதித்த கழுத்து மாலையையும், பிரம்மன் ஒரு பாத்திரத்தில் புண்ணிய நீரை யும் கொடுத்தனர். சூரியன் தன் ஒளியினால் அவளுக்கு ஆற்றலையும், சந்திரன் ஒரு வாளும் கேடயமும், கடல் கழுத்து மாலையையும் துணிகளையும் கொடுத்தன. விஸ்வகர்மா கோடரிகள், கவசங்கள் முதலியவற்றைச் செய்து கொடுத்தான். வருணன் மாலைகளையும் தாமரை மலர்களையும், இமவான் ஆபரணங்களையும், ஏறிச் செலுத்த சிம்ம வாகனத்தையும், நாகங்களின் அரசன் பாம்புகளையும் மாலையினையும் கொடுத்தனர். ஏனைய தேவர்கள் தந்த மற்ற ஆயுதங்களின் எண்ணிக்கை கணக்கிலடங்காதது. இந்த அலங்காரங்களுடன் புறப்பட்ட சக்தி வெடிச்சிரிப்புச் சிரிக்க ஆரம்பித்தாள். அந்தச் சிரிப்பின் ஓசையில் உலகங்கள் அதிர்ந்தன. அன்னையின் வடிவைக் கண்ட தேவர்கள் 'ஜெய ஜெய காளி' என்று கோஷமிட்டனர். முனிவர்களும் ரிஷிகளும் கைகூப்பி வணங்கினர். தேவர் உலகத்தில் ஒரு பகுதியில் ஏற்பட்ட இந்த சப்தத்தைக் காதில் வாங்கிய அசுரர்கள், என்ன நடக்கிறது என்று புரியாததால் சென்று பார்க்க விரும்பினர்.

மகிஷாசுரன் படைகளைத் திரட்டிக் கொண்டு பார்க்கப் புறப்பட்டான். வந்தவனுக்கு அதுவரை தேவருலகத்தில் காணாத ஒரு காட்சி தென்பட்டது. ஒரு பெண் வடிவம் பெரிய சிங்கத்தின் மேலமர்ந்து இருப்பதைக் கண்டான். அந்தப் பெண்ணின் தரையில் ஊன்றிய இடது பாதம் பாதாளம் வரை சென்றது. அவளது திருமுடி விண்ணைப் பிளந்து கொண்டு மிக உயரத்தில் சென்றது. அவள் அமர்ந்திருக்கும் நிலை உலகம் முழுவதையும் வியாபித்து இருந்தது. அவளுடைய ஆயிரம் கைகள் திசைகள் அனைத்தையும் அணைப்பது போல் இருந்தன.

அசுரர்கள் தேவியிடம் போர் புரியத் தொடங்கினர். போருக்கு முதலில் புறப்பட்டவன் மகிஷாசுரனின் படைத் தலைவனான சிக்ஷீரா என்பவன் ஆவான். உதக்ரா, மஹாஹனு, சிலோமா, வஸ்கலா, பரிவரிதா, வீரலக்ஷா ஆகியோர் நால்வகைப் படையுடன் தாக்கியது போக, ரதங்கள், யானைகள் ஆகியவற்றைக் கொண்டு தனித்தனியாகவும் தேவியைத் தாக்கினர். மகிஷாசுரன் கோடிக்கணக்கான யானைகள், குதிரைகள் ஆகியவற்றைக் கொண்டு எதிர்த்தான். பல்லாயிரக்கணக்கான ஆயுதங்கள் பயன்படுத்தப்பட்டன. அரக்கர்கள் பாசக்கயிறு, அம்பு, வாள் ஆகியவற்றைக் கொண்டு போர் புரிந்தனர். தேவி தன் ஆயுதங்களால் இவை அனைத்தையும் பொடி ஆக்கினாள். அவள் வாகனமாகிய சிம்மம், பகைவர்களைத் தின்று தீர்த்தது. தேவியின் மூச்சுக் காற்றிலிருந்து பல கணங்கள் உருவாகி, மற்ற அசுரர் களுடன் போர் புரிந்தனர். தேவி ஆயிரக்கணக்கான அசுரர் களைத் தன் சூலாயுதத்தாலும், சக்தியினாலும், வாளினாலும் அழித்தாள். சிலர் அவள் மணியோசை கேட்டு மயக்கமாயினர். பலர் அவளது பாசக்கயிற்றில் கட்டப்பட்டனர். பலர்

கண், காது, கை, கால் எனப் பல உறுப்புகளை இழக்க வேண்டியதாயிற்று. இரத்த ஆறு ஓடியது. போர்க்களம் முழுவதும் இறந்து போன யானைகள், குதிரைகள், அசுரர்கள் ஆகியவற்றால் நிரம்பி இருந்தது. விநாடிப் பொழுதில் காய்ந்த மரங்களை நெருப்பு எரிப்பது போல் பகைவர்களை தேவி அம்பிகை எரித்தாள்.

தன்னுடைய சேனை பொடி தூரணம் ஆவதைக் கண்ட அசுரர் படைத்தலைவன் சிக்ஷீரா சுமேரு மலையில் மேகங்கள் மழை பொழிவது போல் பாணங்களைப் பொழிந்தான். தேவி இவற்றைத் தடுத்து அவனுடைய குதிரைகள், ரதம், வில் ஆகியவற்றைப் பொடி செய்தாள். இறுதியாக ஈட்டியால் அவனைக் கொன்றாள். சிக்ஷீராவிற்குப் பிறகு சமரா, உதக்ரா, தம்ரா, உக்ரஸ்யா, மஹாஹனு ஆகியோரைக் கொன்ற பின்பு, துர்முகன், துர்தரா ஆகியோரை வில்லினால் கொன்றாள்.

தன் சேனை சின்னாபின்னப்படுவதைக் கண்ட மகிஷாசுரன், ஓர் எருமை வடிவைப் பெற்றுக் கொண்டு, தேவியைத் தாக்கினான். தேவியின் படைகளைத் தன் கொம்பு களால் கொன்றான். இறுதியாக அன்னை ஏறியிருந்த சிம்மத்தை மகிஷாசுரன் தாக்க முற்பட்டதும், தேவிக்குச் சினம் ஏற்பட்டது. மாபெரும் எருமை வடிவம் கொண்ட அசுரனின் கால் குளம்புகள் பூமியைப் பிளந்தன. எருமையின் வாலாட்டத்தால் கடல் கொந்தளித்தது. அக் கொம்புகளில் பட்ட மலைகள் பொடியாயின. ஆனால் தேவி எருமையைத் தன் பாசக் கயிற்றால் பிணித்தாள்.

தேவி எருமையைப் பிணித்ததும், அசுரன் எருமை வடிவை நீத்து சிம்ம வடிவம் கொண்டான். சிம்மத்தின் தலையைத் தேவி துணித்ததும், சிம்மத்தின் உடலிலிருந்து வாளோடு வெளிப்பட்டான் அசுரன். பல பாணங்களையும் ஆயுதங்

களையும் அசுரன் மேல் செலுத்தவும், அவன் யானை வடிவம் எடுத்து தேவியின் வாகனமாகிய சிங்கத்தைத் துதிக்கையால் பற்றி இழுத்தான். தேவி யானையின் துதிக்கையை வெட்டவும், அசுரன் மறுபடியும் எருமை வடிவெடுத்தான். எருமை வடிவிலிருந்து அசுரன் முதுகில் ஏறி எருமையின் தலையைத் துணித்தாள் தேவி. எருமை உடலிலிருந்து மகிஷாசுரன் வெளி வருவதற்காகத் தலையை வெளியே நீட்டியவுடன், தலையைத் துணித்தாள் தேவி.

தேவர்கள் இதனைக் கண்டு மகிழ்ச்சியோடு பூமாரி பொழிந்தனர். அப்ஸரஸ்கள் நடனமாடினர். கந்தர்வர்கள் பாடினர்.

**சும்ப நிசும்பர் கதை**

முன்னொரு காலத்தில் சும்பன், நிசும்பன் என்ற அசுர சகோதரர்கள் மூன்று உலகத்தையும் வென்று ஆட்சி செய்தனர். மாபெரும் வெற்றி அடைந்த அவர்கள் இந்திரனுடைய ஐராவதம் முதல், அக்னியின் அஸ்திரம் வரை தமதாக்கிக் கொண்டனர். சிந்தாமணி, பாரிஜாதம் முதலிய அனைத்தும் அவர்களுடையதாயிற்று. சண்டன், முண்டன் என்ற இரண்டு பணியாளர்களை வைத்திருந்தனர். ஒருமுறை கலங்கிப் போன தேவர்கள் ஒன்றும் செய்ய முடியாமல் கைலாயமலையில் வந்து தவமிருந்தனர். பார்வதி தேவியார் அவ்வழியே சென்றபொழுது இவர்கள் அனைவரும் ஒன்றாகக் கூடி நின்று வணங்குவதைக் கண்டு, 'என்ன விஷயம்!' என்று கேட்க, அவர்கள் தங்கள் நிலையை எடுத்துக் கூறினர். இந்தக் கொடுமையைக் கேட்ட பார்வதி தன் உடம்பிலிருந்து சிவனையும் அம்பிகையையும் வெளிப்படுத்தினார். எல்லை மீறிய அழகுடன் அம்பிகை கைலையைச் சுற்றி வந்தாள். பணியாளர்களான சண்டனும் முண்டனும், அம்பிகையைப் பார்த்துவிட்டு தங்கள் தலைவர்

களாகிய சும்ப, நிசும்பரிடம் ஓடிச் சென்றனர். அவர்களைப் பார்த்து, "அரசே, இந்திரன் அவனுடைய யானையாகிய ஐராவதம், அவர் குதிரை உச்சைஸ்ரவம், பாரிஜாதம் முதலிய அனைத்தும் தங்களிடம் இருக்கின்றன. இனித் தாங்கள் போர் செய்வதற்கும் யாருமில்லை; அடைய வேண்டிய பொருளும் எதுவுமில்லை. ஆனால் இன்று நாங்கள் கைலை மலையைச் சுற்றி வரும்பொழுது அம்பிகை என்ற பெண்ணைப் பார்த்தோம். அவளைப் பார்த்த பிறகு உங்கள் நிறைவான வாழ்க்கையில் உள்ள குறை தெரிந்தது. அவளை நீங்கள் மனைவியாகப் பெற்றுவிட்டால், அடைய வேண்டிய பேறு எதுவுமில்லை!" என்று கூறினர்.

அதைக்கேட்ட சும்பன் மகிழ்ச்சி அடைந்து, "அப்படியானால் நீங்களே அவளிடம் சென்று நான் யார் என்பதை எடுத்துக் கூறி, அவளை மணக்கத் தயாராக இருக்கிறேன் என்ற செய்தியையும் சொல்லிவிட்டு வாருங்கள்" என்றான். அரசன் உத்தரவுப்படியே சண்டனும் முண்டனும் அம்பிகையிடம் வந்து சும்பனுடைய பெருமையையெல்லாம் எடுத்துக் கூறி, "அவர் தங்களை மணக்கத் தயாராக இருக்கிறார். உங்கள் சம்மதம் தேடி வந்தோம்" என்று கூறினர். அம்பிகை சிரித்துக் கொண்டே, "நான் ஒரு விரதம் பூண்டிருக்கிறேன். 'என்னை யார் போரில் தோற்கடிக்கின்றார்களோ அவர்களையே மணப்பது' என்று இருக்கிறேன்" என்று கூறவே, சண்டனும் முண்டனும் அரசரிடம் ஓடிச் சென்று நடந்ததைக் கூறினர். ஒரு பெண்ணுக்கு இவ்வளவு துணிச்சலா என்று கோபம் கொண்ட சும்பன், பெரும் படையுடன் சென்று சண்டனும் முண்டனுமே அம்பிகையைத் தாக்க வேண்டுமென்று ஆணையிட்டான். சும்பனின் ஆணைப்படி சண்ட முண்டர்கள் பெரும் படையுடன் வந்து அம்பிகையை எதிர்த்தனர். சண்ட

முண்டர்கள் படைகள் அனைத்தையும் அம்பிகை எரித்துச் சாம்பலாக்கினாள். தன் நெற்றியிலிருந்து காளியை உருவாக்கினாள். கரிய நிறமும், எல்லையற்ற படைக்கலங்களும், மிக நீண்ட நாக்கும் உடைய மகாகாளி உருவானாள். அம்பிகையை வணங்கி, "எனக்கிடும் பணி யாது?" என்று கேட்க, அம்பிகை "உன் வாயைத் திறந்து கொண்டிரு. எத்தனை அசுரர்களையும், அவர்கள் ஆயுதங்களையும் விழுங்க முடியுமோ அத்தனையையும் விழுங்கிவிடு" என்றாள். மகாகாளி சிம்ம வாகனத்தில் ஏறிச் சண்ட முண்டர்களின் தலையை வாளால் வெட்டினாள். காளி அம்பிகையிடம் சென்று, "தாயே என் பணி முடிந்து விட்டது. சும்ப நிசும்பர் களை நீயே அழித்தருள்வாயாக" என்று வேண்டினாள். காளியின் வீரத்தைப் போற்றிய அம்பிகை சண்டனை வென்றதால் சண்டி என்றும், முண்டனை வென்றதால் சாமுண்டி என்றும் பட்டம் அளித்தாள்.

இந்த நிலையில் சும்பன் பெரும் படையுடன் போருக்கு வந்தான். சும்பன் போருக்கு வந்ததும், அவன் பலத்தை எண்ணிச் சிவன் தன் சக்தியாகிய மகேஸ்வரியையும், விஷ்ணு வைஷ்ணவியையும், பிரம்மன் பிராமியையும், கார்த்திகேயன் கௌமாரியையும், இந்திரன் ஐந்திரியையும் அம்பிகைக்குத் துணையாக அனுப்பினர். இறுதிப் போர் நிகழுமுன்னர் அம்பிகை சும்பனிடம் சிவனைத் தூதாக அனுப்பினாள்.

சும்பனிடம் சென்ற சிவன், "உன் படைகளும், சண்ட முண்டர்களும் அழிந்து போனதை நீ பார்த்தாயல்லவா? மேலும் போர் செய்து அழியாமல் அமைதியாகக் கீழ் உலகம் சென்று பிழைத்துக் கொள்வதானால் அம்பிகை உன்னை ஒன்றும் செய்ய மாட்டாள்" என்று கூறினார்.

ஆணவத்தில் மிகுந்து நிற்கும் சும்பன் இதைக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. அவன் போருக்குப் புறப்படும் பொழுது, அவன் படைகளில் மிக முக்கியமானவனான 'ரக்தவிஜா' பெரும் படையுடன் போருக்கு வந்தான். அவன் உடம்பில் பல கணைகளைச் செலுத்தி உதிரம் உதிருமாறு செய்தாள் அம்பிகை. ஆனால் அவள் எதிர்பாராத ஒன்று அங்கே நடந்தது. அவன் இரத்தம் பூமியில் விழவும், ஒவ்வொரு சொட்டு இரத்தமும் அவனைப் போலவே ஒரு ரக்தவிஜாவாக மாறிவிட்டது. உடனே அம்பிகை காளியை விளித்து, "நீ வாயைத் திறந்து அவன் உடம்பிலிருந்து ஒரு சொட்டு இரத்தம் கூடக் கீழே விழாதபடி அதனை விழுங்கிவிடு!" என்று ஆணையிட்டாள். காளி அவ்வாறு செய்யவே, ரக்தவிஜாவின் வாழ்க்கை முடிந்தது.

அதன்பிறகு அம்பிகை சும்ப, நிசும்பர்களோடு பெரும் போர் செய்து இருவரையும் இறுதியில் கொன்றுவிட்டாள்.

இக்கதையை சுரதா, சமாதி இருவருக்கும் கூறிவிட்டு மேத்தா முனிவர், தேவியின் திருவருளைப் பெற ஒரே வழி அவளைப் பிரார்த்திப்பதுதான் என்று கூறினார். அவர்கள் இருவரும் தவத்தை மேற்கொண்டனர். தேவி பிரசன்னமான வுடன் சுரதா, "தோல்வியே காணாத மன்னனாகப் பிறக்க வேண்டும்" என்று வேண்டினான். அடுத்த பிறப்பில் 'சவர்னி' மனுவாகப் பிறப்பான் என்று அன்னை வரமளித்தாள். சமாதி, தேவியின் திருவருள் ஒன்றே போதும் என்று கூறி, உண்மையான ஞானத்தை அறிந்து கொண்டான்.

*(இதன்பிறகு மார்க்கண்டேய புராணத்தில் எட்டு முதல் பதினான்கு மன்வந்திரங்கள் இந்திரன் என்ற பெயருடன் இருப்பான் என்றும், யார் யார் சப்த ரிஷிகளாயிருப்பர் என்றும் தரப்பட்டுள்ளது.)*

## பிரபஞ்சப் படைப்பு

ஆதியில் தோன்றிய பிரம்மன் தனது வலக்கைச் சுண்டு விரலில் இருந்து தட்சனையும், இடக்கைச் சுண்டு விரலில் இருந்து தட்சன் மனைவியையும் உண்டாக்கினார். தட்சன் மகளான அதிதி, காசிப முனிவரை மணந்து, மார்த்தாண்டா என்ற பெயருடன் சூரியனைப் பிள்ளையாகப் பெற்றார்கள். பிரபஞ்சத் தொடக்கத்தில், பிரம்மாண்டமாகிய முட்டையி லிருந்து பிரம்மனுடன் சேர்ந்தே சூரியனும் உடன் தோன்றி னான். அவனுடைய வெப்ப மிகுதியால் பிரம்மன் படைப்புச் சீர் குலைந்தது. செடி கொடிகள் கருகின. தண்ணீர் ஆவியாகப் போய்விட்டது. இவை இரண்டும் இல்லாமல் உயிர்கள் வாழ முடியாதாகையால், பிரம்மன் சூரியனைக் குறித்துத் தவம் இயற்றினான். மனம் இரங்கிய சூரியன் தன் சக்தியைக் குறைத்துக் கொண்டான். நீர் வந்தது. செடி கொடிகள் வந்தன. விலங்குகள் தோன்றின. பின், மனிதனும் தோன்றினான். பிரம்மனே தேவர்களையும், அவர்களுக்கெதிரான தைத்திரியர் களையும், நாகர்களையும் படைத்தான்.

பிரம்மாவின் மற்றொரு பிள்ளை மாரீச்சி. மாரீச்சியின் மகனே காசிபன். காசிபன் தட்சனுடைய பதின்மூன்று பெண் களை மணந்தான். அதிதியின் மக்களாகிய அதித்தியர்களுக்கும், திதியின் மக்களாகிய தானவர்களுக்கும் போர் நடந்தது. அதிதி சூரியனை வேண்டி, மார்த்தாண்டா என்ற சூரியனையே மகனாகப் பெற்றுத் தைத்திரியர்களை வென்றனர்.

முன்னொரு காலத்தில் ராஜ்யவர்த்தனா என்ற மன்னன் நீதி நெறி வழுவாமல் ஆட்சி செய்து வந்தான். அவன் அரசாட்சியில் மக்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் இருந்தனர். நாட்டில் பஞ்சம் நோய் எதுவுமின்றி மக்கள் வாழ்ந்தனர். அரசன் ஏழாயிரம் ஆண்டுகள் ஆட்சி புரிந்தான்.

அரசனின் மனைவிக்கு மனினி என்பது பெயர். அரசனின் தலைக்கு எண்ணெய் தேய்த்துவிடும் பொழுது அவள் கண்ணில் இருந்து ஒரு சொட்டு நீர் அரசன் மேல் விழுந்தது. அரசன் வியப்புடன் "எதற்காக அழுகிறாய்?" என்று கேட்டான். அரசி சிறிது மௌனம் சாதித்து, பின்பு அரசன் தலையில் வெண்முடி இருப்பதைக் கூறினாள். அதைக் கேட்ட அரசன் சிரித்து விட்டு, "நான் வேதங்களைக் கற்றிருக்கிறேன். ஆயிரக்கணக்கான யாகங்களைச் செய்திருக்கிறேன். இது முதுமை அடைந்து விட்டேன் என்பதற்குச் சாட்சி ஆகும். நான் காட்டிற்குச் செல்லும் நேரம் வந்து விட்டது" என்று கூறினான்.

இதை அறிந்த மக்கள் பெரிதும் வருத்தமுற்றனர். அரசன் காட்டிற்குச் சென்று விட்டால் நாட்டின் சுபிட்சம் மறைந்து விடும் என்று கருதினர். அரசன் தன் மகனுக்கு முடிசூட்டு வதற்கு நாள் பார்க்கும்படி கூறியும், வேண்டுமென்றே நாளைக் குறிப்பதில் தாமதம் செய்தனர். அரசனைப் போகக்கூடாது என்று பிராமணர்கள் பலர் கூறினர். அரசன் அவர்கள் வார்த்தையைக் கேட்கவில்லை. உடனே பிராமணர்கள் அனைவரும் கூடி, காமரூபம் என்ற காட்டில் உள்ள சூரியன் கோயிலுக்குச் சென்று தவம் செய்தார்கள். மூன்று மாதம் ஆனவுடன் சூரியன் தோன்றினான். பிராமணர்கள் சூரியனை வணங்கித் "தங்கள் அரசன் இன்னும் பதினாயிரம் ஆண்டுகள் இளமையோடு இருந்து அரசாட்சி செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். சூரியன் அந்த வரத்தைக் கொடுத்ததும் பிராமணர்கள் மகிழ்ச்சியோடு வந்து அரசனிடம் கூறினார்கள். அரசன் மகிழ்ச்சி அடைவதற்கு பதிலாக வருத்தப்பட்டான். ஏனென்று கேட்டபொழுது அவன் கூறிய விடையானது, "நீங்கள் சொல்கிறபடி நான் இன்னும் பதினாயிரம் ஆண்டுகள் இருந்தால் என்னுடன் யார் உயிரோடு

இருக்கப் போகிறார்கள்! என் அருமை மனைவி, பிள்ளைகள், என் குடிமக்களாகிய நீங்கள் ஆகிய ஒருவரும் அவ்வளவு காலம் இருக்கப்போவதில்லை. நீங்களெல்லாம் இறந்த பிறகு நான் மட்டும் உயிரோடு இருந்து என்ன பயன்?" என்றான். பிராமணர்கள் வாயடைத்து நின்றனர். இதற்கு ஒரு வழி செய்கிறேன் என்று கூறிய மன்னன், மனைவியை அழைத்துக் கொண்டு காமரூபத்தில் உள்ள சூரியன் கோயிலுக்குச் சென்று ஒரு வருடம் உணவு முதலியவற்றை நீக்கித் தவம் இருந்தான். சூரியன் நேரே வந்தவுடன், "ஐயனே! தங்கள் வரப்படி நான் மட்டும் உயிரோடு இருந்து என்ன பயன்? என் மனைவி, மக்கள், குடிமக்கள் ஆகிய அனைவரும் என்னுடன் சேர்ந்து இன்னும் பதினாயிரம் ஆண்டுகள் வாழும்படி வரம் தர வேண்டுகிறேன்" என்றான். சூரியனும் 'அப்படியே ஆகட்டும்' என்றான்.

**தந்தையும் மைந்தனும்**

மார்த்தாண்டனின் பரம்பரையில் வந்த கரந்தமா என்பவனுக்கும், அவன் மனைவி கிரா என்பவளுக்கும் பிள்ளையாகப் பிறந்தான் அவிட்சிதா. இவனுடைய மகன் மருத்தா என்பவனாவான். மருத்தாவிடம் ஆட்சியை ஒப்படைத்துவிட்டு அவிட்சிதா தவம் ஏற்கப் போய்விட்டான். ஒருநாள் மருத்தாவிடம் சில முனிவர்கள் வந்து, "அரசே! எங்கள் ஆசிரமம் இருக்கும் இடத்தில் பாம்புகள் தொல்லை மிகுதியாக உள்ளன. அவற்றைக் கொல்லும் சக்தி எங்களிடம் உள்ளது என்றாலும் முனிவர்களாகிய நாங்கள் உயிர்களைக் கொல்லக்கூடாது. எங்களைக் காப்பது அரசனுடைய கடமை" என்று கூறினார்கள். அதைக்கேட்ட அரசன் தக்க ஆயுதங்களை எடுத்துக் கொண்டு சென்று பாம்புகளை எல்லாம் கொன்று தீர்த்தான். சில பாம்புகள் ஓடிச்சென்று மருத்தாவின் தந்தை

அவிட்சாவிடம் முறையிட்டான். அவிட்சா மகனிடம் வந்து, "மகனே, பாம்புகளைக் கொல்லுவதை நிறுத்திவிடு" என்று கூறினான். மருத்தா தந்தை சொன்னதை ஏற்றுக் கொள்ளாமல், "என்னுடைய கடமை முனிவர்களைக் காப்பது? அவர்களுக்கு இடையூறு செய்யும் பாம்புகளைக் கொல்வது நியாயமானது" என்றான். தந்தைக்கும் மகனுக்கும் வாக்குவாதம் முற்றிவிட, தந்தை மகனைக் கொல்வதற்காக ஒரு தெய்வீக அத்திரத்தை எடுத்தார். முனிவர்கள் ஓடி வந்து தந்தை—மகன் சண்டையை நிறுத்தினார்கள். பாம்புகளும் இறந்த முனிவர்களை எழுப்பி விட்டன.

**முடிவுரை**

பறவைகள் ஜெய்மினி முனிவருக்கு மார்க்கண்டேய புராணத்தைச் சொல்லி முடித்தன. முனிவர் அப்பறவை களுக்கு நன்றி செலுத்திவிட்டுத் தன்னுடைய ஆசிரமத்திற்குத் திரும்பினார்.



# 8. அக்னி புராணம்

## இப்புராணம் பற்றி...

*அக்னியால், வசிட்ட முனிவருக்கு உபதேசிக்கப் பட்டது இப்புராணம். ஆனால் புராணத்தினுள் சுதா முனிவர், சௌனகர் மற்றும் ரிஷிகளுக்கும் சொல்லிய தாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. யாகம், அக்னியின் பெருமை, விஷ்ணு அவதாரங்கள், சிவபெருமானை நோக்கிச் செய்யும் ஞானபூஜை, பிரபஞ்ச லட்சணம், தர்மசாஸ்திரம், அரசியல், பொருளாதாரம், வானியல், சாமுத்ரிகா லட்சணம், ராஜநீதி, ஆயுர்வேதம், வாஸ்துவித்யா, தாந்திரீக வித்தைகள், மந்திர சாஸ்திரங்கள், தனுர்வேதம், நாட்டிய சாஸ்திரம், காவிய சாஸ்திரம், புராண சாஸ்திரம் முதலானவை பேசப் பட்டுள்ளன. 8,000 கிரந்தங்களை உடையது.*

நைமிசாரண்ய வனத்தில் சௌனகர் முதலிய ரிஷிகள் கூடியிருந்தனர். தீர்த்த யாத்திரைக்குச் சென்றிருந்த சுதா அங்கு வந்து சேர்ந்தார். மற்ற முனிவர்கள் சுதாவைப் பார்த்து, 'மனிதர்களுக்குப் பிரம்மஞானத்தைத் தருவது எது? மிகச் சிறந்த பொருள் எது?' என்று வினவினார்.

சுதா சொல்லத் தொடங்கினார்: "நான் ஒருமுறை சுகர், பைலா மற்றும் பல முனிவர்களோடு சேர்ந்து வத்ரிகா ஆசிரமத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு வியாச முனிவரைச் சந்தித்தேன். நீங்கள் கேட்கும் இதே கேள்விகளை வியாச முனிவரிடம் கேட்டேன். அக்னி பகவானிடமிருந்து வசிட்டர் தாம் கேட்டதை வியாச முனிவருக்குச் சொல்ல, வியாச முனிவர் எங்களுக்குச் சொன்னதை இப்பொழுது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். மிகச் சிறந்தது என்பது விஷ்ணுவே ஆகும். அக்னி புராணம் மிகச் சிறந்தது என்பதற்குக் காரணம், பரப் பிரம்மத்தின் சாரத்தை நன்கு எடுத்துக் கூறுகிறது. ஆகவே, வியாசர் மூலம் நான் அறிந்த அக்னி புராணத்தை இப்பொழுது உங்களுக்குச் சொல்லப் போகிறேன்.

**அவதாரங்கள்**

அவதாரம் என்றால் என்ன? உங்களுக்குத் தெரியுமா? விஷ்ணு பல சமயங்களில் இந்த பூலோகத்திற்கு வந்து மனிதர்களாகவும், பிறவாகவும் தோன்றுகிறார். இதைத்தான் அவதாரங்கள் என்று சொல்லுகிறோம். ஏன் இப்படி விஷ்ணு அவதாரங்கள் எடுக்க வேண்டும்? உலகத்தில் துன்பம் விளைவிப்பவர்கள், கொடியவர்கள் ஆகியவர்களை அழித்து, நல்லவர்களையும், தர்மத்தையும் நிலைநாட்டவே அவதாரங்கள் தோன்றுகின்றன.

விஷ்ணு இதுவரை எடுத்தவை ஒன்பது அவதாரங்கள் ஆகும். பத்தாவது அவதாரம் எதிர்காலத்தில் தோன்றப் போவதாகும். விஷ்ணு இதுவரை மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசுராமன், இராமன், கிருஷ்ணன், புத்தன் ஆகிய அவதாரங்கள் எடுத்துள்ளார். இனி வரப் போவது கல்கி அவதாரம் ஆகும்.

### 1. மச்ச அவதாரம்

அக்னி, வசிட்டரிடம் அவதாரங்கள் பற்றிச் சொல்லிய தாவது: வைவஸ்வத மனு வத்ரிகா ஆசிரமத்தில் வாழ்ந்து வந்தார். கிருத்தமாலா என்ற நதிக்குச் சென்று, தூய்மைப் படுத்திக்கொண்டு அர்க்கியம் செய்வதற்காக இரண்டு கைகளிலும் நீரை எடுத்துக் கொண்டார். கைக்குள் இருந்த தண்ணீரில் ஒரு சிறிய மீன் இருந்தது. ஆற்றுக்குள் போட வேண்டும் என்று மனு நினைத்தவுடன், அந்த மீன் பேசத் தொடங்கியது: "சிறிய மீனாகிய என்னை மறுபடியும் ஆற்றில் விட்டு விடாதே! பெரிய மீன்களும், முதலைகளும் என்னை விழுங்கிவிடும். என்னை ஒரு தனி இடத்தில் வைத்து வளர்ப்பாயாக" என்று கூறியது. இதைக் கேட்ட மனு, அந்த மீனை ஒரு பாத்திரத்தில் வைக்க, உடனே அந்த மீன் பெரிதாக வளர்ந்து கொண்டே போனது. வேறு எதிலும் அதனை வைக்க முடியாது என்று கருதிய மனு, ஒரு குளத்தில் சென்று மீனை விட்டார். உடனே மீன் மேலும் பெரிதாக வளர்ந்து குளத்தை விடப் பெரிதானது. இறுதியாகக் கடலில் கொண்டு விட்ட பொழுது அது மேலும் பெரிதாக வளர்ந்து மிகப் பெரிய அளவாக இருந்தது.

இதைக் கண்ட மனு, "நீ யார்? நீ விஷ்ணுவாகத்தான் இருக்க முடியும். எதற்காக இவ்வுருவில் வந்திருக்கிறாய்?" என்று கேட்டான். "இவ்வுலகில் கெட்டவற்றை அழித்து நல்லவற்றை நிலைநிறுத்தவே நான் வந்திருக்கிறேன். இன்னும் ஏழு நாட்களில், கடலில் கொந்தளிப்பு ஏற்பட்டு இவ்வுலகம் முழுவதும் நீரால் நிரம்பி விடும். உயிர்கள் அனைத்தும் அழிக்கப்பட்டுவிடும். நீ என்னைக் காப்பாற்றியதால், உனக்கு உதவி புரிகிறேன். உலகம் முழுவதும் நீரில் மூழ்கும் சமயத்தில் ஒரு படகு இங்கு வரும். நீ உன்னுடன் ஏழு ரிஷிகளையும் அழைத்துக் கொண்டு பயங்கரமான அந்த இரவைப்

படகிலேயே கழிப்பாயாக! அத்துடன் உணவு தானியங்களை எடுத்துக் கொள். பாம்பினைக் கொண்டு அப்படகை என் கொம்பில் கட்டிக் கொள்ளலாம்" என்று கூறிவிட்டு மீன் மறைந்து விட்டது. அந்த மீன் கூறியவாறே அனைத்தும் நடந்தது. படகில் ஏறிக்கொண்டே மனு அந்த மீனை வேண்டிக் கொண்டதற்கு இணங்க, மீன் மச்சபுராணத்தை அவனுக்குக் கூறிற்று. இறுதியில் அந்தப் படகு இமயத்தின் உச்சியை அடைந்தது. உயிர்கள் அனைத்தும் மறுபடியும் படைக்கப் பட்டன.

ஹயக்கிரீவன் என்னும் தானவன் வேதங்களையும் பிரம்ம ஞானத்தையும் திருடிச் சென்றான். மீன் அவதாரத்தில் இருந்த விஷ்ணு, ஹயக்கிரீவனைக் கொன்று வேதங்களை மீட்டார்.

### 2. கூர்ம அவதாரம்

நீண்ட காலத்திற்கு முன்னர், தேவாசுரப் போர் நடை பெற்றது. போரில் தோற்ற தேவர்கள் விஷ்ணுவை வேண்டினர். விஷ்ணு, பிரம்மன், மற்றும் தேவர்களிடம், "நீங்கள் அனைவரும் அசுரர்களுடன் ஒரு தற்காலிக உடன் படிக்கை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். அதன்படி தேவ, அசுரர்கள் சேர்ந்து பாற்கடலைக் கடைய வேண்டும். தேவர் களுக்கு இதனால் லாபம் ஏற்படும்படி நான் பார்த்துக் கொள்வேன்" என்று கூறினார்.

இவ்வுடன்படிக்கையை இரு சாராரும் ஏற்றுக் கொண்டு பாற்கடலைக் கடையத் தயாராயினர். மந்தர மலையினை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் கொண்டு கடைய ஆரம்பித்தனர். சில மணி நேரத்தில் மந்தர மலை மிகுந்த கனத்தின் காரணமாகக் கடலில் மூழ்க ஆரம்பித்தது. உடனே விஷ்ணு ஆமையாக உருவெடுத்து, அம்மலையினைத் தன் முதுகில் தாங்கிக் கொண்டார். கடலைக் கடைய ஆரம்பித்த

சிறிது நேரத்தில் காலகுதா என்ற விஷம் கடலினின்று வரவும் சிவபெருமான் அவ்விஷத்தை விழுங்கினார். இதனால் அவருடைய கழுத்துப் பகுதி நீலநிறமாக மாறியதால், சிவனுக்கு நீலகண்டன் என்ற பெயர் வந்தது. பிறகு வருணி என்ற தேவதை வெளியே வந்தாள். தேவர்கள் அவளை ஏற்றுக் கொண்டதால், 'சுரர்கள்' என்றும் ராட்சசர்கள் அவளை ஏற்றுக் கொள்ள மறுத்ததால் 'அசுரர்கள்' என்றும் பெயர் பெற்றனர். அந்த தேவதைக்குப் பின் பாரிஜாதம் என்னும் மரம் வந்தது. இந்திரனுடைய தோட்டத்தில் இடம்பெற்று, தன்னைப் பெருமைப்படுத்திக் கொண்டது. இதைத் தொடர்ந்து வந்த கௌஸ்துப மணி மாலை, விஷ்ணுவால் ஆபரணமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதற்குப் பிறகு கபிலா என்னும் பசுவும், உச்சைஸ்ரவம் என்னும் குதிரையும், ஐராவதம் என்னும் யானையும் வந்தன. பிறகு அப்ஸரஸ்கள் வந்தனர். தொடர்ந்து இலட்சுமி தோன்றி விஷ்ணுவுடன் இரண்டறக் கலந்தாள்.

கடைசியாக தன்வந்தரி என்னும் தேவதை அமிர்தத்தை உடைய பாத்திரத்தைக் கையில் ஏந்தி வந்தாள். ஜம்பா என்னும் தைத்தியர் பாதி அமிர்தத்தை தேவர்களுக்குக் கொடுத்துவிட்டு மீதியை எடுத்துக் கொண்டு சென்றார். தைத்தியர்களைத் திசை திருப்புவதற்காக விஷ்ணு பெண் வடிவு எடுத்து, அவர் முன்னே சென்று நின்றார். அழகிய பெண்ணைக் கண்ட அசுரர்கள் அப்பெண்ணிடம், "நீ மிக அழகாக இருக்கிறாய்! இந்த அமிர்தத்தை எடுத்து எங்களுக்குக் கொடு!" என்றனர். பெண் வடிவிலிருந்த விஷ்ணு அதனை ஏற்றுக்கொள்வது போல் தலையசைத்து, அமிர்தத்தை தேவர்களுக்கு வழங்கி னார். அதற்குள் ராகு என்ற அசுரன், சந்திரனைப் போன்று வடிவெடுத்து தேவர்களுடன் அமர்ந்து அமிர்தத்தைச் சிறிது உண்டான். இதைப் பார்த்துச் சூரியனும் சந்திரனும் விஷ்ணுவிடம் முறையிட்டனர். உடனே விஷ்ணு, ராகுவின்

தலையை வெட்டி விட்டார். ஆனால் ராகு சிறிது அமிர்தம் சாப்பிட்டிருந்த காரணத்தினால் அவன் சாகவில்லை. விஷ்ணுவை வேண்டி, "சூரியனையும், சந்திரனையும் தான் விழுங்கி விட வேண்டும்" என்ற வரத்தினைப் பெற்றான். சூரியன், சந்திரன் ஆகியோரை ராகு விழுங்குவதை முறையே சூரிய, சந்திர கிரகணங்களின் போது காணலாம்.

### 3. வராக அவதாரம்

விஷ்ணுவின் மூன்றாவது அவதாரமாக வருவது வராக அவதாரமாகும். காசிப முனிவனுக்கும், திதிக்கும் மகனாகப் பிறந்தான் ஹிரண்யாக்ஷா. இவன் அசுரர்களின் தலைவனாக இருந்தான். தவம் செய்து 'தன்னை யாரும் போரில் வெல்லக் கூடாது' என்ற வரத்தினை பிரம்மாவிடம் பெற்றான். இதனால் தேவர்களுடன் போர் தொடுத்து தேவருலகையும், வருணன், கடல் அரசன் ஆகியோரையும் வென்று நிலவுலகம், பாதாள உலகம் ஆகிய மூன்று உலகங்களுக்கும் தானே அரசனாக இருந்தான். ஹிரண்யாக்ஷா கடலுக்கடியில் உள்ள வருணனின் அரண்மனையில் இருந்து வந்தான். அதனால் பூமியைக் கடலுக்குக் கீழே கொண்டு சென்று ஆட்சி செய்து வந்தான். இதனால் கோபம் அடைந்த தேவர்கள் விஷ்ணுவிடம் முறையிட்டு, "தாங்கள் தேவருலகத்திலேயே இருக்க வேண்டும் என்றும், பூமியைக் கடலுக்கு மேலே கொண்டு வர வேண்டும்" என்றும் வேண்டினர். இதைக் கேட்ட விஷ்ணு வராக அவதாரம் எடுத்துக் கடலுக்கடியில் சென்றார்.

விஷ்ணு என்பதை அறியாத ஹிரண்யாக்ஷா, வராகத்துடன் போர் செய்தான். பல ஆயிரம் ஆண்டுகள் நடந்த போரின் முடிவில் வராகம் தன்னுடைய கொம்பினால் அசுரனைக் கொன்றது. தன்னுடைய கொம்புகளுக்கிடையே பூமியைக் கடலுக்கு மேலே தூக்கி வந்து வைத்தது.

### 4. நரசிம்ம அவதாரம்

ஹிரண்யாக்ஷா என்ற அசுரனுக்கு, ஹிரண்யகசிபு என்ற சகோதரன் இருந்தான். தன்னுடைய அண்ணன் கொல்லப்பட்ட விஷயம் அறிந்து, விஷ்ணுவைக் கொல்ல வேண்டும் என்று சபதம் கொண்டிருந்தான். அதற்காகப் பிரம்மனை வேண்டிக் கடுந்தவம் புரிந்தான். அவனுடைய தவத்தைக் கண்டு மகிழ்ந்த பிரம்மன், 'என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டார். அதுகேட்ட ஹிரண்யகசிபு, "ஐயனே! யாராலும் வெல்ல முடியாத அரசனாக நான் இருக்க வேண்டும். இரவிலோ, பகலிலோ என்னை யாரும் கொல்லக் கூடாது. மனிதனாலோ, விலங்கி னாலோ எனக்கு இறப்பு ஏற்படக் கூடாது. ஆகாயத்திலோ, நீரிலோ, பூமியிலோ நான் கொல்லப்படக் கூடாது" என்ற வரத்தைக் கொடுக்குமாறு வேண்ட, பிரம்மனும் அப்படியே கொடுத்தார். பிரமனின் வரம் பெற்ற ஹிரண்யகசிபு, தேவர்களை விரட்டி விட்டு, மூன்று உலகங்களையும் தானே ஆண்டு வந்தான்.

ஹிரண்யகசிபுவிற்கு, பிரகலாதன் என்ற மகன் இருந்தான். விஷ்ணுவின் மீது பெரிதும் பக்தி கொண்டவன். விஷ்ணுவைக் கொல்ல வேண்டும் என்று உறுதி கொண்டிருந்த அசுரன், தன் மகன் விஷ்ணு பக்தனாக இருப்பதை அறவே வெறுத்தான். எவ்வளவோ சொல்லியும், பிரகலாதனை மாற்ற முடியவில்லை. கோபம் கொண்ட ஹிரண்யகசிபு தன் மகனைக் கொல்வதற்காகப் பல வழிகளில் முயன்றும், ஒவ்வொரு முறையும் விஷ்ணுவால் காப்பாற்றப்பட்டான் பிரகலாதன். தேவருகிலிருந்து விரட்டப்பட்ட தேவர்கள் விஷ்ணுவை வேண்டினர். விஷ்ணுவும், இதற்கு ஒரு ஏற்பாடு செய்வதாகக் கூறினார்.

ஒருநாள், தன் மகன் பிரகலாதனை அழைத்த ஹிரண்ய கசிபு, "மகனே! ஒவ்வொரு முறை நான் உன்னைக் கொல்லுவதற்கு முயற்சித்தும், நீ அதிலிருந்து தப்பிவிட்டாய். இது எவ்வாறு நிகழ்ந்தது?" என்று வினவ, உடனே பிரகலாதன், "தந்தையே! ஒவ்வொரு முறையும் விஷ்ணு என்னைக் காப்பாற்றுகிறார். விஷ்ணு எங்கும் நிறைந்திருக்கிறார்" என்று கூறினான்.

இதனால் கடுங்கோபம் கொண்ட ஹிரண்யகசிபு ஒரு தூணினைக் காட்டி மகனிடம், "இதனுள்ளும் உன்னுடைய விஷ்ணு இருக்கின்றாரா?" என்று வினவ, மகனும், 'ஆம்' என்று சொன்னான். "அப்படியானால் நான் இந்தத் தூணினை எட்டி உதைக்கிறேன். உன்னுடைய விஷ்ணு வருகின்றாரா என்று பார்க்கலாம்" என்று தூணினை எட்டி உதைத்தான். இரண்டாகப் பிளந்த அத் தூணிலிருந்து மனித உடலுடனும், சிங்கத்தின் தலையுடனும் நரசிம்ம அவதாரமாக வெளிவந்த விஷ்ணு, அசுரனைத் தன்னுடைய தொடையின் குறுக்கே படுக்க வைத்து, தன்னுடைய கூரிய நகங்களால் ஹிரண்யகசிபு நெஞ்சினைக் கிழித்துக் கொன்றார். இறுதியில் பிரகலாதனை அரசனாக நியமித்து விட்டு தேவர்களைத் தேவருலகத்திற்கு அனுப்பி வைத்தார் விஷ்ணு.

### 5. வாமன அவதாரம்

பிரகலாதனின் பேரனாகப் பிறந்தவன் பலி. மிகுந்த பலசாலியாகவும் வீரமுள்ளவனாகவும் திகழ்ந்த பலி அசுரர்களின் தலைவனாக இருந்தான். அப்பொழுது, தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரில், தேவர்கள் தோல்வி அடைந்தனர். உடனே விஷ்ணுவிடம் சென்று வேண்டினர். விஷ்ணுவும் அவர்களுக்கு உதவுவதாக உறுதி கூறினார்.

காசிப முனிவருக்கும், அதிதிக்கும் மகனாக அவதரித்தார் விஷ்ணு. குள்ளமான உருவத்தை உடையவராக இருந்தார். பலிச் சக்கரவர்த்தி மிகப் பெரிய யாகம் ஒன்றினுக்கு ஏற்பாடு செய்தான். அந்த யாகத்தின் பொழுது, யார் வரம் கேட்டாலும் வழங்கப்படும் என்று அறிவித்தான். யாகத்தில் கலந்து கொண்ட குள்ளன், வேதங்களை மிக அழகாக எடுத்துக் கூறினான். இதனால் மனம் மகிழ்ந்த பலிச் சக்கரவர்த்தி, அச் சிறுவனுக்கு ஏதேனும் வரம் அளிக்க விரும்பினான். பலிச் சக்கரவர்த்தியின் குருவாகிய சுக்ராச்சாரியார் இதில் சந்தேகம் கொண்டு, பலிச் சக்கரவர்த்தியைத் தடுத்தார். தான் வாக்குக் கொடுத்தபடியே நடந்து கொள்ள வேண்டும் என்றும், அதனின்று பின்வாங்க மாட்டேன் என்றும் கூறிய அரசன், குள்ளனை நோக்கி, "சிறுவனே! உனக்கு என்ன வரம் வேண்டும், கேள்" என்று கூறினான். வரத்தினைக் கொடுப்பதற்கு முன் புனித நீரைக் கொண்டு சிறிய சடங்கு செய்யப்பட வேண்டி இருந்தது. வரம் கொடுப்பதை எப்படியாவது தடுத்துவிட வேண்டும் என்று நினைத்த சுக்ராச்சாரியார், நீர் வைத்திருந்த பாத்திரத்தின் உள்ளே சென்று, யாரும் அதிலிருக்கும் நீரை எடுக்க முடியாதபடி, அந்தப் பாத்திரத்தை இறுக்க மூடிக் கொண்டார். அப் பாத்திரத்தில் உள்ள நீரை எடுக்க அதனை ஒரு குச்சியால் துளைத்தான், குள்ளன். அக்குச்சியானது, பாத்திரத்தின் உள்ளே அமர்ந்திருந்த சுக்ராச்சாரியாரின் கண்ணைக் குத்தியதால் அவருக்கு அன்று முதல் ஒரு கண்ணே இருந்தது.

பலிச் சக்கரவர்த்தியைப் பார்த்த குள்ளன், "அரசே! என்னுடைய குருவிற்கு தட்சணை கொடுப்பதற்காக என்னுடைய மூன்று அடியில் அடங்கியிருக்கும் மண்ணைத் தரவேண்டும்" என்று கேட்க, அரசனும் ஒப்புக் கொண்டான். குள்ளன் உடனே மிகப் பெரிய உருவெடுத்து ஓர் அடியினைக்

கீழே வைக்க, அது பூலோகம் முழுவதையும் அடைத்துக் கொண்டது. பலியிடம் இருந்து பெற்றுக் கொண்ட இம் மூன்று உலகங்களையும் இந்திரனுக்கு வழங்கினார். குள்ளனாக அவதாரம் எடுத்திருந்த விஷ்ணு, வேறு எங்கும் செல்ல முடியாத பலி அரசன் பாதாள லோகம் செல்ல முற்படுகையில் அவனைத் தடுத்து, அவன் பெருந்தன்மையைப் பாராட்டி, "பிற்காலத்தில் இந்திரன் என்ற பதவியை வகிப்பாய்!" என்று பலி அரசனுக்கு வரம் கொடுத்தார்.

### 6. பரசுராம அவதாரம்

வர்ணங்களில் இரண்டாவது இடத்தைப் பெறும் சத்ரியர்கள் ஆயுதம் ஏந்தி உலகைக் காக்க வேண்டியவர்கள். பிராமணர்கள் வேத, சாஸ்திரங்களைப் படிப்பது, யக்ஞம் முதலியவற்றைச் செய்வது போன்ற கடமைகளை ஆற்ற வேண்டும். ஒரு சமயம் சத்ரியர்கள் மிகவும் ஆணவமுற்று, பல கொடுமைகளைச் செய்தனர். அச்சமயத்தில் விஷ்ணு, ஜமதக்கினி முனிவருக்கும் ரேணுகாவிற்கும் மகனாக அவதரித்தார். பிருகு முனிவரின் பரம்பரையில் வந்ததால், பரசுராமனுக்கு 'பார்கவா' என்ற பெயரும் வழங்கப்பட்டது. பிராமணர்களைக் காப்பாற்றுவதும், சத்ரியர்களின் ஆணவத்தை அடக்குவதும் பரசுராமனின் வேலையாக இருந்தது.

தத்தாத்ரேய முனிவரிடம் எல்லா வரங்களும் பெற்ற கார்த்தவீரியன், ஆயிரம் கைகளை உடையவனாகவும், மூவுலகை ஆள்பவனாகவும் இருந்தான். ஒரு நாள் கார்த்த வீரியன் வேட்டைக்குச் சென்று திரும்பும் வழியில் களைப்பின் காரணமாக ஜமதக்கினி முனிவரின் ஆசிரமத்தில் அழைக்கப் பட்டான். ஜமதக்கினி முனிவரிடம் காமதேனு என்ற பசு இருந்தது. முனிவர் கேட்ட அனைத்தையும் அப்பசு வழங்கியது.

ஆதலால் களைப்பாக இருந்த கார்த்த வீரியனுக்கும், அவனுடைய சேனைகளுக்கும் அறுசுவை விருந்து படைத்தார் முனிவர். காமதேனுவைக் கண்டு மிகவும் விருப்பம் கொண்ட கார்த்தவீரியன், அதனைக் கொடுக்குமாறு முனிவரிடம் கேட்க, அவர் மறுத்து விட்டார். கோபம் கொண்ட கார்த்தவீரியன் அப்பசுவைத் திருடிச் சென்றான். இதனால் கார்த்தவீரிய னுக்கும் பரசுராமனுக்கும் போர் நடந்தது. கார்த்தவீரியன் தலையினை வெட்டி, காமதேனுப் பசுவை மீட்டான் பரசுராமன்.

சில காலத்திற்குப் பின்பு, கார்த்தவீரியனின் புதல்வர்கள், பரசுராமன் இல்லாத பொழுது ஜமதக்கினி முனிவரின் ஆசிரமத்திற்கு வந்து அவரைக் கொன்றனர். இதனால் கடுங் கோபம் கொண்ட பரசுராமன் இருபத்தியோரு தலைமுறை சத்ரியர்கள் அனைவரையும் கொன்று குவித்தான். இறுதியில் காசிப முனிவரிடம் உலகை ஒப்படைத்து விட்டு, மகேந்திர மலைக்குச் சென்று வாழ்ந்தான்.

## 7. இராமாவதாரம்

விஷ்ணுவின் கொப்பூழில் இருந்து தோன்றியவர் பிரம்மன். இவருடைய புதல்வன் மாரீச்சி. இவரது பரம்பரையில் தோன்றிய அஜா என்பவனின் மகனே தசரதன் ஆவான். தசரதனுக்கு, இராமன், லட்சுமணன், பரதன், சத்ருக்கனன் என்ற நான்கு மகன்கள் இருந்தனர். இஷ்வாகுவின் மகனாகிய ககுத்தன் பரம்பரையில் தோன்றியதாலும், ரகுவின் பரம்பரையில் தோன்றியதாலும் இராமனுக்குக் காகுத்தன் என்றும், ராகவன் என்றும் பெயர்கள் இருந்தன.

விஷ்ணு, இராவணன் என்னும் அரக்கனையும், மற் எல்லா அரக்கர்களையும் அழிக்க நினைத்தார். ஆகையா

தன்னை நான்கு பாகங்களாகப் பிரித்து, ராமன், பரதன், லட்சுமணன், சத்ருக்கனனாகப் பிறந்தார். ஒரு சமயம், விசுவாமித்திரர் தசரதனிடம் இருந்து ராட்சசர்களைக் கொல்ல இராமனுடைய உதவி வேண்டும் என்று கேட்டார். இராமன் ராட்சசர்களைப் போரில் வென்றதால், தெய்வீக அஸ்திரங்களை உபயோகிப்பது பற்றிச் சொல்லிக் கொடுத்தார். மிதிலை மன்னனாகிய ஜனகரிடமிருந்த சிவனுடைய வில்லை உடைத்து, ஜனகன் மகள் சீதையை மணந்தான் இராமன். தன்னுடைய மூத்த மகனாகிய இராமனுக்குப் பட்டம் கட்டவேண்டும் என ஏற்பாடுகள் செய்து வந்தான் தசரதன். அவனுடைய மனைவியாகிய கைகேயி தன் வேலைக்காரியாகிய மந்தரை என்ற கூனியின் பேச்சைக் கேட்டு இராமனுக்குப் பட்டம் கட்ட விடாமல் செய்தாள்.

இராமன் சிறிய பையனாக இருக்கும் பொழுது மந்தரையைக் காலை வாரி விட்டுத் தள்ளிக் கீழே விழச் செய்தான். அதிலிருந்து இராமன் மேல் வெறுப்புக் கொண்ட மந்தரை இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, தசரதனிடம் அவள் பெற்றுள்ள முதல் வரத்தால் இராமனைப் பதினான்கு ஆண்டுகள் காட்டிற்கு அனுப்பவும், இரண்டாவது வரத்தால் பரதனுக்குப் பட்டம் சூட்டவும் ஏற்பாடு செய்தாள். முன்னொரு காலத்தில் சம்பராசுரனுடன் போர் தொடுத்த தேவர்கள், தசரதனைத் தங்கட்குத் துணையாக வருமாறு அழைத்தனர். அப்போரில் காயம்பட்ட தசரதனுக்குக் கைகேயி சிறப்பாகப் பணிவிடை புரிந்தாள். மகிழ்ந்த தசரதன், அவள் எப்பொழுது வேண்டுமானாலும் இரண்டு வரங்களைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம் என்று கூறி இருந்தான்.

இப்பொழுது தசரதனைக் கண்ட கைகேயி இந்த இரண்டு வரங்களையும் கேட்டுப் பெற்றாள்.

இராமனைக் காட்டுக்கு அனுப்ப தசரதன் மறுத்து விட்டான். இதனை அறிந்த இராமன் தானே முன்வந்து காட்டுக்குப் போவதாகச் சொல்லி விட்டு, இலக்குவனுடனும் சீதையுடனும் காட்டுக்குப் புறப்பட்டான். அந்த நேரத்தில் பரதனும் சத்ருக்கனனும் மாமன் வீட்டிற்குச் சென்று இருந்தார்கள். இராமன் பிரிவைத் தாங்காத தசரதன் இறந்து விட்டான். பரதனுக்கு இச்செய்தியைச் சொல்லி அனுப்பி அயோத்திக்கு வரவழைத்தார்கள். நடந்ததை அறிந்த பரதன் பட்டத்தை ஏற்க மறுத்து, காட்டிற்குச் சென்று இராமனை மீண்டும் வருமாறு அழைத்தான். இராமன் மறுத்து விடவே, அவனுடைய பாதுகைகளைக் கொண்டு வந்து அயோத்திக்கு வெளியே நந்திக் கிராமத்தில் தங்கி, சிம்மாசனத்தில் பாதுகைகளை வைத்துவிட்டு இராமனின் பிரதிநிதியாக இருந்து அரசாட்சி செய்தான்.

காடு சென்ற இராமன், குகன் என்ற அரசனுடைய எல்லைக்குள் சென்று அவனோடு நட்புக் கொண்டு, ஜானவி நதியைக் கடந்து, பிரயாகை வந்து, பரத்துவாசர் ஆசிரமத்தில் தங்கி, பிறகு சித்திரக்கூட மலைக்குச் சென்று, அங்குள்ள பஞ்சவடி என்ற அழகிய இடத்தில் பர்ணசாலை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தான். அந்தப் பகுதியில் சுற்றித் திரிந்த சூர்ப்பணகை என்ற அரக்கி இவர்களைக் கண்டு, இராமன் மேல் ஆசை கொண்டு பேச, இலக்குவன் அவள் மூக்கையும் காதுகளையும் வெட்டி விட்டான். மூக்கை இழந்த சூர்ப்பணகை தன் தமையன் கரன் என்பவனிடம் முறையிட்டாள். பதினாயிரம் படையுடன் வந்த கரன் இராமனிடம் படைகளை இழந்து தானும் கொல்லப்பட்டான். இதை அறிந்த சூர்ப்பணகை மற்றொரு தமையனாகிய இராவணனிடம் சென்று முறையிட்டாள். இராவணன் மாரீசனைப் 'பொன் மான்' வடிவுடன் பர்ணசாலை எதிரே உலவுமாறு கட்டளை

இட்டான். சீதையின் விருப்பப்படி பொன் மானை விரட்டிக் கொண்டு இராம இலக்குவர் போய்விட்டனர். சீதை தனியே இருப்பதை அறிந்த இராவணன் அவளைக் கவர்ந்து செல்லும் பொழுது, ஜடாயு என்ற கழுகின் வேந்தன் அதைத் தடுக்க முயல, இராவணனால் கொல்லப்பட்டான். சீதையை எடுத்துச் சென்று அசோக வனத்தில் சிறை வைத்தான் இராவணன். மீண்டு வந்த இராம இலட்சுமணர் சீதையைக் காணாததால் பல இடங்களில் தேடிச் சென்று சுக்ரீவனை துணைக்குக் கொண்டு, அவன் தமயன் வாலியைக் கொன்று, குரங்குப் படையுடன் கடற்கரை அடைந்த இராமன், சேதுவுக்கும் இலங்கைக்கும் ஒரு கல் பாலம் அமைத்து இலங்கைக்குச் சென்று இராவணன் தம்பி கும்பகர்ணன், அவன் மகன் இந்திரஜித்தன், இராவணன் அனைவரையும் கொன்று சீதையை மீட்டு வந்து முடி சூடிக்கொண்டான். தம்பி சத்ருக்கனனைக் கொண்டு லவணன் என்ற அசுரனைக் கொன்று வருமாறு கட்டளை இட்டான். சத்ருக்கனன் அப்படியே செய்து அந்த நாட்டில் மத்ரா என்ற நகரை ஸ்தாபித்தான். ஜைனுசா என்ற கந்தர்வன் மக்களைக் கொடுமைப்படுத்தியதால் இராமன் உத்தரவின்படி பரதன் ஜைனுசாவுடன் போர் தொடுத்து அவனை வென்று அவன் நாட்டை இரு கூறுகளாகப் பிரித்து தக்ஜா என்ற மூத்த மகனுக்குத் தக்புசீலா என்ற பகுதியையும், புஷ்கரன் என்ற இரண்டாவது மகனுக்குப் புஷ்கரவதி என்ற பகுதியையும் பிரித்துக் கொடுத்து ஆளுமாறு செய்தான். இராமன் பிள்ளைகளாகிய லவ, குசர்களோடு பதினோராயிரம் ஆண்டுகள் நாட்டைச் சிறந்த முறையில் ஆட்சி செய்து உயிர் துறந்தான்.

அக்னி புராணத்தில் கண்டுள்ளபடி இராமாயணக் கதை இதுவாகும். இக்கதையை நாரதரிடம் கேட்டு வால்மீகி

எழுதினார். இராமனாக விஷ்ணு அவதரித்தது ஏழாவது அவதாரம் ஆகும்.

### 8. கிருஷ்ண அவதாரம்

பிரம்மனின் மகனாகிய அத்ரி முனிவரின் வழியில் தோன்றியவன் யயாதி மன்னன். அவனது இரு மனைவியருள் தேவயானியின் மகனாகிய யாதுவின் பரம்பரையில் வந்தவர்களே யாதவர்கள். யாதவ குலத்தில் தோன்றிய வசுதேவருக்கும், தேவகிக்கும் எட்டாவது மகனாக விஷ்ணு அவதரித்தார். கிருஷ்ணன் என்ற பெயர் சூட்டப்பெற்ற அவர் தேவகியின் சகோதரனாகிய கம்சனின் கொடுமைகளுக்குப் பயந்து நந்தகோபர்— யசோதையிடம் வளர்ந்தார்.

நந்தனிடம் வளர்ந்து வந்த பலதேவனையும், கிருஷ்ண னையும் கொல்வதற்காகக் கம்ச மன்னன் பூதனை என்ற அரக்கியையும் அனுப்பினார். அவளைக் கிருஷ்ணன் கொன்றான். யமுனை நதியில் இருந்த காளிங்கன் என்ற பாம்பையும், அரிஷ்டா, விரிஷபா, கேசி, தேனுகா என்ற பல அரக்கர்களையும் கிருஷ்ணன் கொன்றார். இந்திரனை வழிபடுவதை நிறுத்திய கிருஷ்ணன், இந்திரன் கோபம் கொண்டு கோகுல மக்களைக் கொல்வதற்காக அனுப்பிய கொடிய மழையினின்றும் காப்பாற்றினார். கோவர்த்தன மலையினைத் தூக்கி, அதன் கீழே மக்கள் மழைக்கு ஒதுங்கி நிற்கும்படி செய்து அவர்களைக் காப்பாற்றியதால் கோவர்த்தன் என்ற பெயர் பெற்றார்.

தன் சகோதரி தேவகியின் எட்டாவது மைந்தனால் தனக்குச் சாவு நேரிடும் என்பதை அறிந்த கம்ச மன்னன் கிருஷ்ணனைக் கொல்லப் பல வழிகளில் முயன்றான். மதுராவிற்குக் கிருஷ்ண, பலராமரை வரவழைத்து, குவலயா பீடம் என்ற மதம் பிடித்த யானை மூலமும், சாணூரன்,

முஷ்டிகன் என்ற மல்யுத்த வீரர்களை அனுப்பியும் கொல்ல ஏற்பாடு செய்தான். அம்முயற்சியில் கம்சனால் வெற்றிபெற முடியவில்லை. இறுதியில் கிருஷ்ணன் கம்சனைக் கொன்றார்.

கம்சனின் மனைவியின் தந்தையாகிய ஜராசந்தன், கம்சன் இறந்த செய்தி கேட்டு யாதவர்களைக் கொடுமைப்படுத்தினான். கிருஷ்ணனுடன் நீண்டகாலம் யுத்தம் செய்து முடிவில் இறந்து போனான். பிறகு யாதவர்கள் கிருஷ்ணன் கூறியபடி துவாரகை என்ற நகரத்தைத் தோற்றுவித்து அங்கு குடியேறினர்.

நரகாசுரன் என்ற அசுரன் தேவர்கள், கந்தர்வர்களின் மகளிர் பதினாயிரம் பேரைச் சிறை வைத்திருந்தான். இவர்கள் அனைவரையும் மீட்டு கிருஷ்ணன் திருமணம் செய்து கொண்டார். பஞ்சஜன என்ற தைத்திரியனையும், காலயவன னையும் கொன்றது கிருஷ்ணனின் வீரத்தின் எடுத்துக் காட்டுகள்.

கிருஷ்ணனுக்குச் சம்பா, பிரத்யும்னன் என்ற பிள்ளைகளும் இருந்தனர். இவர்களில் பிரத்யும்னனை சம்பரா என்ற அசுரன் கவர்ந்து சென்று கடலில் வீசிவிட்டான். அக்குழந்தையை ஒரு மீன் விழுங்கி விட்டது. அம்மீனை ஒரு மீனவன் சம்பராவின் வீட்டிற்குக் கொண்டு வந்தான். அந்த மீனை வெட்டிய மாயாவதி என்ற பெண், மீனின் வயிற்றில் உள்ள குழந்தையைப் பார்த்து அக்குழந்தையைத் தானே வளர்த்து வந்தாள். பெரியவனாக வளர்ந்த பிரத்யும்னன் சம்பராசுரனைக் கொன்று, மாயாவதியைத் திருமணம் செய்து கொண்டான். இவர்களுக்கு மகனாகப் பிறந்தான் அனிருத்தன். வலியின் மகனாகிய வாணாவின் மகள் உஷாவை, கந்தர்வ மணம் செய்து கொண்டான் அனிருத்தன். தன் மகள் அனிருத்தனை மணம் செய்து கொண்டதை அறிந்த வாணா,

கடுங்கோபம் கொண்டு அனிருத்தாவுடன் போர் தொடுத்தான். கிருஷ்ணன், பலராமன், பிரத்யும்னன் ஆகியோர் அனிருத்தன் பக்கமும், சிவபெருமான், நந்திதேவர், கார்த்திகேயன் ஆகியோர் வாணாவின் பக்கமும் இருந்து போர் புரிந்தனர். முடிவில் கிருஷ்ணன் வாணாவின் ஆயிரம் கைகளை வெட்டி எறியும் பொழுது, சிவபெருமான் இடையிட்டு இரண்டு கைகளை விட்டு விடும்படி கூறவே, கிருஷ்ணனும் அதனை ஒப்புக் கொண்டார்.

மேலே கூறப்பட்ட கதைகள் அனைத்தும் அக்னி புராணத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. ஆயினும், எட்டாவது அவதாரமாகிய கிருஷ்ணன் பற்றிய கதைகள் மகாபாரதத்திலும் கூறப்பட்டு இருப்பதால், அக்னி புராணம் இனி பாரதக் கதையினைக் கூறுகிறது.

### மகாபாரதம்

யயாதி மன்னன் பரம்பரையில் வந்தவனாகிய குரு வம்சத்தைச் சேர்ந்தவன் சந்தனு அரசன். சந்தனுவும் கங்கையும் மணம் புரிந்து, அவர்களுக்கு பீஷ்மர் மகனாகப் பிறந்தார். சந்தனு அரசன், சத்யவதி என்பவளையும் மணந்து சித்ரங்கதா, விசித்ரவீரியன் என்ற இரு மகன்களைப் பெற்றான். சித்ரங்கதா இளமையிலேயே இறந்து போனதால், காசி அரசனை வென்று அவனுடைய மகள்களாகிய அம்பிகா, அம்பாலிகா இருவரையும் தன் சகோதரன் விசித்ரவீரியனுக்கு மணம் செய்து வைத்தார் பீஷ்மர். விசித்ரவீரியனுக்குப் பிள்ளைகள் இல்லாமலே இறந்து போனவுடன், வியாசதேவர் அஸ்தினா புரத்திற்கு அழைக்கப்பட்டார். வியாசதேவருக்கும் அம்பிகா விற்கும் பிறந்த பிள்ளை திருதராஷ்டிரன் என்றும், வியாச தேவருக்கும் அம்பாலிகாவிற்கும் பிறந்த பிள்ளை பாண்டு என்றும் அழைக்கப்பட்டனர். திருதராஷ்டிரன் காந்தாரியை

மணந்து, துரியோதனன் முதலிய நூறு பிள்ளைகளைப் பெற்றான். பாண்டு, குந்தியை மணந்து யுதிஷ்டிரன், பீமன், அருச்சுனன் என்ற மக்களையும், மாத்ரியை மணந்து நகுலன், சகாதேவன் என்ற மக்களையும் பெற்றான். பாண்டுவின் மகன்களாகிய பஞ்ச பாண்டவர்களை அழிக்க துரியோதனன் பல வழிகளில் முயன்றான். அரக்கு மாளிகைகளில் அவர்களைக் கொல்ல ஏற்பாடு செய்தான், துரியோதனன். அங்கிருந்து தப்பிய பாண்டவர்கள், ஏகசக்ரா என்ற இடத்தில் பிராமணர்களைப் போன்று மாறு வேடத்தில் உலவினர். பாஞ்சால நாட்டு மன்னனைத் தோற்கடித்து அவன் மகளாகிய பாஞ்சாலியை ஐவரும் மணந்து கொண்டனர்.

பாண்டவர்கள் உயிருடன் இருப்பதை அறிந்த துரியோதனன், வேறு வழியின்றி அவர்களுக்குப் பாதி ராஜ்ஜியத்தை விட்டுக்கொடுத்தான். அக்னி தேவன் மூலம் தெய்வீக ஆயுதங்களைப் பெற்றான் அருச்சுனன். குருவாகிய துரோணர் அவனுக்குப் பல வித்தைகளைக் கற்றுக் கொடுத்தார்.

ஒரு சமயம், பாண்டவர்கள் ராஜசூய வேள்வி நடத்தி, பல அரசுகளையும், பெரும் பொருட்களையும் பெற்றனர். இதனால் பொறாமை அடைந்த துரியோதனன் தன் மாமனாகிய சகுனியின் துணையுடன், சூதாட்டத்தில் பாண்டவர்களை வெற்றி கொண்டான். தோல்வியின் காரணமாகப் பாண்டவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசமும், ஓராண்டு அஞ்ஞாத வாசமும் ஏற்க வேண்டி வந்தது. திரௌபதியுடன் பன்னிரண்டு ஆண்டு காலம் வனவாசம் முடித்த பஞ்ச பாண்டவர்கள், ஓராண்டுக் காலம் மாறுவேடத்தில் வாழ, விராட மன்னன் அவைக்கு வந்தனர். கௌரவர்களுக்கும், விராட மன்னனுக்கும் நடந்த போரில், பாண்டவர்கள் விராட மன்னனுக்கு உறுதுணையாக நின்று

வெற்றி பெற்றனர். ஓராண்டுக் காலம் முடிந்த பின்னர், விராட அரசன் மகளாகிய உத்தரையை, அருச்சுனன் மகனாகிய அபிமன்யுவிற்கு மணம் முடித்தனர்.

மீண்டும் அஸ்தினாபுரம் திரும்பிய பாண்டவர்கள் தங்களுக்குச் சேரவேண்டிய அரசாட்சியைக் கேட்க, துரியோதனன் மறுத்தான். கிருஷ்ணனே இவர்களுக்குத் தூதாகச் சென்று, ஐந்து கிராமங்களையேனும் பாண்டவர் களுக்குக் கொடுக்கும்படி சொல்ல, துரியோதனன் அதற்கும் மறுத்து விட்டான். குருக்ஷேத்திரம் என்ற இடத்தில் பாண்டவர் களுக்கும் கௌரவர்களுக்கும் போர் துவங்கியது. வயதில் மூத்தவர்களாகிய பீஷ்மர், குருவாகிய துரோணர் முதலியோர் கௌரவர்கள் பக்கம் இருந்து போர் புரிவதைக் கண்ட அருச்சுனன், போர் செய்தவற்குச் சற்றுத் தயங்கினான். அருச்சுனனுக்குக் கிருஷ்ணன் கூறிய உபதேசங்களே "பகவத் கீதை" எனப்படும். இதில் கிருஷ்ணன் அருச்சுனனைப் பார்த்து, "அருச்சுனா! பீஷ்மர், துரோணர் இப்போரில் இறந்து விடுவார்களோ என்று கலங்க வேண்டாம். இறப்பு என்பது அவர்களின் உடலுக்கு மட்டுமே. ஆன்மாவிற்கு என்றுமே இறப்பு இல்லை. மனிதன் இறந்தவுடன் அவனது ஸ்தூல சரீரத்தை விட்டு வெளியே வரும் ஆன்மா, வேறோர் உடம்பிற்குள் புகுந்து விடுகிறது. ஆகையால் ஆன்மா என்றும் அழியாதது. ஆன்மாவும் பரமாத்மாவும் இரண்டறக் கலக்கும் பொழுது ஏற்படுவதே உண்மையான விடுதலை" என்றார்.

கிருஷ்ணனின் உபதேசத்தைக் கேட்ட அருச்சுனன், போர் செய்ய ஆரம்பித்தான். சிகண்டியின் உதவியுடன் பீஷ்மரை வென்றான். இருப்பினும், பீஷ்மர் உடனே சாகவில்லை. "நான் எப்பொழுது உயிரை விட வேண்டும் என்று விரும்புகிறேனோ, அப்பொழுதுதான் என் உயிர் பிரிய வேண்டும்" என்று ஒரு வரத்தைப் பெற்றிருந்தார் பீஷ்மர். அருச்சுனனால்

தோற்கடிக்கப்பட்ட பீஷ்மர், பல நாட்கள் அம்புப் படுக்கையில் படுத்திருந்தார். விராட மன்னன், துருபதன் முதலிய மன்னர்கள் பலர் துரோணரால் கொல்லப்பட்டனர். போர் தொடங்கிய பதினைந்தாவது நாள், துரோணர் மகன் அசுவத்தாமன் கொல்லப்பட்டதாக ஒரு வதந்தி கிளம்பியது. மகன் இறந்த செய்தி கேட்ட துரோணர் தன் ஆயுதங்களை எல்லாம் கீழே போட்டுவிட்டு, மனம் கலங்கி நின்ற சமயத்தில், திருஷ்டத் தூய்மனால் கொல்லப்பட்டார். கர்ணன், அருச்சுனனால் கொல்லப்பட்டான்.

இறுதியில் பீமனுக்கும் துரியோதனனுக்கும், கதாயுதப் போர் நடந்தது. துரியோதனனின் தொடையினைக் கிழித்து, அவனைக் கொன்றான் பீமன். துரோணர் கொல்லப்பட்ட செய்தி அறிந்த அசுவத்தாமன் கடுங்கோபம் கொண்டான். நடுநிசியில், பாண்டவர்களின் பாசறையில் புகுந்த அசுவத் தாமன், திருஷ்டத்தூய்மனையும், திரௌபதியின் ஐந்து புதல்வர்களையும் கொன்றான். அசுவத்தாமனைப் பழிவாங்க வேண்டும் என்று கூறிய திரௌபதி அருச்சுனனை அசுவத்தாம னுடன் போர் புரியும்படிக் கூற இருவரும் தெய்வீக அஸ்திரங் களை ஏவினர். அவை பூமியை அழித்து விடும் என்பதனால் அவற்றைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறு கூறப்பட்டது. அர்ச்சுனன் தன் அஸ்திரத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டான். ஆனால் அசுவத்தாமனால் திரும்பப் பெற முடியவில்லை. அது நேராக, அபிமன்யுவின் மனைவி உத்தரையின் கருவில் இருந்த குழந்தையைக் கொன்றது. இறந்த குழந்தைக்கு உயிர் கொடுத்துக் காத்தான் கிருஷ்ணன். அக் குழந்தையே பரிட்சித்து என்ற பெயர் பெற்றது.

யுத்தம் முடிந்தவுடன், யுதிஷ்டிரனுக்கு அரசனுடைய கடமைகள் அனைத்தையும் கற்பித்தார் பீஷ்மர். அதன் பிறகே அவர் இறந்து போனார். அரச பதவி பெற்ற யுதிஷ்டிரன்

பல யாகங்கள் செய்து; திறம்பட ஆட்சி செய்து வந்தான். சில காலங்களில் யாதவர்கள் அழிக்கப்பட்டு விட்டனர் என்று கேள்வியுற்று, தன் அரச பதவியைப் பரிட்சித்துவிடம் ஒப்படைத்து விட்டு, பல க்ஷேத்திரங்கள் சென்று இறுதியில் இறந்து போயினர்.

கிருஷ்ணன், பாண்டவர்களைத் தனது கருவியாக உபயோகித்து, கெட்டவைகளை அழித்து, நல்லவைகளை நிலை நிறுத்தினார். யாதவர்களும் அழியப் போவதை அறிந்த கிருஷ்ணன், பிரபாச என்ற க்ஷேத்திரத்தில் இறந்து போனான். கிருஷ்ணன் இறந்த பிறகு, அவரால் நிர்மாணிக்கப்பட்ட துவாரகை கடலில் மூழ்கியது.

## 9. புத்தரும் கல்கியும்

விஷ்ணு தன்னுடைய ஒன்பதாவது அவதாரமாக புத்த அவதாரம் எடுத்தார். இனி வரப் போவது பத்தாவது அவதாரமான கல்கி அவதாரம்.

பல வருடங்களுக்கு முன், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கடுமையான போர் நடந்தது. அசுரர்கள் தேவர்களை வென்றனர். உடனே தேவர்கள் விஷ்ணுவிடம் பாதுகாப்புத் தேடி ஓடினர். விஷ்ணுவும் அவர்களிடம், "தேவர்களே! வீணாகக் கவலைப்பட வேண்டாம். மாய மோகா என்பவன் சுத்தோதனரின் மகன் புத்தனாகப் பிறப்பான்" என்று கூறினார்.

பல காலங்களுக்குப் பிறகு, விஷ்ணுயாஷா என்பவனின் மகனாக, விஷ்ணு கல்கி அவதாரம் எடுப்பார். கல்கியின் குருவாக யக்ஞவல்கியர் இருப்பார். நான்கு வர்ணங்களும், நான்கு ஆசிரமங்களும் மீண்டும் நிர்மாணிக்கப்படும். மக்கள் புனிதமான வேதங்கள், சாத்திரங்களை மதித்துப் போற்று வார்கள். புதிய சத்திய யுகம் தோன்றும். ஒவ்வொரு

*கல்பத்திலும், ஒவ்வொரு மன்வந்திரத்திலும் விஷ்ணு வெவ்வேறு வடிவங்களில் அவதரிப்பார். விஷ்ணுவின் பத்து அவதாரங்களைப் பற்றிக் கேட்டும், படித்தும் பயன் பெறுபவர்கள் சுவர்க்கத்தினை அடைவர்.*

**பிரபஞ்சம்**

*அக்னி, பிரபஞ்சம் தோன்றிய வரலாற்றை வசிட்டருக்குக் கூற ஆரம்பித்தான். விஷ்ணுவே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் செய்தார். பிரபஞ்ச உற்பத்திக்கு முன்னர், எங்கும் பரப் பிரம்மமே நிறைந்திருந்தது. தொடக்கத்தில் பிரம்மாண்டத்தின் விதைகளை விஷ்ணு தூவ, அது மிகப் பெரிய பொன் முட்டை வடிவுடன் தோன்றிற்று. பிரம்மன் தன்னைத் தானே தோற்றுவித்துக் கொண்டு, அதனுள்ளேயே ஓராண்டு இருந்தார். பிறகு அந்த முட்டையை இரண்டாகப் பிளந்தார். மேல்பகுதி சொர்க்கமாகவும், கீழ்ப்பகுதி பூலோகமாகவும் ஆக்கப்பட்டது.*

*(இதன்பிறகு சொல்லப்பட்ட அக்னி புராணம் சொல்லும், பிரபஞ்ச உற்பத்திக் கதை ஏற்கெனவே பல புராணங்களிலும் சொல்லப்பட்டுள்ளது.)*

**பிரார்த்தனை செய்வது, கோயில் கட்டுவது, சிலை வடிப்பது எவ்வாறு ?**

*(அக்னி புராணம் பிரார்த்தனை செய்வது எப்படி, கோயில் கட்டுவது எப்படி, தெய்வ வடிவங்கள் செய்வது எப்படி என்பன பற்றியெல்லாம் விரிவாகப் பல அத்தியாயங் களில் கூறிச் செல்கிறது. அவை, பிரார்த்தனை பற்றிக் கூறும் பொழுது, மிக நுணுக்கமான பல விஷயங்களைக் கூறுவதால் நூலின் சுருக்கம் கருதி மிகச் சுருக்கியே இங்கு தந்துள்ளோம்.)*

சிவன், விஷ்ணு, சூரியன் ஆகிய தெய்வங்களைப் பிரார்த்திக்கும் பொழுது, பொதுவாக எவ்வாறு பிரார்த்திக்க வேண்டும் என்று கூறுவதுடன், குறிப்பிட்ட தெய்வங்களைப் பிரார்த்தனை செய்யும் பொழுது அந்தத் தெய்வத்திற்குரிய சிறப்பான மந்திரங்களையும், அக்னி புராணம் கூறிச் செல்கிறது. பிரார்த்தனை தொடங்குவதற்கு முன் குளிக்க வேண்டும் என்று கூறுவதுடன், குளிக்கக் கூடப் பல முறைகளைக் கூறுகிறது அக்னி புராணம்.

**கோயில் கட்டுதல்**

ஒருவன் பொருள்களைக் கொண்டு கோயில் கட்ட வேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்பினால் நூறு ஜென்மங்களில் செய்த பாவம் போகும். கோயில் கட்டுபவரின் மூதாதையர்கள் நரகத்திலிருந்து விடுபடுவர். ஒரு கோயில் கட்டுபவர் சுவர்க்கத்திற்குச் செல்வார். இரு கோயில்கள் கட்டுபவர் பிரம்ம லோகத்திற்கும், ஐந்து கோயில்கள் கட்டுபவர் சிவலோகத்திற்கும், பதினாறு கோயில் கட்டுபவர் பிறப்பினின்றும் விடுபடுவர். தானம் செய்வதினால் ஏற்படும் புண்ணியத்தைவிட, கோயில் கட்டுவதால் ஏற்படும் புண்ணியம் அதிகம்.

**சிலை வடித்தல்**

கோயில் கட்டுவதைவிட, ஒரு சிலை வடிப்பது அதிக புண்ணியம். தெய்வங்களின் சிலைகளை, நகரத்தை நோக்கிப் பார்க்கும்படியாக நிர்மாணிக்க வேண்டும். நகரத்துக்கு வெளியே பார்க்கும்படியாக அமைக்கக் கூடாது. இந்திரன் சிலை நகருக்குக் கிழக்குப் பகுதியில் அமைந்திருக்க வேண்டும். சண்டியின் சிலை நகருக்குத் தென்புறத்திலும், பிரம்மன் சிலை நகர் நடுவிலும் இருக்கவேண்டும். விஷ்ணுவின் சிலையை எங்கு வேண்டுமானாலும் அமைக்கலாம்.

விஷ்ணுவின் விதவிதமான சிலைகள், வேறுபட்ட வடிவங்களைக் கொண்டவை. உதாரணமாக, விஷ்ணுவின் பத்து அவதாரங்களைச் சிலையாக வடிக்கும்பொழுது, மச்ச அவதாரத்தில், மச்சம் ஒரு மீனைப் போலவே இருக்க வேண்டும். கூர்ம அவதாரத்தில் கூர்மம் ஓர் ஆமை போலவும் இருக்க வேண்டும். ஆனால் வராக அவதாரத்தில், வராகத்திற்கு நான்கு கைகளும், அவற்றில் முறையே கதாயுதம், தாமரை, சங்கு, சக்கரம் ஆகியவை இருக்க வேண்டும். நரசிம்ம அவதாரத்தில் இரண்டு கைகளும், அவற்றில் சக்கரமும் கதாயுதமும் இருக்க வேண்டும். அவர் கழுத்தில் ஒரு மாலை அணிந்திருக்க வேண்டும். வாமன அவதாரத்தில் இரண்டு கைகளிலும் முறையே குடையும், குச்சியும் இருக்க வேண்டும். பரசுராம அவதாரத்தில் நான்கு கைகளும், அவற்றில் வில், அம்பு, வாள், கோடரி ஆகியவை இருக்க வேண்டும். இராமன் சிலைக்கு இரண்டு அல்லது நான்கு கைகளுடன் வடிக்கப் படலாம். நான்கு கைகளுடன் வடித்தால், முறையே அம்பு, வில், சங்கு, சக்கரம் இருக்க வேண்டும். பலராமன் சிலை நான்கு அல்லது இரண்டு கைகளுடன் இருக்க வேண்டும். நான்கு கைகளானால் கலப்பை, கதாயுதம், சங்கு, சக்கரம் ஆகிவற்றுடன் வடிக்க வேண்டும். கல்கி அவதாரமாயின், ஒரு பிராமணன் குதிரைமேல் அமர்ந்திருப்பது போலவும், கையில் வில், அம்பு, சங்கு, வாள், சக்கரம் ஆகியவற்றை வைத்திருப்பது போலவும் வடிக்க வேண்டும். கிருஷ்ணனின் சிலை இரண்டு அல்லது நான்கு கைகளுடன் இருக்க வேண்டும். அவற்றில் முறையே கதாயுதம், சக்கரம், சங்கு ஆகியவை மூன்று கைகளிலும், நான்காவது கை வரத முத்திரையுடன் கீழ்நோக்கித் திறந்திருக்க வேண்டும். கிருஷ்ணனின் இருபுறங்களிலும் பிரம்மன், சிவன் ஆகியோரின் சிலை வடிக்கப்பட வேண்டும். பிரம்மனுக்கு நான்கு முகமும், நான்கு கைகளும், முன்பக்கம்

முட்டிய வயிறுடன், தாடி, மற்றும் சடையுடன் கூடிய முடியுடனும் இருக்க வேண்டும். பிரம்மன் அன்னத்தின் மீது அமர்ந்திருப்பது போல் இருக்க வேண்டும். பிரம்மனின் இருபுறத்திலும் சரஸ்வதி, சாவித்ரி ஆகியோரின் சிலை அமைக்கப்பட வேண்டும்.

விஷ்ணுவின் சிலை எட்டுக் கைகள் உடையதாய் இருக்க வேண்டும். ஏழு கைகளில் முறையே வாள், கதாயுதம், அம்பு, வில், கேடயம், சக்கரம், சங்கு ஆகியவை இருக்க வேண்டும். எட்டாவது கை விரிந்து வரமளிப்பது போல் இருக்க வேண்டும். கருட வாகனத்தில் அமர்ந்திருப்பது போலவும், கருடனுக்கு எட்டுக் கைகளும் இருக்க வேண்டும். விஷ்ணுவின் வலப் புறத்தில் லட்சுமி, சரஸ்வதியின் சிலைகள் நிர்மாணிக்கப்பட வேண்டும். இலட்சுமியின் கைகளில் தாமரை மலரும், சரஸ்வதி வீணையை வைத்திருப்பது போலவும் வடிக்க வேண்டும். விஷ்ணுவின் விஸ்வரூப வடிவம் வடிக்கப்பட வேண்டும். இச்சிலைக்கு நான்கு தலைகளும், இருபது கைகளும் அமைக்கப்பட வேண்டும்.

சண்டியின் உருவம் இருபது கைகள் கொண்டதாக இருக்க வேண்டும். வலப்புறத்தில் உள்ள பத்துக் கைகளில் முறையே ஈட்டி, வாள், சிறிய ஈட்டி, சக்கரம், பாசக்கயிறு, கேடயம், டமாரம் மற்றும் ஏதேனும் இரண்டு ஆயுதங்கள் இருக்க வேண்டும். பத்தாவது கை, வரமளிப்பது போல் அமைக்கப்பட வேண்டும். இடப்புறத்தில் உள்ள பத்துக் கைகளில் முறையே பாம்பு, நீண்ட தடி, கோடரி, அங்குசம், வில், மணி, கொடி, கதாயுதம், கண்ணாடி மற்றும் தடி இருக்கவேண்டும். சண்டியின் உருவத்திற்கு முன் கழுத்து அறுபட்ட எருமையின் உருவம் அமைக்கப்பட்டிருக்கும். அசுரன் எருமையின் உடலில் இருந்து வெளிவருவது போல் அமைக்கப்பட வேண்டும். அரக்கர்களின் முடி, கண்கள், மாலை, ஆகியவை சிவப்பு வர்ணத்தில்

இருக்கவேண்டும். அரக்கன் வாயிலிருந்து இரத்தம் வருவது போலவும், கைகளில் ஆயுதங்களுடனும் இருக்க வேண்டும். அரக்கனின் கழுத்தில் பாசக்கயிறு மாட்டப்பட்டு, சண்டி தேவியின் சிங்கம் எதிர்ப்பது போல் இருக்கவேண்டும். தேவியின் வலது கால் சிங்கத்தின் மீதும், இடது கால் அரக்கனின் முதுகின் மேலும் இருக்கும். சண்டிக்குச் சிலசமயம் பத்து, பதினாறு அல்லது பதினெட்டு கைகளும் வடிக்கப்படும்.

சிவலிங்கம் களிமண், மரம், இரும்பு, நவரத்தினங்கள், தங்கம், வெள்ளி, தாமிரம், பித்தளை, பாதரசம் ஆகியவற்றில் செய்யப்படலாம்.

**தீர்த்த யாத்திரை இடங்கள்**

ஒரு யாகம் செய்து ஏற்படும் புண்ணியத்திற்கு ஈடாக ஓர் இடத்திற்குத் தீர்த்த யாத்திரை செல்வது அமையும்.

புஷ்கரா என்னும் இடம் மிகச் சிறந்த தீர்த்தமாகக் கருதப் படுகிறது. இந்த இடத்திற்குச் செல்ல கார்த்திகை மாதம் சிறந்ததாகும். புஷ்கராவில் இன்னும் இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. அவை ஜம்புமார்க்கம், தண்டுலகாசிரமம் ஆகியவை. குருக்ஷேத்திரம் சிறந்த தீர்த்த யாத்திரை இடமாகும். சரஸ்வதி நதி, குருக்ஷேத்திரத்திற்கு அருகில் ஓடுகிறது. இந்நதியில் நீராடினால் ஒருவர் பிரம்மலோகம் அடைய முடியும்.

கங்கை நதி பாய்ந்து செல்லும் இடங்கள் அனைத்தும் புண்ணிய தீர்த்தங்களாகக் கருதப்படுகின்றன. கங்கை நதியில் மண்ணை எடுத்துத் தலைமீது வைத்துக் கொள்பவன் எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுபடுகிறான். பிரயாகை என்பது மற்றொரு சிறப்பான இடம். பிரம்மன், விஷ்ணு, இந்திரன், மற்றும் தேவர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள் எப்பொழுதும் இங்கு இருக்கிறார்கள். இதற்குக் காரணம் இரண்டு புண்ணிய

நதிகளாகிய கங்கையும் யமுனையும் இணைந்து பிரயாகையில் ஓடுகின்றன. முனிவர்களின் கூற்றுப்படி, மாசி மாதத்தில் ஒருவன் மூன்று நாட்கள் பிரயாகையில் நீராடுவது, கோடிக்கணக்கான பசுக்களை தானம் கொடுப்பதைக் காட்டிலும் சிறந்தது என்கின்றனர்.

சிவபெருமான், பார்வதியிடம் வாரணாசியின் சிறப்பைக் கூறியுள்ளார். சிவன் எப்பொழுதும் வாரணாசியை விட்டு நீங்குவதில்லை. வாரணா, அசி என்ற இரு நதிகளும் சேரும் இடத்தில் இந்நகரம் இருப்பதால் இதற்கு வாரணாசி என்று பெயர். காசி என்ற மற்றொரு பெயரும் உண்டு. நர்மதை நதியும் புனிதம் வாய்ந்தது.

அனைத்துத் தீர்த்தங்களிலும் சிறப்புப் புண்ணியம் வாய்ந்தது கயா. கயாசுரன் என்ற அசுரன் கடுமையான தவம் செய்து வந்தான். அத்தவத்தைக் கண்டு அஞ்சிய தேவர்கள் விஷ்ணுவிடம் முறையிட்டனர். கயாசுரன் முன்பு தோன்றிய விஷ்ணு, 'வரத்தினைப் பெற்றுக் கொள்' என்று கூறினார். கயாசுரன் உடனே, "ஐயனே! எல்லாத் தீர்த்தங்களிலும் மிகப் புண்ணியம் வாய்ந்த தீர்த்தமாக நான் இருக்க வேண்டும்" என்று வேண்டினான். வரத்தினைப் பெற்றுக் கொண்ட கயாசுரன் மறைந்தான். தேவர்கள் சுவர்க்கலோகம் திரும்பினர். கயாசுரன் மறைந்த காரணத்தினால், பூமி வெறிச்சோடிக் கிடந்தது. உடனே விஷ்ணு, தேவர்களை அழைத்து யாகம் நடத்துமாறு கூறினார். கயாசுரனை சந்தித்து, அவன் உடம்பின் மீது யாகம் செய்ய வேண்டும் என்று கூறி, அவனுடைய உடம்பினைக் கேட்குமாறு கூறி அனுப்பினார். கயாசுரன் இதற்கு சம்மதித்த உடன் அவனுடைய தலை உடம்பினின்று கீழே விழுந்தது. உடனே பிரம்மன், கயாசுரனின் தலையற்ற உடல் மீது யாகம் நிகழ்த்தினார். ஆனால், யாகம் தொடங்கிய சில நேரத்தில், உடம்பு அசைய ஆரம்பித்தது. இதற்கு ஒரு

தீர்வு காணவேண்டி இருந்தது. தேவர்கள் அனைவரும் ஒரு கல்லில் புகுந்து, அக்கல்லினை கயாசுரன் உடலின் மீது வைத்தால், அவ்வுடம்பு அசையாமல் நிற்கும்; இதன் பின்பு யாகத்தைத் தொடர்ந்து நடத்தலாம் என்றும் எண்ணினர். முடிவில் விஷ்ணுவே அக்கல்லினுள் புகுந்து கொண்டார். இதற்குக் காரணம், விஷ்ணுவும் தேவர்களும் எப்பொழுதும் கயாவில் தங்கி இருப்பவராவர்.

இக்கல்லினைப் பற்றி வேறொரு கதையும் வழங்கப் படுகிறது. பிரம்மனின் மகனாகிய மாரீச்சி காட்டிற்குச் சென்று மரம், மலர்களைக் கொண்டு வந்ததால் மிகவும் களைப்புற்று இருந்தான். தன் மனைவி தர்ம விரதாவை நோக்கி, 'நான் மிகவும் களைப்புடன் இருக்கிறேன். இன்று என்னுடைய கால்களை நீ கழுவிவிட வேண்டும்' என்று கூறினான். தர்ம விரதாவும் சம்மதித்துத் தன் கணவனின் கால்களைக் கழுவி விடும் பொழுது, திடீரென்று பிரம்மா அங்கு வந்தார். தன் கணவனின் கால்களைக் கழுவுவதா அல்லது கணவனின் தந்தையாகிய பிரம்மனை உபசரிப்பதா என்று கலக்கமுற்ற தர்ம விரதா, உடனே பிரம்மனை வரவேற்றாள். இதனால் கோபம் கொண்ட மாரீச்சி அவள் கல்லாக மாற வேண்டும் என்று சாபமிட்டான். தான் செய்ததில் எந்தத் தவறும் இல்லை என்று நினைத்த தர்ம விரதா, நீண்ட காலம் தவம் புரிந்தாள். அவள் தவத்தில் மனம் மகிழ்ந்த விஷ்ணு அவளுக்கு வரமளிக்க நினைத்தார்.

தர்ம விரதாவும், தன் கணவன் தனக்கு இட்ட சாபத்தி னின்று விடுதலை வேண்டும் என்று கேட்டாள். ஆனால், தேவர்களோ, "மாரீச்சி மிகவும் சக்தி வாய்ந்த முனிவர் என்றும், அவர் இட்ட சாபத்தைத் திரும்பப் பெற முடியாது" என்றும் கூறி, தர்ம விரதாவை ஒரு புனிதமான கல்லாக மாற்றி விடுவது என்றும், தேவர்கள் அக்கல்லில் எப்பொழுதும் தங்கி

இருப்பதாகவும் உறுதி அளித்தனர். அந்தக் கல்லானது கயாசுரனின் உடல் மேல் வைக்கப்பட்டது.

யாகம் முடிந்த பின்பு, விஷ்ணு கயாசுரனிடம் 'எல்லாத் தீர்த்தங்களிலும் மிகச் சிறந்த தீர்த்தமாக கயா கருதப்படும்' என்று வரமளித்தார். இந்த கயா தீர்த்தத்தில்தான் பாண்டவர்கள் விஷ்ணுவை வேண்டித் தவம் செய்தனர்.

**ஜோசியம்**

அடுத்து அக்னி புராணம் ஜோசியம் என்ற தலைப்பில் பல விஷயங்களை விரிவாகக் கூறுகிறது. உதாரணமாக, திருமணங்கள் சைத்ர, பௌஷ மாதங்களில் நடைபெறக் கூடாது என்றும், மிதுனம், துலாம் என்ற ராசிக்குரிய நாட்களில் திருமணம் நடைபெறக் கூடாது என்றும், யாத்திரை போவதற்கு வெள்ளிக்கிழமை சிறந்த நாள் என்றும், பூசம், அஸ்வினி, ஹஸ்தம், திருவோணம், கேட்டை ஆகிய நட்சத்திரங்கள் இல்லாத நாட்களில் மருந்துண்ணக் கூடாது என்றும் சொல்கிறது. நோயில் கிடந்தவர்கள், குளிப்பதற்குச் சனிக் கிழமை சிறந்ததாகும். முதன்முதலில் குழந்தைக்கு மொட்டை அடிக்கும் பொழுது அது செவ்வாய்க் கிழமையாகவோ, சனிக் கிழமையாகவோ இருக்கக் கூடாது. காது குத்தல், புதன் அல்லது வியாழக் கிழமைகளில் நடைபெற வேண்டும். புதிய உடை ளை புதன் கிழமை, வியாழக் கிழமை, வெள்ளிக் கிழமைகளில் அணியக் கூடாது.

(இதைத் தொடர்ந்து, மன்வந்திரங்கள் பற்றியும் வர்ணாசிரமங்கள் பற்றியும் பிராயச்சித்தங்கள் செய்வது பற்றியும் அக்னி புராணம் பேசுகிறது.)

**விரதங்கள்**

ஒரு வாரத்தில் குறிப்பிட்ட திதி, கிழமை, குறிப்பிட்ட நட்சத்திரம், குறிப்பிட்ட மாதம், பருவங்கள், சூரியன்

இருக்கும் உத்தராயண, தட்சணாயன காலங்கள் என்பவற்றை அடுத்துக் குறிப்பிட்ட சமயத்திற்குரிய விரதங்கள் அனுஷ்டிக்கப்படுகின்றன. கார்த்திகை, சித்திரை அஸ்வினி மாதங்களிலும் வரும் சுக்கிலபட்சம் முதல் நாள் பிரதமை, பிரம்மனுக்குரிய நாளாகும். அன்று பிரம்மனை வழிபடுவது நன்று.

இரண்டாவது நாளன்று (துவிதியை) பூக்களைத் தின்று, இரண்டு அஸ்வினிகளையும் வணங்க வேண்டும். இவ் விரதத்தை அனுஷ்டிப்பவர்கள் அழகிய உடலையும் அதிர்ஷ்டத்தையும் பெறுவர். கார்த்திகை மாதம், சுக்கிலபட்சம் துவிதியை திதியில் யமனை வழிபட வேண்டும். இந்த நாளில் விரதம் இருப்போர் நரகலோகம் செல்லமாட்டார். இந்நாளில் பலராமனையும் கிருஷ்ணனையும் துதிக்கலாம்.

சித்திரை மாதம் சுக்கிலபட்சம் திருதியை திதியில் விரதம் அனுஷ்டிக்கப்பட வேண்டும். சிவன் பார்வதியை மணந்த நாள் இதுவாகலின் இவ்விரதத்திற்கு கௌரி விரதம் என்று பெயர். பழங்களை வைத்துச் சிவன், பார்வதியை வழிபட வேண்டும். பார்வதி தேவியைக் கீழ்க்கண்ட நாமங்கள் கூறிப் பிரார்த்திக்க வேண்டும். அவை, லலிதா, விஜயா, பத்ரா, பவானி, குமுதா, சிவா, வசுதேவி மற்றும் கௌரி.

சுக்கிலபட்சம் நான்காம் நாள் சதுர்த்தி விரதம் அனுஷ்டிக்கப்படும். கண தேவதைகளை வழிபடுவதற்கும் சிறந்த நாள். வாசனையுள்ள மலர்களை வைத்து வழிபட வேண்டும்.

சுக்கிலபட்சம் ஐந்தாம் நாள் இருப்பது பஞ்சமி விரதம். இவ்விரதத்தினால் நோயற்ற வாழ்வும், கெட்ட சகுனங்களைப் பார்த்ததில் இருந்து விடுதலையும் கிடைக்கும். கார்த்திகை மாதத்தில் வரும் பஞ்சமி திதி சிறப்பானதாகும்.

சுக்கிலபட்சம் ஆறாவது நாள் அனுஷ்டிக்க வேண்டியது, சஷ்டி விரதம். இந்த விரதம் இருப்பவர்கள் வெறும் பழங்களை மட்டுமே உண்ணவேண்டும். இந்த விரதம் மேற்கொள்வதால் ஏற்படும் பலன்கள் என்றென்றும் நிற்பவை ஆகும். இவ்விரதம் கார்த்திகை மாதத்தில் அனுஷ்டிப்பது சிறப்புடையதாகும்.

சுக்கிலபட்சம் ஏழாவது நாள் சூரியனுக்கு உகந்தது. இன்று எடுக்கப்படும் சப்தமி விரதம் மனத்தின் கவலைகள் அனைத்தையும் போக்க வல்லது. பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன. நினைப்பவை நடந்தேறும். குழந்தை பாக்கியமற்ற வர்களுக்குக் குழந்தைச் செல்வம் கிடைக்கும்.

எட்டாவது நாள், கிருஷ்ணபட்சம், அஷ்டமி திதி, மிக முக்கியமானது. கிருஷ்ணன் ஆவணி மாதம் அஷ்டமி திதியில் ரோகிணி நட்சத்திரத்தில் அவதரித்தார். ஆதலால் ஆவணி மாதத்தில் வரும் அஷ்டமி திதி மிக முக்கியமானதும், சிறப்பு வாய்ந்ததும் ஆகும். அந்நாளில் விரதம் இருந்து கிருஷ்ணனை வேண்டினால், ஏழு ஜென்மத்தில் செய்த பாவம் விலகி விடும். கிருஷ்ணனின் ஜெயந்தி அன்று ரோகிணி, சந்திரன், தேவகி, வசுதேவர், யசோதை, நந்தன், பலராமன் ஆகிய அனைவரையும் வணங்க வேண்டும். கிருஷ்ணன் குறிப்பிட்ட இந்த அஷ்டமி திதியில் பிறந்ததால், அந்த நாளுக்கு ஜன்மாஷ்டமி என்ற பெயரும் வழங்கப்படுகிறது.

சுக்கிலபட்சம், கிருஷ்ணபட்சம் இரண்டிற்கும் எட்டாவது நாள் அஷ்டமி திதி இருந்து அது எந்த மாதமாக இருப்பினும் அது சிறப்பு வாய்ந்த நாள் எனப்படும். உதாரணத்திற்கு, அந்த நாள் புதன்கிழமை என்று எடுத்துக் கொண்டால், புதாஷ்டமி என்று பெயர். இவ்வாறு வரும் அஷ்டமியில் ஒருவர் விரதம் அனுஷ்டிக்க வேண்டும். ஒரு காலத்தில் திரா என்ற பிராமணன், ரம்பா என்ற தன் மனைவியுடன் வாழ்ந்து

வந்தான். அவர்களுக்கு கௌசிகா என்ற மகனும், விஜயா என்ற மகளும் இருந்தனர். திராவிடம் தனடா என்று ஓர் எருமை இருந்தது. அந்த எருமையைப் புல்வெளிக்குக் கூட்டிச் சென்று உண்ண வைப்பது கௌசிகாவின் வேலை. ஒரு சமயம் கௌசிகா பாகீரதி நதியில் குளித்துக் கொண்டிருக்கும் பொழுது, எருமை புல்வெளியில் மேய்ந்து கொண்டிருந்தது. அப்பொழுது சில திருடர்கள் வந்து, அந்த எருமையைத் திருடிச் சென்றனர். கௌசிகாவும், அவன் சகோதரியும் எருதினைத் தேடிக் கொண்டு, ஓர் ஆற்றின் அருகில் வந்தனர். அந்த ஆற்றில் சில பெண்கள் குளித்துக் கொண்டிருந்தனர். கௌசிகாவும் அவன் சகோதரியும் தங்களுக்கு மிகவும் பசியாக இருக்கிற தென்றும், உண்ணுவதற்குச் சிறிது உணவு கொடுக்கும்படியும் கேட்டனர். அப்பெண்களும், அவர்கள் இருவரும் தங்களைப் போல் புதாஷ்டமி விரதம் இருந்தால் கொடுப்பதாகக் கூறினர். கௌசிகா, அவ்விரதத்திற்குரிய சடங்குகளைச் செய்தவுடன், அவனுடைய எருமை தெய்வாதீனமாகத் திரும்ப வந்து சேர்ந்தது. பிறகு கௌசிகா தன் சகோதரி விஜயாவை யமனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டு, தான் அயோத்தியின் அரசனாக ஆட்சி செய்தான்.

சில காலங்களில் கௌசிகாவின் தாய் தந்தையர் இறந்து போயினர். விஜயா யமன் மூலமாக அவர்கள் நரகத்தில் இருப்பதாகவும், கௌசிகாவும் தானும் புதாஷ்டமி விரதம் அனுஷ்டித்தால் தன் பெற்றோரை நரகத்தினின்று விடுவிக்கலாம் என அறிந்து, அவ்வாறே செய்ய, அவர்களும் நரகத்தினின்று சொர்க்கம் போயினர்.

சுக்கிலபட்சம், ஒன்பதாம் நாள் வருவது நவமி திதி. அது அஸ்வினி மாதத்தில் வரும்பொழுது, கௌரி தேவியை வணங்கி விரதம் இருப்பதற்கு மிகச் சிறந்த நாளாகும்.

பத்தாம் நாள், சுக்கிலபட்சம் தசமி திதியில் விரதம் இருந்தால் மிகவும் சக்தி வாய்ந்தவர்களாகத் திகழ முடியும். பதினோராம் நாள் ஏகாதசி திதி. விஷ்ணுவிற்கு மிகவும் உகந்த நாளாகும். ஏகாதசி விரதம் இருப்போருக்குக் குழந்தைப் பேறும், பொருட்களும் கிடைக்கும்.

பன்னிரண்டாம் நாள், சுக்கிலபட்சம் துவாதசி திதி எனப்படும். ஆவணி மாதத்தில் வரும் துவாதசி மாடு, கன்றுகளை வழிபடுவதற்கும், சித்திரையில் வரும் துவாதசி மன்மதனை வணங்கவும் சிறந்த நாளாகும். வருடம் முழுதும் துவாதசி விரதம் இருந்தால் ஒருவர் நரகத்திற்குச் செல்ல வேண்டியதில்லை. அதிலும், ஆவணி மாதம், சுக்கிலபட்சம் துவாதசி அன்று திருவோண நட்சத்திரத்தில் விரதம் இருந்தால், புண்ணிய நதிகளில் நீராடினால் கிடைக்கும் புண்ணியத்தை விட அதிகமாகக் கிடைக்கும். புதன் கோளும் அச்சமயத்தில் இருந்தால், கிடைக்கும் புண்ணியம் இரட்டிப்பாகும்.

பதின்மூன்றாம் நாள், சுக்கிலபட்சம் அனுஷ்டிக்கப்படுவது திரயோதசி விரதம். மன்மதன், இவ்விரதம் இருந்து சிவபெருமானை வேண்டியதாகக் கூறப்படுகிறது. இத்திதியில் சிவபெருமானை நினைத்து விரதம் இருந்து வழிபட்டால் மிக்க சிறப்புகளைப் பெற்று வாழ முடியும். இந்திரனும், இத்திதியில் விரதம் இருந்து சிவபெருமானை வழிபட்டதாகக் கூறப்படுகிறது.

கார்த்திகை மாதத்தில், சுக்கிலபட்சம் பதினான்காம் நாள் கடைப்பிடிப்பது சதுர்த்தசி விரதம். இச்சமயத்தில் விரதம் இருந்து, தான, தருமங்கள் செய்து சுவர்க்கத்தை அடைய முடியும். மகா, பால்குண மாதங்களில், கிருஷ்ணபட்சம் பதினான்காம் நாள் வரும் சதுர்த்தசி சிவராத்திரி எனப்படும். இவ்விரதம் இருப்போர், உண்ணாநோன்பு இருந்து, இரவு முழுவதும் விழித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

*சிவராத்திரி அன்று உறங்காமல் விரதம் இருப்போரின் பாவங்கள் அனைத்தும் தொலைக்கப்படும்.*

**காயத்ரி மந்திரம்**

*ஒவ்வொரு மனிதனுடைய உடம்பிலும், ஆணாயினும், பெண்ணாயினும் பல நூறு நரம்புகள் உள்ளன. அவற்றுள் 10 நரம்புகள் மிக மிக முக்கியமானவை. அவையாவன: இட, பிங்கல, சுஷிமுனா, காந்தாரி, ஹஸ்திஜிஷ்வா, பிரித, யஷ, அலம்புஷா, ஹீஹீ, சங்கினி என்பனவாம். இந்த நரம்புகளே உயிர் உடம்பிலிருக்க உதவுகின்றன. இழுத்து விடும் மூச்சுக் காற்று பிராணவாயு எனப்படும். இந்தப் பிராணவாயு அல்லாமல், அபான, சமான, உதான, வியான, நாக, கூர்ம, கிரிகர, தேவதத்தா, தனஞ்செயா என்ற ஒன்பது வகை வாயுக் களும் உடலில் இயங்குகின்றன. சிவனாலும் விஷ்ணுவாலும் கூட வணங்கப்படுபவள் காயத்ரி. இந்த தேவி எங்கும் நிறைந் திருக்கிறாள். ஒவ்வொரு மனிதனின் இதயத்திலும் அன்ன வடிவாக இருக்கிறாள். ஒருவர் இந்த மந்திரத்தை ஏழு தடவை கூறினால், அவர்கள் பாவம் தொலைந்துவிடும். பத்து முறை கூறினால், சுவர்க்கம் செல்லலாம். நூற்றி எட்டு முறை கூறினால், பிறப்பினின்று விடுபடலாம். 'ஓம்' என்ற பிரணவத்துடன் இம்மந்திரத்தைத் தொடங்க வேண்டும்.*

**அரசனின் கடமைகள்**

*அரசனின் தலையாய கடமை, நாட்டின் பகைவர்களை வெல்லுதலும், தன் நாட்டு மக்களை நன்கு காப்பாற்றுவதும், நாட்டிற்கு வளம் சேர்த்தலும் ஆகும். அவனுடைய எல்லைக்குள் இருக்கும் தவசிகளுக்கு எவ்வித இடையூறும் இல்லாமல், அவர்கள் தவம் நன்கு நடைபெறப் பாதுகாப்பும் உதவியும் செய்யவேண்டும். அரசனுடைய அமைச்சர்கள் அறிவுக்கூர்மை உள்ளவர்களாக இருத்தல் வேண்டும். அவன்*

மனைவி அறநெறி பிறழாதவளாக இருத்தல் வேண்டும். ஓர் அரசன் இறந்தால், அமைச்சர்களும் புரோகிதர்களும் காலத்தை விரயம் செய்யாமல் அடுத்த அரசனுக்கு முடிசூட்ட வேண்டும். ஒரு நாடு அரசனில்லாமல் இருப்பது நினைக்க முடியாத ஒன்றாகும்.

முடி சூட்டப்பட வேண்டிய மன்னன், அந்நிகழ்ச்சிக்கு முன்னர் மண் குளியல் செய்யவேண்டும். ஒவ்வொரு உறுப்புக்கும் குறிக்கப்பட்ட முறையில், குறிக்கப்பட்ட இடத்தில் இருந்து எடுக்கப்பட்ட மண்ணை, குறிக்கப்பட்ட உறுப்பிற்குப் பூசுதல் வேண்டும்.

மலை உச்சியிலிருந்து எடுத்த மண்ணைக் காதுகளுக்கும், கிருஷ்ணன் கோயிலின் மண்ணை முகத்திற்கும், இந்திரன் கோயில் மண்ணை முதுகுக்கும், அரண்மனை மண்ணை நெஞ்சிற்கும், யானை தந்தத்தால் தோண்டிய மண்ணை வலக் கைக்கும், காளை மாட்டின் கொம்பு கிளறிய மண்ணை இடக் கரத்திற்கும், ஆற்றில் இருந்து எடுத்த மண்ணைப் பக்கங் களிலும், யாக குண்டத்தின் மண்ணைத் தொடைக்கும், மாட்டுக் கொட்டடியின் மண்ணைப் பாதத்திற்கும் பூசவேண்டும். மன்னன் இம்முறையில் மண் குளியல் செய்த பிறகு, பட்டாபிஷேகம் செய்து கொள்ளத் தகுதியுடையவனாகிறான். நான்கு வகைப்பட்ட அமைச்சர்கள் அபிஷேகம் செய்து வைப்பர். பிராமண அமைச்சர்கள் தங்கப் பாத்திரத்தில் காய்ச்சிய நெய்யினை ஏந்திக் கிழக்குத் திசையிலும், சத்திரிய அமைச்சர்கள் இனிப்புக் கலந்த தயிரை வெள்ளிப் பாத்திரத் தில் வைத்துக் கொண்டு தெற்குத் திசையிலும், மேற்குப் புறத்தில் வைசிய அமைச்சர்கள் தாமிரப் பாத்திரத்தில் தயிரை வைத்துக் கொண்டு நிற்பார்கள். வடக்குப் புறத்தில் சூத்திர அமைச்சர்கள் எல்லா ஜீவ நதிகளில் இருந்தும் கொண்டு வந்த நீரை அரசர் முடியில் ஊற்றுவார்கள். இந்தச் சடங்குகள் முடிந்த பிறகே அவன் உண்மையாகவே அரசனாவான்.

தீயினை வலம் வந்து, தன் குருவின் பாதத்தினைத் தொட்டு வணங்கித் தன்னுடைய படைகளுடன் யானை அல்லது குதிரை மீது அமர்ந்து வீதியில் வலம் வரவேண்டும்.

அரச பதவி ஏற்றுக் கொண்டபின், பல பதவிகளில் தக்கவர்களை நியமிக்க வேண்டும். ஒரு சத்ரியனோ பிராமணனோ படைத்தலைவனாக நியமிக்கப்பட வேண்டும். கடிதம் எடுத்துச் செல்பவன் வலுவான உடம்புடையவனாகவும், ரத சாரதிகள் குதிரைகளின் இயல்பைத் தெரிந்தவனாகவும், கருவூல அதிகாரி வைரம் முதலிய கற்களின் தன்மையை நன்கு அறிந்திருக்க வேண்டும். மருத்துவன், யானைகளின் கண்காணிப்பாளன் ஒருவன், குதிரைகளின் கண்காணிப்பாளன் ஒருவன், அரண்மனை அதிகாரி ஒருவன், அரண்மனைப் பெண்களைக் கவனித்துக் கொள்ள ஓர் அதிகாரி ஆகியோர் நியமிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு பதவிக்கும் அதற்குரிய தகுதியும், அதில் விருப்பமும் உள்ளவனையே நியமிக்க வேண்டும்.

இவ்வாறு நியமிக்கப்படும் அதிகாரிகள், அரசனுக்கு விசுவாசம் உடையவர்களாய் இருப்பதுடன் அவன் கட்டளைகளை மீறாமல் செயல்படுபவர்களாக இருத்தல் வேண்டும். இந்த அதிகாரிகள் பொது இடங்களில் மகிழ்ச்சி தரும் விஷயங்களையே அரசனுக்குச் சொல்ல வேண்டும். விரும்பத் தகாத, கசப்பான விஷயங்களைச் சொல்ல வேண்டுமானால், அரசனைத் தனியே சந்தித்துக் கூறவேண்டும். அரசப் பணியில் ஈடுபட்டவர்கள் திருடர்களாகவோ, அரசனை அவமதிப்பவர்களாகவோ இருக்கக் கூடாது. அரசனைப் போல் உடை அணியவும் கூடாது. அரசனிடம் அதிகமாக நெருங்கவும் கூடாது. தாங்கள் அறிந்த ரகசியங்களை வெளியிடக் கூடாது.

ஒவ்வொரு பத்துக் கிராமங்களுக்கும் கவனிப்பாளனாக ஓர் அதிகாரியும், நூறு கிராமங்களுக்கு ஒரு மேலதிகாரியும்

இருக்க வேண்டும். நாட்டில் நடக்கின்றவற்றை ஒருவருக்கும் தெரியாமல் அறிந்து அரசனிடம் நேரே சொல்லக் கூடிய ஒற்றர்களை நியமிக்க வேண்டும். அரசனுடைய ஆட்சி எல்லையில் உள்ளவர்கள் செய்யும் புண்ணியத்தில், ஆறில் ஒரு பங்கு அரசனைச் சென்றடையும். அதே போன்று குடிமக்கள் செய்யும் பாவங்களிலும் ஆறில் ஒரு பங்கு மன்னனைச் சென்றடையும். பொய் கூறுபவனுடைய சொத்தில் எட்டில் ஒரு பங்கு தண்டனையாக விதிக்கப்பட்டு அரசுடைமை ஆக்கப்படும். காணாமல் போன ஒருவருடைய சொத்தை மூன்று வருடங்கள் வரை பாதுகாக்க வேண்டியது அரசனுடைய கடமை. மூன்று வருடம் முடிவதற்குள் சொத்தின் உரிமையாளர் வந்து கேட்டால் அரசன் அதனை ஒப்படைத்து விட வேண்டும். மூன்று ஆண்டுகள் முடிய சொத்துக்காரர் வரவில்லை என்றால், அந்தச் சொத்து, அரசனைச் சேர்ந்து விடும். மைனர்கள் என்று அழைக்கப்படும் இளம் குழந்தை களின் சொத்தைப் பாதுகாத்து, அவர்களுக்கு வயது வந்தவுடன் அவர்களிடம் ஒப்படைப்பது அரசன் கடமையாகும். ஓர் அரசனுடைய ஆட்சி எல்லைக்குள் ஒரு பொருள் களவு போய்விட்டால், களவைக் கண்டு பிடிப்பதற்கு முன், அதே மதிப்புள்ள வேறு பொருளை, இழந்தவர்க்குக் கொடுத்துவிட வேண்டும். கள்வன் பிடிப்பட்டுக் களவாடப்பட்ட பொருளும் கிடைத்தால், அது அரசனின் கஜானாவில் சேர்க்கப்படும். ஐந்தில் ஒரு பங்கு தானியங்கள் வரியாகச் செலுத்தப்பட வேண்டும். கைவினைஞர்கள் இலவசமாக, அரசனுக்கு வேலை செய்வார்கள். அரண்மனையிலிருந்து அவனுக்கு உணவு வழங்கப்படும்.

அரசன், இளவரசனை அதிக கவனத்துடன் வளர்க்க வேண்டும். நான்குவிதமான சாத்திரங்கள் அவனுக்கு போதிக்கப்பட வேண்டும். முதலாவது தர்மசாத்திரம். எது சரி,

எது தவறு என்பதை இச்சாத்திரம் சொல்கிறது; இரண்டாவது அர்த்த சாத்திரம். இது பொருளாதாரத்தைப் பற்றிக் கூறுகிறது; மூன்றாவது தனுர்வேதம். போர் செய்யும் முறையினைக் கூறுகிறது; இறுதியாக வருவது சிற்ப சாத்திரம். இது கைவினை பற்றிக் கூறுகிறது. இளவரசனைப் பாதுகாக்க, பாதுகாவலர் நியமிக்கப்பட வேண்டும். இளவரசனை எப்பொழுதும் படித்தவர்கள், மதிப்புக்குரியவர்களுடன் பழகுவதற்கு மட்டுமே அனுமதிக்கப்பட வேண்டும். இளவரசன் நல்ல பண்புகளுடன் வளரவில்லையெனில், அவனை சிறைக்கு அனுப்ப வேண்டியது அரசன் கடமை. சிறையில் அவன் சௌகரியமாக இருக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

அரசன் வேட்டையாடுதல், மது அருந்துதல், சூதாட்டம் முதலியவற்றை அறவே விட்டுவிட வேண்டும். பிரயாணம் செய்வதிலேயே பொழுதைக் கழிக்கக் கூடாது. முதலில் தன்னிடம் வேலை செய்பவர்களிடம் நல்ல பெயரெடுத்து, பின்பு தன் நாட்டு மக்களிடம் அதேபோல் இருக்க வேண்டும். இதன்பிறகே அவன் பகைவர்களை வெல்லும் வலிமை பெறுகிறான். அரசாட்சிக்குக் கெடுதல் செய்பவர்கள் உடனடி யாகக் கொல்லப்பட வேண்டும். செய்ய வேண்டியவற்றை உடனே செய்யாமல் காலம் தாழ்த்தினால், செய்யப்படுவதின் நோக்கம் வீணாகி விடும். அரசன் செய்ய நினைப்பதை யாரும் அறிந்து கொள்ளக் கூடாது. ஒன்றைச் செய்து முடித்தவுடன் அதன் பயனை அனுபவிக்கின்றவர்கள் இது அரசன் செயல் என்று புரிந்து கொள்வார்கள். மந்திரிகளை ஆலோசித்தே அரசன் எந்த ஒரு முடிவையும் எடுக்க வேண்டும். உண்பதற்கு முன்னும், உறங்குவதற்கு முன்னும் உணவும், படுக்கையும் ஆபத்தில்லாதவையா என்று பார்க்க வேண்டும்.

அரசன் தன்னுடைய ராஜ்ஜியத்தை நடத்துவதற்கு ஏழு வழிமுறைகள் உள்ளன. அவை சாம, தான, பேத, தண்டம்,

மாயை, உபேக்ஷா, இந்திரஜாலம் என்பன. இவற்றுள் முதல் நான்கும் மிக முக்கியமானவை. சாம என்றால் மென்மையான முறையில் தன் வழிக்குக் கொண்டு வருதல்; தான என்றால் ஒரு காரியத்தைச் சாதிப்பதற்காகத் தேவையான பொருளைக் கொடுத்தல்; பேத என்றால் அவர்களுக்குள் இருக்கும் பிளவுகளைப் பெரிதாக்கி ஒருவரைத் தன்வசம் இழுத்தல்; தண்டம் என்றால் தண்டனை கொடுத்தல்; மாயம் என்றால் வஞ்சகம் செய்தல்; உபேக்ஷா என்றால் வேண்டுமென்றே ஒருவரை உதாசீனப்படுத்தித் தன் காரியத்தை முடித்தல்; இந்திர ஜாலம் என்றால் செப்பிடு வித்தை மூலம் காரியம் சாதித்தல்.

அரசன் ஒருவர் செய்யும் தவற்றுக்கு ஏற்ப தண்டனை வழங்க வேண்டும். ஒருவன் தன்னுடைய பொருள் ஒன்றினைக் காணவில்லை என்று பொய் கூறினால், அரசவையினின்று விலக்கப்பட வேண்டும். பசு, யானை, குதிரை, ஒட்டகம் ஆகியவற்றைக் கொல்பவனின் கை அல்லது கால் வெட்டப்பட வேண்டும். தங்கம், வெள்ளி, பெண்ணைக் கடத்திச் செல்பவன் ஆகியோர் தூக்கிலிடப்பட வேண்டும். விஷம் கொடுப்பவன், தீ வைப்பவன் ஆகியோருக்கு மரணதண்டனை வழங்கப்படும். கணவனை மதிக்காத மனைவி, நாய்கள் ஏவப்பட்டுக் கொல்லப்படுவாள்.

**கனவுகள்**

பின்வரும் கனவுகள் தீக்கனவுகள் என்று கூறப்படும். மனிதர்கள் மேல் மரம் முளைப்பது போலவும், புல் முளைப்பது போலவும் கனவு காணுதல்; கனவு காண்பவர் தான் மொட்டை அடித்துக் கொண்டிருப்பது போலவும், அழுக்கான உடை அணிந்திருப்பது போலவும் கனவு காணுதல்; திருமணம், பாடல் பாடுவது, பாம்பினை அடிப்பது, மிருகங் களைக் கொல்லுவதுபோல் கனவு காணல் ஆகியவையும் தீய

கனவுகளாகும். எண்ணெய் குடிப்பது போலவும், பறவைகளின் மாமிசம் சாப்பிடுவது, வீடு இடிந்து விழுவதுபோல், குரங்கு களுடன் விளையாடுவது போல் கனவு காண்பது தீக் கனவாகும். தீய கனவு காண்பவர் விஷ்ணு, சிவன், கணேசன், சூரியன் ஆகியோரை வணங்க வேண்டும். முதல் ஜாமத்தில் காணும் கனவு, ஒரு வருடத்தில் பலிக்கும். இரண்டாம் ஜாமத்தில் காணும் கனவு ஆறுமாத காலத்திலும், மூன்றாம் ஜாமத்தில் காணும் கனவு மூன்று மாதத்திலும் பலிக்கும். நான்காம் ஜாமத்தில் காணும் கனவு பதினைந்து நாட்களிலும், விடியற்காலையில் காணும் கனவு பத்து நாட்களுக்குள்ளும் பலிக்கும். ஒருவர் முதலில் நல்ல கனவும், அடுத்துத் தீய கனவும் கண்டால், தீய கனவே பலிக்கும். ஆகையால் ஒருவர் நல்ல கனவு கண்டால் அதன் பிறகு தூங்குதல் கூடாது. உடனே எழுந்துவிட வேண்டும். பின் வருவனபற்றிக் காணும் கனவுகள் நல்ல கனவுகள் என்று கூறப்படும். மலைகள், குதிரை அல்லது எருதின் மேல் சவாரி செய்தல், வெண்ணிறப் பூக்கள், மரங்கள் ஆகியவை. ஒருவர் தனக்கு நிறைய கைகள், தலைகள் இருப்பது போலவும், புல், புதர், தன்னுடைய கொப்பூழிலிருந்து வளர்வது போலவும் கனவு காணுதல், வெண்ணிற மாலை அணிந் திருப்பது போல, சூரியகிரகணம், பகைவனின் கொடியைப் பற்றுதல் ஆகியவை நல்ல கனவுகளாகும். ஒருவர் பாயசம் உண்ணுவது போல் காணுதல், கனவு காண்பவர் தானே இறந்து விடுவது போல் கனவு காணுதல், வீடு தீப்பற்றி எரிவதுபோல் காணுதல் நல்ல கனவுகள் என்று கூறப்படும். ஈரமான துணிகள், பழங்கள் நிறைந்த மரங்கள், நீலமான மேகம் கனவில் வந்தால் மிகச் சிறந்த பலன்கள் கிடைக்கும்.

**சகுனங்களும், அவை தரும் குறிப்புகளும்**

தீய சகுனங்கள் என்பவை ஒருவன் வீட்டைவிட்டுப் புறப்படும் பொழுது, எதிர்ப்படவோ, காணவோ கூடாதவை.

பஞ்சு, காய்ந்த புல், சாணி, தோல்பொருள், முடி, விதவை, உடைந்த பாத்திரம் ஆகியவைகளைப் பார்த்துவிட்டு வெளியே புறப்படக்கூடாது. புறப்படும் பொழுது இவற்றைப் பார்க்க நேர்ந்தால் சிறிது நேரம் தங்கி, விஷ்ணுவை தியானித்து விட்டுச் செல்ல வேண்டும். பிரயாணம் புறப்படும் பொழுது வாத்தியங்களின் ஒலி ஒலிக்கக்கூடாது. ஒரு காரியத்திற்கெனப் புறப்பட்டவர்களை மீண்டும் அழைக்கக் கூடாது.

பின்வருவனவற்றைப் பார்த்துப் புறப்பட்டால் நல்ல சகுனம் என்று கூறப்படும். அவை: வெண்மையான பூக்கள், நீர் நிரம்பிய பாத்திரம், இறைச்சி, வயதான ஆடு, பசு, குதிரை, யானை, தீ, தங்கம், வெள்ளி, வாள், குடை, பழம், சங்கு, தயிர், இடியோசை, பிணம் ஆகியவை ஆகும். கழுதை எதிரில் வந்தால் நல்லது நடக்கப் போகிறதென்று பொருள். பன்றி அல்லது எருது இடமிருந்து வலம் சென்றால் நல்ல சகுனம். வலமிருந்து இடம் சென்றால் கெட்ட சகுனம். குதிரை, புலி, சிங்கம், பூனை, கழுதை ஆகியவை வலமிருந்து இடம் சென்றால் நினைத்தது கைகூடும்.

நரி, பல்லி, பன்றி ஆகியவை இடப்புறம் இருந்தாலும், குரங்குகள் வலப்புறம் இருந்தாலும் நல்ல சகுனம். நரி ஏழுமுறை ஊளையிட்டால் நல்ல சகுனம். காகம் வீட்டின் வாசலில் வந்து குரல் கொடுத்தால் விருந்தினர் வருவர். ஒரு கண்ணினால் சூரியனைக் காகம் பார்த்தால் ஆபத்து வரப் போவதாக அர்த்தம். காகம் மண்ணை மேலே பூசியிருந்தால் நினைத்தது கைகூடும். நாய் வீட்டின் உள்ளே தொடர்ந்து குரைக்குமானால், வீட்டில் ஒரு மரணம் சம்பவிக்கும். ஒருவருடைய வழியை மறித்துக் கொண்டு நாய் நின்றால், திருடு போகும். நாயின் வாயில் இறைச்சியுடன் பார்த்தால் நல்ல சகுனம்.

மாடு இடைவிடாமல் குரல் கொடுத்தால், வீட்டுத் தலைவனுக்கு ஆபத்து. இது இரவு நேரத்தில் நடந்தால், திருட்டு அல்லது வீட்டிலுள்ளோர்க்கு மரணம் சம்பவிக்கும். பசு புறாவுடன் விளையாடினால் பசுவிற்கு மரணம் ஏற்படும். யானை தன் வலக் காலை, இடக்காலால் தேய்த்தால் நல்ல சகுனமாகும். யானை தன் காலினால் வலப் பக்க தந்தத்தைத் தேய்க்குமானால், வளமை பெருகும். ஒருவர் பிரயாணம் புறப்படும் பொழுது குடை கீழே விழுமானால், பிரயாணத்தைத் தவிர்ப்பது நல்லது. நல்ல நட்சத்திரங்கள் இருக்கும் நாளிலேயே பிரயாணம் செய்ய வேண்டும். குறிப்பிட்ட நட்சத்திரங்கள் இருக்கும் நாளில் பிரயாணத்தைத் தவிர்ப்பது நல்லது.

**போர்**

ஓர் அரசன் போருக்குப் புறப்படுவதானால், புறப்படுவதற்கு ஏழு நாட்கள் முன்னர் தொடங்கி பின்வரும் முறையில் ஒவ்வொரு நாளும் சொல்லப்பட்ட தேவதைகளைப் பூசிக்க வேண்டும். முதல் நாள்— சிவன், விஷ்ணு, கணேசன்; இரண்டாம் நாள்— திக்பாலர்கள்; மூன்றாம் நாள்— ஏகாதச ருத்ரர்கள்; நான்காம் நாள்— கோள்களும், விண்மீன்களும்; ஐந்தாம் நாள்— அஸ்வினி தேவதைகள், புண்ணிய நதிகள்; ஆறாம் நாள்— எதிர்பார்க்கப்படும் வெற்றியை மனத்துள் கொண்டு, சடங்குகளுடன் கூடிய அபிஷேகம் அரசனுக்குச் செய்யப்பட வேண்டும்; ஏழாம் நாள்— போருக்குப் புறப்படுதல்.

போருக்குப் புறப்படும் படைகள், தலைநகரத்துக்குக் கிழக்குத் திசையில் கூட வேண்டும். படைகள் புறப்படும்போது அப்படைகளுக்கு முன்னர் இசை முழக்குவோர் செல்ல வேண்டும். புறப்பட்ட படை முன்னோக்கிச் செல்ல வேண்டுமே

தவிர, பின்னர் திரும்பிப் பார்க்கவே கூடாது. புறப்பட்ட படைகள் இரண்டு மைல் தூரம் சென்ற பிறகு தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும். விஷ்ணு முதலானவர்களைத் துதிக்க வேண்டும். அரசன் நேரடியாகப் போர் செய்யக் கூடாது. அவ்வாறு செய்து அரசன் இறக்க நேரிட்டால் போரில் தோற்க வேண்டிவரும். ஒரு யானையைப் பாதுகாக்க நான்கு ரதமும், ஒவ்வொரு ரதத்திற்கும் நான்கு குதிரைப் படைகளும், ஒவ்வொரு குதிரைக்கும் நான்கு காலாட்படை என்ற முறையில் அணிவகுப்பு இருக்கவேண்டும். படையில் முதலில் செல்வது காலாட்படை. அடுத்து வில் வீரர். அடுத்து, குதிரைப்படை. இவற்றின் பின்னே ரதப்படையும், அதன் பின்னர் யானைப் படையும் செல்ல வேண்டும். படையின் முற்பகுதியில் கோழைகள் இடம் பெறக்கூடாது. அவர்கள் பின்னணியில் நிற்க வேண்டும். தைரியம், வீரம் உடையவர்களே தூசிப் படையில் இருக்க வேண்டும். சூரியன் எதிர்ப்புறமாக இல்லாமல் படைக்குப் பின்புறம் இருக்கின்ற முறையில் போர் புரிய வேண்டும்.

போரில் உயிர் துறப்பவர் நேரே வீர சுவர்க்கம் போவர். உண்மை வீரர்கள் சிந்தும் இரத்தம், எல்லாக் குற்றங்களையும் கழுவி விடுகிறது. பல யாகங்கள் செய்வதைக் காட்டிலும் போர்க்களத்தில் ஆயுதங்கள் தன்மேல் படுமாறு ஏற்றுக் கொள்வது சிறப்புடையதாகும். போர்க்களத்தில் இருந்து புறமுதுகிட்டு ஓடுதல் ஒரு பிராமணனைக் கொன்ற பாவத்தை விட அதிகமாகும். போர் என்பது சம பலம் உடைய இருவரிடையே நடைபெற வேண்டும். புறமுதுகிட்டு ஓடுபவர்கள், வேடிக்கை பார்ப்பவர்கள், ஆயுதம் ஏந்தாமல் போர்க்களத்தில் நிற்போர் என்பவர் மேல் ஆயுதப் பிரயோகம் செய்யக் கூடாது. போரில் பிடிபட்டவர்களைச் சிறையில் வைக்காமல் தன் மக்களைப் போல் நடத்த வேண்டும்.

## இராமன், இலக்குவனுக்குச் சொல்லிய அரச நீதிகள்

இராமன், இலக்குவனுக்குக் கூறியதாகப் பல அரச நீதிகளை அக்னி புராணம் கூறுகிறது. அவையாவன: அரசனுடைய கடமைகள் நான்கு ஆகும். முதலாவது, செல்வத்தைச் சேகரிக்க வேண்டும். இரண்டாவது, சேகரித்த தைப் பெருக்க வேண்டும். மூன்றாவது, அதனைக் காக்க வேண்டும். நான்காவது, அதனை வழங்க வேண்டும். அரசன் பொறுமை உடையவனாக இருத்தல் வேண்டும். பணிவுடன் நடந்து கொள்ள வேண்டும். பணிவும் பொறுமையும் புலன்களை வெல்வதால் கிடைக்கின்றது. பொறி புலன்கள் மதம் பிடித்த யானை போன்றவை. அவற்றைக் கட்டுப்படுத்தா விட்டால் பொறுமை, பணிவு என்ற பண்புகளை இந்த யானைகள் கீழே போட்டு மிதித்து விடும்.

அரசன், அஹிம்சை மேற்கொள்பவனாய், சத்தியத்தைக் காப்பவனாய், தூய்மை உடையவனாய் இருத்தல் வேண்டும். அரசன் எல்லாச் சடங்குகளையும் தவறாமல் செய்வதுடன் ஏழைகட்கு உணவிடுவதையும், பாதுகாப்பு வேண்டி வருபவர் களைப் பாதுகாக்கவும் வேண்டும். இனிய வார்த்தைகளையே பேச வேண்டும். இன்றிருக்கும் உடம்பு நாளை இல்லாமல் போகும்.

உடம்புக்குத் தேவைப்படும் இன்ப வேட்டையில் இறங்கி அரச கடமைகளிலிருந்து தவறுபவன் அடிமுட்டாளாவான். துயரப்பட்ட மக்கள் கண்ணீர்விட்டுக் கொடுக்கும் சாபம் எத்தனை பெரிய அரசனையும் கீழே தள்ளிவிடும். தேவர் களுக்கும் விலங்குகளுக்கும் ஒரே ஒரு வேறுபாடுதான் உண்டு. தேவர்கள் இனிய வார்த்தை பேசுகின்றனர். விலங்குகள் கடுமையான சொற்களையே பேசுகின்றன. தெய்வங்கள் இனிய

வார்த்தை பேசுவதுபோல மன்னனும், தனக்கு நன்மை செய்யும் நண்பர்களிடம் மட்டும் அல்லாமல், தீமை செய்யும் பகைவர்களிடம் கூட இனிய சொற்களையே பேச வேண்டும். அரசன் தன் குருவிடம் வணக்கத்தையும், நேர்மையான வர்களிடம் நேர்மைப் பண்பையும், கடமை மூலம் தெய்வங் களையும், அன்பு செய்வதன் மூலம் பணியாளர்களையும், தானம் செய்வதன் மூலம் ஏழைகளையும் திருப்திப்படுத்த வேண்டும்.

அரசனுக்கு ஏழு அங்கங்கள் உள்ளன. 1. அரசன், 2. அமைச்சர்கள், 3. நண்பர்கள், 4. கருவூலம், 5. படை, 6. கோட்டை, 7. நாடு. இவற்றுள் மிக முக்கியமானது நாடாகும். எப்படியும் அதனைக் காத்தே தீரவேண்டும். அரசன் அமைச்சர் களையும், அரசியல் புரோகிதனையும் தேர்ந்தெடுப்பதில் மிக மிக கவனமாக இருக்க வேண்டும். அறிவில்லாத முட்டாள்களாகிய அமைச்சர்களை அரசன் கலந்தாலோசிக்கக் கூடாது.

அரசனுக்குரிய அடையாளங்கள், அவனுடைய செங் கோல், பொன்னாலாகிய தடி, வெண்கொற்றக்குடை ஆகியவையாம். அரசனுடைய குடை அன்னத்தின் தூவி, மயிலிறகு, கொக்குகளின் இறகு ஆகியவற்றால் செய்யப் படலாம். எதனால் செய்யப்பட்டாலும், முழுவதும் ஒன்றாகவே இருக்க வேண்டுமே தவிர, தூவி, மயிலிறகு, இறகு ஆகியவற்றை ஒன்றுடன் ஒன்று கலக்கக் கூடாது. சிம்மாசனம் மரத்தால் செய்யப்பட்டுப் பொன் தகட்டால் மூடப்பட வேண்டும். வில் என்பது இரும்பு, கொம்புகள், மரம் ஆகியவற்றில் எதனாலும் செய்யப்படலாம். சிறந்த வில் என்பது நான்கு கையளவு நீளம் உடையதாய் இருக்க வேண்டும். அரசன் ஓராண்டு வரிப்பணத்தைப் படைக்கலங்கள் செய்யச் செலவழிக்கலாம்.

## ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள்

ஆண்வாரிசு இல்லாமல் ஒருவன் இறந்தால், அவனுக்குக் கடன்கள் இருந்தால் அவன் சொத்துக்களுக்கு யார் உரிமை ஆகிறார்களோ, அவனே அக்கடன்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். வாரிசாக உள்ள ஆண்மகன் சொத்தை ஏற்கும் பொழுது, கடனையும் ஏற்க வேண்டும். ஆனால் கணவனோ, மகனோ கொண்ட கடனுக்கு மனைவி பொறுப்பாளி ஆகமாட்டாள். ஆனால் கணவனும் மனைவியும் சேர்ந்து கடன் வாங்கி இருந்தால், அப்பொழுது கணவனுக்குப் பிறகு மனைவி பொறுப்பாளி ஆவாள். சாட்சி இல்லாமல் கடன் கொடுக்கப் பட்டிருந்தாலும், அக்கடன் உண்மையாகவே கொடுக்கப்பட்டது என்று அரசன் நம்பினால் 64 நாட்களுக்குள் அக்கடனைத் திருப்பித் தர உத்தரவிடலாம். பொய் வழக்குக் கொண்டு வந்தான் எனத் தெரிந்தால், அவ்வழக்கைக் கொண்டு வந்தவனுக்கும், அதற்குச் சாட்சி கூறியவனுக்கும் தக்க தண்டனை வழங்கப்படும். பொய் சாட்சி கூறும் பிராமணன் நாடு கடத்தப்படுவான். ஒருவன் சாட்சி கூறுகிறேன் என்று ஒத்துக்கொண்டு, பிறகு பின்வாங்கினால், பொய் வழக்குப் போட்டவனுக்குக் கிடைக்கும் தண்டனையைப்போல் எட்டு மடங்கு அதிக தண்டனை கிடைக்கும். கடன் கொடுக்கும் பொழுது, கொடுப்பவன், பெறுபவன், சாட்சிகள் ஆகிய அனைவர் பற்றியும் முழு விபரங்கள் எழுத்தில் எழுதப்பட வேண்டும். கடன் பெற்றவர் தவணைமுறையில் கடனைத் திருப்பித் தந்தால், அத்தவணைகள் அனைத்தும் மூலக் கடிதத்தில் வரையப்பட வேண்டும். கடன் கொடுக்கும் பொழுது, சாட்சிகளின் எதிரே கொடுக்கப்படுவது போல, கடனைத் திருப்பி அடைக்கும் பொழுதும் சாட்சிகளை வைத்துக் கொண்டே திருப்பிக் கொடுக்க வேண்டும். சாட்சி கூற முன்வருபவர் தலையில் பஞ்சு, நெருப்பு, நீர், விஷம்

இவற்றுள் ஏதாவதொன்றை வைத்துக் கொண்டுதான் சாட்சி சொல்ல வேண்டும்.

பொய்சாட்சி கூறுபவர்களைப் பற்றி அறிந்து கொள்ள ஒரு வழி உண்டு. ஏழு ஆல இலைகளை அடுக்கி அதன் மேல் ஒரு நெருப்புத் துண்டை வைத்துக் கொண்டு அக்னியை ஏழு முறை வலம் வரவேண்டும். அவர் கை வேகவில்லையானால் உண்மை கூறுகிறார் என்றும், இலைகளைத் தாண்டி நெருப்பு கையைச் சுட்டால் பொய் சாட்சி கூறுகிறார் என்றும் தெரிந்து கொள்ளலாம். சாட்சி கூறுபவனைத் தண்ணீருக்குள் அமுக்கி வைத்து அவன் சாகவில்லையானால் உண்மை சொல்கிறான் என்றும், செத்துவிட்டால் பொய்சாட்சி கூறினான் என்றும் அறியலாம்.

இறக்கும் ஒரு தந்தை, உயில் எழுதி வைத்திருந்தால் அதன்படி அவன் சொத்துப் பிரிக்கப்படும். அப்படி இல்லாமல் பிள்ளைகள் அனைவருக்கும் சமமான பங்கு கிடைப்பதானால் அவன் மனைவிக்கும் சமமான பங்கு ஒன்று உண்டு. இவ்வாறில்லாமல் தந்தை தன் சொத்து முழுவதையும் மூத்த மகனிடம் விட்டுச் செல்வதும் உண்டு. பாட்டனின் சொத்து தந்தைக்கும், மூத்த மகனுக்கும் சமமாகக் கிடைக்கும். பாட்டனார் சம்பாதிக்காமல் தந்தையால் மட்டும் சம்பாதிக்கப் பட்ட பொருள் மகனுக்குக் கிடைக்க வேண்டும் என்ற அவசியமில்லை. மகன் பிறப்பதற்கு முன்னேயே பாட்டனுக்கும், தந்தைக்கும் ஏற்கெனவே சொத்து பிரிக்கப்பட்டிருந்தால் மகன் பிறந்த பிறகு தந்தைக்குக் கிடைத்த சொத்தில் சம பங்கு பிள்ளைக்கு வரும். பெண்களுக்குச் சொத்துரிமை இல்லை. ஆனால் சொத்தைப் பெற்றுக்கொண்ட ஆண் வாரிசுகள், தங்கைமார்களுக்குத் திருமணம் செய்ய, தங்களுக்குக் கிடைத்த சொத்தில் நான்கில் ஒரு பங்கு செலவிட வேண்டும்.

**புராண தானம்**

*இனி அக்னி புராணம் புராணங்களை தானமாகக் கொடுப்பதால் ஏற்படும் நன்மைகளைப் பற்றிப் பேசுகிறது. புராணங்களை தானமாகக் கொடுக்கும் பொழுது, பசுவையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு புராணத்திலும் உள்ள சுலோகங்கள் எத்தனை என்று அக்னி புராணம் கூறுகிறது. பிரம்ம புராணம்—25000; பத்ம புராணம்—12000; விஷ்ணு புராணம்—13000; வாயு புராணம்—14000; பாகவத புராணம்—18000; நாரத புராணம்—25000; மார்க்கண்டேய புராணம்—9000; அக்னி புராணம்—12000; பிரம்ம வைவர்த புராணம்—18000; லிங்க புராணம்—11000; வராக புராணம்—14000; ஸ்கந்த புராணம்—84000; வாமன புராணம்—10000; கூர்ம புராணம்—8000; மச்ச புராணம்—13000; கருட புராணம்—8000; பிரம்மாண்ட புராணம்—12000; இங்கே கூறப்பட்டவற்றுள் பவிஷ்ய புராணம் மட்டும் கொடுக்கப்படவில்லை. பிரம்ம புராணம் தானமாகக் கொடுக்கப்பட வேண்டிய மாதம் வைகாசி. பத்ம புராணம்— ஜேஷ்டா; விஷ்ணு புராணம்— ஆஷாட; வாயு புராணம்— சரவண; பாகவத புராணம்— பாத்ரா; நாரத புராணம்— அஸ்வினா; மார்க்கண்டேய புராணம்— கார்த்திகை; அக்னி புராணம்— மார்கசீரிஷா; பவிஷ்ய புராணம்— பௌசு; பிரம்மவைவர்த புராணம்— மகா; லிங்க புராணம்— பால்குண; வராக புராணம்— சித்திரை.*

*புராணங்களைப் படிப்பதாலும், கேட்பதாலும் நினைத்த காரியங்கள் கைகூடும். புராணங்கள் பற்றிச் சொற்பொழி விறுக்கு ஏற்பாடு செய்பவர்கள், நீண்ட ஆயுளுடன், உடல் நலத்துடன், மனமகிழ்ச்சியுடன் வாழ்வார்கள் என்று அக்னி புராணம் பேசுகிறது. சொற்பொழிவாற்றுபவருக்குத் தகுந்த சன்மானம் கொடுக்க வேண்டும் என்றும் அக்னி புராணம் மேலும் கூறுகிறது.*

## மருத்துவம்

தன்வந்தரி, தேவர்களுக்கு வைத்தியனாக இருந்தான். அவன் சுஷ்ருதா முனிவனுக்கு ஆயுர்வேத மருத்துவத்தைக் கற்றுக் கொடுத்தான். அக்னிபுராணம், சுஷ்ருதா முனிவர் கற்றுக் கொண்ட மருத்துவம் பற்றியும், என்ன நோய்க்கு என்ன மருந்து தரப்பட வேண்டும் என்பது பற்றியும் கூறுகிறது. இதில் விருக்ஷ ஆயுர்வேதம் என்ற தனிப்பகுதி இருக்கிறது. எந்தெந்த மரங்களை எங்கெங்கு நட வேண்டும் என்று கூறுகிறது. இவற்றோடு, விலங்குகளுக்கு அளிக்கப்படும் மருத்துவம் பற்றியும், விஷமுறிவுகள் பற்றியும் விரிவாகக் குறிப்பிடுகிறது.

## இலக்கியமும் இலக்கணமும்

கவிதைக்கு நான்கு வகையான சந்தங்கள் உண்டு. நெடுங்கணக்கில் மொத்தம் 64 எழுத்துக்கள் உள்ளன. அவற்றுள் 21 உயிர் எழுத்துக்கள் என்று சொல்லப்படும். எழுத்துக்களை மூன்று வகையாக உச்சரிக்கலாம். அவை முறையே உதத்தா; அனுதத்தா; ஸ்வரிதா ஆகும். எழுத்துக்கள் தோன்றுமிடம் எட்டாகும். அவையாவன: மார்பு, தொண்டை, தலை, அடிநாக்கு, பற்கள், மூக்கு, உதடு, மேலண்ணம் ஆகியவை ஆகும். உச்சரிப்புகள் சுத்தமாகவும், பிறர் கேட்கும் படியாகவும் இருக்க வேண்டும். மூக்கால் பேசுவதோ, முணுமுணுப்பதோ கூடாது.

கவிதைகளில் பயன்படும் அணிகள் பற்றி அக்னி புராணம் விரிவாகப் பேசுகிறது. கவிதை என்பது சாத்திரங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றினின்று வேறாகும். சாத்திரங்கள் என்பவை உரைநடையில் எழுதப்பட்ட சொற்களால் நிறைந்தவை. இதிகாசங்கள் நிகழ்ச்சிகளின் தொகுப்பு. ஆனால் இவை கவிதை அல்ல. தூய்மையான உண்மையான மனிதர்களை இவ்வுலகில் காண்பது கடினம். தூய்மையான

மனிதர்களைக் கண்டாலும், அவருள் கற்றவர்களைக் காண்பது அரிது. தூய்மையும் கல்வியும் உள்ளவர்களிடையேயும் கவிதை உணர்ச்சி உடையவர்களைக் காண்பது கடினம். கவிதை உணர்ச்சி இருந்தாலும் கவிதை இயற்றும் ஆற்றல் உடையவர்களைக் காண்பது அரிது. கவிதை இலக்கணம் தெரியாமல் கவிதை இயற்றுவது கடினம். கவிதை இலக்கணத்தைவிட கவிஞனுக்கு அதிகம் தேவைப்படுவது உணர்ச்சிப் பெருக்கு.

சமஸ்கிருதம் தேவபாஷை. பிராகிருதமே மக்கள் பேசும் பாஷை. கவிதை கத்யம், பத்யம், மிஸ்ரை என்று மூன்று வகைப்படும். இதிகாசம் என்பது சமஸ்கிருதத்தில் எழுதப்பட வேண்டும். ஓரளவு பிராகிருத சொற்கள் கலப்பதால் தவறில்லை. அவை காண்டம் அல்லது சர்க்கங்களாகப் பிரிக்கப்பட வேண்டும். ரசங்களில்லாத இலக்கியம் பயனற்றது. அவை ஒன்பது வகைப்படும். அவையாவன: ஹாஸ்யம், கருணா, ரெளத்ரம், வீரம், பயனகா, பீபத்ஸா, அற்புதம், சிருங்காரம் என்பவை ஆகும். ரசங்கள் பயன்படுத்தப்படும் பொழுது அவை உணர்ச்சியோடு கலந்திருக்க வேண்டும். உணர்ச்சியோடு கலந்த ரசபாவம் இல்லாத இலக்கியம் இரண்டாம் தரம் ஆகும். சில இடங்களில் கவிஞனுடைய சாதுரியத்தால் ரசபாவத்தில் கூடப் பல நுணுக்கங்களைக் காட்டலாம். அறுபத்து நான்கு கலைகள் என்று சொல்லப்படுபவை பெரும்பாலும் பெண்களோடு சம்பந்தப்பட்டவை. ஆடல், பாடல், இசைக்கருவிகள் இயக்குதல் முதலியவை இக்கலைகளுக்குள் அடங்கும்.

### பிரளயங்கள்

குறிப்பிட்ட காலத்தில் பிரளயங்கள் வந்து போகின்றன. நாலாயிரம் யுகங்களுக்குப் பிறகு பிரளயம் தோன்றுகிறது. நூறு

ஆண்டுகளுக்கு மழை இன்மையால் உயிர் வர்க்கங்கள் மடிகின்றன. விஷ்ணுவின் ஏவலால், சூரியன் சமுத்திரத்தின் நீரை வற்றச் செய்கிறான். ஏழு சூரியன்கள் ஆகாயத்தில் தோன்றி மூன்று உலகங்களையும் எரிக்கின்றனர். பெரும் பாம்பின் மூச்சுக்காற்றும் எஞ்சியவற்றை எரிக்கின்றது. மூன்றுலகமும் எரிந்து அனைத்தும் சம நிலையான பொழுது, கருமேகங்கள் தோன்றி விடாது மழை பொழிகின்றது. நூறு வருடங்களுக்கு விடாது மழை பொழிகிறது. விஷ்ணுவின் மூச்சுக் காற்றிலிருந்து, புயல் காற்று உருவாகி மேகங்களை விரட்டுகிறது. எங்கும் நீரே நிறைந்திருப்பதால், விஷ்ணு நீரின் மேல் உறங்குகிறார். ஒரு கல்பம் முழுவதும் உறங்கிய விஷ்ணுவிடம் முனிவர்கள் வந்து மூன்று உலகங்களையும் படைக்குமாறு வேண்டுகின்றனர்.

**கீதை**

ஸ்ரீகிருஷ்ணர் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் அருச்சுனனுக்கு உபதேசித்த கீதையின் சாரத்தை அக்னி புராணம் இங்கு பேசுகிறது.

இப்பூத உடம்பு இருப்பதால் மகிழ்ச்சி அடைவதற்கோ, இவ்வுடம்பு அழிந்து விட்டால் துக்கப்படுவதற்கோ எவ்விதக் காரணமும் இல்லை. ஆன்மா அழிவதும் இல்லை, தேய்வதும் இல்லை. அழிக்கப்படாதது. அது சிரஞ்சீவித்துவம் உள்ளது. ஆத்மனைப் பற்றி யாரும் அழத் தேவையில்லை. ஆத்மன் அதை விரும்புவதும் இல்லை. பொறிபுலன்களுக்கு அடிமைப் பட்டவர்கள் இந்த உண்மையை அறிய முடியாது. ஆத்மாவை அறிந்தவன் எந்தப் பொருளுக்கும் ஆசைப்படுவதில்லை. ஆத்மா எந்தத் தொழிலிலும் ஈடுபடுவதும் இல்லை. லாப நஷ்டம் எதையும் பெறுவதும் இல்லை. இந்த உண்மையை அறிவது மாயையாகிய வெள்ளத்தில் இருந்து, தப்புவதற் குரிய கருவியாகும். இந்த அறிவு, செயலிலிருந்து ஆத்மாவை

விடுதலை செய்கின்றது. செயல் என்பது பரப் பிரம்மத்தில் இருந்து தோன்றுவதாகும். இதை அறிந்த ஆத்மா தாமரை மலரில் இருக்கும் பனித்துளிபோல் மிகப் பரிசுத்த மானது. இந்த ஞானம் பெற்றவன் எல்லாப் பொருளிலும் தன்னையும், தன்னில் எல்லாப் பொருளையும் காண்கிறான். விஷ்ணுவை நான்கு வகைப்பட்ட மனிதர்கள் வணங்கு கிறார்கள். துன்பத்தினால் நைந்து போனவர்கள் முதல் நிலையினர்; பொருட் செல்வம் தேடுபவர் இரண்டாவது வகையினர். மூன்றாவது வகையைச் சேர்ந்தவர்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டவர்கள். நான்காவது வகையைச் சேர்ந்தவர்கள் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஒருமைப்பாட்டை அறிந்தவர்கள்.

பரப் பிரம்மம் மிக அல்பமான புல்லினிடத்தும், பேராற்றலும் தூய்மையும் படைத்த ஞானிகளிடத்தும் கலந்து நிற்கிறது. உடம்போடு சேர்ந்த பொறிபுலன்கள் பயனற்றவை. உலகப் பொருள்களோடு தொடர்பை உண்டாக்கவே இவை பயன்படுகின்றன. பரப் பிரம்மம் பொறிபுலன்களைக் கடந்து நிற்பது. அதற்கென்று சில இயல்புகள் உண்டு என்றும் சொல்லலாம்; இல்லை என்றும் சொல்லலாம். பரப் பிரம்மமே அனைத்தையும் ஆக்கவும் அழிக்கவும் செய்கிறது. எல்லையற்ற பேராற்றலே பிரம்ம சொரூபம் ஆகும். ஒருசிலர் ஜீவாத்மா வுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஒற்றுமையை தியானத்தில் அறிகின்றனர். ஒருசிலர் நல்ல செய்கைகளின் மூலம் பரமாத்மாவை அறிகின்றனர்.

**யம கீதை**

முன்னொரு காலத்தில் வஜ்ஜிரவா என்றொரு மன்னன் இருந்தான். அவனுக்கு நச்சிகேதா என்றொரு மகன் இருந்தான். வஜ்ஜிரவா ஒரு பெரிய யாகம் செய்து தன்னுடைய செல்வங்கள் அனைத்தையும் கொடுத்து விட்டான். நச்சிகேதா

தன்னை யாருக்குத் தன் தந்தை கொடுத்திருக்கிறான் என்று திரும்பத் திரும்பக் கேட்டான். இதனால் கோபம் கொண்ட வஜ்ஜிரவா, 'உன்னை யமனுக்குக் கொடுத்து விட்டேன்' என்று கூறினான். தந்தையின் பதிலைக் கேட்ட மகன் யமனுடைய உலகிற்குச் சென்றான். அங்கு மூன்று நாட்கள் தங்கி யமனைப் பார்த்தான். அங்கு சென்ற யாரும் மீண்டும் பூலோகம் திரும்பியதில்லை. ஆனால் நச்சிகேதாவைக் கண்ட யமன், மனமகிழ்ந்து அவன் மீண்டும் பூலோகம் செல்ல வரம் கொடுத்தான். ஆனால் அதை விரும்பாத நச்சிகேதா, யமனிடம் ஆத்மாவைப் பற்றிய உண்மை இயல்பைத் தெரிந்து கொள்ள அவனை வேண்டினான். யமன் நச்சிகேதாவிற்கு ஆத்மாவைப் பற்றிக் கூறியவையே 'யம கீதை' என்று வழங்கப்படுகிறது. யமன் கூறியதாவது: உலகத்தில் உள்ள மக்கள் நிலையில்லாத பொருள்களாகிய பதவி, பணம், வீடு என்பவற்றில் மயங்குவது வினோதமாக உள்ளது. ஞானிகள் இவற்றில் ஈடுபடக் கூடாது. இவற்றை நெருங்கவிடக் கூடாது. பழகிவிட முடியாத நிலையை அடையக் கூடாது என்று சொல்லியிருந்தும் மக்கள் அதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை.

பரப் பிரம்மம் இவையனைத்தையும் பெற்றிருக்கிறது. ஆனால் இவற்றோடு ஒவ்வொருவரும் இதனைக் காண முடியாது. ஆனால் எல்லாவற்றிலும் அது ஊடுருவி நிற்கின்றது. ஆத்மா என்பது இவ்வுடம்பினுள் உறைகின்றது என்றாலும், இவ்வுடம்பே ஒரு ரதமாகவும், அறிவு ரதத்தைச் செலுத்துபவனாகவும், மனம் என்பது கடிவாளமாகவும் உள்ளது. ஐந்து பொறிபுலன்களும் குதிரைகளாக உள்ளன. இதனை ஏறிச் செலுத்தும் ஆத்மா ஐந்து குதிரைகளையும் அடக்கி, போர் வீரனைப் போல் தன்னுடைய மெய்யறிவை அம்பைப் போல பரப் பிரம்மத்திடம் செலுத்த வேண்டும். உண்மையான ஞானிகள் ஆத்மாவிற்கும், பரப் பிரம்மத்திற்கும்

உள்ள ஒருமைப்பாட்டை நன்கறிவர். சமாதி என்பது இந்த ஒருமைப்பாட்டை அறிகின்ற முறையே தவிர வேறொன்று மில்லை. பரு உடம்பு மறைந்ததும், ஆத்மா விடுதலை அடைந்து பரப்பிரம்மத்துடன் ஐக்கியமாகிறது.

*(இங்கு சொல்லப்பட்ட நச்சிகேதாவின் கதை, கதோப நிஷத்தில் இடம் பெற்ற ஒன்றாகும். வஜ்ஜிரவா என்பவன் ஒரு சாதாரண பிராமணன். அரசனல்ல. அவன் யாகம் செய்துவிட்டுப் பல பசுக்களை தானமாகக் கொடுப்பதற்குத் தயாராக வைத்திருந்தான். ஆனால் அவற்றில் ஒரு பசுகூடப் பால் தரும் நிலையில் இல்லை. இனி, சினைபிடித்து பால் கறக்கலாம் என்ற நிலையும் இல்லை. எல்லாம் கடந்து, மரத்துப்போன பசுக்கள் அவை. பிராமணன் மகனாகிய நச்சிகேதா இத்தகைய மாடுகளை தானம் செய்வது பெரும் தவறு என்று எடுத்துச் சொல்லியும், அவன் தந்தை அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே, இந்தப் பயனற்ற பசுக்களை தானம் செய்ய முற்பட்டார். மனம் நொந்து போன நச்சிகேதா இவற்றையெல்லாம் தானமாகக் கொடுக்கின்ற நீ என்னை யாருக்குக் கொடுக்கப் போகின்றாய் என்றான். பலமுறை கேட்டும் தந்தை விடை கூறவில்லை என்றாலும், நச்சிகேதா விடாமல் அதே கேள்வியைக் கேட்டு நச்சரித்த பொழுது, கோப மிகுதியால் அவன் தந்தை 'உன்னை யமனுக்குத் தரப் போகிறேன்' என்றான். அதை ஏற்றுக் கொண்ட நச்சிகேதா, யமனிடம் சென்று ஆத்மாவின் சொரூபத்தை விளக்குமாறு கேட்கிறான். யமன் கூறிய விடைகளுக்கு, 'யம கீதை' என்ற பெயர் கதோபநிஷத்தில் எங்கும் தரப்படவில்லை. பல உபநிஷதக் கதைகள்கூடப் புராணங்களில் இவ்வாறு வடிவெடுத்தன என்பதற்கு இது ஓர் உதாரணம்)*

□ □ □

# 9. பவிஷ்ய புராணம்

## இப்புராணம் பற்றி...

மச்ச புராணம், பவிஷ்ய புராணத்தை பிரம்மனே முதல் மனுவுக்குச் சொன்னார் என்று சொல்லுகிறது. இது 14,500 பாடல்களைக் கொண்டது. இதற்கெதிராகப் பவமுனிவர் இப்புராணத்தை மனுவுக்குச் சொன்னார் என்றும், இதில் 14,000 பாடல்கள் உள்ளன என்றும் அக்னி புராணம் கூறுகிறது. இப்புராணம் 5 சருக்கங்களைக் கொண்டது. அவையாவன: 1) பிரம்மா 2) வைஷ்ணவம் 3) சைவம் 4) சருக்கம் 5) பிரதிசருக்கம் என்பனவாம்.

ஆனால் இப்பொழுது புழக்கத்தில் இருக்கும் பவிஷ்ய புராணம் நான்கு சருக்கங்களை மட்டுமே கொண்டுள்ளது. இது சிவ சருக்கம் என்றோ, வைணவ சருக்கம் என்பவற்றிற்கு பதிலாக மத்தியமா சருக்கம் என்றோ குறிப்பிடுகின்றது. இப்புராணம் குறிப்பிடும் நான்கு சருக்கங்கள் 1) பிரம்மா 2) மத்யமா 3) பிரதி சருக்கம் 4) உத்தரா ஆகியனவாம். இப்புராணம் இங்குள்ளபடி பவிஷ்ய புராணம் பிரம்மாவாலோ, பல முனிவராலோ எந்த மனுவுக்கும் சொல்லப்படவில்லை. சதானிக்கா என்னும் மன்னன் வியாசமுனிவரைச் சந்தித்து தர்ம சாஸ்திரங்களைப் பற்றிச் சொல்லுமாறு கேட்க, அவர் தம் சீடனாகிய சுமந்துவிடம் செல்லுமாறு பணித்தார்.

ஏனைய புராணங்கள் போல் இல்லாமல், பல்வேறு விரதங்கள், காயத்ரி மந்திர மகிமை, வேதப் பயிற்சி என்ப வற்றைக் கூறுவதுடன் நான்கு வர்ணங்கள், அவர் களுக்குள் மணம் செய்து கொள்கின்ற முறை, பாம்புக்கடி விஷத்தை இறக்குதல், கலி காலத்தில் அரசர்களின் வம்சாவளி என்பவற்றைச் சொல்கிறது. குப்த மன்னர்கள் வம்சாவளி பற்றிச் சொல்லும் இப்புராணம் அதற்கு முன்பு உள்ளவர்களைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை.

சாகதுவீப பிராமணர்கள் பற்றியும், அவர்களை எங்கிருந்து யார் இங்கு கொண்டு வந்தார்கள் என்பது பற்றியும், அவர்கள் பழக்க வழக்கம் பற்றியும் இப்புராணம் பேசுகிறது. சூரிய வழிபாட்டில் சிறந்து நின்ற மகப் பிராமணர்களைப் பற்றி இப்புராணம் விரிவாகப் பேசு கிறது. இங்கு வந்தபின் கிருஷ்ணனுடைய விருப்பப்படி இந்த பிராமணப் பெண்கள் யாதவர்களை மணந்து கொண்டார்கள் என்று இப்புராணம் பேசுகிறது. இந்தப் புராணம் பழைய விவிலியத்தில் உள்ள ஆதாம் ஏவாள் கதை என்பவற்றில் தொடங்கி இஸ்லாமிய மன்னர்கள், மொகலாய மன்னர்கள் பிருத்விராஜன் கதை, கபீர், குரு நானக் வரலாறு என்பவற்றுடன் பிரிட்டிஷ் பாராளுமன்ற விக்டோரியா ராணியார் ஆகியவர் பற்றிப் பேசுகிறது.

இப்பெயர் கொண்ட பழைய புராணம் என்று அழிந்தது என்று தெரியவில்லை. அதில் உள்ள சில பாடல்கள் சில பௌராணிகர்களின் நினைவில் இருந் திருக்க வேண்டும். இந்த ஒரு புராணத்தில் தர்ம சாஸ்திரங்களுக்கும், வர்ணாசிரம தர்மங்களுக்கும் இடம் கொடுக்கப்பட்டுள்ளது போல் வேறு எந்தப் புராணத்திலும் இல்லை. முன்னுரையில் கூறப்பட்டுள்ளது போல் குப்தர் களின் காலத்தில் பிராமண ஆதிக்கம் தலை தூக்கி நின்ற பொழுது இப்புராணம் இயற்றப்பெற்றிருக்க வேண்டும்.

*அந்தக் காலத்திலேயே வர்ணாசிரம தர்மத்தை மீறித் திருமணங்கள் பெருவழக்காய் நடந்திருக்க வேண்டும். தர்ம சாத்திரம் பற்றிக் கூறுகின்ற பவிஷ்ய புராணம் அதற்கு விரோதமாக நடைபெற்றுள்ள பிராமணப் பெண் களின் கலப்பு மணத்தை நியாயப்படுத்துவதற்காக, கிருஷ்ணனே மகப் பிராமணப் பெண்கள் யாதவர்களை மணந்து கொள்ள வேண்டும் என்று பரிந்துரை செய்தார் என்று இப்புராணம் கூறுகிறது. இஸ்லாமியர் கதை, மொகலாயர் கதை என்பவையும் இஸ்லாமிய அரசுகள் காலத்தில் இதில் புகுத்தப்பெற்றிருக்க வேண்டும்.*

*இந்துப் புராணங்களின் அடிப்படை இப்புராணத்தில் தகர்க்கப்பட்டு இஸ்லாமியர், மொகலாயர் கதை புகுத்தப் பட்டதால், கிழக்கிந்திய கம்பெனி காலத்தில் ஆதாம், ஏவாள் கதை உள்ளே நுழைந்தது. புராணங்களுக்கிருந்த மதிப்பும் மரியாதையும் பௌராணிகர்களின் சந்தர்ப்ப வாதத்தால் எப்படிப் பறக்க விடப்பட்டன என்பதற்கு இப் புராணம் ஓர் உதாரணம்.)*

ஒரு காலத்தில் முனிவர்கள் பலர் கூடி சதனிகா என்ற வேதவியாசரின் சீடரைச் சந்தித்து, “மனிதர்கள் நடந்து கொள்ள வேண்டிய நன்னெறி எது என்று அறிந்து கொள்ள விரும்புகிறோம். வியாசரின் சீடராகிய தாங்கள் அவரிடம் பலவற்றைக் கற்றிருப்பீர்கள். ஆகவே எங்களுக்கு நல்வழி நன்னடத்தை என்பவை பற்றிச் சொல்ல வேண்டும்” என்று கேட்டார்கள். சதனிகா, “நீங்கள் கேட்பது பொதுப்படையாக இருக்கிறது. உங்களுக்கு என்ன சொல்ல வேண்டும் என்று என் குருவிடம் கேட்டு வருகிறேன்” என்று சொல்லிவிட்டு வியாசரிடம் சென்று அவர்கள் விரும்பியதைக் கூறினார். வேதவியாசர், “என் மற்றொரு சீடனாகிய சுமந்துவிடம் சென்றால் உன் ஐயங்களைப் போக்குவார். ஆகவே, அவரிடம்

செல்வாயாக" என்று கூறினார். வியாசரின் கட்டளைப்படி சதனிகா, சுமந்துவை சந்திக்கப் போனார். அவர்களிடையே நடந்த நீண்ட உரையாடல்தான் பவிஷ்ய புராணம் என்ற பெயரில் வழங்கப் பெறுகிறது.

பவிஷ்ய புராணம், பிரம்மனே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்றையும் செய்கிறார் என்றும், அத்ரி முதலிய ஒன்பது முனிவர்களும், சுவயம்பு மனுவும் பிரம்ம னிடத்திலே தோன்றினார்கள் என்றும் கூறுகிறது. பிரம்மனின் தோற்றம், பணி ஆகியவற்றைக் கூறும் பொழுது ஏனைய புராணங்களினின்றும் இப்புராணம் மாறுபட்டுள்ளது.

**கணேசர் – மாறுபட்ட கதை**

தொடக்கத்தில் பிரம்மனால் படைக்கப்பட்ட மனிதர்கள் தாங்கள் விரும்பியதெல்லாம் செய்து வந்தனர். எந்தக் காரியத்திலும் இடையூறு என்று வந்ததே இல்லை. அப்படியே சில இடையூறுகள் வந்தாலும், அதனை எதிர்கொண்ட மனிதர்கள் வெகு எளிதில் அந்த இடையூறுகளைப் போக்கிப் பயனடைந்தார்கள். நாளாவட்டத்தில் நினைத்ததை எல்லாம் செய்து முடிக்க முடிகிறது என்ற எண்ணம் மனிதர்கள் மனத்தில் தோன்றி வலுப்பெறலாயிற்று. இதன் பயனாக ஆணவம், நெஞ்சழுத்தம், யாரையும் மதிக்காத தன்மை, தெய்வங்களிடத்து ஈடுபாடின்மை என்ற துர்க்குணங்கள் மனிதரிடம் படிய ஆரம்பித்தன. மனிதர்களின் இந்தப் போக்கைக் கண்ட பிரம்மன் இவர்களுக்கு புத்தி கற்பிக்க வேண்டும். அதற்குரிய தெய்வத்தை நான் உண்டாக்கப் போகிறேன் என்ற முடிவுடன் கணேசரைப் படைத்தார். அதன் பிறகு சிறியதோ, பெரியதோ யார் எந்தக் காரியத்தைச் செய்வதானாலும் கணேசருடைய உதவி நாடவேண்டி வந்து விட்டது. கணேசரை வேண்டிக் கொள்ளாமல் செய்யப்பட்ட

காரியங்கள், விக்கினங்கள் என்று சொல்லப்படும் தடைகளால் நின்று போயின. மனிதர்கள் கணேசரிடம் பக்தியும் ஈடுபாடும் கொண்டார்கள். ஒன்றைத் தொடங்குவதற்கு முன் அவரை வேண்டிக் கொண்டு தொடங்கினதால் எல்லாவற்றிலும் வெற்றி அடைந்தார்கள். நன்கு அரசாளாத அரசர்கள், நன்கு பாடம் சொல்லாத ஆசிரியர்கள், நன்கு படிக்காத மாணவர்கள் ஆகியவர்களிடத்து கணேசர் கோபம் கொள்கிறார். அவர் கோபித்தால் வாணிபம் நன்கு நடைபெறாது. வேளாண்மை நன்கு செழிக்காது. அவரைத் திருப்திப்படுத்த வேண்டுமே யானால், உள்ளன்போடு பூ, பிரசாதம் முதலியவற்றைப் படைக்க வேண்டும்.

*(கணேசருடைய தோற்றம் பற்றிச் சொல்லும் ஏனைய புராணங்கள் கணேசர், சிவனுக்கும் பார்வதிக்கும் பிள்ளையாகத் தோன்றியவர் என்றே கூறுகின்றன. பவிஷ்ய புராணம் மட்டும், இவர் பிரம்மனால் படைக்கப்பட்டார் என்று பேசுகிறது.)*

**சூரியன் – மாறுபட்ட கதை**

*தட்சன் மகளாகிய அதிதி காசியப முனிவனை மணந்து* தேவர்களைப் பெற்றாள். ஒரு சமயம் அவர்கள் இருவருக்கும் ஒரு முட்டை குழந்தையாகப் பிறந்தது. இந்த முட்டை எவ்வித சலனமும் இல்லாமல் அப்படியே இருந்தது. 'அண்டா' என்ற வடமொழிப் பெயருடைய 'முட்டை' செத்துவிட்டது என்று தாய் அதிதி கருதினாள். ஆனால், முட்டையை நன்கு கவனித்த காசியப முனிவர், முட்டை சாகவில்லை என்று கண்டு, 'சாகாத முட்டை' என்ற பொருளுடைய மித்ருத்தஏரண்டா என்று பெயரிட்டார். ஆறிலிருந்து பிறந்த குழந்தை மிருத்த அண்டாவாக மாறி மார்த்தாண்டன் என்றாயிற்று. (இதன் பிறகு உள்ள சம்ஜனா கதை மற்ற புராணங்களில் கூறப்

பட்டுள்ளது.) இப்புராணத்தில் (பவிஷ்ய புராணம்) இக்கதையில் சில மாற்றங்கள் உள்ளன.

சூரிய வழிபாடு செய்பவர்கள், பவிஷ்ய புராணத்தின்படி மூன்று வகைப்பட்டவர்கள். சூரிய வழிபாடு செய்யும் மகர்கள். இரண்டாவது கூட்டம் அக்னியை வழிபடும் மகர்கள். மூன்றாவது சூரியனை வழிபாடு செய்யும் போஜகர்கள். முதல் இரண்டு இனத்தாரைப் பொறுத்தமட்டில் மகர்கள் என்ற அவர்கள் இனப் பெயரிலுள்ள மா என்ற எழுத்தே சூரியனைக் குறிப்பதாகும். இக்கூட்டத்தார் எண்ணோடு சூரியனை வழிபடுவதோடு உணவு சாகுபடி சூரியனுக்காக என்று கருதினார்கள். தாங்கள் சமைத்த உணவை, சூரியனுக்கு நிவேதனம் செய்த பிறகே உண்ணும் பழக்கம் உடையவர்கள் ஜம்புதுவீபத்திற்கு அப்பால் உள்ள சகதுவீபாவில் தோன்றியவர்கள்.

கிருஷ்ணன், ஜாம்பவதி என்பவளை மணந்து அவள் மூலம் சம்பா என்ற மகனைப் பெற்றான். ஏதோ காரணத்திற்காகக் கிருஷ்ணனே தன் மகனாகிய சம்பாவை, தொழுநோயாளியாக ஆகுக என்று சபித்து விட்டான். இந்த சாபத்தோடு சகதுவீபாவிற்கு வந்தான். சகதுவீபத்தில் இருந்த பிராமணர்கள் சூரிய வழிபாட்டில் வல்லவர்கள். அவன் அரும்பாடுபட்டு சூரியனுக்கு சந்திரபாகு நதிக்கரையில் ஒரு பெருங்கோயிலைக் கட்டினான். ஆதலால் அவர்களை வரவழைத்து தான் கட்டிய சூரியன் கோயிலில் பூசை செய்யுமாறு ஏற்பாடு செய்தான்.

மகப்பிராமணர்கள் தாடி வளர்த்தார்கள். ஏனைய பிராமணர்கள் போல பூணூலைத் தோளில் இருந்து இடம் வலமாகப் போடாமல், இடுப்பில் கட்டிக் கொண்டார்கள். அந்த பிராமணர்கள் இறந்த உடலைத் தொடவே மாட்டார்கள். அவர்கள் உண்ணும் பொழுது வாய்

பேசாமலேயே உண்ணுவர். வாயின் தூய்மை கெடாதபடி வாய்க்கு மேல் ஒரு துணியைக் கட்டி, அசுத்தம் பாடாதபடி, அத்துணியைத் தொங்க விட்டனர் என்று இவர்களைப் பற்றி பவிஷ்ய புராணம் கூறுகிறது.

இக்கதையின் உட்பகுதியில் இரண்டு மகப்பிராமணர்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இரண்டாவது வகை மகப் பிராமணர்கள், சூரியனுக்கு பதிலாக அக்னியை வழிபட்ட வர்கள் ஆவர். இந்தப் பரம்பரைகளின் தொடக்கம் ரிஜ்வா என்ற முனிவனில் இருந்து துவங்குகிறது. ரிஜ்வா சிறந்த அக்னி பக்தன். எனவே அவன் பரம்பரையில் வந்தவர்கள் வேதம் முதலானவற்றை நன்கு அறிந்திருந்ததோடு வீட்டில் அக்னி வளர்த்து அதனை வணங்கும் பழக்கம் உடையவர்கள். (பவிஷ்ய புராணம் குறிப்பிடும் இந்த 2ஆம் வகை மகப்பிராமணர்களைப் பற்றிச் சிந்திக்கும்போது, இரானிய நாட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்து அக்னி வழிபாட்டை விடாது பின்பற்றி வரும் பார்ஸிக் களை நினைவூட்டுவதாக இருக்கிறது. இவர்களும் பூணூலை இடையில் அணிபவர்கள் ஆவார்கள். வேத வழிபாட்டுக் காரர்களுக்கும் அக்னி முக்கியமான தெய்வம் என்றாலும், அக்னிக்கு மேல் வருணன், இந்திரன் என்ற தெய்வங்களை ரிக் முதலான வேதங்கள் போற்றும். ஆனால் பார்ஸிக்கள், அக்னியையே எல்லாமாக நினைந்து வழிபடுகின்றவர்கள். பவிஷ்ய புராணம் கூறும் இரண்டாவது வகை மகப்பிராம ணர்கள் இவர்களாகத்தான் இருக்கவேண்டும். அப்படியானால் குப்தர்கள் காலத்தில் இந்து சமயத்தைத் தூக்கி நிறுத்த வேண்டும் என்ற முயற்சியில் இப்புராணங்கள் எழுதப்பட்ட பொழுது பார்ஸிக்களையும், இந்துக்கள் என்றே சேர்த்துக் கொண்டார்கள் என்று தெரிகிறது. காரணம், வேத வழிப்பட்ட வைதிகர்கள், இரான் நாட்டிலிருந்து வந்த மகப்பிராமணர்கள் ஆகிய இருவருக்கும் அக்னி முக்கியமானதாகக் கருதப்பட்டதே காரணம்.)

மூன்றாவது தொகுதியினர் சூரிய வழிபாட்டில் முன்னர் குறிப்பிட்ட இரண்டு மகப்பிராமணர்கள் போக மூன்றாவதாக உள்ள தொகுதி போஜகர்கள் எனப்படுவர். போஜகப் பிராம ணர்களைப் பற்றி இப்புராணம் விரிவாகப் பேசுகிறது. இவர்களும் சகதுவீபத்தில் இருந்தவர்களே ஆவர். இரண்டாவது மகப்பிராமணர்களைப் பற்றி பவிஷ்ய புராணம் கூறுவதை வைத்துப் பார்த்தால் சகதுவீபம் என்பது இக்காலத்திய இரானிய நாட்டைக் குறிக்கும் என்று கொள்ளலாம். போஜகப் பிராமணர்கள் பூணூலை எப்பொழுதும் அணிந்திருக்க வேண்டும். இவர்கள் இடமிருந்து வலம் அணிந்திருக்கும் பூணூலில் மேல் பகுதியில் சிவனும், நடுப்பகுதியில் பிரம்மனும், அடிப்பகுதியில் விஷ்ணுவும் இருப்பதாகக் கருதினார்கள். இந்தப் பூணூலிலேயே சகல வேதங்களும், சகல ஜீவராசிகளும் அடங்கி உள்ளன என்று கருதப்படுகிறது. எனவே பூணூலை அணியாதவன் தாழ்ந்தவனாகி விடுகிறான். பூணூலை எடுத்து விட்டவன் போஜகப் பிராமணன் என்று கருதப்பட்டான். இவர்கள் ஒவ்வொரு முறையும், உணவைச் சமைத்து உண்பதற்கு முன் சூரியனுக்கு நிவேதனம் செய்துவிட்டுத்தான் உண்பார்கள். மூன்று வேளை குளித்து, ஐந்து வேளை சூரியனை வணங்குவது என்பவை போஜகப் பிராமணர்களுக்கு இன்றியமையாதவைகளாகும்.

பவிஷ்ய புராணம் போஜகர்களின் பெருமையை வானளாவப் புகழ்கிறது. நாளாவட்டத்தில் இந்த போஜகப் பிராமணர்கள் மற்ற எல்லோரையும் விட மிக உயர்ந்தவர்கள் என்று கருதப்பட்டார்கள். ஒரு நல்ல மனைவி கணவனுக்குப் பணிவிடை செய்வது போல, இந்தப் போஜகர்கள் சூரியனுக்குப் பணிவிடை செய்தனர். வேதத்திற் சிறந்தது வேறு இல்லை, கங்கையிற் சிறந்த நதியுமில்லை, அசுவமேதத்தைவிடச் சிறந்த யாகமில்லை, ஓர் ஆண் குழந்தை பிறப்பதைவிட மகிழ்ச்சி தருவது வேறொன்றுமில்லை, சூரியனைவிடச் சிறந்த தெய்வமு

மில்லை. சூரியன் முன்னர் உள்ள மக்கள் தொகுதியில், போஜகர்களைவிடச் சிறந்தவர் யாருமில்லை, போஜகர்கள் செய்யும் காரியங்கள் எல்லாம் சூரியன் செய்ததாகக் கருதப்படும். இம்முறையில் வளர்ச்சி அடைந்த அவர்கள் சாதாரண பிராமணர்களைவிட உயர்ந்தவர்களாகக் கருதப் பட்டனர். ஒருவன் முக்தி அடைய வேண்டுமானால், போஜகனாகப் பிறந்துதான் அந்தப் பதத்தை அடைய முடியும்.

**போஜகர் தோன்றிய கதை:** முன்னொரு காலத்தில் சகதுவீபத்தில் சுவயம்புமனுவின் மகனாகிய பிரியவ்ரதா என்பவன் சூரியனுக்கு மிகச் சிறந்த கோயில் ஒன்றைக் கட்டினான். கோயிலினுள் தங்கத்தால் செய்யப்பட்ட சூரியனுக் குரிய விக்கிரகம் ஒன்றனை அமைத்துவிட்டான். ஆனால் எவ்வளவு முயன்றும், சூரிய பூஜையை சாஸ்திரங்களில் சொல்லியபடி செய்யக்கூடிய ஒரு பூசாரியையும் அவன் காண முடியவில்லை. மனம் வருந்திய பிரியவ்ரதா சூரியனை நோக்கித் தவம் இருந்தான். சூரியன் நேரே வந்து, என்ன வரம் வேண்டும் என்று கேட்க, தான் அமைத்த கோயிலில் நித்திய பூசைகளைச் செய்வதற்குத் தக்க ஆள் கிடைக்கவில்லை. எனவே அதற்குரிய பூசாரிகள் கிடைக்குமாறு செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். மகிழ்ந்த சூரியன், தன் நெற்றி யிலிருந்து இருவரையும், கைகளிலிருந்து இருவரையும், கால்களிலிருந்து இருவரையும், ஒளியிலிருந்து இருவரையும் ஆக எட்டுப் பேரை சேர்த்துக் கொடுத்தான். இந்தப் பரம்பரை யினரே போஜகர்கள் எனப்பட்டனர்.

**கோயில்களும், விக்கிரகங்களும்:** பவிஷ்ய புராணத்தின் படி, கோயில் கட்டுவதென்பது, ஒரு யாகம் செய்வதால் கிடைக்கும் புண்ணியத்தையும், பொதுமக்களுக்கு என குளம் முதலியன வெட்டுவதால் கிடைக்கும் புண்ணியத்தையும் சேர்த்துக் கொடுப்பதாகும். தெய்வங்கள் ஏரிகள், குளங்கள்,

நந்தவனங்கள், செடி கொடிகள் ஆகிய சுற்றுச்சூழல் அமைந்த இடத்தில்தான் விருப்பத்தோடு தங்குவார்கள். அன்னப்பறவை களின் இனிய ஓசை தெய்வங்களுக்கு விருப்பமானது. கோயில்கள் கண்ணுக்கு அழகும், மனத்துக்கு ரம்மியமும் தரக் கூடியனவாகக் கட்டப்பெற வேண்டும்.

எல்லாவகையான பூமியும் கோயில் கட்டுவதற்கு ஏற்றதன்று. எலும்புகள், முடி, சுண்ணாம்பு, நிலக்கரி, உமி முதலியவை புதைந்துள்ள பூமி ஏற்றதன்று. எல்லாவிதமான தானியங்களும், முளைக்கக்கூடியதான வளமான பூமி, கோயில்கட்ட ஏற்றதாகும். தரையைத் தட்டினால் தம்பட்டம் அடிப்பது போன்ற சப்தத்தை அப்பூமி உண்டாக்கினால் அது கோயில் கட்டச் சிறந்த இடம். பிராமணன் கோயில் கட்டினால் வெள்ளை மண்ணிலும், சத்ரியன் கட்டினால் சிவப்பு மண்ணிலும், வைசியன் மஞ்சள் மண்ணிலும், சூத்திரன் கறுப்பு மண்ணிலும் கோயிலைக் கட்ட வேண்டும்.

கோயில் கட்டுவதற்குரிய பூமியைத் தேர்ந்தெடுப்பதற்கு பவிஷ்ய புராணம் ஒரு வழியைச் சொல்கிறது. கோயில்கட்டத் தேர்ந்தெடுக்கும் பூமியில் ஒரு குழியினை வெட்ட வேண்டும். பிறகு அக்குழியினை, அதிலிருந்து எடுத்த மண்ணாலேயே நிரப்ப வேண்டும். குழி நிரம்பிய பிறகு கொஞ்சம் மண் மிஞ்சினால் அது சிறந்த இடமாகும். குழியில் மண் போட்டு, குழி நிரம்பிவிட்டால் அது மத்யமான இடமாகும். வெளியில் எடுக்கப்பட்ட மண் குழியினை நிரப்பவில்லை எனில், அது கோயில் கட்டுதற்கு ஏற்ற இடமன்று. சூரியனுக்குக் கட்டப்படும் கோயில், மிகச் சிரத்தையுடன் நிர்மாணிக்கப்பட வேண்டும். கோயிலின் வாயில் கிழக்கு அல்லது மேற்கு நோக்கி இருக்க வேண்டும். கோயிலின் தெற்குப் புறத்தில் குளமும், வடக்குப் புறத்தில் அக்னியை வணங்க சூரியன் கோயிலுக்குத் தனி இடமும் ஒதுக்கப்பட வேண்டும். சிவன், பிரம்மா, விஷ்ணு

ஆகியோருக்குக் கட்டப்படும் கோயில் முறையே வடக்கு, கிழக்கு, மேற்குத் திசைகளில் அமைந்திருக்க வேண்டும். சிறு தெய்வங் களுக்குக் கட்டப்படும் கோயில் இவற்றைச் சுற்றிக் கட்டப் படலாம். ஒவ்வொரு கோயிலிலும், புராணப் பிரசங்கம் செய்பவருக்கு என்று தனி இடம் ஒதுக்கப்பட வேண்டும். கோயிலுக்குரிய நைவேத்தியம், கோயிலுக்கு வலப்புறம் உள்ள மண்டபத்திலும், மாலை நேர நைவேத்தியம் கோயிலுக்கு இடப்புறம் உள்ள மண்டபத்திலும் செய்யப்பெற வேண்டும்.

தேவதச்சனான விஸ்வகர்மாவின் கூற்றுப்படி ஒரு கோயிலை 300 வகைகளில் கட்டலாம். அவற்றுள் சில: மேரு அமைப்பு என்பது பல அடுக்குகளையும், பல கோபுரங் களையும் கொண்டது. மந்தர அமைப்பு என்பது பல அடுக்குகளும், ஒரு கோபுரமும் உடையது. கைலாச அமைப்பு இல்லாதது. சமுத்ரா விருந்தா, விருக்ஷா, மிருகசிம்ஹா என்பது வட்டவடிவமானதும், ஒரு அடுக்கும் உடையது. கோபுரம் இல்லாதது. பத்மா என்பது தாமரை வடிவில், ஒரே அடுக்கு உடையது. கருடன் என்பது, இதிகாசத்தில் கூறப்பட்ட கருடன் என்ற பறவை வடிவுடையது. நந்தி என்பது, எருது வடிவில் அமைப்பது. கஜப்பிருஷ்டா என்பது யானையின் பின்பகுதி போன்றது (தூங்கானை மடம்); குஹரஜா என்பது குகை வடிவில் அமைப்பது; ஹம்சா என்பது பறக்கும் அன்னப் பறவை போன்று அமைப்பது; கும்பகட்ட என்பது குட அமைப்பில் கட்டுவது; சர்வடோபாத்ர என்பது ஐந்து அடுக்குகளும், பல கோபுரங்களும், சதுரமான பீடமும் கொண்டது; சதுரஸ்ர வஃரிக் ஷத் சதுஷ்கோணா என்பது ஒரே ஒரு கோபுரமும், சதுரமான பீடமும் கொண்டது; அஷ்டக்ஷரா என்பது ஒரே ஒரு அடுக்கும் எட்டு கோணங்களும் கொண்டு அமைப்பது. ஷோடஷாக்ஷரா என்பது ஒரே ஒரு அடுக்கும், பதினாறு கோணங்களும் கொண்டு அமைப்பது.

விக்கிரகங்கள், பின்வரும் உலோகங்களால் செய்யப் பெறலாம். தங்கம், வெள்ளி, தாமிரம், மண், கல், மரம், எட்டு உலோகங்கள் ஆகியவை. தெய்வப்படிமங்கள் செய்தற்குரிய மரங்கள்: தேவதாரு, சந்தனம், வில்வம், மா, வேம்பு, பலா, சிவப்பு சந்தனமரம் ஆகியவை.

சூரிய விக்கிரகம் கீழ்க்கண்டவாறு செய்யப்பெற வேண்டும். விக்ரகம் 84 அங்குல உயரமும், முகம் 12 அங்குல நீளமும் இருக்க வேண்டும். முகத்தில் மூன்றில் ஒரு பங்கு தாடை அமைக்க வேண்டும். மீதமுள்ள மூன்றில் இரண்டு பங்கில் மூக்கும், நெற்றியும் அமைக்கப்படவேண்டும். கண்கள் இரண்டு அங்குல நீளமும், ஒரு அங்குல விழித்திரையும் உடையதாக இருக்க வேண்டும். விழித்திரையில் மூன்றில் ஒரு பங்கு அளவு கருவிழி அமைக்கப்பெறவேண்டும். கைகள், கால்கள், முன்னங்கைகள், தொடைகள் சம அளவாக இருக்க வேண்டும். பாதம் ஆறு அங்குல நீளமும், நான்கு அங்குல அகலமும் கொண்டிருக்க வேண்டும். மார்பு, தொடை, கண்புருவம், நெற்றி, மூக்கு, கன்னம் ஆகியவை சற்றுத் துருத்திக் கொண்டிருக்க வேண்டும். கண்கள் பெரியவையாகவும், உதடுகள் சிவப்பாகவும், முகம் தாமரை மலர் போன்றும் இருக்க வேண்டும். விக்கிரகத்தில், ஆபரணங்கள், காதணிகள், பூணூல், மாலைகள், கிரீடம் ஆகியவை அணியப் பெற வேண்டும். கைகளில் தாமரை மலரும், பொன்னால் ஆன மணிமாலையும் இருக்க வேண்டும்.

**பிராமணனும், பூதமும்:** முன்னொரு காலத்தில் விதிவர நகரத்தில், வேத்ரவதி நதிக்கரையில் ஒரு பூதம் படுத்திருந்தது. அங்கு வந்த பிராமணன் அப்பேயைப் பார்த்தான். கடுமையான வெயிலின் காரணமாக அப்பேயின் உடலில் கட்டிகள் நிறைய இருந்தன. அப்பேய் தாகம் மிகுதியால் நீர் வேண்டும் என்று அழுதுகொண்டிருந்தது. இதனைக் கண்ட பிராமணன் மனம்

வருந்தி, "நீ ஏன் இவ்வாறு சித்திரவதைப்படுகிறாய்?" என்று கேட்டான். உடனே அப்பேய் தன் கதையைக் கூற ஆரம்பித்தது. என்னுடைய முன் ஜென்மத்தில் க்ஷீலபத்ரா என்ற பெயருடைய வைசியனாகப் பிறந்தேன். விதிஷா என்ற நகரில் வாழ்ந்து வந்தேன். மிகுந்த பொருள் வசதி கொண்ட நான், அவற்றி னிடத்துப் பெரிதும் பற்று வைத்திருந்ததால், அவற்றை இழக்க மனம் வராமல் யாருக்கும் எந்த தான தர்மமும் செய்யாமல் இறந்தேன். என்னுடைய குடும்பத்தினரை மட்டும் நன்றாகப் பார்த்துக் கொண்டேன். என்னுடைய உறவினர்களையோ, நண்பர்களையோ நான் சிறிதும் மதிக்கவில்லை. இறைவனை வழிபடுவதையே மறந்து, எக்காலமும் என் செல்வத்தினைக் காப்பதிலேயே என் பொழுதினைக் கழித்தேன். அதனால் என்னுடைய மரணத்திற்குப் பிறகு நான் தண்டனை அனுபவிக் கிறேன். இந்தக் கடும் வெயிலில், இந்த மண் வெளியில் என் உடம்பை வருத்திக்கொள்ள வேண்டியுள்ளது. என்னால் இக் கொடுமையைத் தாங்க முடியவில்லை. தயவு செய்து எனக்கு உதவி செய்வாயாக" என்று கேட்டது. உடனே பிராமணனும், "பத்து வருடங்களாகச் சுக்ர துவாதசி விரதம் இருந்து, நான் புண்ணியம் சேர்த்துள்ளேன். அதில் செலவழிந்தது போக, மீதமுள்ளதை உனக்கு உரிமை மாற்றிக் கொடுக்கிறேன். அதைக் கொண்டு நீ விடுதலை பெறுவாய்" என்று கூறி அவ்வாறே செய்திட, பூதமும் விடுதலை பெற்று சுவர்க்கத்தை அடைந்தது.

பவிஷ்ய புராணம் மேலும் சில விரதங்கள் பற்றிப் பேசுகிறது. புண்ணிய நதிகளாகிய கயை, புஷ்கரா, வாரணாசி, பிரயாகை ஆகியவற்றில் சென்று நீராடுவதில் ஏற்படும் புண்ணியத்தைக் காட்டிலும், உபய-துவாதசி விரதம் இருப்பதால் மிகுந்த புண்ணியம் கிடைக்கிறது.

திலகவிரதம் இருந்து, நெற்றியில் திலகமிட்டுக் கொண்டால் பகைவர்களும், தீய ஆவிகளும் ஒருவரை அணுகா. ஜதீஸ்மரா

விரதம் என்பது ஒருவர் சந்திரன் உதயமாகும் வரை மௌனமாக இருப்பது. அவ்வாறு பேசாமல் இருக்கும் பொழுது எல்லா தெய்வங்களையும் ஒரே சமயத்தில் வணங்க வேண்டும். இவ்விரதத்தை மேற்கொள்பவருக்கு முன் ஜென்மத்து நினைவுகள் தோன்றப் பெறும்.

ஒருவர் புண்ணியம் பெறுவதற்காக, விரதங்களை அனுஷ்டிக்க வேண்டும் என்பதன்று. ஒரு விரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகள், விதிகள் ஆகிய வற்றைப் படிப்பதனாலும் புண்ணியம் கிடைக்கும். உதாரணமாக, ரசகல்யாணி விரதம் எடுப்போர், பார்வதி தேவியின் விக்கிரகத்திற்கு நெய் அபிஷேகம் செய்து வணங்க வேண்டும். இவ்விரதத்தை அனுஷ்டிக்கும் முறையினைப் படிப்பவர்கள், அன்றி இவ்விரதம் மேற்கொள்ளும்படி மற்றவர்களைத் தூண்டுபவர்கள், பார்வதியின் இருப்பிடம் அடைகின்றனர். அவர்களுடைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்பெறும். அர்த்தநாரி விரதம், சிவன்—பார்வதியை வணங்குவதாகும். இவ்விரதம் பற்றிய விதிகளைப் படிப்ப வர்கள், அல்லது மற்றவர்களை இவ்விரதம் மேற்கொள்ளுமாறு தூண்டுபவர்கள் இந்திரனின் இருப்பிடத்தை அடைவர்.

இவை அனைத்தும் விரதங்கள் மேற்கொள்ளுவதால் ஏற்படும் நன்மைகள். அசலன மனத்துடன் இறைவனை வழிபடுவது, விரதத்தினை முழுமையாக முடிக்காமல் அரை குறையாக நிறுத்துவது ஆகியவை தேவர்களின் கோபத்தை அதிகரிக்கும். அவ்வாறான தவற்றினைச் செய்தவர்கள், அகண்டதுவாதசி விரதம் இருந்து விஷ்ணுவின் மந்திரம் கூறி அவரது அருளைப் பெறவேண்டும். பெரும்பான்மையான விரதங்கள் பெண்களுக்கென்றே ஏற்பட்டிருக்கின்றன. உதாரணமாக, ஓர் அசுவமேதயாகம் செய்து கிடைக்கும் புண்ணியத்திற்கு நிகராக, ஆனந்த திரிதியை விரதம் இருந்து,

பெண்களும் புண்ணியத்தை அடையலாம். இவ்விரதம் இருக்கும் பெண்கள், திருமணமானவர்கள் சிவப்பு ஆடையும், விதவைகள் மஞ்சள் ஆடையும், கன்னிப் பெண்கள் வெண்மையான உடையும் உடுத்த வேண்டும்.

ஆரண்ய துவாதசி விரதம் இருக்கும் பெண்கள் விஷ்ணுவைத் துதிப்பதாலும், ஏழைகளுக்கு தானம் செய்வதாலும், மோட்சம் அடைகின்றனர்.

இவற்றை அடுத்து, பவிஷ்ய புராணம் சூரிய தேவனுக்கு உரிய விரதங்கள் பற்றிப் பேசுகின்றது. அவற்றுள் சிலவற்றைக் கீழே குறிப்பிட்டுள்ளோம்:

1. **அபயபக்ஷசப்தமி விரதம் :** சுக்ல பட்சத்தில், ஏழாவது நாள் இவ்வழிபாடு நடைபெறும். சூரிய தேவனைத் துதிப்பதால் தர்மம், செல்வம், மோட்சம் ஆகியவை கிடைக்கும். 2. **அபய சப்தமி விரதம் :** சுக்கில பட்சம் பதினைந்தாவது நாள், ஆவணி மாதத்தில் இவ்விரதம் அனுஷ்டித்தால், இறந்த பின்பு சூரியனுடைய இருப்பிடம் செல்லலாம். 3. **பாத்ர விரதம் :** சூரிய தேவனின் விக்கிரகத்தை நன்கு தூய்மை செய்து, பால் முதலியவற்றால் அபிஷேகம் செய்து, வணங்கிவர வேண்டும். இவ்விரதம் இருப்போர் பகற் பொழுதில் தூங்குவதோ, துன்மார்க்கர்களிடம் பேசுவதோ கூடாது. இவ்விரதத்தின் பலன் சூரியனுடைய இருப்பிடம் அடையலாம். 4. **சப்தமி விரதம் :** ஒவ்வொரு மாதமும் ஏழாவது நாள் சூரியனை வணங்கிவந்தால், ஒருவருடைய கடன்பிடி தீரும். சூரியனை வழிபட, அனுஷ்டிக்கும் விரதங்களைப் பற்றிப் பேசிய பவிஷ்ய புராணம், இனி மற்ற தெய்வங்களுக்காகக் கடைப்பிடிக்க வேண்டிய விரதங்கள் பற்றியும் பேசுகிறது.

1. **ஆனந்த சதுர்த்தசி விரதம் :** சுக்கிலபட்சம் பதினான்காம் நாள், விஷ்ணுவின் விக்கிரகத்தைத் தூய்மைப்

படுத்தி வணங்கினால் குழந்தைப் பேறு கிடைக்கும். சிவனுடைய விக்கிரகத்தைத் தூய்மைப்படுத்தி, மந்திரம் கூறினால் நினைத்த காரியம் நிறைவேறும். **2. அசோக விரதம் :** அசோக மரத்தினை வணங்கி வந்தால் வாழ்க்கையின் சோகங்கள் விலகிவிடும். **3. கோஷ்பாத திரிதிய விரதம் :** சுக்கிலபட்சம் மூன்றாம் நாள் பத்ரபத நட்சத்திரம் விண்ணில் இருக்கும் நாள் அனுஷ்டிக்கப்படும். எண்ணெய், உப்பு, சமைத்த உணவு ஆகியவற்றை ஒதுக்க வேண்டும். கோலோகா என்ற உலகை அடைய, இவ்விரதம் துணைபுரியும். **4. கோவத்ஸ துவாதசி விரதம் :** கார்த்திகை மாதம், கிருஷ்ணபட்சம் பன்னிரண்டாம் நாள் பசுவுடன், அதன் கன்றையும் சேர்த்து வணங்குவர். இவ்விரதம் இருப்பவர், தரையில் படுத்துறங்க வேண்டும். கோலோகா என்ற உலகை அடைய இவ்விரதம் கடைப்பிடிக்க வேண்டும். **5. உய்கதுவாதசி விரதம் :** மார்கழி மாதத்தில், பன்னிரண்டாம் நாள் விஷ்ணுவை வழிபட்டால் காது கேளாமை, வாய் பேசாமை, தொழுநோய் ஆகியவற்றி னின்று விடுபடலாம். **6. சரஸ்வதி விரதம் :** பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை சரஸ்வதியைத் தொழுது, தொடர்ந்து பதின்மூன்று மாதங்கள் விரதம் இருந்தால், கல்வி கேள்விகளில் தலைசிறந்தவனாக விளங்கலாம். **7. அசுன்ய சயன விரதம் :** பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை— இவ்விரதம் இருந்து எல்லா தெய்வங்களுக்கும் இனிப்பு, பழம் முதலியன கொடுத்து வணங்கி வந்தால், கணவன் மனைவி என்றும் பிரியாது ஒற்றுமையாய் இருப்பர்.

மேலே கூறியவற்றோடு, மேலும் சில விரதங்கள் பற்றியும் இப்புராணம் பேசுகிறது. ஒருவருக்கு தானம் செய்வதினால் செல்வம் என்றுமே வீணாவதில்லை. நிலையில்லாதது செல்வம். ஒருவர் இறந்த பிறகு எவ்விதப் பயனுமற்றது. ஆதலால், உயிருடன் இருக்கும்பொழுதே அவற்றை

நன்முறையில் பயன்படுத்துதல் சாலச் சிறந்தது. தன்னுடைய செல்வத்தினின்று பிறருக்கு தானம் அளிப்பதே மிகச் சிறந்த முறையாகும். நீண்ட ஆயுளும், வலிமையான உடலும் பெற்று, மற்றவர்களுக்கு எவ்விதப் பிரயோஜனமும் இன்றி வாழ்வதில் எப்பயனும் இல்லை. ஒவ்வொரு யாகம் செய்யும் பொழுதும் தட்சிணை வைக்க வேண்டும்.

1. **கோதானம் :** பசுவும், கன்றும் தானம் செய்யப் பெற்றால், சுவர்க்கத்தில் நீண்ட நாட்கள் வாழலாம்.

2. **விருஷப தானம் :** எருதினை தானம் செய்தால் ஏழு ஜென்மத்தின் பாவம் தொலைந்து விடும்.

3. **பூமி தானம் :** சிறிதளவு பூமியை தானம் செய்தாலும், செய்த பாவங்கள் நீங்கும்.

4. **ஆபக தானம் :** ஓராயிரம் பாத்திரங்களை தானம் செய்தால், செல்வம், மகன் பிறப்பு ஆகியவை கிடைக்கும்.

5. **கிருஹ தானம் :** அலங்கரிக்கப்பட்ட வீட்டினை தானம் செய்தால், சிவபெருமானின் இருப்பிடம் செல்ல முடியும்.

6. **அன்னதானம் :** உணவினை தானம் செய்தால், விஷ்ணுவின் இருப்பிடத்தை அடையலாம்.

7. **பிரபதானம் :** வழிப் போக்கர்களுக்கும், பிரயாணம் செய்பவர்களுக்கும் தண்ணீர் வழங்குதல், சுவர்க்கம் செல்ல வழிவகுக்கும்.

மேலே கூறியவற்றுடன் இன்னும் பல வழிகளில் தானம் செய்வதைப் பற்றியும் இப்புராணம் பேசுகிறது.

**கல்வி:** ஒரு கிணற்றினைத் தோண்டி நீர் எடுப்பது போல, ஒரு மாணவன் தன் குருவிற்குக் கடமையினைச் செய்து

ஞானம் பெறுகிறான். தன்னுடைய கல்வி முடிந்தவுடன் தன்னுடைய குருவிற்கு, நிலம், குடை, துணிகள், தானியங்கள், காய்கறிகள் இவற்றை தட்சிணையாகக் கொடுக்கலாம். தட்சிணை செலுத்தினால் அன்றி, அவன் கற்ற கல்வி முடிவு பெற்றதாக ஆகாது.

காயத்ரி மந்திரம் பற்றிய உண்மையான பொருளை உணர்ந்தவரும், அம்மந்திரத்திற்கான வழிமுறைகளைக் கடைப் பிடிப்பவருமே யாவரிலும் சிறந்த ஆசிரியனாகக் கருதப் படுவார். ஆசிரியர் நிலையில், ஐந்து விதமான வளர்ச்சிப் படிகள் உண்டு. அவையாவன :

1. **ஆச்சாரியர் :** வேதங்களின் கல்ப ரகஸ்யங்களை உபதேசிப்பவர்.

2. **உபாத்தியாயர் :** வேதங்களைக் கற்று அதனை வாழ்க்கைத் தொழிலாகக் கொள்பவருக்குப் படிப்பறிவித்தல்.

3. **குரு :** இவருடன் மாணவர்கள் தங்கிக் கல்வி கற்று, குருவின் இல்லத்தினருடன் சேர்த்துக் கொள்ளப்படுவர். சடங்கு முறைகள் அனைத்தையும் குரு போதிப்பார். இவர்களுக்கு உணவு, உறைவிடம் அனைத்தையும் குருவே வழங்குவார்.

4. **ரித்விஜா :** யாகங்கள் செய்வதையே தொழிலாகக் கொண்டவர்.

5. **மகா குரு :** எல்லா ஆசிரியர்களிலும் தலைசிறந்து நிற்பவர். அனைவராலும் வணங்கப்படுபவர். இராமாயணம், பாரதம், பதினெண்புராணம் அனைத்தையும் கற்றுத் தேர்ந்தவராயினும், இறைவனின் நாமத்தையே விடாது ஜெபிப்பவர்.

**ஊதியம் :** ஒவ்வொருவருக்கும் அவர் செய்யும் வேலையின் முக்கியத்துவத்தைப் பொறுத்து ஊதியம் கணக்கிட்டுக் கொடுக்கப்படுகிறது.

மிகக் குறைந்த அளவு ஊதியம் வரதா எனப்படும். இருபது வரதாக்கள் ஒரு ககினி எனப்படும். நான்கு ககினிக்கள் ஒரு பாணா எனப்படும்.

பவிஷ்ய புராணம், வேலையின் தரத்திற்கேற்ப, ஒரு வேலையின் தினக் கூலியைக் கீழே கண்டவாறு கொடுத்துள்ளது. அவற்றுள் சிலவற்றைத் தந்துள்ளோம். கிணறு வெட்ட-2 பாணா; செங்கல் அடுக்க-2 பாணா; பருத்தி ஆடைகள் நெய்ய-3 பாணா; கம்பளி ஆடைகள் நெய்ய-10 ககினிகள்; முடிவெட்ட-10 ககினிகள்; நெல்விதைக்க-1 பாணா; வாகனம் இழுக்க-1 பாணா; பாலம் கட்ட-2 பாணா; சலவைக் கற்கள் பதிக்க-1 பாணா.

**பெண்களும், திருமணமும்:** பெண்களுக்கு விரைவில் திருமணம் செய்து விடவேண்டும் என்று பவிஷ்ய புராணம் கூறுகிறது. ஏழு வயதுடைய பெண்ணை கௌரி என்றும், பத்து வயதுடைய பெண் நக்னிகா என்றும், பன்னிரண்டு வயதுடைய பெண் கன்யகா என்றும், அதற்கு மேல் வயதுடையவர்களை ரஜஸ்வலா என்றும் குறிப்பிடுகிறது இப்புராணம்.

திருமணத்தில் எட்டு வகைகள் உள்ளன. அவை யாவன :

1. **பிரம்மம் :** இம்முறைத் திருமணத்தில் பெண்ணுக்கு விலை உயர்ந்த ஆடைகள் அணிவித்து நல்ல ஆபரணங்கள் பூட்டி, கல்வி அறிவில் சிறந்து விளங்கும் மணமகனுக்குத் திருமணம் செய்து வைப்பர்.

**2. தெய்வ மணம் :** ஆபரணங்கள் அணிந்த பெண், நல்லொழுக்கம் நிறைந்த மணமகனுக்கு சாத்திர சடங்குகள் நிறைவேற்றப்பட்டு, புரோகிதர்கள் யாகம் வளர்க்க, மணம் செய்து கொடுக்கப்படுவாள்.

**3. அர்ஷ மணம் :** இதன்படி, சடங்குகள் அனைத்தும் நடைபெற்றபின், பெண்ணின் தந்தை, மணமகனிடம் தன் மகளை ஒப்படைப்பார். பசு அல்லது எருதினை மணமகனுக்கு தானமாக அளிப்பார்.

**4. பிரஜாபத்ய மணம் :** இத்திருமணத்தில், தந்தை தன் மகளை மணமகனிடம் திருமணம் செய்து கொடுக்கும் பொழுது, மதச்சடங்குகள் செய்யும்பொழுது அவர்கள் இணை பிரியாது செய்ய வேண்டும் என்று அறிவுரை கூறி, மகளை மணமகனுடன் அனுப்பி ஸ்வைப்பர்.

**5. அசுர மணம் :** மணமகனிடம் இருந்து பணத்தைப் பெற்றுக் கொண்ட பின்னரே மணமகளின் தந்தையும், உறவினரும் அவருக்குத் திருமணம் செய்து வைப்பர்.

**6. கந்தர்வ மணம் :** ஓர் ஆணும், பெண்ணும் ஒருவரை ஒருவர் விரும்பி, மணம் புரிந்து கொள்ளுதல்.

**7. ராக்ஷச மணம் :** ஒரு பெண்ணைக் கவர்ந்து சென்று திருமணம் புரிந்து கொள்ளுதல்.

**8. பிசாசு மணம் :** பெண்ணின் சம்மதமில்லாமல், அவளைக் கட்டாயப்படுத்திக் கவர்ந்து சென்று மணந்து கொள்ளுதல்.

திருமணத்திற்குப் பின்னர், ஒரு பெண் தன் கணவனின் குடும்பத்திற்கு ஏற்றவாறு தன்னை மாற்றிக் கொள்ள வேண்டும். தன் கணவனை தெய்வமாக நினைக்க வேண்டும். பவிஷ்ய புராணக் கூற்றுப்படி மனைவி, கணவனின் உடம்பின்

பாதியாகக் கருதப்படுகிறாள். எந்தக் குடும்பத்தில், மனைவிக்கு மதிப்பு இல்லையோ அக்குடும்பம் வீணாகிப் போகின்றது.

ஒரு மனைவியின் கடமைகள் என்ன என்று பவிஷ்ய புராணம் கூறுகிறது. மனைவி ஆனவள், அதிகாலையில் எழுந்து, பணியாளர்களை எழுப்பி அன்றைக்கு அவர்கள் செய்ய வேண்டிய வேலையினைத் தெளிவுபடக் கூறவேண்டும். தன் கணவனுக்குத் தேவையான உணவு வகைகளைத் தயாராக வைத்துக்கொண்டு, அவன் வரவை எதிர்நோக்கி இருக்க வேண்டும். சமையலறையில், பாத்திரம் கழுவுதல், தயிர் கடைதல், தரை கழுவுதல், ருசியுள்ள உணவுகளைத் தயாரித்தல் ஆகிய வேலைகளைச் செய்ய வேண்டும். பெண்கள் சில காரியங்களைச் செய்யக் கூடாது என்று பவிஷ்ய புராணம் வலியுறுத்துகிறது. அவள் தனியாக அமர்ந்திருக்கக் கூடாது; அந்நியர்கள் அமர்ந்திருக்கும் பொழுது வாய்விட்டுச் சிரித்தல் கூடாது; வாயிற்புறத்தில் நிற்கக்கூடாது; சத்தம் போட்டுப் பேசக் கூடாது; கணவன் இல்லாதபொழுது தன்னை அலங்கரித்துக் கொள்ளுதல் தவறாகும். தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் மட்டுமே தனியே வெளியே செல்லலாம், ஆயினும் விரைவில் வீடு திரும்பிவிட வேண்டும்.

ஒரு பெண் கருவுற்றிருக்கும் பொழுது, வாசனை திரவியம் கலந்த நீரில் குளிக்க வேண்டும். பெரிய குரலெழுப்பி சிரிக்கக் கூடாது; நற்பண்புகள் உடையவர்களிடையே பொழுதைக் கழிக்க வேண்டும். காட்டுப்பகுதியில் தனியே செல்லக் கூடாது; ஆற்றில் தனியாகச் சென்று கடக்கக் கூடாது. பவிஷ்ய புராணம், கணவன், மனைவியரிடையே கருத்து வேற்றுமை ஏற்படின், அவர்கள் விவாகரத்து செய்து கொள்ளலாம் என்று கூறுகிறது. மனைவி குழந்தை பெறும் பாக்கியம் அற்றவளாக இருப்பின், கணவன் எட்டு ஆண்டுகள் பொறுத்து, விவாகரத்து செய்யலாம் என்று கூறுகிறது. மனவேற்றுமை காரணமாக

விவாகரத்து ஏற்பட்டால், அப்பெண்ணின் சீதனப் பொருட்கள், நகைகள் மற்றும் அவளுடைய பொருட்களைத் திருப்பி அவளிடமே தந்துவிட வேண்டும். தவிர கணவனிடம் இருந்து ஒவ்வொரு மாதமும் பணம் பெறும் உரிமையும் பெறுகிறாள்.

ஒருவனுக்கு இரண்டாவதாக ஒரு மனைவி இருப்பா ளெனில், அவன் மூத்த மனைவியைத் தன் தாயைப்போலப் பேண வேண்டும். தன்னுடைய இல்லத்தினின்று கொண்டு வந்தது எதுவாயினும், அதனை மூத்த மனைவிக்கே முதலில் கொடுக்க வேண்டும். இவர்கள் இருவரிடமும் பொறாமை ஏற்படும்படிக் கணவன் நடந்து கொள்ளக் கூடாது.

பவிஷ்ய புராணம், மேலும் சில சுவாரஸ்யமான நிகழ்ச்சி களைக் கூறுகிறது. வெவ்வேறு மலர்களை வெவ்வேறு தெய்வத்திற்கு அர்ப்பணிக்கும் பொழுது ஏற்படும் பலன்கள் ஆகியவற்றைக் கூறுகிறது.

இதை அடுத்து, இப்புராணம் எதிர்காலம் பற்றிப் பேசுகிறது. இப்புராணத்தின் மூன்றாவது பிரிவு பிரத்திசமுகம். வரலாற்றுச் சிறப்புகளைக் கூறுகிறது. மனு அரியணை ஏறியது முதல் முடிவில் பிரிட்டிஷார் இந்தியாவில் இருந்தது பற்றியும், ராணி விக்டோரியா அரசாண்டது பற்றியும் பேசுகிறது.

சூரியவம்சம், சந்திரவம்சத்தில் வந்தவர்கள் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வெகு காலத்திற்குப் பின்பு வந்த ராஜபுதன அரசர்கள் பற்றியும் குறிப்புகள் உள்ளன. பாபர், ஹுமாயூன், அக்பர், சலீம், ஔரங்கசீப், சிவாஜி ஆகியோர் பற்றியும் குறிப்புகள் உள்ளன. ஆங்கில வார்த்தைகளான ஜனவரி, பிப்ரவரி போன்ற சொற்களும் உள்ளன.

இவற்றைத் தொடர்ந்து கலியுகம் பற்றி இப்புராணம் பேசுகிறது. நான்கு யுகங்கள், அவற்றின் கால அளவுகள்

*இவற்றைப் பற்றி மற்ற புராணங்களில் கொடுத்திருப்பதால் அங்கு குறிப்பிடப் பெறாத பகுதிகளை மட்டும் இங்கு தருகிறோம்.)* இனி பவிஷ்ய புராணம் கலி... பற்றிக் கூறுகிறது.

**1. பௌரவர்கள் :** பாண்டு புத்திரர்களில் மூன்றாவது இடத்தைப் பெறுபவன் அருச்சுனன். இவனுடைய பேரன் பரீட்சித்து மன்னன். இம்மன்னனின் பேரன் சடனிகா ஆவான். அவனுடைய மகனே வீரம் மிகுந்த அஸ்வமேத தத்தா ஆவான். இவனுடைய மகனே அதிசிம்ம கிருஷ்ணா. (இம்மன்னனுடைய காலத்திலேதான் இப்புராணத்தின் இப்பகுதி எழுதப்பட்டது.)

அதிசிம்ம கிருஷ்ணாவின் மகன் நிசக்ஷீ. அஸ்தினா புரத்தை கங்கை தன்னுள் அடக்கிக் கொள்ளும் பொழுது, நிசக்ஷீ அரசன் அரியணை துறந்து கௌசம்பி நகரத்திற்குச் சென்று விடுவான். அவனுக்கு எட்டு மகன்கள் இருப்பர். அவனுடைய முதல் மகன் உஷ்ணா. புரு வம்சத்தில் வந்த இருபத்தி ஐந்து பேர் அரசாள்வர். இந்தப் பௌரவ வம்சத்தில் வருவோர் தேவர்களாலும், முனிவர்களாலும் போற்றப் பெறுவர். இவ்வம்சத்தினின்று பிராமணர்களும், சத்ரியர்களும் தோன்றி, அருச்சுனன் வழிவம்சம் கலியுகத்தில் முடிவு பெறும்.

**2. இக்ஷ்வாகு :** அடுத்து குறிக்கப் பெறுவது இக்ஷ்வாகு பரம்பரையினர். இப்பரம்பரையில் வந்த பிரத்தியோமாவின் மகன் திவாகரன், மத்தியதேசத்தில் அயோத்தியை ஆண்டு வருகிறான். (திவாகர மன்னன் காலத்தில்தான், பவிஷ்ய புராணத்தின் இப்பகுதி எழுதப்பட்டது). திவாகரன் பரம்பரையில் வந்தவனே சகாதேவன். இப்பரம்பரையில் இறுதியாக வருபவன் சுமித்ரா என்ற அரசன். இக்ஷ்வாகு பரம்பரையினர் மிக்க தைரியமுள்ளவர்களாகவும், சிறந்த போர் வீரர்களாகவும் இருப்பர்.

3. **பிருகதரதாஸ் :** இப்பரம்பரையில் வந்தவன் ஜராசந்தன், கத பேரரசன். இவன் வழியில் வந்த சேனஜித் மன்னன் காலத்தில் இப்பகுதி எழுதப்பட்டது. இவனுக்குப் பின் பதினாறு அரசர்கள் ஆட்சி செய்வார்கள். 723 ஆண்டுகள் இவர்கள் ஆட்சி நடக்கும். அதன் பிறகு 32 பிருகதரதாஸ் 100 ஆண்டுகள் ஆட்சி புரிவர்.

4. **பிரத்யோதாஸ் :** பிருகதாஸ்க்குப் பிறகு புலிகா தன் தலைவனைக் கொன்று, தன் மகன் பிரத்யோதாஸை அரசனாக்குவான். இவனுக்குப் பின்வரும் அரசர்களும் சேர்த்து பிரத்யோதா மன்னர்கள் 138 வருடம் இப்பூமியை ஆள்வர்.

5. **சிஷ்னாகாஸ் :** சிஷ்னாகா, பிரத்யோதாஸை அழித்து தானே அரசனாவான். பிம்பிசாரா, அஜாத சத்ரு போன்றோர் ஆட்சி புரிவர். இவர்கள் பதின்மர், நூற்றி அறுபத்து மூன்று ஆண்டுகள் ஆட்சி செய்வர்.

6. **நந்தன் :** இவ்வரசன், தன்னுடைய சூத்திர மனைவியின் மகனை அரசனாக்குவான். அதன் பிறகு சத்ரியர்கள் அழிக்கப் பட்டு, சூத்திரர்களே அரசாள்வர். இறுதியில் கௌடில்யா என்ற பிராமணர் நந்தர்களை ஒழிப்பார். நந்தர்கள் 100 ஆண்டுகள் ஆண்டபின், மௌரியர்கள் ஆள்வர்.

7. **மௌரியர் :** கௌடில்யர் சந்திரகுப்தரை நியமித்து, மொத்தம் 9 மௌரியர்கள் 137 ஆண்டுகள் அரசாட்சி செய்வர்.

8. **சுங்கர் :** மௌரியரை அடுத்து இவர்கள் அரசாட்சிக்கு வருவர். பிருகதரதா அரசனைத் துரத்திவிட்டு, படைத்தலைவன் புஷ்யமித்ரா புதிய ஆட்சியை உருவாக்குவான். பத்து சுங்கர்கள் 112 ஆண்டுகள் ஆண்டபின் கன்வர்கள் பூமியை எடுத்துக் கொள்வர்.

*9. **கன்வர்கள் :** தேவ பூமி என்ற அரசனை வீழ்த்திவிட்டு கன்வ அரசை ஸ்தாபிப்பான். கன்வ பிராமணர்கள் 45 ஆண்டுகள் ஆட்சி புரிவர்.*

*10. **ஆந்திரர் :** கன்வர்களிடம் இருந்து பூமியைப் பெற்று 30 ஆந்திர அரசர்கள் 460 ஆண்டுகள் ஆண்டனர்.*

**சூரியனும் அதன் பன்னிரு வகைக் கூறுகளும்**

*சூரியதேவன் தன் பண்புகளை பன்னிரு ரூபங்களாகக் கொண்டுள்ளான். அவையாவன: 12 ஆதித்தியர்கள் என்று கூறப்பெறும். அவை இந்திரா, ததா, பர்ஜன்யா, புஷா, துவஷ்டா, ஆர்யமா, பகாவைவஸ்வனா, விஷ்ணு, அம்ஷீ, வருணா, மித்ரா ஆகியவை.*

*இந்திரனாக, தேவர்களின் தலைவனாகவும், அவர்களின் அரசனாகவும் இருக்கிறான். ததாவாக எல்லா உயிரினங் களையும் படைக்கின்றான். பர்ஜன்யனாக மேகங்களினிடையே வாழ்ந்து, மழையைத் தோற்றுவிக்கின்றான். புஷாவாக, எல்லா தானியங்களிலும் வாழ்ந்து, உயிர்களுக்கு சத்துள்ள உணவைப் படைக்கின்றான். துவஷ்டாவாக, மரங்கள், கொடிகளில் வாழ்கின்றான். ஆர்யமாவாக மேகத்திலிருந்து, உயிர்களுக்கு மூச்சுக் காற்றை வழங்குகின்றான். பகாவாக பூமியிலும், உயிரினங்களின் உடம்பிலும் வாழ்கின்றான். வைவஸ்வனா வாகத் தீயில் இருந்து, உணவினைச் சமைக்க அருள்கின்றான். விஷ்ணுவாக, தேவர்களின் பகைவர்களைக் கொல்லுகின்றான். அம்ஷீவாகக் காற்றில் இருந்து எல்லா உயிரினங்களுக்கும் மகிழ்ச்சியை அளிக்கின்றான். வருணனாக நீரில் இருந்து, உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதவனாகிறான். மித்ராவாக சந்திரபாக் நதிக்கரையில் தோற்றம் தருகிறான்.*

*சூரியதேவனின் பன்னிரு தோற்றங்களைப் பற்றியும் அறிந்து கொள்பவர்கள் சூரியதேவனுடன் வாழ்கின்ற*

வரம் பெறுவர். பன்னிரு மாதங்களில், ஒவ்வொரு மாதத்திலும் சூரியன் வெவ்வேறு பண்புகளுடன் தோன்றுகிறான். இவற்றோடு மட்டுமல்லாது, சூரியனுக்கு இன்னும் பன்னிரு பெயர்களும் உள்ளன. அவையாவன: ஆதித்யா, சவிதா, சூரிய, மிகிரா, அர்கா, பிரபாகரா, மார்த்தாண்டா, பாஸ்கரா, பானு, சித்திரபானு, திவாகரா, ரவி ஆகியவை ஆகும்.

ஆர்யமா ரூபத்தில் சூரியனுக்கு முந்நூறு கதிர்களும், வைவஸ்வன ரூபத்தில் ஆயிரத்து நானூறு கதிர்களும், அமுக்ஷி ரூபத்தில் ஆயிரத்து ஐந்நூறு கதிர்களும், பர்ஜன்ய, வருண, விஷ்ணு ரூபங்களில் ஒவ்வொன்றிற்கும் ஆயிரத்து நானூறு கதிர்களும், இந்திரனுக்கு ஆயிரத்து இருநூறு கதிர்களும், தத்தா ரூபத்தில் ஆயிரத்து நூறு கதிர்களும், மித்ரா ரூபத்தில் ஆயிரத்து ஐந்நூறு கதிர்களும், புஷா ரூபத்தில் ஆயிரம் கதிர்களும், பகா ரூபத்தில் ஆயிரத்து ஐந்நூறு கதிர்களும், துவஷ்டா ரூபத்தில் ஆயிரம் கதிர்களும் கொண்டுள்ளான்.

**சூரிய தேவனின் ரதம்**

சூரிய தேவனின் ரதம் தங்கத்தினால் செய்யப் பெற்றது. இதனை பிரம்மாவே வடிவமைத்தார். இந்த ரதத்தின் சாரதி அருணன் எனப்படுவான். இந்த ரதத்தை ஏழு பொன் குதிரைகள் இழுத்துச் செல்லுகின்றன. அவை காயத்ரி, திருஷ்டுபா, ஜகதி, அனுஷ்டுபா, பம்கிதி, விருஹதி, உஷ்னிகா ஆகியவை. இரண்டு ஆதித்தியர்கள், இரண்டு ரிஷிகள், இரண்டு கந்தர்வர்கள், இரண்டு அப்ஸரஸ்கள், இரண்டு பாம்புகள், இரண்டு ராட்சசர்கள் எப்பொழுதும் ரதத்தில் பயணம் செய்கின்றனர். அவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

சித்திரை, வைகாசி மாதங்களில், தத்தா, ஆர்யமா ஆதித்தியர்களும், புலஸ்தியா, புலஹா முனிவர்களும், தும்புரு, நாரத கந்தர்வர்களும், கிருத்தஸ்தலி, புஞ்ஜிகஸ்தலா அப்ஸரஸ்

களும், வாசுகி, கச்சா நாகங்களும், ஹேதி, பிரஹேதி ராட்சசர் களும் உடனிருப்பர்.

ஆனி, ஆடி மாதங்களில், ஆதித்தியர்கள்—மித்ரா, வருணா முனிவர்கள்—அத்ரி, வசிஷ்டா; கந்தர்வர்கள்—ஹஹா, ஹீஹீ; அப்ஸரஸ்கள்—மேனகா, சகஜன்யா; நாகர்கள்—தக்ஷகா, அனந்த; ராட்சசர்கள்—பௌருஷேயா, புதா உடனிருப்பர்.

ஆவணி, புரட்டாசி மாதங்களில், ஆதித்தியர்கள்—இந்திரன், வைவஸ்வனா; முனிவர்கள்—ஆங்கீரா, பிருகு; கந்தர்வர்கள்—விஷ்வவசு, உக்கிரசேனா; அப்ஸரஸ்கள்—பிரம்லோசந்தி, அனுமலோசந்தி; நாகர்கள்—இலாபத்ரா, சங்கபலா; ராட்சசர்கள்—சர்ப, வியாக்ரா ஆகியோர் உடனிருப்பர்.

ஐப்பசி, கார்த்திகை மாதங்களில், ஆதித்தியர்கள்—பர்ஜன்யா, புஷா; முனிவர்கள்—பரத்துவாஜ, கௌதமர்; கந்தர்வர்கள்—சித்திரசேனா, ருசிசி; அப்ஸரஸ்கள்—விஸ்வசி, கிருதாசி; நாகர்கள்—விஷ்ருதா, தனஞ்செய; ராட்சசர்கள்—அபா, வதா ஆகியோர் உடனிருப்பர்.

மார்கழி, தை மாதங்களில், ஆதித்தியர்கள்—அம்ஷா, பகா; முனிவர்கள்—காசிபன், கிரது; கந்தர்வர்கள்—சித்திராங்கதா, உர்நயு; அப்ஸரஸ்கள்—பூர்வசித்தி, ஊர்வசி; நாகர்கள்—தர்க்ஷயா, அரிஷ்டநேமி; ராட்சசர்கள்—அவுஸ்வுர்ஜா, வித்யுத் ஆகியோர் உடனிருப்பர்.

மாசி, பங்குனி மாதங்களில், ஆதித்தியர்கள்—துவஷ்டா, விஷ்ணு; முனிவர்கள்—ஜமதக்கினி, விஸ்வாமித்திரர்; கந்தர்வர்கள்—திருதராஷ்டிரா, வர்சா; அப்ஸரஸ்கள்—திலோத்தமா, ரம்பா; நாகர்கள்—கத்ரவேயா, மலாக்ஷவதரா; ராட்சசர்கள்—பிரம்ம பிரேதா, யக்ஷபிரேதா ஆகியோர் உடனிருப்பர்.

**சகதுவீபம்**

இந்த பூமி ஏழு துவீபங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன: ஜம்புதுவீபம்; பலக்ஷதுவீபம்; வில்மலதுவீபம்; குசத்துவீபம்; கிரெளஞ்சதுவீபம்; புஷ்கர துவீபம்; சகதுவீபம் ஆகியவை. பரதவர்ஷம் ஜம்பு துவீபத்தில் அமைந்து உள்ளது.

சகதுவீபத்தைச் சுற்றி தாதி சமுத்திரம் சூழ்ந்துள்ளது. இந்த துவீபத்தில் உள்ளவர்கள் நீண்டநாள் வாழ்க்கை உடையவர் களாகவும், புண்ணியம் செய்தவர்களாகவும் இருக்கின்றனர். பஞ்சம், நோய், முதுமை இவை அந்த அரசாட்சியை நெருங்க வில்லை. இங்கு நவரத்தினங்கள் நிரம்பப் பெற்ற ஏழு வெண்மையான மலைகள் உள்ளன. இங்குள்ள நதிகளில், ஆபரணங்கள் கிடைக்கப்பெறும்.

முதலாவது மலை மேரு எனப்படும். இங்குதான் முனிவர்களும், கந்தர்வர்களும் வாழ்கின்றனர். கிழக்குப் புறமாக சிறிது சாய்ந்தாற்போல் இருக்கும் மலை உதயா எனப்படும். இம்மலை உச்சி தங்கத்தினால் ஆனது. மூன்றாவது மலை மகாகிரி எனப்படும். இம்மலை ஆறுகளால் சூழப் பெற்றது. இந்த ஆறுகளில் இருந்து இந்திரன் நீர் எடுத்துச் சென்று மேகங்களாக மாற்றுவான். நான்காவது மலை ரைவடகா. இதிலிருந்து ரேவதி என்னும் நட்சத்திரத்தை எப்பொழுதும் பார்க்கலாம் என்பதினால் இம்மலை முகட்டிற்கு ரைவடகா என்ற பெயர் வந்தது. இம்மலை சகதுவீபத்தின் சொர்க்கம் எனப்படும். ஐந்தாவது மலை சியாமா எனப்படும். இது கருமை நிறம் கொண்டது. ஆறாவது மலை அந்தகிரி எனப்படும். இது வெள்ளியைப் போன்ற நிறமுடையது. ஏழாவது மலை அம்பிகேயா எனப்படும். இம்மலை எப்பொழுதும் பனியால் மூடப்பட்டு இருக்கும். நுழைவதற்கு மிகவும் கடினமானது.

சக என்ற பெயருடைய மரம் இங்கு வளர்கின்றது. இதனாலேயே இப்பகுதி சகதுவீபம் என்ற பெயர் பெற்றது. இந்த மரம் அனைவராலும் வணங்கப்பெறும். தேவர்களும், கந்தர்வர்களும் சகதுவீபத்தில் நிறைந்திருக் கின்றனர்.

இங்கு ஏழு புனித நதிகள் உள்ளன. இவை புனிதத் தன்மையில் கங்கைக்கு இணையாகப் பேசப்பட்டாலும், வெவ்வேறு பெயர் கொண்டவையாகும். முதல் நதி சிவஜலா அல்லது அனுதப்தா என்றும், இரண்டாவது நதி குமாரி அல்லது வாசவி என்றும், மூன்றாவது நதி நந்தா அல்லது பார்வதி என்றும், நான்காவது நதி சிவேதிகா அல்லது பார்வதி என்றும், ஐந்தாவது நதி இக்ஷீ அல்லது கிரது என்றும்; ஆறாவது நதி தேனுகா அல்லது மிருதா என்றும் வழங்கப் படுகிறது. ஏழாவது நதியின் பெயர் கொடுக்கப்படவில்லை. இவை அனைத்தும் கடலில் சென்று கலக்கின்றன. புனிதத் தன்மை வாய்ந்த இந்த நீரே அனைவரின் தாகத்தையும் தணிக்கின்றது.

சகதுவீபத்தில் நான்கு பிரிவுகள் உள்ளன. இங்கு வாழ்பவர்கள் தர்ம, ஞாயங்களுக்குக் கட்டுப்பட்டு நேர்மையாக வாழ்பவர்கள். பொறாமை, வெறுப்பு, துக்கம் எதுவுமின்றி வாழ்பவர்கள். முன்பே குறிப்பிட்டபடி, இங்குள்ள நான்கு பிரிவுகள் மகர்கள், மககர்கள், கனகர்கள், மந்தர்கள் எனப் படுவர். மகர்கள் பிராமணர்களாகவும், மககர்கள் க்ஷத்திரியர் களாகவும், கனகர்கள் வைசியர்களாகவும், மந்தகர்கள் சூத்திரர்களாகவும் கருதப்படுவர்.

இத்துவீபத்தில் வழிவழியாக வந்தோர் சூரிய தேவனை வணங்குபவர்கள். பல விரதங்கள் அனுஷ்டிக்கும் இவர்களுக்குச் சூரியதேவன் ஆசி என்றும் உண்டு. சகதுவீபா

வைச் சுற்றி சிரோதா எனப்படும் பாற்கடல் சூழப்பட்டு உள்ளது.

*(இறுதியாக பவிஷ்ய புராணம் மன்வந்திரங்கள் பற்றிக் கூறுகிறது. இதனை முன்னரே சில புராணங்களில் கூறி இருப்பதால், இங்கு தவிர்த்துள்ளோம்.)*

பொதுவாக எல்லாப் புராணங்களும் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய தெய்வங்களைப் பற்றியே பேசுகிறது. ஆனால் பவிஷ்ய புராணம் அவற்றினின்று மாறுபட்டு சூரியதேவனைப் பற்றியே பேசுகிறது.



# 10. பிரம்ம வைவர்த்த புராணம்

## இப்புராணம் பற்றி...

பிரம்ம வைவர்த்த புராணம் பதினெட்டுப் புராண வரிசையில் பத்தாவதாக இடம் பெற்றுள்ளது. இது தீவிரமான வைணவ புராணம் என்று சொல்லப்படுகிறது. இப்புராணம் நான்கு பிரிவுகளைக் கொண்டது. அவையாவன: 1. பிரம்ம காண்டம், 2. பிரகிருதி காண்டம், 3. கணபதி காண்டம், 4. ஸ்ரீ கிருஷ்ணஜன்ம காண்டம் முதலியன. நான்காவது காண்டம் பூர்வ, உத்திர என்னும் இரு பிரிவுகளைக் கொண்டதாகும். 18,000 பாடல்களையும், 266 அதிகாரங்களையும் கொண்டது.

இப்புராணத்தின் முக்கியக் குறிக்கோள், ஸ்ரீ கிருஷ்ணனின் தெய்வீகமான உலகியல் கடந்த திருவிளையாடல்களைக் குறிப்பதும், ஸ்ரீ கிருஷ்ணரின் சக்தியாகிய ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் உள்ள தொடர்பைக் குறிப்பதும் ஆகும். பிரம்ம வைவர்த்தம் என்ற பெயர் வந்ததே அனைத்தையும் கடந்து நிற்கின்றவன்—சக்தியாகிய ராதையோடு கூடிய ஸ்ரீ கிருஷ்ணன் அண்டங்கள் அனைத்திற்கும் தலைவனாவான் என்பதைக் குறிப்பிடுவதே ஆகும். "இந்த அண்டங்கள் முழுவதும் ஸ்ரீ கிருஷ்ணனே நிரம்பியுள்ளான் என்பதும், அவன்

மனோ, வாக்கு, காயம் கடந்த மெய்ப்பொருள் என்பதும், அவனுள் அண்ட சராசரங்கள் அனைத்தையும் காணலாம் என்பதும் உணரப்பட வேண்டும் என்று இப்புராணத்தி லுள்ள ஒரு பாடல் கூறுவதால், இப்பொருள் அனைத்தை யும் உள்ளடக்கிப் பிரம்ம வைவர்த்தம் என்ற பெயரால் இப்புராணம் குறிப்பிடப்படுகின்றது.

"வாக்கு மனம் கடந்தவனும், நிர்க்குண பிரம்மத்தின் வடிவாக உள்ளவனும், எவ்வித மாற்றமும் இல்லாதவனும், எவனிடமிருந்து பிரகிருதி, பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகிய அனைவரும் தோன்றுகின்றனவோ அந்தக் கிருஷ்ணனை வணங்குகிறேன்" என்று இப்புராணத்தில் உள்ள மற்றொரு பாடல் அவனுடைய துணையாகிய ராதை என்பவள், துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி, சாவித்திரி, காளி ஆகிய பல்வேறு சக்திகளின் உறைவிடமாவாள் என்பதையும் இப்புராணம் வலியுறுத்துகிறது. பல பெயரிட்டு அழைத்தாலும், தெய்வங்கள் அனைத்தும் ஒன்றே என்பதை வலியுறுத்துவது இப்புராணம். ஸ்ரீகிருஷ்ணன் மகாதேவரைப் புகழ்ந்து அவர்தாம் அனைத்தும் என்று சொல்வதும், மகாதேவர் கிருஷ்ணனைப் புகழ்ந்து அவர்தாம் அனைத்தும் என்று சொல்வதும் இப் புராணத்தில் பல இடங்களில் வருவதால் "ஏகம்சத், விப்ர பகுதாவதந்தி" என்ற வேத வாக்கியம் நிரூபிக்கப் படுகிறது.

முன்னொரு காலத்தில் நைமிசாரண்ய வனத்தில் சௌனகர் முதலிய முனிவர்கள் ஓய்வெடுத்துக் கொண் டிருந்தனர். அந்த நேரத்தில் மிக நீண்ட யாத்திரைக்குப் பிறகு லோமஹர்ஷனர் மகனாகிய சௌதி முனிவர் அங்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டவுடன் சௌனகரும் மற்ற முனிவரும் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். "முனிவனே! ஞானத்

தைப் பெற வேண்டும் என்ற ஆசையால் நாங்கள் துடித்துக் கொண்டிருக்கிறோம். எல்லாப் புராணங்களையும் அறிந்தவ ராகிய தாங்கள் எங்களுக்கு ஞான வழியைக் காட்டும் ஏதாவ தொன்றை அருளிச் செய்ய வேண்டும்" என்று வேண்டினர்.

சௌதி முனிவர், "தங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். எல்லாப் புராணங்களையும் விட மிக உயர்ந்ததும், எல்லாப் புராணங்களின் சாரமாக இருப்பதும் ஆகிய பிரம்ம வைவர்த்த புராணத்தை உங்களுக்குச் சொல்லப் போகிறேன். இந்தப் புராணத்தைக் கேட்பவர்கள் உலக இன்பத்தை விரும்பினால் அதைத் தரும். மெய்ஞ்ஞான வழியை நாடுகின்றவர்கட்கு விடுதலையைத் தரும். இப்புராணம் வந்த வரலாற்றை முதலில் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். பிரம்மனுடைய வரலாற்றைக் கிருஷ்ணன் கூறி, அதை முதன்முதலில் பிரம்மனுக்கு உபதேசித்தார். பிரம்மன் இதைத் தர்மனுக்கு புஷ்கர நதிக்கரையில் கூறினார். தர்ம தேவதை நாராயணனுக்குக் கூற, நாராயணன் நாரதருக்குக் கூற, நாரதர் வேதவியாசருக்குக் கூறினார். வேதவியாசர் இப்புராணத்தைச் சௌதி முனிவருக்குக் கூற, சௌதி முனிவர் நைமிசாரண்ய வனத்தில், சௌனக முனிவருக்கும், மற்றும் குழுமியிருந்த முனிவர்களுக்கும் கூற ஆரம்பித்தார்.

இப்புராணம், நான்கு பாகங்களை உடையது. முதல் பாகம் உலக உற்பத்தி, தெய்வங்கள் தோற்றம் ஆகியவற்றைப் பற்றிக் கூறுகிறது. இரண்டாவது பாகம் இந்த ஆண் பெண் தெய்வங்களின் இயல்புகள், அவர்களை எப்படி வணங்க வேண்டும் என்பதைச் சொல்கிறது. இதே பாகம் சுவர்க்கம், நரகம் ஆகியவைகளின் பல்வேறு பகுதிகளைக் கூறுவதுடன் பல்வேறு நோய்கள், அவற்றைப் போக்கிக் கொள்ளும் வகைகள் ஆகியவற்றைக் கூறுகிறது. மூன்றாவது பாகம் கணேசர் என்ற தெய்வத்தின் தோற்றம், அவரைப் போற்றும்

பாடல்கள், பிருகு முனிவருடன் கணேசன் நடத்திய உரையாடல் என்பவற்றைப் பற்றிப் பேசுகிறது. நான்காவது பாகம் கிருஷ்ண னுடைய பிறப்பு லீலைகள் என்பனவற்றை முக்கியமாகப் பேசுகிறது.

பிரளய காலத்தில், எல்லாம் அழிந்து ஒரு ஒளிப்பிழம்பு ஒன்று மட்டுமே இருந்தது. இந்தப் பேராற்றல் மூன்று உலகங்களையும் விழுங்கி வைத்திருந்தது. இந்த ஒளிப் பிழம்பின் மேலே வைகுந்தம், சிவலோகம், கோலோகதும் ஆகிய மூன்று மட்டுமே இருந்தன. பிரபஞ்ச உற்பத்தியின் பொழுது, வைகுண்டம் நாராயணன், லட்சுமி என்பவர்கள் வாழுமிடமாக இருந்தது. பிரளய காலத்தில் வைகுந்தம் காலியாக இருந்தது. சிவலோகத்தைப் பொறுத்தமட்டில் பிரபஞ்ச உற்பத்திக் காலத்தில் காலியான நரகம், பிரளய காலத்தில் சிவன் பார்வதி என்பவருடன் சிவ கணங்களும் இருந்தனர். கோலோகம் என்று சொல்லப்படும் மூன்றாவது உலகம் கிருஷ்ணன் இருப்பிட மாகும். இந்த லோகத்தைப் பொறுத்தமட்டில் பிரபஞ்ச உற்பத்தி, பிரளயம் என்ற இரண்டு நேரங்களிலும் அது நிறைந்தே இருந்தது.

ஏனைய புராணங்களைப் போல் அல்லாமல், கிருஷ்ணனைப் பரப்பிரம்மத்துடன் ஒன்றாக்கும் முயற்சியில் வைகுண்டத்தையும், கோலோகத்தையும் வேறு வேறு என்று சொல்லி, இந்த வேறுபாட்டைக் கற்பிக்கின்றது. கோலோகம் முழுவதும் ஒளியாய் நிரம்பி இருப்பதுடன், அந்த ஒளியினுள் ஆபரணங்கள் அணிந்திருப்பது போன்ற பல வடிவுகளைக் கொண்டது. இந்த வடிவம் மஞ்சள் உடையுடுத்து, கையில் குழலுடன் காணப்படுகிறது. இந்த வடிவம் சந்தனம் பூசிய உடலுடன் கௌத்துப மணியை மார்பில் பதித்திருப்பதோடு, ஸ்ரீவத்ஸ முத்திரையும் மார்பில் பெற்றுள்ளது. இவ்வடிவம் நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு சிம்மாசனத்தில்

அமர்ந்திருக்கிறது. மணிகள் பதித்த கிரீடத்தையும் அணிந் துள்ளது. காட்டுப் பூக்களால் கட்டப்பெற்ற மாலையை அணிந்திருக்கிறது. இந்த வடிவமே பரப்பிரம்மம் என்று சொல்லப்படும்.

பிரபஞ்ச உற்பத்தி பின்கண்டவாறு நடைபெற்றது. தொடக்கத்தில் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. தண்ணீர், காற்று எதுவுமில்லை. தன்னைச் சுற்றி ஒருமுறை பார்த்த கிருஷ்ணன் பிரபஞ்சத்தை உற்பத்தி செய்ய வேண்டும் என்று நினைத்தார். இந்நினைவு வேறு எந்த வெளித் தூண்டுதலும் இல்லாமல் அவருள் எழுந்தது. கிருஷ்ணனின் வலப்புறத்தில் இருந்து நாராயணன் தோன்றினார். சத்தியம், நேர்மை என்பவற்றின் வடிவமாக அவர் இருந்தார். அவர் சங்கு, சக்கரம், கதை, நீண்ட தடி, தாமரை, கௌஸ்துபம் ஆகியவற்றைத் தம் கரங்களில் தாங்கி இருந்தார். காட்டுப் பூக்களின் மாலையை அணிந்திருந்தார். நான்கு கரங்களுடன், ஸ்ரீவத்தவம் அணிந்த மார்புடன் காணப்பட்டார். கிருஷ்ணனின் புகழ் பாடிய நாராயணன், கிருஷ்ணனின் ஆணைக்குட்பட்டு எதிரே இருந்த சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தார்.

கிருஷ்ணனின் இடப்புறமிருந்து, தாமச குணத்தின் வடிவுடையவராய், இருண்ட நிறமுடையவராய் சிவன் தோன்றினார். கையில் திரிசூலத்துடன், சடையில் பிறைச் சந்திரனையும், மூன்று கண்களையும் உடையவராய் இருந்தார். கிருஷ்ணனின் கொப்பூழில் இருந்து நீண்ட தாமரை வெளிப்பட, அத் தாமரையில் வெண்மையான உடையணிந்த, முதிர்ந்த தோற்றத்துடன் ராஜச குணத்தின் வடிவாய் பிரம்மா தோன்றினார். நான்கு முகங்களும், கையில் கமண்டலமும் இருந்தன. பிரம்மனும், சிவனும் கிருஷ்ணனின் புகழ்பாடி, கிருஷ்ணனுக்கு எதிரே உள்ள சிம்மாசனத்தில் அமர்ந்தனர்.

கிருஷ்ணனின் மார்பிலிருந்து தர்மதேவதை தோன்றினாள். கிருஷ்ணனின் வாயிலிருந்து, வெள்ளை நிற உடையுடுத்தி ஒரு கையில் புத்தகமும், ஒரு கையில் வீணையும் கொண்டு கல்வித் தெய்வம் சரஸ்வதி அவதரித்தாள். கிருஷ்ணனின் மனத்திலிருந்து, தங்க நிறத்துடன், செல்வத்தின் அதிபதியான லட்சுமி தோன்றினாள். சொர்க்கத்தில் அவளுக்குச் சுவர்க்க லட்சுமி என்றும், அரசர்களிடையே ராஜலட்சுமி என்றும் பெயர் வழங்கப்படுகின்றன. கிருஷ்ணனின் நினைவு களிலிருந்து, போர்த் தெய்வமான துர்க்கை தோன்றினாள். எல்லா தெய்வங்களும் கிருஷ்ணனைப் பற்றிப் பாடிவிட்டுத் தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர்.

கிருஷ்ணனின் நாக்கிலிருந்து தோன்றியவர் சாவித்திரி. சாவித்திரி மந்திரம் மிகப் புண்ணியமானதும், சக்தி வாய்ந்ததும் ஆகும். கிருஷ்ணனின் உணர்வு நிலையில் இருந்து மன்மதனும், மன்மதனின் இடப்பக்கமிருந்து ரதியும் தோன்றினர். பிறகு பஞ்ச பூதங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

எங்கும் ஒரே நீர்ப்பரப்பு. அண்டம் என்ற பெயருடைய முட்டை கிருஷ்ணனிடம் இருந்து தோன்றியது. அந்த முட்டை யிலிருந்து ஒரு மாபெரும் வடிவம் தோன்றியது. இந்த வடிவமே விஷ்ணுவாகும். இவ்வடிவம் நீரில் மிதந்து கொண்டிருந்த பொழுது விஷ்ணுவின் இரண்டு காதுகளில் இருந்து மது, கைடவர் என்ற இரு அசுரர்கள் தோன்றினர். இந்த இரண்டு அசுரர்களும் தாம் தோன்றிய உடனேயே பிரம்மனைக் கொல்ல முனைந்தனர். ஆனால் நாராயணன் அவர்களைத் தன் தொடைகளின் இடையே வைத்து நசுக்கிக் கொன்றார். அந்த இருவரின் சடலத்தின் கொழுப்பிலிருந்து உலகம் உண்டாயிற்று. மேதா என்று சொல்லப்படும் கொழுப்பிலிருந்து உலகம் உண்டானதால், அதற்கு மேதினி என்ற பெயர் வந்தது. (மற்ற புராணங்களில் உலகத் தோற்றம் பற்றிக் கூறியதற்கும், இப்

*புராணத்தில் கூறப்பட்டதற்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன.)*

*(இதற்கு அடுத்தபடியாக பிரம்ம வைவர்த்த புராணம் காலம் பற்றிப் பேசுகிறது. இதனை முன்பே பிரம்ம புராணத்தில் கூறியிருக்கிறோம்.)*

கோலோகாவில், ரசமண்டலத்தில் கிருஷ்ணன் உலாவிக் கொண்டிருக்கும் பொழுது அவரது இடப்பாகத்தில் இருந்து, முழு அலங்காரங்களுடன் கூடிய, பதினாறு வயது மதிக்கத் தக்க பெண்ணொருத்தி தோன்றினாள். ரசமண்டலத்தில் தோன்றியதால் இவள் பெயர் ராதை என்றாயிற்று. *(பதினெட்டுப் புராணங்களில் இந்தப் புராணம் ராதையைப் பற்றி விரிவாகக் கூறுகிறது. அடுத்தபடியாக பத்ம புராணம் போகிற போக்கில் ராதையின் பெயரைச் சொல்லிச் செல்கிறது. இவை இரண்டு புராணங்கள் தவிர, வேறு எந்தப் புராணத் திலும் ராதையின் பெயரோ, அவளைப் பற்றிய குறிப்புகளோ எதுவுமில்லை. பாகவதத்தில் கூட— கிருஷ்ணன் வரலாறு விரிவாகக் கூறப்பட்ட இடங்களில் கூட ராதையின் பெயரே இல்லை என்பது அறியத்தக்கது.)* ராதையின் ஒவ்வொரு மயிர்க்காலில் இருந்தும் அழகு வாய்ந்த கோபிகைகள் தோன்றினர். கிருஷ்ணன் உடம்பு மயிர்க்காலில் இருந்து முப்பது கோடி கோபிகைகள் தோன்றினர். இவர்களை அல்லாமல், பசுக்கள், எருதுகள், குதிரைகள், சிங்கங்கள், அன்னப்பறவைகள் முதலியவை கிருஷ்ணனின் உடலிலிருந்து தோன்றின.

கிருஷ்ணன் தன் உடலில் இருந்து வந்த எருதை சிவனுக்கும், அன்னத்தை பிரம்மாவிற்கும், வெண்குதிரையை தர்ம தேவதைக்கும், சிங்கத்தை துர்க்கைக்கும் கொடுத்தார். ஐந்து அற்புதமான ரதங்கள் அவர் உடலினின்று தோன்றின.

அவற்றில் ஒன்றை ராதைக்கும் ஒன்றை நாராயணனுக்கும் கொடுத்துவிட்டு, மூன்றைத் தானே இருத்திக்கொண்டார். செல்வத்தின் அதிபதியான குபேரன் கிருஷ்ணன் உடலில் இருந்து வெளிப்பட்டு, தானே மனோரமா என்ற பெண்ணை உண்டாக்கி அவளை மணம் செய்து கொண்டான். கிருஷ்ணன் உடம்பில் இருந்து, குபேரன் பணியாளர்கள், சிவன் பணியாளர்கள், நாராயணன் பணியாளர்கள் வெளிப்பட்டனர்.

லட்சுமியும், சரஸ்வதியும் திருமாலை மணந்து கொண்டனர். *(சரஸ்வதி நாராயணனை மணந்து கொண்டார் என்ற இந்த விநோதமான செய்தி இந்தப் புராணத்திற்கே உரியது.)* பிரம்மன் சாவித்ரியையும், ரதி மன்மதனையும், மனோரமா குபேரனையும் மணந்தனர். துர்க்கையை மணந்து கொள்ளுமாறு சிவனை வேண்ட, அவர் தாம் துறவியாக இருக்க விரும்புவதாகவும், தமக்குத் திருமணம் வேண்டாம் என்றும் கூறிவிட்டார். இதை ஒப்புக் கொண்ட கிருஷ்ணன் ஒருகோடி கல்பங்களுக்குப் பிறகு சிவன் துறவியாக இருந்து விட்டுப் பிறகு துர்க்கையை மணந்து கொள்ள வேண்டும் என்று கூறினார். இப்பொழுது பிரம்மனுக்கு அழகிய மாலை ஒன்றைக் கொடுத்து, ஆயிரம் தேவ வருஷங்கள் தவம் செய்ய வேண்டும்— அதன் பிறகு படைத்தல் தொழிலைச் செய்ய வேண்டும் என்று கூறிவிட்டு, கோபிகைகளை அழைத்துக் கொண்டு பிருந்தாவனம் போய்விட்டார்.

கிருஷ்ணன் கூறிச் சென்றது போல், பிரம்மன், மது, கைடபர்களின் கொழுப்பினை எடுத்து உலகைப் படைத்தார். அடுத்து மலைகளையும், எட்டு முக்கியமான மலைகளையும் படைத்தார். அவை சுமேரு, கைலாசம், மாலயா, இமயமலை, உதயசலா, அஷ்டசலா, சுபேலா, கந்தமாதனா என்பனவாகும். எண்ணற்ற ஆறுகளையும் கிராமங்களையும் படைத்தார். 'முதன்மை வாய்ந்த சமுத்திரங்களான லவண, இக்ஷீ, சுரா,

சர்பி, ததி, துக்தா, ஜலா ஆகியவற்றைப் படைத்தார். ஏழு துவீபங்கள் படைக்கப்பட்டன. இவற்றை அடுத்து ஏழு லோகங்களும், ஏழு கீழ் லோகங்களும் படைக்கப்பட்டன. இவை அனைத்தும் சேர்ந்ததே 'பிரம்மாண்டம்' என்னும், மிகப்பெரிய வடிவத்தைக் கொண்ட முட்டை ஆகும். எண்ணிலடங்கா முட்டைகள், நுண்மையான வடிவத்துடன், விஷ்ணுவின் உடலில் உள்ளது. ஆனால் அவ்வுலகங்கள் அனைத்தும் நிலையில்லாத, பொய்யான தோற்றமுடைய கனவுகள் போன்றவையாகும். என்றும் அழிவில்லாத, நிலைத்து நிற்கக் கூடிய லோகங்கள் வைகுந்த லோகம், சிவலோகம், கோலோகம் எனப்படும்.

பிரம்மாவின் மனைவி சாவித்திரி. நான்கு வேதங்களையும், முப்பத்தி ஆறு ராகினிகளையும் தாயாக இருந்து கவனித்துக் கொண்டார். இதன் பிறகே காலத்தைக் குறிக்கும் அளவுகள் படைக்கப்பட்டன. பிரம்மனின் கொப்பூழில் இருந்து, தேவ தச்சனான விஸ்வகர்மா தோன்றினார். அவரை அடுத்து அஷ்ட வசுக்கள் தோன்றினர். தன்னுடைய மனவலிமையால் சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் ஆகிய முனிவர்களைப் படைத்தார். இவர்களிடம் படைக்கும் தொழிலை ஏற்றுச் செய்யும்படிக் கூற அவர்கள் மறுத்து விட்டனர். அவர்கள் கூறிய பதிலைக் கேட்ட பிரம்மன் சினம் கொண்டு தன் நெற்றி யினின்று அக்னியை வெளியேற்றினார். அந்த அக்னியில் இருந்து ருத்ரன், அழிக்கும் தொழிலைச் செய்வதற்காகத் தோன்றினார்.

பிரம்மனின் உடம்பில் இருந்து பல்வேறு முனிவர்கள் தோன்றினர். இம் முனிவர்களிடம் படைக்கும் தொழிலை ஏற்றுக்கொள்ளும்படிக் கூற நாரதர் மறுத்துவிட்டார். இதனால் கோபம் கொண்ட பிரம்மன், நாரதரைப் பார்த்து "துன்மார்க்க குணம் கொண்ட கந்தர்வனாகவும் பரப்பிரம்மம் பற்றிய

ஞானம் அற்றவனாகவும், பணிப் பெண்ணின் மகனாகவும் பிறப்பாய்" என்று சாபமிட்டார். இதைக்கேட்ட நாரதர் பிரம்மனைப் பார்த்து "இனி மூன்று கல்பங்களுக்கு பிரம்மனை யாரும் வணங்க மாட்டார்கள்" என்று சாபமிட்டார். மற்ற முனிவர்கள் படைத்தல் தொழிலைச் செய்தனர். மரீச்சி யினின்று காசிப முனிவனும், அத்ரியிடமிருந்து சந்திரனும், பிரசேத்தா, புலஸ்தியர் ஆகியோரிடமிருந்து முறையே கௌதமரும், அகஸ்தியரும் தோன்றினர்.

*(இதையடுத்துக் கூறப்பட்டிருக்கும் மனு, ஷடரூபாவின் கதை ஏற்கெனவே பிரம்ம புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.)*

**உறவு முறைகள்**

இனி, பிரம்ம வைவர்த்த புராணம் உறவு முறைகள் பற்றிப் பேசுகிறது. பிரம்மன் மக்களிடையே சில உறவு முறை களை வரையறுத்தார். அவை பின்வருமாறு குறிப்பிடப் படுகின்றன.

தந்தை, பிதா, ததா, ஜனகா என்றும், தாய், மாதா, அம்பா, ஜனனி என்றும், தந்தையின் தந்தை பிதா மகன் என்றும், தாயின் தந்தை மாதா மகன் என்றும் அழைக்கப்படுவர்.

தந்தையின் சகோதரி பித்ரிஷ்வசா என்றும், தாயின் சகோதரி மாசுரி என்றும் அழைக்கப்படுவர். புத்ரா, தயதா, தனபகா, வீர்யஜா என்பவை மகனைக் குறிக்கும் சொற்கள். துஹிதா, கன்யா என்பவை மகளைக் குறிக்கும். வது என்பது மகனின் மனைவியையும், ஜமத்ரி என்பது, மகளின் கணவனையும் குறிக்கும். பதி, பர்த்தா என்பவை கணவனை யும், பத்னி, பார்யா என்பவை மனைவியையும் குறிக்கும். மகனின் மகன் பௌத்ரன் என்றும், மகளின் மகன் தௌஹித்ரா என்றும் கூறப் பெறுவர்.

ஒரு மனிதனுக்கு ஐவகை தந்தையர் பொறுப்பு வகுக்கப் பட்டுள்ளது. அவை 1. ஜன்ம தாதா 2. அன்ன தாதா 3. பயத் ரதா 4. வித்யா தாதா 5. பத்னிபிதா ஆகியவை ஆகும். பதினான்கு வகையான பெண்கள், தாய் எனக் கருதப்படுவர். தாய், தந்தையின் தாய், தாயின் தாய், தந்தையின் சகோதரி, தாயின் சகோதரி எனப் பதினான்கு உறவு முறையினர் குறிக்கப்படுகின்றனர்.

ஒருவன் தன் ஆசிரியனுடைய மகன் அல்லது மகளைத் தன் உடன்பிறந்தவராகக் கருத வேண்டும். பெண்ணின் தந்தையும், மணமகனின் தந்தையும் சகோதரர்கள் போல் நடந்து கொள்ள வேண்டும். இம்முறைக்கு வைவஹிகா என்று பெயர். இவ்வுறவு முறைகள் அன்றி, வேறு உறவு முறைகளும் உண்டு. ஒரு நண்பரிடத்தில் உறவினன் போல் பழகுவது பிரிதிஜா எனப்படும். இப்படிப்பட்ட உறவுகள் என்றென்றும் போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டியவை.

**உபவர்ஹன**

முன்னொரு காலத்தில் கந்தமாதனம் என்ற மலையில், வயது முதிர்ந்த கந்தர்வ தம்பதியினர் வாழ்ந்து வந்தனர். செல்வம் நிறையப் பெற்றிருப்பினும், குழந்தைச் செல்வம் வேண்டிச் சிவபெருமானை தியானித்தனர். சிவபெருமான் கொடுத்த வரத்தின்படி நாரதர் இவர்கட்கு மகனாகப் பிறந்தார். வசிட்டர் இக்குழந்தைக்கு உபவர்ஹனா என்று பெயரிட்டார். பெரும் மரியாதைக்குட்பட்டவன் என்ற பொருளில் இப்பெயர் இடப்பட்டது. இக்குழந்தை சிறுவனாக வளர்ந்தபின் தியானம் செய்யத் துவங்கினான். கந்தர்வர்களின் மன்னனாகிய சித்ரசேனாவின் பெண்கள் ஐம்பது பேரும், உபவர்ஹனாவை மணக்க விரும்பினர். வேறு வழியின்றி அவர்களை மணந்து கொண்ட உபவர்ஹனா ஒருநாள் பிரம்மனை தரிசிக்கச்

சென்றான். அங்கு ரம்பா என்ற அப்சரஸைக் கண்டு மணம் புரிய விரும்பினான். இதனால் கோபம் கொண்ட பிரம்மன் அவன் இறந்து போகும்படி சபித்தார்.

உபவர்ஹனாவின் முதல் மனைவியாகிய மாலவதி கோபம் கொண்டு, தன் கணவனின் இறப்பிற்குக் காரணமாகிய பிரம்மன், சிவன், யமன் ஆகியோரை சாபமிடப் போவதாகக் கூறினாள். இதைக் கேட்ட தேவர்கள் விஷ்ணுவிடம் அடைக்கலம் தேடி ஓடினர். விஷ்ணுவும் ஓர் அழகிய பிராமண இளைஞன் உருவமெடுத்து, மாலவதியின் முன் தோன்றினார். தேவர்களைச் சமாதானப்படுத்தி உபவர்ஹனாவிற்கு உயிர் கொடுக்கும்படிக் கூறினார். பிரம்மன் புனித நீரைத் தெளிக்க, சூரியதேவன் கண்பார்வை வழங்க, வாயுதேவன் மூச்சுக் காற்றை வழங்கினான். கிருஷ்ணன் உபவர்ஹனாவின் உடலின் உள்ளே புகுந்து உயிர் கொடுத்தார். பிராமண வடிவத்தில் இருந்த விஷ்ணு, மாலவதிக்கு இறப்பு பற்றியும், அதற்கான காரணங்களையும் எடுத்துக் கூறினார்.

சில காலங்களுக்குப் பின் உபவர்ஹனா இறந்துபோனான். மாலவதியும், அடுத்த ஜென்மத்தில் உபவர்ஹனாவே தன் கணவனாக வரவேண்டும் என்று வேண்டிக் கொண்டு உயிர் துறந்தார். அடுத்த ஜென்மத்தில் சிரின்ஜயா அரசன், மனுவின் வழியில் தோன்றியவனுக்கு மகனாகத் தோன்றினான். இளவரசன் பிறப்பதற்கு முன், நாட்டில் பெரும் பஞ்சம் ஏற்பட்டது. இக்குழந்தை பிறந்தவுடன் மழை பெய்ய ஆரம்பித்ததால், நீரைக் கொடுத்தவன் என்ற பொருள்படும்படி நாரதன் என்று அழைக்கப்பட்டான்.

**நாரதர்**

நாரதர் மிக இளம்பிள்ளையாக இருக்கும் பொழுதே காட்டிற்குச் சென்று கிருஷ்ணனை தியானம் செய்ய

ஆரம்பித்தார். நீண்ட காலம் தியானம் செய்த பிறகு கிருஷ்ணன் எதிரே காட்சி தந்தார். அந்தக் காட்சியில் ஈடுபட்டு நாரதர் ஆனந்தப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுதே கிருஷ்ணன் மறைந்துவிட்டார். குழந்தை நாரதர் மிகவும் துயரம் அடைந்து அழத் துவங்கினார். அப்பொழுது அசரீரி மூலமாக "கவலைப் பட வேண்டாம்; இந்தப் பிறப்பு முடிந்ததும் உனக்கு பிரம்மத்தை அறிந்து கொண்டு அதனிடம் ஒன்றியிருக்கும் நிலைமை ஏற்படும்" என்று வந்தது. அதன்பிறகு பிரம்மா நாரதரை அழைத்து, 'பிரம்மசரியம், கிருஹஸ்தம் முதலிய நான்கு நிலைகளையும் ஒரு மனிதன் ஒழுங்காகக் கடைப்பிடிக்க வேண்டும். ஆகவே சென்ற பிறப்பில் மாலவதி என்ற பெயருடன் உனக்கு மனைவியாக இருந்தவள் இப்பொழுது சிரின்ஜய மன்னனுக்கு மகளாகப் பிறந்துள்ளாள். அவளுடன் வாழ்ந்து விட்டுப் பிறகு உன் வாழ்க்கையைத் தொடரலாம்' என்று புத்திமதி கூறினான்.

இதன்பிறகு நாரதர், சிவனை தரிசிக்கக் கயிலை மலைக்குச் சென்றார். மிக்க அழகும் வானுயர்ந்த கட்டடங் களும் உடைய கயிலையில் நாரதர் சிவனை வழிபட்டவுடன் இவருக்குச் சில புத்திமதிகளைச் சிவன் கூறினார். குளித்தல், வாய் கொப்புளித்தல் முதலியவற்றை முறையாகச் செய்து விட்டு, கிருஷ்ணனை வழிபட வேண்டும். சிறப்பான வழிபாடு என்பது சந்தனம், பூக்கள், புதிய துணி ஆகிய வற்றை அணிவித்துப் பிரசாதம் படைத்து, கிருஷ்ணனை வழிபட வேண்டும். இன்னின்ன நாட்களில், இன்னின்ன உணவை உட்கொள்ள வேண்டும். இல்லறத்தில் இருப்போர் சோறு முதலியவற்றைக் குறிப்பிட்ட விரத நாட்கள் தவிர மற்ற நாட்களில் உண்ணலாம். ஆனால் துறவிகள் காய், கனி, கிழங்குகள் இவற்றை மட்டும் உட்கொள்ள வேண்டும்.

*இதன்பிறகு நாரதர் பத்ரிகாசிரமம் சென்றார். அங்கே நாராயண முனிவர், பொன்னால் ஆகிய சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றி அப்ஸரஸ்கள், கந்தர்வர்கள் முதலானோர் அமர்ந்திருந்தனர். தம்மை வணங்கிய நாரதரை அமரச் செய்து கிருஷ்ண லீலைகளைச் சொல்ல ஆரம்பித்தார்.*

**நாராயண முனிவர் சொல்லியவை**

*பிரகருதி என்ற பெயருடன் தலைமை மேற்கொண்டுள்ள ஐந்து பெண் தெய்வங்கள் உண்டு. துர்க்கை, ராதா, லட்சுமி, சரஸ்வதி, சாவித்திரி என்போர் ஆவர். இவர்கள் அதிகாரத்தின் கீழ் ஒருசில சக்திகளை மட்டும் பெற்றுப் பணிபுரிபவர்கள் கங்கை நதி, துளசிச் செடி, மானசா என்ற பெயருடைய பாம்புகளின் அதிதேவதை, ஷஸ்தி என்ற பெயருடைய பிறக்கும் குழந்தைகளின் தெய்வம், மஸ்களச்சண்டி, காளி, வசுந்தரா என்பவர் ஆவர். இவர்களை அடுத்துக் கீழ்ப்படியில் உள்ளவர்கள் அக்னியின் மனைவியாகிய சுவாஹா, யாகத் தலைவனின் மனைவியாகிய தட்சிணாத, சுவதா என்ற பெயருடைய பித்ரிக்களின் மனைவி முதலியோர். எல்லாப் பெண்களும் மூலப் பிரகருதியின் வடிவங்கள் ஆவர். தனிப்பட்ட ஒரு பெண்ணைக் கொடுமை செய்தாலோ, அவமானப்படுத்தினாலோ, பிரகருதியை அவமானப்படுத்திய தாகும். பெண்களை மரியாதையுடன் நடத்துவது, பிரகருதியை மரியாதையுடன் நடத்துவது போலாகும். பிரகருதிக்குரிய குணங்கள் மூன்றாகும். அதனுடைய சத்வகுணத்தில் தோன்றிய வர்கள் நன்னடத்தை, அன்புடைமை, கணவனைப் போற்றுதல் ஆகிய பண்புகளுடன் இருப்பர். ராஜசகுணத்தில் தோன்றுப வர்கள், சுயநலம் உடையவர்களாய், உலக இன்பங்களை அனுபவிப்பதில் ஈடுபாடு கொண்டவர்களாய் இருப்பர். தாமச குணத்தில் தோன்றுபவர்கள் பிறரிடம் சண்டை இடும் இயல்பினராய், நன்னடத்தை இல்லாதவராய் இருப்பர்.*

*பிரகருதி பரமாத்மாவினுள் ஐக்கியப்பட்டது. அது தனித்து இயங்குவதில்லை. பொன்னில்லாமல் ஒரு பொற்கொல்லன் எப்படி ஆபரணங்கள் செய்ய முடியாதோ, அதேபோல, குயவன் மண்ணில்லாமல் பானைகள் செய்ய முடியாதோ அதுபோல பிரகருதி இல்லாமல் பரமாத்மா படைத்தல் தொழிலைச் செய்ய முடியாது. தொடக்கத்தில் கிருஷ்ணன் தன்னையே இரண்டாகப் பிரித்துக் கொண்டான். வலப்பகுதி ஆணாகவும், இடப்பகுதி பெண்ணாகவும் வடிவெடுத்தான். இப்பிரகருதியே ராதா என்றும், ராதிகா என்றும் வழங்கப் படுவர்.*

*(இதன் பிறகு பிரம்ம வைவர்த்த புராணம் சரஸ்வதி, கங்கை, பத்மாவதி ஆகிய ஆறுகளின் தோற்றத்தையும், கலியுகத்தில் ஏற்படப்போகும் அதர்ம வளர்ச்சியையும் கல்கியின் தோற்றத்தையும், அதன்பிறகு ஏற்படப் போகும் பிரளயத்தையும் விரிவாகப் பேசுகிறது. பிரளயத்தின் முடிவில் மறுபடியும் சத்ய யுகம் வரப்போகிறது என்றும் இப்புராணம் கூறுகிறது.)*

**வசுந்தராவின் கதை**

*அடுத்தபடியாக நாராயண முனிவர் நாரதருக்கு வசுந்தரா அல்லது பிருத்வியின் கதையைச் சொல்லத் தொடங்கினார். இதுவரை மது, கைடபர்களைக் கொன்று அவர்கள் தசையினை எடுத்துக் கிருஷ்ணன் பூமியை உண்டாக்கினார் என்ற கதை வழங்கி வந்தது. இந்தக் கதையை நான் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. மது கைடபர்கள் தண்ணீர் இல்லாப் பகுதியில் தங்களைக் கொல்லவேண்டும் என்று எப்பொழுது வேண்டிக் கொண்டார்களோ அப்பொழுதே தண்ணீர் இல்லாத பகுதியும் உண்டு. அதாவது பூமியும் உண்டு என்பதை அக்கதை ஏற்றுக் கொள்கிறது. என்னைப் பொறுத்தவரை*

ஏற்கெனவே இருந்த பூமி அளவால் சிறியதாக இருந்திருக்கலாம். மது கைடபர்களின் சதையை நீர்ப்பகுதியில் போட்டு அதை உயர்த்தி பூமியோடு சேர்த்திருக்கலாம். அப்படியானால் இவர்கள் வதத்திற்குப் பிறகு பூமியின் அளவு பெரிதாக ஆகியிருக்கலாம். மது கைடபர்கள் சதையில் இருந்து பூமியின் ஒரு பகுதி வந்ததால் அதற்கு மேதினி என்ற பெயர் வந்தது. (மேதா என்றால் சதை என்று பொருள்.)

இதன் பிறகு பிரம்ம வைவர்த்த புராணம் பிரபஞ்ச உற்பத்தியைப் பற்றி ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரண்டு வகை உற்பத்தியை அடுத்தடுத்து கூறிக் கொண்டு செல்லுகிறது. இதன்படி முதல்வகை உற்பத்தி வரலாறு இங்கு தரப் பெறுகிறது.

**தொ**டக்கத்தில் எங்கும் நீரே நிறைந்திருக்க, கிருஷ்ணன் மிகப் பெரிய வடிவத்துடன் தண்ணீரில் பல்லாயிரம் வருடங்கள் மிதந்து கொண்டே இருந்தார். எங்கும் இருந்த தூசியும் புழுதியும் கிருஷ்ணன் உடலில் படிந்து படிந்து இறுகிப் போய் அதுவே பூமியாக மாறியது.

இரண்டாவது வகை உற்பத்தி வரலாறு வருமாறு: பிரளய காலத்தில் பூமி நீருக்குள் மூழ்கி விடுகிறது. இத்தகைய பிரளயம் பிரம்மாவினுடைய ஒரு நாளின் இறுதிப் பகுதி ஆகும். பிரம்மாவின் மறுநாள் விடியும் பொழுது, மறுபடியும் உற்பத்தி தொடங்குகிறது. அப்போது தண்ணீருக்குள் மூழ்கிப் போன பூமியை மேலே கொண்டு வருமாறு விஷ்ணுவை வேண்டிக் கொள்கிறார் பிரம்மன். விஷ்ணு வராக அவதாரம் எடுத்து நீருக்குள் சென்று பூமியைத் தன் கொம்புகளுக்கிடையே வைத்து மேலே தூக்கிக் கொண்டு வருகிறார்.

*(இதைத் தொடர்ந்து வரும் கங்கையின் கதை மற்றப் புராணங்களில் ஏற்கெனவே கொடுக்கப்பட்டுள்ளது.)*

குஷத்வஜா என்ற மன்னனுக்கும், அவன் மனைவி மாதவிக்கும் பெண்ணாகப் பிறந்தவள் துளசி. பிறந்தவுடனேயே யாவரும் அதிசயிக்கும் வண்ணம் காட்டிற்குச் சென்று நாராயணனை வணங்கி வந்தாள். நீண்ட காலத்திற்குப் பிறகு பிரம்மன் அவள் எதிரே தோன்றினான். இப்பிறப்பில் நீ நாராயணனை அடைய முடியாது என்றார். ஜதீஸ்மரா ஆற்றல் காரணமாக இதன் காரணத்தை அறிந்துகொண்டார். முன் ஜென்மத்தில் கோலோகாவில் ஒரு கோபிகையாக இருந்த அவள் கிருஷ்ணன் மீது காதல் கொண்டதால், ராதையினால் “பூலோகத்தில் பெண்ணாகப் பிறக்கக் கடவாய்” என்று சாபமிடப்பட்டாள். பிரம்மன் துளசியிடம் சங்கசூடனின் கதையைக் கூறினார். சங்கசூடன் ஒரு கோபியை மணக்க விரும்ப, அதனால் கோபம் அடைந்த ராதை அவன் ராட்சச னாகப் பிறக்கச் சாபமிட்டாள். இப்பொழுது ராட்சசனாகப் பிறந்துள்ள சங்கசூடன் தன் முற்பிறப்பினை அறிந்தவன் ஆதலின், இப்பிறப்பிலேனும் துளசியை மணந்து கொள்ள வேண்டி பிரம்மனை வேண்டினான். ராதையிடம் அனுமதி பெறுமாறு கூறினார். அனுமதி பெற்ற துளசி காட்டில் சங்கசூடனைக் கண்டு மணம் புரிந்து இன்பமாக வாழ்ந்தாள்.

அரக்கனாகிய சங்கசூடன் தேவர்களைக் கொடுமைப் படுத்தினான். பிரம்மன் தலைமை ஏற்று, கிருஷ்ணனைச் சென்று வேண்டினர். அரக்கனுக்குத் தான் கொடுத்துள்ள துளசிமாலை காரணமாக அவனை வெல்ல முடியவில்லை என்றும், தானே சென்று அதனைப் பெற்றுக் கொள்வதாகவும் கிருஷ்ணன் கூறினார். சிவனிடம் ஒரு கோடரியைக் கொடுத்து, அதனைக் கொண்டே, அவ்வரக்கனை அவர் கொல்ல வேண்டும் என்று கூறி, ஒரு பிராமண வடிவம் கொண்டு அவ்வரக்கனிடம் சென்று யாசித்தார். சங்கசூடனின் மனைவி

வேறு ஒருவனைத் தன் கணவனாக ஏற்றுக் கொண்டு வாழ ஆரம்பித்தால் மட்டுமே, சங்கசூடனுக்கு இறப்பு நேரிடும் என்று பிரம்மன் தான் கொடுத்த வரத்தினைப் பற்றிக் கிருஷ்ணனுக்குக் கூறினார். பிராமண உருவம் கொண்ட கிருஷ்ணன், அவ்வரக்கனிடம் சென்று துளசிமாலையினை தானமாகப் பெற்று, சங்கசூடன் உருவம் எடுத்து அவன் மனைவியாகிய துளசியிடம் சென்றான். தன் கணவன் அல்லன் என்றறியாத துளசியும், மகிழ்ச்சியுடன் வாழ்ந்தாள். இத் தருணத்தில் சிவன் சங்கசூடனைக் கொன்றார்.

இதை அறிந்து கொண்ட துளசி கடும் கோபம் கொண்டாள். கிருஷ்ணன் ஒரு கல்லின் உருவம் பெறவேண்டும் என்று சாபமிட்டாள். அதுவே சாலக்கிரமம் என்று வழங்கப் பெறுகிறது. துளசியைப் பலவகையிலும் தேற்றிய கிருஷ்ணன் அவள் தெய்வ வடிவு கொண்டு, வைகுந்த லோகம் சென்று அங்கு கிருஷ்ணனை மணம் புரிவாள் என்றும், மானிட உருவில் உள்ள அவள் மறைந்த கந்தகி என்றும் புனித நதியாகி பரதவர்ஷாவில் ஓடுவாள் என்றும் கூறினார். அவளுடைய தலைமுடி துளசி என்னும் புனிதச் செடியாக வளரும் என்றார். துளசி இலையினைக் கலந்த நீரில் குளித்தால், புனித நதிகளில் நீராடியதால் ஏற்படும் புண்ணியம் கிடைக்கும். துளசிச் செடிக்குப் பல பெயர்கள் உள்ளன. அவை விருந்தா, விருந்தாவனி, விஷ்வபுஜிதா, புஷ்யமயா, நந்தினி, துளசி, கிருஷ்ண ஜீவனி ஆகியவை ஆகும். கார்த்திகை மாதத்தில் பௌர்ணமி அன்று, துளசிச் செடியைத் தொழுவது மிகச் சிறப்பானதாகும்.

சாலக்கிரமம் மிகச் சிறப்புடையதாகும். இதனை வணங்குப வர்களின் பாவங்கள் மன்னிக்கப்படும். சாலக்கிரமம் கிடைத்த நதியினில் நீராடுபவர்கள், எல்லாப் புண்ணிய நதிகளிலும் நீராடிய புண்ணியத்தைப் பெறுகின்றனர். சாலக்கிரமம்

வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்திலிருந்து நீரைக் குடிப்பவர்கள் வைகுந்த லோகம் செல்வர்.

துளசி இறந்த பிறகு வைகுந்த லோகம் அடைந்தாள். அவளுடைய முடி கந்தகி நதியானது. நாராயணன் கந்தகி நதிக்கரையில் ஒரு மலையாக நின்றார். இம்மலையில் வஜ்ரகிதா என்ற பூச்சிகள் காணப்பட்டன. இப்பூச்சிகளின் பற்கள் கூர்மை உடையனவும், கெட்டியானவையும் ஆகும். ஆதலால் இப்பெயர் வழங்கப்பட்டது. இப்பூச்சிகள் அம்மலையில் காணப்படும் கற்களைத் துளையிடுகின்றன. அவையே சாலக்கிரமம் எனப்படும்.

சங்கசுதாவைக் கொன்ற சிவபெருமான், அரக்கனின் உடலைக் கடலில் வீசி எறிந்தார். அவ்வுடம்பின் எலும்புகளில் இருந்து வெவ்வேறு சங்குகள் உற்பத்தி ஆயின. இவை மிகவும் சிறப்புப் பெற்றவை. சங்குகளில் நீரை ஊற்றி, சிவனைத் தவிர எல்லா தெய்வங்களுக்கும் அபிஷேகம் செய்யப்படுகிறது. ஒரு வீட்டில் சங்கு வைத்து ஊதப்பட்டால், இலட்சுமி என்றும் அங்கு வாசம் செய்வாள்.

### சாவித்திரி

சாவித்திரி என்றால், 'பிறப்பைக் கொடுப்பவள்' என்பது பொருள். வேதங்கள் தோன்றியது சாவித்திரியிடமிருந்து தான். சூரியனுக்கும், மந்திரங்களுக்கும் தேவதையாக விளங்குகின்றாள்.

தங்க நிறமும், ஆபரணங்கள் அணிந்தும், புன்னகையுடனும் தோற்றம் தருபவள். சந்தனம், நீர், அரிசி முதலியவைகளைப் படைக்க வேண்டும். இத்தேவிக்காக அனுஷ்டிக்கப்படுவது சாவித்ரி விரதம் எனப்படும். ஜேஷ்டமாதங்களில், பதின்மூன்றாம் நாள் திரயோதசி திதியில் பதினான்

ஆண்டுகள் அனுஷ்டிக்க வேண்டும். பதினான்கு விதமான பழங்கள் படைக்கப்பட வேண்டும். பராசர முனிவர், மத்ர அரசன் அசுவபதிக்கு, இவ்விரதங்களை எடுத்துக்கூற, அவ்வரசனும் இதனைக் கடைப்பிடித்தான். சாவித்திரி தேவி அவன் முன் தோன்றி, அவ்வரசனுக்கும், அவன் மனைவி மாலதிக்கும் தான் மகளாகத் தோன்றுவதாக வரம் அளித்தாள்.

துயுமத்சேன அரசன் மகன் சத்தியவானுக்கும் சாவித்திரிக்கும் திருமணம் நடந்தது. ஒரு வருடத்திற்குப் பிறகு ஒருநாள் காட்டில் பழங்கள் பறிக்கச் சென்ற சத்தியவான் மரத்தில் இருந்து கீழே விழுந்து இறந்து போனான். யமன் சத்தியவானின் உடலை எடுத்துச் செல்லும் பொழுது, சாவித்திரியும் யமனைத் தொடர்ந்து சென்றாள். தொடர்ந்து வந்த சாவித்திரியிடம் யமன், 'ஒருவர் தன்னுடைய பூதஉடலை விட்டுவிட்டே யமலோகம் செல்ல முடியும் என்றும், அவரவர் கர்மவினைப்படி மரமாகவும், பறவையாகவும், மனிதராகவும் பிறக்கிறார்கள் என்றும், அக்கர்மவினைக்கேற்க அவர்கள் உலகில் வாழும் காலம் வரையறுக்கப்படுகிறது என்று கூறிவிட்டு, சத்தியவானின் முன்ஜென்ம கர்மவினையினால் அவன் இப்பிறப்பில் வெகுவிரைவில் இறந்துவிட்டான் என்று கூறி, சாவித்திரியை வீட்டிற்குச் செல்லுமாறு கூறினான்.

சாவித்திரி வீட்டிற்குச் செல்லாமல், யமனிடம் மேலும் மேலும் கர்மவினை பற்றிக் கேட்டாள். இதனால் மனம் மிக மகிழ்ந்த யமன் அவளுக்கு என்ன வரம் வேண்டும் எனக் கேட்க, சாவித்ரி, தனக்கும் தன் கணவனுக்கும் நூறு குழந்தைகள் பிறக்க வேண்டும்' என்று கேட்டாள். இவ்வரத்தை அவளுக்கு அளித்த யமன், வேறு வழியின்றி சத்தியவானுக்கு உயிர் கொடுத்து இவ்வுலகிற்குக் கொண்டு வந்தான். சாவித்திரி தன் தந்தைக்கு நூறு மகன்கள் பிறக்க வேண்டும் என்ற வரத்தையும், தான் தன் கணவருடன் பல ஆண்டுகள் இப்

பூமியில் வாழ்ந்த பிறகு கோலோகம் செல்ல வேண்டும் என்ற வரத்தையும் பெற்றாள். மேலும் யமதர்மன், சாவித்திரிக்கு தானம் செய்வது பற்றியும் சடங்குகள் பற்றியும் கூறத் துவங்கினார்.

நிலம், அரிசி முதலியவற்றை தானம் செய்பவர்கள் விஷ்ணு லோகத்திற்கும், வீடு ஒன்றினை தானமாகக் கொடுப்பவர்கள் தேவலோகத்திற்கும், தங்கம், தாமிரம், கன்று முதலானவற்றை தானமாகக் கொடுப்பவர்கள் சூரிய லோகத்திற்கும், செல்வர்.

சிவராத்திரி அன்று, சிவனை வில்வ இலைகளால் துதிப்பவர்கள் சிவலோகத்திற்கும், ராமநவமி அன்று விரதம் இருப்பவர்கள் விஷ்ணு லோகத்திற்கும், கிருஷ்ணன் கோபியர்களுடன் விளையாடுவது போல் வடிவம் அமைத்து (ரஸமண்டல) அதனைக் கார்த்திகை மாதம் பௌர்ணமி அன்று வணங்கி வந்தால் கோலோகாவில் இடம் பெறலாம். சுக்கில பட்சம் பதினோராம் நாள் ஏகாதசி விரதம் இருப்போர் வைகுந்தலோகம் அடைவர். பதினான்காம் நாள் சாவித்திரியை ஜேஷ்ட மாதத்தில் விரதம் இருந்து அனுஷ்டிப்போர் பிரம்ம லோகமும், மகா மாதம் பஞ்சமி திதி அன்று சரஸ்வதியை வழிபடுவோர் வைகுந்த லோகம் அடைவர்.

அஸ்வமேத யாகம் செய்பவர்கள் இந்திரபதவியில் பாதிப் பங்கினைப் பெற்று, ஒரு குதிரையின் மேல் இருக்கும் ரோமம் விழும் வரை அரசாளலாம். ராஜசூய வேள்வி அசுவமேத யாகத்தைப் போன்று நான்கு மடங்கு சிறப்புப் பெற்றது. இவை அனைத்தையும் விட மிகச் சிறப்புப் பெற்றது விஷ்ணு யாகம். ஓராயிரம் ராஜசூய வேள்வி செய்வதற்கு இணையாகப் பேசப்படும் ஒருமுறை விஷ்ணு யாகம் செய்வது. இவற்றை அடுத்து, சாவித்திரி தேவிக்கு நரகங்கள் பற்றிய விளக்கங்களை யமன் கூறினான்.

**லட்சுமி**

கிருஷ்ணனின் இடப்பாகத்தில் இருந்து ஒரு தேவதை தோன்றினாள். அவள் தானே இரண்டாகப் பிளந்து, லட்சுமி யாகவும், ராதிகா ஆகவும் ஆனாள். ஆடனன் இடப்புறத்தில் இருந்து நான்கு கைகளுடன் நாராயணனும், வலப்புறத்தில் இருந்து கிருஷ்ணனும் தோன்றினர். ராதிகாவை மணந்து கிருஷ்ணன் கோலோகமும், லட்சுமியை மணந்து விஷ்ணு வைகுந்த லோகமும் சென்றனர்.

லட்சுமியை வைகுந்தத்தில் சொர்க்கலட்சுமி என்றும், இல்லங்களில் கிருகலட்சுமி என்றும், அரசிகளில் ராஜலட்சுமி என்றும் அழைக்கிறார்கள். பிரம்மா, சிவன், விஷ்ணு இவர்களால் வணங்கப்பட்டவள் லட்சுமி.

ஒருநாள் இந்திரன் ஐராவதத்தில் வரும்பொழுது துர்வாச முனிவர் விஷ்ணுவிடம் நேரடியாகப் பெற்ற தெய்வீக சக்தி வாய்ந்த பாரிஜாத மலரை இந்திரனுக்குக் கொடுத்தார். எல்லை மீறிக் குடித்திருந்த இந்திரன் அம்மலரை வாங்கி தான் ஏறி இருந்த ஐராவதம் யானைமேல் வைத்தான். மலரின் அருமை அறியாமல் அதனை அலட்சியப்படுத்திய இந்திரனைப் பார்த்து, லட்சுமி உன்னை விட்டு நீங்கி விடுவாள். நீ ஏறியுள்ள ஐராவதத்தின் தலை வெட்டப்பட்டு, சிவனுக்கும் பார்வதிக்கும் பிறந்த கணேசருக்குப் பொருத்தப்படும் என்று சாபம் கொடுத்தார். மிக்க துயரம் அடைந்த இந்திரன் எல்லா வற்றையும் இழந்த நிலையில் பிரம்மாவிடம் சென்று முறையிட, அவர் நானொன்றும் செய்ய முடியாது. விஷ்ணுவிடம் போகலாம் என்று இந்திரனை அழைத்துக் கொண்டு விஷ்ணுவிடம் போனார். விஷ்ணு இந்திரனைப் பார்த்து, நீ இழந்த அத்தனையும் லட்சுமி உள்பட உன்னிடம் வருமாறு செய்கிறேன் என்று கூறிச் சென்றார்.

லட்சுமியைத் திருப்திப்படுத்த தானதருமங்கள் செய்ய வேண்டும். வீட்டில் துளசிச் செடியை வளர்க்க வேண்டும். சங்கு, சாலக்கிரமம் ஆகியவற்றை வைத்து வழிபட வேண்டும். இதனை அடுத்து பிரம்ம வைவர்த்த புராணத்தில் பாற்கடல் கடைந்த கதை பல முரண்பாடுகளுடன் பேசப்படுகிறது. இந்தக் கதை வேறு பல புராணங்களில் காணப்பட்டாலும் இந்தப் புராணத்தில் பல மாற்றங்களுடன் காணப்படுகிறது. முற் பகுதியில் ஐராவதம் கதையைச் சொல்லிவிட்டு, பிற்பகுதியில் ஐராவதம் பாற்கடலில் இருந்து விழுவதாகக் கூறுவது குழப்பத்தை விளைவிப்பதாகும்.

*(அரசன் சுராதாவும், வைசியன் சமாதியும் தங்கள் குறைகளை முனிவர் மேதாவிடம் கூற அவர் துர்க்கையை வழிபடுமாறு கூறுகிறார். இக்கதை ஏற்கெனவே மார்க்கண்டேய புராணத்தில் கூறப்பட்டுள்ளது என்பதை அறியவும். மார்க்கண்டேய புராணப்படி மேதா முனிவர் துர்க்காசப்தசதி என்ற எழுநூறு மந்திரங்களால் சண்டி ஹோமம் செய்வித்தார் என்பதும், அந்த ஹோமத்தின் இறுதியில் துர்க்கையின் அருளால் சுராதாவிற்கு அவனுடைய ராஜ்ஜியம் திரும்பக் கிடைத்தது என்பதும் அம்பிகையின் அருளில் தோய்ந்த அவன் ராஜ்ஜியம் வேண்டாம் என்று சொல்லிவிட்டுச் சென்றான் என்பதும் இப்புராணத்தில் இடம் பெறவில்லை.)*

பிரபஞ்ச உற்பத்தியின் துவக்கத்தில் தேவர்கள் பிரம்ம லோகம் சென்று தங்கள் உணவை உண்ண ஆரம்பித்தனர். பிரம்மனின் வேண்டுகோளுக்கிணங்க, விஷ்ணு யாகத்தின் பலிப்பொருளாகத் தன்னை மாற்றிக் கொண்டு தீயில் புகுந்தார். அந்த யாகத்திற்குப் படைக்கப்பட்ட பொருள்கள் தேவர்களுக்குக் கொடுக்கப்பட அவை தேவர்களைச் சென்று அடையவில்லை. பிரம்மன் பிரகருதியை வேண்டியவுடன், பிரகருதி, சுவாஹா என்ற பெயருடன் நெருப்பின் சக்தியாக

மாறினாள். அக்னியும் சுவாஹாவும் மணந்து கொண்டு மூன்று பிள்ளைகளைப் பெற்றனர். அக்னி வளர்க்கும் பொழுது, சுவாஹா என்ற சொல்லைச் சொல்லவில்லையெனில், அம்மந்திரம் விஷம் இல்லாத பாம்பு போலவும், கல்வி அறிவில்லாத மனிதனைப் போலவும், பழங்கள் இல்லாத மரம் போலவும் கருதப்படும்.

பிரம்மன், பிரபஞ்ச உற்பத்தியில் பித்ரி எனப்படும் முன்னோர்களை உருவாக்கினார். முன்னோர்களுக்குச் சிரார்த்தம் செய்யும் பொழுது அது அவர்களைச் சென்று சேரவில்லை. அவர்கள் பிரம்மனிடம் முறையிட்டனர். பிரம்மனும் ஸ்வதா என்ற தேவதையை உருவாக்கி, சிரார்த்த மந்திரங்கள் கூறும்பொழுது ஸ்வதா என்ற சொல்லையும் சேர்த்துச் சொல்ல வேண்டும் என்றும் கூறினார். அவ்வாறு கூறினால் மட்டுமே முன்னோர்களுக்கு செய்யப்படும் படைப்புக்கள் அவர்களைச் சென்றடையும் என்றும் கூறினார்.

தட்சிணா என்பவள் யக்ஞ தேவனின் மனைவி ஆவாள். யாகம் நடத்துபவர்கள் அதற்குண்டான தட்சிணையை உடனடியாக செய்விப்பவர்களிடம் கொடுத்துவிட வேண்டும். இல்லையெனில் அந்த யாகத்தினால் ஏற்படும் பலன்கள் பயனற்றுப் போய்விடும்.

பிரகருதி தேவதையின் ஆறில் ஒரு பங்கு உடம்பினைப் பெற்ற சஷ்டி, கார்த்திகேயனின் மனைவி ஆவாள். தேவசேனா என்ற பெயருடன் வழங்கப்படும் இவள் பிரம்மாவின் இச்சா மாத்திர சக்தியினின்று வந்தவள். குழந்தைகளுக்கு தெய்வமாக விளங்குபவள். சுயம்பு மனுவின் மகனாகிய பிரியவரதா, பெரிய யாகம் செய்து ஒரு மகனைப் பெற்றான். இறந்தே பிறந்த அக்குழந்தையை எரித்துவிட்டு, தானும் உயிர் விட நினைத்தான். சஷ்டி தேவதை அக்குழந்தைக்கு உயிர்

கொடுத்தாள். ஒவ்வொரு மாதமும் ஆறாம் நாள், சஷ்டியைத் தொழ வேண்டும். குழந்தை பிறந்த ஆறு, இருபத்தியோரு நாட்களில், சஷ்டி தேவதைக்கு மலர், பழங்கள் முதலியன வைத்துப் பூஜை செய்ய வேண்டும்.

நீலநிறக் கண்களை உடைய மங்கல சண்டி, துர்க்கையின் மற்றொரு வடிவினள். இத்தேவதை பெண்களுக்கு ஆரோக்கியமான உடலையும், செல்வத்தையும் தருபவள் என்பதால் மங்கல சண்டி எனும் பெயர் பெற்றாள். திருப்புராசுர அசுரனைக் கொல்வதற்குச் சிவன் கஷ்டப்பட்ட பொழுது, மங்கல சண்டி தன் சக்தியினைக் கொடுத்து வெற்றி பெறச் செய்தாள். முதன் முதலில் சிவனாலும், அடுத்து செவ்வாய்க் கோளினாலும், மூன்றாவது மனு வழியில் வந்த மங்கல அரசனாலும், நான்காவது பெண்களினால் செவ்வாய்க் கிழமைகளிலும் வணங்கப்பட்டாள்.

காசிப முனிவரின் இச்சாமாத்திர உற்பத்தியாக உண்டாக்கப்பட்ட மானச தேவதை மிக அழகான நிறம் உடையவள் என்பதால் ஜகத்கௌரி என்று அழைக்கப்பட்டாள். இவள் சிவனைக் கைலாயத்தில் வணங்கி இறந்தவர்களை உயிருடன் எழுப்பும் கலையினைக் கற்றாள். கிருஷ்ணனைப் புஷ்கராவில் வணங்கி, என்றென்றும் எல்லோராலும் வணங்கப்படுவாய் என்ற ஆசியும் பெற்றாள். ஜரத்கரு உறங்கிக் கொண்டிருந்தான். வெகு நேரமாகியும் அவன் எழுந்திருக்க வில்லை. இதனால் மாலையில் அவன் பூஜை செய்வது தடைப்பட்டுவிடும் என்பதாலும், அவ்வாறு பூஜை செய்யாமல் இருப்பது பெரும் பாவத்தைச் சேர்க்கும் என்ற காரணத்தி னாலும் அவனை எழுப்பினாள். உறக்கம் கலைந்து எழுந்த ஜரத்கரு கடுங்கோபம் கொண்டு, அவள் நரகத்திற்குச் செல்வாள் எனக் கூறிவிட்டு, அவளைப் பிரிந்து சென்று தவம் செய்யலானான். சில காலங்களுக்குப் பிறகு சுஸ்திகா,

ஜரதகருவிற்கும், மனசாவிற்கும் மகனாகத் தோன்றியவன் பெரியவனாக வளர்ந்த பின் சிவனை வேண்டி நீண்ட காலம் தவம் செய்தான். மனசாவும், காசிப முனிவரின் ஆசிரமம் சென்று தங்கி இருந்தாள்.

பரிட்சித்து மன்னன் தட்சகன் என்ற பாம்பினால் கடிக்கப் பட்டு மாண்டான். இதனால் கோபம் கொண்ட அவன் மகன் ஜனமேஜெயன், பாம்புகளை பலியிட்டு யாகம் செய்தான். இதனால் கலக்கமுற்ற தட்சகன் இந்திரனிடம் சென்று காப்பாற்றும்படி கேட்க, இந்திரன் மனசாவிடம் வேண்டிக் கொண்டான். தன் மகன் அஸ்திகாவிடம் கூறி தட்சகனைக் காப்பாற்றும்படிக் கூறினான். இதற்கு நன்றி தெரிவித்த இந்திரன், மனசாவை மந்தாகினி நதியில் குளிப்பாட்டி, நவரத்தினங்கள் பதித்த அரியணையில் அமரச் செய்தான். மனசாவைத் துதிப்பவர்கள், நாகங்களுக்கு பயப்படத் தேவையில்லை.

பிருந்தாவனத்தில் இருந்த கிருஷ்ணன், திடீரென்று பாலை அருந்த வேண்டும் என்று நினைத்து, தன் இடப்பக்கத்தினின்று சுரபி என்னும் பசுவினைப் படைத்தான். அப்பசுவினின்று பாலைக் கறந்து, அப்பாலைக் குடித்தான் கிருஷ்ணன். அப்பாத்திரத்தில் மீதமிருந்த பால் ஓர் ஆற்றின் அளவு அதிகமாகிப் பெருகியது. சரோவரா என்ற பெயருடைய பாலாறாக ஓடியது. சுரபியின் மயிர்க்கால்களில் இருந்து காமதேனு பசுக்கள் உண்டாயின.

வராக கல்பத்தில், விஷ்ணு மூவுலகத்திலும் பால் இல்லாமல் போகவே, இந்திரன் சுரபியை வேண்டிப் பாலினைப் பெற்றான். கார்த்திகை மாதத்தில் தீபாவளியை அடுத்த நாள் சுரபி என்னும் பசுவைத் தொழுது வணங்குவதற்குச் சிறந்த நாள்.

**கணேசன்**

கணேசனைப் பற்றி அறிய விரும்பிய நாரத முனிவருக்கு, நாராயண முனிவர் கூறத் தொடங்கினார். தேவர்களின் சக்திகள் அனைத்தும் ஒன்று திரண்டு தட்சன் மகள் சதியாகப் பிறந்தார். தட்சன் யாகத்தில் சிவனை அவமானம் செய்த காரணத்தினால், தீக்குள் பாய்ந்த சதி இமவானுக்கும், மேனகைக்கும் பார்வதி என்ற பெயருடன் மகளாகத் தோன்றினார். புண்யக விரதம் என்ற விரதம் இருந்து, கிருஷ்ணனையும் வணங்கியதால், அக்கிருஷ்ணனே பார்வதிக்குள் குழந்தையாகத் தோன்றினார். குழந்தைக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்யும் பொழுது, சூரியனின் புத்திரனாகிய சனி அங்கு தோன்றி, தாய், குழந்தை இருவரையும் பாராது, தன் கண்களைத் தாழ்த்தியவாறே நின்றார். அவரைப் பார்த்த பார்வதி தேவி, “நீ ஏன் என் குழந்தையைப் பார்க்கவில்லை?” என்று கேட்க, சனியும் “என் மீது ஒரு சாபம் உள்ளது. நான் எதை நேரிடையாகப் பார்க்க நேரிட்டாலும், அது அழிந்துவிடும். நான் என் மனைவியை உதாசீனப்படுத்தியதால் எனக்கு இச்சாபம் ஏற்பட்டது” என்று கூறினான். இச்செய்தியை சாதாரணமாக எடுத்துக் கொண்ட பார்வதி, தன் மகனைக் காணும்படி சனியை அழைக்க, ஆவலினால் சனி அங்கு சென்று தன் கடைக்கண்ணால் குழந்தையை நோக்கினான். சாபத்தின் காரணமாக, அவன் பார்த்தவுடன் குழந்தையின் தலை தனியே வந்து பார்வதியின் மடியில் விழுந்தது. இதைக் கண்ட பார்வதி மயக்கமுற்றார். கருட வாகனத்தில் சென்ற கிருஷ்ணன், ஐராவத யானையின் தலையை வெட்டி, குழந்தைக்குப் பொருத்தி உயிர் கொடுத்தார்.

இருப்பினும், கோபம் கொண்டிருந்த பார்வதி சனிக்கு, அவன் அங்கஹீனனாக இருக்கும்படி சாபம் கொடுத்தாள். சுற்றி இருந்தோர் அவளைச் சமாதானம் செய்தனர்.

கணேசனுக்கு பிரம்மா கமண்டலத்தினையும், பிருத்வி ஒரு எலியையும் பரிசாகக் கொடுத்தார். கணேசனுக்கு கஜானனன், லம்போதரன், ஏகதந்தன், விக்னேஸ்வரன் எனப் பல பெயர்கள் உண்டு. தடைகளை நீக்குபவன் என்பதால் விக்னேஸ்வரன் என்ற பெயர் பெற்றார் கணேசன்.

நாராயணன் கூறத் துவங்கினார்: மாலி, சுமாலி என்ற இரு அரக்கர்கள் சிவனுடைய பக்தர்களாய் இருந்தனர். இவர்களை விரும்பாத சூரியதேவன் அவர்களைக் கொல்ல நினைத்துப் போர் செய்தான். அரக்கர்கள் சிவபெருமானை வேண்ட, அவர் தோன்றி, தன்னுடைய சூலாயுதத்தால் சூரியனைக் கொன்றுவிடவும், இச்செய்கையினால் உலகம் அனைத்தும் இருளில் மூழ்கியது. காசிப முனிவரும் தன் மகனுக்கு ஏற்பட்ட கதியை நினைத்துச் சிவபெருமானுக்கு சாபமிட்டார். "என் மகன் நெஞ்சை உன் சூலாயுதம் துளைத்தது போல், உன் மகனுடைய தலையும் ஒருநாள் வெட்டப்படும்" என்று சாபமிட்டார்.

இதனைக் கேட்ட நாரதர், விஷ்ணு கணேசனுக்கு ஐராவதம் என்னும் யானையின் தலையைப் பொருத்தினார் அல்லவா? அப்படி இருக்க கணேசனுக்கு ஒரே ஒரு தந்தம் மட்டும் இருப்பது எப்படி என்று வினவ, நாராயண முனிவரும் கூறத் துவங்கினார்.

ஜமதக்கினி முனிவரின் மகனாகிய பரசுராமன் வெளியே சென்றிருக்கும் பொழுது, கார்த்தவீரியார்ச்சுனன் என்னும் க்ஷத்ரிய அரசனால் ஜமதக்கினி முனிவர் கொல்லப்பட்டார். இதனால் கடுங்கோபம் கொண்ட பரசுராமன் 'இருபத்தியோரு தலைமுறை க்ஷத்ரியர்கள் இவ்வுலகில் இல்லாமல் செய்வேன்' எனச் சபதமெடுத்து க்ஷத்ரியர்களைக் கொன்றான். சிவ பெருமானையே தன் குருவாகக் கொண்ட பரசுராமன் தன்

சபதம் முடிந்தபின்பு, சிவபெருமானைக் காணச் சென்றான். வாயிலில் நின்றிருந்த கணேசன், சிவனும், பார்வதியும் ஓய்வெடுத்துக் கொண்டிருப்பதால், அவர்களை இப்பொழுது பார்க்க இயலாது என்றும் கூறினார். பொறுமை இல்லாத பரசுராமன் கணேசனைப் பார்த்து, "நான் இப்பொழுது உள்ளே செல்லப் போகிறேன். நீ குழந்தை. உன்னால் முடிந்தால் என்னைத் தடுத்துப் பார்" என்று கூறிக் கணேசனைத் தள்ளிக் கொண்டு உள்ளே செல்ல முயன்றான். கோபம் கொண்ட கணேசன் தன் தும்பிக்கையை நீட்டி பரசுராமனைத் தூக்கிக் கடலில் எறிந்து, பின் மீண்டும் அவரை எடுத்து, பூமியில் தூக்கி எறிந்தார். பரசுராமன் சிவனால் தனக்குக் கொடுக்கப்பட்ட பரசு என்னும் ஆயுதத்தை எடுத்து கணேசனை நோக்கி வீச, அவ்வாயுதம் கணேசனின் ஒரு கொம்பினை உடைத்தது.

நடந்த கதைகளை அறிந்த சிவனும், பார்வதியும் கணேசனை அருகில் அழைத்து, பரசுராமனைப் பார்த்து பார்வதி தேவி பின்வருமாறு கூறினார்: "பரசுராமா! உன்னைப் போல் பல பரசுராமன்களை அழிக்க இவனால் முடியும். ஆனால் தன்னை மிகுந்த கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கும் கணேசன் ஒரு சிறு பூச்சிக்குக் கூட துன்பம் செய்யமாட்டான்" என்று கூறினார். பரசுராமனும் கணேசனை மலர்களால் தொழுது வணங்கினார். கணேசனுக்குத் துளசியைப் போட்டு வணங்குதல் கூடாது என்று கூறிய நாராயண முனிவர் அதற்கான காரணத்தையும் நாரதருக்கு விளக்கினார்.

ஒருநாள் கங்கைக் கரையினில் கணேசன் தவம் செய்து வந்தார். அங்கு வந்த துளசி, கணேசனைப் பார்த்து விருப்பம் கொண்டு தான் தர்மதுவஜா அரசனின் மகள் என்றும், தன்னைக் கணேசன் திருமணம் செய்து கொள்ள வேண்டும்

என்றும் வற்புறுத்தினாள். கணேசனும், திருமண வாழ்க்கை மகிழ்ச்சி அற்றதாகவே இருக்கிறது என்பதால் தான் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று கூறினார். கோபம் கொண்ட துளசி, 'கணேசன் பிரம்மசாரியாக இருக்க முடியாது' என்று சாபமிட்டாள். கணேசனும், துளசியை 'ஒரு அரக்கனிடம் சிக்கிப் பிறகு செடியாக இருப்பாய்' என்று சாபமிட்டார். துளசி அவரிடம் மன்னிக்கும்படி கேட்க, கணேசனும் மனமிரங்கி, எல்லா மலர்களிலும் துளசி சிறப்பு வாய்ந்த இடத்தைப் பெறும் என்றும், விஷ்ணுவுக்கு மிக உகந்த மலராகும் என்றும் கூறி, தனக்குத் துளசியை யாரும் படைக்கக் கூடாது என்றும் கூறிவிட்டார்.

**கிருஷ்ணன், ராதை**

பிரம்ம வைவர்த்த புராணத்தின் இறுதிப் பகுதி கிருஷ்ண ஜென்ம காண்டம் என்ற பெயருடன் கிருஷ்ணனின் குழந்தைப் பருவம், லீலைகள் பற்றிக் கூறுகிறது. (ஏற்கெனவே இவை பற்றி விஷ்ணுபுராணத்திலும், பிரம்ம புராணத்திலும் கூறப் பட்டிருப்பதால், அங்கு கூறப்படாத பகுதிகள் மட்டும் இங்கு இடம் பெறுகின்றன.)

கோலோகாவில் ஸ்ரீதமாவினால் (மகளாகப் பிறப்பாய் என) சபிக்கப்பட்ட ராதை, கிருஷ்ணனைப் பிரிந்து இருக்க நேரிடுமே என நினைத்து வருந்தினாள். அச்சமயம் பூமியில் கொடியவர்கள் பெருகி, அவர்கள் தரும் தொல்லையில் உலகம் சிக்கித் தவிக்கிறது. ராதை கிருஷ்ணனிடம், பூவுலகில் அவன் பிறந்து, இக்கொடுமையினின்று மக்களைக் காக்க வேண்டும் என்று வேண்ட, கிருஷ்ணனும் அதனை ஒப்புக் கொண்டான். ராதையும், மற்றும் கோபியர்களும் கிருஷ்ணனைப் போலவே இப்பூவுலகில் பிறப்பெடுத்தனர். கோகுலத்தில் விராஜ மன்னன் மகளாகத் தோன்றினாள் ராதை.

*(இதை அடுத்துக் கொடுக்கப்பட்டுள்ள வசுதேவர், தேவகி கதை, கிருஷ்ணன் பிறப்பு, பூதனை என்னும் அரக்கியின் கதை ஆகியவை முன்பே கொடுக்கப்பட்டுள்ளன.)*

**நலகுபரன் கதை**

ஒருநாள் யசோதை குளித்துவிட்டு வரும் பொழுது, தன் வீட்டில் வைத்திருந்த பால், தயிர் அனைத்தும் தீர்ந்து போயிருந்ததையும், வெண்ணெய் வைத்திருந்த மட்பாண்டம் உடைந்து போயிருந்ததையும் கண்டாள். ஒவ்வொரு நாளும் இதே நிகழ்ச்சி தொடர்ந்து நடந்தது. கோபம் கொண்ட யசோதை இதைச் செய்வது யார் எனக் கண்டுபிடித்து, தண்டனை தர விரும்பினாள். முடிவில் கிருஷ்ணனே இதைச் செய்திருப்பதை அறிந்து அவனைப் பிடிக்க முயன்றாள். தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் பிடியில் அகப்படாத கிருஷ்ணன், தன் தாய் யசோதையைக் கண்டு மனமிரங்கித் தானே வலிய வந்து அவளிடம் மாட்டிக்கொண்டான். யசோதை கிருஷ்ணனை நையப் புடைத்து, ஒரு துணியினால் அவனை மரத்துடன் சேர்த்துக் கட்டி விட்டு, தன் வேலை களைக் கவனிக்கச் சென்றாள். அந்த மிக உயரமான அருச்சுனா மரம், கிருஷ்ணன் தொட்டவுடன் பெரும் சப்தத்தை எழுப்பிக் கொண்டு கீழே விழுந்தது. அதிலிருந்து ஆபரணங்கள் அணிந்த அழகிய உருவம் வெளிவந்து கிருஷ்ணனை வணங்கி நின்றது. தேவல முனிவரை மதியாமல், அவமானப்படுத்தியதால் அவரிட்ட சாபத்தால் மரமாகி நின்றவன் நலகுபரன் என்பவன். இவன் குபேரனின் மகனாவான். முனிவர் கூறியபடி கிருஷ்ணனால் சாப விமோசனம் பெற்று, குபேரன் இருக்கும் இடம் சென்றான்.

*(இதை அடுத்து கிருஷ்ணனின் லீலைகளில் இடம்பெறும் காளிங்கன் என்னும் பாம்பின் கதை, கோவர்த்தனமலை,*

*தேனுகாசுரன் கதை முதலியவை முன்பே கொடுக்கப் பட்டுள்ளன.)*

## துர்வாசர் கதை

நாராயண முனிவர், நாரதரிடம் துர்வாச முனிவர் கதையைக் கூற ஆரம்பித்தார்:

கந்தமாதனம் என்னும் மலையில் துர்வாசர் தியானம் செய்து கொண்டிருந்தார். வலிச்சக்கரவர்த்தியின் மகனாகிய சகசிகா, அப்சரஸ் திலோத்தமை ஆகியோரால் தவம் கலைந்த துர்வாசர் அவர்களுக்குச் சாபம் கொடுத்துவிட்டு, தன் தவத்தையும் அத்துடன் விட்டுவிட்டு அங்குமிங்கும் உலவி வந்தார். அச்சமயம் ஔர்வ முனிவரின் மகளாகிய கந்தலி என்பவளைக் கண்டு மணம் புரிந்து கொள்ள விரும்பினார். ஔர்வ முனிவரும், துர்வாசரிடம் தன் மகள் மிகவும் சண்டை போடும் குணமுடையவள் என்றும், மனம் வருந்தும் படியான சொற்களைக் கூறுபவள் என்றும் கூறினார். துர்வாசரும், அவள் கூறும் நூறு கடுமையான சொற்களைப் பொறுத்துக் கொள்வதாகவும், அதற்கு மேல் கூறினால் அதற்குண்டான பலனை அனுபவித்தே தீர வேண்டும் என்றும் கூறினார்.

துர்வாசரும், ஔர்வ முனிவரும் கந்தலிக்குப் பல புத்திமதிகள் கூறியும், அவள் எதனையும் சட்டை செய்ய வில்லை. ஒருநாள், கந்தலியும் நூறு கடுஞ்சொற்கள் கூறி அதை துர்வாசரும் மன்னித்த பிறகு, மீண்டும் கடுமையான சொற்கள் கூறத் துவங்கினாள் கந்தலி. இதனால் கடும்கோபம் கொண்ட துர்வாசர், கரியாகும் வரை எரிய வேண்டும் எனச் சாபமிட்டார். மனைவியை இழந்த துர்வாசர் மனக்கலக்க முற்றார். சிறிய பையனாகத் தோன்றிக் கிருஷ்ணன் அவரைத்

தேற்றினான். அடுத்த பிறவியில் அவள் கந்தலி என்னும் கிழங்குச் செடியாகப் பிறந்தாள்.

### அஷ்டவக்ர முனிவர்

கிருஷ்ணனும், ராதையும் மாளய மலையின் உச்சியில் அமர்ந்திருக்கும் பொழுது அஷ்டவக்ர முனிவர் அங்கு வந்து அவர்களை வணங்கினார். கூன் விழுந்த உடலை உடையவர். அவரைப் பார்த்த ராதை பெரிதாகச் சிரிக்க ஆரம்பித்தாள். ஆனால் கிருஷ்ணன் அவளை சிரிக்கவேண்டாம் என்று கூறிவிட்டு, அவருடைய கதையைக் கூறினார்.

அஷ்டவக்ரமுனிவர் முற்பிறப்பில், தேவலா என்ற பெயருடைய பிராமணனாகப் பிறந்தான். தன்னுடைய மனைவி யுடன் நீண்ட காலம் கழித்துவிட்டு, இனிப் பெண்களுடன் தொடர்பே இல்லாமல் இருக்க நினைத்தான். ரம்பை என்னும் அப்சரஸ், தேவலாவை மணக்க விரும்பினாள். தான் எடுத்த முடிவிலிருந்து மாறுபட விரும்பாத தேவலா, ரம்பை கேட்ட வுடன் மறுத்துவிட்டான். இதைக் கேட்ட ரம்பை, 'உனக்குக் கோணல் புத்தி உள்ளது. அதைப் போலவே உன் உடலும் கோணலாகப் போகட்டும்' என்று சபித்தாள். அத்துடன் நீ இதுவரை சேர்த்துள்ள புண்ணியம் அனைத்தும் பலனில்லாமல் போகட்டும் என்றும் கூறினாள். மிகக் கடுமையான இச் சாபத்தைத் தாங்கமாட்டாத தேவலா தன்னை எரித்துக் கொள்ள முயற்சி செய்கையில் கிருஷ்ணன் அவனைத் தடுத்து நிறுத்தினான். அவனுடைய எட்டு எலும்புகளும் கோணலாகிப் போனதால், கிருஷ்ணன் அவனுக்கு அஷ்டவக்ரா என்று பெயரிட்டான். அவனை தியானம் செய்யும்படி கிருஷ்ணன் கூற, மாளய மலையில் அஷ்டவக்ரா முனிவர் அறுபதாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தார். கிருஷ்ணனின் அருளினால், அம்முனிவர் சாபம் தீர்ந்தது.

## பிரம்மனின் வீழ்ச்சி

பிரம்மன் அகங்காரத்தால் பீடிக்கப்பட்டிருந்த சூழ்நிலையில் இருந்து எவ்வாறு வீழ்ச்சி அடைந்தான் என்பதை கிருஷ்ணன் ராதைக்கும் சொன்னார். படைத்தலாகிய தன் தொழிலில் இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் படைக்கும் ஆற்றல் தன்னிடம் இருப்பதால் தன்னை விட உயர்ந்தவர்கள் யாரும் இல்லை என்ற அகங்காரம் பிரம்மனின் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. இந்த நிலையில் தேவ கன்னிகையான மோகினி பிரம்மன்மாட்டுக் காதல் கொண்டு அவனை மணக்க வேண்டும் என்று பெரிதும் விரும்பினாள். ஆனால் பிரம்மன் அகங்காரம் காரணமாக மோகினியின் காதலை ஏற்க மறுத்து உதறிவிட்டார். தன்னுடைய உண்மையான காதல் உதாசீனப்படுத்தப்பட்டதைப் பொறுக்காத மோகினி, "உலகில் யாரும் உன்னை வணங்க மாட்டார்கள். கோவிலெடுக்க மாட்டார்கள். பிரம்மனை முன்னிலைப்படுத்திச் செய்யப்படும் சடங்குகள் இல்லா திருத்தல் பயனற்றுப் போய்விடும்" என்ற சாபத்தை மோகினி பிரம்மனுக்குத் தந்தாள். அதிர்ந்து போன பிரம்மன், இச் சாபத்தினின்று எவ்வாறு தப்பிப்பது என்று யோசித்து, விஷ்ணுவிடம் சென்று முறையிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். அப்படியே வைகுந்தம் சென்று விஷ்ணுவின் தரிசனத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தான். அப்படிக் காத்துக் கொண்டிருக்கும் பொழுது அவன் கண்ட காட்சி அவனுக்குப் பெரிய அதிர்ச்சியைத் தந்தது. திசை-முகன் என்ற பெயருக்கு ஏற்பத் தனக்கு நான்கு தலை இருப்பதில் பெருமையும், அகங்காரமும் கொண்டிருந்த பிரம்மன் அங்கே கண்ட காட்சி அவனுடைய மூச்சையே நிறுத்திவிடும் போல் இருந்தது. பத்துத் தலைகள் உடைய பிரம்மன், நூறு தலைகளுடைய பிரம்மன், ஆயிரம் தலைகள் உடைய பிரம்மன்

என்று பல பிரம்மன்கள் விஷ்ணுவின் தரிசனத்திற்காக அங்கே கூடி இருந்தனர். இவனுடைய முறை வந்ததும் அதிர்ந்துபோன பிரம்மன், 'இவர்களெல்லாம் யார்' என்று விஷ்ணுவையே கேட்டான். விஷ்ணு சாவதானமாக விடை கூறினார்: "பிரம்மனே! இங்கே காணப்படுகின்ற சொர்க்க, மத்திய, பாதாளம் என்பவற்றை நீ படைத்தாய். ஆனால் இந்தப் பெரிய அண்டத்தில் இதைப் போன்றனவும், இதைவிட மிகப் பெரியனவும் ஆகிய பல உலகங்கள் பல்வேறு இடங்களில் உள்ளன. இந்தச் சிறிய உலகைப் படைத்த உனக்கு நான்கு தலைகள் போதுமானது. இதைவிடப் பெரிய உலகம், மிகப் பெரிய உலகம், மாபெரும் உலகம் ஆகிய உலகங்களைப் படைத்த பிரம்மன்களுக்கு அந்தப் படைப்பின் பெருமைக்கு ஏற்ப பத்து, நூறு, ஆயிரம் என்ற தலைகள் உள்ளன. பிரம்மன்கள் என்று கணக்கிட்டுப் பார்த்தால் நீதான் கடைசியில் நிற்கும் சிறிய பிரம்மன், உனக்குக் கீழ் வேறு பிரம்மன்கள் இல்லை ஆதலால் நீதான் கடைசியில் நிற்பவன்" என்று விஷ்ணு கூறியவுடன் பிரம்மனுடைய அகங்கார மெல்லாம் காற்றில் பறந்துவிட தன்னுடைய அறியாமையை நினைந்து வெட்கித் தலைகுனிந்து நின்றான்.

**இந்திர கர்வபங்கம்**

பிரகருதி ஆகிய பெண்ணை இந்திரன் கவனியாமல் விட்டு அவளுக்கு மனத்துயரை உண்டாக்கினான். சினம் கொண்ட பிரகருதி, 'உன்னுடைய குரு பிருகஸ்பதியாலேயே நீ உன்னுடைய பதவியை இழப்பாய்' எனச் சாபம் தந்தாள். அதற்கேற்ப ஒருநாள் அமராவதியில் இந்திரன் தன்னுடைய சிம்மாசனத்தில் அமர்ந்து, தேவமாதர்களின் ஆடல் பாடல் களில் ஈடுபட்டு இருக்கின்ற நேரத்தில் தேவகுருவாகிய பிரகஸ்பதி இந்திரனுடைய சபைக்குள் வந்தார். பதவி கர்வமும், கேளிக்கை மோகமும் கொண்ட இந்திரன் சிம்மாசனத்தை

விட்டு எழுந்திருக்காமலும், குருவுக்குச் செய்ய வேண்டிய வணக்கத்தைச் செய்யாமலும் இருந்துவிட்டான். அவனுடைய அகங்காரத்தை அடக்கக் கருதிய பிரகஸ்பதி, உன் பதவி முதலியவற்றை இழந்து அனைத்துச் செல்வங்களையும் இழந்து உழல்வாயாக என்ற சாபத்தைத் தந்தார். சாபமிடப்பட்டவுடன் இந்திரன் தலைநகராகிய அமராவதி தன் அழகை இழந்தது. அங்குள்ள கட்டடங்கள் இடிந்து விழலாயின. இந்தப் பரிதாபமான காட்சியைப் பார்த்த இந்திரன் தேவதச்சனாகிய விஸ்வகர்மாவை அழைத்து இழந்தவற்றைப் புதுப்பித்து மறுபடியும் அமராவதியைப் பழைய நிலைக்குக் கொண்டு வருமாறு ஆணையிட்டான். விஸ்வகர்மா எவ்வளவு முயன்று புதுப்பித்தாலும் இந்திரன் விஸ்வகர்மாவின் வேலையில் குறைசொல்லிக் கொண்டே வந்தான். எப்படிச் செய்தாலும் இந்திரன் திருப்தி அடைவதாக இல்லை. இந்திரனை விட்டு விட்டுப் போய்விட வேண்டும் என்று விஸ்வகர்மா பலமுறை முயன்றும் இந்திரன் அவனை விடுவதாயில்லை. இறுதியாக மனம் நொந்துபோன விஸ்வகர்மா பிரம்மனிடம் சென்று முறையிட்டான். பிரம்மா விஸ்வகர்மாவை அழைத்துக் கொண்டு விஷ்ணுவிடம் சென்றார். விஸ்வகர்மா நடந்தவை அனைத்தையும் சொல்லித் தனக்கு விடுதலை தருமாறு விஷ்ணுவிடம் வேண்டினான்.

இவற்றையெல்லாம் கேட்டறிந்த விஷ்ணு ஒரு பிராமணச் சிறுவன் வடிவம் கொண்டு, இந்திரனிடம், 'ஓ இந்திரனே! எத்தனையோ அமராவதிகளையும், இந்திரர் களையும் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் உன்னுடைய இந்த அமராவதி போல அழகான ஒரு நகரத்தையும், உன்னைப் போன்ற ஒரு இந்திரனையும் பார்த்ததே இல்லை!" என்று சிறுவன் கூறினான். சிறுவனின் வார்த்தைகளைக் கேட்டு அதிர்ச்சி அடைந்த இந்திரன், மிகவும் ஏளனமாக "பிராமணச்

சிறுவனே! நீயோ சிறுவன். எத்தனையோ இந்திரர்களையும் அமராவதிகளையும் பார்த்திருக்கிறேன் என்றும் சொன்னாயே. அப்படி எத்தனை இந்திரர்களைப் பார்த்தாய்?" என்று கேட்டான். சிறுவன் சிரித்துக் கொண்டே, 'இந்திரனே, இந்தச் சிறிய பூமிக்கு மேல் உள்ள தேவலோகத்தில் நீ இந்திரன். ஆனால் இந்தப் பெரிய அண்டத்தில் இதுபோன்ற எத்தனையோ தேவலோகங்கள் உள்ளன. ஒவ்வொரு தேவலோகத்திலும் ஓர் அமராவதியும், ஓர் இந்திரனும் உள்ளனர். இந்த இந்திரர்களைக் கணக்கெடுத்தால் சமுத்திரத்தில் உள்ள மணலினும் பலராவர். உன்னுடைய விஸ்வகர்மா படைத்த இந்த அமராவதி அந்த அமராவதி களைவிடச் சிறியதாயினும் மிக்க அழகுடன் விளங்குகிறது. இதனைச் சபித்த விஸ்வகர்மா மதிக்கப்பட வேண்டியவன்' என்று சிறுவன் கூறியவுடன் வியப்புத் தாங்காத இந்திரன், 'சிறுவனே, எத்தனை இந்திரர்களை நீ பார்த்திருக்கிறாய்?' என்றான். அப்பொழுது சிறுவனின் பாதத்தின் பக்கத்தில் எறும்புகள் சாரைசாரையாகப் போய்க்கொண்டிருந்தன. சிறுவன், 'இந்திரனே! இந்த எறும்புகளைப் பார். இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலத்தில் இந்திரர்களாக இருந்தவர்களே ஆவர். ஓர் இந்திரனுடைய பதவிக் காலம் எழுபத்தியோரு யுகங்களாகும். இத்தனை யுகங்கள் வாழுகின்ற ஓர் இந்திரனைப் போல இருபத்தி எட்டு இந்திரர்கள் தோன்றி மறைகின்ற அந்த நீண்ட காலம் பிரம்மனுடைய ஒருநாள் ஆகும்.'

சிறுவனின் இந்த வார்த்தைகளைக் கேட்ட இந்திரன், அண்டத்தின் அமைப்பில் தானும், தனது இந்திரப் பதமும் மலையளவு பெரியது என்று நினைத்திருந்த இந்திரன், கடுகைவிடச் சிறிய அற்பமான ஒருவன் என்பதை உணர்ந்து வெட்கித் தலை குனிந்தான். உடனே விஸ்வகர்மாவை

அழைத்து அவன் போகலாம் என உத்தரவு கொடுத்து விட்டான்.

### அக்னியின் கர்வபங்கம்

ஒருமுறை அஷ்டதிக்குப் பாலர்களில் ஒருவனாகிய அக்னி ஏதோ காரணத்தால் சினம் கொண்டு மூன்று உலகத்தையும் எரித்துச் சாம்பலாக்குகிறேன் என்று கூளுரைத்து, பனை மரத்தை விட உயரமாகத் தன்னுடைய சுடர்களை நீட்டி அனைத்தையும் எரிக்கப் பார்த்தான். அப்பொழுது ஒரு குழந்தை வடிவாக அங்கே வந்த விஷ்ணு, ஒரு சிறிய துரும்பை எடுத்து அக்னிதேவனின் முன்னர் போட்டு, எங்கே இதை எரி பார்க்கலாம் என்றார். சினம் கொண்ட அக்னி அக் குழந்தையையும், துரும்பையும் ஒரே சமயத்தில் எரிக்க முயன்றான். குழந்தையின் தலையில் உள்ள ஒரு முடியைக் கூட அக்னியால் ஒன்றும் செய்ய முடியவில்லை. எதிரே இருந்த துரும்பையும் ஒன்றும் செய்ய முடியவில்லை. கர்வம் அடங்கிய அக்னி தலையைத் தாழ்த்திக் கொண்டான்.

*(இதனை அடுத்து பிரம்ம வைவர்த்த புராணம் பார்வதி, சந்திரன், சூரியன், துர்வாசர் முதலிய பலருடைய கர்வ பங்கங்களை வரிசைப்படுத்திச் சொல்லிக் கொண்டே போகிறது. அடுத்து இராமாயணத்தையும், கம்ஸவதத்தையும் பேசுகிறது.)*

### ராதையும், கிருஷ்ணனும் சேர்ந்த கதை

பிரிதமாவின் சாபத்தால் கிருஷ்ணனைப் பிரிந்து ஓர் இடையர் குலப் பெண்ணாக வாழ்ந்து வந்த ராதை, சித்தாஸ்ரமம் சென்று வழக்கம் போல் கணேசனை வழிபடச் சென்றாள். அங்கு சென்ற பொழுது பார்வதி அங்கே தோன்றி, 'ராதை, நீ கிருஷ்ணனுடன் சேரும் காலம் நெருங்கிவிட்டது.

விரைவில் அவனை அடைவாய்!' என்று கூறி மறைந்தார். இதனைக் கேட்ட ராதை தான் முன்பு பழகிய கோகுலத்திற்குச் சென்றாள். இப்பொழுது கிருஷ்ணன் கரிய நிறமுடையவனாக மஞ்சள் பட்டை அணிந்து, மயில் இறகைத் தலையில் அணிந்து, கையில் குழலுடன் ராதையை வந்து சந்தித்தான். கோபிகைகள் அனைவரும் ராதையையும், கிருஷ்ணனையும் வரவேற்றனர். அந்நேரம் கோலோக உலகினின்று பொன் விமானம் வர, நந்தகோபன், யசோதை, அனைத்து கோபிகைகள் ராதை, கிருஷ்ணன் ஆகிய அனைவரும் ஏறிக்கொள்ள அவ்விமானம் கோலோக உலகை அடைந்தது.

அங்கு அனைவரையும் அமரச் செய்து கிருஷ்ணன் பின்வருமாறு பேசினான். 'பிரம்மாவில் தொடங்கி, அற்பப் புல்லின் இதழ்வரை அனைத்தும் மாயை ஆகும். ஆகாயத்தில் தோன்றும் மின்னலையும், ஒரு நீர்க்குமிழியையும், நீரில் இழிந்த கோட்டினையும் போன்றது மேலே சொல்லப்பட்டவை. கிருஷ்ணன் பிறந்ததில் இருந்து, கோலோகம் செல்லும்வரை இந்த பூமியில் அவன் வாழ்ந்த காலம் கோகுலத்தில் பதினேழு ஆண்டும், மதுரா, துவாரகா இரண்டிலும் நூறு ஆண்டுகள், பிருந்தாவனத்தில் பதினான்கு ஆண்டுகள் ஆக நூற்றி இருபத்தைந்து ஆண்டுகளே ஆகும்.

*(கிருஷ்ணன் ராதையுடன் விமானம் ஏறிக் கோலோக உலகம் சென்றான் என்று கூறும் இதே பிரம்மவைவர்த்த புராணம் மற்றப் புராணங்களைப் போல கிருஷ்ணன் வேடனால் கொல்லப்பட்டதாகவும், பலராமன் உடம்பில் இருந்து பெரிய பாம்பு வெளிப்பட்டு கடலுக்குள் சென்ற தாகவும் யாதவர்கள் அனைவரும் போரிட்டுக்கொண்டு மடிந்ததாகவும் கூறுகிறது. இந்த இரண்டுவகை கிருஷ்ணன் பற்றிய கதைகளும் ஒன்றுக்கொன்று முற்றிலும் முரண் பட்டவையாய் இருக்கின்றன. பிரம்மவைவர்த்த புராணத்தின்*

*நான்காவது காண்டமாகிய கிருஷ்ணஜன்ம காண்டத்திலேயே அடுத்தடுத்து முரண்பட்ட கதைகள் பேசப்பட்டுள்ளன. இப் புராணத்தைப் பொறுத்தமட்டில் குழப்பங்கள் நிரம்ப உள்ளன என்பது அறியப்பட வேண்டும்.)*

நாராயண முனிவரிடம் இப்புராணத்தைக் கேட்ட நாரதர் "இதுவரை எங்கும் நான் கேட்டிராத பல அரிய விஷயங் களைச் சொல்லி என்னைத் தெளிவுபடுத்தி விட்டீர்கள். இனி யான், யாரிடமும் சென்று எதையும் கேட்கத் தேவையில்லை. நான் முழுத்திருப்தி அடைந்து விட்டேன். அடுத்து நான் செய்ய வேண்டியது என்ன? நேரடியாக இமயமலை சென்று தவத்தில் ஈடுபடட்டுமா?" என்று கேட்டார். நாராயண முனிவர் "இன்னும் செய்ய வேண்டிய கடமைகள் பல உள்ளன. போன ஜென்மத்தில் உனக்கிருந்த ஐம்பது மனைவியருள் ஒருத்தி, எத்தனை பிறப்பெடுத்தாலும் உன்னையே கணவனாக அடைய வேண்டும் என்று விரும்பி இப்பொழுது சிரிஞ்செய அரசனின் மகளாகப் பிறந்துள்ளார்கள். அவளை மணம் புரிந்து கொண்டு வாழ்வாயாக" என்று சொல்ல, நாரதரும் அவ்வாறே செய்தார். தாம்பத்தியத்தில் ஈடுபட்ட நாரதர் விஷ்ணுவை அடியோடு மறந்துவிட்டார். இல்வாழ்க்கையின் சுகபோகங் களிலேயே திளைத்துக் கொண்டிருந்த நாரதரை சனத்குமார முனிவர் மெள்ள அவர் மனைவியிடமிருந்து அவரைப் பிரித்து, விஷ்ணுவை தியானிக்கும் வழியில் செலுத்தினார்.

**முடிவுரை**

எல்லாப் புராணங்களையும் போல இப்புராணமும், இதைக் கேட்போர் இன்னபயன் அடைவார்கள் என்பன போன்ற வழக்கமாகச் சொல்லப்படுகின்ற சொற்களுடன் முடிவடைகின்றது.

□ □ □

# 11. இலிங்க புராணம்

## இப்புராணம் பற்றி...

*இலிங்கம் என்பது ஒரு குறியீடாகும். பிரபஞ்சத் தோற்றத்திற்கு ஒரு விதையாகும். பரப்பிரம்மம், அலிங்கம் என்று சொல்லப்படும் நாமம், ரூபம் கடந்த பொருளாகும். நிர்குணமானதாகும். முக்குணங்களின் வடிவமாகிய பிரகிருதியுடன், நிர்குணப் பிரம்மம் தொடர்பு கொள்ளும் பொழுது, வடிவமற்றதாகிய இப்பிரகிருதி வடிவுடைய இப்பிரபஞ்சமாகத் தோற்றுவிக்கப்படுகிறது. இப்பிரபஞ்சத் தோற்றத்திற்கு மூலமாகிய பிரகிருதி மகாதேவனுடன் தொடர்பு கொண்டு தோற்றுவிக்கப்படுகிறது.*

*"பரப்பிரம்மம் நிர்குணமானதாய், லிங்க வடிவையும் தாண்டி இருப்பினும், அந்தப் பரப்பிரம்மமே லிங்கம், பிரகிருதி ஆகிய அனைத்திற்கும் மூலமாய் அமைந் துள்ளது. அலிங்கம் என்பது சிவனையே குறிக்கும். அந்த அலிங்கமே சிவனோடு தொடர்புடைய லிங்கமாகி, அந்த லிங்கத்தோடு தொடர்புடையது சைவம் எனப்படும்." (லிங்கபுராணம் 1-3-1)*

*"லிங்கம் என்ற சொல்லுக்கு தன்னைத்தானே தோற்றுவித்துக்கொண்டு, தனித்து பிரபஞ்சத்தையும் தன்னுள் அடக்கி இருப்பது என்பது பொருளாகும்.*

*மகாதேவியே மாபெரும் பெண் தெய்வமாவாள். பிரகிருதியே பிரபஞ்சத்தின் விதைகளைத் தாங்கி நிற்பவள்" (லிங்கபுராணம் 1-19-16)*

*இப்புராணம் இரண்டு பெரும் பகுதிகளைக் கொண்டது. சிவ வழிபாட்டுக்காரர்களுக்கு இப்புராணம் ஒரு கையேடாகும். இப்புராணம் சிவமூர்த்தத்தை வழிபடுவதற்குரிய வழிகளைச் சொல்வதுடன் சிவனுடைய ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் என்ற ஐந்து வடிவங்களையும் உள்ளடக்கியதாகும். பிரபஞ்சங்களின் உற்பத்தி, அழிவு, மறுஉற்பத்தி ஆகிய நேரங்களில் சிவம் இந்த ஐந்து வடிவங்களில் தேவையானதை மேற்கொண்டு பிரம்மனுக்கு ஆணையிட்டுப் படைப்பைத் தொடங்குமாறு ஏவுகிறது. இது விஷ்ணுவை, சிவனுக்குக் கீழ் பணிபுரிபவராகக் காட்டுகிறது. இன்று 11,000 பாடல்களுடன் காணப்படும் மூலமாக இருந்த பழைய லிங்க புராணம் இழக்கப்பட்டதை ஈடுசெய்யும் முறையில் அமைந்துள்ளதாகும். மூல புராணத்தில் காணப்படாத பல தாந்திரீக வித்தைகள் இப்புராணத்தில் கூறப்பட்டுள்ளன.*

*பல நூல்களில் லிங்கபுராணத்தில் இருந்து எடுக்கப்பெற்றதாகக் கூறப்பட்டுள்ள மேற்கோள் பாடல்கள் இன்றுள்ள லிங்க புராணத்தில் காணப்படவில்லை. ஆதலால்தான் மூல லிங்க புராணம் இழக்கப்பெற்ற நிலையில் அந்த இடத்தை நிரப்ப இந்தப் புதிய லிங்க புராணம் இயற்றப்பட்டுள்ளது.*

இப்புராணங்களைப் படிக்கப் போகும் நாம், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரையும் வணங்கிவிட்டுத்தான் புராணங்களைப் படிக்க வேண்டும். ஒருமுறை நைமிசாரண்ய வனத்தில் முனிவர்கள் அனைவரும் கூடியிருந்தனர்.

அப்பொழுது சுதா ஜாதியைச் (சத்திரியத் தகப்பனுக்கும், பிராமணத் தாய்க்கும் பிறந்தவர்) சேர்ந்த லோமஹர்ஷனர் அங்கே வந்தார். பல தீர்த்தங்களில் நீராடிவிட்டு உலகைச் சுற்றி வரும் நாரதரும் எதிர்பாராதவிதமாக அங்கே வந்தார். முனிவர்கள் லோமஹர்ஷனரைப் பார்த்து, 'இப்புராணங்களை எல்லாம் இயற்றிய வேதவியாசரிடம் நேரடியாகப் பாடங் கேட்கும் பாக்கியம் செய்தவர் நீங்கள். ஆகவே நாரதரும் இங்கிருக்கும் நேரத்தில் இலிங்க புராணத்தை எங்கட்குச் சொல்ல வேண்டும்' என்று கேட்க, லோமஹர்ஷனர் சொல்ல ஆரம்பித்தார்:

**பிரபஞ்சம்**

ஆதியில் பரப்பிரம்மம் ஒற்றையாக இருந்தது. எங்கும் எதுவும் இல்லை. அது தன்னைத்தானே மூன்றாகப் பிரித்துக் கொண்டு பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூன்று வடிவெடுத்தது. *(இதை அடுத்து எங்கும் நிறைந்த நீர், அதில் தோன்றிய முட்டை, பிரம்மன் படைப்பைத் துவங்குதல், காலப்பிரமாணம், யுகங்களின் அளவு ஆகியவை ஏனைய புராணங்களைப் போலவே இங்கும் உள்ளன. இதில் புதிதாகக் கண்டுள்ள செய்தி வருமாறு)* உற்பத்தி துவங்கு முன்னர் தனது வேலைப் பளு மிகுதியாக இருப்பதால் தனக்கு உதவி செய்யுமாறு பிரம்மன் சிவனை வேண்டிக் கொண்டார். சரி என்று ஒப்புக்கொண்ட சிவன் தன்னைப் போலவே பதினோரு பேரைப் படைத்தார். இவர் என்ன செய்கிறார் என்பதை அறிந்த பிரம்மன் அதிர்ச்சி அடைந்து, 'நிறுத்துங்கள், உம்மைப் போல அழிவில்லாத சிரஞ்சீவிகளைப் படைக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளவில்லை. நான் கேட்டது அழிகின்ற உடம்போடு கூடிய ஜீவராசிகளே ஆகும்' என்று பிரம்மா சொல்ல, சிவன் படைப்புத் தொழிலில்

உதவி செய்வதை நிறுத்திக் கொண்டார். என்றாலும் இவர் ஏற்கெனவே படைத்துவிட்ட பதினோரு சிரஞ்சீவி களும் ஏகாதச ருத்திரர்கள் என்ற பெயரில் நிலைத்து விட்டனர்.

இதனை அடுத்து பிரம்மன் சனகன், சனந்தா, சனாதன ஆகிய மூன்று மகன்களையும் பெற்றார் என்று இப்புராணம் கூறுகிறது. (சனத்குமாரன் என்ற நான்காவது பிள்ளையையும் பெற்றான் என்பதை மற்ற புராணங்கள் சொல்லுகின்றன.) இதன் பிறகு ஒன்பது முனிவர்கள், சுயம்பு மனு ஆகியவரின் தோற்றம் பற்றி ஏனைய புராணங்கள் போலவே இலிங்க புராணமும் பேசுகிறது.

**யோகம்**

யோகத்தின் இயல்பு, அதன் இலக்கணம், பயிற்சி முறை ஆகியவற்றை ஏனைய புராணங்களைப் போலவே இலிங்க புராணமும் கூறுகிறது. சிவனுக்குப் பசுபதி என்ற பெயர் உண்டு என்பதும், சிவன் கற்பித்த முறையில் யோகத்தைப் பயில்வது பாசுபத யோகம் எனப்படும். ஒவ்வொரு கல்பத் திலும் இந்த யோகத்தைக் கற்பிப்பதற்காக சிவன் யோகேஸ் வரன் என்ற பெயரில் வடிவெடுக்கிறார். இதுவரை நடை பெற்ற 28 கல்பங்களில் ஒவ்வொரு கல்பத்திற்கும் சுவேதா யோகேஸ்வரா, சுதார யோகேஸ்வரா, மதன யோகேஸ்வரா என்ற வெவ்வேறு பெயர்களுடன் சிவன் வடிவெடுக் கிறார். ஒவ்வொரு முறை இவர் வடிவெடுக்கும் பொழுதும் இவருக்கு நான்கு சீடர்கள் உள்ளனர். ஒவ்வொரு கல்பத்தின் தொடக்கத்தில் உள்ள துவாபரயுகத்தில் வேத வியாசர் என்ற பெயருடன் சிவன் வடிவெடுக்கிறார். 28 வேத வியாசர்களுள் சில பெயர்கள் வருமாறு:— சத்யா, பார்கவா, கிராது, அங்கீரா, வசிஷ்டா, அருணி ஆகியவை ஆகும்.

## இலிங்கம்

லோமஹர்ஷனர் மற்ற முனிவர்களுக்குக் கூறிய இலிங்கம் பற்றிய கதை. பிரம்மா, விஷ்ணு இருவரும் இலிங்கத்தின் அடி முடி தேடிய கதை முன்னரே சிவ புராணத்தில் கூறப் பட்டுள்ளது. இங்கு சொல்லப்பட்டுள்ள புதிய பகுதி வருமாறு: இலிங்கத்தின் இடையே தோன்றிய சிவன் 'படைக்கும் தெய்வ மாகிய பிரம்மனும் காக்கும் தெய்வமாகிய விஷ்ணுவும், அழிக்கும் தெய்வமாகிய நானும் ஒரே பரப்பிரம்மத்தில் இருந்து தோன்றியவர்கள் ஆவோம். நமக்குள் சண்டை போட்டுக் கொள்ளுதல் தேவை இல்லை. இலிங்கத்தில் இருந்துதான் அனாதியான முட்டை தோன்றிற்று' என்று கூறிவிட்டு, இலிங்கத்தில் தோன்றிய சிவன் பிரம்மா, விஷ்ணு ஆகிய இருவருக்கும் சிவகாயத்திரி உபதேசம் செய்தார்.

பிரம்மனும், விஷ்ணுவும் நைமிசாரண்ய வனத்தில் முனிவர்கள் லோமஹர்ஷனரைப் பார்த்து படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்கள் செய்யும் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் பிரம்மாவை மட்டும் விஷ்ணுவின் பிள்ளை கூறுகிறார்களே, அது ஏனென்று கேட்க, லோம ஹர்ஷனர் கூற ஆரம்பித்தார்.

'முன்னொரு காலத்தில், பிரபஞ்ச உற்பத்திக்கு முன்னர் எங்கும் நீரே நிறைந்திருந்தது. தண்ணீரின் மேல் படுத்திருந்த நாராயணன் பொழுது போகாமல் என்ன செய்வதென்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் தம்முடைய கொப்பூழைப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தார். திடீரென்று ஒரு மாபெரும் தாமரைப் பூ கொப்பூழினின்று வெளிப்பட்டது. அந்த இதழ்களின் நடுவே பிரம்மன் கம்பீரமாக அமர்ந்திருந்தார். சிலகாலம் கழித்து அந்தத் தாமரையினின்று இறங்கி வந்து விஷ்ணுவைப் பார்த்து

ஆச்சரியத்தோடு நின்றார். விஷ்ணு அவரைப் பார்த்து, 'நீ யார் என்று எனக்கு தெரியவில்லை, தெரிவி' என்றார். அப்பொழுது பிரம்மன் 'நான்தான் சர்வ வல்லமை உள்ள பிரம்மன். இவ்வுலகம் முழுவதையும் படைக்கிறவன்' என்று சொல்லிவிட்டு நீங்கள் யார் என்று கேட்டான். உடனே விஷ்ணு என் பெயர் விஷ்ணு. உன்னை உட்பட அனைத்தையும் படைப்பவன் நான்தான். நீ எனக்கு மகன் முறை ஆவாய் என்றார். அதைக் கேட்ட பிரம்மன், கோபம் கொண்டு நானே அனைத்துமாய் இருக்கும் பொழுது நீ எப்படி எனக்குத் தந்தையாக முடியும். வேண்டுமானால் என்னுள் புகுந்து பாருங்கள் என்றார். உடனே விஷ்ணு, பிரம்மன் வாய் வழியாகப் புகுந்து உள்ளே சென்றபொழுது, பல்வேறு உலகங்கள், உலகத்தில் உள்ள பொருட்கள் அனைத்தும் பிரம்மன் வயிற்றுக்குள் இருப்பதைக் கண்டான். அதைச் சுற்றிப் பார்க்க விஷ்ணுவுக்கு ஆயிரம் ஆண்டுகள் தேவைப்பட்டன. ஒருவாறு யாவற்றையும் பார்த்து முடித்து, மறுபடியும் வாய்வழியே விஷ்ணு வெளியே வந்துவிட்டார். பிரம்மனைப் பார்த்து, நீ என் வயிற்றுக்குள் சென்று பார்த்து வா என்றான். அப்படியே பிரம்மன் விஷ்ணுவின் வாய்வழியே புகுந்து உள்ளே சென்றான். அங்கே தான் படைத்ததைப் போன்று பல உலகங்கள் இருந்ததைக் கண்டார். முழுவதும் சுற்றிப் பார்க்க பிரம்மனுக்கு ஆயிரம் ஆண்டுகள் தேவைப்பட்டன. முடிவில் அவர் வெளியே வர நினைத்தபொழுது, வெளியே வரக்கூடிய வாயில்கள் அனைத்தையும் விஷ்ணு மூடி விட்டான். அந்நிலையில் வேறு வழியில்லாமல் விஷ்ணுவின் கொப்பூழ் வழியாக வெளியே வந்த பிரம்மனுக்கும், விஷ்ணு வுக்கும் பெரும் சண்டை மூண்டது. இவர்கள் தங்களுக்குள் யார் பெரியவர் என்று சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பொழுதே அவர்கள் இருவரும் அதிர்ச்சியுறும்படியாக

அதிர்வுகள் தோன்ற இருவரும் நின்ற நிலையில் ஆட்டம் கண்டனர். பிரம்மனுக்கு இது புதிய அனுபவம் ஆதலால், ஏன் இப்படிக் கொப்பூழை ஆட்டி எனக்குத் துன்பம் தருகிறாய் என்று விஷ்ணுவிடம் கேட்டார். உடனே விஷ்ணு 'ஆட்ட வில்லை. சிவபெருமான் வருகிறார் என்று தெரிகிறது. அவர் வருவதால் ஏற்படுகின்ற அலைஅலையான அதிர்வுகள் நம் இருவரையும் நிலைகொள்ளாமல் ஆட்டி வந்தது' என்றார். இந்த அதிர்ச்சி தாங்காத பிரம்மா, சிவன் யார் எனக் கேட்க, விஷ்ணு, நாம் இருவரும் சிவனைத் தியானம் செய்வோம் என்று கூறி தியானத்தில் ஈடுபட்டபோது, சிவன் அவர்கள் எதிரே தோன்றினார். 'உங்களுக்கு என்ன வரம் வேண்டும்?' என்று சிவன் கேட்க, விஷ்ணு தங்களிடத்தில் நீங்காத பக்தி வேண்டும் என்று விடை கூறினார். தந்தேன் என்று கூறிய சிவன், பிரம்மனைப் பார்த்து உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்க, பிரம்மன் "தாங்கள் எனக்குப் பிள்ளையாகப் பிறக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். இவ்வரத் தைக் கேட்டுக் கொண்ட சிவனும், 'அவ்வாறே ஆகுக' என ஒப்புக்கொண்டார்.

பிரம்மன் படைப்புத் தொழிலைத் துவங்கியவுடன், அவனால் படைக்கப்பட்ட பொருள்கள் அவன் விரும்பியபடி இல்லை. படைப்பு தன் விருப்பப்படி இல்லை என்பதை அறிந்த வுடன் பிரம்மனுக்கு எல்லையில்லாத துயரம் உண்டாயிற்று. அத்துயரத்தின் வெளிப்பாடே ருத்திரன் ஆவான்.

**தேவதாரு :** தேவதாரு மரம் என்பது மரங்களில் சிறப்பான ஒன்று. முன்னொரு காலத்தில் ஒரு காட்டில் தேவதாரு மரங்கள் நிறைய வளர்ந்திருந்தன. அக்காட்டில் முனிவர்கள் பலர் தத்தம் மனைவியரோடு வாழ்ந்து வந்தனர். அவர்கள் சிவபெருமானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்து வந்தனர். இவர்களின் தியானத்தில் மனம் மகிழ்ந்த சிவபெருமான்,

அம்முனிவர்களைப் பரீட்சை செய்ய விரும்பினார். அதனால் அழகற்ற உருவம் ஒன்றினைப் பெற்று, கரிய நிறத்துடனும் கொடிய கண்களுடனும் அவர்கள் முன் தோன்றினார். முனிவர்களின் மனைவிமார்கள் அனைவரும் சிவ பெருமானைத் தொடர்ந்து செல்லலாயினர். ஆனால் முனிவர்களோ அவ்வுருவத்தை ஏளனமாகவும், கடுமையான சொற்கள் கூறியும் விரட்ட, சிவபெருமானும் அவ்விடத்தி னின்று மறைந்தார். முனிவர்கள் உடனே பிரம்மனிடம் சென்று நடந்ததைக் கூற, பிரம்மா வெகுண்டு "முட்டாள்களே! நீங்கள் என்ன தவறு செய்திருக்கிறீர்கள் என்பதை உணரவில்லையா? வந்தது வேறு யாருமல்லர், சிவபெருமானேதான். உங்களை சோதனை செய்யவே அப்படி ஒரு வடிவம் எடுத்து உங்கள் விருந்தினனாக வந்தார். விருந்துண்ண வந்தவர்களை அன்புடன் உணவிட வேண்டுமே தவிர, அவர்கள் அழகான வர்களா, இல்லையா என்று பார்த்து உபசரிக்கக் கூடாது. உங்களுக்குச் சுதர்சனனின் கதை தெரியுமா? அதை இப் பொழுது கூறுகிறேன்" என்று சொல்லிவிட்டு, முனிவர் களுக்குக் கதை சொல்லத் துவங்கினார்.

சுதர்சன முனிவர் என்று ஒருவர் இருந்தார். அவர் தம் மனைவியிடம், வரும் விருந்தினர்களை எவ்வாறு அன்புடன் உபசரிக்க வேண்டும் என்றும், விருந்தினர்களை உதாசீனப் படுத்துவது சிவபெருமானை அவமானப்படுத்துவது போலாகும் என்றும், விருந்துண்ண வருபவர் ஒவ்வொருவரும் சிவபெருமான் என்றே எண்ண வேண்டும் என்றும் அறிவுரை கூறினார். ஒரு சமயம், தர்ம தேவதை சுதர்சன முனிவரையும் அவர் மனைவியையும் பரீட்சை செய்து பார்க்க விரும்பினார் பிராமண வடிவம் கொண்டு, அவர்கள் வீட்டிற்கு வந்தார் முனிவர் வீட்டில் இல்லாத பொழுதும், அவர் மனைவி தர்ம தேவதையினை நன்கு உபசரித்து அன்புடன் உணவு

படைத்தார். மிகவும் மனம் மகிழ்ந்த தர்ம தேவதை அவ்விருவரும் சொர்க்கம் செல்ல ஆசி வழங்கினார்.

இக்கதையினை பிரம்மன் கூறக்கேட்ட முனிவர்கள், தாம் சிவபெருமானை அவமதித்ததை நினைத்து வருந்தி, அவர் மனம் மகிழ என்ன செய்ய வேண்டும் என்று கேட்க, பிரம்மனும் சுவேதாவின் கதையைக் கூறத் தொடங்கினார்.

**சுவேதா முனிவரின் கதை :** முன்னொரு காலத்தில் சுவேதா என்ற முனிவர் சிவபெருமான் மீது பெரிதும் பக்தி கொண்டிருந்தார். எந்நேரமும் சிவபெருமானையே வழிபட்டு வந்தார். ஒரு சமயம் அவர் இவ்வுலக வாழ்க்கையைவிட்டுச் செல்ல வேண்டிய நேரம் வந்தது. யமதேவன் சுவேதா முனிவர் முன் தோன்றினான். யமனைக் கண்டு சுவேதா முனிவர் சிறிதும் மனம் கலங்கவில்லை. சிவபெருமானை வணங்கினால், இறப்பினால் எத்துன்பமும் ஏற்படாது என்று நினைத்து, சிவனை வழிபடத் துவங்கினார். யமதேவன் சுவேதா முனிவரைப் பார்த்து, "உன்னுடைய நேரம் இப்பூமியில் முடிந்து விட்டது. இனி நீ எனக்குக் கீழ்ப்படிய வேண்டும், சிவனை வணங்குவதால் எப்பயனும் இல்லை, வா. சீக்கிரம் போக வேண்டும்" என்றான். அவரைக் கொண்டு செல்வதற்காக எல்லா ஆயத்தங்களும் செய்யும் பொழுது, சிவபெருமான் பார்வதி, நந்தி மற்றும் சிவகணங்களுடன் அங்கு வந்தார். சிவனுடைய பார்வை பெற்றவுடன் யமதேவன் மயக்கமுற்று வீழ்ந்து மரணமடைந்தான். சுவேத முனிவர் காப்பாற்றப் பெற்றார்.

இக்கதையைக் கூறி முடித்த பிரம்மா, முனிவர்களைப் பார்த்து, சிவபெருமானை வணங்குவதால் ஏற்படும் பயனைத் தெரிந்து கொண்டீர்கள் அல்லவா? உடனே சென்று சிவ பெருமானை வழிபட ஏற்பாடு செய்யுங்கள் என்று கூறினார்.

முனிவர்களும் சிவனை நோக்கித் தவம் செய்ய ஆரம்பித்தனர். ஒரு வருடம் கடுமையான தவத்திற்குப் பிறகு அவர்கள் முன் சிவபெருமான் தோன்றினார். கடுமையான விழிகளும், சாம்பலை உடல் மீது பூசிக்கொண்டு, அழகற்ற உருவத்துடன் தேவதாரு மரங்கள் நிறைந்த காட்டில் இங்கும் அங்கும் உலாவினார். முனிவர்களும் இம்முறை சிவபெருமானைத் தெரிந்து கொண்டு தம் மனைவியருடன் மலர்களால் அர்ச்சித்தனர். சிவபெருமான் மனமகிழ்ந்து அம்முனிவர் களுக்கு நல்ல அறிவுரைகள் கூறினார். அவற்றுள், சாம்பல் பற்றியும், அதன் சிறப்புப் பற்றியும் அவர்கட்கு அறிவுரை கூறினர்.

**ததீசி கதை :** ததீசி என்ற பிராமணனும், கபா என்ற அரசனும் நண்பர்களாய் இருந்தனர். கபா சத்திரியனாகவும், ததீசி பிராமணனாகவும் பிறந்திருந்தாலும், இருவரும் இணையற்ற அன்பு பூண்டு வாழ்ந்து வந்தனர். ஒருமுறை பிராமணன் உயர்ந்தவனா, சத்திரியன் உயர்ந்தவனா என்ற வாதம் இவர்களுக்குள் தோன்றி அந்த வாய்ச்சண்டை கைச்சண்டையாக மாறிவிட்டது. ததீசி என்ற பிராமணன் தான் பிராமணன் என்ற கர்வம் கொண்டு, தான் யாரை வேண்டுமானாலும், எது வேண்டுமானாலும் செய்யலாம் என்று நினைத்தான். கபாவைப் பொறுத்தமட்டில், முன்னொரு காலத்தில் தேவாசுர யுத்தத்தில் தேவர்களுக்கு உதவி செய்த காரணத்தினால் இந்திரனிடத்து இருந்த வஜ்ராயுதம் கபாவுக்குப் பரிசாகக் கிடைத்தது. அந்த ஆயுதத்தைக் கொண்டு எதிரே இருந்த பிராமணன் மண்டையில் அரசன் அடித்தான். பிராமணன் உடம்பு இரண்டாகப் பிளந்தது. ஆனால் அவன் சாவதற்கு முன் தன்னைக் காப்பாற்றும்படி சுக்ராச்சாரியாரை வேண்டிக் கொண்டு இறந்தான். இறந்தவர்களை எழுப்பும், மிருத்த சஞ்சீவினி என்ற மந்திரம் சுக்ராச்சாரியார் ஒருவருக்கே

தெரியும். பிராமணன் சாகுமுன், சுக்ராச்சாரியாரை வேண்டிக் கொண்டபடியால் அங்கு தோன்றிய அசுரகுரு இரண்டாகப் பிளந்து கிடந்த பிராமணன் உடம்பை ஒன்றாக ஆக்கி அதற்கு உயிரும் கொடுத்தார். அம்மட்டோடு இல்லாமல், 'பிராமணரே! மிருத்த சஞ்சீவினி மந்திரத்தை சிவனிடம் இருந்துதான் கற்றுக் கொண்டேன். நீயும் சிவனை நோக்கித் தவம் செய்து இம்மந்திரத்தைக் கற்றுக் கொள்வாயாக' என்று கூறினான். சுக்ராச்சாரியாரின் அறிவுரையைக் கேட்ட ததீசி சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். சிவன் எதிர்ப்பட்டவுடன், உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்க, மூன்று வரங்கள் பெற்றுக் கொண்டான். அவையாவன: முதல் வரத்தின்படி ததீசா பெரும் செல்வனாக ஆயினான், இரண்டாவது வரத்தின்படி ததீசாவின் எலும்புகள் வஜ்ராயுதத்தின் வலிமை பெற்றன. மூன்றாவது வரத்தின்படி யாரும் தன்னைக் கொல்ல முடியாத சக்தியையும் பெற்றான்.

இவ்வரங்களைப் பெற்ற ததீசி கபாவிடம் சென்று அவனை எட்டி உதைத்தான். உடனே கபா தன் கையிலிருந்த வஜ்ராயுதத்தை, ததீசியின் மார்பை நோக்கி அடித்தார். ஆனால் என்ன அதிசயம்! வஜ்ராயுதம் இரும்பில் பட்டுத் தெறித்தது போல், கணீரென்ற சப்தத்துடன் கீழே விழக் கண்டான். ததீசியிடம் தன் கைவரிசை செல்லாது என்பதை அறிந்த கபா, விஷ்ணுவை நோக்கிப் பிரார்த்தனை செய்தான். விஷ்ணு தோன்றியவுடன், ததீசியை வெல்வதற்குரிய ஆயுதம் ஒன்று வேண்டும் என்று கபா கேட்டவுடன், விஷ்ணு ததீசி சிவனிடம் பெற்ற வரங்கள் காரணமாக அவனை ஒன்றும் செய்ய முடியாது. ஆகவே நான் ஏழை பிராமண வடிவத்தில் சென்று ததீசியிடம் ஏதாவது செய்து பார்க்கிறேன் என்று கூறிவிட்டுப் பிச்சை ஏற்கப் போகும் பிராமண வடிவத்தில் ததீசியிடம் வந்தான் விஷ்ணு. இவருடைய சூழ்ச்சியை எளிதாக அறிந்து

கொண்ட ததீசி, "பிராமண வடிவத்தில் வருகின்ற விஷ்ணுவே வருக. உம்மையும் உம்முடைய வேஷத்தையும் என்னால் கண்டு கொள்ள முடியாதென நினைத்தீரா? அல்லது பிராமண வடிவத்தில் வரும் தாம் எதைக் கேட்டாலும் கொடுத்து விடுவேன் என்று நினைத்தீரா."

"விஷ்ணுவே! உம்முடைய உண்மையான வடிவத்தை எடுத்துக் கொண்டு என்ன வேண்டுமெனக் கோரும், பார்க்கலாம் என்றான். உடனே விஷ்ணு, ததீசி, நான் கபாவைக் கூட்டிக் கொண்டு இங்கு வருகிறேன். அவனைக் கண்டவுடன், எனக்கு பயமாக இருக்கிறது என்று சொல் என்று சொல்லி விட்டுப் போன விஷ்ணு, உடனடியாக கபாவை அழைத்துக் கொண்டு ததீசியின் முன் வந்து நின்றான். ததீசி கொஞ்சம் கூட அலட்டிக் கொள்ளாமல் நான் ஒரு சிவபக்தன், என்னை யாராலும், எந்த ஆயுதத்தாலும் ஒன்றும் செய்ய முடியாது என்றான். இதைக் கேட்ட விஷ்ணு கோபம் அடைந்து சுதர்சன சக்ரத்தை விட, அது ததீசியை ஒன்றும் செய்யாமல் பூமியில் விழுந்தது. இந்த நிலையில் ததீசி "விஷ்ணுவே! ஏன் சும்மா இருக்கிறீர். உம்முடைய பிரம்மாஸ்திரம் விட்டுப் பாரும். விஷ்ணு பிரம்மாஸ்திரம் விட அதுவும் ஒன்றும் செய்யவில்லை. இப்பொழுது மற்ற தேவர்கள் எல்லாம் துணைக்கு வந்து, ததீசியின் மேல் பல்வேறு ஆயுதங்களைப் பிரயோகித்தனர். அவை அனைத்தும் ததீசியை ஒன்றும் செய்ய முடியவில்லை. கடைசியாகச் சலித்துப் போன ததீசி கீழே கிடந்த ஒரு துரும்பை எடுத்து தேவர்கள் மேல் விட்டான். அந்தத் துரும்பு சிவனின் பல திரிசூலங்களாக மாறி, தேவர்களை விரட்டத் துவங்கியது.

தங்களுடைய அஸ்திரங்கள் அனைத்தும் ஒன்றும் செய்ய முடியாத போது, விஷ்ணு தன்னைப் போலவே தோற்ற மளிக்கும் ஆயிரக்கணக்கான விஷ்ணுக்களை உண்டாக்கினார். ததீசி அவை அனைத்தையும் ஒரு நொடியில் எரித்து விட்டான்.

வேறு வழியில்லாமல் விஷ்ணு விஸ்வரூபம் எடுத்து உலகில் உள்ள சராசரங்கள் அனைத்தும் தன்னுள் அடக்கம் என்பதைக் காட்டினார். இதனைக் கண்டு பயப்படாத ததீசி, "விஷ்ணுவே! இந்த மாயையைக் கண்டு பயப்படுகிற முட்டாள் என்று என்னை நினைத்தாயா? இப்பொழுது நீ என்னைப் பார். உன்னுள் அடங்கி இருக்கிற அனைத்தும் என்னுள்ளும் இருப்பதைக் காண்பாய். ஆகவே இந்த முட்டாள்தனமான விளையாட்டுக்களை எல்லாம் விட்டு விட்டு தைரியம் இருந்தால் என்னுடன் போர்புரிய வா" என்று அழைத்தான்.

நிலைமை கட்டுக்கடங்காமல் செல்வதைக் கண்ட பிரம்மா, தான் தலையிட்டு "விஷ்ணுவே, சிவபக்தனாகிய இவனை உம்மால் வெல்ல முடியாது. இருவரும் சமாதானமாகப் போய் விடுங்கள்" என்று கூறி அவர்கள் இருவரையும் சமாதானப் படுத்த, பின்னர் சத்திரியனாகிய கபா சிவபக்தனாகிய ததீசியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

**நந்தியின் கதை :** இக்கதை முன்னமே சிவபுராணத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. *(நந்தி தோற்றம் பற்றிச் சிறு மாறுபாடு உள்ளது. சிவபுராணத்தில், நந்தி, கலப்பையின் கொழு முனையில் குழந்தையாக வந்தது என்றும், லிங்க புராணத்தில் ஷிலதா வளர்த்த யாக குண்ட அக்னியில் தோன்றியதாகவும் கூறப்பட்டுள்ளது.)*

லிங்க புராணத்தில் இதனை அடுத்து யுகங்கள் பற்றி விரிவாகவும், பதினான்கு லோகங்கள், ஏழு துவீபங்கள் பற்றியும், சூரியன் பன்னிரண்டு மாதங்களில் வெவ்வேறு பெயருடன் சஞ்சரிப்பதையும் விரிவாகப் பேசுகின்றது. *(இவை பற்றி முன்னருள்ள பல புராணங்களில் கூறியுள்ளமையால் இங்கே இவற்றை விவரிக்கவில்லை.)*

*(இவற்றை அடுத்து வரும் துருவ நட்சத்திரம் பற்றிய கதையும், தட்சன் பற்றிய கதையும் முன்னரே கூறப்பட்ட தாகலின் இங்கே விவரிக்கப்படவில்லை.)*

**பராசர முனிவர் கதை :** முன்னொரு காலத்தில் கல்மஷ பாதன் என்ற அரசனும், ருத்ரா என்ற அசுரனும் அடுத்தடுத்த இடங்களில் வாழ்ந்து வந்தனர். வசிட்டன் மகன் சக்த்ரியும், அவன் சகோதரர்களும் அப்பகுதியில் சுற்றித் திரிந்தனர். ருத்ரா என்ற அசுரன் அழகிய அப்பிள்ளைகளைப் பிடித்துச் சாப்பிட வேண்டும் எனப் பலகாலமாக நினைத்து வந்தான். ஆனால் அவன் அசுரன் என்ற காரணத்தால் வசிட்ட குமாரர்கள் அவனை நெருங்குவதே இல்லை. இதற்காக ருத்திரா ஒரு சூழ்ச்சி செய்தான். அரசனாகிய கல்மஷபாதனுடைய உடம்புக்குள் இந்த அசுரன் புகுந்து கொண்டான். அரசனிடத்தில் அடிக்கடி வந்து போகும் பழக்கமுள்ள வசிட்ட குமாரர்கள் இப்பொழுது தாங்கள் பார்க்க வரும் அரசன் கல்மஷபாதன் பழைய கல்மஷ பாதன் அல்லன். அவ்வுடம்பினுள் ருத்ரா என்ற அசுரன் ஒளிந் திருக்கிறான் என்பதை அறியாத அக்குமாரர்கள் அப்பாவித் தனமாக அரசனிடம் வர, அவனுள் இருந்த ருத்ரா என்ற அசுரன் அவர்கள் நூறு பேரையும் பிடித்துத் தின்றுவிட்டான்.

இச்செய்தி அறிந்த வசிட்டனும், அவன் மனைவி அருந்ததியும் தாங்க முடியாத புத்திர சோகத்தால் உணர்வு இழந்தனர். செய்வதறியாத அவ்விருவரும் ஒரு மலையில் ஏறி கீழே விழுந்து தற்கொலை செய்து கொள்ள முடிவெடுத்து அவ்வாறே செய்தனர்.

இவ்வளவு நல்ல ஒரு முனிவரும், கற்புக்கரசியான அருந்ததியும் அநியாயமாக சாவதை பூமிதேவியே ஏற்கவில்லை. எனவே கீழே விழுகின்ற இருவரையும், பூமி தேவி தாங்கிப் பிடித்து அவர்களை நிறுத்தி, அவர்கள் செய்வது தவறு

அவர்களால் இவ்வுலகத்திற்கும் பல அரசர்களுக்கும் நற்காரியங்கள் பல நிகழ வேண்டி இருத்தலின் அவர்கள் தற்கொலை செய்து கொள்வது தவறு என அறிவுரை வழங்கினாள் பூமி தேவி. அதே நேரத்தில் தின்னப்பட்ட வசிட்டனின் மூத்த மகன் சக்திரியின் மனைவியாகிய அத்ரிஷ்யந்தி ஓடிவந்து, மாமனை வணங்கி உங்கள் பெயரனை வயிற்றில் சுமந்து கொண்டிருக்கிறேன். இந்நிலையில் என்னை அனாதையாக விட்டுவிட்டு நீங்கள் இறப்பது சரியன்று. இந்தப் பிள்ளையை வளர்த்து ஆளாக்கிப் பெரியவனாக ஆக்க வேண்டியது உங்கள் கடமை அல்லவா என்று கூறியவுடன் வசிட்டனும், அவன் மனைவியும் தங்கள் இடத்திற்கே திரும்பி விட்டனர். உரிய காலத்தில் அத்ரிஷ்யந்தி ஆண் குழந்தை பெற்றாள். அக்குழந்தையே பிற்காலத்தில், பராசரன் என்ற பெயருடன் மிக்க புகழுடன் வாழ்ந்தது.

நாளாவட்டத்தில் வளர்ந்து இளைஞனான பராசரன், தன் தாயைப் பார்த்து, எல்லோருக்கும் தந்தை இருக்கிறார்கள். எனக்கு மட்டும் இல்லையே ஏன் என்று கேட்டபொழுது, தாய் அத்ரிஷ்யந்தி நடந்தவற்றைக் கூறினாள். உடனே அந்த சிறிய குழந்தையாகிய பராசரன், நான் சிவனைக் குறித்துத் தவம் செய்யப் போகிறேன். சிவனிடம் வரங்கள் பெற்று, ராட்சசர்கள் வாழும் மூன்று உலகங்களையும் அழித்து விடுவேன் என்று கூறினான்.

இதை அறிந்த வசிட்டர் அவனை அழைத்து, "பராசரா! இத்தகைய கொடுமைகள் உலகத்தில் எப்பொழுதும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. யாரோ ஒருவன் தவறிழைக்க, அதனால் யாதொரு குற்றமும் செய்யாத அனைவரையும் அழிப்பேன் என்று கூறுவது தவறாகும். சிவனை நினைத்துத் தவம் செய்து ஆற்றலைப் பெற்றுக்கொள்வதில் தவறில்லை. ஆனால் அந்த ஆற்றலைத் தவறான வழிகளில் பயன்படுத்தக்

கூடாது" என்று கூறினார். அதனை ஏற்றுக் கொண்ட பராசரன் சிவனை நினைத்துத் தவம் செய்தான்.

இவன் தவத்தில் மகிழ்ந்த சிவன், மிக அற்புதமான பல வரங்களைத் தந்தார். தவத்திலிருந்து மீண்ட பராசரன் தன் தந்தையைக் கொன்ற ருத்ரன் என்ற அரக்கனைத் தேடி அலைந்தான். அவன் கிடைக்காததால் கண்ணில்பட்ட அரக்கர்கள் அனைவரையும் எரித்துக் கொன்றான். இதை அறிந்த வசிட்டர், பராசரனை அழைத்து, உன் அழிவு வேலையை இத்துடன் நிறுத்து. உன் தந்தை ஓர் அரக்கனால் கொல்லப்பட்டான் என்றால் அது உன் தந்தையின் தலையெழுத்து. அதற்காகக் கண்ணில்பட்ட அரக்கர்களை எல்லாம் அழிப்பது நியாயமில்லை. அரக்கர்களும் கடவுளால் படைக்கப் பட்டவர்களே. அரக்கர்கள், மனிதர்கள் ஆகிய இருவரும் இப் பூமியில் வாழ்ந்து கொண்டுதான் இருப்பார்கள். இவ்விருவரிடையேயும் ஒரு வகையான சமநிலை இருந்து கொண்டுதான் இருக்கும். ஒன்று அதிகமாகும் போது, யாரோ ஒருவர் மூலமாக அது அழிக்கப்படும். இப்பொழுது நீ இந்தச் சமநிலையைக் குலைக்கும் முறையில் அதிகமான அரக்கர்களைக் கொன்று விட்டாய். ஆகவே இத்துடன் அழிவு வேலையை நிறுத்திக் கொள் என்றார்.

இந்த அறிவுரையைக் கேட்ட பராசரன் வேதசாஸ்திரங்கள் பயின்று மிகப் பெரிய அறிஞனாக மாறினான். புராண சம்ஹிதை, விஷ்ணுபுராணம் இரண்டையும் இயற்றிய பெருமை பராசரனைச் சேரும். இந்தப் பராசர முனிவனின் மகனே கிருஷ்ண துவைபாயரான வேதவியாசன் ஆவான்.

**அந்தகன் :** ஹிரண்யக்ஷா என்ற அரக்கனின் மகன் அந்தகன். அந்தகன் கடுமையான தவம் இயற்றி, 'தன்னை யாரும் கொல்ல முடியாது' என்ற வரத்தினை பிரம்மனிடம்

பெற்றான். இவ்வரத்தினைப் பெற்றதனால், மூன்று உலகங் களையும் வென்று, தேவர்களை அவ்வுலகத்தினின்று விரட்டினான். இந்திரனும் மற்ற தேவர்களும், விஷ்ணுவுடன் சேர்ந்து மந்தார மலைக்குச் சென்றனர். அந்தகன் தேவர்களைத் துரத்திக் கொண்டு மந்தாரமலைக்குச் சென்றான்.

சிவபிரானைப் பார்த்த தேவர்கள், அந்தகன் செய்யும் கொடுமைகளைக் கூறி, தாங்கள் எங்கு சென்றாலும் அந்தகன் அங்கு வந்து தங்களைத் துரத்துவதாகவும், சிவபெருமான் மட்டுமே தங்களை அவனிடமிருந்து காப்பாற்ற முடியும் என்றும் கூறினர். சிவபெருமானும் அவர்களுக்கு உதவுவதாகக் கூறி, அந்தகனைக் கொல்லச் சென்றார். அந்தகன் தனியாக இல்லாமல், கோடிக்கணக்கான அரக்கர்களைத் தன்னுடன் வைத்திருந்தான். அவர்கள் அனைவரையும் எரித்துவிட்டு, அந்தகனைத் தன் சூலாயுதத்தால் கொன்றார். அச்சூலாயுதத்தால் அவன் மார்பைக் குத்தி, அதை நேரே விண்ணில் தூக்கினார். அசுரன் சூலாயுதத்தில் குத்தப்பட்டு, விண்ணில் தொங்குவது கண்டு, தேவர்கள் பூமாரி பொழிந்தனர். மூவுலகினரும், சிவபெருமானை வழிபட ஆரம்பித்தனர்.

அந்தகனைப் பொறுத்தவரை, சிவபெருமானின் சூலாயுதத்தால் குத்தப்பட்ட நொடிப்பொழுதிலிருந்து, அவனுடைய கெட்ட எண்ணங்கள் அனைத்தும் அவன் மனத்திலிருந்து விலகிவிட்டன. அவன் சிவனை தியானிக்க ஆரம்பித்தான். அவன் தியானத்தில் மனம் மிக மகிழ்ந்த சிவபெருமான் அந்தகனை நோக்கி, "ஹிரண்யாக்ஷாவின் மகனே, உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். அதைக் கேட்ட அந்தகனும், "ஐயனே! நான் என்றென்றும், எப்பொழுதும் உன்னை நினைத்து, உனக்கு நன்றியுடைய வனாக இருக்க வேண்டும். அதுமட்டுமின்றி, எப்பொழுதும் உன்னுடனேயே நான் இருக்க வேண்டும்" என்று வேண்டிக்

கொள்ள, சிவனும் 'அப்படியே ஆகட்டும்' என்றார். அந்தகனைத் தன் சூலாயுதத்தினின்று விடுவித்து சிவ கணங்களின் தலைவனாக்கினார்.

### ஹிரண்யகசிபுவும் நரசிம்ம அவதாரமும்

*(இக்கதை ஏற்கெனவே விஷ்ணு புராணத்தில் கொடுக்கப் பட்டுள்ளது.)* ஹிரண்யகசிபுவைக் கொன்ற பின்பும், விஷ்ணு தன் நரசிம்ம அவதாரத்தை மாற்றிக் கொள்ளவில்லை. நரசிம்மம் உலகத்தில் அங்கும் இங்கும் ஓடி, எல்லாவற்றையும் அழித்துவிட ஆயத்தமானது. தேவர்கள், பிரம்மனின் உதவி யுடன், மந்தரமலைக்குச் சென்று சிவபிரானை வேண்டினர். சிவனும் தான் அவர்களைக் காப்பாற்றுவதாக உறுதி கூறினார்.

சிவபெருமான் தன் உடம்பினின்று வீரபத்ரன் என்ற தேவதையைத் தோற்றுவித்தார். சிவபிரானைப் போலவே மூன்று கண்களும், பல ஆயுதங்களைக் கையில் ஏந்தியும் இருந்தார். சிவபெருமானை வணங்கி, என்ன செய்யவேண்டும் எனக் கேட்டான். சிவபெருமானும் அவரிடம் "வீரபத்ரனே ! நரசிம்மம் ஒன்று இங்கு உலவிக் கொண்டு, பெரும் துன்பத்தை விளைவிக்கிறது. அது வேறு யாருமல்ல, விஷ்ணுவேதான். முதலில் நீ சமாதானமாக அந்த அவதாரத்தை விட்டுவிடச் சொல். அவ்வாறு செய்வதற்கு மறுத்தால், கொன்று விடு" எனக் கூறினார்.

வீரபத்ரன் உடனே, நரசிம்ம அவதாரத்தில் இருந்த விஷ்ணுவிடம், "விஷ்ணுவே! நீரே இந்த உலகத்தைக் காப்பவர். இவ்வுலகைக் காக்க வேண்டும் என்பதற்காக நீங்கள் பல அவதாரங்கள் எடுத்துள்ளீர்கள். அவ்வாறு இருக்க, இப்பொழுது ஏன் நரசிம்ம அவதாரத்தை மாற்றிக் கொள்ள மறுக்கிறீர்கள். இது உலகையே அழித்து விடும் அபாயத்தைக் கொடுக்கிறது" என்று அமைதியுடன் கூறினார்.

இதைக் கேட்ட விஷ்ணு கோபத்துடன், "எனக்கு புத்திமதிகள் சொல்வதற்கு நீ யார்? நீ வந்த இடத்திற்கே திரும்பிப் போ, நான் இவ்வுலகை அழிக்கப் போகிறேன். நான் எல்லாவற்றிற்கும் தலைவனாவேன். இவ்வுலகை உண்டாக்கிய பிரம்மா, என்னிலிருந்து பிறந்தவன், ஆதலால் இவ்விடத்தை விட்டு அகன்றுவிடு" என்று வீரபத்ரனிடம் கூறினார்.

வீரபத்ரன் உடனே, நீ சிவபெருமானை மறந்து விட்டாயா? அவரே அழிக்கும் கடவுள். அவரே எல்லாவற்றிற்கும் முதன்மையானவர். நீ பழைய நிலைக்கு வரவில்லையெனில் சிவன் உன்னை அழித்து விடுவார். நானே வீரபத்திரன். தக்கன் யாகத்தில் உன் தலையை வெட்டியவன் நான் என்பதை மறந்துவிட்டாயா எனக்கூறி தன் உருவத்தை மாற்றிக் கொண்டார். மாறும் பறவையைச் சேர்ந்த வடிவம் (சரப மூர்த்தி) எடுத்து, நரசிம்மத்தைத் தாக்கி வானில் எறிந்தார். கீழே விழுந்தவுடன் மீண்டும், மீண்டும் தூக்கி எறிந்தார். உடனே விஷ்ணு தன் நினைவு வரப்பெற்று சிவபெருமானை நூற்றிஎட்டு பெயர்கள் கூறி வழிபட்டார். வீரபத்திரனும் நரசிம்மத்தின் தலையை வெட்டி வீழ்த்தினார். விஷ்ணு சிவனுடன் கலந்தார். நரசிம்மத்தின் தோலை ஆடையாக உடுத்திக் கொண்டு, நரசிம்மத்தின் கபாலத்தைத் தன் கபால மாலையோடு இணைத்துக் கழுத்தில் அணிந்து கொண்டார்.

**ஜலந்தரன் கதை :** இந்த அரக்கனின் தோற்றம் பற்றி இலிங்க புராணத்தில் சொல்லப்படவில்லை. பத்ம புராணத்தில் இது விரிவாகக் காணப்படுகிறது என்று சொல்கிறார்கள்.

இந்த ஜலந்தரன், இந்திரன் முதலிய அனைத்து தேவர்களையும் வென்று இறுதியாக விஷ்ணுவிடம் சென்று, உன்னிடம் போர் புரிய வந்துள்ளேன் என்றான். நீண்ட

சண்டைக்குப் பிறகு விஷ்ணு ஜலந்தரனிடம் தோற்றுவிட்டார். அவரை வென்ற எக்களிப்பில் ஜலந்தரன் பெரிதும் கர்வம் அடைந்தவனாய், விஷ்ணுவே என்னிடம் தோற்றுவிட்டதால் நான்தான் இனி அனைத்திற்கும் தலைவன் என்று தருக்கித் திரிய ஆரம்பித்தான். உலகை ஒருமுறை சுற்றிப்பார்த்த அவன் அனைவரும் எனக்குக் கீழ்ப்படிந்து விட்டனர். எஞ்சி இருப்பவர் சிவன் ஒருவரே ஆவார். அவரையும் போரில் வென்றுவிட்டால், அனைத்திற்கும் தலைவன் நானே என்ற புகழ் நிலைத்துவிடும். இவ்வாறு நினைத்து சிவனிடம் சென்று, 'உம்மிடம் சண்டையிட வந்துள்ளேன். சண்டைக்கு வருக' என்று அழைத்தார். சிவன் அலட்டிக் கொள்ளாமல் தமது கட்டைவிரலை சமுத்திரத்திற்குள் நுழைத்து இப்படியும் அப்படியும் ஆட்ட, கடலுக்குள் இருந்து சுதர்சன சக்கரம் வெளியே வந்து விழுந்தது. உடனே, சிவன் ஜலந்தராசுரனே! சக்கரத்தை எடுத்து முடிந்தால் உன் தோளின் மீது வை பார்க்கலாம். இதை நீ செய்துவிட்டால் உன்னுடன் போர் செய்ய நான் தயார் என்றார். தூக்குதற்கு அரிதான சக்கரத்தை வெகுபாடுபட்டு ஜலந்தரன் தன் தோளில் தூக்கி வைத்துக் கொண்டவுடன் அந்தச் சக்கரம் அவன் தலையை உடம்பில் இருந்து நீக்கியது.

இதனை அடுத்து சிவனுடைய ஆயிரம் திருநாமங்கள், தட்சன் செய்த யாகம், பார்வதி தவம், சிவ-பார்வதி திருமணம், கார்த்திகேயன் பிறப்பு உபமன்யுவின் கதை ஆகியவை இலிங்க புராணத்தில் ஓரளவு விரிவாகவும் அதே நேரம் அடக்கமாகவும் கூறப்பட்டுள்ளன.

**முடிவுரை**

லோமஹர்ஷனர், இலிங்க புராணத்தைப் படிப்பதால் அதிக புண்ணியம் ஏற்படும் என்று கூறி முடித்தார்.

# 12. வராக புராணம்

## இப்புராணம் பற்றி...

வராகம் என்பது விஷ்ணு எடுத்த வராக அவதாரத்தைக் குறிக்கும். 24,000 பாடல்களை உடைய முதல் வராக புராணம் இழக்கப்பெற்றதால், அந்த இடத்தை நிரப்ப 10,000 பாடல்களுடன் இப்போது காணப்படும் வராக புராணம் இயற்றிச் சேர்க்கப்பட்டுள்ளது. இது பொதுவாக இல்லாமல் வைஷ்ணவத்தைப் பற்றியே கூறுவதாகவும், விஷ்ணுவை வழிபடுவதற்கு ஒரு கையேடாகவும் அமைந்துள்ளது. மற்றைய புராணங்களில் காணப்படும் புராணத்திற்குரிய ஐந்து இலக்கணங்கள் இப்புராணத்தில் இல்லை. பாஞ்சராத்ரா ஆகமத்தை விரிவாகப் பேசும் இப்புராணம் அதை மிக உயர்த்திக் கூறி அதில் சொல்லப்பட்ட முறையில் விஷ்ணு வெளிப் பட்டால் மிக உயர்ந்த நற்பயன்களை அடையலாம் என்று சொல்கிறது. வராக புராணத்தில் விஷ்ணு என்ற பெயருக்கு பதிலாக நாராயணன் என்ற பெயரே வழங்கப் படுகிறது.

அவதாரம் என்ற சொல்லுக்கு மேலிருந்து கீழிறங்குதல் என்பது பொருளாகும். தர்மம் தறிகெட்டு, அதர்மம் மேலோங்கும் பொழுது கடவுள் மனித

அல்லது விலங்கு அவதாரம் எடுக்கிறார். அந்த அவதாரத்தின் நோக்கம் தர்மத்தை நிலைநிறுத்த வருவதாகும். அவதாரங்கள் இரண்டு வகைப்படும். பரசுராமன் போன்றவர்களை அம்சாவதாரம் என்று கூறுவர். இந்த அவதாரங்கள் அபார சக்தி உடையவை ஆயினும், பூரண அவதாரங்கள் ஆகமாட்டா. இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் போன்றவை பூரண அவதாரங்களாகும். பூரண அவதாரங்கள் பதினாறு வகையான பண்புகளைப் பெற்றிருக்கும் ஐம்பொறி புலன்களோடு வாழ்வது முதல் ஐந்து பகுதியாகும். மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்ற நான்குடன் வாழ்வதும், ஏனைய மனிதர்களோடு ஒன்றாக உள்ளவை. எஞ்சியுள்ள ஏழு பகுதிகளும் மனிதனுக்கப்பாற்பட்ட பகுதிகளாகும். 1) கருணை—தக்கவர்கள் உரிய முறையில் கடமையைச் செய்தாலும் அதற்குரிய பலன் அவர்களுக்குக் கிட்டாத பொழுது கடவுளின் கருணை அளவு நிறைவு செய்கிறது. 2) அனுக்கிரகம்—கருணையைப் பெறுகின்றவர்கள் தகுதியுடையவர்கள், அல்லாதவர்கள் என்ற வேறுபாடு இல்லாமல் அனைவருக்கும் தரப்படுவது அனுக்கிரக மாகும். 3) புதிய நடைமுறையை உருவாக்குதல்—சமூகத்திலும் தனிமனிதனிடத்திலும் பழைய எண்ண ஓட்டங்களை மாற்றிப் புதிய சிந்தனைகளை உருவாக்குதல்; 4) நன்மை தளர்ச்சியுற்று தன்னைத்தான் பாதுகாத்துக் கொள்ள முடியாத நிலையில் தள்ளாடும் பொழுது அதற்கு உதவி செய்து, அதை நிலைநிறுத்துவது 5) தீமையை அழிக்கின்ற சக்தி 6) பக்தர்கள் மனத்தில் எந்த அவதார வடிவை தியானிக்கின்றார்களோ அந்த வடிவத்தை உடனடியாக ஏற்றுக் கொண்டு, பக்தர்கள் மனத்தில் காட்சி தருதல் 7) இந்தப் பேராற்றலை வழங்கும் மந்திரமாக உள்ள ஒரு பெயரை ஏற்றுக் கொள்ளுதல். இந்த ஏழு பண்புகளும் அவதாரங்கள் மானிடர்களாக வடிவெடுத்தாலும் ஏனைய

*மாந்தர்களிடத்து இல்லாததும் அவதாரங்களுக்கே உரியதும் ஆன பண்புகளாகும்.*

*அவதாரங்கள் பகவான் என்று குறிக்கப்படுகின்றன. இச் சொல்லில் உள்ள 'பக' என்ற பகுதிக்கு ஆறு பண்புகள் உண்டு. அவையாவன : சிரியை; யக்ஷா; ஐஸ்வர்யா; வீர்யா; ஞானம்; வைராக்கியம் ஆகியவை யாகும்.*

வராகம் என்ற சொல்லை வரா என்றும் அக என்றும் பிரித்துக் காட்டுகிறது வராக புராணம். வரா என்றால் போர்த்துபவர் என்பது பொருளாகும். அகா என்றால் முடிவில்லாப் பொருளுக்கு ஒரு முடிவை கற்பிப்பவர் எனப் பொருள்படும். அப்படியானால் வராக என்ற சொல்லுக்கும் அனைத்தையும் போர்த்துபவன் என்ற பொருளும், எல்லையில்லாப் பொருளுக்கு ஒரு எல்லை கற்பிப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். வராக அவதாரத்தில் பிரபஞ்ச உற்பத்திக்கு முற்பட்ட குழப்பமான காலத்தில் இருளில் கிடந்த பூமியைத் தூக்கி நிறுத்துபவ ராகும்.

உதயகிரியில் உள்ள குகைக்கோயிலில் வராக அவதாரம், மனித உடலும், வராக முகமும் கொண்டுள்ள சிற்பம் உள்ளது. தாமரை மாலையும், இடுப்பில் வேட்டியும், உத்தரியமும் அணிந்துள்ளது. தன்னுடைய இடது காலைத் தூக்கி, நாகமாகிய சேஷன் தலையில் வைத்திருக்கிறது. வலப்புறக் கொம்பைப் பற்றிக் கொண்டு பூமிதேவி பெண்வடிவில் தொங்குவது போல் அமைக்கப்பட்டுள்ளது. பின்னணியில் கடலும், முனிவர்கள் முதலானோர் வராகத்தை வணங்குவது போல் அமைக்கப்பட்டுள்ளது. இது ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

*பாதாமியில் மேலைச் சாளுக்கியர்கள் வடிவமைப்பில் ஒரு வராக அவதாரச் சிற்பம் இருக்கிறது. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். வராக வடிவம் ஆபரணங்களை அணிந்த ஆண் வடிவில் வராகத்தின் தலை பொருந்தியது போல் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வராக உருவத்திற்கு நான்கு கைகள் உள்ளன. அவற்றில் முறையே சங்கு, சக்கரம் அமைந்துள்ளன. மூன்றாவது கை தொடையின் மீது வைக்கப்பட்டுள்ளது. நான்காவது கை பூமிதேவியை தாங்கிக் கொண்டிருக்கிறது. சேஷன் வராகத்தின் பாதத்தில் அமர்ந்திருக்கிறது. இதே வடிவுடன் எட்டாவது நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் ஒன்று எல்லோராவில் உள்ள தசாவதாரக் குகையில் அமைக்கப் பட்டுள்ளது.*

*விஹார என்னும் கிராமம், வடக்கு குஜராத்தில் உள்ளது. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த, வராக சிற்பம் உள்ளது. இச் சிற்பம் மனித உடலைப் பெறாமல், ஒரு பன்றியின் உடலமைப்பையே பெற்றுள்ளது. வராக உருவம் பொருந்திய நாணயங்கள் பல இங்கு கண்டு எடுக்கப்பட்டுள்ளன.*

*யக்ஞ வராகம் என்று ஒன்று உண்டு. பூமி, நாராயணன் பற்றிய மந்திரங்களைச் சொல்ல, பூமியைக் கடலினின்று காப்பாற்றிக் கொண்டுவர என்ன உருவம் எடுப்பது என்று விஷ்ணு யோசித்தார். முடிவில் யக்ஞ வராக உருவம் எடுக்க முடிவெடுத்தார். இந்த அவதாரம் பற்றி வாயு புராணம், பிரம்மாண்ட புராணம், பிரம்ம புராணம், பத்ம புராணம், மச்ச புராணம் ஆகியவற்றில் உள்ள பாடல்கள் குறிப்பிடு கின்றன. வராக புராணத்தில் இவை காணப்படவில்லை.*

*யக்ஞ வராகம் என்ற இந்தக் கருதுகோளில் யக்ஞம் என்ற சொல் பிரபஞ்சத்தை உற்பத்தி செய்யும் மாபெரும் மூல ஆற்றலைக் குறிப்பதாகும். வராகம் என்பது குழப்பம்,*

ஒழுங்கின்மை என்பவற்றிலிருந்து பூமியை வெளிக் கொணர்வது என்பதன் குறியீடாகும். யக்ஞம், வராகம் என்ற இரண்டு சொற்களும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கின்ற பொருளுடையதாகவும், ஒன்றில் ஒன்று கரைந்து ஒன்றாகி விடும் பொருளுடையதாகவும் இருப்பதை அறியலாம். முப்பத்தைந்து பல்வேறுபட்ட சொற்களால் யக்ஞ வராகம் அழைக்கப்படுகிறது. இந்தச் சொற்கள் அனைத்தும் யக்ஞத்தின் பல்வேறு பகுதிகளைக் குறிக்கின்ற சொற்களாகவும், வராகத்தின் பல்வேறு உறுப்புக்களைக் குறிக்கின்ற சொற் களாகவும் இருப்பது சிந்திக்கத் தக்கதாகும்.

1) **வேதபாதா :** வராகத்தின் நான்கு பாதங்களும், நான்கு வேதங்களாகும்.

2) **யூபதம்ஷ்தரா :** வராகத்தின் நீண்டிருக்கும் இரு கொம்புகளும் யாகத்தில் நடப்பட்டுள்ள யூபங்களாகும்.

3) **கிரதுதந்தா :** வராகத்தின் பற்கள் யாகத்தில் செய்யப் படும் 64 வகை பலிகளைக் குறிக்கும்.

4) **சிட்டிமுகா :** வராகத்தின் வாய் யாக குண்டமாகும்.

5) **அக்னிஜிக்வா :** வராகத்தின் நாக்கு குண்டத்தின் நெருப்பாகும்.

6) **தர்ப்பலோமா :** வராகத்தின் உடம்பில் உள்ள மயிர்கள் யாகசாலையில் உள்ள தர்பைப் புல்லாகும்.

7) **பிரம்மசீர்ஷா :** வராகத்தின் தலை பிரம்மனுக்கு ஒப்பாகும்.

8) **அகோர திருக்ஷுநாதரா :** பகல் இரவு என்பவை வராகத்தின் இரு கண்களாகும்.

9) **வேதாங்க சுருதிபூஷ்ணா :** வேதத்தின் ஆறு அங்கங்கள், வராகத்தின் காதுகளில் உள்ள குண்டலங்களாகும்.

**10) குஹ்ய உபநிஷதஆசன :** வராகம் அமர்ந்திருக்கின்ற அமைப்பு, உபநிஷதங்களை ஆய்கின்றவர்கள் என்று கூறி அமர்ந்து சிந்திப்பது போல் உள்ளது. கூர்மையான அறிவு படைத்த ஒரு சிலர் மட்டுமே இதில் ஈடுபட முடியும்.

*(இந்த வராக கற்பனை தோன்றுவதற்கு ஆகாயத்தில் உள்ள மிருக சீரிஷம் என்ற நட்சத்திரக் கூட்டம் இங்கிருந்து பார்ப்பதற்கு ஒரு வராகம் போல் இருப்பது காரணமாய் இருந்திருக்கலாம் என ரிக்வேதம் பேசுகிறது.)*

முதலில் நாம் அனைவரும் விஷ்ணுவை வணங்குவோமாக.

முன்னொரு காலத்தில் பிருத்வி ஆனவள் விஷ்ணுவிடம் சென்று வணங்கி, பின்வருமாறு பேச ஆரம்பித்தாள். ஒவ்வொரு கல்ப முடிவிலும் என்னைக் காப்பாற்றுகின்றவர் மச்சமாகவும், ஆமையாகவும், வராகமாகவும், மாறிமாறி வந்து என்னைக் காப்பாற்றி நான் இருக்க வேண்டிய இடத்தில் இருக்குமாறு செய்கின்றவர் தாங்களே ஆவீர். இப்படி எங்களுடைய அறிவுக்குப் புலப்படாத வகையில் பலவற்றிலும் ஊடுருவி நிற்கும் தங்களை நாங்கள் கண்டுகொள்வது எளிதன்று. தங்களுடைய முழுவன்மை என்ன என்பதை நான் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. தங்களின் உண்மை சொரூபம் என்ன? தங்களை அடைதற்குரிய உண்மையான வழி யாது? பிரபஞ்சப் படைப்பு என்பது எவ்வாறு ஆரம்பித்து— எவ்வாறு முடிகிறது? நாலு யுகங்கள் என்று சொல்லப்படுபவற்றின் உண்மையான இயல்புகள் யாவை?

பிருத்வியின் இந்த வினாக்களைப் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்த வராகம் மெல்லச் சிரிக்க ஆரம்பித்தது. அந்த வராகத்தின் வயிற்றில் பிரபஞ்ச உற்பத்தியில் காணப்படும் முட்டை இருந்தது. அம்முட்டைக்குள் இனி

அடுத்த கல்பத்தில் தோன்ற வேண்டிய உயிர்கள் அனைத்தும் இருந்ததைப் பிருத்வி கண்டது. வராகத்தின் வயிற்றுள்ளும் அடுத்த கல்பத்தில் வெளிவரவேண்டிய பொருள்கள் அனைத்தும், தொடக்கப் பருவத்தில் இருந்ததைப் பிருத்வி கண்டாள்.

பூமியின் இந்தக் கேள்விகளையும், கேள்விகளைக் கேட்ட பிருத்வியின் மனத் தூய்மை, ஒழுங்கு ஆகியவற்றையும் நன்கறிந்திருந்த வராகம் அவள் வினாக்களுக்கு மகிழ்ச்சியுடன் விடை கூறத் துவங்கியது. அந்த வினாவும் விடையும்தான் வராக புராணம் எனப் பேசப்படுகிறது.

ஏனைய புராணங்களைப் போலவே, வராக புராணமும் பிரபஞ்சப் படைப்பு பற்றி விரிவாகப் பேசுகிறது. இந்தப் படைப்பின் பின்னணியில் நம் நினைவுக்கப்பாற்பட்ட பரப்பிரம்மம் உள்ளது. இந்தப் பரம்பொருள் பிறப்பு, இறப்பு இல்லாததாய், எவ்வித மாற்றமும் இன்றி எங்கும் நிறைந் துள்ளதாய் உள்ளது. அப் பரப்பிரம்மம் படைப்பினை மேற்கொள்ள வேண்டும் என்று சங்கல்பித்துக் கொண்ட மாத்திரையில், வெவ்வேறு பொருள்களாகப் பரிணமிக்கின்றது. உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களிலும் அடிப்படையான மூன்று குணங்களும் வெவ்வெறு அளவுகளில் தங்கியுள்ளன. அவை சத்வம், ராஜசம், தாமசம் என்று கூறப்படும்.

ஆதியில் எங்கும் சூனியம். அந்தச் சூனியத்திலிருந்து ஆதி நாதம் தோன்றியது. நாதத்திலிருந்து ஆகாயம், ஆகாயத்தினின்று காற்று, காற்றிலிருந்து நெருப்பு, நெருப்பிலிருந்து நீர், நீரிலிருந்து பூமி முதலியவை தோன்றின. இந்தப் பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் எல்லா உயிர்களும் வாழும் எல்லா வகை உடம்புகளும் படைக்கப்பட்டன. இந்த உயிர்கள் அனைத்தும் வாழக்கூடிய இடமாக பூமியை ஏற்பாடு செய்து, அந்த

பூமியை நீருக்குள்ளிருந்து வெளியே எடுத்து விடுகிறார் விஷ்ணு. இதையே மகாபிரளயம் என்று கூறலாம். ஏனைய புராணங்கள் இந்த மகாபிரளயம் பற்றியோ, இதன் முடிவில் பரப்பிரம்மமோ, பொருள்களைத் தோற்றுவிக்கின்ற முறை பற்றியோ, மும்மூர்த்திகளைத் தோற்றுவிக்கின்ற முறை பற்றியோ ஒன்றும் சொல்லவில்லை. அந்தப் புராணங்கள் சொல்லும் பிரளயம் பிரம்மனுடைய ஒரு பகல் முடிந்து இரவு வரும்பொழுது ஏற்படுகின்ற சாதாரணப் பிரளயம் பற்றிய தாகும். அந்தப் பிரளயத்தின் முடிவில் எங்கும் நீரே நிறைந் திருக்கும். நாராயணன் உறங்குவார்.

*(இதை அடுத்து வராக புராணம், கல்பங்கள் பற்றியும், நில இயற்பொருள், இயங்கியற் பொருள், பிரம்மன் பிரபஞ்சம் படைத்த கதை ஆகியவை ஏற்கெனவே மற்றப் புராணங்களில் விவரிக்கப்பட்டிருப்பதால், இங்கு அதனைக் கூறவில்லை.)*

**நாரதர் கதை**

முன்னொரு சமயம் பிரியவரதா என்ற மன்னனைக் காண நாரதர் புறப்பட்டார். அவரைக் கண்ட அரசன் ஒரு முனிவருக்குச் செய்ய வேண்டிய உபசரணைகள் செய்து முடித்த பின், "முனிவரே! தாங்கள் எல்லா உலகமும் போய் வருகிறவர். சாதாரணமாக அல்லாமல், மிகச் சிறப்பான நிகழ்ச்சி ஒன்றனை எங்கும் கூற வேண்டுகிறேன்" என்று கேட்க, நாரதர் கூற ஆரம்பித்தார்.

ஸ்வேத துவீபம் என்ற பகுதியில் நிகழ்ந்த ஒன்றைக் கூறப் போகிறேன். மிக அழகியதும், குளிர்ச்சி பொருந்தியதுமான ஒரு ஏரி அங்கிருந்தது. ஏரி நிரம்ப தாமரை மலர்களும் இலைகளும் நிரம்பி இருந்தன. ஒரு தாமரை மலரின் பக்கத்தில் மிக அழகிய பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். அவள் நிற்பதைக் கண்ட நான், "அம்மா! நீ யார்? ஏன் இங்கு

நிற்கிறாய்?" என்று கேட்டேன். கேட்டவுடன் அப் பெண்ணிட மிருந்து மூன்று ஒளிக் கற்றைகள் தோன்றி மறைந்தன. வியப்பால் வாயடைத்து நின்ற நாரதனைப் பார்த்து, அப் பெண் சொல்ல ஆரம்பித்தாள். 'நாரதா! என் பெயர் சாவித்திரி என்பதாகும். நீ பார்த்த மூன்று ஒளிக் கற்றை களும் மூன்று வேதங்கள். நீ என்னை அடையாளம் கண்டு கொள்ளாதிருக்கும்படி நாரதனாகிய உன்னுடைய ஞானத்தைக் கவர்ந்துகொண்டேன். என்னிடமிருந்து முதலில் புறப்பட்ட ஒளி ரிக்வேதமாகும். அதை வாய்விட்டுப் படிப்பவர்கள் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுவர். ரிக்வேதமே நாராயண சொரூபம் ஆகும். இரண்டாவதாக உள்ள யஜுர் வேதம் பிரம்ம சொரூபமே ஆகும். மூன்றாவது உள்ள சாமவேதம் சிவசொரூபம் ஆகும்.'

சாவித்திரி தேவதையைப் பார்த்து நாரதன், 'என்னுடைய அறிவை எல்லாம் பறித்துக் கொண்டாயே, இழந்துவிட்ட அறிவை எப்படிப் பெறுவேன்' என்று கேட்டவுடன் சாவித்திரி, 'இந்தக் குளத்தில் மூழ்கி எழுந்தால் நீ இழந்த அறிவைப் பெறுவாய், உன் போன ஜன்மம் பற்றியும் அறிந்து கொள்ள முடியும்' என்றார். உடனே நாரதரும் அவ்வாறே செய்தார்.

பழம்பிறப்பு பற்றிய விளக்கம் நாரதருக்குத் தோன்ற லாயிற்று. அந்தப் பிறப்பில் நாரதர் சரஸ்வதி பிராமணனாகப் பிறந்து வாழ்ந்தார். இந்த மானிடப் பிறப்பே வீண் என்றும், குடும்பம், மனைவி, மக்கள் என்பவை எல்லாம் மாயை என்றும் காட்டிற்குச் சென்று தவம் செய்வதுதான், செய்யப்பட வேண்டிய காரியம் என்றும் உணர்ந்தார். உடனே தன் சொத்து முழுவதையும் மகனிடம் கொடுத்துவிட்டுக் காட்டிற்குச் சென்று தவம் புரியலானார். அவர் தவத்தை மெச்சி விஷ்ணு எதிரே வந்த பொழுது, நான் இந்த உடம்புடன் விஷ்ணுவிடம் கரைந்து விட வேண்டும் என்ற வரத்தை வாங்கினார். இந்த உடம்புடன்

அத்தகைய காரியத்தைச் செய்ய முடியாது என்று கூறியவர் அவருக்கு நாரதர் என்ற பெயரையும் கொடுத்து மறைந்தார். நாரதர் இந்த உலகத்தில் நெடுநாள் வாழட்டும், என்று கூறி விட்டு விஷ்ணு மறைந்து விட்டார்.

நீண்ட காலம் தவம் செய்து இறந்த பிறகு பிரம்மலோகம் சென்று அங்கு நீண்ட காலம் தங்கிவிட்டு, பிரம்மனுக்கு மகனாக நாரதர் என்ற பெயருடன் பிறந்தார்.

அடுத்தபடியாக நாரதர், பிரியவரதனை நோக்கி அரசே! அடியிற் கண்ட விஸ்வ மந்திரத்தை உனக்கு உபதேசிக்கப் போகிறேன். அதை நன்கு பயன்படுத்திக் கொள்வாயா என்று கூறி ஒரு பாடலைக் கூறினார்.

ஆயிரக்கணக்கான கண்கள், கைகள், கால்கள் உடைய பரம்பொருளே! உனக்கு வணக்கம், சூரியனையும், சந்திரனையும் கண்களாக உடைய பரம்பொருளுக்கு வணக்கம். சத்திய யுகத்தில் வெள்ளை உடையும், திரேதா யுகத்தில் சிவப்பு உடையும், துவாபர யுகத்தில் மஞ்சள் உடையும், கலியுகத்தில் கறுப்பு உடையும் அணிந்து காட்சிதரும் பரம்பொருளே, உன்னை வணங்குகிறேன். கேடயம், வாள், கதாயுதம், தெய்வீகத் தாமரை ஆகியவற்றை எப்பொழுதும் தாங்கிக் கொண்டிருப்பவரே உனக்கு வணக்கம்.

வராக புராணம், நாராயணனைப் பற்றிப் பின்வருமாறு பேசுகிறது.

**பூமிதேவி :** வராகமே! நாரணனும் பரப்பிரம்மமும் ஒருவரா? அல்லது பலரா?

**வராகம் :** இருவரும் ஒருவரே ஆவர். என்றாலும் நாராயணனை நேரடியாக தரிசிப்பது என்பது கடினமான காரியம். அவர் எடுக்கும் பல்வேறு அவதாரங்கள் மூலமே

அவரைக் காணமுடியும். பிரம்மனும், சிவனும் நாராயணனின் ஒரு பகுதியே ஆவர். பஞ்ச பூதங்களிலும் நாராயணனைக் காணலாம். பிரபஞ்சம் முழுவதுமே நாராயணனின் பல்வேறு சொரூபங்கள் ஆகும்.

அஷ்வசீரா என்ற மன்னன் கபில முனிவரிடம் நெருங்கிப் பழகிக்கொண்டிருந்தான். அவரைப் பெரிய தவமுனிவர் என்று கருதினானே தவிர, அவர் உண்மையில் யார் என்பதை அவன் அறியவில்லை. ஒருநாள் மன்னன் கபிலரிடம் வந்து முனிவரே! நாராயணனை தரிசனம் பண்ண நினைக்கிறேன். அது எப்படி முடியும் என்று கேட்டார். உடனே முனிவர், இரண்டு நாராயணர்கள் இருக்கின்றார்களே, நீ எந்த நாராயணனை தரிசனம் செய்ய விரும்புகிறாய் என்றார். வியப்படைந்த மன்னன், நீங்கள் சொல்லுகின்ற இரண்டாவது நாராயணன் யார் என்றார். கபிலர், அந்த நாராயணனை எளிதில் காணமுடியாது. இதோ என்னைப் பார்க்கிறாய் அல்லவா? நானும் நாராயணன்தான் என்றார். அதுகேட்ட மன்னவன், அது எப்படி முடியும். நான்கு கைகளும், சங்கு சக்கரம், கருடவாகனம் உடையவரல்லவா நாராயணன். இது எதுவுமே உங்களிடம் இல்லையே என்றான் மன்னன். கபிலர் சிரித்துக் கொண்டே அரசனே! என்னை நன்றாகக் கூர்ந்து பார், என்றார். மன்னன் அவரைக் கூர்ந்து பார்க்க, நான்கு கரங்களும், சங்கு சக்கரமும், கருடனும் ஆக கபிலர் காட்சி அளித்தார். வியப்படைந்த மன்னனுக்குக் கபிலர் விளக்கம் கூறுகிறார். "நாராயணனைப் பொறுத்தவரை வெளிப்பட்டு நிற்கும் நிலை, வெளிப்படாது உள்ளடங்கி நிற்கும் நிலை என இரண்டு பகுதிகள் உண்டு. வெளிப்படாத நிலையை யாரும் காணமுடியாது. அது ஒரு பொருளும் அன்று. அதற்கு ஒரு பெயரும் இல்லை, வடிவமும் இல்லை. ஆனால் வெளிப்பட்டு நிற்கும் நிலையில் அவதாரங்களாகத் தோன்றியதோடல்லாமல்,

பஞ்சபூதங்களாகவும் அவற்றின் பேராற்றல்களாகவும் அவர் காட்சி அளிக்கிறார். அவனை உன்னுள்ளும் காணலாம். வெளியில் உள்ள எப்பொருளிலும் காணலாம். நாராயணனை எல்லாப் பொருளிலும் காண்பதுதான் உண்மையான ஞானம் எனப்படும்."

இப்பொழுது மன்னன் கபிலரைப் பார்த்து ஞானம் சிறந்ததா? செயல் சிறந்ததா? என வினா எழுப்பினான். உடனே கபிலர் ரைவியா, வசு இவர்களின் கதையைச் சொல்லத் துவங்கினார்.

**ரைவியாவும் வசுவும்**

பிரம்மனின் பரம்பரையில் வந்தவனாகிய வசு என்ற மன்னன் ஒருநாள் தேவகுருவாகிய பிரகஸ்பதியைக் காணப் புறப்பட்டான். அவனை வழியில் சந்தித்த சித்ரவதா என்ற கந்தர்வன், அரசனே! பிரகஸ்பதி இப்பொழுது அவர் வீட்டில் இல்லை. தேவர்களையும், ரிஷிகளையும் ஒரு கூட்டத்திற்கு வருமாறு பிரம்மா அழைத்திருக்கிறார். எனவே பிரகஸ்பதி அக்கூட்டத்திற்குச் சென்றுள்ளார். கூட்டம் நடைபெறுகின்ற இடத்திற்கு வெளியே நீங்கள் காத்திருந்தால், பிரகஸ்பதி வெளியே வரும்பொழுது அவரைச் சந்திக்கலாம் என்று கூறினார். கந்தர்வனின் யோசனையை ஏற்றுக்கொண்ட வசு மன்னன் கூட்டம் நடைபெறும் இடத்திற்கு வெளியே பொறுமையோடு காத்திருந்தார். அவன் காத்திருக்கும் நேரத்தில் ரைவியா முனிவனும் பிரகஸ்பதியைக் காணவந்தார். வசு மன்னன் தங்கிய இடத்திற்குப் பக்கத்திலேயே முனிவனும் தங்கினான். சற்று நேரத்தில் பிரகஸ்பதி வெளியே வந்தார். இருவரும் எழுந்து மிக்க வணக்கத்தோடு பிரகஸ்பதியைக் கும்பிட்டனர். நான் என்ன செய்ய வேண்டும் என்று அவர் கேட்க, இருவரும் ஒரே குரலில், ஞானம் சிறந்ததா செயல்

சிறந்ததா என்பதை எங்களுக்குத் தெளிவிக்க வேண்டும் என்று வேண்டினர். அதைக் கேட்ட பிரகஸ்பதி நான் இப்பொழுது ஒரு கதை சொல்லப்போகிறேன். அதிலிருந்து உங்கள் வினாவிற்கு விடையை அறிந்து கொள்ளலாம் எனக் கூறிவிட்டுக் கதையைச் சொன்னார்.

கங்கைக் கரையில் சம்யமனா என்ற பிராமணன் வசித்து வந்தான். வேதங்கள் படித்து, அறிவு வளர்த்து ஓரளவு ஞானம் பெற்றவனாகவே இருந்தான். பக்கத்தில் குடியிருந்த வேடன் நிஷ்டுரகா, எந்தக் கலையையோ, ஞானத்தையோ கற்கவில்லை. பறவைகளை வேட்டையாடுவதையே தன் தொழிலாகக் கொண்டிருந்தான். ஒருநாள் இந்த பிராமணன் அந்த வேடனைப் பார்த்து இத்தனை உயிர்களைக் கொல்கிறாயே, நீ செய்வது பாவமில்லையா என்றார். அதற்கு நிஷ்டுரகா வேடன் விடை கூறினான்.

பிராமணனே! யார் யாரைக் கொல்லுகிறோம் என்று நினைத்துப் பார்த்தீரா? எல்லா உடல்களிலும் தங்கி இருக்கும் ஆன்மா கொல்வதும் இல்லை, கொல்லப்படுவதும் இல்லை. உடம்பு செய்கின்ற செயல்களுக்கு ஆன்மா பொறுப்பாவதும் இல்லை. எல்லா உடம்புகளிலும் பரவி இருந்தாலும் ஆத்மா ஒன்றே ஆகும் அல்லவா? எந்த ஒரு தனிப்பட்ட உயிருடன் கூடிய உடம்புக்குத் தீமை செய்தால், அது எல்லா உடம்பி லுள்ள உயிர்களுக்கும் சேரும். ஆகவே ஒரு தனிப்பட்ட உயிரை உடம்புடன் கூடிய உயிரைப் பிரிக்க முடியாது. இதை நீர் புரிந்து கொள்வதற்கு நான் ஒரு செயல் செய்து காட்டுகிறேன் என்று கூறி நெருப்பைப் பற்ற வைத்தான். அது கொழுந்து விட்டு எரியும் பொழுது பிராமணனைப் பார்த்து இந்தத் தீ இத்தனை நாக்குகளோடு எரிகிறதே, ஏதாவது ஒரு நாக்கை மட்டும் எடுத்து அணைத்துப் பார் என்றான். பிராமணன் முயன்றபொழுது எந்த நாக்கில் தண்ணீர் பட்டாலும் அது

தீ முழுவதையும் அணைத்துவிடக் கண்டான். இப்பொழுது வேடன் சொன்னான், எந்தச் செயலையும் நான் செய்கிறேன் என்று நினைத்தால் அது ஆணவத்தின் எல்லையாகிவிடும். நாராயணன் என்னைக் கருவியாகக் கொண்டு செய்கிறான் என்று நினைத்தால் இதில் கோபிப்பதற்கு, அகங்காரம் கொள்வதற்கு இடமே இல்லை என்று கூறியவுடன், தேவ உலகினின்று விமானம் வந்து அவ்வேடனை அழைத்துச் சென்றுவிட்டது.

இக்கதையைக் கூறிவிட்டு பிரகஸ்பதி, அரசன், முனிவன் ஆகிய இருவரையும் பார்த்து உங்கள் கேள்விக்கு விடை கிடைத்து விட்டதல்லவா என்று கேட்க அவர்கள் மகிழ்ச்சியுடன் திரும்பி விட்டனர். இக்கதையினைக் கேட்ட அஷவசீரா தன் மகனிடம் அரசாட்சியை ஒப்படைத்து விட்டுக் காட்டிற்குத் தவம் புரியச் சென்றான்.

**வசு**

தன் மகன் விவஸ்வானிடம் அரசாட்சியை ஒப்படைத்து விட்டு புஷ்கரா தீர்த்தம் சென்று யாகம் ஒன்றினைச் செய்தார். அந்த யாகத்தினின்று ஓர் உருவம் வந்து, 'நான் என்ன செய்ய வேண்டும்' என்று வசுவைப் பார்த்துக் கேட்டது. வசுவும், 'நீ யார்? எங்கிருந்து வருகிறாய்?' என்று கேட்டான். அந்த உருவம் கீழ்க்கண்ட கதையினைச் சொல்லத் துவங்கியது.

முற்பிறப்பில் வசு காஷ்மீரத்தில் அரசு செலுத்தி வந்தான். அவன் ஒருமுறை வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அப்பொழுது ஒரு முனிவர், மான் வடிவத்தில் இங்கும் அங்கும் உலவிக்கொண்டிருந்தார். மானை முனிவர் என்று அறியாத வசு, அம்மானைக் கொன்றுவிட்டான். உண்மையை அறிந்து வருந்திய அரசன், பிராயச்சித்தங்கள் பல செய்தான். ஒருநாள் வசு அரசன் தாங்கொணா வயிற்றுவலி காரணமாக இறந்து

போனான். அவ்வாறு இறக்கும் சமயத்தில் 'நாராயணா' என்று கூறியபடி உயிர் துறந்தான். யாக குண்டத்தில் இருந்து வெளிவந்த உருவம் "நான் ஒரு ராட்சசன். வசு அரசனின் பிரம்மஹத்தி தோஷத்தால் நான் உன் உடம்பில் புகுந்து கொண்டேன். அதனாலேயே மிகுந்த வயிற்றுவலியினால் நீ துன்பமுற்று இறந்து போனாய்" என்று கூறிற்று. அவ்வாறு இறந்த மன்னன் நாராயணா என்று கூப்பிட்டதால் வைகுண்ட வாசிகள் வந்து, ராட்சசனிடமிருந்து அரசனை மீட்டு அழைத்துச் சென்றனர். அரசன் வைகுண்டத்தில் நீண்ட ஆண்டுகள் மகிழ்ச்சியுடன் இருந்து பின் மீண்டும் காஷ்மீரத்து அரசனாகப் பிறந்தான். பிரம்ம ராட்சசனும் மீண்டும் அரசன் உடம்பில் புகுந்து கொண்டான். அரசன் ஒரு யாகம் செய்து விஷ்ணுவின் பெயரைக் கூறியவுடன், ராட்சசன் அரசன் உடம்பிலிருந்து வெளியே வரும்படி ஆயிற்று. ஆனால் இம்முறை விஷ்ணுவின் நாமத்தைக் கேட்டதால், பிரம்ம ராட்சசனின் பாவங்கள் அனைத்தும் விலகி, அவன் நேர்மையானவனாக மாறினான். வசு அரசன் அவனைப் பாராட்டி அவனுக்கு ஒரு வரம் கொடுக்க விரும்பினான். அந்த வரத்தின்படி 'பிரம்மராட்சசன் ஒரு வேடனாகப் பிறந்து தர்மவியாதா என்ற பெயருடன், நேர்மையானவனாகத் திகழ்வான் என்று கூறினான். வரத்தைக் கொடுத்த வசு அரசன், வைகுந்தலோகம் சென்றான்.

### ரைவியாவின் கதை

ஒருமுறை ரைவியா என்ற முனிவன் தனது குடிலில் அமர்ந்திருக்கும் பொழுது, மற்றொரு முனிவன் திடீரென்று உள்ளே நுழைந்து, ரைவியாவுக்குத் தன் வாழ்த்துக்களைத் தெரிவித்தான். தெரிவித்த உடனேயே வந்தவன், காற்றடைத்த பையைப் போல உடம்பு பருமனாகிக் கொண்டே போக, மிக மிகப் பெரிய வடிவத்தை எடுத்தான். வியப்பில் ஆழ்ந்த

ரைவியா, முனிவனே! நீ யார்? என்னை ஏன் வாழ்த்தினாய்? என்ற இரு வினாக்களை ரைவியா கேட்க அந்த உருவம் பதில் கூறிற்று. முதலில் நான் யார் என்பதை நீ அறிந்துகொள். பிரம்மனின் நான்கு புதல்வர்களில் ஒருவனாகிய சனத்குமாரன் தான் நான். உன்னை வாழ்த்தியதற்கு ஒரு காரணம் உண்டு. நீ புண்ணிய தீர்த்தமாகிய கயைக்குச் சென்று உன் மூதாதையர் கட்குப் பிண்டம் போட்டாய் அல்லவா? அது ஒரு மிகச் சிறந்த காரியம், அதனால்தான் உன்னை வாழ்த்தினேன். அதன் சிறப்பை அறிய ஒரு கதை சொல்கிறேன் கேட்பாயாக என்று கூறிவிட்டு, கதை சொல்ல ஆரம்பித்தார் சனத்குமாரர்.

ஒருமுறை வைசால நாட்டை ஆண்ட விசாலா என்ற மன்னன், எல்லாச் செல்வங்களும் நிறைந்திருந்தாலும், தனக்கு மகன் இல்லை என்பதால் பெரிதும் நொந்து போய் இருந்தான். அமைச்சர்கள் முதலானோர் ஒன்றுகூடி ஆராய்ந்து, 'அரசே! கயைக்குச் சென்று உன்னுடைய முன்னோர்கள் திருப்தி அடையும் வகையில் பிண்டங்கள் போட்டால் உன் குறை நீங்கும்' என்று கூறினார்கள். அப்படியே விசால மன்னன் கயைக்கும் சென்று, பிதுர்க்களுக்கு வழிபாடு செய்தான். அப்பொழுது ஆகாயத்தில் மூன்று வடிவங்கள் தோன்றி நின்றன. ஒரு வடிவம் தூய்மையான வெண்மை உடையது; மற்றொன்று சிவப்பு நிறமுடையது; மூன்றாவது வடிவம் கறுப்பு நிறம் கொண்டது. தோன்றிய மூன்று வடிவங்களில் வெண்மையான வடிவம் விசால மன்னனின் தந்தை, சிவப்பு வடிவம் அவன் பாட்டன், கறுப்பு வடிவம் மன்னனின் கொள்ளுப் பாட்டன் வடிவம். விசால மன்னனின் தந்தை எவ்வித பாவமும் செய்யாததால் வெண்மை நிறத்துடன் இருந்தார். அவன் பாட்டன், கொள்ளுப் பாட்டன் பூமியில் வாழ்ந்த பொழுது மிகுந்த தவறு செய்ததால் இந்நிறங்களைப் பெற்றனர். இப்பொழுது விசால மன்னன் கயையில் பிதுர்க்கள்

அனைவருக்கும் பிண்டம் போட்டதால் அவனுடைய பாட்டன், கொள்ளுப் பாட்டன் ஆகியவர்கள் செய்த பாவங்களில் இருந்து விடுபட்டுத் தூய்மை அடைந்தார்கள்.

சனத்குமாரன் சொல்லியதிலிருந்து கயையில், பிதுர்க் களுக்குப் பூஜை செய்வதால் அவர்கள் செய்த பாவங்களில் இருந்து உடனே விடுதலை அடைகிறார்கள் என்பதும் பிதுர்க் கடன் செய்பவர்கள் தாங்களும் பெரிய புண்ணியத்தைப் பெறுகிறார்கள் என்பதும் இக்கதையின் மூலம் தெரிய வருகிறது.

சனத்குமாரர் மறைந்த பின் ரைவிய முனிவர் விஷ்ணுவை கதாதர சொரூபத்தில் தியானம் செய்தார். சிலகாலம் கழித்து விஷ்ணு அவருக்கெதிரே தோன்றி, என்ன வரம் வேண்டும் எனக் கேட்க, சனத்குமாரர் வாழ்கின்ற உலகில் தானும் சென்று வாழ வேண்டும் என்று முனிவர் கேட்க, அவ்வாறே ஆகட்டும் என விஷ்ணு வரம் கொடுத்தார்.

**வைஷ்ணவி தேவி**

பிரபஞ்சம் பதினான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றில் ஏழு பிரிவுகள் மேலுலகம் என்றும், மற்ற ஏழும் கீழுலகம் என்றும் கூறப்படும். மேலுலகம் என்று கூறப்படும் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனலோகம், சத்யலோகம், தபலோகம் ஆகியவை. கல்பத்தின் முடிவில் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகியவை அழிந்துவிடும். மீதமுள்ள நான்கு லோகங்கள் மகாப்பிரளய காலத்தில் மட்டுமே அழிகின்றன. மக்கள் பூலோகத்திலும், பறவைகள் புவர்லோகத்திலும், நேர்மையும், தகுதியும் உள்ளவர்கள் சுவர்லோகத்திலும், முனிவர்கள் மகர்லோகத் திலும் உள்ளனர்.

மந்தரமலை என்ற மலை, பூமியில் அமைந்துள்ளது. வைஷ்ணவி தேவி திருமணம் செய்து கொள்வதில்லை என்று முடிவு செய்து, மந்தர மலைக்குச் சென்று தவம் இயற்றினாள். *(வராக புராணம் வைஷ்ணவி தேவியும், சரஸ்வதியும் ஒன்றே எனக் கூறுகிறது.)*

ஒரு சமயம் வைஷ்ணவி தேவியின் தவம் சற்றுக் கலைந்து, அதிலிருந்த லட்சக்கணக்கான அழகான பெண்கள் தோன்றினர். இந்தச் சிறு தேவதைகளுக்கென ஒரு அழகிய அரண்மனையை நிர்மாணித்தனர். பிரம்மன், இந்திரன் ஆகியோரைக் காணச் சென்றுகொண்டிருக்கும் பொழுது, இந்த அழகிய வடிவம் கொண்ட வைஷ்ணவி தேவி, மற்றும் உள்ள பெண்களைப் பார்த்து வியப்படைந்தார். இவர்களைக் கண்டவுடன், மிகவும் சக்தி வாய்ந்த மகிஷாசுரனை ஒழிப்பதற்கு ஒரு நல்ல உபாயத்தைக் கண்டார் நாரதர்.

கடற்கரையில் மாபெரும் நகரம் அமைத்து அதில் ஆட்சி செய்து வந்த மகிஷாசுரனைக் காணச் சென்றார் நாரதர். அவனைப் பார்த்து மந்தர மலையில் வைஷ்ணவி தேவி என்ற அழகான பெண்ணைப் பார்த்தேன். உன்னைவிடச் சிறந்த மணவாளன் அவளுக்குக் கிடைப்பது கடினம். யாரையாவது அனுப்பி அவளை மணம் பேசி முடித்துக் கொள் என்று கூறிப் போனார் நாரதர்.

நாரதர் பேச்சைக் கேட்ட மகிஷன் தன் பிரதானிகள் முதலானவர்களை அழைத்தான். அவர்களில் யாரையாவது அனுப்பி மணம் பேசலாம் எனக் கூறினார். மகிஷன் அதற்கு ஒப்புக் கொள்ளாமல் பெரிய படையை விரூபாக்ஷன் தலைமையில் அனுப்பிப் போரில் வைஷ்ணவியைத் தோற்கச் செய்து மணந்து கொள்வதே சரி என்று எண்ணினான்.

அதன்படி ஒரு பெரிய அசுரப்படை மந்தர மலைக்கு வந்தது. தேவர்கள் அனுப்பிய படை அசுரர்களை எதிர்க்க முடியாமல் சின்னாபின்னப்பட்டு ஓடின. அப்பொழுது மகிஷனுடைய பணியாளர்களில் ஒருவராகிய வித்யுத்பிரபா என்பவர் வைஷ்ணவியிடம் சென்று, மகிஷனைவிடச் சிறந்த மாப்பிள்ளை கிடைப்பது முடியாத காரியம். ஆகவே அவனை மணந்து கொள் என்று புத்திமதி கூறினார். இத்தோடு நில்லாமல், வித்யுத்பிரபா, மகிஷனுடைய பழைய வரலாற்றையும் சொல்ல ஆரம்பித்தார்.

**மகிஷனின் பூர்வக் கதை**

முன்னொரு காலத்தில் விப்ரசித்தி என்ற கொடிய அரக்கன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு மிக அழகான ஒரு பெண் இருந்தாள். மகிஷ்மகி என்ற பெயருடைய அவள், தன் தோழிகளோடு சேர்ந்து அழகிய பள்ளத்தாக்கு ஒன்றில் சென்று கொண்டு இருக்கையில், ஆற்றங்கரையில் அமைந்த அழகிய ஆசிரமம் கண்டார்கள். அந்த ஆசிரமம், அது அமைந்திருக்கும் சூழ்நிலை ஆகியவற்றைக் கண்ட மகிஷ்மகி அந்த ஆசிரமத்தைத் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள். உள்ளே ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்து எப்படியாவது விரட்டிவிட வேண்டும் என்று முடிவு செய்தாள். அவர் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டால், அந்த ஆசிரமம் தனக்குக் கிடைக்கும் என்று எண்ணிய மகிஷ்மகி ஒரு பெண் எருமை வடிவு கொண்டு ஆசிரமத்தின் வெளியே குழப்பம் விளைவித்தாள். பிறகு முனிவனை பயமுறுத்த அவ்வடிவுடன் உள்ளே நுழைந்தாள். முதலில் சற்று பயந்து போன முனிவர் உடனே தன் அறிவு விளக்கத்தால் அந்த எருமை மகிஷ்மகி என்பதைக் கண்டு விட்டார். கடுங் கோபம் கொண்ட அவர், நீ ஒரு பெண் எருமையாக நூறு ஆண்டுகள் திரிவாயாக என்று சாபமிட்டார். மகிஷ்மகி தன்

பிழையைப் பொறுக்க வேண்டும் என்று மிகவும் வேண்டிக் கொள்ள அவளுக்கு எப்பொழுது ஒரு ஆண் குழந்தை பிறக்கிறதோ அப்பொழுது அவளுடைய சாபம் நீங்கும் என்றும், சாப விமோசனம் கூறினார்.

நர்மதை ஆற்றின் கரையிலேயே இந்தப் பெண் எருமை திரிந்து கொண்டிருக்கும் பொழுது அந்த ஆற்றில் ஒரு விசேஷம் நடைபெற்றது. சிந்து துவீபா என்ற முனிவனின் சக்தியால், நர்மதை ஆற்று நீர் ஒரு மாபெரும் சக்தியைப் பெற்றது. அந்த நேரத்தில் இந்தப் பெண் எருமை நர்மதை நீரில் குளிக்கவும், அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை தான் மூன்று உலகங்களும் யாருடைய பெயரைக் கேட்டவுடன் நடுங்குகின்றனவோ அந்த 'மகிஷாசுரன்' ஆகும்.

இதே மகிஷாசுரன் தான் வைஷ்ணவி தேவியை மணக்க வேண்டும் என்ற எண்ணத்தில் தூதர்களை அனுப்பினான். வைஷ்ணவி தேவி தன்னையோ தன் பரிவாரங்களில் எந்த ஒருவரையுமோ கூட அவன் மணக்க முடியாது என்று சேதி அனுப்பி விட்டாள். அதன் பிறகு தேவபடைகள் அழிந்தாலும் வைஷ்ணவி தேவியும், அவரது துணைவியரும் போருக்கு எழுந்த பொழுது அசுரப் படைகள் அழிந்தன. இறுதியாக தேவியே, மகிஷாசுரனுடன் நேரடியாகப் போர் புரிந்தார். பல காலம் போர் புரிந்தபின், வைஷ்ணவி தேவி மகிஷனை வென்றாள் என்று வராக புராணம் கூறுகிறது.

*(இக்கதையை விரிவாகச் சொல்லும் மார்க்கண்டேய புராணம், தேவி பாகவதம் ஆகிய அனைத்துமே துர்க்கைதான் மகிஷனைக் கொன்றவள் என்று பேசுகின்றனவே தவிர, வைஷ்ணவியின் பெயரைக் கூறவில்லை என்பதைச் சிந்திக்க வேண்டும்.)*

## வராக வடிவிலிருந்த விஷ்ணு, பிருத்விக்குச் சொன்ன சத்யதபா முனிவர் கதை

*சத்யதபா என்ற முனிவர் காட்டில் தவம் செய்து கொண் டிருந்தார். ஒரு முறை சுள்ளிகளைச் சேர்த்துக் கட்டுவதற்காக வெட்டின பொழுது அவருடைய கையிலுள்ள சுண்டுவிரல் வெட்டப்பட்டு தெறித்து விட்டது. வெட்டப்பட்ட விரலில் இருந்து ரத்தம் வராமல், சாம்பல் போன்ற பொடி வெளி வந்தது. துண்டிக்கப்பட்ட விரலை எடுத்து வெட்டுண்ட பகுதியில் வைத்து அமுக்கியவுடன் அந்த விரல் உடம்புடன் ஒட்டிக் கொண்டது. அந்த முனிவர் எந்த மரத்தடியில் தங்கி இருக்கும் பொழுது இந்நிகழ்ச்சி நடைபெற்றதோ அந்த மரத்தில் கின்னர தேவ ஜாதியைச் சேர்ந்த ஒரு கணவனும் மனைவியும் இந்த நிகழ்ச்சி முழுவதையும் பார்த்துக்கொண்டிருந்தனர்.*

*இதில் ஏற்பட்ட அதிசயம் தாங்காமல் அவர்கள் இருவரும் தேவேந்திரனிடம் சென்று தாங்கள் கண்டதைக் கூறினர். தேவேந்திரன் விஷ்ணுவிடம் சென்று இவர்கள் கூறியதை எடுத்துச் சொல்லி, அந்த முனிவனைச் சோதிக்க வேண்டு மென்று கேட்டுக் கொண்டான்.*

*இந்திரன் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட விஷ்ணு ஒரு பன்றி வடிவெடுத்து சத்யதபா ஆசிரமத்தைச் சுற்றிக் கொண்டிருந்தார். அவர் உடம்பில் ஓர் அம்பு பாதி குத்திக் கொண்டும், பாதி வெளியிலும் நின்றது. சற்று நேரத்தில் இந்திரன், வேடன் வடிவில் முனிவரிடம் வந்தான். முனிவரே உமது ஆசிரமத்தைச் சுற்றி பாதி குத்திய அம்புடன் ஒரு பன்றி சுற்றி வருவதைப் பார்த்தீரா? நான்தான் அந்த அம்பை எய்தேன். ஆனால் ஒரே ஒரு அம்பு குத்தினதால் அந்தப் பன்றி சாகவில்லை. இப்பொழுது அந்தப் பன்றிதான் என் குடும்பம் முழுவதற்கும் ஆகாரம் ஆக வேண்டும். ஆகவே பன்றி எங்கே போயிற்று என்று சொல்லும்" என்று கேட்டான்.*

இந்த நிலையில் சத்யதபா சிந்திக்கத் துவங்கினார். கடவுள் கொடுத்த ஐந்து உறுப்புகளும் ஒவ்வொரு பணிக்காகவே ஏற்பட்டுள்ளன. அடுத்ததொரு பணியை அது செய்யாது. கண் பார்க்கும். பார்த்ததைப் பற்றி வாயில்லாத காரணத்தால் அது சொல்லாது. மூக்கு மோக்கும். காது கேட்கும் என்றாலும் இவை ஒவ்வொன்றும் நிகழ்ந்ததைச் சொல்ல வேண்டுமானால் வாயின் உதவியை நாட வேண்டும். வாய், கண் பார்த்ததைச் சொல்லுமே தவிர, பார்க்கும் சக்தி வாய்க்கு இல்லை. எனவே கண் பார்த்ததை வாய் சொல்ல வேண்டும் என்று அவசிய மில்லை. முனிவரின் கண் பன்றியைப் பார்த்திருந்தாலும் அவர் வாய் பேசாது நின்று விட்டார். பொய் கூறாமலேயே முனிவர் பன்றியைக் காப்பாற்றிவிட்டார். இதனால் மகிழ்ந்த இந்திரனும், விஷ்ணுவும் முனிவரின் எதிரே காட்சி தந்தனர். இதனால் சத்யதபா என்ற முனிவரும் அவர் குரு அருணியும் விஷ்ணுவிடம் ஐக்கியமாயினர்.

## அடுத்தபடியாக வராகம், பிருத்விக்குச் சொன்ன கதை

சுவேதா என்ற மன்னன் இலவிருதவர்ஷா என்ற நாட்டை ஆண்டு வரும்பொழுது பல யாகங்களும், தியானங்களும் செய்தான். அவன் குருவான வசிட்டர், அரசே! இந்த தானங் களோடு உண்பதற்குரிய அரிசியையும் தானம் செய்யுங்கள் என்றார். பொன், வெள்ளி இவற்றின் சிறப்பில் தன்னை மறந்திருந்த மன்னன் அரிசி தானத்தை மிக மட்டமாகக் கருதினான். ஆகவே அவன் அரிசி தானம் செய்யவில்லை. சொர்க்கம் சென்ற சுவேதா உண்பது முதற்கொண்டு எல்லாவற்றிற்கும் வேண்டுமான பொருள் சொர்க்கத்தில் இருப்பதைக் கண்டான். ஆனால் அரிசிச் சோறு தின்று பழகிய சுவேதாவிற்கு, சொர்க்கத்தில் அரிசியே கிடைக்கவில்லை.

உடனே அவன் பூமிக்குத் திரும்பி தான் இறந்த இடத்தை வந்து பார்த்தான். அங்கு பிண்டம் போட்ட அரிசி சிதறிக் கிடந்ததைக் கண்டு அதை உண்ண ஆரம்பித்தான். அப்போது அங்கு வந்த வசிட்டர், நான் சொல்லும்பொழுது நீ கேட்கவில்லை. அரிசி தானத்தை அலட்சியமாக நினைத்துவிட்டாய். இப்பொழுது தெரிகிறதா அதன் அருமை? இவ்வாறு அவனுக்கு அறிவுரை கூறிய வசிட்டர் மன்னன் சுவேதா விளங்கிக் கொள்வதற்காக மற்றொரு கதையும் எடுத்துக் கூறினார்.

விஷிதஷ்வா என்ற மன்னன் யாகம் செய்யும் பொழுது உணவுப் பண்டங்களையும் எள், அரிசி முதலானவற்றையும் தானம் செய்ய வேண்டும் என்று பெரியோர்கள் கூறிய அறிவுரையைச் சட்டை செய்யாமல் இருந்தான். அதனால் அவன் சொர்க்கம் சென்று பசியினால் வாட நேர்ந்தது. எனவே தானம் செய்பவர்கள் உணவுப் பொருட்களையும் தானம் செய்ய வேண்டும் என்று கூறி முடித்தார்.

இதுவரை கூறிக் கொண்டு வந்த அனைத்தும் வராக புராணத்தில், வராக சம்ஹிதையின் ஒரு பகுதி ஆகும். இந்தப் பகுதி முதன் முதலில் பரப்பிரம்மத்தால், பிரம்மனுக்குச் சொல்லப்பட்டது. பிரம்மனில் இருந்து, புலத்தியனுக்கும், அடுத்து பரசுராமனுக்கும், அடுத்து உக்ரனுக்கும், அடுத்து மனுவுக்கும் சொல்லப்பட்டது. இதைச் சொல்லிக் கொண்டு வந்த வராகம், இந்த சம்ஹிதை போக புராணப் பகுதியை பிற்காலத்தில் வேதவியாச முனிவர் பாடல்களாகப் புனையப் போகிறார் என்றும், பிறகு அவரே லோமஹர்ஷனருக்கும், சௌனகருக்கும் அதைச் சொல்லித் தருவார் என்றும், எதிர்காலத்தைப் பற்றி வராகம் கூறிற்று. இந்தப் பகுதியை கார்த்திகை துவாதசி அன்று படிப்பவர், அவர் விரும்பிய வற்றை எல்லாம் பெறுவர்.

## வராகம் பூமியை மீட்ட கதை

சனத்குமார முனிவர், ஒரு முறை பூமிதேவியிடம் அவள் வராகத்தினால் காப்பாற்றப்பட்ட கதையினைக் கூறுமாறு கேட்டார். பூமிதேவியும் அக்கதையைக் கூறினாள். ஒருமுறை பூமியானது பாதாள உலகில் மூழ்கிப்போன போது, பூமி தேவி விஷ்ணுவிடம் வேண்டி தன்னைக் காப்பாற்றும்படிக் கேட்டாள். விஷ்ணுவைப் புகழ்ந்து அவள் பாடிய பாடல்களே கேசவ ஸ்துதி எனப்படும். இதனைப் படிப்பவர்கள், ஏழ்மை, பாவம் இவற்றினின்று விடுதலை பெறுவர். பூமிதேவி கூறியதைக் கேட்ட விஷ்ணு, மிகப் பெரிய வராக உருவம் எடுத்தார். ஆறாயிரம் யோஜனை உயரமும், மூன்றாயிரம் யோஜனை அகலமும் கொண்டிருந்தது அவ்வராகம். கடலினுள் புகுந்த வராகத்தினால் பூமிக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. பல மலைகள் கடலினுள் விழுந்தன.

வராகம், பூமியைத் தேடிக் கண்டுபிடித்து, தன் கொம்பு களிடையே வைத்து நீருக்கு மேலே கொண்டு வந்தது. ஆயிரம் வருடங்கள் தன் கொம்புகளிடையே பூமியை வைத்திருந்து, பிரபஞ்ச உற்பத்தியின் போது, பூமியை அதற்குரிய இடத்தில் வைத்தது.

## விஷ்ணுவைத் திருப்திப்படுத்துதல் எவ்வாறு ?

பூமிதேவியை நோக்கி வராகம் சொல்லியதாவது: மக்கள் மேற்கொள்ளும் சடங்குகள், கிரியைகள், ஹோமங்கள் என்பவற்றால் நான் அதிகம் திருப்தி அடைவதில்லை. துவாதசி நாளன்று வெண்மையான உடை உடுத்திக் கொண்டு, வெண்மையான மலர்கள் கொண்டு விஷ்ணுவைப் பூஜித்தால் போதுமானது. அவ்வாறு பூஜை செய்பவர் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் ஒருசேர விஷ்ணுவை நினைப்பதில் ஈடுபடுவாரேயானால் அதைவிட விஷ்ணுவைத் திருப்தி

செய்ய வேறு எந்த வழியும் தேவையில்லை. உண்மையான அன்பு ஒன்றையே விஷ்ணு விரும்புகிறார். சடங்குகளில் அன்புக்கு முக்கியத்துவம் இல்லை. ஆதலால் விஷ்ணு அதை அதிகம் விரும்புவதில்லை.

நால்வகை வர்ணத்தாரும் விஷ்ணுவின் ஆசியைப் பெறத் தகுதி உடையவர். மேல்நால்வகையினரும் நற்பழக்கங்கள், தூயசிந்தனை, பிறருக்குக் கொடுத்தல், அன்புடைமை, பிறர் பொருளுக்கு ஆசைப்படாதிருத்தல் ஆகிய குணங்களுடன் இருப்பார்களேயானால் விஷ்ணுவின் ஆசியை எளிதில் பெற முடியும்.

சைவ உணவு உட்கொண்டு அமைதியாகவும், பொறி புலன்களை அடக்கிய முறையிலும், பிறரிடம் பகைமை, பொறாமை முதலிய தீக்குணங்கள் இல்லாமலும் யார் விஷ்ணுவை வழிபடுகிறார்களோ அவர்கள் எளிதில் விஷ்ணுவின் அருளைப் பெறுகிறார்கள். போதுமென்று மனத்தோடு வாழும் மனிதனையும், கணவனிடம் அன்பு கொண்ட மனைவியையும் விஷ்ணு அருள் செய்கிறார். விஷ்ணு மன்னிக்க முடியாததும், ஏற்றுக் கொள்ள முடியாததும் ஆகிய சிலவற்றைக் காணலாம்.

1. அசுத்தமான உணவை உண்ணுதல், 2. குளிக்காமலும், இறந்த உடலைத் தொட்டு, சுடுகாட்டில் எரித்து வந்தும் தன்னைத் தூய்மை செய்து கொள்ளாது விஷ்ணுவை வணங்குதல், 3 அமைதி இல்லா மனத்துடனும், யாரிடமாவது கோபம் கொண்ட மனநிலையிலும், 4. மீன் உணவு வாத்துக் கறி உண்ட பின்பு, 5. விஷ்ணுவிற்குப் படைக்காமல் உண்ணப் படுகின்ற உணவு, 6. மது உண்ட பின்பு, 7. பன்றிக் கறி உண்ட பின்பு, 8. இசைவு இல்லாமல் விஷ்ணு கோவிலைத் திறப்பதையும் அவர் ஏற்றுக் கொள்வதில்லை.

## இறந்தவர்களுக்குச் செய்யும் மரியாதை

இறந்து போன மூதாதையர்களுக்கு எப்படி மரியாதை செலுத்த வேண்டும் என்று மார்க்கண்டேய முனிவரும் வராகமும் விவாதித்தனர்.

ஏழு தலைமுறைகளை மூதாதையர் என்று சொல்வர். இதில் ஒருவனுக்கு முற்பட்ட நான்கு தலைமுறைகளை பருப் பொருளாகவும், அதற்கு முற்பட்ட மூன்று தலைமுறைகளை நுண்பொருளாகவும் கொண்டு வழிபட வேண்டும். முன்னோர்களுக்குச் சிரார்த்தம் முதலிய கிரியைகள் செய்யும் பொழுது பொருட் செல்வம் என்பதும், பொருள்களைப் படைத்துத்தான் வழிபடவேண்டும் என்பதும் ஒரு பொருட்டே அல்ல. பொருளில்லாதவன் மூதாதையர்களை உளமார நினைத்து, தூய்மையான அன்புடன் கைகளைக் குவித்து வணங்கினால் அதுவே போதுமானது. மூதாதையர்கள், பொருள்களைப் படைத்து மனத்தில் அன்பில்லாமல் சடங்கு களாகச் சிரார்த்தம் முதலிய கிரியைகள் செய்து மகிழ்வதைவிட, முதலில் சொன்ன முறையில் அன்போடு செய்யப்படும் வணக்கத்தில் அதிகம் மகிழ்கிறார்கள். இறந்தவர்களை எரிக்கும் சடங்கிற்கு எந்தவிதமான காலக்கட்டுப்பாடும் தேவையில்லை. உத்தராயணம், தட்சணாயணம், எந்த நட்சத்திரம் என்று கவலைப்படத் தேவையில்லை.

## துர்ஜயாவின் கதை

சத்ய யுகத்தில் இக்கதை இடம் பெற்றது. அரசன் சுப்ரதிகாவிற்கும், வித்யுத்பிரபாவிற்கும் மகனாகப் பிறந்தவன் துர்ஜயா. இவர் துர்வாசரிடமிருந்து வரமும், சாபமும் பெற்றவன். அவர் கொடுத்த வரத்தின்படி இவன் யாராலும் வெல்ல முடியாதவன். அவர் கொடுத்த சாபத்தின்படி இவன் கல் போன்ற மனத்தினை உடையவன். ஒரு சமயம் சுவயம்பு

மனுவின் மகன்களாக ஹத்தி, சுஹத்ரி இருவரும் பெரும் படையுடன் சென்று தேவர்களை அழிக்க ஆரம்பித்தனர். அச்சமயம் விஷ்ணு, எண்ணிலடங்கா உருவம் எடுத்து, இவர்களைச் சுமேரு மலையில் சண்டையிட்டு வென்றார். ஹத்ரி, சுஹத்தி என்ற இருவர் மட்டுமே மீதமிருந்தனர். அவர்களும் மந்தர மலைக்கு ஓடிவிட்டனர். அங்கு ஹத்ரியின் மகள் சுகேஸியும், சுஹத்ரியின் மகள் மிஸ்ரகேஸியும் இருந்தனர். மந்தர மலைக்கு வந்த துர்ஜயன், இவ்விரு அழகிய பெண் களைப் பார்த்து மயங்கி மணம் செய்து கொண்டான். அவனுக்கு இரு மக்கள் தோன்றினர்.

துர்வாச முனிவரின் வரத்தின்படி, துர்ஜயன் மூவுலகும் வென்று, இந்திரனை தேவருலகில் இருந்து விரட்டினான். ஒரு சமயம், வேட்டைக்குச் சென்ற துர்ஜயன், முனிவர் கௌரமுகாவின் ஆசிரமம் வந்தடைந்தான். அவனுடன் அவனது ஐந்து படைத்தலைவர்களும், அவர்களது சேனைகளும் உடன் வந்தனர். இவ்வளவு பேருக்கும் ஒரு முனிவரால் உடனே உணவு படைப்பதென்பது முடியக் கூடிய காரியமன்று. ஆனால் கௌர முனிவர் நாராயணனிடம் வேண்டி சிந்தாமணி என்ற ஓர் ஆபரணத்தைப் பெற்றிருந்தார். இந்த ஆபரணத்தைக் கையில் கொண்டு, ஒருவர் என்ன வேண்டும் என்று நினைத்தாலும், அது உடனே கிடைத்துவிடும். ஆகையால் கௌரமுகா முனிவர் துர்வஜாவிற்கும், அவனுடன் வந்திருந்த போராளிகள் அனைவருக்கும் வேண்டிய உணவு, தங்கும் இடம் மற்றும் அனைத்து வசதிகளைச் செய்து கொடுத்தார்.

இவ்வளவு சக்தி வாய்ந்த சிந்தாமணி மாலையைப் பார்த்து மிகவும் ஆசை கொண்ட துர்ஜயன், தன் மந்திரியாகிய விரோசனனை அனுப்பிக் கேட்டான். அவர் கொடுக்க மறுக்கவே, தன் சேனைகளை அனுப்பி மாலையினைக் கவர்ந்து

வருமாறு கூறினார். கௌரமுக முனிவர், தன்னைக் காப்பாற்றும்படி சிந்தாமணி மாலையினை அடிக்க லட்சக் கணக்கான படைவீரர்கள் தோன்றி துர்ஜயனின் படையினை விரட்டி அடித்தனர். விரோசனன் கொல்லப்பட்டான். ஹத்ரி, சுஹத்ரி இருவரும் தத்தம் படைகளை உதவிக்கு அனுப்பினர். ஆனால் கௌரமுக முனிவர் விஷ்ணுவை வேண்ட, விஷ்ணுவும் தன் சக்கரத்தால் துர்ஜயன், அவன் சேனை அனைவரையும் அழித்தார்.

நொடி என்பது காலத்தின் மிகச் சிறிய அளவாகும். கண்ணை ஒருமுறை சிமிட்ட ஒரு நொடி ஆகும். விஷ்ணு ஒரு நொடிப் பொழுதில் துர்ஜயன் படைகளை அழித்தார். வடமொழியில் நிமிவு என்றும் பொருளையுடைய நொடிப் பொழுதில் படைகளை அழித்த இடம் நைமிசாரண்யம் எனப் பெயர் பெற்றது. மிகப் புண்ணியம் வாய்ந்த இந்தக் காட்டில் விஷ்ணு எப்பொழுதும் இருந்து வருகிறார்.

பிரபசா என்ற பெயருடைய நைமிசாரண்ய வனத்திற்கு வந்த முனிவர் கௌரமுகா அங்கு தவம் இயற்ற ஆரம்பித்தார்.

**திதிகள்**

கௌரமுக முனிவர், சிந்தாமணியிடம் வேண்டிக் கொண்டவுடன் லட்சக்கணக்கான வீரர்கள் அதிலிருந்து வந்தார்கள் அல்லவா? விஷ்ணுவின் அருளால் அவர்கள் மன்னர்களாகத் திகழ்ந்தார்கள். இந்த மன்னர்களில், ஒரு மன்னன் வழிவந்தவன் பிரஜபாலா என்ற அரசன். அவன் ஒருமுறை மகாதபா என்ற சக்திவாய்ந்த முனிவரைச் சந்திக்க அவரது ஆசிரமம் சென்றான். பிரஜபாலா மன்னனிடம் அவர் திதிகளைப் பற்றியும், அவற்றின் பயன்கள் பற்றியும் கூறினார். சில குறிப்பிட்ட திதிகளில், இறைவன் மீது பாடல்களைக்

கூறும்பொழுது, அவை சிறப்பான பலன்களைப் பெறுகின்றன என்றார்.

**பிரதிபாதா**

சுக்கிலபட்சம் முதல் நாள் பிரதிபாதா எனப்படும். இது அக்னி தேவனுக்குரிய நாள் ஆகும். பிரபஞ்ச உற்பத்தியின் போது, பிரம்மா தன்னுடைய கோபக்கனலில் இருந்து அக்னி தேவனை உருவாக்கினார். ஆகையால் அக்னியைத் தொழுவதற்கு இது உகந்த நாள்.

**துவிதியை**

சுக்கிலபட்சம் இரண்டாம் நாள் துவிதியை எனப்படும். இந்நாளில் அஸ்வினிகள் எனப்படும் தேவதைகளைத் தொழவேண்டும்.

குதிரையாகவும், பெண் குதிரையாகவும் இருந்த சூரியனுக்கும், சம்ஜனாவிற்கும் பிறந்த மக்கள் நதத்யா, தசரா. இவர்களின் பெற்றோர்கள் குதிரை வடிவில் இருந்த பொழுது இவர்கள் பிறந்ததால், அஸ்வினிகள் என்று அழைக்கப் பட்டனர்.

**திரிதியை**

மூன்றாம் நாள் திரிதியை என்று அழைக்கப்படுகிறது. இந்நாள் ருத்ரனுக்கு ஏற்ற நாள். இந்நாளில் கடைப் பிடிக்கப்படும் விரதம், திருமணமான தம்பதியருக்கு நல்ல வாழ்க்கையைக் கொடுக்கும்.

பிரம்மன், ருத்ரனைத் தோற்றுவித்து, உற்பத்தித் தொழிலைப் பார்த்துக் கொள்ளும்படிக் கூறினார். ருத்ரன் தன்னால் இயலாது எனக் கூறவும், அவனை நீருக்கடியில் ஆயிரம் வருடங்கள் தியானம் செய்து சக்தியைப் பெருக்கிக்

கொள்ளும்படிக் கூறி அனுப்பினார் பிரம்மன். ருத்ரனும் அவ்வாறே செய்து, நீரிலிருந்து ஒளியுடன் கூடிய உடம்புடன் வெளியே வந்தார்.

தட்சன் ஒரு யாகம் செய்து வந்தான். நீரிலிருந்து வந்த ருத்ரன், இந்த யாகம் பற்றிக் கேள்விப்பட்டு மிகுந்த கோபம் கொண்டான். "பிரம்மா என்னிடம் படைக்கும் வேலையைக் கொடுக்க, அதனைச் செய்வதற்காக சக்தியைப் பெருக்கும் காரணத்தினால் நான் தவம் செய்யச் சென்றிருந்தேன். இன்னும் என்னுடைய தொழில் ஆரம்பிக்குமுன், இந்த யாகத்தை நடத்தியவர்கள், அதில் கலந்து கொண்டவர்கள் இவர் களெல்லாம் யார்? எங்கிருந்து வந்தார்கள். இவர்களை நான் அழித்தே தீருவேன்" எனக் கூறினான், ருத்ரன். அவன் காதுகளில் இருந்து வெளிவந்த நெருப்புப் பொறிகளிலிருந்து அசுரர்களும் வெளிவந்தனர். இவர்கள் யாகத்தில் மிகுந்த குழப்பங்களை விளைவிக்க, பிரம்மன் தேவர்களை அனுப்பி ருத்ரனை அமைதிப்படுத்தும்படி வேண்டினான். அவர்களும் அவ்வாறே செய்து, தட்சன் மகளாகிய தாட்சாயணியை, ருத்ரனுக்கு மணம் செய்து கொடுத்தனர்.

*(தட்சன் யாகம் பற்றி மற்றப் புராணங்கள் கூறும் கதையி னின்று மாறுபட்ட கதையினை வழங்குகிறது வராகபுராணம்.)*

ருத்ரனை மணந்த தாட்சாயணி, தன் தந்தை யாகத்தில் தன் கணவனை அவமானப்படுத்தியதை நினைவில் கொண்டு, இமயமலை சென்று கடும் தவம் புரிந்தார். தன் கணவனுக்கு அவமானம் செய்த தட்சன் கொடுத்த உடம்பு ஆதலால் அந்த உடம்போடு இருக்க விரும்பவில்லை. அதனால் தன் உடம்பை நீத்தாள், தாட்சாயணி.

இமவான் மகள் பார்வதியாக மீண்டும் பிறந்தார். சிவனையே கணவனாக அடைய வேண்டும் என்று தவத்தில்

ஈடுபட்டார். ஒருநாள், மெலிந்த தேகமுடைய பிராமணன், பார்வதிதேவியின் ஆசிரமத்திற்கு தானம் கேட்டு வந்தார். பார்வதியும் சிறிது உணவினைக் கொண்டுவந்து, அந்த பிராமணனுக்குக் கொடுத்தார். உணவினை உண்பதற்கு முன் அந்த பிராமணர், ஆசிரமத்திற்கு அருகில் ஓடும் ஆற்றில் குளித்துவிட்டு வரச் சென்றார். அவர் அங்கு குளித்துக் கொண்டிருக்கும்பொழுது, ஒரு முதலை அவர் காலைப் பற்றிக் கொண்டது. பிராமணர் பெருங்குரலெடுத்து மற்றவர்களை உதவிக்கு அழைத்தார்.

பார்வதிக்கு என்ன செய்வதென்று குழப்பம் ஏற்பட்டது. அந்த பிராமணனுக்கு உடனே உதவி செய்தாக வேண்டும். ஆனால் அவர் தன் கணவருமல்லர்; உறவினரல்லர்; அப்படிப்பட்ட ஒருவரைத் தொட்டு உதவி செய்தால் அது தவறாகும். அதே சமயத்தில், ஆபத்தில் இருக்கும் ஒருவருக்கு உதவி செய்யாமல் இருப்பது பாவம். ஒருவேளை அந்த பிராமணர் இறந்துவிட்டால், அக்குற்றத்திற்குத் தான் பொறுப்பேற்க வேண்டியிருக்கும். சிந்தித்துப் பார்த்த பார்வதி, உடனே உதவி செய்ய விரைந்தார். அந்த பிராமண னைத் தொட்டவுடன், அந்த உருவம் கலைந்து உண்மையான சிவன் வெளிப்பட்டார். சிவனுக்கும், பார்வதிக்கும் திருமணம் நடைபெற்றது. தேவர்கள், முனிவர்கள். அப்ஸரஸ், கந்தர் வர்கள் திருமணத்தில் பங்கேற்றனர். திருமணம் திருதியை திதியில் நடைபெற்றதால், ருத்ரனை அந்நாளில் வழிபடுதல் சிறப்பாகும்.

**சதுர்த்தி**

சுக்கிலபட்சம் நான்காம் நாள் வருவது சதுர்த்தி விரதம். விநாயகருக்காக அனுஷ்டிக்கப்படுவது. இந்நாளில் எள்ளினை உண்ணுவது, மிகுந்த புண்ணியத்தைக் கொடுக்கும்.

தொடக்கத்தில், தகுதியை அடிப்படையாகக் கொண்டே எல்லாக் காரியங்களும் நடந்தன. காலப்போக்கில், நேர்மைக்கு இடம் குறைந்து கொண்டே வர, தேவர்கள் இந்த முட்டுக் கட்டைகளை நீக்கி, நல்ல காரியங்கள் நடைபெற ஒரு தேவனை உருவாக்கும்படி ருத்ரனை வேண்டினர். இதைக் கேட்ட ருத்ரன், 'விநாயகன்' என்ற பெயரில் ஓர் உருவத்தைத் தன் வாயிலிருந்து தோற்றுவித்தார். அத்துடன் தன் மயிர்க்காலில் இருந்து பல்லாயிரக்கணக்கான விநாயகர்களைத் தோற்று வித்ததால், இவர்களில் தலைமைப் பொறுப்பை ஏற்பவர் யார் என்று தெரியாமல் தேவர்கள் குழம்பினர். பிரம்மன் தலை யிட்டு, ருத்ரனின் கோபத்தை அடக்கி, ருத்ரன் வாயிலிருந்து வெளிப்பட்ட விநாயகனே முதன்மையானவர் என்றும், மற்றவர்கள் அவருக்குத் தோழர்களாக இருப்பர் என்றும் கூறி கணங்களுக்குப் பதியாக இருப்பதால், தலைமைப் பொறுப் பேற்கும் விநாயகனுக்குக் கணபதி என்ற பெயர் கொடுத்தார். சதுர்த்தி அன்று கணேசர் பிறந்ததால் சதுர்த்தி சிறப்பு வாய்ந்த நாளாகும்.

*(விநாயகர் பிறப்புப் பற்றி மற்ற புராணங்கள் வெவ்வேறு விதமாகப் பேசுகின்றன என்பதை அறியவும்.)*

**பஞ்சமி**

சுக்கிலபட்சம் ஐந்தாவது நாள் வருவது பஞ்சமி. இந்நாளில் புளிப்பான உணவு வகைகளைத் தவிர்க்க வேண்டும். பாம்பு களுக்குப் பால் ஊற்றி வணங்க வேண்டும். பஞ்சமி அன்று தான் பிரம்மா, எல்லா நாகங்களையும் அழைத்து, அவற்றை பாதாள லோகத்திற்குச் செல்லுமாறு கூறினார்.

மிகுதியான விஷத்தினை உடைய அனந்தா, வாசுகி, பத்மா, மகாபத்மா, குளிகா போன்ற பாம்புகளை பிரம்மனே படைத்தார். இந்தப் பாம்புகள், பிரம்மனின் படைப்புகளைப்

பாழ்செய்தமையால் மிகுந்த கோபம் கொண்ட பிரம்மன் நாகங்களை நோக்கி, "என் படைப்புகளைப் பெரிதும் வீணாக்கிய நீங்கள், உங்கள் தாயினாலேயே அழிக்கப் படுவீர்கள்" என்று சாபமிட்டார். இதைக் கேட்ட நாகங்கள், பிரம்மனை நோக்கி, 'ஐயனே! எங்களைப் படைத்த நீரே, எங்களுக்கு இப்படி ஒரு குணத்தினைக் கொடுத்தீர்கள். இக்குணத்தினாலேயே நாங்கள் மக்களைக் கடிக்கிறோம். எங்களுக்கு விஷத்தன்மையைப் படைத்த நீங்கள், எங்களை ஏன் குறை சொல்கிறீர்கள், நாங்கள் எப்படிப் பொறுப்போம்?' என்று கேட்டனர்.

இதைக் கேட்ட பிரம்மன், நாகங்களுக்குத் தனி இடம் ஒதுக்கிக் கொடுப்பதாகவும் அவர்கள் அவ்விடத்தில் தங்கி இருந்தால், மனிதர்களுக்கும், நாகங்களுக்கும் சண்டை ஏற்பட வாய்ப்பில்லை என்றும் கூறினார். பாதாள லோகத்தினை ஏழு பிரிவுகளாகப் பிரித்து, அதில் மூன்று பிரிவுகளில், நாகங்கள் தங்கள் இனத்தைப் பெருக்கிக் கொள்ளலாம்' என்றும் கூறினார்.

*(பிரபஞ்ச உற்பத்தி பற்றிப் புராணங்களிடையே சில வேறுபாடுகள் உள்ளன. தேவர்கள், மனிதர்கள், அரக்கர்கள், மற்ற உயிரினங்கள் அனைத்தும் பிரம்மனிலிருந்து தோன்றியவை என்று சில புராணங்களும், காசிப முனிவர், அவர் மனைவிகளின் பிள்ளைகளே தேவர்கள், மனிதர்கள், மற்ற உயிரினங்கள் என்று சில புராணங்கள் பேசுகின்றன. இங்குக் காணப்படும் முரண்பாடு பின்னே வருவதற்குக் காரணமாக அமைந்துள்ளது.)*

நாகங்களிடம், பிரம்மன் அடுத்த கல்பத்தில் காசிப முனிவருக்கும், அவன் மனைவி கத்ருவுக்கும் பிள்ளைகளாகப் பிறப்பார்கள் என்று கூறினார். காசிப முனிவர், தன் மனைவி

கத்ருவின் விருப்பப்படியே அவள் ஆயிரம் நாகங்களைப் பெற்றெடுப்பாள் என்று வரம் கொடுத்தார். மற்றொரு மனைவியான வினதாவிடம், அவள் விருப்பப்படியே இரண்டு பிள்ளைகள் பெறுவாள் என்றும், அவர்கள் கத்ருவின் மக்களை விடப் பலம் வாய்ந்தவர்களாக இருப்பார்கள் என்றும் வரம் கொடுத்தார். கத்ருவிற்கு ஆயிரம் பாம்புகள் மக்களாகத் தோன்றினர். வினதாவிடம் இருந்து இரண்டு முட்டைகள் தோன்றின. நெடுநாட்கள் முட்டையினின்று எதுவும் வெளி வராததால், பொறுமையிழந்த வினதா ஒரு முட்டையை உடைத்தாள். அதிலிருந்து அங்கஹீனமுள்ள உருவம் வெளி வந்தது. அருணா என்ற பெயருடைய அவ்வுருவம், தன் தாயின் பொறுமை இன்மையால் தன் உருவம் பாழ்பட்டது என்பதால், தன் தாய் கத்ரு தனக்கு ஐந்நூறு ஆண்டுகள் அடிமையாக இருக்க வேண்டும் என்றும், மற்றொரு முட்டையினை உரிய காலம்வரை பத்திரமாக வைத்திருந்தால் அதிலிருந்து தோன்றும் மகன் தன் தாயினை விடுவிப்பான் என்றும் கூறினான். பின்பு, ஆகாயத்திற்குச் சென்று சூரியதேவனுடைய தேர்ப் பாகனானான்.

இதற்கிடையில் வினதாவிடம் இருந்து தோன்றிய மற்றொரு முட்டையிலிருந்து பாதி பறவையும், பாதி மனிதனும் சேர்ந்த உருவம் தோன்றிற்று. அதற்குக் கருடன் என்பது பெயர். பாம்புகளே தனக்கு இரையாக வேண்டும் என்ற வரத்தினை இந்திரனிடம் இருந்து கருடன் பெற்று வந்தது. கருடன் தன் தாயினை அடிமைத் தளையினின்று விடுவிக்க விரும்பியது. இதை அறிந்த பாம்புகள், தங்களுக்கு அமிர்தம் கொண்டு வந்து கொடுத்தால், கருடனின் தாய் வினதாவை விடுவிப்ப தாகக் கூறின. கடுமையான முயற்சிக்குப்பின் அமிர்தத்தைக் கொண்டு வந்தது கருடன். அமிர்தத்தை பாம்புகளுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக, சொரசொரப்பான விளிம்புகளை

உடைய தர்ப்பைப் புல்லைக் கொடுத்தது. அதனாலேயே பாம்புகளுக்குப் பிளவுபட்ட நாக்கு ஏற்பட்டது. அதனாலேயே பாம்புகளுக்கும், கருடனுக்கும் பெரும் பகை ஏற்பட்டது.

கருட மந்திரம் சொல்பவர்களைப் பாம்புகள் தீண்டுவதில்லை.

**சஷ்டி**

சுக்கிலபட்சம் ஆறாவது நாள் சஷ்டி எனப்படும். இந்நாளில் கார்த்திகேயனைத் துதிப்பவர்களுக்கு நீண்ட ஆயுளும், நினைத்த காரியங்களும் கைகூடும்.

சஷ்டி அன்றுதான், பிரம்மன் கார்த்திகேயனைப் படைத் தளபதியாக நியமித்தார். அசுரர்களில் ஹிரண்ய கசிபு, ஹிரண்யாக்ஷன், விப்ர சித்தி ஆகியோர் திறம்படப் போர் செய்தனர். தேவர்கள் படைப்பில் இந்திரன் மட்டுமே திறம்படப் போர் செய்யக் கூடியவன். இதனால் அசுரர்கள் தேவர்களை விரைவில் வென்று விடுவர் என்று கருதி, பிரகஸ்பதி முனிவர் ஒரு நல்ல படைத் தளபதியைத் தேர்ந்தெடுக்கும்படி கூறினார். ஆகையால் தேவர்கள், பிரம்மன் தலைமையில் சிவனைச் சென்று சந்தித்து உதவி கோரினர். சிவனும், பார்வதியும் அழகும், பலமும் பொருந்திய மகனைத் தோற்றுவித்தனர். அந்த மகனே குமாரன், ஸ்கந்தன், கார்த்திகேயன் என்று அழைக்கப் பட்டான். அந்தக் கார்த்திகேயனையே பிரம்மா படைத் தளபதியாக நியமித்தார்.

**சப்தமி**

சுக்கிலபட்சம் ஏழாம் நாள் சப்தமி எனப்படும் சூரிய தேவனுக்கு உகந்த நாள். சூரியனுடைய கதிர்களின் மிகு வெப்பம் காரணமாகப் பிரபஞ்சத்திலுள்ள உயிரினங்கள் அழிந்துவிடும் அபாயம் தோன்றிற்று. சப்தமி அன்று, மற்ற

தேவர்கள் சூரியனிடம் அவனது ஒளியினைச் சிறிது குறைத்துக் கொள்ள வேண்டும் என்றும், அதனால் உலகம் அழிவினின்று காப்பாற்றப்படும் என்றும் கூறினர். சூரியனும் அதை ஒப்புக் கொண்டான்.

## அஷ்டமி

சுக்கில பட்சம் எட்டாவது நாள் அஷ்டமி எனப்படும்.

காசிப முனிவருக்கும், திதிக்கும் பிறந்த மகனே அந்தகன் என்ற பெயர் பெற்றான். இவனுக்கு ஆயிரம் கைகள், ஆயிரம் கால்கள், ஆயிரம் கண்கள் இருந்தன. 'அந்தகர்' என்றால் பார்வை இழந்தவன் என்று பொருள். ஆனால் அந்தகனுக்குப் பார்வை இருந்தது. அவன் ஆயிரம் கைகளும் கால்களும் பெற்றிருந்தமையால் அவன் நடை, குருடனைப் போல் தள்ளாடி நடக்க வேண்டி இருந்தமையால் அவனுக்கு அந்தகாசுரன் என்ற பெயர் வந்தது. யாராலும் தனக்குச் சாவு ஏற்படக் கூடாது, தன் தலை கீழே விழக்கூடாது என்று பிரம்மனிடம் வரம் வாங்கியபின் தேவர்களுக்குக் கொடுமை விளைவிக்கத் தொடங்கினான். தேவர்கள் பிரம்மனிடம் வேண்ட, நானே கொடுத்த வரத்தை என்னால் மீட்க முடியாது. ஆகவே நாம் அனைவரும் சிவனிடம் சென்று முறையிடுவோம் என்று கூறிய பிரம்மன் அவர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு சிவனிடம் சென்றார்.

இதை அறிந்த அந்தகன் பெருஞ்சேனையுடன் வந்து சிவலோகத்தை எதிர்க்கத் தொடங்கினான். அவன் எண்ணம் சிவனைக் கொன்று பார்வதியைத் திருமணம் செய்து கொள்வதாகும். பெரும் போர் நிகழ்ந்தது. சிவனுடைய சூலம் அவனுடைய மார்பைப் பிளக்க அதிலிருந்து ஒழுகிய ரத்தம் பூமியில் விழுந்ததும் புதிய புதிய அந்தகாசுரர்களை உண்டாக் கிற்று. இதை அறிந்த சிவன் நெற்றிக் கண்ணைத் திறக்க அதிலிருந்து தோன்றிய மாத்ரி என்ற தேவதை பெரு நெருப்பை

உண்டாக்கி அவன் ரத்தம் கீழே விழாமல் செய்துவிட்டது. இந்த நிலையில் விஷ்ணுவின் சக்கரம் அந்தகாசுரன் கழுத்தை அறுக்க, அவன் தலை கீழே விழக்கூடாது என்ற பிரம்மனின் வரத்தைக் காக்க சிவன் அந்தத் தலையை சூலத்தில் குத்தி ஆகாயத்தில் தூக்கி விட்டார். இந்த முறையில் அந்தகாசுரன் அழிந்தான்.

அந்தகன் அழிவு அஷ்டமி திதியில் நடைபெற்றதால் அந்தக் குறிப்பிட்ட திதியில் மாத்ரிகாவை வணங்குவதற்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

**நவமி**

சுக்கிலபட்சம் நவமி என்று சொல்லப்படுவது ஒன்பதாவது நாள். காயத்ரி தேவியினால் சொல்லப்பட்ட வேத்ராசுரனின் கதை நடந்தது நவமி அன்றே.

*(வேத்ராசுர என்ற பெயர் எந்தப் புராணத்திலும் குறிப்பிடப் பெறவில்லை. ஆகவே இது வராக புராணத்தின் கற்பனை என்று நினைக்க வேண்டியுள்ளது.)*

முன்னொரு காலத்தில் வேத்ராசுரன் தந்தை இந்திரனால் கொல்லப்பட்டார். தனது அடுத்த பிறவியில் வேத்ராசுரன் தந்தைக்கு முற்பிறவியில் நடந்த நிகழ்ச்சிகள் தெரிய வந்தன. இதனால் கடுமையான விரதம் மேற்கொண்டு, இந்திரனைக் கொல்வதற்காக ஒரு மகனைப் பெறமுடியும் என்று நினைத் தான். வேத்ரவதி நதி தேவதையை மணந்து, வேத்ராசுரனைப் பெற்றான். இந்த வேத்ராசுரன் தேவர்களுக்கு எதிரியாகத் திகழ்ந்தான். தேவர்கள் சிவனின் உதவியை நாடிச் சென்றனர். வேத்ராசுரனை அழிக்க முடியாது என்று உணர்ந்த சிவபிரான், தேவர்களிடம், பிரம்மனைச் சென்று பார்க்கும்படி கூறினார்.

தேவர்கள் பிரம்மனைக் காணச் சென்ற பொழுது கங்கைக் கரையில் காயத்ரி மந்திரத்தைச் சொல்லியவாறு அமர்ந்

திருந்தார் பிரம்மன். அவர் தன்னைச் சுற்றி நடப்பதைப் பற்றி ஒன்றும் அறியாமல், சிவன் மீதோ, மற்ற தேவர்கள் மீதோ எந்தக் கவனமும் செலுத்தாமல் இருந்தார்.

அப்பொழுது திடீரென்று காயத்ரி தேவி தோன்றினாள். அவருக்கு எட்டு கைகளும், அக்கைகளில் எல்லாவிதமான ஆயுதங்களும் இருந்தன. இத்தேவி அசுரர்களுடன் ஓராயிரம் தேவ வருடங்கள் போர் செய்து, முடிவில் வேத்ராசுரனைக் கொன்றாள். பிரம்மனின் தவம் முடிவடைந்து, இமயமலையில் காயத்ரி தேவி வந்து தங்குவதற்கு ஒரு தகுந்த இடத்தை நிர்மாணித்தார்.

வேத்ராசுரன், காயத்ரி தேவியினால் கொல்லப்பட்டது நவமி திதி ஆகையால், அன்று காயத்ரி தேவியை வணங்குவது சாலச் சிறந்தது.

**தசமி**

சுக்கிலபட்சம் பத்தாம் நாள் வருவது தசமி திதியாகும். பிரம்மனால் படைக்கப்பட்ட பத்து தேவதைகளை வணங்க வேண்டும். இந்நாளில் வெறும் தயிர் மட்டும் சாப்பிட்டு விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

**ஏகாதசி**

படைப்புத் தொழிலைத் தொடங்க வேண்டும் என்று நினைத்த பிரம்மனுடைய வாயிலிருந்து ஒரு புழுதிக் காற்று புயல்போல் வெளியில் வந்தது. வந்தவுடன் அந்தப் புழுதி குபேரனுடைய வடிவைப் பெற்றது. இவ்வாறு குபேரன் பிறந்தது சுக்கிலபட்ச ஏகாதசி ஆகும். பிரம்மனின் உத்தரவுப் படி தேவர்களின் கஜானா அதிகாரியாகக் குபேரன் நியமிக்கப்பட்டான். குபேரனை நினைத்துச் செய்யும் இவ் விரதம் இந்த ஏகாதசி அன்று பொங்கலை உண்டு அனுஷ்டிக்க வேண்டும்.

**துவாதசி**

*சுக்கிலபட்சம் பன்னிரண்டாம் நாள் அனுஷ்டிப்பது துவாதசி திதி. வாயுதேவன் வேண்டிக் கொண்டதால், நாராயணன் விஷ்ணுவாக அவதரித்தார். லட்சுமி தேவி விஷ்ணுவை மணந்து கொண்டது துவாதசி அன்றுதான். இவர்கள் இருவரையும் துவாதசி அன்று வழிபடுவது நல்லது.*

**திரயோதசி**

*சுக்கிலபட்சம் பதின்மூன்றாம் நாள் திரயோதசி எனப்படும். பிரம்மன், பிரபஞ்ச உற்பத்தி பற்றி யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது, அவருக்கு வலப்பக்கமிருந்து தோன்றினவன் தர்மதேவன். அவனுக்கு நான்கு கால்களும், மூன்று கொம்புகளும் இருந்தன. எருது வடிவில் தோன்றி யிருந்தான். மக்கள் நல்வழியில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறார்களா என்பதைக் கண்காணிப்பதே தர்மதேவனின் கடமையாகும். மக்கள் தவறான பாதையில் சென்றால், தர்ம தேவதையின் ஒரு கால் இல்லாமல் போகும். அதாவது சத்ய யுகத்தில் தர்ம தேவதைக்கு நான்கு கால்களும், திரேதா யுகத்தில் மூன்று கால்களும், துவாபர யுகத்தில் இரண்டு கால்களும், கலியுகத்தில் ஒரு காலும் இருக்கும்.*

*ஒரு சமயம் பிரஹஸ்பதியின் மனைவியாகிய தாராவை, சந்திரன் கவர்ந்து சென்றான். இதைக் கேள்வியுற்ற தர்மதேவன் மிகவும் மனம் வருந்தி காட்டில் சென்று தவம் புரியலானான். தர்மத்தின் தலைவனான தர்மதேவன் இல்லாமையால், எங்கும் சட்டம் சீர்கெட்டு, கொடூரமான நிகழ்ச்சிகளே நடைபெற்றன. இதைக் கண்ட பிரம்மன், திரயோதசி திதி என்ற தர்மதேவனைச் சமாதானப்படுத்தி அழைத்து வந்தார். ஆதலால் இத்திதி மிகச் சிறப்புப் பெற்றதாகும். சுக்கிலபட்சம் பதினான்காம் நாள் ருத்திரனைப் பற்றி நினைப்பவர்கள் விரதம் அனுஷ்டிப்ப வர்கள், எல்லாப் பாவங்களினின்றும் விடுதலை பெறுவர்.*

**அமாவாசை**

*பிரம்மனிடத்து தோன்றியவர்களாகிய தன்மாத்திரர்கள் என்பவர்கள் ஆகாயத்திலே தங்கி சோமபானத்தை உணவாகக் கொண்டு தியானத்தில் ஈடுபட்டுள்ளனர். இவர்களே மக்கள் அனைவருக்கும் மூதாதையர்கள் என்று சொல்லப்படுவார்கள். இவர்களைத் திருப்திப்படுத்த அமாவாசை அன்றைக்கு எள், தண்ணீர், தர்ப்பை என்பவற்றைப் படைத்து வழிபடுவதால் இவர்கள் திருப்தி அடைகிறார்கள். இதற்குத் தர்ப்பணம் என்பது பெயர்.*

**பௌர்ணமி**

*சோமன் அல்லது சந்திரன் என்று அழைக்கப்படும் தேவன், அத்ரி முனிவரின் மகனாவான். தட்சனின் பெண்களுள் இருபத்தி ஏழு பெண்களை மணந்து கொண்டவன். அவர்களுள் ரோகிணியிடம் மட்டும் அதிக அன்பு செலுத்திய தால், மற்ற பெண்கள் தந்தையிடம் முறையிட்டனர். தட்சன் அறிவுரை கூறியும், சோமன் தன்னை மாற்றிக் கொள்ள வில்லை. கடும் கோபம் கொண்ட தட்சன் சாபமிட்டான். ஆகையால் சந்திரன் சிறிது சிறிதாகத் தேய்ந்து பதினைந்தாம் நாள் அமாவாசை அன்று மறைந்து விடுகிறான். மருந்தாகும் மூலிகைச் செடிகள், சந்திரன் மறைந்து விடுவதால் தங்களின் ஆற்றலை இழந்து விட்டன. தேவர்கள் சென்று விஷ்ணுவிடம் முறையிட, அவர் பாற்கடலைக் கடையும்படி கூறினார்.*

*(பாற்கடல் கடந்ததைப் பற்றி எல்லாப் புராணங்களும் பேசுகின்றன. சாவா மருந்தாகிய அமிர்தத்தை எடுப்பதற்காகப் பாற்கடல் கடையப்பட்டது என்பது மற்ற புராணங்கள் கூறும் கதையாகும். ஆனால் வராக புராணம் மற்றவற்றிலிருந்து மாறுபடுகிறது.)*

*பாற்கடலைக் கடைந்த தேவர்களுக்குச் சோமபானம் கிடைக்கின்றது. இந்தச் சோமபானம் சந்திரனே ஆகும். சிவ*

பெருமான், சந்திரனை எடுத்துத் தன் தலையில் சூடிக் கொண்டார். மேலே கூறிய நிகழ்ச்சிகள் அனைத்தும் பௌர்ணமி அன்று நடைபெற்றதால் பௌர்ணமி விரதம் மிகச் சிறப்பு வாய்ந்ததாகும். இவ்விரதத்தினை முடித்த பின்னர் ஒருவர் அரிசிச்சோறு சாப்பிடலாம். இவ்விரதம் அனுஷ்டிப்ப வர்களுக்கு எல்லாச் செல்வமும் கிடைக்கப் பெறும்.

**விரதங்கள்**

பிருத்வி வராகத்தைப் பார்த்து விரதங்கள் பற்றி அறிய விரும்புகிறேன் என்று சொல்லியவுடன் வராகம் கூறத் தொடங்கியது. "விரதங்கள் பலவகைப்படும். முதல்வகை பிரமச்சரியம், சத்தியம் காத்தல் ஆகிய இரண்டையும் தலையாய கடமையாகக் கொண்டது. இரண்டாவது பஜனை செய்தல், இறைவனின் புகழைப் பாடுதல் ஆகியவையாவன. மூன்றாவது வகை குறிப்பிட்ட நாட்களில் பட்டி இருத்தல் ஆகியவையாம்.

இதுபற்றிப் பல கதைகள் சொல்லலாம் எனினும், உதாரணத்திற்கு ஒன்றிரண்டைச் சொல்கிறேன்.

துர்வாசர் ஒருமுறை அவருக்கு நண்பனாக இருந்த ஒரு வேடனுக்கு சத்யதபா என்று பெயர் சூட்டினார். காரணம் அவன் வேடனாகப் பிறந்தும் நேர்மை, சத்தியம் என்ற இரண்டிற்கும் பெருமதிப்புக் கொடுத்து வாழ்க்கையில் கடைப் பிடித்தான் ஆதலின் அவனுக்கு இந்தப் பெயரைத் தந்தார். ஒருமுறை வராகம் பிருத்விக்குக் கூறிய ரகஸ்யமான ஒரு விரதச் சடங்கை துர்வாசர் இப்பொழுது சத்யதபாவிற்குக் கூறினார். ஏகாதசி அன்று பட்டினி கிடந்து துவாதசி அன்று காலையில் ஆற்றுக்குச் சென்று, ஆற்று மண்ணை உடம்பில் பூசிக் கொண்டு நாராயணனை நினைத்தவாறே நீந்திக் குளிக்க வேண்டும். பிறகு வந்து உணவு கொள்வதே துவாதசி விரதத்தின் மகிமை. இந்த விரதத்தை அனுஷ்டிப்பவர்கள் கல்வி அறிவு இல்லாதவர்களாய் இருந்தாலும் பிரம்மத்தை

அடையும் வழியை அவர்கள் அடைய முடியும். இந்த விரதம் மார்கழி மாதத்தில் அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

இதே போன்று வராக துவாதசி விரதத்தை மாசி மாதத்தில் அனுஷ்டிக்க வேண்டும். இந்த விரதத்திற்கு வராகத்தின் வடிவத்தைச் செய்து, அதை வெள்ளைத் துணியால் உடுத்தி மண்பானையில் வைத்து பகலில் பூஜிப்பதுடன் ஏகாதசி இரவு கண் விழித்து பூஜித்தால் சிறந்த பயன் உண்டு. இவற்றை அல்லாமல் ராம துவாதசி ஆனி மாதத்தில் கிருஷ்ண துவாதசி ஆடி மாதத்திலும் புத்த துவாதசி ஆவணி மாதத்திலும் அனுஷ்டிக்கப்பெற வேண்டும்.

### கந்திவிரதம்

சந்திரன், தட்சனின் சாபத்தை முறியடிக்க மேற்கொண்ட விரதமாகும். சுக்கிலபட்சம் என்பது வளர்பிறை என்றும், கிருஷ்ணபட்சம் என்பது தேய்பிறை என்றும் கூறப்படும். இந்த விரதம் கார்த்திகை மாதம் சுக்கிலபட்சம் துவிதியை திதியில் ஆரம்பமாகும். கிருஷ்ண பலராமர்களை வழிபட வேண்டும்.

### அவிஞ்ஞ விரதம்

திரிபுராசுரனைக் கொல்வதற்கு முன்பு சிவபெருமானாலும், கடல்நீரைப் பருகுவதற்கு முன்பு அகத்திய முனிவராலும் கடைப்பிடிக்கப்பட்ட விரதமாகும். பங்குனி மாதத்தில் வரும் சதுர்த்தி திதி அன்று கணேசனின் மந்திரங்களைச் சொல்லுதலும், அதைத் தொடர்ந்து பஞ்சமி திதியில் விநாயகனைத் தயிர், எள், பூக்கள் முதலிவற்றால் பூஜை செய்வதும் முக்கியமானதாகும். ஒருவருக்கு வாழ்க்கையில் ஏற்படும் தடைகளை நீக்குவதற்கு அனுஷ்டிக்கப்படும் விரதம்.

### காமவிரதம்

தைமாதம், சுக்கிலபட்சம் பஞ்சமி திதியில் ஸ்கந்தனை நினைத்து வழிபடுவது இவ்விரதமாகும்.

### சாந்தி விரதம்

*கார்த்திகை மாதம் சுக்கிலபட்சம் பஞ்சமி திதியில் கடைப் பிடிக்கப்படும் இவ்விரதம் குடும்பத்தில் ஏற்படும் துன்பங்களை விலக்கிவிடும். இவ்விரதம் அனுஷ்டிப்பவர்கள் சூடான உணவை ஒரு வருட காலத்திற்குத் தவிர்க்க வேண்டும். ஆதிசேஷனை வணங்க வேண்டும்.*

### புத்ரேஷ்டி விரதம்

*இவ்விரதம் இருப்பவர்கள் பால், தயிர் முதலியவற்றைத் தானமாகக் கொடுக்க வேண்டும். குழந்தை கிருஷ்ணனை வணங்க வேண்டும்.*

### யுகங்கள்

*பத்ரஷ்வா அரசனுக்கும், அகஸ்திய முனிவருக்கும் இடையே யுகங்கள் பற்றிய உரையாடல் நடைபெற்றது.*

*கலியுகத்தில் வர்ணாசிரம தர்மங்கள் அழிந்துவிடும். இந்த யுகத்தில் நல்லவை அழிந்து, கொடுமைகளே தலைதூக்கி நிற்கும். உண்மையான சக்தி இல்லாமல், வெறும் சடங்குகள் மூலம் இறைவனை அடைதல் இயலாது. நாராயணனே அனைத்திலும் முன்நிற்பவர் என்று சிவபெருமானே கூறியுள்ளார். ஆதலால் படைக்கப்பெறும் பொருட்கள் யாவும் விஷ்ணுவுக்கே முதலில் படைக்கப்பெற வேண்டும்.*

*கலியுகம் என்பது, நாராயணனால் தோற்றுவிக்கப் பட்டாலும், கௌதம முனிவரின் சாபம் பற்றித் தெரிந்து கொண்டால் மட்டுமே, கலியுகம் பற்றி அறிந்து கொள்ள முடியும். அப்படி கௌதம முனிவரின் சாபம் என்ற ஒன்று இல்லையென்றால், கலியுகம் என்பது வேறுமாதிரி அமைந் திருக்கும். ஒருமுறை கௌதம முனிவர், அரிசியும் பழங்களும் எப்பொழுதும் தன்னிடம் நிறைய இருக்க வேண்டு*

என்ற வரத்தினை, நாராயணனிடம் இருந்து பெற்றிருந்தார். ஒரு சமயம் கடுமையான பஞ்சம் ஏற்பட்ட பொழுது, சடஷிருங்காவில் இருந்த முனிவர்களுக்கு, தன்னிடம் இருந்த அரிசி, பழங்கள் முதலியவற்றைக் கொடுத்துப் பசி தீர்த்தார். அவர்களும் பெரிதாக மகிழ்ந்தனர். சில நாட்கள் கழித்து அம்முனிவர்கள், பஞ்சம் தீர்ந்தவுடன் கௌதம முனிவரிடம் சொல்லாமல் அவரது ஆசிரமத்தை விட்டுச் சென்றுவிட்டனர். அவ்வாறு செல்லுமுன், கௌதம முனிவர் ஏதோ தவறு செய்து விட்டது போலவும், அதன் காரணமாகவே தாங்கள் அந்த ஆசிரமத்தை விட்டுச் செல்வதாகவும் ஒரு சூழ்ச்சி செய்திருந்தனர்.

அந்த முனிவர்கள் தம்முடைய சக்தியால் ஒரு பசுவை, கௌதம முனிவரின் ஆசிரமத்திற்கு வரவழைத்து அவர் பார்க்கும் இடத்தில் நிறுத்தி வைத்தனர். வெளியே சென்றிருந்த முனிவர், வந்தவுடன் பசுவைப் பார்த்து மிக்க மகிழ்ச்சியுடன் நீர் அருந்தக் கொடுத்தார். நீரை அருந்திய பசு, இறந்துவிட்ட பசுவினைப் போல் கீழே விழுந்துவிட்டது. இதைக் கண்ட மற்ற முனிவர்கள் கௌதம முனிவர் ஒரு பசுவினைக் கொன்று விட்டார் என்று கூறி, அதனாலேயே தாங்கள் அந்த ஆசிரமத்தை விட்டுச் செல்வதாகவும் கூறிச் சென்றனர்.

கௌதம முனிவர், இமயமலை சென்று இப்பாவத்தைப் போக்க எண்ணி சிவபெருமானை நினைந்து தவம் இயற்றினார். அவரது தவத்தில் மகிழ்ந்த சிவபெருமான் தன்னுடைய முடியினைக் கொடுத்தார். அந்த முடியினை கௌதம முனிவர் தன் ஆசிரமத்திற்குக் கொண்டு வந்தார். அதிலிருந்து கோதாவரி கங்கை உற்பத்தியாயிற்று. அந்த நீர் பட்டவுடன் இறந்து கிடந்த பசு உயிருடன் எழுந்ததைப் பார்த்த கௌதம முனிவர், தன்னை மற்ற முனிவர்கள் ஏமாற்றியதைத் தெரிந்து கொண்டார்.

கௌதமர், கோதாவரி கங்கையைத் தன் ஆசிரமத்திற்குக் கொண்டு வந்திருப்பதை அறிந்த சப்தரிஷிகள் அதைக் காண ஆசிரமம் வந்தனர். சப்தரிஷிகளின் முன்னிலையில், தன்னை ஏமாற்றிய முனிவர்கட்குச் சாபமிட்டார் கௌதம முனிவர். "இனி நீங்கள் பிராமணர்கள் என்று யாராலும் கருதப்பெற மாட்டீர்கள். எந்த யாகம் செய்வதற்கும் அனுமதிக்கப்பெற மாட்டீர்கள்" என்று சாபமிட்டார். இதைக் கேட்ட முனிவர்கள் அவரது சாபத்தின் கடுமையைக் குறைத்துக் கொள்ள வேண்டினர். ஆனால் கௌதம முனிவர், சிவபெருமான் ஒருவராலேயே அதனைச் செய்ய முடியும் என்று கூறி அனுப்பி விட்டார். கைலாய மலைக்குச் சென்று சிவனிடம் சாபத்தின் கடுமை குறைக்க வேண்டினர். சிவனும் அவர்கள் வேண்டு கோளுக்கிணங்க, துர்குணம் கொண்ட அம்முனிவர்கள், கலியுகத்தில் பிறப்பார்கள் என்றும், பொய் பேசுதல், ஏமாற்றுதல் போன்ற குணங்களை உடையவர்களாய் இருப்பர் என்றும் கூறினார்.

அம்முனிவர்கள் கலியுகம் என்பது மிகக் கொடுமை யானதாக இருக்கும் என்றும், தங்களால் அதைத் தாங்க இயலாது என்றும் கூறினர். சிவபெருமான் அவர்களிடம், சிவ சம்ஹிதை என்ற நூலினைக் கொடுத்து, அவர்களில் சிலர் நல்லவர்களாகப் பிறப்பார்கள் என்றும், சிலர் துன்மார்க்கர் களாய்ப் பிறந்து நரகத்தினை அடைவார்கள் என்றும் கூறினார். இதுவே சாபத்தின் காரணமாகக் கலியுகம் தோன்றும் என்பதற்கான கதை என்று முடித்தனர், அகஸ்திய முனிவரும், பத்ரஷ்வ அரசனும்.

### விஷ்ணுவே அனைத்திலும் உயர்ந்தவர்

பிரம்ம சிவபெருமான் இவர்களை விட உயர்ந்து நிற்பவர் விஷ்ணுவே. சத்துவ குணம் மட்டுமே நிறைந்திருப்பவர் விஷ்ணு. சத்துவகுணமும், ராஜசகுணமும் இணைந்து

பிரம்மனிடம் உள்ளன. சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களும் சிவபெருமானிடம் உள்ளன.

ஒரு சமயம் பிரம்மன், பிரபஞ்ச உற்பத்தியின் போது சிவபெருமானிடம் இப்பொறுப்பினை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார். உடனே சிவபெருமானும் நீரின் அடியில் சென்று தவம் புரியத் துவங்கினார். அப்பொழுது தன் எதிரே கை கட்டைவிரல் அளவு வடிவத்தில் விஷ்ணு சிவன் எதிரே தோன்றினார். அந்த வடிவத்தைச் சிவன் அலட்சியப்படுத்தி விட்டார். அதன் பிறகு ஒளிமயமான பன்னிரண்டு பிம்பங்கள் சிவன் எதிரே வந்தன. நீங்கள் யார்? எனச் சிவன் கேட்க பதிலே சொல்லாமல் அந்த 12 ஒளிகளும் மறைந்தன. அதன் பிறகு விஷ்ணு சிவனுக்கு நேரே தோன்றி பின்வருமாறு பேசலானார். "நீர் மிக உயர்ந்தவர் என்றும், அனைவரினும் மேம்பட்டவர் என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறீர். உண்மை அவ்வாறில்லை. உமக்கு எதிரே வந்த பன்னிரண்டு ஒளி வடிவங்களைக் கூட நீர் அறிந்து கொள்ளவில்லை. அவர்கள் துவாதச ஆதித்தர்கள். அவர்களை நீ தெரிந்து கொள்ள வேண்டுமானால், எதனையும் காணவேண்டுமானால் என் அருள் இருந்தால்தான் முடியும். இதோ உமது எதிரில் கட்டைவிரல் வடிவளவு உருவெடுக்கிறேன் பாரும்" என்று கூறிவிட்டுக் கட்டைவிரல் வடிவில் தோன்றிய விஷ்ணு, உயர வளர ஆரம்பித்து அண்டத்தை முட்டும் அளவில் வளரத் தொடங்கினான். அதைப் பார்த்த சிவன் விஷ்ணுவின் உண்மையான பெருமை அறிந்து கொண்டு தவம் செய்யப் புறப்பட்டார்.

**தவம்**

பிருத்வி, வராகத்தைப் பார்த்து ஒருவருடைய பாவங் களைப் போக்கிக் கொள்ளச் சிறந்த வழி யாது? என்று கேட்டது. அதற்கு வராகம் சொன்ன விடை வருமாறு:

ஒருவர் காலை எழுந்தவுடன் முதலில் உடம்பைத் தூய்மை செய்து கொள்ள வேண்டும். அதன் பிறகு ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சாணத்தால் மெழுகி தூய்மை செய்ய வேண்டும். பக்கத்தில் ஒரு விளக்கை ஏற்றிவைக்க வேண்டும். விஷ்ணு விக்கிரகத்தை அந்தத் தூய்மையான இடத்தில் வைத்து, மலர்களாலும் மாலையாலும் அலங்கரிக்க வேண்டும். பால், நெய் முதலியவற்றால் அபிஷேகம் செய்ய வேண்டும். அதன் பிறகு விஷ்ணுவின் புகழைப் பாட வேண்டும். இவை எல்லாவற்றையும் விட முக்கியமாகத் தேவைப்படுவது தூய்மையான மனத்துடன் விஷ்ணு இடத்தில் அன்பு செய்வதாகும்.

இதற்கடுத்த படியாக ஒருவன் மறுபிறப்பில் மிருகமாகவோ, பறவையாகவோ பிறக்காமல் இருக்க வேண்டுமானால் அதற்கு ஒரேவழி நேர்மையான வழி நடத்தல், விரதங்களை மேற் கொள்ளல், பெற்றோர்களை மதித்து நடத்தல், காகமுகா என்ற தீர்த்தத்தில் உயிரை விடும் ஒருவன் உறுதியாக மறுபிறப்பில் மிருகமாகவோ பறவையாகவோ பிறக்கமாட்டான். இதற்கு ஒரு உதாரணக் கதையை வராகம் கூறிற்று.

ஒருமுறை ஒரு வல்லூறு மிக வேகமாகத் தண்ணீரில் பாய்ந்து ஒரு பெரிய மீனைக் கவ்வி அதை எடுத்துக் கொண்டு ஆகாயத்தில் எழுந்தது. மீனின் கனம் தாங்காமல் வல்லூறும், மீனும் கீழே விழுந்து உயிரை விட்டன. கோகமுகா தீர்த்தத்தில் இருந்ததால் அந்த மீனும், அதில் முக்கிக் குளித்து எடுத்ததால் வல்லூறும் இப்பிறவி நீங்கி மீன் ஒரு ராஜகுமாரனாகவும், வல்லூறு ஒரு அரசகுமாரியாகவும் பிறந்தன. அந்த அரச குமாரியை, அந்த அரசகுமாரன் மணந்து கொண்டான். சில நாள் கழித்து, அரச குமாரனுக்குத் தீர்க்க முடியாத தலைவலி வந்தது. தாய் தந்தையரிடம் விடை பெற்றுக் கொண்டு அவர்கள் இருவரும் கோகமுகா தீர்த்தத்திற்கு வந்தார்கள்.

அங்கே வந்தவுடன் அவர்களுக்கு பூர்வ ஜென்மத்தின் நினைவு வந்தது. மீனாக இருந்த அரச குமாரன் திடீரென்று தரையில் விழுந்து தலையில் அடிபட்டதால் இந்த ஜென்மத்தில் தலைவலி உண்டாயிற்று என்று அறிந்து விஷ்ணுவைத் தியானித்து தீர்த்தத்தில் மூழ்கி துன்பம் நீங்கப் பெற்றான்.

**மாயை**

வராகம் பிருத்வியைப் பார்த்து யாரும் மாயை பற்றி அறிந்து கொள்ள முயலக் கூடாது. அதற்காக இந்தக் கதையைச் சொல்கிறேன் என்று ஆரம்பித்து பின்வரும் கதையைக் கூறிற்று. ஹிர்த்து வனத்தில் சோமசர்மா என்ற பிராமணன் வாழ்ந்து வந்தார். சிறந்த விஷ்ணு பக்தனான அவன் ஒருமுறை தவம் செய்கையில் விஷ்ணு எதிரே தோன்றினார். உனக்கு என்ன வரம் வேண்டும் என்று விஷ்ணு கேட்க மாயை பற்றி அறிந்து கொள்ள விரும்புகிறேன் என்றார் சோமசர்மா. அது மனிதனுக்குத் தேவை இல்லாத ஒன்று! என்று விஷ்ணு எடுத்துச் சொல்லியும் சோமசர்மா கேட்கவில்லை. பிடிவாதமாக இருந்ததால் அவனை அழைத்துச் சென்று பக்கத்தில் உள்ள ஆற்றில் குளிக்கச் சொன்னார். உடைகள், கமண்டலம் முதலியவற்றை தரையில் வைத்துவிட்டுச் சோம சர்மா தண்ணீருக்குள் பாய்ந்தான். திடீரென்று நிஷாதர்கள் வசிக்கும் எதிர்க்கரையிலுள்ள கிராமத்தில் பெண்ணாகப் பிறந்து நிஷாதன் ஒருவனை மணந்து கொண்டு, அவனிடத்தில் இரண்டு பெண்களையும், மூன்று நெறிகளையும் பெற்றார். பல ஆண்டுகள் கழிந்தன. சோமசர்மாவுக்குத் தவம் என்பதே மறந்துவிட்டது. அந்த இடத்தில் விஷ்ணு தோன்றி அவன் யார் என்பதை நினைவூட்டியவுடன் பழைய சோமசர்மா ஆக விரும்பினான். ஆற்றின் கரையில் அப்பெண் தன் துணிகளைக்

களைந்து வைத்து விட்டுத் தண்ணீரில் குளிக்கச் சென்றாள். நீரில் பாய்ந்த அப்பெண் எதிர்க்கரையில் சோமசர்மாவாக வெளியே வந்தார். தன் உடைகளை மாற்றிக் கொண்டு, தான் நிஷாதப் பெண்ணாக இருந்ததை நினைத்தார். அப்பொழுது எதிர்க்கரையில் அந்த நிஷாதப் பெண்ணின் கணவன் கரைக்கு வந்து மனைவியின் துணிகள் இருப்பதைப் பார்த்து அவள் ஆற்றில் மூழ்கி இறந்து விட்டாள் என்று கருதி 'ஓ' என்று கதறி அழுவதைக் கண்ட சோமசர்மா அவனுக்குச் சமாதானம் சொல்லி வீட்டிற்குச் சென்று குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளுமாறு புத்திமதி சொன்னார். அந்த நிஷாதன் கவலை குறையாமல் அழுததைக் கண்டு, உண்மையைக் கூறிவிடலாமா என்று கூட சர்மா நினைத்தார். அந்த நிலையில் விஷ்ணு தோன்றியவுடன் சர்மாவைப் பார்த்து 'எதிர்க்கரையில் பார்' என்று கூறினார். இங்கு விஷாதர்கள் தங்கிய எந்த ஒரு அடையாளமும் இல்லை. இதுதான் மாயையின் செயல். மானிடர்கள் மாயையின் செயலை அறியாமல் இருப்பதே சிறந்தது என்று கூறினார். சோமசர்மா வீட்டிற்கு வந்ததும், பக்கத்தில் உள்ள முனிவர்கள் ஒன்று சேர்ந்து, குளிக்கச் சென்ற நீ இவ்வளவு நேரம் கழித்துவரக் காரணம் என்ன என்றார்கள். அதற்கு விடைகூற விரும்பாத சோமசர்மா குப்ஜம்ரகாதீர்த்தம் சென்று கடுமையான விரதம் அனுஷ்டித்தார்.

## மதுராவின் சிறப்பு

பல ஊர்களின் சிறப்பினைச் சொல்லிக் கொண்டு வந்தது வராகம். நைமிசாரண்யம், பிராயாகை, புஷ்கரா, வாரணாசி ஆகிய அனைத்திலும் மேம்பட்ட சிறப்பினை உடையது மதுரா. மதுராவில்தான் விஷ்ணு கிருஷ்ணனாக அவதரித்தார்.

நைமிசாரண்யத்தில் இருந்து மதுரா வந்த தாழ்ந்த ஜாதிக்காரன், சதுர்த்தசி திதியில் யமுனையில் குளிக்கச் சென்று நீரில் மூழ்கி இறந்துவிட்டான். மதுராவில் உள்ள யமுனையில் இறந்த க்ஷத்திரிய மன்னன் யங்ஷமாதனுவாகப் பிறந்தான். அவன் மனைவி பிவரி என்பவள், தன் கணவன் உறக்கத்தில் பெருமூச்சு விடுவதையும், முனகுவதையும் கண்டு அதன் காரணத்தைக் கேட்டாள். அரசினை மூத்த மகனிடம் ஒப்பித்து விட்டு மதுராவிற்குத் தன்னுடன் வருவதானால் அந்த ரகசியத்தைச் சொல்வதாக மன்னன் கூறினான். மனைவி அதற்கு உடன்பட அரசை மகனிடம் கொடுத்துவிட்டு இருவரும் மதுரா வந்து சேர்ந்தனர். அங்கே வந்து யமுனையில் குளித்ததும் அந்த அரசிக்கு அவள் பழம் பிறப்பு நினைவுக்கு வந்தது. அவள் பழம்பிறப்பில் யமுனையைக் காணும் பொழுது நீரில் மூழ்கி இறந்ததால் காசிராஜன் மகளாகப் பிறந்து சௌராஷ்டிர மன்னனாகிய யக்ஷ மாதனுவைத் திருமணம் செய்துகொண்டாள். அரசன் பெருமூச்சு விட்டதற்குக் காரணம் போன பிறப்பில் அவள் மதுராவில் பிறந்து இறந்ததால். இந்தப் பிறப்பில் அங்கே போக வேண்டும் என்ற எண்ணம் வந்ததால் பெருமூச்சு விட்டதாகக் கூறினான். இருவரும் அங்கேயே தங்கி மோட்சம் போயினர்.

ஏனைய புராணங்களைப் போலவே வராக புராணமும் அதைக் கற்பதாலும், கேட்பதாலும் உண்டாகும் பலன்களைக் கூறி முடிக்கின்றது.



# 13. ஸ்கந்த புராணம்

## இப்புராணம் பற்றி...

பதினெட்டுப் புராணங்களில் பாடல்களின் அடிப்படையில் பார்த்தால் ஸ்கந்த புராணம் மிகப் பெரியதாகும். இதில் உள்ள மொத்தப் பாடல்கள் 81,000 ஆகும். வேறு எந்தப் புராணமும் இவ்வளவு அதிகப் பாடல்களைப் பெற்றிருக்கவில்லை. இதைவிடப் பெரிய ஒன்று உண்டு என்றால் அது ஒரு லட்சம் பாடல்களைக் கொண்ட வியாச பாரதமே ஆகும். சங்கர பகவானின் மகனாகிய ஸ்கந்தனால் இப்புராணம் சொல்லப்பட்டமை யின் அவருடைய பெயரையே இப்புராணம் தாங்கி நிற்கிறது. இப்புராணம் இரண்டு வடிவுடன் உள்ளது. ஒன்று சம்ஹிதை (தொகுப்பு) என்ற பெயருடன் உள்ளது. அது 1. சனத் குமார சம்ஹிதை-36,000 பாடல்கள், 2. சூத சம்ஹிதை-6,000, 3. சங்கர சம்ஹிதை-30,000 பாடல்கள், 4. வைஷ்ணவ சம்ஹிதை-5,000 பாடல்கள், 5. பிரம்ம சம்ஹிதை–3,000 பாடல்கள், 6. சௌர சம்ஹிதை-1,000 பாடல்கள் என்ற முறையில் முதல் தொகுப்பு உள்ளது.

மற்றொரு வடிவு காண்டம் எனப்படும். அவை: 1. மஹேஸ்வரி–இது கேதார காண்டம்; குமாரிகா காண்டம்; அருணாசல மஹாத்மிய காண்டம் என்ற மூன்று

பிரிவுகளைக் கொண்டது. 2. வைஷ்ணவ காண்டம்—இது பூமிவராக காண்டம்; உத்கல காண்டம்; பத்ரிகாசரம மஹாத்மியம்; வைசாக மஹாத்மியம்; ஸ்ரீ அயோத்ய மஹாத்மியம்; என்ற எட்டுப் பிரிவுகளைக் கொண்டது. 3. பிரம்ம காண்டம்—இது சேது மஹாத்மியம்; தர்மாரண்ய மஹாத்மியம்; சாதுர்மாஸ்ய மஹாத்மியம்; பிரம்மோத்ர காண்டம் ஆகிய நான்கு பிரிவுகளைக் கொண்டது. 4. காசி காண்டம்—இது பூர்வார்த்த; உத்தரார்த்த ஆகிய இரு பிரிவுகளைக் கொண்டது. 5. அவந்தி காண்டம்—அவந்தி க்ஷேத்ரா மஹாத்மியம், ரேவாகாணம் ஆகிய இருபிரிவுகளைக் கொண்டது. 6. நாகர காண்டம்—பூர்வார்த்த, உத்தரார்த்த ஆகிய இருபிரிவுகளைக் கொண்டது. 7. பிரபாச காண்டம்—துவாரகா மஹாத்மியம் என்ற பிரிவினைக் கொண்டது.

இந்தப் புராணத்தில் பல்வேறு சடங்குகள் பற்றி மிக விரிவாகப் பேசப்பட்டுள்ளது. பிரசித்திபெற்ற சத்திய நாராயணன் கதை இப்புராணத்திலும் உள்ளது. மாறுபட்ட பல்வேறு விஷயங்களைப் பற்றிப் பேசும் இப்புராணம் ஒருவரால் குறிப்பிட்ட ஒரு பொருளைப் பற்றிப் பாடப் பெறவில்லை என்பதை அறிய முடியும். சடங்குகள் பற்றிப் பல்வேறு புராணங்களிலும், பிறவற்றிலும் பேசப்பட்டுள்ள வற்றை ஒரே இடத்தில் தொகுத்துக் கொடுப்பது நலம் என்று கருதிய சிலர் இதில் தம் விருப்பத்தை நிறை வேற்றிக் கொண்டனர். அறிவு ஊட்டும் பற்பல கதைகள் இப்புராணத்தில் உள்ளன. ஒருவன் தான் விரும்பிய தெய்வத்தை ஒருமுகப்பட்ட மனத்தோடு வழிபடுவானே யானால் அதற்குரிய பயனை அவன் உறுதியாகப் பெறுவான், என்ற அடிப்படை இப்புராணம் முழுவதிலும் பரவி நிற்கிறது.

நைமிசாரண்ய வனத்தில் ஒரு பெரிய யாகத்தைப் பார்ப்பதற்காக முனிவர்கள் அனைவரும் கூடிஇருந்தனர்.

*யாகத்தைக் காணவந்த லோமஹர்ஷனரைப் பார்த்து முனிவர்கள் புலோமஹர்ஷனரே! நீங்கள் வேதவியாசரின் சீடராயிற்றே. சிவனுடைய பெருமையை எங்களுக்குச் சொல்லுங்கள் என்று வேண்டிக் கொள்ள, அவர் சொல்ல ஆரம்பித்தார்.*

**தட்சயாகம்**

தட்சப் பிரஜாபதி என்பவன் தன் மகளாகிய தாட்சா யணியைச் சிவனுக்கு மணம் செய்து கொடுத்திருந்தான். திருமணத்திற்குப் பிறகு தன் மருமகனாகிய சிவன் தனக்குரிய மரியாதை தரவில்லை என்று தட்சன் மனம் புழுங்கினான். அந்தப் புழுக்கத்தின் காரணமாக அவன் சிவனையும், தாட்சாயணியையும் கண்ட இடங்களிலெல்லாம் தரக் குறைவாகப் பேசி வந்தான்.

சிவனை அவமானப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தால் தட்சன் ஒரு யாகத்தைத் தொடங்கினான். தெய்வங்கள், தேவர்கள், முனிவர்கள் ஆகிய அனைவரையும் அந்த யாகத்திற்கு வருமாறு அழைப்பு அனுப்பிய தட்சன் வேண்டுமென்றே சிவனை, தாட்சாயணியை அழைக்காமல் விட்டு விட்டான்.

என்றாலும் தந்தையின் யாகத்தைக் காணவேண்டு மென்று வந்த தாட்சாயணியையும் யாகத்திற்கு வந்திருந்த வர்கள் எதிரே தரக்குறைவாக இழித்துப் பேசினான் தட்சன். சிவனைப் பற்றிய அவதூறுகளைக் கேட்கச் சகியாத தாட்சாயணி யாக குண்டத்தில் விழுந்து தன்னைத்தானே மாய்த்துக் கொண்டாள்.

சிவனுடைய பணியாளர்கள், சிவகணங்கள் ஆகியவர்கள் மிகக் கொடுமையான ஆயுதங்களைத் தாங்கி யாகசாலைக்கு

விரைந்தனர். சினம் கொண்ட சிவன் தன் ஜடாமுடியில் இருந்து ஒரு முடியை எடுத்துக் கீழே எறிந்தவுடன் அந்த முடி ஒரு பயங்கர உருவமாகப் பரிணமித்தது. மூன்று கண்களையும், ஆயிரம் கைகளையும், வீரபத்திரர் என்ற பெயரையும் கொண்ட அவ்வுருவம் சிங்கங்கள் பூட்டிய ரதத்தில் அமர்ந்திருந்தது. சிவன் விட்ட உஷ்ணமான பெருமூச்சிலிருந்து பல கிருமிகளும், அழிவைத் தரும் கிருமிகளும் வெளிவந்தன. அதன் மூச்சிலிருந்து மகாகாளி உதயமாயினாள். அந்தக் கூட்டம் முழுவதும் தட்சன் யாக சாலையில் புகுந்தது. பிருகு, புஷா போன்ற முனிவர்கள் அவமானப்படுத்தப்பட்டனர். இவர்கள் இருவரையும் சூரியனின் அம்சம் என்றும் கூறுவர். தட்சனை நேசித்து யாகத்திற்கு வந்த பிரம்மா, விஷ்ணு ஆகிய இருவரும் தோற்கடிக்கப்பட்டனர். தட்சன் தலை அறுக்கப் பட்டது. வீரபத்திரனும், அவனது படையும் முழு அழிவை ஏற்படுத்தின.

தட்சனின் தந்தையாகிய பிரம்மன் சிவனிடத்தில் வேண்டிக் கொள்ள, எல்லையற்ற கருணையுடன் சிவன் யாகசாலைக்கு வந்தார். அனைத்தையும் பார்வையிட்ட அவர், தட்சனை மன்னித்து அவனை மீண்டும் உயிர்ப்பிக்க எண்ணினார். ஆனால் தட்சன் தலை அறுத்த வீரபத்திரன், அத்தலையை யாக குண்டத்தினுள் போட அத்தலை முழுவதும் எரிந்து சாம்பலாயிற்று. வேறு வழியின்மையின், ஒரு வெள்ளாட்டுத் தலையை அறுத்து தட்சன் உடம்பில் ஒட்டவைத்து அவனை உயிர்ப்பித்தார் சிவன். அவமானப்பட்ட தட்சன், சிவனை வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். முற்றும் அழிந்து விட்ட யாகசாலையை அதன் பழைய நிலைக்குக் கொண்டு வந்தார் சிவன். அன்றிலிருந்து தட்சன் பெரிய சிவ பக்தன் ஆனான்.

## சிவ புண்ணியம்

*சிவன் கோயிலுக்குப் போவது, கோயிலைத் துடைத்து மெழுகிச் சுத்தம் செய்வது, கோயிலுக்கு விளக்கிடுவது, தூபம், தீபம் ஏற்றுவது ஆகியவை சிவ புண்ணியங்களாகும்.*

*கோயில் கட்டுவது, நாள் ஒன்றுக்கு ஒன்று முதல் மூன்று முறை சிவன் கோயிலுக்குச் செல்வது ஆகிய செயல்களும் பெரும் புண்ணியத்தைத் தரும்.*

## நந்தியின் கதை

*அவந்தி நகரத்தில் நந்தி என்ற ஒரு வைசியன் வாழ்ந்து வந்தான். வாணிபம், கால்நடை வளர்ப்பு என்ற இருதுறை களிலும் செல்வம் சேகரித்துப் பெருஞ் செல்வந்தனாக வாழ்ந்து வந்தான். அவந்தியின் பக்கத்தில் இருந்த ஒரு பெரிய குளக்கரையில் ஒரு பெரிய சிவன் கோயில் இருந்தது. நந்தி தினந்தோறும் அக்குளத்தில் மூழ்கி, பொன்னையும், மணி யையும் சிவனுக்கு அளித்து வழிபட்டு வந்தான்.*

*நந்தி வழிபட்ட அதே லிங்கத்தை ஒரு வேடனும் வழிபட்டு வந்தான். தினந்தோறும் அவன் வழிபட வரும்போது சிவலிங்கத்தின் எதிரே இருந்த பொன், மணி, பூக்கள் ஆகியவற்றைக் காலால் எற்றிவிட்டுத் தான் கொண்டு வந்த மான்கறி, வில்வம் ஆகியவற்றைச் சிவனுக்கு அர்ப்பணித்து வழிபட்டான். தான் அளித்த பொன்னும், மணியும் சிதறிக் கிடப்பதைக் கண்ட நந்தி ஒருநாள் ஒளிந்திருந்து வேடனின் செயலைக் கண்டுவிட்டான். அவன் செயலைக் காணப் பிடிக்காத நந்தி, சிவலிங்கத்தையே பெயர்த்து தன் வீட்டிற்குக் கொண்டு வந்து விட்டான். அந்த லிங்கத்தை ஒரு தங்க பீடத்தில் வைத்து வழிபடலானான். மறுநாள் வேடன் என்ன செய்கிறான் என்று பார்ப்பதற்காகக் கோயிலுக்கு வந்து மறைவாக நின்றிருந்தான் நந்தி. வழக்கம் போல வழிபடவந்த வேடன்*

சிவலிங்கத்தைக் காணாமல் மனம் நொந்துபோனான். தான் கொண்டு வந்திருந்த வில்வம், மான்கறி என்பவற்றுடன் தன்னுடைய குடலையும் அறுத்தெடுத்து சிவலிங்கம் இருந்த இடத்தில் போட்டு விட்டுக் கதறி அழுதான். அவனுடைய பக்தியை மெச்சிய சிவன், "வேடனே! நீ கைலயங்கிரிக்கு வந்து எனக்கு அணுக்கத் தொண்டனாகிப் பணிபுரிவாயாக" என்று வரங்கொடுத்து மறைந்தார். இதைக் கண்டு கொண்டிருந்த நந்தி, வேடனை அணுகி தயவு செய்து என்னைப் பற்றியும் சிவனிடம் எடுத்துக்கூறி எனக்கு கைலாயத்தில் ஒரு பணியை வாங்கிக் கொடு என்று கெஞ்சினான். உடனே வேடன் பெரிய குரலில், "சிவனே! இங்கிருக்கும் நந்தி வைசிய குலத்தைச் சேர்ந்தவன், பெரிய சிவ பக்தன். தயவு செய்து கைலையில் இவனுக்கும் ஒரு இடமளிக்க வேண்டும்" என்று மனமுருக வேண்டினான். சிவன் வெளிப்பட்டு "வேடனே! நீ சிவபக்தன் என்று குறிப்பிடும் யாரையும் எனக்குத் தெரியாது. என்னுடைய பக்தர்கள் படாடோபம் இல்லாமல் மிக எளிமையாக முழுமனத்தோடு, உள்ளன்போடு என்னை வழிபடுவார்கள். அவர்களுக்குத்தான் நான் எளிமையாகக் காட்சி தருவேன்" என்று கூறினார். ஆனாலும் வேடன் விடாமல் சிவனைக் கூவி அழைத்து என்னிடம் ஓயாது உன் அருளைப் பெறுவேன் என்று என்னை வேண்டிக் கொள்ளும் இந்த வைசியனுக்கு எப்படியும் கைலையில் ஒரு இடம் தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டான்.

மனமிரங்கிய சிவன் நந்திக்கும் தன் காவலர்களில் ஒரு இடத்தைத் தந்தார். *(இக்கதை கூர்மபுராணத்தில் வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது.)*

**சிவபக்தர்கள் பற்றிய வேறு கதைகள்**

சிவ புண்ணியத்தைச் செய்பவர்கள் சிவலோகம் செல்வர். சிவன் கோயிலில் கைகளால் கூட்டி மெழுகுதலும், கால்களால்

கோயிலை வலம் வருதலும் சிவ புண்ணியமாகும். இது பற்றிய கதை வருமாறு:

பறந்து செல்லும் ஒரு பூச்சி சிவன் கோயிலுக்குள் புகுந்து, சிவனுக்குப் படைக்கப்பட்ட பிரசாதத்தைச் சாப்பிடச் சென்றது. அது இறக்கையை படபடவென்று அடித்துக் கொண்டதால் கோயிலில் இருந்த தூசி அப்பால் போயிற்று. அந்தப் பூச்சி இறந்தவுடன் நேரே சிவலோகம் சென்று பலகாலம் அங்குத் தங்கி இருந்துவிட்டு மறுபடியும் காசிராஜன் மகளாகப் பூமியில் பிறந்தது. காசிராஜன் மகளாகப் பிறந்தும் அப்பெண் தினந்தோறும் சிவன் கோயிலுக்குச் சென்று தன் கைளாலேயே கோயிலைக் கூட்டி மெழுகி வந்தாள். இச் செயலைக் கண்ட உத்தாலகா முனிவர் "மகளே, உன்னிடம் நூற்றுக்கணக்கான பணியாளர் உள்ளனர். அவர்களில் ஒருவரை இவ்வேலையைச் செய்யுமாறு ஏவாமல் நீ ஏன் இதனைச் செய்ய வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு அந்த அரசகுமாரி சிவத் தொண்டு என்பது, என் கைகளாலேயே செய்யப்பட வேண்டும். இது தவிர வேறு வழி எனக்குத் தெரியவில்லை என்று கூறினாள்.

சிவனை பூஜித்து இராவணன் பத்துத் தலைகளைப் பெற்றான். மேலும் வரங்கள் பெறவேண்டும் என்ற எண்ணத்தால் போனபிறகு சிவன் வெளிப்பட்டு என்ன வரம் வேண்டும் என்று கேட்க, யாராலும் வெல்லப்படாத வரம் வேண்டும் என்று கேட்டான். அந்த வரத்தைப் பெற்றுக் கொண்ட இராவணன் சிலகாலம் கழித்து தன் ஒன்றுவிட்ட சகோதரன் ஆகிய குபேரனைப் பார்க்க கைலை மலைக்குச் சென்றான். இராவணனைத் தடுத்து நிறுத்திய நந்தி, குபேரன் வேறு ஒரு பணியில் ஈடுபட்டிருப்பதால், சற்றுப் பொறுத் திருக்கக் கூறினான். பொறுக்க விரும்பாத இராவணன், நந்தியுடன் போர்புரியத் தொடங்கிவிட்டான். தன்னை ஒரு விலங்கு என்று இராவணன் கேலி செய்ததால் சின

கொண்ட நந்தி, “விலங்கினாலேயே உனக்கு மரணம் ஏற்படும்” என்று சாபம் கொடுத்தார். பின்னர் ராமனுடன் சென்ற படைகள் நந்தியின் முகத்தைப் பெறாமல் குரங்கு முகங்களைப் பெற்றிருக்குமாறு சிவன் அந்தச் சாபத்தை மாற்றி அமைத்தார்.

**நீலகண்டர்**

அமிர்தத்தைப் பெறவேண்டுமென்று தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடையப் புறப்பட்டனர். மேரு மலையை மத்தாகவும், வாசுகியை நாணாகவும் வைத்துக் கடைய முற்பட்டபொழுது, மத்து தங்குவதற்கு அடை இல்லாமையால் கடைய முடியவில்லை. விஷ்ணு கூர்ம வடிவம் கொண்டு மேருமலையை முதுகில் தாங்கினார். அதனால் பாற்கடல் கடையப்பட்டது. தேவர்களுடைய பேராசை காரணமாக கடைய வேண்டிய வேகம் அதிகப் படுத்தப்பட்டவுடன், பாற்கடலிலிருந்து மிகப் பெரிய விஷம் வெளியே வந்து தேவருலகம் முழுவதையும் மூடிக் கொண்டது. அதன் பயனாகத் தேவர்கள் உடல் கருத்தனர். விஷ்ணுவோ விஷம் பரவியதால் நீல நிறத்தைப் பெற்றுவிட்டார். யாரும் தாங்க முடியாத நிலை வந்தவுடன் கணேசர் சிவனிடம் சென்று உலகைக் காப்பாற்ற வேண்டும் என்று கூறிய வுடன் சிவன் அந்த விஷத்தை எடுத்து உண்டு விட்டார். அது அவர் கண்டத்தில் தங்கி, அதனை நீலநிறமாக மாற்றி விட்டது. அதிலிருந்து அவருக்கு நீலகண்டன் என்ற பெயர் வந்தது.

ராகு என்ற பாம்பு பல தலைகளைக் கொண்டதால் தேவர்களை மிகவும் அச்சுறுத்தி வந்தது. தேவர்கள் சிவனிடம் முறையிட சிவன் அந்தப் பாம்பின் தலைகளை எல்லாம் கிள்ளிப் போட்டு விட்டு ஒரே தலையுடன் இருந்த ராகுவை

*தலையில் சூடிக் கொண்டார். (ராகுவின் கதை மற்றப் புராணங் களில் வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது.)*

**சிவலிங்க வரலாறு**

*சிவலிங்கத்தின் இலக்கணத்தை ஒருமுறை அகஸ்தியருக்கு நந்தி விளக்கிக் கூறினார். சத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களையும் தன்னுள் பெற்று நிற்பவள் பிரகிருதி ஆவாள். யுக முடிவில் இந்த முக்குணங்களும், பிரகிருதியும் பரமாத்மாவில் சென்று லயித்து விடுகின்றன. அவ்வாறு லயித்த நிலையில் அது லிங்க வடிவாகக் காட்சி அளிக்கிறது. முக்குணங்களும் அதனுள் அடங்கி விடுதலின், லிங்கம் நிர்குணமாக விளங்குகிறது. இந்த லிங்க வடிவிலிருந்து சிவன் வெளிப்பட்டு மனைவி, பிள்ளைகள் என்பவருடன் மக்கள் ஏற்றுக் கொள்ளுகின்ற முறையில் காட்சி அளிக்கின்றார்.*

**தாரகாசுரன் கதை**

*தாட்சாயணி தட்சனுடைய யாகத்தில், யாக குண்டத்தில் விழுந்து உயிரை விட்டாள். தாட்சாயணி இல்லாமையால் சிவன் மிகவும் மனம் மாறுபட்ட நிலையில் எதிலும் ஈடுபடாமல் தவம் செய்து கொண்டிருந்தார். சிவன் தேவர்களுக்கு உதவ மாட்டார் என்று தெரிந்தவுடன் அசுரர்கள் மிக மகிழ்ச்சி அடைந்தனர்.*

*தைத்தியர்களுள் ஒருவனாகிய நமுச்சி என்பவனின் மகன் தாரகன் பிரம்மாவைக் குறித்து கடுந்தவம் இயற்றினான். அவன் தவத்திற்கு மெச்சிய பிரம்மா என்ன வரம் வேண்டும் என்று கேட்டபொழுது, 'யாராலும் வெல்லப்படாத ஓர் ஆற்றல் வேண்டும்' என்று தாரகன் கேட்டான். அத்தகைய ஒரு வரத்தைத் தர தனக்கு ஆற்றல் இல்லை என்று பிரம்மன் கூறிவிட்டு, "அதற்குப் பதிலாக உனக்கு ஒரு நல்ல வரத்தைத்*

தருகிறேன். ஒரு குழந்தைதான் உன்னை வெல்ல முடியும்'' என்றார். அதைக் கேட்ட தாரகன் பெருமகிழ்ச்சி அடைந்த வராய் இந்திரன் முதலானவருடன் போர்புரிந்து தேவர்கள் அனைவரையும் தேவலோகத்தினின்று விரட்டி விட்டான். தேவருலகில் இருந்து விரட்டப்பட்ட தேவர்கள் செய்வதறியாது திகைத்து இமவானிடம் சென்றனர். அவனிடம் நீயும், உன் மனைவியாகிய மேனையும் தவமியற்றி சிவன் மணக்கக் கூடிய ஒரு பெண்ணைப் பெற வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி இமவான் தவம் செய்து பெற்ற பெண்ணே, உமா, கௌரி, பார்வதி என்ற பல பெயர்களில் அழைக்கப்படும் பெண்ணாவாள். அப்பெண் தீயில் விழுந்து இறந்த தாட்சாயணியே அன்றி வேறு யாருமல்லள்.

பார்வதிக்கு எட்டு வயதாகும் பொழுது, சிவன் தவம் செய்யும் இடத்தில் அவளைக் கொண்டு விட்டு சிவனுக்குப் பணிவிடை செய்யுமாறு கூறினார் இமவான். ஆனால் தவத்தில் மூழ்கிய சிவன் அவளைக் கண்டுகொள்ளவே இல்லை. இந்நிலையில் தேவர்கள் அனைவரும் கூடி மதனன் என்ற பெயருடைய காமனை அழைத்து 'சிவன் மனத்தில் காதல் தீயை மூட்டுவாய்' என்றனர். பூக்களையே வில்லாகவும், அம்பறாத் தூணியாகவும், அதிலுள்ள பாணங்களாகவும் வைத்திருந்த மதனன் சிவன் தவம் செய்யும் இடத்திற்குச் சென்று வசந்த காலத்தை உண்டாக்கி அந்த இனிமையான நேரத்தில் அம்புகளை சிவன் மீது எய்தான். தவம் கலைந்து கண்ணைத் திறந்த சிவன் எதிரே பார்வதி மலர் மாலையுடன் நின்றாள். அதைப் பற்றிக் கவலைப்படாத சிவன் அவள் பின்னே நிற்கும் மன்மதனைப் பார்த்தவுடன் கடுங்கோபம் கொண்டு தன் நெற்றிக் கண்ணைத் திறந்தார். அதிலிருந்து புறப்பட்ட தீ மதனனை எரித்துச் சாம்பலாக்கி விட்டது. மிக்க

கோபத்துடன் சிவன் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டார். தேவர்கள் மன்மதன் எரிந்ததைக் கண்டு 'ஓ'வென்று கதறினர். இமவான் வந்து தன் மகளை அழைத்துச் செல்ல விரும்பிய போது, பார்வதி மறுத்து விட்டாள். சிவன் இருந்த பர்ண சாலையிலேயே கடுந்தவம் புரிய ஆரம்பித்தாள். எட்டு வயதுச் சிறுமியாக இருந்தும், பச்சை இலைகளைத் தின்றும், பிறகு காய்ந்த இலைகளைத் தின்றும் அதன்பிறகு அந்த இலைகளைக் கூடத் தின்னாமல் விரதம் அனுஷ்டிக்கத் தொடங்கினாள். அதனால் அவளுக்கு 'அபர்ணா' என்ற பெயர் வந்தது.

பார்வதியின் தவத்தை மெச்சிய சிவன் அவளை மணந்து கொள்ள முடிவு செய்தாலும், அவளைச் சற்று சீண்டிவிட்டு வேடிக்கை பார்க்க நினைத்தார். அதனால் தன் வடிவை மாற்றிக் கொண்டு மாறு வேடத்தில் பார்வதி எதிரே வந்து, சிவனை ஏன் மணக்க நினைக்கிறாய். அவன் அறியாமை நிறைந்த பயித்தியக்காரன், எப்பொழுதும் சாம்பலைப் பூசிக் கொண்டு சுடுகாட்டில் திரிபவன். அவன் அணிந்திருக்கும் மாலை மயான மண்டை ஓடுகள். சுற்றி இருப்பவை அலறும் பிசாசுகள். இதைக் கேட்ட பார்வதி, தாட்சாயணியைப் போல் கோபம் கொண்டு எதிரிலே நிற்பவனைப் பார்த்து, "உம் சொற்களை நான் கேட்கத் தயாரில்லை. இங்கிருந்து போய் விடு" என்றாள். இந்த வார்த்தைகளை அவள் பேசியவுடன் சிவன் தன் உண்மையான சொரூபத்துடன் எதிரிலே நிற்கவும், பார்வதி அளவற்ற நாணத்துடன் அவரிடம் ஒரு வரம் வேண்டினாள். சென்ற பிறப்பில் நான் தாட்சாயணியாக இருக்கும் பொழுது தாங்கள் தானே என் கணவர். இந்தப் பிறப்பிலும் நான் தங்கள் மனைவியாக இருக்க விரும்புகிறேன். தங்களை மணந்து பிறக்கப் போகும் குழந்தை தாரகாசுரனை வெல்லும் குழந்தையாகவே எண்ணி மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். சிவன் அதற்கு

ஒத்துக்கொள்ளவே பார்வதியின் தந்தையாகிய இமவான் மிக்க ஆடம்பரத்துடன் பார்வதியைச் சிவனுக்கு மண முடித்தான்.

## ஸ்கந்தனின் தோற்றமும், லீலைகளும்

பார்வதியை மணந்து கொண்ட சிவன் கந்தமாதன மலைக்குச் சென்று அங்குள்ள கோயிலில் தங்கிவிட்டார். கோயில் கதவு சாத்தப்பட்டு இருந்தது. ஓராயிரம் ஆண்டுகள் உருண்டுவிட்டன. கதவு திறக்கவும் இல்லை. சிவன் வெளியில் வரவும் இல்லை. சிவன் கந்தமாதனக் கோயிலுக்குள் தங்கி விட்டார். நீண்ட நாட்களாக வெளிவரவில்லை என்ற செய்தி பரவியவுடன் தைத்தியர்களின் அட்டகாசம் அதிகமாயிற்று. பெருங்கலக்கமுற்ற தேவர்கள் ஒன்றுகூடி ஆராய்ந்தார்கள். பிரம்மனும், விஷ்ணுவும் அக்கூட்டத்தில் இருந்தனர். எப்படியாவது சிவனுடைய தனிமையைக் கலைத்து வெளியே வரச்செய்ய என்ன செய்யலாம் என்று யோசித்தனர். இறுதியாக அக்னிதேவனை அழைத்து, நீ எப்படியாவது கோயிலுக்குள் சென்று சிவனுடைய தனிமையைக் கலைக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். ஆனால் சிவனுடைய கோயில் நந்தி தேவரால் வலுவாகக் காவல் செய்யப்பட்டது. அவரைத் தாண்டிச் செல்ல முடியாது என்று அறிந்த அக்னி, அணு உரு எடுத்துக் கொண்டு மெள்ள மெள்ள நகர்ந்து கோயிலுக்குள் சென்று விட்டார். அங்கு பார்வதியைச் சந்தித்த அவர் தனக்குப் பிச்சையிடுமாறு வேண்டினார். தங்கள் தனிமை கலைக்கப்பட்டதால் பார்வதியும் கோபம் அடைந்தார். ஆனால் பிச்சை என்று கேட்பவனுக்கு ஏதாவது கொடுக்க வேண்டுமென்று சிவனுடைய சக்தியில் ஒரு சிறு பாகத்தை அவனுக்குப் பிச்சையாக அளித்துவிட்டு, 'இந்தப் பிச்சையை அக்னி மூலம் ஏற்கின்ற உண்மை பேசுகின்ற தேவர்கள்

அனைவரும் பெரிய சங்கடத்திற்குள்ளாவார்கள். இது என்னுடைய சாபம்" என்று முடித்தார் பார்வதி.

அக்னி மூலம் சிவனுடைய சக்தியைப் பிச்சையாக ஏற்ற தேவர்கள் பெரும் துன்பத்திற்கு உள்ளாயினர். *(ஸ்கந்த புராணம் ஸ்கந்தனுடைய உற்பத்தியைக் கூறுகின்ற பகுதியை இரண்டு வேறுபட்ட பாடல்களால் கூறுகிறது. மேலே சொல்லப்பட்ட வகையில் இந்த இரண்டு வகைக்கும் அதிக வேறுபாடு இல்லை. அக்னி அணு உருவாகச் சென்றான் என்பது முதல் வகை. இரண்டாவது வகை, சிவன் அக்னி வந்திருப்பதை அறிந்து தன் ஆற்றலின் ஒரு பகுதியை அவனிடம் தந்தான் என்று கூறுகிறது. இதற்குப் பிறகு இந்த 2 வகைப்பட்ட கதைகளும் பெறும் மாறுதல்களுடன் காணப் படுகின்றன)* முதல்வகை: சிவனுடைய ஆற்றலை பார்வதி மூலம் பெற்றுக் கொண்ட அக்னியும், மற்ற தேவர்களும் பெரும் பிரச்சனைக்கு உள்ளானார்கள். தங்கள் உடம்பில் ஏற்பட்டுள்ள துன்பத்தைப் போக்கிக் கொள்ள வழி தெரியாமல் விஷ்ணுவிடம் சென்று முறையிட்டனர். விஷ்ணு அவர்களைப் பார்த்து நாம் அனைவரும் சிவனை நோக்கிப் பிரார்த்தனை செய்வோம். அது ஒன்றுதான் வழி என்றார். அனைவரும் சிவனை தியானித்துப் பிரார்த்தனை செய்தனர். சிவன் எதிர்ப்பட்டு அக்னியைத் தவிர மற்ற தேவர்கள் அனைவரும் உள்ளே இருக்கின்றதை வாந்தி எடுத்துவிடுமாறு கட்டளை இட்டார். அவர்களும் அப்படியே செய்தனர். அதனால் தங்கள் உடல் துன்பம் தீர்ந்தனர். அக்னியைப் பொறுத்தவரை யாராவது குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தால் அவர்களிடம் சூடு உண்டாக்கும் முறையில் இந்த ஆற்றலை அவர்களுக்கும் செலுத்திவிடு என்று சிவன் கட்டளை இட்டார்.

இந்தக் கட்டளையை ஏற்றுக் கொண்ட அக்னி, ஒரு குளத்தின் கரையில் நின்று கொண்டிருந்தார். அப்பொழுது

சப்த ரிஷிகளின் மனைவிமார்கள் அனைவரும் குளிப்பதற்காக அந்தக் குளத்திற்கு வந்தனர். எல்லைமீறிய குளிரில் அவர்கள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அக்னி அங்கே கணகணவென்று எரியும் நெருப்பாக இருந்தான். ரிஷிபத்தினிகள் நெருப்பைக் கண்டதும் அதில் குளிர்காய விரும்பினர். அக்னியும் ஒரு தேவன் ஆகையால், வசிட்டன் மனைவியாகிய அருந்ததி மட்டும் அவன் பக்கத்தில் போவது தவறு என்று சொல்லி, எட்டி நின்றுவிட்டாள். ஆனால் மற்ற அறுவரும் அக்னியின் பக்கத்தில் சென்றனர். அவர்களுடைய உடம்பில் உள்ள சதை, தோல் என்பவற்றின் மூலமாக தன்னிடமிருந்த ஆற்றலை அவர்களுக்குள் செலுத்திவிட்டான். ரிஷிபத்தினிகள் வீடு திரும்பினர். நடந்ததைக் கேள்வியுற்ற அறுவரும் அவர்களை மனைவியாக ஏற்றுக் கொள்ள மறுத்து, நட்சத்திரங்களாகப் போகக்கடவீர் என்று சாபமிட்டனர்.

ஆனால் ரிஷிபத்தினிகள் நட்சத்திரங்களாகப் போவதற்கு முன்னர் சிவனுடைய ஆற்றலை இமயமலையின் மேல் உதறிவிட்டனர். உதறிவிடப்பட்ட இந்த ஆற்றல் அனைத்தும் ஒன்றாகச் சேர்ந்து முழுவடிவுடன் கங்கையில் மிதந்து கொண்டு வந்து கோரைகளுக்கு நடுவே தங்கியது. இந்த ஆற்றலில் இருந்து ஆறு முகங்களை உடைய குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையின் சில பகுதிகள் கார்த்திகைப் பெண்கள் உடம்பில் சிலகாலம் இருந்ததால், கார்க முனிவர் அக் குழந்தைக்குக் கார்த்திகேயன் என்று பெயரிட்டார். இந்தக் குழந்தை கங்கையில் மிதந்து வந்ததால் காங்கேயன் என்ற பெயர் ஏற்பட்டது. இவற்றை அல்லாமல், குகன், விசாகன், ஸ்கந்தன், குமரன், அதிபாலன் என்ற பெயர்களும் ஏற்பட்டன.

காங்கேயனின் தோற்றம் குறித்த செய்தி எங்கும் பரவி பார்வதியையும் எட்டிற்று. உடனே பார்வதி குழந்தையைக் காண விரும்பினாள். நாரதரும் இவர்கள் வருகைக்கு உதவி

புரிந்தார். சிவனும் பார்வதியும் கார்த்திகேயன் இருந்த இடத்தை நெருங்கினர். பல வாத்திய கோஷங்கள் எழுப்பப்பட்டன. தேவர்கள் பூமாரி பொழிந்தனர். குழந்தையைப் பார்வதி எடுத்து அணைத்துக் கொண்டாள். பிறகு சிவனும் எடுத்து அணைத்துக் கொண்டார்.

குழந்தையை அணைத்துக் கொண்டே சிவன், இந்தக் குமரன் என்ன செய்ய வேண்டும் உங்களுக்கு என்று கேட்டார். தேவர்கள் குமரனை எங்கள் படைத்தலைவனாக ஆக்குங்கள் என்று வேண்டிக் கொண்டனர். அந்த நேரத்தில் பிரம்மனுடைய ஆணையின்படி மிருத்யுவின் மகனாகிய சேனா என்பவள் அங்கே வந்து சேர்ந்தாள். அப்பொழுது தேவர்கள் சிவனைப் பார்த்து இந்தப் பெண் குமரனைக் கணவனாக அடைய வேண்டும் என்று பலகாலம் தவம் செய்தாள் என்று கூறினர். இதனைச் சிவன் ஏற்றுக் கொள்ள, உடனே சேனாவைக் குமரனுக்கு மணமுடித்தனர். சேனாவை மணந்ததால் சேனா வுக்குத் தலைவன் என்ற முறையில் சேனாபதி என்ற பெயர் குமரனுக்கு ஏற்பட்டது. இந்த நேரத்தில் கார்த்திகைப் பெண்கள், கார்க முனிவர், பார்வதி ஆகிய மூவரிடையே குழந்தை யாருடையது என்பதில் பெரிய கலகம் விளையத் தொடங்கியது. அங்கே வந்த நாரதர் சிவனுக்கும், பார்வதிக்கும் பிறந்த இக் குழந்தை பெரிய அசுரனை அழிப்பதற்காக என்றே சிறப்பாகக் கூறப்பட்டதாகும். ஆகவே நீங்கள் உரிமை கொண்டாட வேண்டாம் என்று கார்த்திகைப் பெண்களை அடக்கினார். குமரன் உடனே கார்த்திகைப் பெண்களைப் பார்த்து நீங்கள் என்றும் கார்த்திகை நட்சத்திரத்தின் இடமாக ஆகாயத்தில் இருப்பீர்களாக என்று வரமளித்தார்.

இதற்கு அடுத்தபடியாக ஸ்கந்தபுராணத்தில் இதே கதை முற்றிலும் வேறுவிதமாகச் சொல்லப்பட்டுள்ளது. அந்தக்

கதையில் சிவனுக்கு இடமே இல்லை. ஸ்கந்தன் அக்னியின் புதல்வன் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

**தாரகன் போர்**

தேவர்கள் ஸ்கந்தனிடம் வந்து தங்களுக்கு உதவியாகப் போரிட்டுத் தாரகனை அழிக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். போர்க்களத்தில் அசுரர்களும் தேவர்களும் நேருக்கு நேராகப் போர் புரியத் தயாராக நின்றனர். ஸ்கந்தன் ஓர் அதிசயிக்கத்தக்க விமானத்தில் ஏறி இருந்தார். (இரண்டாவது வகை வரலாற்றில் இவர் மயில் மீது அமர்ந்து போருக்கு வந்தார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.) இந்திரன் ஐராவதம் மேலும், யமன், வருணன், அக்னி, குபேரன் ஆகியோர் தத்தம் வாகனங்களிலும் ஏறிவந்திருந்தனர். அவர்கள் படைகளும் அவர்களைச் சுற்றி நின்றன. எண்ணிலடங்காத படைக்கலங்களையும் அவர்கள் தாங்கி நின்றனர். எதிரணியில் தாரகனும் ஓர் அற்புதமான விமானத்தின் மேல் ஏறிவந்தான். அவனைச் சுற்றி யானை, குதிரை முதலிய நால்வகைப் படைகளும் தக்க ஆயுதங்களுடன் போருக்குத் தயாராக நின்றன.

சண்டை தொடங்கியது. தேவர்களுக்கு உதவியாக மாந்தாதாவின் மகனாகிய முசுகுந்தனும், சிவனிடம் தோன்றிய வீரபத்திரனும் போரிட்டனர். சண்டை தொடங்கிய சற்று நேரத்திற்கெல்லாம் இந்தப் படைகள் தாரகனை எதிர்த்து நிற்க முடியாதென விஷ்ணு அறிந்து கொண்டார். எனவே அவர் ஸ்கந்தனிடம் வந்து, அருள் கூர்ந்து சண்டைக்குப் புறப்பட வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். ஓடிக் கொண்டிருந்த தேவர்களைப் பார்த்து தாரகன் பெரும் கூச்சலுடன், "வெட்கம் கெட்டவர்களே! தாரகனாகிய என்னுடன் ஒரு குழந்தையைப் போருக்கு அனுப்ப நீங்கள் எப்படித் துணிந்தீர்கள்?" இந்த நிலையில் இந்திரன் வஜ்ராயுதத்தால் தாரகனை அடித்தான்.

அதே வஜ்ராயுதத்தைப் பிடுங்கிக் கொண்டு இந்திரனை அடித்துக் கீழே தள்ளினான் தாரகன். "பேடித்தன்மையுள்ள இந்திரனே! உன்னைப் போல ஒரு வெட்கங்கெட்ட கோழை தேவர்களுக்கு அரசனாக இருந்தால், ஒரு குழந்தையைத்தான் போருக்கு அனுப்பமுடியும்" என்று எள்ளி நகையாடினான். இந்திரனுக்கு உதவியாக வந்த வீரபத்திரனை மார்பில் குத்திக் கிழித்துவிட்டான்.

இந்த நிலையில் ஸ்கந்தன் போர்க்களத்தில் புகுந்தார். இருவருக்கும் இடையே பெரும் போர் தொடங்கிற்று. வலிமை வாய்ந்த ஆயிரக்கணக்கான ஆயுதங்களை அவர்கள் ஒருவர் மேல் ஒருவர் பிரயோகித்துக் கொண்டனர். ஆனால் இந்த ஆயுதங்களால் இருவருக்கும் ஒரு தீங்கும் உண்டாகவில்லை. ஒருமுறை தாரகன் எய்திய ஈட்டி கந்தன் மார்பில் பட அவர் மயக்கமாக, ஆனால் மறு விநாடியே சுயநிலை வரப்பெற்றுப் போருக்குத் தயாரானார். கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள், முனிவர்கள் ஆகியோர் ஆகாயத்தில் கூடி நின்று இந்தப் போரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து இவர்களில் யார் ஜெயிப்பார்கள் என்று சொல்லுங்கள் என்று ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்த ஸ்கந்தன் 'அஞ்ச வேண்டா. மிகவும் சமர்த்தனான இந்த அசுரனை நான் கொன்றுவிடுவேன்' என்று கூறிவிட்டு அவர் வேலை எறிய அது தாரகன் தலையை வெட்டிற்று, என்று கூறுவது ஒரு புராணம். (வேலினால் குத்தலாமே தவிர தலையை வெட்டுவது இயலாத காரியம் என்ற கருத்தை மனத்தில் கொண்டு இரண்டாவது வகை ஸ்காந்தம் முருகன் வேலை எறிந்தான் என்றும், அது தாரகன் மார்பைக் கிழித்தது என்றும், அது கிழித்ததோடல்லாமல் அவனை பூமியில் தள்ளி பூமிக்குள்ளும்

அந்த வேல் சென்றது. வேல் துவாரமிட்ட இடத்தில் தண்ணீர் குபுகுபுவென்று பாய்ந்தது என்றும் கூறுகிறது.)

வெற்றி பெற்ற ஸ்கந்தனைப் பார்வதி மடியில் எடுத்து வைத்துக் கொண்டார். தேவர்கள் பூமாரி பொழிந்தனர்.

**பிரலம்பன் போர்**

தாரகனுடன் சண்டை ஆரம்பித்தவுடன் அவன் படையைச் சேர்ந்த பிரலம்பன் என்ற அசுரன் பாதாளலோகம் (நாக லோகம்) சென்று அங்கிருந்து பாம்புகளைக் கொன்று கொண்டிருந்தான். நாகலோகத்திற்கு உரியவனான சேஷனும், அவன் உடன் இருந்தவர்களும் ஸ்கந்தனைப் பார்க்க தேவ ருலகம் வந்து விட்டனர். இந்த நிலையில் நாகர்கள் கொல்லப் படுவதைக் குமுதா என்பவன் சேஷனிடம் கூறினான். சேஷன் முருகனை வேண்டிக் கொள்ள முருகன் இங்கிருந்தபடியே வேலை ஏவ, அது நாகலோகம் சென்று பிரலம்பனைக் கொன்றது. இப்பணி முடித்த முருகனுடைய வேல் பாதாள லோகத்தில் தோன்றிப் பாதாள கங்கையில் குளித்துவிட்டு முருகனிடம் வந்து சேர்ந்தது. வேலினால் உண்டாக்கப்பட்ட ஆற்றிற்கு 'சித்தகுபா' என்று ஸ்கந்தன் பெயரிட்டார்.

வலா என்ற அசுரனின் மகனாகிய வனா என்பவன் முருகனுக்கு பயந்து கிரௌஞ்ச மலையை அடைந்து அதில் ஒளிந்திருந்தான். கிரௌஞ்ச மலையில் வனாவைப் போன்ற கொடியவர்கள் பலர் மறைந்து வாழ்ந்து வந்தனர். முருகன் வேலை ஏவ, அதனால் கிரௌஞ்சம் துளைக்கப்பட்டபொழுது வனா முதலிய அசுரர்கள் கொல்லப்பட்டனர். (இந்த இரு கதைகளும் விஷ்ணு புராணத்தில் இடம் பெற்றுள்ள கதைகளாகும். அங்கு இவர்கள் இருவரையும் கிருஷ்ணன் கொன்றான் என்று சொல்லப்படுகிறது. எல்லாப் புராணங் களில் இருந்தும் அதிக மாற்றம் செய்யாமல் கதைகளை

*அப்படியே எடுத்துக் கொண்டு, அந்தப் புராணங்களில் கிருஷ்ணன் முதலியவர்கள் போர் செய்தார்கள் என்று கூறுவதற்கு பதிலாக ஸ்கந்தன் போர் செய்தார் என்று ஸ்கந்த புராணம் பேசுகிறது. அது மட்டுமல்லாமல் மகிஷாசுரன் கதையைச் சொல்லி அவனையும் முருகன்தான் வென்றார் என்று ஸ்கந்த புராணம் பேசுகிறது.)*

**சுவேதாவின் கதை**

சுவேதா என்ற மன்னன் சிறந்த சிவ பக்தன். சிவ பூஜையிலும், தியானத்திலும் பெரும் பொழுதைக் கழிக்கும் அவன் இறுதிநாளும் வந்தது. யமபடர்கள் அவனை அழைத்துப் போக வந்தனர். ஆனால் அவன் கோயிலுக்குள் தியானத்தில் அமர்ந்திருந்தான். ஆனால் யமபடர்கள் கோயிலுக்குள் செல்ல அஞ்சி வெளியே நின்றனர். அவர்கள் வராதது கண்ட யமன் தானே அங்கு வந்து சேர்ந்தான். கடமையைச் செய்யாத யம படர்களைக் கண்டித்து விட்டு உள்ளே சென்று சுவேதாவின் ஆவியைப் பறிக்கப் போனான். ஆனால் சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட சிவன் தன் நெற்றிக்கண்ணைத் திறந்து யமனை எரித்து விட்டார். இதுவரையில் தியானத்தில் ஆழ்ந்திருந்த சுவேதா நடந்தவற்றை அறியவில்லை. இந்தக் களேபரத்தில் கண்விழித்த சுவேதா நடந்ததை அறிந்து சிவனிடம் "ஐயனே! தாங்கள் செய்தது முறையா? எல்லோருடைய காலத்தையும் கணக்கிட்டுக் கொண்டு போவதால் தானே இவனுக்குக் காலன் என்ற பெயர் வந்தது. அவன் கடமையை அவன் செய்ததற்காக அவனை எரிக்கலாமா? காலன் இல்லாத உலகம் பயங்கரமாகப் பெருகிக் கொண்டே போய்விடும். தயவுசெய்து அவனை எழுப்பி அவன் கடமையைச் செய்யுமாறு பணிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். சிவனும் சிரித்துக் கொண்டே யமனை எழுப்பி விட்டார். காலன் சுவேதாவிற்கு நன்றி பாராட்டிவிட்டுச் சென்றார். *(தமிழ் நாட்டில் இக்கதை*

போலவே வழங்கும் மார்க்கண்டன் கதையும், திருக்கடவூரில் இந்நிகழ்ச்சி நடந்ததாகச் சொல்லப்படுகிறது. தமிழ்நாட்டுக் கதையில் சிவன், காலனைக் காலால் உதைத்தான் என்றுதான் கூறப்படுகிறது.)

ஒருமுறை கந்தமாதனத்தில் சிவனும் பார்வதியும் அமைதியாக அமர்ந்திருந்தனர். அவ்விடத்திற்கு வந்த நாரதர் பார்வதியைப் பார்த்து நீங்கள் இவ்வாறு பொழுது போக்குவதற்காகச் சூதாட்டத்தில் ஈடுபட்டால் மகிழ்ச்சியாக இருக்கலாம் என்றார். அவருடைய பேச்சைக் கேட்டுச் சூதாட்டத்தில் நாட்டம் கொண்ட பார்வதியும் சிவனும் சூதாட்டத்தில் ஈடுபட்டனர். நாரதர் சிவனுக்குதவியாக இருக்க சிவனும் பார்வதியும் விளையாடினர். நாரதர் சூழ்ச்சியால் ஒரு சிறிய தந்திரத்தைக் கையாண்டு சிவன் வென்றுவிட்டார். பார்வதிக்கு எல்லையில்லாத் துயரம் உண்டாயிற்று. குறுக்கே புகுந்த நாரதர், இது என்ன பிரமாதம் இந்த மூன்று உலகத்தில் சிவனை வெல்வார் யாருமில்லை. ஆகவே அவரிடம் தோற்ப தென்பது பெரிய அவமானமன்று என்று தூபம் போட்டார். மறுபடி ஒருமுறை ஆடவேண்டும் என்று முடிவு செய்து ஆடத் தொடங்கினர். இம்முறை சூதாட்டத்தில் பார்வதி வென்று விட்டார். சிவனையும், நாரதரையும் பார்த்து ஏதோ வெல்லவே முடியாது என்று கூறினீர்களே, இப்பொழுது என்னவாயிற்று என்று பார்த்தீர்களா? பார்வதி ஆகிய நானில்லாமல் சிவன் ஒன்றும் செய்துவிட முடியாது. இவருக்கு இந்நிலையைத் தந்ததே நான்தான் என்றுகூறி, தான் ஜெயித்ததற்கு அடையாளமாகச் சிவன் முடியிலிருந்த சந்திரன் முதலான வற்றைப் பந்தயப் பொருளாகப் பெற்றுக் கொண்டார். இந்த நிலையில் பிருங்கி முனிவர் அங்கு வந்து "தாயே! நீங்கள் பேசுவது நியாயமில்லை. எந்த உலகத்திலும் சிவனை வென்றவர் யாருமில்லை. இமவான் புத்திரியான தாங்கள் பல

காலம் தவம் செய்து சிவனை அடைந்ததை மறந்து விட்டீர்களா? இதற்கு முன்பிறவியில் தட்சன் மகளாகப் பிறந்தது நினைவில்லையா? யாக சாலையில் பலருடைய முன்னிலையில் சிவனை அவன் இழித்துப் பேசினான். அதை என்னால்\பொறுக்க முடியவில்லை என்று சொல்லிக் கொண்டுதானே யாக குண்டத்தில் விழுந்து உயிரை விட்டீர்கள். அப்படி இருக்க இப்பொழுது சிவனைக் குறை கூறுவது நியாயமா? தாங்களே அவருக்கு சக்தி, பதவி என்று கூறுவது எவ்வளவு பொறுத்தமற்றது என்று கூறினார். பார்வதி சிறிதும் மனம் மாறாமல் இருந்து விட்டார். ஆனால் சிவன் மிக்க கோபத்துடன் கந்தமாதனத்தை விட்டு வெளியேறி சித்தாடவி என்ற காட்டின் நடுவே சென்று தவத்தில் அமர்ந்து விட்டார். அவரைத் தவிர குபேரன் உள்பட அனைவரும் கைலை மலையிலேயே இருந்தனர். சிறிது காலம் கழித்து சிவனை விட்டுப் பிரிந்து இருக்க முடியாத பார்வதி அழகிய பெண்வேடம் கொண்டு சிவன் தவம் செய்யும் இடத்தில் சென்று அவர் தவத்தைக் கலைத்தார். இப் பெண்ணின் அழகில் ஈடுபட்ட சிவன், என்னை மணந்து கொள்கிறாயா என்று கேட்டார். அந்தப் பெண், எனக்கு ஒன்றும் தடையில்லை. என் தந்தை இமவானிடம் வந்து நீர் சம்மதம் பெறவேண்டும் என்றாள். சிவன் இமவானிடம் செல்ல, இமவான் சிரித்துக் கொண்டே நீங்கள் புதிய மருமகனாக வரவேண்டியதில்லை. எனது பழைய மருமகன் தான் நீங்கள் என்று சொல்ல, நாரதர் அங்குத் தோன்றி, "ஐயனே! நம்முடைய பிரச்சனைக்கெல்லாம் காரணம் பெண்களே! தாங்கள் தவம் செய்து கொண்டிருந்ததைக் கலைத்ததும் ஒரு பெண்தான்" என்றார். இவற்றைக் கேட்ட சிவன் மிகவும் தர்மசங்கடத்தில் ஆழ்ந்து கந்தமாதனத்திற்குத் தவம் செய்யப் போய்விட்டார். சிலகாலம் கழித்து சிவனில்லாத

கைலாசம் அர்த்தமற்றது என்பதை உணர்ந்த பார்வதி, இமவானுடன் அங்குக் கூடியிருந்த பக்தர்கள் பலரையும் அழைத்துக் கொண்டு கந்தமாதனம் சென்றார். சிவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவரையும் அழைத்துக் கொண்டு கைலாயம் வந்தனர்.

## இந்திரன் எங்கே ?

இந்திரன் அரண்மனையில் யாகம் நடந்து கொண்டிருந்தது. அந்த யாகத்தை முன்னின்று நடத்தியவன் விஸ்வகர்மாவின் மகன் விஸ்வரூபன். இந்த விஸ்வரூபனுக்கு அசுரர்கள் மேல் ஓரளவு அன்பு இருந்தது. இதன் காரணமாக யாகத்தில் பலியிடும்போது தேவர்களுக்கு பலியிடுகையில் கூடவே அசுரர்களுக்கும் பலியிட்டு வந்தான். இந்த ரகசியத்தை அறிந்து கொண்ட இந்திரன் தன் வஜ்ராயுதத்தால் விஸ்வரூபனைக் கொன்றுவிட்டான். விஸ்வகர்மாவும், விஸ்வரூபனும் பிராமணர்கள். ஆகையால் பிராமணனைக் கொன்ற பிரம்ம ஹத்தி தோஷம் இந்திரனைப் பிடித்துக் கொண்டது. மிக்க கடுமையான பிரம்மஹத்தியால் துரத்தப்பட்ட இந்திரன் எங்கு சென்றும் தன்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. ஒரு குளத்திற்குச் சென்று நீருக்கடியில் மறைந்து கொண்டான். அவன் வெளியே வரும்பொழுது பிடித்துக் கொள்ளலாம் என்று பிரம்மஹத்தி காத்துக் கொண்டிருந்தது. அமர லோகத்தில் இந்திரன் இல்லாமையால் அரசன் இல்லாத மூன்று லோகங்களும் துன்பத்திற்குள்ளாயின. பஞ்சம், வறட்சி, பசி என்பவை அனைவரையும் பிடித்து வாட்டலாயிற்று. நாரதரின் அறிவுரையின் பேரில் நகுஷன் என்பவன் இந்திரனாக்கப் பட்டான். ஆனால் அவன் அகஸ்தியரால் சபிக்கப்பட்டு பாம்பாக மாறிவிட்டான். அடுத்து யயாதியை இந்திரனாக்க முயன்றனர். அளவு மீறிய தற்பெருமை உடைய அவன்தான்

இதுவரை செய்த நற்காரியங்களைத் தம்பட்டம் அடித்துக் கொண்டு இந்திரப்பதவி தன்னைத் தேடிவந்தது தன் புண்ணியத்தின் காரணமாகத்தான் என்று பெருமைப்படத் தொடங்கினான். இதனால் அவனுக்கும் இந்திரப்பதவி நிலைக்க வில்லை. வேறு வழியின்றிப் பழைய இந்திரனையே கொண்டு வர வேண்டுமென்று தேவர்கள் முடிவு செய்தனர். நாரதர் பழைய இந்திரனைக் கூப்பிட்டவுடன் அவன் பிரம்மஹத்தி யிடம் நிலைமையை விளக்கினார். பிரம்மஹத்தி இந்திரனை விட்டால் எனக்கு இடம் எங்கே என்று கேட்க, தண்ணீர் ஓடுகின்ற ஆறு, அதன் பக்கத்தில் உள்ள மரம், பூமியில் ஏதாவது ஒரு பகுதி, ஏதாவது ஒரு பெண் இந்த நான்கிலும் பிரம்மஹத்தி வாழலாம் என்று கூறியவுடன், பிரம்மஹத்தி இந்திரனை விட்டு விட்டது.

இந்திரனைக் கொண்டு வந்து மிக்க ஆடம்பரத்துடன் முடிசூட்டினான்.

**விருத்திராசுரன் கதை**

விஸ்வகர்மாவின் மகன் விஸ்வரூபனைக் கொன்ற தோஷத்தில் இருந்து இந்திரன் தப்பித்துக் கொண்டாலும், விஸ்வகர்மா இந்திரனை மன்னிக்கத் தயாரில்லை. தன் மகனைக் கொன்றதற்கு இந்திரனைப் பழிவாங்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்த விஸ்வகர்மா மிகப் பெரிய தவத்தில் ஈடுபட்டான். பிரம்மன் எதிர்ப்பட்ட பொழுது இந்திரனைக் கொல்லத் தனக்கு ஒரு பிள்ளை வேண்டும் என்று விஸ்வகர்மா கேட்க, பிரம்மன் அப்படியே ஆகட்டும் என்றார். அதன் பயனாகப் பிறந்தவன்தான் விருத்திரன். சிறு குழந்தையாகப் பிறந்தவுடனேயே நாள் ஒன்றுக்கு மூன்று வில் உயரம் வளர்ந்தான். பயங்கரமான வடிவுடன் திகழ்ந்தான். சிவனைக் குறித்துப் பெரும் தவம் செய்து நினைத்தற்கரிய பேராற்றலைப்

பெற்றான். இந்திரனுடன் போருக்குச் சென்றபொழுது இந்திரனைச் சேர்ந்த அனைவரும் விருத்திரன் எதிரே நிற்க முடியாமல் ஓடிவிட்டனர். இந்திரன் மட்டும் நின்று வஜ்ராயுதத்தை அவன் மேல் ஏவ, அதை எளிதாகக் கையில் பிடித்த விருத்திரன் மறுபடியும் இந்திரன் மேல் அதை வீசினான். வஜ்ராயுதம் இடியோசையுடன் சென்று இந்திரன் நெஞ்சைத் தாக்க அவன் கீழே விழுந்தான். இப்படிப் பலமுறை விருத்திரனிடம் தோற்ற இந்திரன் கடைசியாகச் சூழ்ச்சி செய்து விருத்திரனிடம் நட்பு பாராட்டுவது போல் பொய் நட்புக் கொண்டு, இறுதியில் சூழ்ச்சியாலேயே அவனைக் கொன்று விட்டான்.

கந்த புராணத்தில் வரும் இக்கதையில் விருத்திரன், இந்திரன் ஆகிய இருவரும் பிரதோஷத்தன்று போரிட நேரிட்டது என்றும், விருத்திரன் விரதத்தில் தவறு செய்ததால் இறக்க நேர்ந்தது என்றும் கூறப்படுகிறது.

முன்னொரு காலத்தில் விரோசனன் என்ற அசுரனுக்கு பலி மகனாகப் பிறந்தான். குலகுருவாகிய சுக்ராச்சாரியாரை வைத்துக் கொண்டு மிகப் பெரிய யாகம் ஒன்று செய்ய அந்த யாக குண்டத்தில் இருந்து அற்புதமான நான்கு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய ஒரு ரதம் வந்தது. அதில் ஏறிக் கொண்டு தேவருலகத்தை வென்று இந்திரனை விரட்டி விட்டான். தேவர்கள் மனித உருத்தாங்கி உலகத்தில் திரியலாயினர். இந்திரப் பதவியில் அமர்ந்த பலி இயல்பாகவே வள்ளல் குணம் படைத்தவன் ஆதலால் யார் எது கேட்டாலும் இல்லை என்னாது கொடுக்கும் இயல்புடையவன். இந்தக் குணம் அவனது பூர்வ ஜென்ம வாசனையால் வந்தது.

பலி முன்ஜென்மத்தில் 'கிட்டவா' என்ற பெயருடன் வாழ்ந்தான். எல்லாத் தீமைகளுக்கும் ஒரு கொள்கலமாக

வாழ்ந்தான் என்றாலும், ஒருமுறை பூக்கள், கோயிலில் புகை போகும் வாசனைத் திரவியங்கள் ஆகியவற்றைக் கையில் எடுத்துக் கொண்டு நடந்து சென்ற பொழுது கால் இடறிக் கீழே விழுந்தான். ஆனால் உடனே இறந்துவிடவில்லை. சில நேரம் கழித்துத்தான் அவனுயிர் பிரிந்தது. அப்படிப் பிரிவதற்கு முன்னர் அவன் அந்தப் பூக்களையும், வாசனைத் திரவியங் களையும் கொண்டு மனத்தினால் சிவபூஜை செய்தான். சிவபூஜையில் ஈடுபட்டபடியே உயிர் துறந்தான். ஆதலின் மூன்று மணிநேரத்திற்கு இந்திரப் பதவியில் இருக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அது முடிந்ததும் அவன் நரகத்திற்குப் போக வேண்டும் என்று எண்ணிய நாரதர் மெள்ள அவனிடம் வந்து, இந்திராணியைக் கூப்பிட்டு உன் பக்கத்தில் வைத்துக் கொள் என்று புத்திமதி கூறினார். ஆனால் கிட்டவா பிறர் மனைவியை விரும்பாதவன். அன்றியும் எல்லையற்ற கொடைத் தன்மை உடையவன் ஆதலால் இந்திரப் பதவிக்குரிய ஐராவதம் என்ற யானை, உச்சைச்சிரவம் என்ற குதிரை, சுரபி என்ற காமதேனு ஆகிய மூன்றையும் முறையே அகஸ்தியர், விஸ்வா மித்திரர், வசிட்டர் ஆகிய மூவருக்கும் தானமாகக் கொடுத்து விட்டான். அவன் இந்திரப் பதவியை விட்டுப் போனவுடன், பழைய இந்திரன் பதவிக்கு வந்தான். தான் மிகவும் விரும்பி வைத்திருந்த யானை, குதிரை, பசு இந்த மூன்றும் கொடுக்கப் பட்டு விட்டதை அறிந்த இந்திரன் அந்த முனிவர்களை அழைத்து அவற்றைத் திருப்பித் தருமாறு கேட்டான். எந்தப் பொருளிலும் பற்றில்லாத அவர்கள் சற்றும் தயக்கமின்றித் திருப்பித் தந்து விட்டனர். வள்ளன்மைக் குணம் உடைய இந்த கிட்டவாதான் மறுபிறப்பில் பலியாகப் பிறந்தவன். எனவே இந்தப் பிறப்பிலும் வள்ளன்மை உடையவனாகவே இருந்தான்.

தொண்ணூற்றொன்பது யாகம் செய்த பலி, சுக்ராச் சாரியாரின் ஏவலில் நூறாவது யாகத்தைத் தொடங்கினான்.

(யாகத்தில் வாமனன் வந்ததும், மூன்றடி மண் கேட்க சுக்ராச்சாரி, இவன் விஷ்ணு, ஆகவே இவனுக்குக் கொடுக்காதே என்று சொன்னதும், முன்னர் பல புராணங் களிலும் வந்துள்ளது.) இதற்கு மேல் ஸ்கந்த புராணம் புதுமையான சில செய்திகளைக் கூறுகிறது.

சுக்ராச்சாரி சொன்னதும் பலி, 'வந்திருப்பது விஷ்ணு என்பதை நான் நன்கு அறிவேன். அவன் எனக்கு விடுதலை நல்கவே வந்திருக்கிறான். ஆகவே அவன் கேட்ட மூன்றடி நிலத்தைத் தரத்தான் போகிறேன்' என்று கூறினான். சுக்ராச்சாரி மிகுந்த கோபத்துடன் யாகசாலையை விட்டுப் போய்விட்டார். வாமனன் விரும்பியபடியே பலி தாரை வார்த்துக் கொடுத்தான். வாமனன் வளர்ந்து பூமியையும், ஆகாயத்தையும் இரண்டடிகளால் அளந்த பிறகு தன்னுடைய உருவத்தைச் சுருக்கிக் கொண்டு, பலியின் சிம்மாசனத்தில் அமர்ந்து கொண்டார். இப்பொழுது விஷ்ணு தான் ஒன்றும் பேசாமல் கருடனை அழைத்தார். அங்கே வந்த கருடன் பலியைப் பார்த்து, விஷ்ணுவின் மூன்றாவது அடிக்கு இடமெங்கே, நீ உன் வார்த்தையைக் காப்பாற்ற வேண்டுமே என்று சொல்லிக் கயிற்றால் பலியை இறுக்கக் கட்டிவிட்டான் கருடன். இதை அறிந்த பலியின் மனைவி விந்தியவலி அங்கே வந்து கருடனைப் பார்த்து, என் கணவன் கொடுத்த வாக்கை மீறமாட்டான். உனக்கு வேண்டியது மூன்றாவது அடியை வைக்க வேண்டிய இடம்தானே. முதலில் அவரை அவிழ்த்து விடு, நான் காட்டுகிறேன் என்றாள். உடனே விந்தியவலி விஷ்ணுவைப் பார்த்து, இதோ என் குழந்தையின் தலை, என் தலை, என் கணவன் தலை ஆகிய மூன்று இடங்கள் உள்ளன. தங்கள் மூன்று அடியால் எங்கள் தலைமேல் வைத்து அந்த இடத்தை எடுத்துக் கொள்ளலாம் என்றாள். மகிழ்ச்சி அடைந்த விஷ்ணு, "கீழ் உலகத்தில் சுதாலா என்ற இடத்தில் சென்று

நீ, உன் மனைவி மகனுடன் தங்குவாயாக" என்றார். அது கேட்ட பலி எங்கேயும் சென்று தங்கி உயிர் வாழும் ஆசை எனக்கில்லை. விஷ்ணுவின் பக்கத்திலேயே இருக்க வேண்டும் என்று வேண்டினான். அது கேட்ட விஷ்ணு, கவலை வேண்டாம். நீ இருக்கின்ற இடத்தில் உன் கூடவே நான் இருப்பேன் என்று கூறியவுடன் பலி மகிழ்ந்து சுதாலாவிற்குள் தங்கினான்.

இந்தக் கதையில் சிவனுக்கு ஒன்றும் இடமே இல்லை என்றாலும் பலியாகப் பிறந்தவன் பூர்வத்தில் 'கிட்டாவா'யாக இருந்து மனத்தினால் சிவபூஜை செய்ததால்தான் இந்திரப் பதவியும், பலியாகப் பிறக்கும் புண்ணியமும் பெற்றான். ஆகவே சிவபூஜைக்கு சமத்துவமானது எதுவுமில்லை என்று ஸ்கந்த புராணம் வலியுறுத்துகிறது.

இதை அடுத்து ஏனைய புராணங்களைப் போல ஸ்கந்த புராணமும் பிரபஞ்ச உற்பத்தி பூமியின் பிரிவினை பற்றிப் பேசுகிறது.

### தீர்த்த வரலாறு

இப்புராணத்தின் சிறப்பம்சம் ஏனைய புராணங்களில் இல்லாத முறையில் மிகப் பலவாய தீர்த்தங்கள் பற்றியும், அத்தீர்த்தங்கள் ஒட்டிய கதையினையும் மிக விரிவாகப் பேசுவனவாகும். உதாரணத்திற்குப் பின்வரும் கதையினைக் காணலாம்.

பஞ்சபாண்டவர்களில் ஒருவனாகிய அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை மேற்கொண்ட வரலாறு பாரதத்திலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. தட்சிண சாகரம் என்னும் தென் கடலை அடுத்துள்ள ஐந்து தீர்த்தங்கள் முறையே குமரேஷா, ஸ்தம்பேஷா, வர்க்கரேஷ்வரா, மஹாகாளா, சித்தேஷா

என்பனவாம். அர்ச்சுனன் சென்ற பொழுது இந்தத் தீர்த்தங்களில் யாருமே இறங்கிக் குளிக்காமல் அவற்றை ஒதுக்கிச் சென்றதைக் கண்டான். சில முனிவர்களைப் பார்த்து ஏன் எல்லோரும் இந்த ஐந்து தீர்த்தங்களை ஒதுக்கி விடுகிறார்கள் என்று கேட்டான். அதற்கு அந்த முனிவர்கள், "இந்த ஐந்து தீர்த்தங்களிலும் ஐந்து பெரிய முதலைகள் உள்ளன. யார் இதில் இறங்கினாலும் அவர்கள் மீள்வதே இல்லை. நீயும் இதனை ஒதுக்கிவிட்டுச் செல்வது நலம்" என்றார்கள்.

மாவீரனாகிய அருச்சுனனுக்கு இது பிடிக்கவில்லை. எனவே துணிந்து தீர்த்தத்தில் இறங்கினான். ஒரு முதலை வந்து அவன் காலைக் கவ்விக் கொண்டது. பெரு வீரனாகிய அருச்சுனன் அந்த முதலையையும் சேர்த்து இழுத்துக் கொண்டு கரையேறிவிட்டான். கரைக்கு வந்ததும் முதலையின் வடிவம் மாறி ஓர் அழகிய அப்ஸரஸ் நின்றாள். வியப்படைந்த அருச்சுனன் நீ யார் என்று கேட்க, அப்பெண் தன் வரலாற்றைச் சொல்லத் துவங்கினாள்.

நாங்கள் ஐவர் அப்ஸரஸ் பெண்கள். எங்கள் அறியாமை காரணமாக தவத்தில் ஈடுபட்டிருந்த ஒரு முனியின் தவம் கலையுமாறு துன்புறுத்தினோம். தவம் கலைந்த அவர் எங்கள் மேல் கடுஞ்சினம் கொண்டு முதலைகளாகப் போகக் கடவீர் என்று சாபமிட்டார். நாங்கள் வருந்தி மன்னிப்புக் கேட்டவுடன், எப்பொழுது ஒரு வீரன் உங்களைக் கரையில் கொண்டு வந்து சேர்க்கிறானோ அப்பொழுது உங்கள் சாபம் நிவர்த்தியாகும் என்று கூறினார். உம்முடைய தயவால் நான் விடுதலை அடைந்து விட்டேன். என் தோழிகள் நால்வரையும் விடுதலை செய்து தரவேண்டும் என்று அப்பெண் சொல்ல, எஞ்சிய நால்வரையும் அருச்சுனன் விடுவித்தான்.

**மஹிசாகர சங்கமம் :** மஹி என்ற பெயருடைய பிரசித்த மான நதி கடலில் கலக்கும் இடம்தான் மஹிசாகர சங்கமம் எனப்படும். இந்தச் சங்கம ஸ்தானம் மிகவும் புண்ணியம் வாய்ந்தது என்றும், இந்தத் தீர்த்தத்தில் குளித்தால் உலகில் உள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் குளித்த பயன் கிடைக்கும் என்றும் ஸ்கந்தன் சொல்லியதாக இப்புராணம் கூறுகிறது. நாரதர் இதனுடைய பெருமையைப் பின்வருமாறு கூறினார்.

ஒருமுறை நாரதர், பிருகு முனிவரிடம் வந்து மஹிசகார சங்கமத்தில் ஏதேனும் தனிப்பட்ட சிறப்பு உண்டா என்று கேட்டார். அப்பொழுது இந்தத் தீர்த்தத்தின் பெருமையைப் பிருகு சொல்ல ஆரம்பித்தார்.

நான் தீர்த்த யாத்திரை சென்ற காலத்தில் ஒருமுறை மஹிசாகர சங்கமத்தில் வந்து சேர்ந்தேன். மிகவும் வயது முதிர்ந்து தள்ளாடிய நிலையில் ஒரு முனிவர் ஆகாயத்தில் கைகளை உயர்த்தி ஓவென்று அலறிக் கொண்டிருந்தார். அதிசயத்துடன் அவரை அணுகி அவர் வரலாற்றைத் தெரிந்து கொண்டேன். அந்தப் பெரியவர் தன் மனைவி, சீடர்கள் ஆகியோருடன் கங்கை சங்கமம் ஆகும் இடத்தில் ஓர் ஆசிரமம் அமைத்து அங்கே தங்கி இருந்து தம் பிதுர்க்களுக்குப் பிரீதி ஆன பல சடங்குகளைச் செய்து வந்தார். ஒருமுறை அவர் மேலே பார்த்த பொழுது தன்னுடைய பிதுர்க்கள் எளிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டு இருப்பதையும், சுபத்திராவின் பிதுர்க்கள் ஆடம்பரமான வாழ்க்கை வாழ்வதையும் கண்டார். இக்காட்சியைத் தேவசர்மா பெற்றது கங்கைக் கரையிலாகும். தம் பெற்றோர் எளிய வாழ்க்கை வாழ்வதற்கும், சுபத்ராவின் பெற்றோர் செல்வ வாழ்க்கை வாழ்வதற்கும் காரணம் என்ன என்று ஆராய்ந்த பொழுது, தேவசர்மா ஒன்றினைக் கண்டார். சுபத்ரா மஹிசங்கம சாகரத்தில் வசித்துக் கொண்டிருந்து, பிதுர்க்கடனை இயற்றியதால் அவருடைய பிதுர்க்கள் செல்வ

வாழ்க்கை வாழ்கின்றார்கள் என்றும் தான் கங்கைக் கரையில் அக்காரியத்தைச் செய்யாததால் தன் பிதுர்க்கள் எளிய வாழ்க்கை வாழ்கிறார்கள் என்றும் கண்டார். உடனே தானும் மஹிசாகர சங்கமத்திற்குச் செல்லவேண்டும் என்று விரும்பி னார். ஆனால் அவர் மனைவி அதற்கு ஒத்துக் கொள்ள வில்லை. உம்முடைய பிதுர்க்களுக்கு வளமான வாழ்வு தர வேண்டும் என்றால் நீர் அங்கே போகலாம். என்னைப் பொறுத்தவரையில் இந்த வசதியான வாழ்க்கையை விட்டு விட்டுத் தெரியாத இடத்திற்கு வரத் தயாரில்லை என்று கூறிவிட்டார். தன் சீடர்களிடம் அவளை ஒப்படைத்துவிட்டு சர்மா மஹிசாகர சங்கமம் வந்து சேர்ந்தார்.

சில காலம் கழித்தவுடன் மனைவியைத் தனியே விட்டு வந்த துயரம் அவரை ஆட்கொண்டது. பிதுர்க்களைத் திருப்திப் படுத்த வேண்டுமானால் மஹிசாகர சங்கமத்தில் தங்க வேண்டும். மனைவியை திருப்திப்படுத்த வேண்டுமானால் கங்கைச் சங்கமத்தில் தங்க வேண்டும். எதைச் செய்வது என்று தர்மசங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டு ஓவென அழுது கொண்டிருந்த நிலையில்தான் நான் அவரைப் பார்த்தேன். நல்லவேளையாக நான் அங்கே இருந்தபொழுது சுபத்ரா வந்து சேர்ந்தாள். விபரத்தை அறிந்த அவர் அம்மாவைப் பார்த்து, நீ கவலைப்பட வேண்டாம். உம்முடைய பிதுர்க்களுக்கு நான் இங்கே தங்கி கடன்கள் செய்கிறேன். நீர் கங்கை சங்கமத்தில் தங்கி என் பிதுர்க்களுக்குக் கடன்களைச் செய்யும். ஆனால் ஒன்று, நீர் சேகரிக்கும் புண்ணியத்தில் கால்பங்கை எனக்குத் தந்துவிட வேண்டும் என்று கூறினார். இந்தத் திட்டத்தில் மன மகிழ்ச்சியோடு தன் சம்மதத்தைத் தெரிந்த அம்மா கங்கை சங்கமம் வந்து சேர்ந்தாள் என்று பிருகு முனிவர் நாரதருக்குச் சொன்னார். இதுவே மஹிசாகர சங்கமத்தின் சிறப்பாகும்.

இந்தக் கதையை அருச்சுனனுக்குச் சொல்லிய நாரதர் மேலும் ஒரு செய்தியைச் சொன்னார். இந்தச் சங்கமத்தில் ஸ்கந்தனால் நான்கு லிங்கங்கள் பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ளன. அதன் காரணம் என்ன தெரியுமா? தாரகாசுர வதம் முடிந்தவுடன் பெரிய சிவபக்தனாகிய அவனைக் கொன்றதற்காக ஸ்கந்தன் மிகவும் மனம் வருந்திக் கொண் டிருந்தார். அப்பொழுது விஷ்ணு அங்கே வந்து, ஸ்கந்தனைப் பார்த்து, கவலைப்படத் தேவை இல்லை. தாரகன் இறந்த இடத்தில் ஓர் லிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டால் போது மென்றார். ஸ்கந்தன் உடனே ஒன்று என்ன, மூன்று லிங்கங்கள் பிரதிஷ்டை செய்தார். தன்னுடைய கடமை முடிந்ததை உணர்த்த குமாரேஷ்வரா என்ற லிங்கத்தை ஸ்தாபிக்கிறேன் என்று மூன்று லிங்கங்களை நிறுவினார். இந்த இடத்தில் ஸ்கந்தன் வெற்றியைக் குறிக்க ஓர் உயர்ந்த தூணின் மேல் லிங்கத்தை ஸ்தாபித்தார்கள். அதற்கு ஸ்தம்பேஷ்வரா என்று பெயரிட்டனர்.

**மஹிசாகர சங்கமக் கதை – 2**

நாரதர் மஹிசாகர சங்கமத்தின் பெருமையை அருச்சுன னுக்குக் கூறிக் கொண்டு வரும்பொழுது அதை நிரூபிக்கும் வகையில் மற்றொரு கதை கூறினார். கலியுகத்தின் தொடக்கத்தில் விடசிங்கா என்ற மன்னன் சிங்கள தேசத்தை ஆட்சி செய்தார். அவனுக்கு ஓர் அழகிய பெண் இருந்தார். அழகிய பெண் உருவமானாலும் அவள் தலை மட்டும் ஆட்டின் தலையாக இருந்தது. அவளைப் பார்ப்பவர்கள் அனைவரும் அஞ்சி ஓடினர்.

ஒருநாள் அப்பெண் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்ததும் அவளது பழம்பிறப்பு நினைவுக்கு வந்தது. பழைய பிறப்பில் அவள் ஒரு பெண் வெள்ளாடாக இருந்தாள். மஹி

சங்கமத்தின் பக்கத்தில் மிகப் பெரிய காடு ஒன்று இருந்தது. முள்ளும் புதரும் கடக்க முடியாமல் நெடிதுயர்ந்து வளர்ந்து இருந்தது. அதன் இடையே பெண் வெள்ளாடு சிக்கிக் கொண்டது. அதைத் தாண்டிப் போக முடியாத நிலையில் பசியால் வருந்தி உயிரை நீத்தது. மஹி சங்கமக் கரையில் வெள்ளாடு உயிர் நீத்தாலும் அதன் உடல் மெள்ள வழுக்கி, மஹிசகார சங்கமத்தில் விழுந்து விட்டது. ஆனால் ஆட்டின் தலை மட்டும் புதர்கள் நடுவே சிக்கிக் கொண்டதால் தலை தண்ணீரில் விழவில்லை. ஆட்டின் உடல் ஆற்றில் விழுந்ததால் பெரும் புண்ணியத்தைப் பெற்று சிங்கள மன்னனின் மகளாகப் பிறந்தது. ஆனால் ஆட்டின் தலை தண்ணீரில் விழாமல் மேலேயே தங்கி விட்டதால் இந்தப் பெண்ணின் தலையும் வெள்ளாட்டின் தலையாகவே இருந்தது. இந்த நுணுக்கத்தை அறிந்து கொண்ட அப்பெண் தன் தந்தையிடம் சொல்லி ஒருமுறை மஹாசாகர சங்கமத்திற்குச் சென்று வரவேண்டு மென்று கேட்டுக் கொண்டாள்.

அவள் தந்தை ஒரு கப்பலைத் தயார் செய்து அவளை அதில் ஏற்றி கடலைக் கடந்து மஹிசாகர சங்கமத்திற்கு அனுப்பி வைத்தார். தன் உடல் இருந்த இடத்திற்குச் சென்று பார்த்த அப்பெண்ணிற்கு ஆட்டின் தலை வெறும் எலும்புக் கூடாக— தோல் மட்டும் சுருங்கி இருப்பதைக் கண்டாள். அந்தத் தலையை எடுத்துக் கொளுத்தி எலும்பையும், சாம்பலையும் மஹிசாகர சங்கமத்தில் போட்டவுடன் அந்தப் புண்ணியத்தால் இவள் ஆட்டுத்தலை மாறி அழகிய மானுடத் தலை வந்து விட்டது. பல அரசகுமாரர்கள் அவளை மணக்க போட்டி போட்டனர். ஆனால் அவள் அதை ஏற்றுக் கொள்ளாமல் திருமணம் செய்து கொள்ளாமலே இருந்து வர்கரேஷ்வரா என்ற பெயருடன் ஒரு லிங்கத்தை ஆட்டின் தலை எரித்த இடத்தில் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தாள்.

## அருணாசல மகிமை

ஒருமுறை சிவனின் மெய்க்காப்பாளனாக உள்ள நந்தி, மார்க்கண்டேய முனிவருக்கு அருணாசல தீர்த்தத்தின் மகிமையைச் சொல்லத் துவங்கினார்.

முன்னொரு காலத்தில் வஜ்ராங்கதன் என்ற மன்னன் காட்டிற்குள் நுழைந்து வேட்டையாடும் பொழுது, ஒரு கஸ்தூரி மானைத் துரத்திக் கொண்டு நீண்ட தூரம் குதிரைமேல் வந்துவிட்டான். மிக்க களைப்புடன் வந்து கொண்டிருந்த மன்னன் களைப்பு மிகுதியால் திடீரென்று குதிரையிலிருந்து கீழே விழுந்துவிட்டான். அவன் விழித்துப் பார்த்தபொழுது அவன் ஏறி வந்த குதிரையும், துரத்தி வந்த மானும் திடீரென்று வித்யாதரர்களாக மாறி ஆகாயத்தில் செல்லத் தயாராக இருந்ததைப் பார்த்தான். வியப்படைந்த பாண்டியன் 'நீங்கள் யார்' என்று கேட்க 'நாங்கள் வித்யாதரர்களாக இருந்தவர்கள். ஒருமுறை துர்வாச முனிவர் ஆசிரமத்தின் பக்கத்தில் சென்றோம். அவர் தவத்தைக் கலைக்கக் கருதி நான் காலால் பலமுறை பூமியை உதைத்தேன். என் நண்பன் ஆசிரமத்தைச் சுற்றி இருந்த வாசனைப் பூக்களைப் பறித்துக் கொண் டிருந்தான். தவம் கலைந்த துர்வாசர் தரையைக் காலால் தட்டிய என்னைக் குதிரையாகப் பிறக்கக் கடவாய் என்றும், வாசனைப் பூக்களைப் பறித்த என் நண்பனைக் கஸ்தூரி மானாகப் பிறப்பாய் என்றும் சபித்தார். நாங்கள் அழுது மன்னிப்புக் கேட்டவுடன் உங்களுடைய வாழ்க்கையில் எப்பொழுது அருணாசல மலைக்குப் பக்கத்தில் வருகிறீர்களோ அப்பொழுது மறுபடியும் வித்யாதரர்களாக மாறுவீர்கள் என்று சாபவிமோசனம் தந்தார். இப்பொழுது உங்கள் தயவால் அருணாசல மலைக்குப் பக்கத்தில் வந்துவிட்டோம். எங்கள் சாபமும் ஒழிந்தது' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டனர்.

மன்னன் இவ்வளவு சிறந்த புண்ணிய க்ஷேத்திரத்தை விட்டுப் போக மனமில்லாமல் மகனிடம் ராஜ்ஜியத்தைக் கொடுத்துவிட்டு மலையிலேயே தங்கிவிட்டான். தங்கியதோடு மட்டுமல்லாமல் தினமும் மலையைச் சுற்றி வந்தான். மரம், செடி, கொடிகளில்லாத அப்பகுதியில் நிறைய மரம் வளர்ந்தது. குளம் வெட்டிப் பல நன்மைகள் செய்தான். மூன்றாண்டுகள் கழிந்த பிறகு சிவன் அம்மன்னன் முன் தோன்றி உன்னுடைய சாபம் தீர்ந்துவிட்டது. நீ இந்திரன். இந்திரனாக இருந்தபொழுது என்னை மதிக்காமல் அகங்காரத்தோடு நடந்து கொண்டதால் இந்த மானுடப் பிறப்பை அடைந்தாய். இப்பொழுது நீ செய்த சிவபுண்ணியத்தால் உன் சாபம் நீங்கிவிட்டது. இந்திரலோகம் சென்று இந்திரப் பதவியை மேற்கொள்ளலாம் என்றார்.

மார்க்கண்டேய முனிவரிடம் இக்கதையைக் கூறிய நந்தி, அருணாசல மலையின் சிறப்பைப் பற்றிக் கூறலானார். அந்த மலை முழுவதும் சிவனுடைய ஸ்தூல வடிவமாகும். அந்த மலை வலம் வருதல் எங்கும் நிறைந்துள்ள சிவனை வலம் வருவதற்கு ஒப்பாகும். இது எப்படி நிகழ்ந்தது என்பதை நான் சொல்கிறேன்.

ஒருமுறை சிவனிடத்தில் ஓர் அற்புதமான கனி யாரோ கொடுத்திருந்தார்கள். கணேசன், ஸ்கந்தன் ஆகிய இரு பிள்ளைகளும் தந்தையிடம் வந்து அப்பழத்தைக் கேட்க சிவன் ஒரு சோதனை வைத்தான். "உங்கள் இருவரில் யார் உலகம் முழுவதையும் முதலில் சுற்றி வருகிறீர்களோ அவர்களுக்கே இப்பழம் உரியது" என்றார். ஸ்கந்தன் உலகைச் சுற்றி வரப் புறப்பட்டான். ஆனால் கணேசர் அருணாசல மலையைச் சுற்றி வந்தால் உலகைச் சுற்றி வந்ததற்கு ஒப்பாகும் என்று கூறி அம்மலையைச் சுற்றி வந்து பழத்தைப் பெற்றுக் கொண்டார். அருணாசலத்திற்குச் சோணாசலம் என்ற பெயரும் உண்டு.

**வேங்கடாஜல தீர்த்தம்**

*இக்கதைகளில் வரும் 'தீர்த்தா' என்ற சொல் தண்ணீரைக் குறிப்பதோடு யாத்திரை செய்வதற்குரிய புண்ணிய ஸ்தலங் களையும் குறிக்கும்.*

*விஷ்ணுவின் அவதாரமாகிய வராக அவதாரத்தில் வராகம் பிருத்வி எனப்படும் பூமி தேவிக்கு வேங்கடாசல தீர்த்தத்தின் பெருமையை எடுத்துக் கூறியுள்ளது. வேங்கடாசலத்தைச் சுற்றிப் பல தீர்த்தங்கள் உள்ளன. குமாரதாரா என்ற தீர்த்தத்தின் கரையில் ஸ்கந்தன் தேவ சேனாவுடன் பல காலம் வாழ்ந்தார்.*

*பாரத்வாஜ முனிவர் அர்ஜுனனிடம் வேங்கட மலையின் பெருமையைப் பின்வரும் கதையின் மூலம் எடுத்து விளக்கினார்.*

*ஒரு ராட்சசனின் மகனாகிய அஞ்சனா என்பவள் கேசரி என்ற வானரத்தை மணந்து நீண்டகாலம் மகப்பேறு இல்லாமல் இருந்தாள். எத்தனையோ விரதங்கள் இருந்தும், தீர்த்தங்களில் மூழ்கியும் அவள் எண்ணம் ஈடேறவில்லை. விஷ்ணு பக்தராகிய மதங்க முனிவர் அஞ்சனாவைப் பார்த்து நீ வேங்கடாசல மலை மீது ஏறி அங்கு உன் தவத்தை மேற் கொண்டால் உனக்குப் பிள்ளைப்பேறு உண்டாகும் என்றார். அதன்படியே அஞ்சனா, மலையின் உச்சியில் அமர்ந்து ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்தாள். தவத்தின் இறுதியில் வாயுதேவன் தோன்றி, உனக்கு நானே மகனாகப் பிறக்கப் போகிறேன் என்று கூறினான். அவ்வாறு பிறந்தவனே இராம பக்தனாகிய அனுமன் என்பதை யாவரும் அறிவர்.*

*'இந்த வேங்கட மலையில்தான் ஹைஹய அரசனாகிய சங்காவிற்கு, விஷ்ணு தரிசனம் தந்தார்' என்று பரத்வாஜ முனிவர் அர்ச்சுனனுக்குக் கூறினார்.*

## புருஷோத்தம க்ஷேத்திரம்

*பூரி ஜெகன்னாதர் ஆலயத்தை இந்திரத்துய்மன் என்ற மன்னன் நிறுவியது பற்றி விஷ்ணு புராணத்தில் முன்னரே கொடுக்கப்பட்டுள்ளது. கடற்கரையில் வளர்ந்துள்ள மரத்தை வெட்டி எடுத்து, சிலைகள் செய்க என்று இந்திரத்துய்மன் கனவில் கண்டதாகவும், மறுநாள் மரத்தை வெட்டப் போகும் போது விஷ்ணுவும், விஸ்வகர்மாவும் பிராமணன் வடிவில் வந்து சிலைகளைச் செய்ததாகவும் விஷ்ணு புராணக் கதை சொல்லிச் செல்கிறது. அந்தக் கதை, மரத்தை வெட்டுவதி லிருந்து ஸ்கந்த புராணத்தில் வேறுவிதமாகச் சொல்லப் படுகிறது. அது கீழே தரப்பட்டுள்ளது.*

*இந்த மரத்தைப் பற்றி நாரதர், இம்மரம் விஷ்ணுவின் உடம்பில் உள்ள ஒரு ரோமத்தின் வடிவாகும். 'இதைக் கொண்டு சிலைகள் செய்க' என்று கூறிவிட்டனர். மரத்தை வெட்டி, விஷ்ணு சிலையை யார் செய்வது என்று அரசன் வினா எழுப்பிய பொழுது, அசரீரி மூலம் அவனுக்கு விடை கிடைக்கிறது. சிறிது நேரத்தில் கிழட்டு மரத் தச்சன் வருவான். அவனை இந்தக் கோயிலில் உள்ள பீடத்தில் ஏற்றி வைத்துப் பிறகு அவனைச் சுற்றி மூடி விடவும். உள்ளே அவன் என்ன செய்கிறான் என்பதை யாரும் பார்க்கவோ, ஒட்டுக் கேட்கவோ கூடாது. மீறிப் பார்க்க, கேட்கத் துணிந்தால் அவர்கள் காதும் கண்ணும் போய்விடும். 15 நாட்களுக்கு இடைவிடாமல் பெரிய மரங்களில் இருந்து ஓசை எழுப்பிக் கொண்டே இருக்க வேண்டும் என்று அசரீரி சொல்ல அரசன் அவ்வாறே செய்தான். பதினைந்தாவது நாள் கிருஷ்ணன், பலராமன், சுபத்திரை ஆகிய மூவரின் சிலைகளைத் தச்சன் செய்து முடித்திருந்தான். மறுபடியும் அசரீரி பேசத் தொடங்கிற்று. "உடையணியாமல் உள்ள இந்தச் சிலைகளை யாரும் பார்க்கக்*

கூடாது. நல்ல ஒரு தையல்காரனைக் கொண்டு இந்தச் சிலைகளுக்கு உடைகளைத் தைத்து அணிவிக்கவும். ஆண்டுக் கொருமுறை இந்த உடைகளை மாற்றினால் போதும் என்று கூற, இந்திரத்துய்மனும் அவ்வாறே செய்தான்.

**வதரிகாசிரமத்தின் சிறப்பு**

வதரிகாசிரமத்தின் பெயர் அங்கு நிறைந்துள்ள வதரி மரங்களால் ஏற்பட்டதாகும். அம்மரங்கள் அமிர்தத்தைச் சொரிந்து கொண்டிருப்பதால் அந்த ஆசிரமம் மிக்க சிறப்புப் பெற்றிருந்தது. விஷ்ணுவைப் பொறுத்தமட்டில் சில யுகத்தில் சில தீர்த்தங்களை விட்டு அப்பால் போய்விடுகிறார் என்றாலும், வதரியை விட்டு அவர் போவதே இல்லை.

சிவன் ஒருமுறை பிரம்மாவின் ஐந்தாவது தலையை வெட்டி விட்டார். பிரம்மன் பிராமணன் ஆகையால் பிரம்ம ஹத்தி தோஷம் சிவனைப் பற்றிக்கொண்டது. என்ன முயன்றும், வெட்டிய கையில் ஒட்டிக் கொண்ட பிரம்ம கபாலம் சிவன் கையை விட்டு நீங்கவில்லை. இறுதியாக விஷ்ணு அவரைப் பார்த்து, வதரி தீர்த்தம் சென்றால் இந்தக் கபாலம் கையை விட்டுக் கழன்றுவிடும் என்று கூறினார். சிவன் வதரி தீர்த்தம் வந்து, தீர்த்தத்தில் குளித்தவுடன் கபாலம் அவர் கையை விட்டு நீங்கியது.

முன்னொரு காலத்தில் முனிவர்கள் எல்லாம் கூட வதரியில் தங்கி இருக்கும் பொழுது அக்னி, அவ்விடத்திற்கு வந்து தன் குறையைக் கூறினான். பார்வதியிடம் பெற்ற சாபத்தின் காரணமாக அக்னி நல்லது, கெட்டது பாராமல் எல்லாவற்றையும் எரித்துவிடும் இயல்பைப் பெற்றுவிட்டான். நல்லவர்களுக்குத் தீங்கு செய்த பாவம் அவனிடம் மிகுதியும் சேர்ந்து விட்டது. முனிவர்களைப் பார்த்த அக்னி, நான் எங்கே சென்றால் என் பாவங்களைக் கரைக்க முடியும் என்று

கேட்டான். அங்கிருந்த நாராயண முனிவர், "அக்னியே, நீ ஒன்றும் கவலைப்படத் தேவையில்லை. எந்த நேரத்தில் வதரி தீர்த்தத்தில் கால் வைத்தாயோ அப்பொழுதே உன்னுடைய பாவங்கள் அழிக்கப்பட்டு விட்டன" என்று கூறினார். எந்த இடத்தில் அக்னியின் பாவங்கள் அழிக்கப்பட்டனவோ அந்த இடமே அக்னி தீர்த்தம் என்று விளக்கப்பட்டது.

### அயோத்தி வைபவம்

ஸ்கந்தன் ஒருமுறை அயோத்தியின் பெருமையை அகஸ்தியருக்குச் சொன்னான். அவர் சொல்லிய விபரம் வருமாறு:

சரயு நதிக்கரையில் நீர் வசமாக அமைந்திருப்பது அயோத்தி மாநகரம். ராமன் ஆட்சி செய்திருந்த காலத்தில் ராமன் ஒரு கடுமையான உத்தரவைப் போட்டிருந்தார். அரண்மனையில் உள்ள ரகசிய ஆலோசனை அறையில் அவர் இருந்தால் யாரும், எக்காரணம் கொண்டும், எந்த நேரத்திலும் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வரக்கூடாது. மீறி நடப்பவர்கள் அரண்மனையை விட்டு வெளியே போக நேரிடும் என்று உத்தரவிட்டிருந்தார். ஒருமுறை தம்பி லக்ஷ்மணனைக் காவல் வைத்துவிட்டு ரகசிய ஆலோசனை மண்டபத்திற்கு ராமர் சென்றிருந்தார். காவல் காக்கும் லக்ஷ்மணன் எதிரே துர்வாசர் தோன்றி, எனக்குப் பசி அதிகமாக இருக்கிறது. உடனே ராமனைப் பார்க்க வேண்டும் என்றார். ராமன் உத்தரவை நினைத்து லட்சுமணன் தயங்கி நின்றான். துர்வாசர் கோபம் தலைக்கேற 'நீ இப்பொழுது ராமனைக் கூப்பிடப் போகிறாயா? அல்லது உன்னைச் சபிக்கட்டுமா' என்றார். பயந்து போன லட்சுமணன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனார். உள்ளே யமனுடன் ராமன் பேசிக்கொண்டிருந்தார். லட்சுமணனைக் கண்டவுடன்,

யமனைப் போகச் சொல்லிவிட்டு, லட்சுமணனிடம் விஷயத்தைக் கேட்டறிந்தார். உடனே வெளியில் வந்து துர்வாசரை உபசரித்து உணவிட்டு அவரை அனுப்பிவிட்டான். இவ்வளவும் முடிந்தவுடன் ராமன், தான் விதித்த ஆணையைத் தானே மீற முடியாமல் தம்பி லட்சுமணனைக் கண்ணீருடன் அரண்மனையை விட்டு வெளியே அனுப்பிவிட்டான். வெளியே வந்த லட்சுமணன் சரயு நதிக்கரையில் தவம் செய்யத் துவங்கினான். அப்பொழுது ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேஷன், ஆயிரம் தலைகளிலும் மாணிக்கங்கள் மின்ன லட்சுமணன் முன்னே வந்து நின்றது. லட்சுமணன் எதிரிலே ஆயிரம் குழிகளை வெட்டிற்று.

இப்பொழுது இந்திரன் முதலான தேவர்கள் லட்சுமணனைப் பார்த்து, விஷ்ணு லோகத்தில் நீ இருக்க வேண்டிய நிலையான இடத்திற்கு இப்பொழுது செல்லலாம். உன் அவதாரத்தின் மூலமாகிய ஆதிசேஷன் உனக்கு முன்னே நிற்பதைக் காண்பாயாக. தேவர்கள் லட்சுமணனை விஷ்ணு லோகம் அழைத்துச் சென்றனர். லட்சுமணன் தங்கி இருந்ததும், ஆயிரம் குழிகளை உடையதுமான அந்த இடம் சஹஸ்ரதாரா என்ற தீர்த்தமாகச் சிறப்புப் பெற்றது.

இந்தத் தீர்த்தம் தனிச் சிறப்புடையது. ஆவணி மாதம், சுக்கிலபட்சம் பஞ்சமி திதியாகும் அந்த நாளில் முனிவர்கள் எல்லாம் கூடி, ஆதிசேஷனை வணங்குகின்றனர்.

### இராமேஸ்வர தீர்த்தம்

நைமிசாரண்ய வனத்தில் முனிவர்கள் எல்லாம் கூடி சூதந முனிவரிடம் புராணம் கேட்கத் தயாராக இருந்தனர். அப்பொழுது ராமேஸ்வர தீர்த்தப் பெருமையை அவர் சொல்ல ஆரம்பித்தார்.

“உங்களுக்கெல்லாம் இராமாயணக் கதை நன்கு தெரியும். இராமன் குரங்குப் படையுடன் ராமேஸ்வரத்தில் தங்கி நளன் என்ற சிற்பியின் உதவியால் இலங்கைக்குப் பாலம் கட்டிய வரலாறு உங்களுக்குத் தெரியும். இந்தப் பாலம் சக்கர தீர்த்தத்தின் பக்கத்தில் உள்ளது. சக்கர தீர்த்தம் என்ற பெயர் வரக் காரணம் என்ன தெரியுமா? இங்கு தங்கியிருந்த காலவ முனிவருக்குப் பல இடையூறுகள் செய்த அரக்கனைத் தம் சக்கரத்தால் கொன்றார். அதனால் இது சக்கரத் தீர்த்தம் எனப் பெயர் பெற்றது. இதன் பிறகு காலவ முனிவர் மகள் தன் தகப்பனுக்குப் பூ, விறகு முதலியவற்றைச் சேகரிக்கக் காட்டிற் குள் வந்தபொழுது, சுதர்ஸன, சுகர்ண என்ற வித்யாதரர்கள் அவளைப் பார்த்தனர். சுதர்ஸன என்பவன், அவளிடம் வந்து, நீ மிகவும் அழகாக இருக்கிறாய். என்னைத் திருமணம் செய்து கொள் என்றான். அப்பெண் ‘நான் சுதந்திரமானவள் அல்லள். என் தந்தை காலவ முனிவரின் பாதுகாப்பில் இருக்கிறேன். நீ தேவையென்றால் அவரை வந்து பார்த்து, அவரிடம் உன் வேண்டுகோளைத் தெரிவிப்பாயாக’ என்று கூறினாள். அதற்கு உடன்படாத சுதர்ஸன அவள் தலைமுடியைப் பிடித்து இழுத்துக்கொண்டு புறப்பட்டான். அந்தப் பெண் வாய்விட்டு அலறினாள். அதைக் கேட்டு காலவர் முதலிய முனிவர்கள் வெளியே வந்தனர். இரண்டு வித்யாதரர்கள் தன் பெண்ணை இழுத்துச் செல்வதைக் கண்ட காலவர், சுதர்சனனைப் பார்த்து, ‘மூடனே! வித்யாதரன் என்பதால் இப்படிப்பட்ட அட்டூழியங்கள் செய்யலாம் என்று நினைத்து விட்டாயா? தனியே உள்ள பெண்ணை அடாத செயல் செய்த நீ, பிசாசாக மாறி உலகைச் சுற்றி வருவாயாக. உனக்கு விடுதலையே இல்லை!’ என்று சபித்துவிட்டு, சுகர்ணாவைப் பார்த்து தவறு நேரும்பொழுது, நீ அதைக் கண்டிக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாய். நீ செய்த குற்றம், அதைப்போல அவ்வளவு

பெரிதன்று என்றாலும், குற்றம் குற்றம்தான். எனவே நீ மனிதனாகப் பிறந்து உழன்று, வித்யாதரர்களின் மன்னனாகிய விஞ்ஞாப்திகௌடுகா உன்னைச் சந்திக்கும் பொழுது உன் சாபம் நீங்கும்" என்றார்.

காலவ முனிவரால் சாபம் பெற்ற வித்யாதர சகோதரர்கள் இருவரும், கோவிந்தசாமி என்ற பிராமணன் பிள்ளைகளாய்ப் பிறந்தனர். யமுனை நதிக்கரையில் கோவிந்தசாமி வசித்து வந்தார். அந்த இடத்தில் பஞ்சம் வந்ததால் அவர் குடும்பத் தோடு குடிபெயர்ந்தார். பிள்ளைகள் இருவரும் இப்போது இளைஞர்களாய் வளர்ந்துவிட்டனர். பஞ்சத்திற்கு பயந்து குடிபெயர்ந்த கோவிந்தசாமி ஒரு பாழடைந்த கோயிலில் ஓர் இரவு தங்கினர். நடு ஜாமத்தில் மூத்தவனாகிய விஜயா என்பவன் குளிர் சுரத்தால் மிகவும் அவதிப்பட்டு, குளிர் காய்வதற்கு எங்கிருந்தாவது நெருப்புக் கொண்டு வருமாறு தன் தகப்பனைக் கேட்டான். தந்தை கோவிந்தசாமி 'நடு இரவாக உள்ள இந்நேரத்தில் யார் வீட்டிலும் போய் நெருப்புக் கேட்க முடியாது. காலையில் பார்த்துக் கொள்ளலாம்' என்றான். விஜயன், "தந்தை! பொய் சொல்ல வேண்டாம். அதோ தூரத்தில் நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. அதில் சென்று குளிர் காயலாம்" என்றான். இதைக் கேட்ட தந்தை 'மகனே! அது சுடுகாடு. அங்கே ஒரு பிணம் எரிந்து கொண்டிருக்கிறது. பிணத்தைச் சுடும் நெருப்பில் குளிர்காய்தல் செய்யக் கூடாது' என்றான். மகன் பிடிவாதமாக அங்கே போகப் போகிறேன் என்று சொல்ல, பிள்ளைப் பாசத்தால் உந்தப்பட்ட கோவிந்தசாமி தானும் உடன் சென்றான். எரிந்து கொண்டிருந்த பிணத்தின் பக்கத்தில் வந்தவுடன், நெருப்பினுள் எரிந்து கொண்டிருக்கும் பிணத்தைக் காட்டி, 'பளபளவென் றிருக்கும் அது என்ன?' என்று விஜயன் கேட்டான். 'அது மண்டை ஓடு' என்று தந்தை சொன்னவுடன், விஜயன் ஒரு

கல்லை எடுத்து மண்டை ஓட்டை உடைத்தான். உள்ளே இருந்து இரத்தமும், நிணமும் விஜயன் முகத்தில் தெறித்தன. அதைத் துடைப்பது போல நக்கி, ருசித்துச் சாப்பிட்டான் விஜயன். உடனே, ஒரு வேதாளமாக மாறிவிட்டான். சதை, இரத்தம் இரண்டையும் சுவைத்துச் சாப்பிட்டவன் தந்தையின் கழுத்தையே நெறிக்கத் தொடங்கினான். உடனே 'செய்த பாவம் போதும், தகப்பனைக் கொன்று மேலும் பாவத்தைச் சேர்த்துக் கொள்ளாதே' என்ற குரல் கேட்டது. விஜயன் தந்தையை விட்டுவிட்டு ஆகாயத்தில் சஞ்சரிக்கும் வேதாளங்களோடு ஒன்றாகச் சேர்ந்து விட்டான். மண்டை ஓட்டை ருசித்ததால், வேதாளமாக மாறிவிட்ட விஜயனுக்கு 'கபாலஸ்வேதனா' என்ற பெயர் நிலைத்தது. இப்பெயரின் பொருள் 'மண்டையை உடைத்தவன்' என்பதாகும்.

கோவிந்தசாமி, அவன் மனைவி, இரண்டாவது மகன் அசோகன் ஆகிய மூவரும் வேதாளமாக மாறிவிட்ட விஜயனை நினைத்துப் புலம்பிக் கொண்டிருந்த பொழுது, அவ்வழியே வந்த வணிகன் இவர்களை அழைத்துச் சென்று, சிலநாட்கள் தன் பாதுகாப்பில் இருக்குமாறு செய்தான். இளையவனான அசோகன் சிறந்த கல்விமானாகவும், மந்திரங்கள் கற்றவனாகவும், வலிமையான உடம்பைப் பெற்றவனாகவும் இருந்தமையால் இவன் புகழ் எங்கும் பரவிற்று. அப்போது காசியை ஆண்டு கொண்டிருந்த பிரதாபமுக்தா என்பவன் அசோகன் அறிவை மெச்சித் தன் அரசவையில் அவனுக்குப் பதவி கொடுத்தான்.

ஒருநாள் அரசனும், அசோகனும் குதிரைமேல் சென்று கொண்டிருந்த பொழுது ஒரு சுடுகாட்டின் பக்கம் வந்தனர். அங்கே நடப்பட்டிருந்த கழுமரத்தில் ஒருவனை ஏற்றி இருந்தனர். உயிர் பிரியாத அவன், 'நான்கு நாட்களாக இக் கழுமரத்தில் தொங்குகிறேன். வறட்சியால் நா உலர்ந்துள்ளது.

யாராவது நீர் கொடுங்கள்' என்று கேட்டான். இந்தக் குரலைக் கேட்ட அரசன் அசோகனைப் பார்த்து 'நீ கொஞ்சம் தண்ணீர் கொடுத்து வா' என்றான். கழுமரத்தில் இருந்தவன் பக்கம் தண்ணீருடன் சென்ற அசோகனுக்கு அதிர்ச்சி தரும் ஒரு நிகழ்ச்சி அங்கே நடந்தது. அழகிய பெண் ஒருத்தி அவன் எதிரே வந்து, இக்கழுமரத்தில் தொங்குபவன் என் கணவன். இவனுக்குத் தண்ணீர் கொடுக்கும் உரிமை எனக்குத்தான் என்றாள். அசோகன் குவளையை அவளிடம் கொடுத்து, 'நீங்களே கொடுங்கள்' என்றான். 'தொங்குபவன் உயரத்திற்கு என்னால் எட்ட முடியவில்லை' என்றாள் அவள். உடனே அசோகன், 'கவலை வேண்டாம். நான் குனிந்து கொள்கிறேன். என் முதுகின் மேல் ஏறி உன் கணவனுக்கு தண்ணீரைக் கொடுங்கள்' என்று கூறிக் குனிந்து கொண்டான். அந்தப் பெண் அவன் மேல் ஏறினாள்.

சிறிது நேரம் கழித்து அசோகன் முதுகில் சூடான இரண்டு சொட்டு இரத்தம் விழுந்தவுடன் திடீரென்று நிமிர்ந்து பார்த்தான். வந்தவள் பெண்ணல்ல என்பதும், ஒரு பேய் என்பதும், கழுமரத்தில் தொங்குபவனுடைய சதைகளைப் பிய்த்துத் தின்று கொண்டிருந்ததைக் கண்டான். தன் வலுவான கைகளால், கொலுசு அணிந்திருந்த அப் பெண்ணின் காலைப் பிடித்து இழுத்தான். அப்பெண் பேய், காலில் இருந்த கொலுசை இவன் கைகளில் விட்டுவிட்டு நழுவி விட்டது. கொலுசுடன் சென்று, தூரத்தில் நின்ற மன்னனைக் கண்டு நடந்தவற்றை விவரித்தான் அசோகன். மிக்க மகிழ்ச்சி அடைந்த மன்னன் அசோகனுக்குத் தன் பெண்ணை மணம் செய்து கொடுத்தான். அந்த ஒற்றைக் கொலுசு, தேவலோக வேலைப் பாடுகளுடன் அமைந்திருந்ததால் அது போன்று மற்றொரு கொலுசை அடைய மன்னன் விரும்பினான். அசோகன் அதற்கும் ஒரு வழி கண்டு பிடித்தான். நிணம், சதைத்

துண்டங்கள், இரத்தம் என்பவற்றை நிரம்ப எடுத்துக் கொண்டு, சுடுகாட்டிற்குச் சென்று மந்திரங்களை உச்சரித்து, பேய்கள், பிசாசுகள், வேதாளங்கள் ஆகியவற்றை விளித்து, இங்கே வந்து இவற்றை உண்ணுங்கள் என்று கூவினான். உடனே பேய் பிசாசுக் கூட்டம் அங்கே வந்தது. ஒரு சில பிசாசுகளுக்கு வேண்டுமானதைக் கொடுத்தபின், எதிரே ஒரு பெண் பிசாசு இருப்பதைக் கண்டான். அந்தப் பிசாசை விளித்து, 'நீ மற்றொரு கொலுசைக் கொடுப்பதானால் இங்குள்ள அனைத்தையும் உனக்குத் தருவேன்' என்றான். அப்பிசாசு மற்றொரு கொலுசையும் தந்தது. அதனுடன், இங்கே நிற்பவள் வித்யுத்பிரபா என்னும் என் மகள் ஆவாள். இவளையும், இந்தப் பொன்னாலான தாமரையையும் எடுத்துச் செல்' என்றது. மன்னனிடம் கொலுசைக் கொடுத்து விட்டு, வித்யுத்பிரபாவை மணந்து கொண்டான்.

சில காலம் கழித்து, இரண்டாவது மனைவியைப் பார்த்து அசோகன் உன் தாய் எங்கிருந்து இந்தப் பொற்றாமரையைப் பெற்றாள் என்றான். அவள் அந்த இடத்தைக் காட்டுகிறேன் என்று கூறி அவனையும் அழைத்துக் கொண்டு ஒரு குளத் திற்குச் சென்றாள். கபாலசவோதனன் ஆட்சிக்குட்பட்ட இக் குளத்தில்தான் அத்தாமரைகள் உள்ளன என்றாள். அசோகன் பல தாமரைகளைப் பறித்தான். அவனைத் தடுக்க வந்த பிசாசுகளைக் கொன்றான். குளத்திற்குக் காவலாக இருந்த கபாலசவோதனாவைக் கொல்ல முயல்கையில், வித்யாதர மன்னன் தோன்றி, 'அசோகனே, நில். அந்த வேதாளம் பூர்வத்தில் உன் சகோதரன் விஜயனாக இருந்தவன். அவனை விட்டுவிடு. உன்னுடைய சாபம் நீங்கி விட்டதால் நீ வித்யாதர னாக மாறி என்னுடன் தேவலோகம் வந்து விடு' என்றான்.

அதைக் கேட்ட அசோகன், 'அரசே! தேவலோகம் வர ஆசையில்லை. அப்படிப் போவதாக இருந்தால் என்

சகோதரனையும் வித்யாதரனாக மாற்றிப் பிறகு இருவரும் வருவோம்' என்றான். உடனே வித்யாதர மன்னன், 'நீங்கள் இருவரும் ராமேஸ்வரம் சென்று, சக்கர தீர்த்தம் பக்கத்தில் குளித்தால் உன் சகோதரனின் சாபம் நீங்கி, அவனும் வித்யா தரன் ஆவான்' என்று கூறினான். அசோகன் வேதாளத்தை அழைத்துக் கொண்டு ராமேஸ்வரம் சென்றான். சக்கர தீர்த்தத்தின் திவலைகள் வேதாளத்தின் மேலே பட்டவுடன் அவன் பழைய விஜயனாக மாறி, தேவலோகம் சென்றனர்.

**தர்மாரண்யத்தின் கதை**

வேதவியாசர் பாண்டவர்களில் மூத்தவனாகிய யுதிஷ்டிர னுக்குப் பின்வரும் கதையைச் சொன்னார்.

தர்மாரண்யம் என்ற காட்டுப் பகுதி மிகச் சிறந்த இடமாகும். நிறைந்த மரங்களும், பல நிறமுடைய பூக்களும் அங்கு நிறைந்துள்ளன. அந்தக் காட்டின் இருண்ட பகுதியில் எமன் கடுந்தவம் செய்து கொண்டிருந்தான். காலம் செல்லச் செல்ல அவன் உடம்பு அசைவே இல்லாமல் மரம் போல் ஆகிவிட்டது. அதன் காரணமாக அவன் உடம்பில் கரை யான்கள் புற்று வைத்துவிட்டன. உடம்பில் பல இடங்களில் எலும்பே வெளியே தெரியத் தொடங்கியது. இந்தக் கடுந் தவத்தைக் கண்ட இந்திரன் மிகவும் பயந்து விட்டான். எமன் இந்திரப் பதவியை அடைய வேண்டித்தான் இவ்வளவு கடுந்தவம் செய்கிறான் என்ற முடிவிற்கு வந்து விட்டான். அவன் தவம் முடிந்தால் எங்கே தன்னுடைய பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று எண்ணிய இந்திரன் ஒரு சூழ்ச்சி செய்தான். இந்திர சபையில் நடனமாடும் அப்சரஸ்களில் வர்த்தனி என்ற பெண்ணை அழைத்து "நீ போய் நாட்டியமாடி எப்படியாவது எமனுடைய தவத்தைக் கலைத்துவிடு" என்று கட்டளையிட்டான். அந்த அப்சரஸ் மனிதப் பெண் வடிவு

தாங்கி எமனுக்கு எதிரே வந்து குழல் வாசித்துக் கொண்டு நடனமாடினாள். தவம் கலைந்த எமன் அவளைப் பார்த்து "நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? ஏன் இந்தக் காட்டில் நடனம் ஆடுகிறாய்?" என்று கேட்டான். அந்தப் பெண் வஞ்சகம் இல்லாமல் நடந்தவற்றைக் கூறினாள். அதைக் கேட்ட எமன் அவள் உண்மை பேசியதால் "வேண்டிய வரத்தைக் கேள் தருகிறேன்" என்றான். அப்பெண், "இந்திரனுடைய சபையில் எனக்கு ஒரு நிலையான இடம் வேண்டும்" என்று கேட்டாள். எமன் அந்த வரத்தைக் கொடுத்து விட்டு, "உன்னுடைய இசை மிக நன்றாக இருந்தது. அதை நான் ரசித்தேன். அதற்காக இன்னொரு வரம் கேள்" என்றான். "இந்தப் பகுதிக்கு என்னுடைய பெயர் வழங்க வேண்டும்" என்று அவள் கேட்க, எமனும் அதை ஏற்றுக் கொண்டான். அன்றையிலிருந்து அந்தப் பகுதி 'வர்த்தமனா' என்று பெயர் பெற்றது. எமன் தவம் செய்த இடத்தில் பிதிர்க்கடன் செய்வது மிக உயர்ந்தது.

வர்த்தமனி தேவலோகம் சென்ற பிறகு எமன் மீண்டும் தவத்தில் ஈடுபட்டான். இந்திரன் பயந்தான். அவன் மட்டும் அல்லாமல் தேவர்கள், யட்சர்கள், கந்தர்வர்கள் ஆகிய அனைவரும் எமனுடைய தவத்தைக் கண்டு பயந்து சிவனிடம் சென்று முறையிட்டனர். சிவன், எமனுக்கு எதிரே தோன்றி, "உனக்கு என்ன வரம் வேண்டும்" என்று கேட்டார். எமன், "இந்த இடத்திற்கு என் பெயர் வழங்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். சிவன் அதை ஏற்றுக் கொண்டதால் அந்தப் பகுதி 'தர்மாரண்யம்' என்று பெயர் பெற்றது. தருமன் என்பது எமனுக்கு மற்றொரு பெயர். இந்த தர்மாரண்யப் பகுதியில் சிவன் லிங்கத்தை நிறுவினார். அந்த லிங்கத்திற்கு விஸ்வேஸ்வரா என்பது பெயர். அங்கு எமன் ஒரு குளத்தைத் தோண்டி அதற்கு தர்மவாபி என்று பெயரிட்டான்.

இதன் பிறகு சிவன் ஸ்கந்தனிடம் தர்மாரண்யம் பற்றிச் சொல்லி விஷ்ணுவுக்கு அதில் உள்ள ஈடுபாட்டைப் பற்றி விளக்கினார்.

## விஷ்ணு தலை இழந்த கதை

வேதவியாசர் யுதிஷ்டிரனுக்கு மற்றொரு கதையும் சொன்னார். ஒருமுறை தேவர்கள் ஒரு பெரிய யாகத்தைச் செய்ய விரும்பினார்கள். விஷ்ணுவை அந்த யாகத்திற்கு அழைக்க வேண்டும் என்று எண்ணிய தேவர்கள் மேல் உலகம், கீழ் உலகம் ஆகிய எல்லா இடங்களிலும் தேடினார்கள். கடைசியாகத் தன்னுடைய வில்லை வளைத்துக் குறிபார்க்கும் நிலையில் விஷ்ணு தவம் செய்து கொண்டிருந்தார். அவரை எப்படியாவது எழுப்ப வேண்டும் என்று நினைத்தனர். வளைத்து நாண் ஏற்றியிருந்த வில்லில் உள்ள நாண் கயிற்றை அறுத்தால் வில் போடும் சத்தத்தில் விஷ்ணு எழுந்துவிடுவார் என்று நினைத்துக் கயிற்றைத் தின்னக்கூடிய ஒரு பூச்சியை விஷ்ணு வைத்திருந்த வில்லினுடைய நாணில் விட்டனர். அந்தப் பூச்சி அந்த நாணைத் தின்றவுடன் வளைந்திருந்த வில் விடுபட்டது. தேவர்கள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. அவர் முகத்திற்குக் கீழே வில் இருந்ததால் அது விடுபட்டதும் அவருடைய தலையை வெட்டி விட்டது. வெட்டப்பட்ட தலை சுவர்க்கத்தை நோக்கிச் சென்றது.

இப்படி விஷ்ணுவின் தலை வெட்டப்படுவதற்கு ஒரு காரணம் இருந்தது. ஒருமுறை பிரம்மாவின் சபையில் விஷ்ணுவும் இருக்கும் பொழுது, அவருள் யார் பெரியவர் என்ற வினா பிறந்தது. இதில்போய்த் தெரியவேண்டியது ஒன்றுமில்லை. எல்லாவற்றையும் படைக்கின்றவன் நான்தான். ஆகவே நான்தான் பெரியவன் என்றார் பிரம்மன். விஷ்ணு "தேவையில்லாமல் அகங்காரம் கொள்ளாதே. இந்த அண்டம்

முழுவதற்கும் நான்தான் தலைவன். எல்லா இடங்களிலும் இருப்பவன் நான்தான். இவர்களைக் காப்பவன் நான்தான். ஆகவே நான்தான் பெரியவன் என்பது சந்தேகத்துக்கு இடமில்லாத உண்மை" என்றார். இருவரும் நீதான் அகங்காரம் உடையவன் என்று ஒருவரையொருவர் ஏசிப் பேசும்போதே சண்டை முற்றி விட்டது. விஷ்ணு, பிரம்மனைப் பார்த்து, நீ அறியாமை நிரம்பியவன். உன்னுடைய ஆணவமும், பொறாமையும் உன் கண்களை மறைக்கின்றன என்றார். அது கேட்ட பிரம்மன் 'என்னுடைய சபையில் வந்து இருந்து கொண்டு என்னை அவமானப்படுத்திப் பேசும் வாயோடு கூடிய தலை கீழே உருளப் போகிறது' என்றார். இந்தச் சாபம் சாரணமாக வில் அடித்து விஷ்ணுவின் தலையைக் கீழே தள்ளிவிட்டது.

தலையில்லாத விஷ்ணுவைப் பார்த்த தேவர்கள் இந்திரனிடம் முறையிட இந்திரன் விஸ்வகர்மாவை அழைத்து, 'விஷ்ணுவுக்குப் பொருத்தமான ஒரு தலையினைச் செய்து சேர்த்து விடு. அதற்குப் பதிலாக யாகங்களில் உனக்கும் பலிதரச் செய்கிறேன்' என்றான். விஸ்வகர்மா எவ்வளவு முயன்றும் தலையைச் செய்ய முடியவில்லை. கீழே விழுந்த தலையை எல்லோரும் தேடியும் கண்டு பிடிக்க முடியவில்லை. அப்பொழுது சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய தன் ரதத்தில் ஆகாயத்தில் சென்று கொண்டிருந்தான். இந்திரன் ஏவலால், சூரியன் குதிரைகளில் ஒன்றின் தலையை வெட்டி, விஷ்ணுவின் உடம்பில் பொருத்தி விட்டான் விஸ்வகர்மா. அதனால் விஷ்ணுவுக்கு ஹயக்கிரீவன் என்ற பெயரும் வந்தது. குதிரைத் தலையுடன் இருக்க விரும்பாத விஷ்ணு, தர்மாரண்யம் சென்று தவம் செய்ய முற்பட்டார். விஷ்ணுவின் சாபத்தால் பிரம்மனுடைய முகம் மிகக் குரூரமாகி விட்டது. அதைப் போக்கிக் கொள்ள தர்மாரண்யம் வந்து, தவத்தை

மேற்கொண்டார். தர்மாரண்யத்தில் வந்துவிட்டபடியால் விஷ்ணுவுக்குக் குதிரைத் தலைபோய், சொந்தத் தலையே வந்துவிட்டது. பிரம்மன் முகத்தில் இருந்த குரூரம் நீங்கி, அவரும் பழைய வடிவம் பெற்றுவிட்டார்.

**கோகர்ணத்தின் சிறப்பு**

மித்ரசகா என்ற மன்னனுக்குக் கௌதம முனிவர் கோகர்ணத்தின் பெருமையைச் சொல்லத் தொடங்கினார். இந்த மன்னன் கால் கருப்பாகி 'கல்மிஷபாதர்' என்ற பெயரைப் பெற்ற கதை முன்னரே விஷ்ணு புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

நான் ஒருமுறை மிதிலைக்குச் சென்று கொண்டிருக்கும் பொழுது, வழியில் நிழல் அடர்ந்த இடத்தில் ஒரு குளம் இருப்பதைக் கண்டு அங்குத் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டு போகலாம் என்று அமர்ந்தேன். பக்கத்தில் ஒரு வயது முதிர்ந்த கிழவி படுத்திருந்தாள். அவள் உடல் முழுவதும் நோயினால் வாடி, புண்கள் அடர்ந்து, அதில் புழுக்கள் நெளிந்து கொண்டு இருந்தன. அவள் உயிர் போகும் நிலையில் இருந்ததால் இறக்கின்ற வரையில் உதவியாக இருக்கலாம் என்று அவள் பக்கத்தில் தங்கி இருந்தேன். என் கண் எதிரில் அவள் உயிர் பிரிந்தது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். சிவலோகத்தில் இருந்து சிவகணங்கள் அவளை அழைத்துப்போக வந்தனர். இவள் என்ன புண்ணியம் செய்து சிவலோகம் போகிறாள் என்று கேட்டபொழுது அவர்கள் சொன்ன கதை இதுதான்:

இக்கிழவி முன்பிறப்பில் ஒரு பிராமணப் பெண்ணாக இருந்தாள். இளமையில் விதவையாகிவிட்ட அவள் வாழ்வு முறைமாறி தீயவருடன் சேர்ந்து வாழ்ந்தாள். மது, மாமிசம் இரண்டையும் நன்றாகப் பழகி விட்டாள். ஓர் இரவு மாமிசம் சாப்பிட வேண்டும் என்ற எண்ணம் வந்ததால், பின்புறம்

கொட்டிலுக்குச் சென்று ஆடு என்று நினைத்து கன்றுக் குட்டியை வெட்டிவிட்டாள். பசுங்கன்று என்று தெரிந்த பின்பும், அதில் ஒரு பகுதியைச் சமைத்துச் சாப்பிட்டாள். எஞ்சிய கன்றின் உடம்பைத் தூர எறிந்துவிட்டு, கன்று எங்கே என்று கேட்பாருக்கு 'சிவசிவ' கன்றுக்குட்டியைப் புலி தின்று விட்டதே!' என்று கூறினாள். அதன் பிறகு அவள் தீண்டாதார் குலத்தில் பிறந்தாள். பிறப்பில் இருந்தே நோயும், நொடியும் அவளை வாட்டின.

ஒருமுறை திருக்கோகர்ணம் செல்லும் யாத்திரிகர்களைப் பின்தொடர்ந்தாள். அவர்கள் பிச்சை போடுவார்கள் என்று நினைத்த அவளுக்குக் கை நிறைய வில்வத்தைக் கொடுத்து விட்டனர். பலநாள் பட்டினி இருந்த அவள், மிகுந்த ஆத்திரத்துடன் அந்த வில்வத்தை எறிந்தாள். எங்கோ மறைவில் இருந்த லிங்கத்தின் மேல் வில்வம் விழுந்தது. முற்பிறவியில் சிவசிவா என்று சொன்னதாலும், இப்பிறவியில் பட்டினி கிடந்து வில்வத்தை லிங்கத்தின் மேல் போட்டதாலும் அவள் சிவலோகம் வருகிறாள் என்று சில கணங்கள் சொன்னார்கள் என்று கூறி திருக்கோகர்ணத்துப் பெருமையை கல்மிஷற னுக்குக் கெளதம முனிவர் கூறி முடித்தார்.

**காசி**

இன்று உள்ள ஸ்காந்தம் தொடர்ச்சியாக எழுதப்பட்ட ஒரு நூல் அன்று என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. அதில் சொல்லப்பட்டுள்ள தலங்கள் அவற்றின் பெருமை ஆகிய வற்றைப் பார்க்கும் போது ஒவ்வொரு ஊர்க்காரர்களும் தங்கள் ஊருக்குப் பெருமை சேர்க்க வேண்டும் என்ற எண்ணத்தில் கதைகளை எழுதி ஸ்காந்தத்தில் சேர்த்து விட்டனர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அப்படிச் சொல்லப்பட்ட பல தலங்களில் காசியின் பெருமைகள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளன.

ஸ்காந்தத்தில் உள்ள காசி மண்டபம் என்பது பதினைந்து ஆயிரம் பாடல்களை உடைய சிறந்த பகுதியாகும். காசியின் பெருமையும் அங்குள்ள பல சிவன் கோயில்கள் பற்றி இப் பகுதியில் கூறப்பெற்றுள்ளன.

சிவனே காசியின் பெருமையைப் பற்றி ஸ்கந்தனிடம் கூறுவதாகக் காசிக் காண்டம் பேசுகிறது. காசியைப் போன்ற ஒரு க்ஷேத்திரம் மூன்று உலகிலும் இல்லை. காசியில் பிறந்தவர்கள் பிறப்பு, இறப்பு என்னும் பந்தங்களிலிருந்து உடனே விடுதலை அடைகின்றனர். அதனால்தான் தேவர்கள் கூட சாகும்போது காசியில் வந்து இறக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள் என்றால் மற்ற சாதாரண உயிர்கள் பற்றி ஒன்றும் சொல்லத் தேவையில்லை.

காசியில் உள்ள மிகமிகப் புண்ணியமான இடங்களைப் பற்றிக் கூறவேண்டுமானால் மணிகர்ணிகா, ஞானவாபி, விஷ்ணுபடோடகா ஆகியவற்றோடு பஞ்சனஹர்தா என்பவை முக்கியமாகும். இந்தத் தீர்த்தங்களில் குளிப்பவர்கள் மறுபிறப்பை அடைவதில்லை. காசியில் உள்ள விஸ்வேஸ் வரரை வழிபடுபவர்கள் பிறப்பு இறப்புகளில் இருந்து விடுபடுவார்கள்.

முனிவர்கள் பலரும் அடிக்கடி காசிக்கு வருவதுண்டு. சுதா முனிவர் ஒருமுறை காசிக்கு வந்தபொழுது மற்ற முனிவர்களுக்குச் சிவபுராணத்தின் (வாயு புராணம்) சில பகுதிகளை எடுத்துக் கூறினார்.

சிவனே பார்வதியிடம் தனக்கு மிகவும் பிடித்த இடம், காசி என்று அழைக்கப்படும் வாரணாசிதான் என்றும், எப்போதும் அங்கேயே தான் தங்கியிருப்பதாகவும் கூறினார்.

சிவன் எப்போதும் காசியை விரும்பித் தங்குவதற்குக் காரணம் என்ன? என்று கேட்கத் தன் கையில் ஒட்டிக்

கொண்டிருந்த பிரம்மனுடைய தலை கையிலிருந்து கீழே விழுந்த இடம் காசி ஆதலால், அந்த இடத்தைத் தமக்குப் பிடித்த இடமாக வைத்துக் கொண்டார்.

காசியின் எல்லைக்குள் நுழைந்த உடனேயே ஒருவருடைய பூர்வ ஜென்ம பாவங்கள் அழிந்துவிடுகின்றன. காசியில் இறப்பவர்கள் நேரே சிவலோகம் செல்கின்றார்கள். மக்களில் நால்வகை வருணத்தாரும் விலங்குகளும் கூட, காசியில் இறந்தால் நேராக சிவலோகம் செல்கின்றன.

ஒருமுறை கைலாசத்தில் சனகர் முதலிய முனிவர்கள் ஸ்கந்தனைப் பார்த்து காசியின் பெருமையைச் சொல்லுமாறு கேட்டுக் கொண்டார்கள். காசியிலுள்ள எல்லா இடங்களும் ஒரு கோயிலையும் அதன் தொடர்பான பொருள்களையும் பெற்றிருப்பதால் எல்லா இடங்களுமே புண்ணியமானவை என்று கூறினர்.

காசியில் உள்ள சுடுகாட்டின் மேல் ஆகாயத்தில் சிவனுடைய கோயில் ஒன்று இருக்கிறது. சாதாரண மக்களின் கண்களுக்கு அது புலப்படாவிட்டாலும் மகான்களுக்கும் ஞானிகளுக்கும் பரமாத்மாக்களுக்கும் அது கண்ணில் படும்.

காசியில் வாழ்வதற்கும் நுழைவதற்கும் சில கட்டுத் திட்டங்கள் உண்டு. வேதவியாசர் கூட நினைத்த போதெல்லாம் காசியில் வாழ முடியாது. சுக்கிலபட்சத்தில் எட்டு, பதினாலு ஆகிய திதிகளில் மட்டுமே அவர் காசிக்குள் வரலாம் என்ற நியதி இருந்தது.

வேதவியாசர் ஒருமுறை இந்த நியதியை மீறி ஆறு மாதம் காசியில் தங்கிவிட்டார். அந்த ஆறு மாதங்களும் காசியில் உள்ளவர்கள் ஒருவர்கூடப் பிச்சை போட முன் வரவில்லை.

ஒருமுறை ஆறு மாதம் வரை ஒருவரும் பிச்சை போட முன்வரவில்லை என்றவுடன் மிகவும் கோபம் கொண்ட வேதவியாசர் அந்த நகரத்து மக்களைச் சபித்துவிட எண்ணினார். அந்த நேரத்தில் சிவனும் பார்வதியும் ஒரு கணவனும் மனைவியுமாக வேதவியாசர் முன்னே தோன்றி அவரைத் தங்கள் வீட்டிற்கு வருமாறு அழைத்து வயிறு நிரம்ப உணவளித்தனர். உண்ட பிறகு சிவன் வேதவியாசர் முன் தோன்றி, "கோபத்தை அடக்கும் சக்தி உனக்கு இன்னும் வரவில்லை. ஆகவே காசியில் நிரந்தரமாகத் தங்கும் தகுதி உனக்கு இல்லை" என்று கூறினார். அதைக் கேட்ட வேத வியாசர் சிவனைப் பார்த்து அத்தகுதி தனக்கு இல்லை என்றாலும் சுக்கிலபட்சத்தில் எட்டு, (அஷ்டமி) பதினாலு (சதுர்த்தசி) ஆகிய இரண்டு நாட்களிலும் உள்ளே வர அனுமதி வேண்டினார். "அப்படியே ஆகட்டும்" என்று கூறிவிட்டு மறைந்தார்.

### காசி தோன்றிய கதை

காசி தலம் விஸ்வகர்மாவினால் நிர்மாணிக்கப்பட்டதாகும். அதற்குரிய கதை வருமாறு:

சிவனுக்குக் கல்யாணம் நடந்து முடிந்த பிறகு பார்வதி கணவனுடன் தன் பிறந்த வீடாகிய இமாசலத்தில் தங்கி விட்டார். சிவனும் மாமனார் வீட்டில் தங்கி மகிழ்ச்சியாக இருந்து விட்டார். பார்வதியின் தாயாகிய மேனாவிற்கு மருமகன் வீட்டோடு தங்கியிருப்பது பிடிக்கவில்லை. மகளிடம் ஓயாது அதுபற்றி குத்திக்காட்டிக் கொண்டே இருந்தாள். "இந்த மாப்பிள்ளையிடம் எதைப் பார்த்து ஆசைப்பட்டாய் நீ? இளமையோ, அழகோ இல்லாத இவனிடம் நீ ஏன் ஆசை வைத்தாய்?" என்று அடிக்கடி கேட்டுத் துன்புறுத்தினாள். "உன்னுடைய கணவன் உனக்கு ஒரு நகைகூடப் போடவில்லை.

என்னுடைய மற்றப் பெண்களெல்லாம் அவர்களுடைய கணவன்மார் போட்ட நகைகளைச் சுமக்க முடியாமல் போட்டுக் கொண்டு இருக்கின்றனர். காலம் முழுவதும் உங்கள் இருவரையும் இங்கே வைத்துக் கொண்டு பராமரிக்க என்னால் முடியாது. ஆனாலும் இதைப் போய் உன் கணவனிடம் சொல்லிவிடாதே. வேடிக்கைக்குத்தான் இதை நான் சொன்னேன்" என்று கூறி முடித்தாள். பார்வதி கணவனிடம் சென்று தன் தாயார் கூறியதாகச் சொல்லாமல் தானே சொல்லுவது போல இவை அனைத்தையும் மிகவும் அன்போடு ஆனால் கடுமையாகவும் கூறிவிட்டாள்.

பார்வதியின் சொற்களைக் கேட்ட சிவன் உடனே பார்வதியை அழைத்துக் கொண்டு தன் காளை வாகனத்தில் ஏறி காசிக்கு வந்து சேர்ந்தார். சிவனுடைய உத்தரவினால் விஸ்வகர்மா முன்னரே காசி நகரத்தை அமைத்திருந்தார். வான் உயர்ந்த கட்டடங்கள், பெரிய பெரிய பூஞ்சோலைகள் இவற்றைக் கொண்டு காசி விளங்கிற்று. காசி தங்கத்தால் ஆகிய சுவர்களையும், நவரத்தின மணி முதலியவை பதித்த பகுதிகளையும் கொண்டு விளங்கிற்று. சிவனும் பார்வதியும் பலகாலம் காசியில் தங்கினர். பார்வதி தன் பிறந்த இடத்தை மறந்தே விட்டாள். பலகாலம் கழித்து சிவன் கைலைக்கு மீண்டார். காசியை விட்டுப் புறப்படுமுன் ஒரு கோடி லிங்கங் களைக் காசியில் பல இடங்களில் நிர்மாணித்து விட்டு, கைலைக்கு வந்தார். இது நடந்தது துவாபர யுகத்தில். அதன் பின்னர் பல அரசர்கள் காசியில் இருந்து ஆட்சி செய்தனர். அவர்களில் ஒரு மன்னன் காலத்தில் காசி நகரம் முழுவதும் தீயால் அழிந்தது. அவன் நீண்ட காலம் தவம் செய்து சிவன் எதிர்ப்பட்டபொழுது கிருஷ்ணனைத் தோற்கடிக்கும் சக்தி தனக்கு வேண்டும் என்று வரம் கேட்டான். சிவன் அப்படியே தருவதாகச் சொல்லி, போரில் தானும் உதவுவதாக

வாக்களித்தார். இந்த அரசன் கிருஷ்ணனைப் போருக்கு அழைத்தான். போரில் கிருஷ்ணனின் சக்கரம், அந்த முட்டாள் அரசனைக் கொன்று, அவனுடைய படைகளை எல்லாம் கொன்று குவித்தது. மேலும் காசி நகரம் முழுவதையும் தீக்கிரையாக்கி சக்கரம் சிவனிடத்தில் வந்தது. பின் தோல்வியை ஒப்புக் கொண்டார்.

## பிரபச தீர்த்தம்

ஸ்கந்த புராணத்தின் கடைசி காண்டம் பிரபச காண்டம். பிரபச என்ற சொல்லுக்கு ஒளி பொருந்தியது என்று பொருள். இத்தீர்த்தம் சமுத்திரக் கரையில் உள்ளது. இத்தீர்த்தத்தில் குளித்தாலும் முழுப்பயனை அடைய முடியாது. இத்தீர்த்தம் மிகவும் பெருமை வாய்ந்தது.

மழைத்துளிகளை எண்ணினாலும் ஸ்கந்த புராணத்தில் உள்ள பாடல்களை எண்ண முடியாது. எவ்வளவு பாடல் களைக் கேட்டாலும், அவ்வளவுக்குரிய புண்ணியம் கிடைக்கும் என்று சூத முனிவரே சொன்னார் என்று புராணம் முடிவடைகிறது.



# 14. வாமன புராணம்

## இப்புராணம் பற்றி...

*வாமன புராணம் விஷ்ணு எடுத்த அவதாரத்தைப் பற்றிப் பேசுவதாகும். இது 6,000 பாடல்களை உடையது. இந்தப் புராணத்தில் பின்வரும் தலைப்புகள் விரிவாகப் பேசப்பெறுகின்றன. தட்ச யக்ஞம், இமவான் மகளாகப் பார்வதியின் தோற்றம், பார்வதியின் தவம், கணேசர் தோற்றம், கார்த்திகேயன் கதை, பிரகலாதன் நைமி சாரண்யத்திற்கு யாத்திரை சென்ற கதை, குருக்ஷேத்திரச் சிறப்பு, சிவபெருமான் அணிந்திருக்கும் பாம்புகள் பற்றிய கதை, மகிஷாசுரன் வதம், அந்தகன் கதை, விஷ்ணு வாமன அவதாரம் எடுத்த கதை ஆகியவை இடம் பெற்றுள்ளன.*

ஒருமுறை நாரதர் புலஸ்திய முனிவரிடம் சென்று வாமன புராணத்தைச் சொல்லுமாறு வேண்டினார். புலஸ்தியர் சொன்ன கதை வாமன புராணமாக வந்துள்ளது.

### சிவ – பார்வதி

சிவபெருமானும், பார்வதியும் மந்தர மலையில் வசித்துக் கொண்டிருந்த பொழுது, கோடையின் வெம்மை தாங்காத

பார்வதி, சிவனைப் பார்த்து, எப்படியாவது ஒரு வீடு கட்டிக் கொண்டு மற்றவர் போல நாமும் வாழக் கூடாதா என்றார். அதற்கு 'திறந்த வெளியில் வாழ்வதுதான் என்னுடைய முடிவு. நீ வெயில் கொடுமையில் அவதிப்படுகின்றாய் என்றால், காடுகளில் மரத்தடியில் சென்று வாழலாம் வா' என்று கூறிப் பார்வதியை அழைத்துக் கொண்டு, மரங்களின் நிழலில் வாழத் தொடங்கினார்.

கோடை போய், மழைக் காலம் வந்தது. மேகங்கள், இடியையும், மின்னலையும் உண்டாக்கின. மயில்கள் ஆடத் தொடங்கின. 'சோ'வென்று பெய்த மழையில் மலை அருவிகள் வீழ ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடிற்று. இப்பொழுது பார்வதி சிவனைப் பார்த்து 'நாமும் எல்லோரையும் போல வாழ வேண்டாமா? அழகிய வீட்டைக் கட்டிக் கொண்டு அதில் வாழ்ந்தால் இந்த மழையில் நனைந்து குளிரில் வாடும் நிலைமை ஏற்படாதே' என்று கேட்டுக் கொண்டார். அதைக் கேட்ட சிவன், "பார்வதி, நிலைமை புரியாமல் பேசுகிறாய். கட்டுவதற்கு ஒரு துணிகூட இல்லாமல் புலித்தோலை அணிந் திருக்கிறேன். பொன்நகை என்று சொல்வதற்கு எதுவு மில்லாமல் இந்தப் பாம்புகளை அணிந்திருக்கிறேன். இந்த நிலையில் வீடு கட்டப் பொருளுக்கு எங்கே போவது, வா! மழைக்காலம் முடியும் வரை மேகங்களில் சென்று வாழலாம்" என்று கூறிப் பார்வதியையும் அழைத்துக்கொண்டு மேகங் களில் வாழப் புறப்பட்டார். வடமொழியில் ஜீமுதா என்றால் மேகம் என்று பொருள்படும். மேகத்தில் வாழ்ந்ததால் சிவனுக்கு 'ஜீமுதகேது' என்ற பெயர் வந்தது.

**பிரம்மனின் வெற்றி**

முன்னொரு காலத்தில் பிரபஞ்ச உற்பத்திக்கு முன்னர் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. சூரியன், சந்திரன் முதலிய

எதுவுமில்லை. எங்கும் இருள். பூமியைத் தண்ணீர் மூடி இருந்தது. அத்தண்ணீரில் விஷ்ணு உறங்கிக் கொண்டிருந்தார். ஒருவாறாக யுக முடிவில் விஷ்ணு கண் விழித்தார். பொழுது விடிந்ததைப் பாராட்ட தட்சன் ஒரு யாகம் செய்தான். சிவனைத் தவிர ஏனைய தேவர்கள் அனைவரையும் தட்சன் அழைத்திருந்தார். 'சிவனை ஏன் அழைக்கவில்லை?' என்று நாரதர் கேட்க, 'அவர் கையில் பிரம்மகபாலம் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அதனால்தான் அழைக்கவில்லை' என்று புலஸ்தியர் கூறினார். பிரம்மன் மண்டை ஓடு எப்படி சிவனிடம் வந்தது என்று நாரதர் கேட்க, புலஸ்தியர் கூறத் தொடங்கினார்.

பிரபஞ்ச உற்பத்திக்காக விஷ்ணு ஒருமுறை பிரம்மனைத் தோற்றுவித்தார். அவர் நான்கு வேதங்கள் கற்றவராகவும், ஐந்து தலை உடையவராகவும் இருந்தார். திடீரென்று அவர் எதிரே காளை வாகனத்தின் மேல் பார்வதியுடன் சிவன் வந்து தோன்றினார். சிவன் பிரம்மனைப் பார்த்து, 'நீ யார்? இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டவுடன், பிரம்மன் படுகோபம் கொண்டு, சிவனைப் பார்த்து, "மூன்று கண்களை உடைய உன்னை எனக்குத் தெரியும். நீ இருட்டில் வாழ்பவன். நான் யார் என்று தெரியவில்லையா? நான்தான் பிரபஞ்சத்தைப் படைக்கும் பிரம்மன்." இவ்வாறு பிரம்மன் கூறியதும், கோபம் கொண்ட சிவன் பிரம்மனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளிவிட்டார். ஆனால் கிள்ளப்பட்ட தலை சிவன் கையில் ஒட்டிக் கொண்டு கீழே விழ மறுத்தது. கோபம் கொண்ட பிரம்மன் நான்கு கைகளை உடைய ஒரு வீரனை உற்பத்தி செய்து சிவனைக் கொல்லுமாறு பணித்தார். சிவனும் பார்வதியும் விஷ்ணுவிடம் ஓடினர். சிவன் நடந்தவற்றைக் கூற விஷ்ணு, தன் இடக்கையை உயர்த்தி திரிசூலத்தால் அக்கையில் குத்துமாறு கூறினார். சிவன்

அவ்வாறு செய்தார். அது திரிசூலமாகையால் விஷ்ணுவின் கையில் மூன்று காயங்கள் ஏற்பட்டு மூன்றிலிருந்தும் இரத்தம் கொட்டிற்று. முதல் காயத்தில் இருந்து சொரிந்த இரத்தம் நட்சத்திரங்களுடன் சென்று சேர்ந்து விட்டது. இரண்டாவது காயத்தில் இருந்து வந்த இரத்தம் பூமியில் விழுந்ததால் அதிலிருந்து அத்ரி, துர்வாசர் தோன்றினர். (அத்ரி, துர்வாசர் பிறந்த கதை மற்ற புராணங்களில் வேறுவிதமாகக் கூறப் பட்டுள்ளது.) மூன்றாவது காயத்தில் இருந்து வந்த இரத்தம் சிவனுடைய நெற்றியில் பட அங்கிருந்து ஒரு வீரன் தோன்றினான். கரிய நிறமுடைய அவ்வீரன் வில்லும் அம்பும் வைத்திருந்தான். அந்த வீரன் சிவனைப் பார்த்து, 'நான் என்ன செய்ய வேண்டும்' என்று கேட்டான். பிரம்மன் உண்டாக்கிய வீரனைக் கொல்வாயாக என்று சிவன் கட்டளை இட்டார். இருவரும் ஆயிரம் தேவருடன் போர் புரிந்தனர். இறுதியில் பிரம்மன் வீரன் வெற்றி பெற்றான். வெற்றி பெற்ற அவன் சூரிய மண்டலத்தில் சென்று மறைந்து விட்டான். சிவன் வீரன் விஷ்ணுவின் விக்கிரகத்தில் கலந்து விட்டான்.

**சிவனும், விஷ்ணுவும்**

துண்டிக்கப்பட்ட பிரம்மன் தலை, சிவனுடைய கையில் ஒட்டிக் கொண்டு கீழே விழ மறுத்தது. பிரம்மன் பிராமணர் ஆகையினால், சிவனை பிரம்மஹத்தி தோஷம் வலுவாகப் பற்றிக் கொண்டது. சிவன் ஒவ்வொரு தீர்த்தமாகச் சென்று குளிக்க, பிரம்மஹத்தி தோஷம் காரணமாக தீர்த்தங்கள் வற்றி விட்டன. கடைசியாக விஷ்ணுவிடம் சென்று தன் குறையைச் சொன்னார் சிவன். வாரணா என்ற ஆறும், அசி என்ற ஆறும் சங்கமிக்கும் இடத்தில் வாரணாசி என்ற ஊர் உள்ளது. அதில் தச அஸ்வமேதா என்ற ஊர் உள்ளது. அங்கு சென்று நீ பிரார்த்தனை செய்தால் கபாலம் நீங்கும் என்று கூறினார். சிவன் அவ்வாறே செய்ய கபாலம் கையை விட்டு நீங்கியது.

நீண்ட காலம் கபாலம் கையில் இருந்ததால் சிவனுக்குக் கபாலி என்றும், அந்த இடத்திற்குக் கபால மோட்சனா என்ற பெயரும் நிலைத்தது.

## தட்சயக்ஞம் : புதிய கோணம்

*(ஏனைய பல புராணங்களிலும் தட்சயக்ஞம் சொல்லப் பட்டிருப்பதால் அவற்றினின்று மாறுபடும் பகுதிகளை மட்டும் இங்கே கொடுக்கிறோம்.)*

தட்சன் யக்ஞம் செய்வதையும், சிவன் அழைக்கப் படவில்லை என்பதையும், தட்சன் மகளும் சிவன் மனைவியு மாகிய சதி தன் தங்கை மகள் விஜயாவின் மூலம் அறிந்து அங்கேயே உயிரை விட்டு விட்டாள். அங்கிருந்த சிவனின் கோபத்தில் கரிய நிறமுடைய வீரபத்திரன் தோன்றினார். விஜயாவையும் சிவன் தோற்றுவித்தார். வீரபத்திரன், விஜயா வுடன் சேர்ந்து தட்சன் யாகசாலைக்குச் சென்று அதனை அழிக்க முற்பட்டனர். அதனைத் தடுக்க வந்த விஷ்ணுவுடன் வீரபத்திரன் போர் செய்தார். விஷ்ணுவுடைய சக்கரம் வீர பத்திரனுடைய சூலாயுதத்தை எதிர்த்து நிற்க முடியாததால், விஷ்ணு வீரபத்திரனுடன் மற்போர் புரிந்தார். மற்போரில் விஷ்ணுவிடம் தோற்ற வீரபத்திரன் சிவனிடம் வந்தார். சிவன் விஷ்ணுவிடம் சண்டை போட விஷ்ணு தோற்று ஓடிவிட்டார். பிறகு அங்கிருந்த முனிவர்களை எல்லாம் வீரபத்திரன் தண்டித் தார். புஷா என்ற முனிவர் காலைப் பிடித்து ஆகாயத்தில் சுழற்றினார். புஷாவின் பற்களை எல்லாம் உடைத்தார். பகா என்ற முனிவரின் கண்களைத் தோண்டினார். யாகம் இப்படி முடிந்ததால் யாகமே ஒரு மான் வடிவெடுத்து ஆகாயத்தில் ஓடத் தொடங்கியது. யாக சாலையில் இருந்த சிவ உருவம் இரண்டாகப் பிளந்தது. ஜடாபாரத்தோடு கூடிய ஒரு பகுதியாக சாலையில் தங்கிவிட்டது. மறுபகுதி பாசுபதாஸ்திரம் பூட்டிய

வில்லுடன் ஆகாயத்தில் செல்லும் மானைத் துரத்திச் சென்றது. ஆகாயத்தில் சென்ற சிவனது ஒரு பகுதி காலபுருஷ என்ற பெயருடன் ஆகாயத்தில் தங்கிவிட்டது. யாக சாலையில் தங்கிய பகுதி ஜடாதரா என்ற பெயரைப் பெற்றது.

வானத்தில் தங்கிய சிவனுடைய பாகம் மேஷத்தில் தலையும், ரிஷபத்தில் முகமும், மிதுனத்தில் தோள்களும், சிம்மத்தில் இதயமும், கடகத்தில் இரு பக்கங்களும், கன்னியின் வயிறும், துலாத்தில் கொப்பூழும், விருச்சிகத்தில் இடுப்பும், தனுசுவில் தொடையும், மகரத்தில் கால்களும், கும்பத்தில் கணுக்கால்களும், மீனத்தில் பாதங்களும் இடம் பெற்றன. இதுவே வான் மண்டலத்தில் உள்ள பன்னிரண்டு வீடுகளும் பிறந்த கதையாகும்.

**மன்மத தகனம்**

வெகு காலத்திற்கு முன்னர், நேர்மையான விவ்ரிசா என்ற பிராமணன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அஹிம்சா என்ற மனைவியும், ஹரி, கிருஷ்ணா, நர, நாராயண என்ற நான்கு மகன்களும் முனிவர்களாகி தவத்தில் ஈடுபட்டனர். இமயமலையில் உள்ள வதரிகாசிரமத்தில் பர்ணசாலை அமைத்துத் தவம் செய்தனர். இவர்கள் கடுமையாகத் தவம் செய்வதை அறிந்த இந்திரன் தன்னுடைய இந்திரப்பதவிக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும் என்று கருதி, அவர்கள் தவத்தைக் கலைப்பதற்காக ரம்பா என்ற அப்ஸரஸையும், மதனா என்பவரையும் அனுப்பிவைத்தார்.

இவர்கள் இருவரும் வதரிகாசிரமம் அடைந்த பொழுது, அங்கு பருவத்தில் மாற்றம் ஏற்பட்டது. மலர்கள் மலர்ந்தன, கொடிகள் செழுமையாக வளர்ந்தன. தன் தவம் கலைந்த நாராயண முனிவர் வியப்புடன் இவற்றைப் பார்த்துவிட்டு, அனங்கனைப் பார்த்தார். 'அனங்கன் என்று சொன்னது

யாரை?' என்று நாரதர், புலஸ்தியரைக் கேட்க, அவன்தான் மதன் என்றும், காமன், கந்தர்வன் என்றும் அனங்கன் என்றும் அழைக்கப்படும் காதலுக்குத் தேவனவன் என்று புலஸ்தியர் கூற, 'அனங்கன் என்று ஏன் பெயர் வந்தது' என்று நாரதர் கேட்க, 'அவன் சிவனால் எரிக்கப்பட்டான்' என்று விடையளித்தான் புலஸ்தியன். சிவன் அவனை எரித்த வரலாற்றையும் கூறத் தொடங்கினார்.

தட்சயக்ஞத்தைக் கேள்விப்பட்டு சதி உயிரை விட்டதில் இருந்து சிவன், சதியைப் பிரிந்த துயரத்தில் மிகவும் ஆழ்ந்து போனார். சில நேரம் நாட்டியமாடியும், சில நேரம் 'ஓ' என்று குமுறியும் மனநிம்மதியின்றி அலைந்தார். பிரிவினால் ஏற்பட்ட சூடு மிகுதிப்பட்டமையில் ஒவ்வொரு தீர்த்தமாகச் சென்று நீராடத் தொடங்கினார். காளிந்தி நதியில் அவர் நீராட இறங்கியதும் அந்த நதியின் நீரே கருமையாக மாறியது. அப்பொழுது முதல் சிவனுக்கு ஏப்பம் அதிக சப்தத்துடன் வரலாயிற்று. அதை அடக்க முடியாத சிவன் ஏப்பமிட்டுக் கொண்டே இங்குமங்கும் அலைந்தார். வழியில் குபேரன் மகனாகிய பாஞ்சலிகாவைக் கண்டு, என்னுடைய ஏப்பத்தை நீ வாங்கிக் கொணடால் உன்னை வாழ்த்துவேன் என்றார். அவன் அதனை வாங்கிக் கொண்டதால் அவன் பாஞ்சாலேஸ் வரன் என்று வணங்கப்பட்டான். அதன் பிறகு சிவன் விந்திய மலைப்பகுதிக்குச் சென்றார். அங்கே தவம் செய்து கொண் டிருக்கும் பொழுது திடீரென்று அடி, முடி காண முடியாத லிங்க வடிவை எடுத்தார். அதனால் உலகம் முழுவதும் ஏற்பட்ட அதிர்ச்சியும், பூகம்பமும், மிகவும் அஞ்சத்தக்கனவாக இருந்தன. இதைக் கண்டு அஞ்சிய பிரம்மன் விஷ்ணுவிடம் சென்று அதிர்ச்சியின் காரணம் கேட்டார். விஷ்ணு, 'சிவன் விந்திய மலைப் பிரதேசத்தில் லிங்க வடிவெடுத்ததன் விளைவாகும் இது' என்று கூறினார். இருவரும் விந்திய

மலைக்கு வந்து சிவன் நின்ற காட்சி கண்டனர். லிங்கத்தின் முடி கற்பனைக்கடங்காத உயரத்தில் இருந்தது. அப்படி யானால் அதனுடைய அடியும் வெகுதூரம் சென்றிருக்க வேண்டும் என்று பேசிக் கொண்ட பிரம்மா, விஷ்ணு இருவருமே எப்படியாவது லிங்கத்தின் அடியையும், முடியையும் கண்டு வரவேண்டும் என்று விரும்பினர். உடனே பிரம்மன் தன் வாகனமாகிய அன்னத்தின் மேல் ஏறிக் கொண்டு உயர உயரப் பறந்து சென்றார். விஷ்ணு தன் வாகனமாகிய கருடனில் ஏறிக்கொண்டு கீழ்லோகங்கள் சென்றார். எவ்வளவு உயர்ந்து பறந்தும், எவ்வளவு தாழ்ந்து கிடந்தும் இருவரும் லிங்கத்தின் முடியையோ, அடியையோ காண முடியவில்லை. வெற்றி அடையாத இருவரும் ஒன்று கூடி சிவனை நோக்கிப் பிரார்த்தித்தார்கள். சிவன் அங்கே தோன்றினார். இவர்களுக்குப் பின்னே கந்தர்ப்பன் என்று சொல்லப்படும் மன்மதனைப் பார்த்தார். உடனே அவனது வில்லை ஒடித்து அவனையும் அழித்து விட்டார். அவனது வடிவம் எரிக்கப் பட்டதால் வடிவமில்லாதவன் என்ற பொருளில் அனங்கன் என்ற பெயர் நிலைத்தது. உடனே சிவன் இமயத்திற்குச் சென்று தவம் செய்யப் போய்விட்டார்.

### ஊர்வசி பிறந்த கதை

புலஸ்தியர் நாரதரைப் பார்த்து நர, நாராயணர் நாரத கதையை எங்கே விட்டேன் என்று நினைவுக்குக் கொண்டு வாரும். நர, நாராயணன் இருவரும் மிகத் தீவிரமான தவத்தில் ஈடுபட்டு இருந்தனர். இந்திரனால் அனுப்பப்பட்ட ரம்பையும் மதனனும் இவர்கள் எதிரே வந்து நர, நாராயணர் தவத்தைக் கலைக்க நினைத்தனர். கண்விழித்த நாராயண முனிவர் ஒரே நொடியில் இவர்கள் யார் என்பதையும், எதற்காக வந்துள்ளனர் என்பதையும் அறிந்து கொண்டார். சிரித்துக்

கொண்டே மதனனைத் தன் பக்கத்தில் வருமாறு கூறினார். அவன் வந்து அமர்ந்தவுடன், அவனிடம் பேசிக் கொண்டே, ஒரு கொத்துப் பூவை எடுத்துத் தன் தொடையில் வைத்து திரித்தார். திரிக்கப்பட்ட பூங்கொத்தில் இருந்து ரம்பையைத் தோற்றோடச் செய்யும் அழகே வடிவான ஒரு பெண் உருவானாள். மதனனைப் பார்த்து, 'ஊர்வசி என்ற இந்தப் பெண்ணுக்கு நிகராக உங்கள் தேவலோகத்தில் எந்த அப்ஸரஸும் இல்லை. இந்திரனுக்கு நான் கொடுக்கும் பரிசாக இந்தப் பெண்ணை அழைத்துச் செல்' என்றார். பிரம்மன் மட்டுமே செய்யக் கூடிய காரியத்தை, கேவலம் பூங்கொத்துக் களில் இருந்தே நாராயண முனிவர் செய்ததைக் கண்ட காமன் பயந்து ஓடிச் சென்று நடந்தவற்றை விவரமாகக் கூறினான். இந்த விவரம் அறிந்த இந்திரன் அன்றிலிருந்து இவர்கள் பக்கம் திரும்புவதையே விட்டு விட்டான்.

**பிரகலாதன் கதை**

ஹிரண்யகசிபுவைக் கொன்று அவன் மகனாகிய பிரகலாதனுக்கு முடி சூட்டினார் விஷ்ணு. அவன் ஆட்சி செய்யும் காலத்தில், சாயாவனர் என்ற முனிவர், நகுலேஷ்வா தீர்த்தத்தில் நீராடப் போனார். அப்பொழுது ஒரு கரிய பாம்பு அவரைக் கடித்தது என்றாலும் அவர் விஷ்ணுவைத் தொழுது விஷத்திலிருந்து விடுபட்டார் என்றாலும் அந்தப் பாம்பு அவரைச் சுற்றி இழுத்துச் சென்று அரக்கர் லோகத்தில் ஆண்டுகொண்டிருந்த பிரகலாதன் முன் நிறுத்தியது. பிரகலாதன் அவரை வணங்கி "முனிவரே! மூன்றுலகிலும் தலைசிறந்து விளங்கும் தீர்த்தங்களில் நீராட விரும்புகிறேன்," என்றான். அதற்கு முனிவர் "அரசே! மேலுலகத்தில் புஷ்கர தீர்த்தமும், பூலோகத்தில் நைமிச தீர்த்தமும், கீழ்லோகத்தில் சக்கர தீர்த்தமும் தலைமையானவையாகும்" என்று கூறிப் போனார்.

பிரகலாதன் தன்னுடைய படைகளுடன் நைமிச தீர்த்தத்தில் நீராடப் போனான். அங்கே அவனுக்கொரு அதிசயம் காத்திருந்தது. தீர்த்தக் கரையில் உள்ள பெரிய மரம் ஒன்று ஒரு எள்முனைகூட இடமில்லாமல் அடிமரத்திலிருந்து நுனி மரம் வரை அம்புகள் துளைக்கப்பட்டிருந்தது. ஆயிரக் கணக்கான அம்புகள் ஒவ்வொரு பகுதியிலும் குத்திக்கொண்டு அப்படியே நின்றிருந்தன வியப்புத் தாங்காத பிரகலாதன், சுற்று முற்றும் பார்க்கையில், பக்கத்தில் உள்ள ஆசிரமத்தில் இரண்டு முனிவர்கள் தவம் செய்து கொண்டிருப்பதையும், இருவருடைய பக்கத்திலும் இரு மிகப்பெரிய வில்களும் அம்புகள் நிறைந்த இரண்டு அம்பறாத்தூணிகளும் இருக்கக் கண்டான். தவசிகள் வில்லையும், அம்பையும் வைத்திருப்பது பொருத்தமில்லாத செயல் என்று கருதினான் பிரகலாதன். எனவே அவர்களிடம் வந்தான். நாராயண முனிவரைப் பார்த்து, "அம்பையும், வில்லையும் வைத்திருக்கும் நீங்கள் போலித்துறவிகள் என்பதில் ஐயமில்லை. தவம் செய்கின்ற இடத்தில் வில்லுக்கும், அம்புக்கும் என்ன வேலை? நீங்கள் யார்?" என்று கேட்டான். முனிவர் அவனைப் பார்த்து, நாங்கள் யாராயிருந்தால் உனக்கென்ன? என்று கூற, பிரகலாதன் 'நான் அரசன், இப்படிப்பட்ட போலித் துறவிகளைத் தண்டிக்க வேண்டியது என் கடமை' என்றான்.

உடனே நர முனிவர் வில்லை எடுக்க பெரும் போர் மூண்டது. பிரகலாதன் எய்த எல்லா பாணங்களையும் நர முனிவரின் பாணங்கள் செயலிழக்கச் செய்தமையால், பிரகலாதன், இவர்கள் சாதாரண மனிதர்கள் அல்லர் என்று தெரிந்துகொண்டு சிறப்பு மிகுந்த பிரம்மாஸ்திரத்தை ஏவினான். நர முனிவர் மிக எளிதாக நாராயணாஸ்திரத்தை ஏவி அதனைத் தடை செய்தார். பிரகலாதன் அக்னியாஸ்திரத் தையும், முனிவர் மஹேஸ்வராஸ்திரத்தையும் பயன்படுத்தினர்.

மாலை ஆகிவிடவே முனிவர் பிரகலாதனைப் பார்த்து சூரியன் மறைந்த பிறகு சண்டை இடுவது தருமம் அன்று. நாளை பொழுது விடிந்தவுடன் போர் செய்யலாம் என்று கூற, பிரகலாதன் சென்று ஓய்வெடுத்துக் கொண்டு மறுநாள் காலை வந்தான். இப்பொழுது நாராயண முனிவர் போருக்கு வந்தார். ஆயுதங்கள் எதுவும் பயன்படாமல் போகவே, பிரகலாதன் கதாயுதத்தை எடுத்து நாராயண முனிவர் மண்டையில் அடித்தான். கதாயுதம் சுக்கு நூறாயிற்று. தன்னால் ஒன்றும் செய்ய முடியாது என்பதறிந்த பிரகலாதன் விஷ்ணுவை தியானிக்க, விஷ்ணு தோன்றினார்.

'நான் இவர்களை வெல்ல வேண்டும்' என்று பிரகலாதன் கேட்க, விஷ்ணு, இவர்களை யாரென்று நினைத்தாய். இவர்கள் என் அம்சமாவர். இவர்களை வெல்வது என்பது இயலாத காரியம் என்று கூறியவுடன், பிரகலாதன், "இவர்களை வெல்ல வேண்டுமென்று விரதம் பூண்டுள்ளேன். அது முடியாது என்றால் நான் என் உயிரை விடுவதைத் தவிர வேறு வழி யில்லை" என்றான். அதுகேட்ட விஷ்ணு, "இவர்களை ஆயுத பலத்தால் வெல்ல முடியாது என்றுதான் சொன்னேன். ஆன்ம பலத்தாலும், பக்தியாலும் இவர்களை நீ உன்னிடம் வருமாறு செய்து கொள்ளலாம்" என்று கூறினார்.

அதைக் கேட்ட பிரகலாதன் வில்லையும், அம்பையும் தூர எறிந்துவிட்டு, நர, நாராயணர்களைப் பிரார்த்தனை செய்யத் துவங்கினான். அவர்கள் கால்களில் விழுந்து வணங்கி, அவர் யார் என்று தெரியாமையால் அவரை ஏசியும், பாணத்தால் துன்புறுத்தியும் பல தவறுகளைச் செய்துவிட்டேன். என்னை மன்னித்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூற நாராயண முனிவர் "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்க, உங்களையும் விஷ்ணுவையும் என்றும் மறவாதிருக்க வேண்டும் என்று வேண்டினான். 'அங்ஙனமே ஆகட்டும்'

என்று முனிவர் கூறியவுடன் பிரகலாதன் தன் நாட்டிற்கு மீண்டான்.

யாத்திரைக்குப் புறப்படுமுன் அந்தகன் என்னும் அசுர னிடம் அரசை ஒப்படைத்துவிட்டுப் பிரகலாதன் புறப்பட்டிருந் தான் அல்லவா? இப்பொழுது அந்தகன் வந்து 'அரசை ஏற்று ஆள வேண்டும்' என்று கூறியவுடன் பிரகலாதன் எந்தப் பகுதியிலும் எனக்கு இப்பொழுது விருப்பமில்லை. நீயே இதனை ஆள்வாயாக என்று அவனிடமே பொறுப்பை ஒப்படைத்துவிட்டுக் காட்டிற்குத் தவம் செய்யச் சென்று விட்டான்.

**அந்தகன்**

பிரகலாதனும், அந்தகனும் அண்ணன்—தம்பி மக்கள். ஹிரண்யாக்ஷன் மகன் அந்தகாசுரன். ஹிரண்யகசிபு மகன் பிரகலாதன். அந்தகன் முதலில் குருடனாக இருந்தாலும் பிறகு கண்களைப் பெற்று பிரகலாதன் கொடுத்த ஆட்சியை மேற் கொண்டான். அவன் பெரிய சிவபக்தன். ஆதலால் ஆட்சிக்கு வந்தவுடன் சிவனை நோக்கிக் கடுந்தவம் செய்து தேவர்கள், அசுரர்கள் ஆகிய யாராலும் தனக்குச் சாவு வரக்கூடாது என்றும், பூமியிலோ, நெருப்பிலோ தனக்கு இறப்பு வரக்கூடாது என்றும் பல வரங்களைப் பெற்று ஆளத் தொடங்கினான். வரங்களைப் பெற்ற தைரியத்தில், இந்திரனை ஜெயிக்க வேண்டும் என்ற வேகத்துடன் பிரோச்சனன் என்னும் படைத் தலைவனுடன் போருக்குப் புறப்பட்டான். இவன் வருவதை அறிந்த இந்திரன் தேவர்கள் படையை வரிசைப்படுத்தி நிறுத்தினான். இந்திரன் ஐராவதத்தின் மேலும், யமன் ஒரு எருமை மேலும், வருணன் கடற்பன்றி மேலும், கந்தர்வர்கள் நாகங்களின் மேலும், ருத்ரர்கள் வெள்ளைநிறக் காளைகள் மேலும், ஆதித்தியர்கள் குதிரைகள் மேலும், மருத்துக்கள்

மான்களின் மேலும் ஏறிவந்தனர். சந்திரன் அன்னங்கள் பூட்டிய ரதத்தில் வந்தான்.

அந்தகன் குதிரை மேலும், விரோச்சனன் யானை மேலும், அயாசங்கு என்பவன் சிங்கத்தின் மேலும் வந்தனர். போர் தொடங்கியது. இந்திரன் முதலியவர்கள் அடி பொறுக்காமல் ஓடத் தொடங்கினர். விரைவில் தேவருலகம் அந்தகன் வசமாயிற்று. அந்தகன் தலைநகரம் அஷ்மகா எனப்படுவதாகும்.

**மகிஷாசுரன்**

முன்னொரு காலத்தில் ரம்பன், கரம்பன் என்ற இரண்டு அசுரர்கள் இருந்து கொண்டு மூன்று உலகத்திற்கும் பெருந் தீமை புரிந்து வந்தனர். ஆனால் அவர்கள் இருவருக்கும் குழந்தை இல்லை என்ற பெருங்கவலை இருந்து வந்தது. இருவரும் தவம் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தார்கள். கரம்பன் என்பவன் தண்ணீருக்கு அடியில் சென்று தவம் செய்தான். அதனை அறிந்த இந்திரன் முதலை வடிவில் சென்று கரம்பனை விழுங்கிவிட்டான். தம்பி இறந்ததை அறிந்த ரம்பன் இந்திரன் மேல் கடுங்கோபம் கொண்டான். இந்திரனை அழிக்கக் கூடிய ஒரு பிள்ளை வேண்டும் என்று வேண்டினான். தவம் செய்தான். தவத்தின் முடிவில் யாரும் வராததால் தன் தலையை அறுத்து அக்னிக் குண்டத்தில் போடுவதற்காகக் கையில் வாளை எடுத்து விட்டான். உடனே அக்னி தேவன் அவன் முன் தோன்றி, "தற்கொலை செய்து கொள்ள வேண்டாம். உனக்கு வேண்டிய வரத்தைத் தருகிறேன்" என்று கூறியவுடன் ரம்பன் "எனக்கு ஒரு மகன் வேண்டும். மூன்று உலகத்தையும் வெல்பவனாகவும் மனிதர்கள், தேவர்கள், தெய்வங்கள் யாராலும் கொல்லப் படாதவனாகவும் இருக்க வேண்டும்," என்றான். அப்படியே ஆகட்டும் என்று கூறிவிட்டு அக்னி மறைந்தான்.

சிலகாலம் கழித்து ரம்பன் குபேரன் வாழும் இடத்திற்குச் சென்றான். யக்ஷினிகள் வாழும் உலகில் ஓர் அழகான பெண் எருமையைப் பார்த்து அதன் மேல் மோகம் கொண்டு அந்த எருமையை மணம் செய்து கொண்டான்.

எருமை மனைவியை அழைத்துக் கொண்டு அசுரர் உலகத்திற்கு வந்தபோது அங்கு அந்த எருமை மனைவியை யாரும் மதிக்கவில்லை. அதனால் வருத்தம் அடைந்த ரம்பன் எருமை மனைவியை அழைத்துக் கொண்டு யக்ஷினி உலகத்திற்கே சென்றுவிட்டான். அங்கே அவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு மகிஷாசுரன் என்று பெயரிட்டனர். சிலகாலம் கழித்து மகிஷாசுரனின் தாய் எருமை மற்றொரு எருமையுடன் சண்டை செய்ய நேரிட்டது. தன்னுடைய மனைவியைக் காப்பாற்றச் சென்ற ரம்பன் மற்றொரு எருமையால் குத்திக் கொல்லப்பட்டான். இறந்து போன ரம்பனுடைய உடம்பு எரிகின்ற சிதையின் மேல் அவனுடைய மனைவியாகிய பெண் எருமையும் விழுந்து இறந்தது. அந்தச் சிதை நெருப்பில் இருந்து மிகக் கொடுமையான இரக்கவிஜா என்ற ஓர் அசுரன் தோன்றினான். அவன் சுற்றி இருந்த யக்ஷினிகள், எருமைகள் ஆகியவர்கள் அனைவரையும் கொன்று விட்டான். அவனுடைய பாதுகாவலில் வளர்ந்த மகிஷாசுரன் பெருவீரனாக மாறி தேவலோகத்தில் இந்திரன் முதலியவர்களை விரட்டினான். அவனை எதிர்க்க முடியாத தேவர்கள் பிரம்மனிடம் சென்று முறையிட்டனர். பிரம்மன், உங்களைக் காப்பாற்ற என்னால் முடியாது. நாம் எல்லோரும் சென்று விஷ்ணுவிடம் முறை யிடுவோம் என்று கூறி அனைவரையும் அழைத்துக்கொண்டு விஷ்ணுவிடம் சென்றனர். அங்கு சிவனும் இருந்தார். இதைக் கேட்ட விஷ்ணுவும், சிவனும் பெருங்கோபம் கொண்டனர். சிவனுடைய கோபத்திலிருந்தும், விஷ்ணு, பிரம்மன் முதலிய

வர்கள் கோபத்திலிருந்தும் ஒவ்வொரு ஆற்றலும் கிளம்பிற்று. இந்த ஆற்றல்களை எல்லாம் ஒன்று திரட்டி காத்யாயன முனிவர் ஆசிரமத்திற்குக் கொண்டு சென்றனர். அம்முனிவர் தம்முடைய ஆற்றலையும் அதனுடன் சேர்க்க எல்லா ஆற்றல் களும் கூடி காத்யாயனி என்ற பெயரில் ஓர் அழகான பெண் வடிவைக் கொண்டது. சிவனுடைய ஆற்றல் அவள் முகமாகவும், அக்கினியின் ஆற்றல் அவள் கண்களாகவும், எமனின் ஆற்றல் அவள் தலைமுடியாகவும், விஷ்ணுவின் ஆற்றல் கைகளாகவும், இந்திரன் ஆற்றல் இடையாகவும், வருணன் ஆற்றல் கால்களாகவும், பிரம்மன் ஆற்றல் பாதங் களாகவும், சூரியன் ஆற்றல் கட்டைவிரலாகவும், யட்சர்கள் மூக்கையும் சத்தியர்கள் கண், புருவங்களையும், மருத்துகள் காதுகளையும் கொடுத்தனர். தேவர்கள் காத்யாயனிக்குப் பலவித ஆயுதங்கள் கொடுத்தனர். சிவன் திரிசூலத்தையும், விஷ்ணு சக்கரத்தையும், வருணன் சங்கையும், அக்கினி சக்தியை யும், வாயு வில்லையும், சூரியன் அம்பராதூணியையும், அம்பு களையும், இந்திரன் வஜ்ராயுதத்தையும், எமன் கதையையும், குபேரன் கதாயுதத்தையும், விஸ்வகர்மா கோடாரியையும் கொடுத்தனர். மற்ற தேவர்கள் அவளுக்கு ஆபரணத்தைக் கொடுத்தனர். இமயமலை ஒரு சிங்கத்தைக் கொடுத்தது.

இவ்வாறு தரப்பட்ட பல்வேறு ஆயுதங்களை எடுத்துக் கொண்டு காத்யாயனி விந்தியமலைக்குச் சென்றாள்.

### விந்தியமலையில் நிகழ்ந்தவை

விந்தியமலை சென்ற காத்யாயனி அதையே தன் இருப்பிடமாகக் கொண்டாள். அந்த மலையில் மகிஷாசுரன் தூதர்கள் சண்டா, முண்டா என்ற இருவர், காத்யாயனியைப் பார்த்தவுடன் அவள் அழகில் ஈடுபட்டு தங்கள் அரசனுக்கு ஏற்ற மனைவி என்று முடிவு செய்து அரசனிடம் கூறினர்.

இதைக் கேட்ட மகிஷன் மகிழ்ந்து தன்பால் உள்ள வீரர்கள் பலரையும், சண்டா, முண்டா, வித்லக்ஷா, கபிலா, வஷ்கலா, உக்ரயுதா, சிக்ஷீரா, ரத்தவிஜா, மாயையின் மகனாகிய தூர்தபி ஆகிய தலைவர்கள் பலரையும் காத்யாயனியிடம் பேச அனுப்பினான். அவர்களில் துந்துபி காத்யாயனியிடம் வந்து, எம்முடைய அரசனாகிய மகிஷா மூன்று உலகத்தையும் வென்று அடிமைப்படுத்தியவன். அவனை எதிர்ப்பார் மூவுலகிலும் எவருமில்லை. நீயோ அழகில் சிறந்தவள். உன் அழகுக்கு ஏற்றவன் எங்கள் அரசன். அவனுக்கு ஏற்ற பட்டமகிஷி நீதான். ஆகவே நீ எங்கள் அரசனை மணந்து கொள்ள வேண்டுகிறோம் என்றான். அதைக் கேட்ட காத்யாயனி, 'நீங்கள் சொல்வது அனைத்தும் எனக்குத் தெரியும். நான் மணந்து கொள்வதில் தடையில்லை. ஆனால் எங்கள் குடும்ப வழக்கம் என்று ஒன்று உள்ளது. எங்கள் குடும்பத்தில் உள்ள பெண்ணை யாராவது மணக்க வேண்டும் என்றாலும் மணமகளுடன் போர் செய்ய வேண்டும். அவன் வெற்றி பெற்றால் அவள் அவனுக்கு மாலையிடுவாள். அம்முறையைப் பின்பற்றினாலும் நான் மணம் செய்து கொள்கிறேன்' என்று காத்யாயனி கூறினாள்.

துந்துபி அதனைச் சென்று மகிஷனிடம் கூறியதும் அவன் போருக்குத் தயாரானான். சிக்ஷீராவைத் தலைமைத் தளபதி யாக நியமித்து நமரா முன்நின்று போர் செய்தான். சண்ட, முண்டா தவிர அனைவரையும் கொன்ற பிறகு காத்யாயனி மகிஷனை எதிர்த்தாள். அவன் எருமை வடிவம் கொண்டு தாக்கவும் காத்யாயனி சிம்மத்தை விட்டுவிட்டு அவன் முதுகில் ஏறி அமர்ந்து அவன் முதுகு ஒடிகின்ற வரையில் காலால் அழுத்தினாள். அவனுள் இருந்து ஆயுதபாணி யாக ஒருவன் வெளிப்பட காத்யாயனி அந்த வீரனைக் கொன்று மகிஷன் தலையை அறுத்தாள்.

*தேவர்கள் காத்யாயனியை வாழ்த்த, தேவைப்படும் பொழுது "நீங்கள் வேண்டினால் நான் மீண்டும் வருவேன்" என்று கூறி மறைந்தாள்.*

**உமாவின் தோற்றம்**

*நாரதர், புலஸ்தியரைப் பார்த்து 'தேவையான பொழுது வருவேன்' என்று காத்யாயனி சொன்னாரே, எப்பொழுது மறுபடியும் வந்தார்?' என்று கேட்க, புலஸ்தியர் சொல்ல ஆரம்பித்தார்.*

*முன்னொரு காலத்தில் மகிஷனோடு சேர்ந்த அசுர குலத்தில் சும்ப நிசும்பர்கள் என்ற இரு சகோதரர்கள் இருந்தனர். மிக்க வரபலம் உடைய அவர்கள் தங்கள் குலத்திற்கு எதிரிகளாகிய தேவர்களை வென்று, இந்திரனை விரட்டி எல்லையற்ற கொடுமைகள் செய்தனர். செய்வதறியாத தேவர்கள் விஷ்ணுவிடம் சென்று தங்கள் பரிதாப நிலையை விளக்கினர். அது கேட்ட விஷ்ணு, 'எங்களில் யாரும் இவர்களைக் கொல்ல முடியாத அளவிற்கு வரம் பெற்றுள்ளனர். நீங்கள் அனைவரும் சென்று குருக்ஷேத்திரத்தில் பிருதுதாகா என்ற தீர்த்தத்தில் உங்கள் முன்னோர்களைக் குறித்து வேண்டுங்கள். அவர்களிடத்தில் மேனகா என்ற பெண் இருக்கிறாள். அவளை இமவானுக்கு மணமுடித்தால், அவள் வயிற்றில் உமா என்ற பெயருடன், ஒரு பெண் தோன்றுவாள். அவள் சிவனை மணந்தால் கார்த்திகேயன் என்ற குழந்தையும் தோன்றுவான்' என்று கூற குருக்ஷேத்திரம் எங்கே உள்ளது என்று தேவர்கள் வினாவினார்கள்.*

**குருக்ஷேத்திரம் பற்றி...**

*இந்த குருக்ஷேத்திரமும், பிருத்துதாகா தீர்த்தமும் எங்கே உள்ளன என்று கேட்ட தேவர்களுக்கு விஷ்ணு சொல்ல ஆரம்பித்தார்.*

பன்னெடுங்காலத்திற்கு முன்னர் ரிக்ஷா என்ற மன்னன் உலகை ஆண்டு வந்தான். அவனுடைய மகனாகிய சம்வரணன் வசிட்டரை குருவாக ஏற்றுக் கொண்டு எல்லா சாத்திரங்களையும், அரசியல் முறையையும் கற்று அறிந்தான். சம்வரணன் வேட்டைக்குச் சென்றபொழுது வைப்ரஜா என்ற வனப்பகுதியில் பல அப்ஸரஸ்கள் இருப்ப தைக் கண்டார். அவர்களுள் தப்தி என்பவளைக் கண்ட வுடன் அவள் மீது எல்லையில்லாக் காதல் கொண்டான். அதன் பயனாகக் குதிரை மீதிருந்த அவன் மயங்கிக் கீழே விழும்படி ஆயிற்று. அங்கு வந்த வித்யாதரர்கள் அவன் மயக்கத்தைத் தெளியவைத்து நாட்டிற்கு அனுப்பினர். என்றாலும் சம்வரணன் தான் சந்தித்த மங்கையை மறக்க வில்லை. தப்தி சூரியனின் மகளாவாள். இருவரும் மணம் புரிந்துகொள்ள விரும்பினர்.

விஷயத்தை அறிந்த வசிட்டர் சூரியனைக் கூப்பிட்டுப் பேசித் திருமணத்தை முடித்து வைத்தார். இவர்களுக்குப் பிறந்த குழந்தைதான் 'குரு' என்ற பெயருடையவன். இவர்கள் பிறந்ததில் இருந்தே வசிட்டரிடம் கல்வி பயின்றனர். ஆதலின் பத்து வயதிற்குள் கற்க வேண்டிய அனைத்தும் கற்று விட்டான். குருவிற்குப் பதினாறு வயதாகும் பொழுது அவன் தந்தை, சுதாமா என்ற அரசனின் மகள் சௌதாமினியை குருவுக்குத் திருமணம் செய்து வைத்தான். நாளாக நாளாக குருவின் மனத்தில் ஓர் ஆழமான எண்ணம் பிறந்தது. இதுவரை உலகத்தில் யாரும் செய்யாத காரியத்தைத் தான் செய்து, உலகம் புகழும்படித் தன் பெயரை நிலைநாட்ட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். ஒவ்வொரு இடமாகத் தேடிச் சென்று, துவைத வனம் என்ற இடத்தை அடைந்தான். பிரம்மன் வந்து தங்குவதற்கு இந்த உலகில் ஐந்து இடங்கள் உண்டு. அவை வடபகுதியில், சரஸ்வதி நதியின் கரையில் உள்ள சமந்தபஞ்சகா

என்ற இடமும், கிழக்கே கயாவும், தெற்கே விராஜாவும், மேற்கே புஷ்கராவும், நடுவே பிரயாகையும் அந்த இடங்களாகும்.

குரு, சமந்தபஞ்சகம் என்ற இடத்தில், பொன்னாலாகிய ஏரினைப் பூட்டி நிலத்தினை உழ ஆரம்பித்தான். அப்பொழுது இந்திரன் வந்து 'இந்த இடத்தை ஏன் உழுகிறாய்?' என்றான். குரு, 'இங்கே நிலத்தை உழுது, நற்பண்புகளை விதைக்கப் போகிறேன்' என்று கூறினவுடன் இந்திரன் போய்விட்டான். குரு நிலத்தை உழுதுகொண்டே இருந்தான். விஷ்ணு அங்கே வந்து நிலத்தை ஏன் உழுகிறாய் என்று கேட்க, குரு அதே விடையைக் கூறினார். என்ன விதை வைத்திருக்கிறாய்? எங்கே வைத்திருக்கிறாய் என்று கேட்க, குரு, என் உடலில் இருக்கிறது என்றான். என்ன விதைகள் என்று விஷ்ணு கேட்க, "தியானம், சத்தியம், இரக்கம், தூய்மை, மன்னித்தல், தானம் செய்தல் ஆகியவையே அந்த விதைகள்," என்று குரு கூற, விதை எங்கே என்று விஷ்ணு கேட்க, குரு தன் வலக்கையை நீட்டினான். அவன் வலக்கையை ஆயிரம் துண்டுகளாக வெட்டி, உழப்பட்ட வயல்களில் விதைத்துக் கொண்டே வந்தார். அதேபோல அவன் இடக்கை, இரண்டு தொடைகள் ஆகியவற்றை வெட்டி விதைத்த பிறகு அவன் தலையையும் வெட்டக் கொடுத்தான். அப்பொழுது விஷ்ணு அவனைத் தடுத்து 'உனக்கு என்ன வரம் வேண்டும்' என்று கேட்க, குரு, 'பெரும்பகுதி நிலத்தை உழுதுவிட்டேன். வரம் தருவதானால் இந்த இடம் சிறந்த புண்ணிய க்ஷேத்திரமாக விளங்கட்டும்' என்று வேண்டிக் கொண்டான். விஷ்ணுவும் 'அப்படியே ஆகட்டும். இந்தப் புண்ணிய பூமிக்கு இன்று முதல் 'குருக்ஷேத்திரம்' என்ற பெயர் வழங்கட்டும்' என்றார்.

இந்தப் புண்ணிய பூமியின் பக்கத்தில் 'பிருதுதாகா' என்ற ஆறு ஓடுகிறது. அந்தத் தீர்த்தக் கரையைத்தான் பிதுர்க்களை வணங்கி, மேனகாவை அழைத்து வரவேண்டிய இடம்

என்று விஷ்ணு கூறினார். இதே குருக்ஷேத்திரத்தில்தான் லோமஹர்ஷன முனிவர் மற்ற முனிவர்களுக்கு வாமன புராணத்தைச் சொன்னார். வாமன புராணக் கதை வருமாறு:

**வலியின் கதை (மகாபலி)**

பிரஹலாதனின் மகன் விரோச்சனுக்கு வலி மகனாகப் பிறந்தான். நேர்மையும் சத்தியமும் உடைய அவன் மூன்று உலகங்களையும் ஆண்டு வந்தான். இந்திரன் மட்டும் தன் பதவி பறி போனதால், மிகவும் வருத்தத்துடன் இருந்தான். தேவர்களை அழைத்துக் கொண்டு தேவர்களின் தாய்தந்தை யாகிய அதிதி, காசியபன் ஆகிய இருவரையும் சந்தித்தான். அவர்கள் இருவரும் 'நேர்மையுடன் நடக்கும் தைத்தியனாகிய வலியை ஒன்றும் செய்ய முடியாது. தேவையானால் பிரம்மாவைச் சென்று பாருங்கள்' என்று கூறினார்கள். பிரம்மனிடம் சென்ற பொழுது "வலியை ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் வடகடலின் கரைக்குச் சென்று விஷ்ணுவை தியானியுங்கள்" என்று கூறினர். இப்பொழுது இந்திரன் முதலிய தேவர்களுடன் அதிதி, காசிபன் ஆகிய இருவரும் உடன் சேர்ந்துகொண்டு விஷ்ணு தியானத்தில் இடம்பெற்றனர். விஷ்ணு அவர்கள் எதிரே வந்து, நான் காசிபனுக்கும், அதிதிக்கும் பிள்ளையாகப் பிறக்கப் போகிறேன். உங்கள் துயர் தீரும் என்று கூறி மறைந்தார். அதே நேரத்தில் வலியின் நாட்டில் தீய சகுனங்கள் பல தோன்றின. வலி அதன் காரணம் யாது என்று தனது பாட்டனாகிய பிரகலாதனைக் கேட்டான். பிரகலாதன், 'அதிதியின் வயிற்றில் விஷ்ணு பிறக்கப் போகிறார். அதனால்தான் தைத்தியர்களிடையே இந்தத் தீய சகுனங்கள் ஏற்படுகின்றன' என்று கூறினார். அதைக் கேட்ட வலி "அந்த விஷ்ணு என்பவன் யார்? என்னை விட அதிக பலம் பொருந்தியவனா?" என்று விஷ்ணுவை

இழிவாகப் பேசினான். சிறந்த விஷ்ணு பக்தனாகிய பிரகலாதன் மனம் நொந்து, "நீ உன் பலத்தை இழக்கப் போகிறாய்" என்று சாபமிட்டான். பயந்து போன வலி, பாட்டனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். பிரகலாதன் அவனை மன்னித்தாலும் கொடுத்த சாபத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

(வாமனன் பிறந்தது, வலியின் யாகத்திற்கு வந்தது, மூன்றடி நிலம் கேட்டது, வலியை பாதாள லோகத்திற்கு அனுப்பியது ஆகியவை முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளன.)

நிலம் பெற்றுக் கொண்ட வாமனன் (விஷ்ணு) வலியின் நேர்மை, தியாக மனப்பான்மை என்பவற்றை மெச்சி "வரப்போகும் மன்வந்திரத்தில் நீ இந்திரனாக ஆவாய்" என்று வரம் கொடுத்துச் சென்றார்.

**வெனா**

(இக்கதை முன் உள்ள புராணங்களில் சொல்லப் பட்டுள்ளது.) இறந்து பாபலோகத்தில் இருந்த வெனாவைக் கொண்டு வந்து குருக்ஷேத்திரத்தில் உள்ள 'ஸ்தாணு' தீர்த்தத்தில் அவனை நீராட்ட வேண்டும் என்று கருதிய வெனாவின் மகன் பிருத்து அச்செயலைச் செய்ய முற்படும் பொழுது, வானத்தில் அசரீரி ஒன்று கேட்டது. 'பிருத்துவே! மிகப் பாவியான உன் தந்தை இந்தத் தீர்த்தத்தில் இறங்கினால் தீர்த்தம் முழுதும் மாசு அடைந்துவிடும். அதற்கு பதிலாக நீ இறங்கி நீராடிவிட்டுக் கொஞ்சம் தண்ணீரை எடுத்து உன் தந்தை மேல் தெளித்தால் அவன் பாவம் நீங்கும்' என்றது. பிருத்து அதைச் செய்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு நாய் அங்கு வந்தது. அந்த நாய் பூர்வ ஜென்மத்தில் கோயில்களில் உள்ள பொருள்களைப் பாதுகாக்கும் காவலனாகப் பணி புரிந்தது. காவலனாக இருந்தும் அவனே கோயிலில் உள்ள

விலையுயர்ந்த பொருள்களைத் திருடியதால் இந்த ஜென்மத்தில் நாயாகப் பிறந்திருந்தான். அந்த நாய் சரஸ்வதி முதலிய தீர்த்தங் களில் குளித்துவிட்டு இப்பொழுது குருக்ஷேத்திரத்தில் உள்ள ஸ்தாணு தீர்த்தத்திற்கு வந்தது. ஆனால் நடுங்கிக் கொண்டிருந்த அந்த நாயை வெனா அன்புடன் தடவிக் கொடுத்தான். அந்த நாய் முன்னரே பல தீர்த்தங்களில் குளித்திருந்ததால் அதில் கிடைத்த புண்ணியம், வெனாவிற்கு வர, வெனா தன் பாவங்களினின்று விடுபட்டான். இதன் பிறகு வெனா சிவனை நோக்கிக் கடும் தவம் புரிந்தான். மகிழ்ச்சி அடைந்த சிவன், வெனா எதிரே தோன்றி, "தவத்தை மெச்சினேன். என்னுடன் வந்து இரு. ஆனால் நீ செய்த பாவங்களின் பலனை நீ அனுபவித்துத்தான் தீர வேண்டும். அந்தகாசுரன் என்ற அசுரனாக நீ பிறப்பாய். உன்னை நான் வந்து கொல்லும் பொழுது உன் பாவங்கள் முற்றிலும் தீர்ந்து நீ விடுதலை அடைவாய்" என்று கூறினார்.

## சிவ – உமா திருமணம்

விஷ்ணுவின் ஆணைப்படி தேவர்கள் முன்னோார் களைக் குறித்துத் தவம் செய்ய முன்னோர்கள் மேனகாவைத் தந்தனர். மேனகாவை மணந்த இமவான் மூன்று பெண்களைப் பெற்றான். மூன்று பெண்களில் யார் சிவனை மணக்கத் தகுதியுள்ளவள் என்பதை அறியாத தேவர்கள் முதலில் முதல் பெண் குடிலாவை பிரம்மனிடம் அழைத்துவர, இவள் சிவனுக்கு ஏற்றவள் அல்லள் என்று பிரம்மா கூறினார். அவள் கோபித்து பிரம்மனை வசைபாட, 'ஆறாகப் போவாய்' என பிரம்மா சபித்தார். இரண்டாவது பெண்ணாகிய ராகினியை அழைத்து வர, முன்போலவே அவளும் பிரம்மன் சாபத்தினால் மாலை நேரமாக மாறிவிட்டாள். மூன்றாவது பெண்ணை அழைத்து வாருங்கள் என்று பிரம்மன் கூற, தேவர்கள்

அவளை அழைத்து வர நெருங்கினர். அவளிடம் இருந்து வெளிப்பட்ட சக்தி தேவர்களை நெருங்க விடவில்லை. அதை வந்து பிரம்மனிடம் கூற அவளே தகுதியானவள் என்று பிரம்மன் கூறினார். *(உமா அல்லது காளி என்ற இந்தப் பெண் சிவனை மணந்த கதை முன் புராணங்களில் கூறப் பட்டுள்ளது.)*

## விநாயகர் தோற்றம்

சிவனும், உமாவும் மந்தர மலையில் விஸ்வகர்மா அமைத்துத் தந்த மாளிகையில், அமைதியாக வாழ்ந்து வந்தனர். ஒரு நாள் சிவன், உமையின் மற்றொரு பெயராகிய காளி என்று கூறி அழைத்துவிட்டார். தான் கறுப்பாக இருப்பதால் தான் இப்படி அழைத்தார் என்று நினைத்து, உமாதேவி தவம் செய்யப் போனார். பிரம்மன் வெளிப்பட்டவுடன் தன்னுடைய நிறத்தை மாற்றும்படிக் கூறினார். பிரம்மன் அவ்வாறே செய்து, அவளிடம் இருந்து எடுக்கப்பட்ட கருமை நிறத்தை காத்யாயனி என்ற பெண்ணாகப் படைத்தார். உடைக்குச் சிவப்பு நிறம் வந்ததும் அவள் கௌரி என்ற பெயர் பெற்றாள்.

சிவனும், கௌரியும் ஓர் ஆண் மகவு தோற்றுவித்தால், தன் இந்திரப் பதவிக்கு ஆபத்து என்றுணர்ந்த இந்திரன், சிவன் குழந்தை பெறாமல் இருக்கப் பார்த்துக் கொண்டார். அங்கு இருந்த கௌரி, இந்திரன் மேல் கோபம் கொண்டு, சிவனுடைய உதவி இல்லாமல் தானே ஒரு ஆண் மகவை உண்டாக்கினார். அக்குழந்தையைக் கண்ட சிவன் பெரிதும் மகிழ்ந்து, நாயகனாகிய தன் உதவி இல்லாமல் பிறந்த குழந்தை ஆதலால், விநாயகன் என்று பெயரிட்டார். சிவகணங்கள் அனைத்திற்கும் தலைவனாக இருந்தமையால் கணேசன் என்றும், கணபதி என்றும் அழைக்கப்பட்டார்.

**சும்ப – நிசும்பர்கள்**

காசிப முனிவர், தனு என்ற தைத்தியப் பெண்ணை மணந்து சும்ப, நிசும்பர் என்ற மக்களைப் பெற்றனர். (இவர்களைக் காளி அழித்த கதை ஏற்கெனவே மார்க்கண்டேய புராணத்தில் கூறப்பட்டுள்ளது.)

**முராரியின் கதை**

விஷ்ணுவுக்கு முராரி என்ற பெயருண்டு என்று புலஸ்தியர் சொல்ல, அவருக்கு முராரி என்று பெயர் வரக் காரணம் என்ன என்று நாரதர் கேட்க, புலஸ்தியர் கூற ஆரம்பித்தார்.

காசியப முனிவனுக்கு, தைத்திய குலத்தைச் சேர்ந்த முரா என்றொரு மகன் இருந்தான். மூன்று உலகங்களையும் வெல்ல எண்ணிய அவன் கடுமையான தவம் புரிந்து பிரம்மனிடம் புதுமையான வரம் ஒன்றினைப் பெற்றான். அதன்படி "போர்க்களத்தில் யாரேனும் ஒருவர் மேல் நான் என் கையை வைத்தால் அவர்கள் உடனே இறந்துவிட வேண்டும்" என்றான். பிரம்மனும் அவ்வரத்தை அளித்தார். முரா இவ்வரத்தைப் பெற்றவுடன் அவனை வெல்ல முடியாது என்று அறிந்த இந்திரன், இந்திராணி, தன் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு காளிந்தி நதிக் கரையோரம் ஒரு நகரத்தை நிர்மாணித்து அதில் சென்று வாழ்ந்தான். ரகு அரசன் ஒரு யாகம் செய்து கொண்டிருந்தான். முரா அவனிடம் வலுச் சண்டைக்குப் போனான். வசிட்டர் அவனிடம், 'உனக்கு இணையான வலிமை கொண்டுள்ளவரிடமே நீ போரிட வேண்டும்' என்று கூறி யமனிடம் அனுப்பினார்.

முராவின் வலிமை பற்றி அறிந்த யமன் தன் வாகனத்தில் ஏறி விஷ்ணுவிடம் சரணடைந்தான். விஷ்ணு அவனைச் சமாதானப்படுத்தி, அந்த அசுரனைத் தன்னிடம் அனுப்பும்படிக்

கூறினார். யமனும், முராவிடம் சென்று விஷ்ணு அவனுடன் போர் புரியக் காத்திருப்பதாகவும், அவன் ஷிரோதா கடற் கரைக்குச் செல்ல வேண்டும் என்றும் கூறினான். அது கேட்ட முரா அங்கு சென்று விஷ்ணுவிடம், "உன்னிடம் சண்டை யிட வந்துள்ளேன்" என்று கூறினான். அது கேட்ட விஷ்ணு முராவிடம், "நீ என்னுடன் சண்டையிட வேண்டுமானால் உன் இதயம் ஏன் வேகமாகத் துடிக்கிறது. நீ மிகவும் பயப்படுகிறாயா? அவ்வாறு பயந்து இருக்கும் உன்னுடன் நான் சண்டையிட விரும்பவில்லை" என்று கூறியவுடன், முரா விஷ்ணு கூறிய வார்த்தைகள் உண்மைதானா என்று அறிய தன் நெஞ்சின் மீது கை வைத்துப் பார்க்கவும், பிரம்மன் வரத்தின்படி உடனே இறந்து போனான். இறந்த அவன் உடலை விஷ்ணு தன் சக்கரத்தினால் துண்டாக்கினார். முரா என்ற அசுரனைக் கொன்றதால், அன்று முதல் விஷ்ணுவுக்கு 'முராரி' என்ற பெயர் வழங்க ஆரம்பித்தது.

### அந்தகன்

அந்தகன் என்ற அசுரனைப் பற்றி நாம் முன்பே அறிந்துள்ளோம். அந்த அசுரன் ஒருநாள் பிரகலாதனுடன் மந்தர மலைக்குச் சென்ற பொழுது, பார்வதியைக் கண்டு அவளை மணந்து கொள்ள விரும்பினான். இது கேட்ட பிரகலாதன், அந்தகனிடம், "பைத்தியக்காரனைப் போல் உளறாதே. பார்வதி சிவனின் மனைவியாவார். இந்த அகில உலகத்திற்கு அவரே தாய் ஆவார். ஆகையால் நீ உன் புத்தியை மாற்றிக் கொள்" என்றான். அதைக் காதில் போட்டுக் கொள்ளாத அந்தகன் பார்வதியைத் தாக்க நினைத்து அங்கு சென்றான். சிவனின் நண்பனாகிய நந்தி, அந்தகனைத் தடுக்க, கோபம் கொண்ட அசுரன் நந்தியைக் கலப்பையால் அடித்து மயக்கமுறச் செய்தான்.

இதை அறிந்த பார்வதி ஒரே மாதிரி தோற்றம் தரக் கூடிய நூறு உருவங்கள் பெற்றார். அங்கு வந்த அந்தகன் உண்மையான பார்வதியைக் கண்டுபிடிக்க முடியாமல் சோர்ந்து போனான். இத்தருணத்தைப் பயன்படுத்திக் கொண்ட பார்வதி அவனை ஓர் ஆயுதத்தால் வீழ்த்தினார். அந்தகன் மயக்கமுற்றுக் கிடந்த சமயத்தில் பார்வதி அவ்விடத்தை விட்டுச் சென்று விட்டார். நீண்ட நேரத்திற்குப் பிறகு கண் விழித்த அந்தகன், பார்வதியைக் காணாமையால் ஏமாற்றத்துடன் பாதாளலோகம் திரும்பினான். சில நாட்கள் கழிந்தன. அந்தகன் பார்வதியை மறக்க முடியாததால், தன் படைகளைக் கூப்பிட்டு, பார்வதியைக் கவர்ந்து கொண்டு வருபவர்களுக்குத் தக்க பரிசுகள் வழங்கப்படும் எனக் கூறினான்.

இதைக் கேட்ட பிரகலாதன் அந்தகனிடம், "உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. பார்வதி உன் தாய் என்பதையும், சிவன் உன் தந்தை என்பதையும் நீ மறந்துவிட்டாய். இப்போது அதை உனக்குச் சொல்லப் போகிறேன்" என்று கூறி, சொல்லத் துவங்கினான் பிரகலாதன்.

ஒருமுறை சிவன் தனியே வீற்றிருக்கும் பொழுது, பார்வதி பின்புறமாக வந்து அவர் கண்களைப் பொத்தினார். அண்டங்கள் முழுவதும் இருண்டன. சிவனுடைய உடம்பி லிருந்து ஒரு பிள்ளை உதயமானான். ஹிரண்யாக்ஷன், பிள்ளை இல்லை என்று தவம் செய்தபொழுது சிவன் தோன்றி, "இந்த ஜென்மத்தில் உனக்குப் புத்திரபாக்கியம் இல்லை. என்னிடம் கண் இல்லாத ஒரு பிள்ளை இருக்கிறான். அவனை உன் மகனாக ஏற்று வளர்ப்பாயாக" என்றார். சிவன் பார்வதி இருவருக்கும் மானசீகமாகப் பிறந்தவன் நீ. பிறர் மனைவியை விரும்புவது பெருங்குற்றம். அல்லாமலும் உன் தாயின் இடத்தில் இருக்கின்றவளை விரும்புவது பெரும் பாதகம் என்று

கூறிவிட்டு, பிறன் மனைவியை விரும்புவது எவ்வளவு தவறு என்பதற்கு ஒரு கதை கூறினான் பிரகலாதன்.

**தண்டா**

தண்டா என்ற தைத்திய மன்னன் ஒருமுறை தன் குருவான சுக்ராச்சாரியார் மகளைப் பார்த்தான். உடனே அவளை விரும்பி மணம் செய்து கொள்ளக் கேட்டான். அரஜா என்ற அப்பெண், என் தந்தையைக் கேள். மேலும் என் தந்தை உனக்கு குரு ஆவார். குருமகள் உனக்குத் தங்கை முறை ஆவாள். எனவே நீ விரும்புவது சரியன்று என்றாள். அதற்கு இசையாத அவன் மேலும் வற்புறுத்தவே என் தந்தை வெளியூர் சென்றிருக்கிறார். அவர் வந்தவுடன் அவருடைய உத்தரவைக் கேட்டுக் கொண்டு என்னை மணந்து கொள் என்றாள். தண்டன் குருவின் மகளைத் திருமணம் செய்து கொள்வது புதிதன்று. தந்தையின் உத்தரவுப்படிதான் செய்யவேண்டும் என்ற அவசியம் இல்லை என்பதை வலியுறுத்துவதற்காகச் சித்ராங்கதாவின் கதையைக் கூறினான்.

சித்ராங்கதா, விஸ்வகர்மாவின் மகள், சுரதா என்ற ராஜ குமாரனை மணம் செய்து கொள்ள நினைக்கையில், விஸ்வகர்மா ஊரில் இல்லை. அவன் வரும்வரை காத்திராமல் இருவரும் மணம் செய்து கொண்டனர். வந்த விஸ்வகர்மா நடந்ததைக் கேள்வியுற்று, உன் கணவனைப் பிரிந்து வாழ்வா யாக என்று சாபமிட்டார். அந்தச் சாபத்தின்படி ஆற்றுத் தண்ணீரில் சுரதா அடித்துக்கொண்டு போகப்பட்டான். விஸ்வகர்மா சாபப்படி, அவள் தனிமையில் வாழ நேரிட்டது என்று அவன் கூறியதும், தண்டா இடைமறித்து, இவ்வளவு தான் உனக்குத் தெரியும். இதற்கு மேல் நான் சொல்கிறேன். தண்ணீரோடு போன சுரதா கரை ஒதுங்கிப் பிழைத்துக் கொண்டான். சித்ராங்கதா ரிதத்வஜா என்ற முனிவரை

அனுகி அவரது உதவியால் தண்ணீரில் சென்று தப்பித்துக் கொண்ட தன் கணவனை அடைந்து வாழத் தொடங்கினாள் என்று சொல்லி, சுக்ராச்சாரியார் மகள் வாயை அடைத்தான். இந்தக் கதையினைச் சொல்லி, தண்டா பிடிவாதமாக அரஜாவை மணந்து கொண்டார். யாத்திரையில் இருந்து மீண்ட சுக்ராச்சாரி, தண்டாவையும், அவன் நாட்டையும் எரித்து விட்டார். தண்டனுடைய நகரம் இருந்த இடம் சுக்ராச்சாரியாரால் எரிக்கப்பட்டதால் ஒரு காடு முளைத்தது. அதற்குத் தண்டகாரண்யம் என்ற பெயர் வந்தது. தண்டன் பெரிய தவறு இழைத்ததால், தண்டகாரண்யம் என்ற அவ்விடத்திற்கு தேவர்கள் செல்ல மாட்டார்கள்.

**அந்தகன் தோல்வி**

பிரகலாதன் எவ்வளவு சொல்லியும் அந்தகன் புத்திமதி கேட்கவில்லை. பார்வதியை மணந்து கொள்ள வேண்டும் என்ற அவன் எண்ணம் மாறவில்லை. சம்பரன் என்ற அசுரனை சிவனிடம் தூது அனுப்பினான். சிவனிடம் சென்ற சம்பரன் "எங்கள் அரசன் அந்தகன் மூன்று லோகத்திற்கும் தலைவன். அவன் அதிகாரத்தின் கீழ்தான் மந்தர மலை இருக்கிறது. இதில் நீங்கள் வாழ விரும்பினால் பார்வதியை எங்கள் அரசிடம் ஒப்படையுங்கள் என்று கூறினான். இதைக் கேட்ட சிவன், "எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை. நீ சென்று பார்வதியைக் கேட்டுவிடேன்" என்று கூறினார். சம்பரன் பார்வதியைப் பார்த்துக் கேட்க, அவர் சிவனும், அந்தகனும் போரிட வேண்டும் என்றும், வெற்றி பெறுபவரை மணந்து கொள்வதில் தனக்கு ஆட்சேபணை இல்லை என்றும் கூறினார்.

சம்பரன் சென்று அந்தகனிடம் நடந்தவற்றைக் கூற, அவன் போருக்குத் தயாரானான். மாபெரும் படையைத் திரட்டிக்

கொண்டு மந்தர மலைக்கு வந்தான். சிவனுடைய கணங்கள் நந்தியின் தலைமையில் போர்புரிய வந்தன. மருத்துக்கள், ருத்திரர்கள், ஆதித்தர்கள் ஆகிய அனைவரும் சிவன் பக்கம் நின்றனர். விஷ்ணுவின் படைகளும், சக்கரமும் இப்பக்கத்தில் நின்றன. போர் தொடங்கியவுடன் நந்தியும் கணங்களும் அந்தகன் படைகளை ஆயிரக்கணக்கில் கொன்று குவித்தன. ஆனால் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. கொல்லப்பட்ட அனைவரும் மீண்டும் போராட வந்தனர். சுக்ராச்சாரியின் சஞ்சீவினி மந்திரத்தால் இறந்தவர்கள் எழுப்பப்படுவதை சிவனிடம் நந்தி கூற, சுக்கிராச்சாரியாரைக் கொண்டுவருமாறு சிவன் பணித்தார். நந்தி சுக்ராச்சாரியாரை இழுத்து வர, சிவன் சுக்ராச்சாரியாரை விழுங்கி விட்டார். சுக்ராச்சாரியார் இல்லாததால் அந்தகன் படைகள் வெகு விரைவில் காலியாயின. இறுதியில் அந்தகன் சிவனிடம் நேரிடையாகப் போரிட்டான். சிவன் அந்தகனை திரிசூலத்தால் குத்தி ஆகாயத்தில் ஏற்றிவிட்டார். சாகப்போகும் வேளையில் சிவனிடம் மன்னிப்புக் கேட்டு சிவபக்தனாக மாறிவிட்டான். அவனே மறுபிறப்பில் பிருங்கி முனிவனாகத் தோன்றினான்.

(இதற்குப் பிறகு மருத்துக்களின் கதை முன்னரே மற்ற புராணங்களில் கொடுக்கப்பட்டுள்ளதால் இங்கு எழுதப் பெறவில்லை.)

### துந்துவின் கதை

(மாவலி கதையின் வேறுபட்ட கதை) தனு, காசியப முனிவர் தம்பதிகளின் மகன் துந்து என்னும் அரக்கன். அவன் பிரம்ம தேவனைக் குறித்துத் கோரத்தவம் செய்து தேவர்களால் தனக்கு மரணம் ஏற்படாதவாறு வ. ம் பெற்றான். துந்து இந்திரனை வென்று அப்பதவியைப் பெற்றான். இந்திரன் தேவர்களுடன் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள பிரம்மாவின் இருப்பிடமாகிய சத்திய லோகம் சென்று அடைந்தான்.

அதையறிந்த அரக்கன் துந்து படைத்தலைவனிடம் பிரம்ம லோகம் அடைந்து தேவர்களைத் துரத்தித் தங்க இடமின்றிச் செய்ய வேண்டும் என்றான். பிரம்மலோகம் செல்லும் வழியில் ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்கள் பற்றி அவர்கள் எடுத்துரைத்தனர்.

அரக்கன் சுக்கிராச்சாரியாரை அடைந்து, பிரம்மலோகம் செல்ல என்ன செய்ய வேண்டும் என்று கேட்க, அவர், இந்திரன் நூறு அசுவமேத யாகங்கள் செய்து அந்தச் சக்தியை அடைந்தான் என்றார். உடனே துந்துவும் நூறு அசுவமேத யாகங்கள் செய்யும் முயற்சியில் ஈடுபட்டான்.

அப்படியானால் ஒரே நேரத்தில் நூறு அசுவமேத யாகங்களைச் செய்ய ஏற்பாடு செய்யுங்கள் என்றான் துந்து. அதற்குரிய ஏற்பாடுகள் நடைபெறும் செய்தி சத்யலோகத்தை எட்டவே, தேவர்கள் அஞ்சி நடுங்கினர். பிரம்மனிடம் சென்று முறையிட, பிரம்மன் துந்துவின் வரபலம் அறிந்தவர் ஆதலால் அவனைக் கொல்ல முடியாது, எல்லோரும் சென்று விஷ்ணுவிடம் முறையிட்டால் ஏதாவது வழி பிறக்கும் என்று கூறினார். அனைவரும் விஷ்ணுவிடம் சென்றனர். அவர்கள் குறை கேட்ட விஷ்ணு 'அஞ்ச வேண்டாம். துந்துவைக் கொல்ல முடியாது என்றாலும், அடக்கி வைக்கிறேன்' என்றார்.

அனைத்து ஏற்பாடுகளும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது, குள்ளன் வடிவத்தில் ஒரு இளைஞன் தோன்றினான். அதைக் கண்ட அசுரர்கள் ஓடிச் சென்று அவனைக் காப்பாற்றி துந்துவின் எதிரிலே நிறுத்தினர். துந்து, குள்ளனைப் பார்த்து 'உனக்கு ஏன் இந்த நிலை ஏற்பட்டது?' என்றான்.

வாமனன் (குள்ளன்) தன் கதையைச் சொல்லத் தொடங்கினான்: "பிரபசா என்ற பிராமணனுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தனர். நேத்ரபாசா, கதிபாசா என்றும்

அழைக்கப்பட்டனர். தந்தை இறந்தவுடன் பாகப் பிரிவினையில் தகராறு எழுந்தது. 'வீட்டின் பாதிப்பகுதி எனக்குச் சேர வேண்டும்' என்று நான் கூறியவுடன் என் அண்ணன், 'குள்ளன் முழுமனிதன் அல்லன். ஆகவே அவனுக்கு ஒரு பங்கு தருவது என்பது அர்த்தமற்ற செயலாகும்' என்று கூறினான். நான் பிடிவாதமாக என் பங்கைத் தரவேண்டும் என்று கேட்டதற்கு என்னைத் தூக்கி ஆற்றில் எறிந்து விட்டான்'' என்று கூறி முடித்தான்.

இதைக் கேட்ட துந்து, மிகவும் மனம் வருந்தி "கவலைப் படாதே! உனக்கு எவ்வளவு நிலம் வேண்டுமோ, அது எந்த இடத்தில் வேண்டுமோ அங்கு உனக்குத் தருகிறேன்" என்றான். குள்ளன் பயந்தவன் போல, உடலைச் சுருக்கி வளைத்துக் கொண்டு, "எங்கே எனக்கு இடம் கொடுத்தாலும் என் அண்ணன் பிடுங்கிக் கொள்வான். ஆகவே என் கால் அளவால் மூன்றடி நிலம் தந்தால் போதுமானது" என்றான். துந்து ஒப்புக் கொள்ள வாமனன் விஸ்வரூபம் எடுத்து பூமியை ஓர் அடியாகவும், ஆகாயத்தை ஓர் அடியாகவும் அளந்த பிறகு மூன்றாவது அடியை துந்துவின் முதுகில் வைத்து அழுத்த பூமியில் ஒரு பெரிய பள்ளம் தோன்றி அதில் துந்து வீழ்த்தப்பட்டான். அங்கு துந்து கயிற்றால் கட்டப்பட்டு, தொங்க விடப்பட்டான்.

### புரூரவர்களின் வரலாறு

சந்திர வம்சாவளியின் முதல் அரசன் புரூரவன் ஆவான். அம்மன்னனின் பழைய வரலாற்றை, வாமன புராணம் பேசுகிறது.

மத்ரா அரசாட்சியில், சகலா என்றொரு நகரம் உள்ளது. அந்நகரத்தில் தர்மா என்ற பெயருள்ள வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் சாஸ்திரங்களை நன்கு கற்றவனாகவும்,

நேர்மையான குணம் கொண்டவனாகவும் இருந்தான். வாணிபம் செய்யும் பொருட்டு சௌராஷ்டிரா என்ற இடத்திற்குச் சென்றான். வழியே செல்லும் பொழுது, தர்மாவிடம் இருந்த பொருட்கள் அனைத்தும் களவு போயின. தர்மா பல இடங்களில் சுற்றிவிட்டு, முடிவில் க்ஷமி மரத்தின் அடியில் வந்து சேர்ந்தான். அம்மரத்தில் பறவைகள் எதுவும் இல்லை. அங்கு வந்த தர்மா களைப்பின் காரணமாக உறங்கிவிட்டான்.

உறங்கி எழுந்தவுடன், அங்கு ஒரு பேய் அந்த மரத்தை நோக்கி வருவதைக் கண்டான். அந்தப் பேயைச் சுற்றி ஆயிரக்கணக்கான பேய்கள் உடன் வந்தன. முதலில் வந்த தலைவனாகிய பேய், தர்மாவை நோக்கி, "நீ யார்? எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டது. தர்மா தன் கதையைக் கூற, மிகவும் மனம் வருந்திய அப்பேய், அவனுக்கு விருந்தினைத் தயார் செய்யும்படி மற்றப் பேய்களிடம் கூறிற்று. அப்பேய் கூறிய மறுவிநாடி, இரு பாத்திரங்களில் பலவித உணவு மற்றும் தண்ணீர் கொண்டுவரப்பெற்றது. அவை அனைத்தையும் தர்மா உண்டு முடித்தான். உணவு உண்ட பின்பு, அந்தப் பேய்களின் தலைவனிடம், "இந்த உணவு, நீர் எங்கிருந்து வந்தது? நீங்கள் யார்? எவ்வாறு இந்த வனாந்திரத்திற்கு வந்தீர்கள்? உங்கள் கதையினைக் கூறுங்கள்" என்று கேட்க, அத்தலைவன் கூற ஆரம்பித்தான். "நண்பனே! முன் ஜென்மத்தில் நான், சகலா என்ற ஊரில் சோமசர்மா என்ற பெயருடன் வசித்து வந்தேன். வணிகம் செய்வது எனது தொழில். சோமஷ்ரவா என்ற பெயருடைய நண்பன் என் வீட்டின் பக்கத்தில் இருந்தான். அவன் விஷ்ணு பக்தன். நான் மிகவும் கஞ்சனாகவும், யாருக்கும் தானம் எதுவும் கொடுக்காமல் இருந்தேன்.

ஒரு சமயம், பல யாத்ரிகர்களோடு சோமசர்மாவாகிய நான் பல தீர்த்தங்கள் சென்றேன். அச்சமயம் பசியால் வாடிய

ஒருவனுக்குச் சிறிது உணவும் நீரும் கொடுத்தேன். நான் கொடுத்த உணவு, பேய்களுக்காக வைக்கப்பட்ட உணவாகும். ஆதலால் நான் இறந்தவுடன், பேயாக மறுபிறப்பில் பிறந்தேன். போன ஜென்மத்தில், நான் உணவும், நீரும் தானமாகக் கொடுத்ததால், இந்த ஜென்மத்தில் எனக்கு உணவுக்கும் நீருக்கும் பஞ்சமில்லை. அத்துடன் ஒரு குடையையும் தானமாகக் கொடுத்திருந்தேன். அதுவே க்ஷமி மரமாக மாறியுள்ளது. மற்றவர்கள் எந்த தானமும் முன் ஜென்மத்தில் செய்யாததால், இங்கு பேய்களாக மாறி உலவுகின்றனர்.

உடனே தர்மா, உங்களை எவ்வாறு இந்த வாழ்க்கையி னின்று விடுவிப்பது என்று கேட்டான். சோமசர்மா கூறியபடி தர்மா கயைக்குச் சென்று சோமசர்மாவின் இறுதிக் கடனைச் செய்ய, சோமசர்மாவும், அவன் நண்பர்களும் சாபத்தினின்று விடுதலை செய்யப்பட்டனர். தர்மா அதன் பிறகு சிலகாலம் சொர்க்கத்தில் இருந்து, புரூரவா அரசனாகப் பிறந்தான்.

**உபமன்யுவும், ஸ்ரீதமாவும்**

முன்னொரு காலத்தில் விதமன்யு என்றொரு பிராமணன் வசித்து வந்தான். அவன் மனைவி ஆத்ரேயி. இவர்களுக்கு உபமன்யு என்றொரு மகன் இருந்தான். அவர்கள் மிகவும் ஏழையாக இருந்த காரணத்தினால், அக்குழந்தைக்குப் பாலினைக் கொடுக்க அவர்களால் முடியவில்லை. ஆதலால் ஆத்ரேயி கஞ்சி தயாரித்து, அதனைப் பால் என்று கூறி உபமன்யுவைக் குடிக்குமாறு செய்து வந்தாள்.

ஒரு சமயம், உபமன்யுவும், அவன் தந்தையும் செல்வந்த னாகிய ஒரு பிராமணன் வீட்டிற்குச் சென்றனர். உபமன்யு, அதன்பிறகு தன் தாய் கொடுத்த கஞ்சியைக் குடிக்க மறுத்தான். வேறுவழி தெரியாத ஆத்ரேயி, மகனிடம் “நீ நல்ல பாலினைக் குடிக்க விரும்பினால், சிவனை ஜெபிக்க வேண்டும்.

விஷ்ணுவும் சிவனிடம் வேண்டித்தான் தனக்குத் தேவையான வற்றைப் பெற்றார். இதற்கு ஒரு கதை சொல்கிறேன் கேள்" என்று கூறினார்.

வெகு காலத்திற்கு முன்பு ஸ்ரீதமா என்ற அசுரன் இருந்தான். அவன் விஷ்ணுவையே வென்று விடுவதாக பயமுறுத்தி வந்தான். விஷ்ணுவும் உடனே சிவனிடம் சென்று வேண்ட, சிவபெருமான் சுதர்சன சக்கரத்தைக் கொடுத்தார். அதைக் கொண்டு விஷ்ணு தன் எதிரிகளை சுலபமாக அழித்துவிட முடியும் என்றும் கூறினார் சிவபெருமான். உடனே விஷ்ணு, 'சிவபெருமானே! நீர் சொல்வது உண்மை தான் என்று எப்படி நான் தெரிந்து கொள்ள முடியும். ஆகையால் உம்மையே முதலில் சோதித்துப் பார்க்கிறேன்' என்று கூறி, சக்கரத்தை ஏவிவிட, சக்கரம் சிவன் உடம்பை மூன்று கூறுகளாகப் பிரித்தது. அவை ஹிரண்யக்ஷா, சுவர்ணக்ஷா, விஸ்வரூபக்ஷா என்ற பெயருடன் அனைவ ராலும் வணங்கப் பெற்றது. சிவபெருமான் அழிக்க முடியாதவர் என்பது ஐயத்திற்கு இடமின்றித் தெரியு மாதலால், சக்கரம் உண்மையில் சிவபெருமானுக்கு எந்தத் துன்பத்தையும் இழைக்கவில்லை. விஷ்ணு, சிவபெருமானைச் சந்தேகப்பட்டதால் அவரிடம் மன்னிப்புக் கேட்டார். பிறகு சக்கரத்தைக் கொண்டு ஸ்ரீதமாவை வென்றார்.

உபமன்யுவின் வேண்டுதலில் உள்ளம் மகிழ்ந்த சிவபெருமான் அவனுக்கு என்றென்றும் பால் கிடைக்க அருள்புரிந்தார்.

**நிஷாகரா**

முன்னொரு காலத்தில் . கோஷகரா என்றொரு பிராமணன் வசித்து வந்தான். அவன் மனைவி பெயர் தர்மிஷ்டா. இவர்களுக்குக் கண் தெரியாத, வாய் பேசாத

குழந்தை ஒன்று பிறந்தது. அக்குழந்தையைச் சிறிதும் விரும்பாத தர்மிஷ்டா, ஆறு நாட்களே ஆகி இருந்த அக்குழந்தை யைத் தன் வீட்டின் வெளியே கொண்டு சென்று விட்டு விட்டாள்.

அப்பொழுது அங்கு வந்த அரக்கி உருவம் கொண்ட பெண், அக்குழந்தையை எடுத்துக் கொண்டு, தன் குழந்தையை அங்கே விட்டுச் சென்றது. தான் எடுத்துச் சென்ற குழந்தை யைத் தன் கணவனிடம் காண்பிக்க, அவன் மனைவியிடம், “முட்டாளே! கோஷகரா என்ற பிராமணன் மிகவும் சக்தி வாய்ந்தவன். நடந்ததைத் தெரிந்து கொண்டு அவன் உனக்குச் சாபமிடுவான். ஆதலால் உடனே சென்று இந்தக் குழந்தையை விட்டு விட்டு வா” என்று கூறினான்.

அரக்கியின மகன், கோஷகராவின் வாசலில் குளிரினால் பெருங் குரலெடுத்து அழத் துவங்கினான். ஊமையான தன் குழந்தை சப்தம் செய்வதைக் கண்ட தர்மிஷ்டா தன் கணவனை அழைக்க, அவன் வந்து அக்குழந்தையைப் பார்த்தவுடன் அது தங்கள் குழந்தையன்று என்பதை அறிந்து கொண்டான். சில மந்திரங்களைக் கூறியவுடன் அக்குழந்தை தன் அழுகையை நிறுத்திற்று. அரக்கியும், அப்பிராமணர் மகனைக் கொண்டு வந்து கொடுத்து விட்டாள். ஆனால் அவளது குழந்தை, பிராமணன் மந்திரத்தில் கட்டுண்டு கிடந்ததால், அரக்கியால் தன் குழந்தையைத் திரும்பப் பெற முடியவில்லை. அப் பிராமணன் தன் குழந்தைக்கு நிஷாகரா என்றும், அரக்கியின் குழந்தைக்கு திவாகரா என்றும் பெயர் சூட்டினான். சிலகாலம் கழித்து அவர்கள் இருவருக்கும், கோஷகரா வேதங்கள் முதலியவற்றைப் பயிற்றுவித்தான். அவன் மகனாகிய நிஷாகரா மிகவும் மந்த புத்தி உள்ளவனாக இருந்தான். கோபம் கொண்ட பிராமணன் தன் மகனை ஒரு பாழுங்கிணற்றில் வீசி, அதனை ஒரு கல் கொண்டு மூடிவிட்டான். அவனது மனைவி

தர்மிஷ்டாவும் குழந்தை காணாமல் போய்விட்டதாக நினைத்துக் கொண்டாள்.

நிஷாகரன், அக்கிணற்றினுள் நீண்ட காலம் தங்கி இருந்தான். அதில் ஒரு மரம் நிறைந்த பழங்களுடன் இருந்ததால், அதனைத் தின்று வாழ்ந்து வந்தான். பத்து வருடங்கள் சென்றன. தர்மிஷ்டா ஒருநாள் அந்த வழியே செல்லும் பொழுது, ஒரு கல்லினை வைத்து அக்கிணற்றினை மூடி இருப்பது கண்டு, 'இதனை யார் கல் கொண்டு மூடி யிருக்கிறார்கள்' என்று பெருங்குரலில் கேட்க, கிணற்றின் உள்ளிருந்த நிஷாகரா, "அன்னையே! தந்தைதான் இக்காரியம் செய்தார்" என்று கூறினான். இதைக் கேட்ட தர்மிஷ்டா மிகவும் வியப்படைந்து, தன் மகனை வீட்டிற்கு அழைத்து வந்தாள். நிஷாகரா தன்னுடைய பழங்கதையினை அவர்களுக்கு விவரித்தான்.

தன்னுடைய முற்பிறவிகளில் பெரிதும் பாவம் செய்ததின் காரணமாக நரகத்தில் பலகாலம் இருந்து, பிராமணன், புலி, கழுதை, பறவை, எருது ஆகிய பல பிறவிகள் எடுத்து இறுதி யாக நிஷாகரா என்ற பெயரில் கோஷகராவிற்கு மகனாகப் பிறந்தான். ஜதிஸ்மரா என்னும் பழம் பிறப்பு அறியும் சக்தி பெற்றிருந்தமையால், அவனுக்குப் பழம்பிறப்புகள் பற்றித் தெரிந்தன. பத்து வருடங்கள் கிணற்றினுள் இருந்த பொழுது தன் தவறுகளுக்காகப் பெரிதும் வருந்தியதில் பேசும் சக்தி யையும், கேட்கும் திறனையும் பெற்றான். இனி அவன் நேர்மையான வாழ்க்கை வாழப்போவதாகக் கூறினான்.

மற்ற புராணங்களைப் போலவே, வாமன புராணத்தின் சிறப்பைப் பற்றியும், அதனைப் படிப்பதால் ஏற்படும் நன்மைகள் பற்றியும் புலஸ்திய முனிவர் நாரதருக்குக் கூறி முடித்தார்.

# 15. கூர்ம புராணம்

## இப்புராணம் பற்றி...

*விஷ்ணு கூர்ம அவதாரம் எடுத்து மன்னன் இந்திரத் துய்மனுக்குச் சொல்லியதே இப்புராணமாகும். இப்புராணத்தில் பக்திமார்க்கத்தில் கடைப்பிடிக்க வேண்டிய வழிகள், பரப்பிரம்மம் பற்றிய ஞானம், ஆன்ம விடுதலை அடைய செய்யப்பட வேண்டிய ஆன்மிகப் பயிற்சிகள் என்பவை பற்றிப் பேசப்பெறுகிறது. நைமி சாரண்ய வனத்தில் கூடிய முனிவர்களுக்கு, விஷ்ணு கூறியவற்றை லோமஹர்ஷணர் கூறினார்.*

*கூர்ம புராணத்தின் அழிந்துபோன மூலப் பகுதியில் பிராமி, பாகவதம், சௌரி, வைஷ்ணவி என்ற நான்கு பிரிவுகள் இடம் பெற்றிருந்தன. ஆனால் இப்பொழுது கிடைக்கும் கூர்ம புராணத்தில் பிராமி சம்ஹிதை மட்டுமே உள்ளது. இதில் 6,000 பாடல்கள் மட்டுமே உள்ளன.*

*இந்து சமயத்தின் மூன்று முக்கியப் பிரிவுகளான சைவம், வைணவம், சாக்தம் என்பவை பற்றிப் பல செய்திகளை இப்புராணம் கூறுகிறது. சைவ, வைணவப் போராட்டத்திற்கு அப்பாற்பட்டு, வேற்றுமையில் ஒற்றுமை காணும் ஒரு முயற்சி. அதாவது சிவன், விஷ்ணு ஆகிய இருவரும் வெவ்வேறானவர் அல்லர், ஒருவரே என்ற*

*ஒருமைப்பாட்டை மிகவும் அழுத்தமாகக் கூறுவது இப்புராணமே ஆகும். இறைவன் ஒருவனே ஆனாலும் அவனுக்குப் பல பெயர்கள் இருப்பது போல, விஷ்ணு சிவன் ஆகிய இரு பெயர்கள் இருப்பினும், இருவரும் ஒருவரே ஆவர் என்றும், வேற்றுமை பாராட்டுவது தவறு என்றும் கூறுவது இப்புராணமே ஆகும். சக்தி வழிபாடு செய்யும் சாக்தம் வேறு அன்று என்றும், சக்தி என்பது சக்திமானிடம் இருப்பது போல சக்தி எனப்படும் பெண் தெய்வமும், சிவனிடம் அடக்கம் என்றும் இப்புராணம் கூறுகிறது.*

**நை**மிசாரண்ய வனத்தில் முனிவர்கள் கூடி யாகம் செய்ய ஆரம்பித்தனர். அங்கு இருந்த லோமஹர்ஷனரைப் பார்த்து, "வேதவியாசரின் சீடராகிய தாங்கள் எல்லாப் புராணங்களைப் பற்றியும் அறிந்தவர். எங்களுக்குக் கூர்ம புராணம் பற்றி விளக்க வேண்டும்" என்று கேட்க, லோமஹர்ஷனர் கூற ஆரம்பித்தார்.

கூர்ம புராணம், மஹா புராணங்களில் பதினைந்தாவது புராணமாகும்.

### லட்சுமியின் தோற்றம்

வெகு காலத்திற்கு முன்னர், தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைய ஆரம்பித்தனர். மந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பினை நாண் ஆகவும் வைத்துக் கடைய ஆரம்பித்தனர். மந்தர மலை தங்குவதற்கு விஷ்ணு கூர்ம அவதாரம் எடுத்து, தன் முதுகில் மலையைத் தாங்கிக் கொண்டார். கடலைக் கடைந்த பொழுது, செல்வத்திற்கு அதிபதியான லட்சுமிதேவி வெளிப்பட்டு, விஷ்ணுவுடன் கலந்தார். இந்திரனும், மற்ற தேவர்களும், முனிவர்களும் லட்சுமியின் அழகைக் கண்டு திகைத்து, 'யார்' என்று

கேட்டனர். அதற்கு விஷ்ணு, "இவரே லட்சுமி ஆவாள். சக்தி என்றும் அழைக்கப்படுவார். லட்சுமியின் உதவியுடனேயே நான் இந்த உலகத்தையும், அதில் உள்ள மக்களையும் என்னுடைய மாயையினால் உண்டாக்கி இருக்கிறேன். இலட்சுமி என்னிலிருந்து வேறுபட்டவள் அல்லள் என்றாலும், இலட்சுமியே எனக்கு எல்லா சக்தியும் கொடுப்பவள்' என்று கூறி, இந்திரத்துய்மன் கதையை விஷ்ணு கூற ஆரம்பித்தார்.

**இந்திரத்துய்மன்**

வெகு காலத்திற்கு முன்னர், இந்திரத்துய்மன் என்ற அரசன் ஒருவன் இவ்வுலகை ஆண்டு வந்தான். இவ்வரசன் இறந்து, அடுத்த பிறவியில் ஒரு பிராமணனாகப் பிறந்தான். நேர்மையும், நல்லொழுக்கமும் கொண்ட இப்பிராமணன், நீண்ட நாட்கள் தவம் செய்து வந்தான். தவத்தின் முடிவில் இலட்சுமி தோன்றினார். இந்திரத்துய்மன் லட்சுமியைப் பார்த்து, "அன்னையே! தங்களைப் பற்றி தயவு செய்து சொல்லுங்கள். உண்மையான ஞானம் எப்படிப் பெறுவது என்பதைக் கூற வேண்டும்" என்று மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

லட்சுமியும், இந்திரத்துய்மனிடம், தேவர்கள், முனிவர்கள் யாராலும் அறியப்படாதவள் நான். நானே விஷ்ணுவின் மாயை ஆவேன். விஷ்ணுவுக்கும், எனக்கும் எவ்வித வேறுபாடும் இல்லை. ஞானம் என்பதைப் பற்றிச் சொல்வதற்கு, நீ விஷ்ணுவைத் தியானம் செய். அவர் ஒருவராலேயே அதனைக் கூறமுடியும் என்று கூறி மறைந்தார்.

இந்திரத்துய்மனும் விஷ்ணுவை தியானித்து வந்தான். பல ஆண்டுகளுக்குப் பின்னர், விஷ்ணு தோன்றினார். இந்திரத் துய்மனுக்கு உண்மையான ஞானம் பெறும் வழியினைச்

சொல்லிக் கொடுத்தார். உடனே முனிவர்களும், தேவர்களும் அதைப்பற்றித் தங்களுக்கும் சொல்ல வேண்டும் என்று விரும்பிக் கேட்க, விஷ்ணுவும் அவர்களுக்காக மறுமுறை கூற ஆரம்பித்தார். ஞான மார்க்கத்தைப் பற்றிக் கூறும் பொழுது விஷ்ணு ஆமையாக உருவம் பெற்றிருந்ததால், அவர் கூறிய தெய்விக வார்த்தைகள் கூர்ம புராணம் என்று பெயர் பெற்றது. மூலப் பரம்பொருளின் இருப்பையும், இயல்பையும் நன்கு அறிந்து கொண்டபின், அதனுடைய வியாபகத்தை அறிய வேண்டும். இம்மூன்றையும் அறிந்த பிறகு நூல்களில் சொல்லப்பட்டபடி நேர்மையான வாழ்க்கை வாழ்ந்து தர்மத்தைக் கடைப்பிடித்து, அதிலிருந்து வழுவாமல் வாழ வேண்டும். ஒடுக்கப்பட்டவற்றை, வாழ்வில் இருந்து ஒதுக்கி, அண்ட முழுவதும் வியாபித்து இருக்கின்ற மூலப் பொருள் களுக்கும் நமக்கும் உள்ள தொடர்பை நன்கு அறிய வேண்டும். உலகமும் அதில் காணப்படும் பொருள்களும் மாயை என்றே நன்கறிய வேண்டும். இவ்வாறு செய்தால், அனைத்தையும் ஆட்டிப் படைக்கின்ற பரம்பொருளின் இயல்பை ஒருவாறு உணரமுடியும்.

பிராமணனே! நான் சொல்லியபடி தியானம் என்பதை மூன்று வகையாகப் பிரித்து உணர வேண்டும். இதில் முதல் வகை என்னையே வழிபடு பொருளாகக் கொண்டு தியானிப்ப தாகும். இரண்டாவது வகை அருவமாக உள்ள பரம் பொருளை தியானிப்பதாகும். மூன்றாவது தியானம், பிராமி எனப்படும் முக்குணங்களையும் கடந்ததை தியானிப்பதாகும். ஆன்மிகத் துறையில் வளரும் ஒருவன் மேலே சொல்லிய மூன்றில் ஒருவகை தியானத்தை மேற்கொள்ள வேண்டும். மனத் திடம் இல்லாதவர்களே முதல்வகை தியானத்தை மேற்கொள்ள வேண்டும். உலக பந்த பாசங்களினின்று நீங்கி, மனித முயற்சி அனைத்தையும் இந்த ஒரே துறையில் செலுத்தி,

அந்த மூலப் பொருளையே குறிக்கோளாகக் கொண்டு தியானம் செய்ய வேண்டும்.

### இந்திரத்துய்மன் வினா

"ஓ ஜனார்தனா! எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற சத்தியப் பொருள் யாது? முழு நிறைவுடன் கூடிய பொருள் யாது? பயன் என்று சொல்லுகிறாயே, அது எது? அனைத் திற்கும் மூலகாரணம் யாது? நீ யார்? உன் தொழில் யாது?"

### பிரபுவின் பதில்

"மிக உயர்ந்த சத்தியப் பொருள் என்பது பரப்பிரம்மமே ஆகும். எவ்வித மாறுதலும், திருத்தி அமைக்கப்படும் இயல்பும் இல்லாததே அப்பொருளாகும். நிரதிசய இன்பம் என்பதும் அதுவேயாகும். அஞ்ஞான இருளைக் கடந்து நிற்கும் ஒளிப் பிழம்பு அதுவே ஆகும். அதனுடைய என்றும் அழியாப் புகழும், பிரபஞ்சத்தை ஆளும் இயல்பும், முழு நிறைவுடன் கூடிய அதன் சிறப்பாகும். மூலகாரணம் என்பது வெளிப்படாமலும், அழியாமலும், தூய்மை கெடாமலும் உள்ள பெருஞ்சக்தியே ஆகும். அச்சக்தியின் பயன் அல்லது விளைவு இப்பிரபஞ்சமே ஆகும். எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாய் நிற்கும் ஆத்மன் நானே ஆகும். இப்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல், காத்தல், அழித்தல் ஆகியவையே என்னுடைய செயல்கள் என்று சொல்லப்படும். ஓ பிராமணா! சொல்லப்பட்ட அனைத்தையும் தவறாமலும், முழுவதுமாகவும் அறிந்து கொண்டு என்றுமுள்ள பரம்பொருளை வழிபடுவாயாக. அவ்வழிபாடு என்பதே விதிக்கப்பட்ட செயலைத் தவறாமல் செய்வதே ஆகும். இச் செயல்களைச் செய்யும் பொழுது எவ்விதமான பயனையும், சிறிதும் எதிர்பாராமல் செயல்களில் ஈடுபடுவதே முக்கியமான தாகும்.

**பிரபஞ்ச உற்பத்தி**

அடுத்தபடியாக விஷ்ணு, பிரபஞ்சத் தோற்றம் பற்றிக் கூறத் துவங்கினார். துவக்கத்தில் பரப்பிரம்மம் மட்டுமே இருந்தது. எங்கும் நிறைந்ததும், ரூப, அரூபமானதும், ஆதியும் அந்தமும் இல்லாததும், சொற்களால் விவரிக்க முடியாததும் ஐம்புலன்களால் உணர முடியாததும் ஆகியது பரப்பிரம்மம்.

இப்பரப்பிரம்மத்தினின்று தோன்றியவர்களே படைத்தல் தொழிலைச் செய்யும் பிரம்மாவும், காத்தல் தொழிலைச் செய்யும் விஷ்ணுவும், அழிக்கும் தொழிலைச் செய்யும் சிவனும் ஆவர். பிரபஞ்ச உற்பத்திக்கு முன்னர் எங்கும் நீரே நிறைந் திருந்தது. அதில் ஒரு பொன்னாலாகிய முட்டை தோன்றியது. அம்முட்டை மிகப் பெரியதாகி அதில் படைக்கும் கடவுளாகிய பிரம்மன் தோன்றினார். அவருடன் உலகத்தில் உள்ள சர அசரப் பொருட்கள் யாவும் தொடக்க நிலையில் இருந்தன. தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கோள்கள் முதலானவை அவற்றுள் இருந்தன. பொன்னாலாகிய முட்டையினின்று தோன்றியவர் பிரம்மன் என்பதால் அவருக்கு 'ஹிரண்யகர்ப்பன்' என்ற பெயர் உண்டாயிற்று. பிரம்மனே முதன் முதலில் தோன்றியவர். அவருக்கு நான்கு முகங்கள் உண்டு. அவர் தன்னைத் தானே தோற்றுவித்துக் கொண்டார் என்பதால் சுவயம்பு என்ற பெயரும் ஏற்பட்டது.

*(இதை அடுத்து, கூர்ம புராணம் தேவர்கள் காலம், யுகங்கள் பற்றிப் பேசுகிறது. இவை ஏற்கெனவே பிரம்ம புராணத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.)*

**வராக அவதாரம்**

பத்ம கல்பத்தில் ஏற்பட்ட பிரளயத்திற்குப் பிறகு உலகம் நீரில் மூழ்கி இருந்தது. விஷ்ணு நீரின் மேல் உறங்கிக்

கொண்டிருந்தார். ஆயிரம் மகாயுகங்கள் விஷ்ணு உறங்கினார். புதிதாகப் பிரபஞ்சத்தைப் படைக்க எண்ணினார் பிரம்மன். ஆனால் பூமி நீரில் மூழ்கி இருந்ததால், படைப்புத் தொழிலைச் செய்ய முடியாத பிரம்மன், விஷ்ணுவிடம் சென்று உதவி வேண்டினார்.

விஷ்ணுவும் வராக அவதாரம் எடுத்து, பாதாளலோகம் சென்று பூமியைத் தேடினார். கடைசியாக பூமியைக் கண்டு பிடித்துத் தன் கொம்புகளுக்கிடையே வைத்து நீருக்கு மேலே தூக்கி வந்தார். நீரின் மேல் பூமியை வைத்தவுடன் மிகப் பெரிய படகினைப் போல் பூமி நீரில் மிதக்கலாயிற்று.

**பிரபஞ்ச தோற்றம் தொடர்ச்சி**

பிரம்மன் முதலில் மானசீக புத்திரர்களாக ஐந்து மகன்களைப் படைத்தார். அவர்கள் சனகர், சனாதனர், சனந்தன, கிரது, சனத்குமாரர் ஆகியோர் ஆவர். இவர்கள் ஐவரும் முனிவர்களாகி விட்டமையின், மனித உற்பத்தி யைப் பெருக்க முடியவில்லை. ஆதலால் இன்னும் சில உயிர் களை பிரம்மன் படைத்தார். அதற்கு முன்பாகத் தவத்தில் ஈடுபட்டார் பிரம்மன். அவர் தவம் எப்பலனும் அளிக்க வில்லை. ஆகையால் கோபமும் சோர்வும் அடைந்து கண்ணீர் சிந்தினார். அக்கண்ணீரிலிருந்து சிவன் தோன்றினார். அவரை வணங்கிய பிரம்மன், சிவனிடம் சிரஞ்சீவிகளைப் படைத்தலை நிறுத்திவிட்டு, மூப்பினாலும், இறக்க நேரிடுகின்ற உயிர் களாகப் படைக்கவும் என்று கூறினார். இதைக்கேட்ட சிவன், "மூப்பு, நோய் இரண்டும் துன்பத்தைக் கொடுக்கக் கூடியவை. அவற்றை அனுபவிக்க கூடிய உயிர்களை என்னால் படைக்க முடியாது" என்று கூறிவிட்டார். உடனே பிரம்மன் தானே படைப்புத் தொழிலை ஏற்றுக்கொள்வதாகக் கூறி, தண்ணீர், நெருப்பு, ஆகாயம், காற்று, ஆறு, கடல், மரங்கள் அனைத் தையும் படைத்தார்.

அடுத்து பிரம்மன் பதினோரு பேரை மானசீக மக்களாக உற்பத்தி செய்தார். அவர்கள் முறையே— மரீச்சி, பிருகு, ஆங்கீர, புலஸ்தியா, புலவிதலை, இரது, கட்சா, அத்ரி, வசிய்யு, தர்மா என்போர் உடன் சங்கல்யா அதன் பிறகு தேவர்கள், அசுரர்கள், பித்ருக்கள், மனிதர்கள் என்ற நால்வகையினரும் படைக்கப் பட்டனர். இவர்களைப் படைத்த பிரம்மன் தன் உடலை இரண்டாகப் பிரித்து ஓர் ஆண் உருவத்தையும், பெண் உருவத்தையும் படைத்தார். சுவயம்புமனு, சத்தரூபா என்ற பெயர் கொண்ட அவர்கள் பிரியவ்ரதா, உத்தானபாதா என்ற மகன்களையும், பிரசுத்தி, அகுத்தி என்ற பெண்களையும் படைத்தனர். பிரசுத்தி, தட்சனை மணந்து இருபத்தி நான்கு பெண்களைப் பெற்றாள். அதில் பதின்மூன்று பேர், பிரம்மனின் மகனாகிய தர்மதேவனையும், சியாதி பிருகுவையும், சதி சிவனையும், சம்புதி மாரீச்சியையும், ஸ்மிருதி ஆங்கீரஸா வையும், பிரிதி புலஸ்தியரையும், ஷமா புலவிதலையும், சண்ணடி கிரதுவையும், அனுசுயை அத்ரியையும், உர்ஜா வசிட்டரையும், ஸ்வாஹா அக்னியையும், ஸ்வதா பித்ரி தேவனையும் மணந்தனர்.

**பிரம்மா, விஷ்ணு, சிவன்**

தேவர்களும் முனிவர்களும் விஷ்ணுவிடம், "ஐயனே! எங்கள் குழப்பத்தை நீக்க வேண்டும் என, பிரம்மன் விஷ்ணுவின் உடலில் இருந்துதான் தோன்றியதாகக் கூறினார். பிறகு பிரம்மன் பொன் முட்டையினுள் இருந்துதான் தோன்றியதாகக் கூறினார். அதேபோல் சிவன் பிரம்மனின் கண்ணீரிலிருந்து தோன்றியதாகக் கூறினீர்கள். ஆனால் நாங்கள் வேறு மாதிரிக் கேள்விப்பட்டோம். இதில் எது சரி, எது தவறு என்று தயை கூர்ந்து சொல்ல வேண்டும் என்று பணிவுடன் கேட்டனர். விஷ்ணுவும் இதில் குழப்பம் ஏற்பட எதுவுமில்லை. முதன் முதலில் பிரபஞ்ச உற்பத்தியின்

பொழுது பிரம்மா பொன் முட்டையிலிருந்துதான் தோன்றினார். அதன் பிறகு ஒவ்வொரு கல்பத்திலும் ஒரு பிரளயம் ஏற்படும். அதில் பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகிய மூவரைத் தவிர மற்றவர்கள் இறந்து போவார்கள். அதன் பிறகு மறுபடியும் பிரபஞ்ச உற்பத்தி நடைபெறும். கடைசி கல்பத்தின் முடிவில் எங்கும் நீரே நிறைந்திருக்கும். சொர்க்க லோகம், பூலோகம், பாதாளலோகம் ஆகிய அனைத்தும் நீரால் மூடப்பட்டிருக்கும். தேவர்கள், முனிவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். அப்பொழுது ஆயிரம் தலைகள், ஆயிரம் கண்கள், ஆயிரம் கைகள், ஆயிரம் கால்களுடன் விஷ்ணு மட்டுமே அனந்தன் என்னும் பாம்பின் மேல் படுத்திருப்பார். நீரில் படுத்துறங்கும் விஷ்ணுவின் கொப்பூழினின்று சூரியனை ஒத்த ஒளியுடைய ஒரு பெரிய தாமரை மலர் தோன்றிற்று. அதன் மணம் எல்லாத் திசைகளுக்கும் பரவிற்று. அம் மலரிலிருந்து பிரம்மா தோன்றினார்.

அவ்வாறு தோன்றிய பிரம்மன், விஷ்ணுவைப் பார்த்து "நீ யார்?" என்று கேட்டார். விஷ்ணுவும் "நான்தான் விஷ்ணு. அனைத்திற்கும் மூலப்பொருள் நானே" என்று விடை அளித்தார். பிரம்மனை நோக்கி, "நீ யார்?" என்று கேட்டார். பிரம்மன் "நானே படைத்தல் தொழில் செய்பவன். இப் பிரபஞ்சத்தில் படைக்கப்பட்ட அனைத்தும் என் உடம்பில் உள்ளன" என்று கூற, விஷ்ணுவும் "அப்படியா! எங்கே பார்க்கலாம்" என்று கூறி, பிரம்மாவின் உடலில் புகுந்தார். அங்கு மூன்று உலகங்கள் தேவர்கள், அசுரர்கள் மக்கள் ஆக அனைத்தையும் பிரம்மன் வயிற்றில் கண்ட விஷ்ணு, பிரம்மன் வாய் வழியே வந்து, "என் உடம்பினுள்ளும் இவைகளைக் காணலாம், நீ வந்து பார்" என்று அழைக்க பிரம்மனும் அவ்வாறே செய்தார். உள்ளே சென்ற பிரம்மன், விஷ்ணுவின் வயிற்றில் அண்ட சராசரங்களைக் கண்ட போதிலும், வெளியே

வரும் வழியின்றித் தவித்தார். முடிவில் விஷ்ணுவின் கொப்பூழில் தோன்றி இருந்த தாமரை மலரின் தண்டின் வழியே வெளியே வந்தார்.

விஷ்ணுவிடம் கோபம் கொண்டு, "என்னை எவ்வாறு நீ சிறை வைக்கலாம்" என்று கேட்க, விஷ்ணு, "பிரம்மனே! கோபம் வேண்டாம். உன்னுடன் சிறிது நேரம் விளையாடவே இவ்வாறு செய்தேன். மிக உயர்ந்தவராகிய உம்மைச் சிறை வைக்க யாருக்கும் தைரியமில்லை. என்னை மன்னிக்கவும்" என்று கூறி எனக்கு ஒரு வரம் தரவேண்டும். அதன்படி என்னுடைய கொப்பூழினின்று தோன்றிய நீ என்னுடைய மகன் என்றே அழைக்கப்பட வேண்டும் என்று கேட்டார். பிரம்மனும் அதற்குச் சம்மதித்து நாம் இருவரும் சமாதானமாகி விடுவோம். ஏனெனில் நாம் இருவருமே பரப்பிரம்மத்தின் பகுதிகளாவோம் என்று கூறினார்.

உடனே விஷ்ணு, 'சிவனை மறந்துவிட வேண்டா. உன்னுடைய வார்த்தைகளைக் கேட்டால் சிவன் கோபிப்பார்' என்று கூறிக் கொண்டிருக்கும் பொழுதே, சிவன் அங்கு வந்தார். சடைமுடியும், மூன்று கண்களையும் கொண்ட சிவன், கையில் திரிசூலம் ஏந்தி இருந்தார். உடனே பிரம்மன் 'இவர் யார்? இவரைப் பார்த்தால் திடீரென்று முன்னுக்கு வந்தவன் போல் தெரிகிறது' என்றார்.

விஷ்ணு, பிரம்மனைச் சமாதானப்படுத்தி, தெய்விகக் கண்களை பிரம்மனுக்குக் கொடுத்து சிவனுடைய உண்மையான சொரூபத்தைக் காணுமாறு செய்தார். பிரம்மனே! இவர் யார் என்று தெரியுமா? இவர்தான் என்றும் அழியாதவராய், ஒளிப்பிழம்பாய், ஆதியும், அந்தமும் இல்லாதவராய் விளங்கும் மகாதேவராவார். இவர்தான் சங்கரர் (மங்களம் செய்பவர்), சம்பு (நலங்களைப் பொழிபவர்)

ஈசான (ஆள்பவன்) பரமேஸ்வரன் (தலைமை ஆட்சியாளர்) அனைத்திற்கும் உயிராயும், மனிதர்களின் பிரபுவாகவும், பெரிய தியானேஸ்வரராய் ஈடு இணையற்ற ஈசனாகவும் இருப்பவர் சிவனேயாவார். அவரே அனைத்தையும் ஆக்குபவர், உயிர்க்கு வினைகளை அனுபவிக்குமாறு செய்பவரும் இவரே. இந்தச் சிவனே, கால தேவனாக மாறி அனைத்தையும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்கின்றார். ஈறும் முதலும் இல்லாத இந்தச் சங்கரனே உன்னைப் படைத்தவர் ஆவார் என்று விஷ்ணு பிரம்மனிடம் பேசிய பிறகு, உண்மை சொரூபத்தைக் கண்ட பிரம்மன் சிவனைப் பிரார்த்தித்தான். பிரார்த்தனையில் மகிழ்ந்த சிவன், 'உனக்கு என்ன வரம் வேண்டும்' என்று கேட்டார். பிரம்மன் 'தாங்கள் எனக்கு மகனாகப் பிறக்க வேண்டும்' என்று கூற சிவனும் அதற்குச் சம்மதித்தார்.

சிவன் விஷ்ணுவிடம் பேசத் துவங்கினார். உலகம் முழுவதும் நிறைந்திருக்கும் விஷ்ணுவே! உன்னுடைய பக்தியைக் கண்டு மெச்சினேன். என்ன வரம் வேண்டுமோ பெற்றுக் கொள் என்றார் சங்கரன். சிவன் கூறியதைக் கேட்ட விஷ்ணு, எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தவராய் சிவன் முகத்தை நேருக்கு நேர் பார்த்து பின்வருமாறு பேசலானார். 'யாவருக்கும் தலைவனாய், பரப்பிரம்மத்தின் சொரூபமாய் இருக்கின்ற தங்களை நேருக்கு நேராகப் பார்த்துப் பேசும் வாய்ப்பைப் பெற்றுள்ளோம். இதைவிடச் சிறந்த வரம் வேறு என்ன இருக்கிறது?

இதேபோல தங்களிடம் இடைவிடாத பக்தி பூண்டு நான் வாழுமாறு அனுக்கிரகம் செய்யுங்கள்.'

'அது அங்ஙனமே ஆகட்டும்' என்று கூறிய சிவன் மறுபடியும் விஷ்ணுவைப் பார்த்துப் பேசலானார்.

"விஷ்ணுவே! எல்லாச் செயல்களையும் செய்கின்றவர் நீரே ஆவீர். தலைமையிடத்திலிருந்து அதைப் பார்க்கும் பொறுப்பு மட்டும் என்னுடையது. எல்லாவற்றிலும் நம் இருவரிடையேயும் எவ்விதமான வேற்றுமையும் இல்லை என்பது தெளிவான, நிரூபிக்கப்பட்ட ஒன்றாகும். நீரே சந்திரன், நான் சூரியன், நீரே இரவு, நான் பகல். வெளிக்குத் தெரியாத பிரகிருதி ஆவீர் நீர். நான் புருஷனாக உள்ளேன். நீரே அறிவு. நானே அதை அறிபவன். நீரே மாயையாக உள்ளீர். நானே ஈஸ்வரனாக உள்ளேன். அறிவின் மூலம் கிடைக்கின்ற சக்தி ஆவீர் நீர். அந்தச் சக்தியின் நாயகன் ஆவேன் நான். குற்றமற்ற பிரபுவாக உள்ளேன் நான். நீரும் நாராயண சொரூபத்தில் அதே நிலையில் உள்ளீர். பிரம்ம சொரூபத்தை அறிய முற்படும் யோகிகள் வேற்றுமையில் ஒற்றுமை காண்கின்றனர். இப்பிரபஞ்சத்தின் ஆத்மாவாக உள்ள விஷ்ணுவே, உம்மை அடையாமல் யாரும் என்னிடம் வர முடியாது. தேவர்கள், அசுரர்கள், மானிடர்கள், உயிர் வர்க்கங்கள் ஆகிய அனைத்தையும் நீர் காப்பீராக" என்று கூறினார்.

இவ்வாறு கூறியபின் பிறப்பு, இறப்பு கடந்ததும், தோற்றம், முடிவு இல்லாததும், பொறிபுலன் காண வெளிப்பட்டு நில்லாததும் ஆகிய ஒரு நிலையில் சங்கரன் கலந்துவிட்டார்.

**ருத்ரன்**

பிரம்மன் தன் ஆசனமாகிய தாமரை மலரில் சென்று அமர்ந்து கொண்டார். திடீரென்று மது, கைடபன் என்ற இரு அசுரர்கள் தோன்றினர். அவர்கள் மிகவும் பலம் பொருந்திய வர்களாக இருந்தனர். பிரம்மன் சிருஷ்டிக்கும் அனைத்தையும் அழித்து விடுவதாக பயமுறுத்தினர். உடனே, பிரம்மன் விஷ்ணுவின் உதவியை நாடினார். விஷ்ணு தன் உடலில் இருந்து இருவரைத் தோற்றுவித்து, மது கைடபர்களைக்

கொல்லச் செய்தார். இவ்விரு அரக்கர்களும் இறந்தபின்பு, பிரம்மன் தன் சிருஷ்டித் தொழிலைத் தொடர்ந்தார். சிவன் தன்னுடைய மகனாகப் பிறக்க வேண்டும் என்பதற்காக நீண்ட காலம் சோர்வும் அடைந்து அழத் துவங்கினார். அக்கண்ணீர்த் துளிகளினின்று பூத, பிரேதா என்ற இரு பேய்கள் தோன்றினர். பிரம்மன் மிகவும் மனம் வருந்திக் கொண்டிருக்கும் பொழுது திடீரென்று பிரம்மனின் வாயிலிருந்து சிவன் தோன்றினார்.

குழந்தை வடிவிலிருந்து சிவன், பிறந்த உடன் அழத் துவங்கினார். பிறந்தவுடன் அழத்துவங்கியதால் அக்குழந்தைக்கு 'ருத்ரன்' என பிரம்மன் பெயரிட்டார். ருத்ரன் என்ற பெயருடன் பாவ, சர்வ, ஈசான, பசுபதி, மகாதேவா என்ற பெயர்களையும் சூட்டினார்.

## பார்வதியின் ஆயிரம் நாமங்கள்

சிவன் தட்சன் மகளாகிய சதியை மணந்தார். சதி இறந்து, இமவான் மகள் பார்வதியாக அவதரித்தார். இமவானும், மேனகாவும் அம்பிகையே தங்களுக்கும் மகளாகப் பிறக்க வேண்டும் என வேண்டினர். அம்பிகை அவர்கள் எதிரே தோன்றித் தன் தெய்வீக வடிவைக் காட்டி, தானே அவர்கள் மகளாகப் பிறப்பதாகக் கூறினார். அவர் பெயர்களுள் சில தந்துள்ளோம், உமா, நிஷ்கலா, அமலா, மஹேஸ்வரி, நித்யா, தேவத்மா, வியாபினி, ஜகன்மாதா, ஈஸ்வரப்ரியா முதலியவையாம்.

## உத்தானபாதா வம்சாவளி

சுயவம்பு மனு, புத்தரூபா ஆகிய இருவரின் மகன்களே உத்தானபாதா, பிரியவ்ரதா ஆகியோர். இவர்களில் துருவன் உத்தானபாதாவின் மகனாவார். மிகச் சிறந்த விஷ்ணு பக்தனாகிய துருவனுக்கு, சொர்க்கத்தில் துருவலோகம்

என்றொரு இடத்தை விஷ்ணு கொடுத்து விட்டார். உத்தானபாதாவின் வழியில் வந்தனாகிய சருக்ஷா, ஆறாவது மனுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டான். இவனது பரம்பரையில் தோன்றியவர்களே எவனா, அவன் மகன் பிருத்து ஆகியோர். பிருத்துவின் மகன் சிகண்டி. சிகண்டியின் மகன் சுசிலா. சுசிலா வேதங்களை நன்கு படித்து, புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்றான். இறுதியாக இமயமலைக்கு வந்து சேர்ந்தான். மந்தாகினி நதிக்கரையில் அழகிய ஆசிரமம் அமைத்து, சிவனை நோக்கித் தவம் செய்ய ஆரம்பித்தான். அவ்வாறு சுசிலா தவம் செய்து கொண்டிருக்கும் பொழுது, சுவேதாஸ்வதா என்ற முனிவர் அங்கு வந்தார். அந்த முனிவர் உடம்பில் சாம்பலைப் பூசிக் கொண்டு, மிக மெலிந்த உருவமாகக் காட்சி அளித்தார். தன்னுடைய தவத்தை முடித்துக் கொண்டு சுசிலா, கண்விழித்து முனிவரைப் பார்த்தான். அவரை வணங்கி, "ஐயனே! நான் பெரும் பேறு பெற்றவன் ஆகையால் உங்களை இங்கு தரிசிக்க முடிந்தது. என்னைத் தங்கள் சீடனாக ஏற்றுக் கொண்டு, நான் அறிந்து கொள்ள வேண்டிய அனைத்தையும் எனக்குக் கற்றுத்தர வேண்டும்" என்று வேண்டினான்.

சுவேதாஸ்வதா முனிவரும் சம்மதித்து, சாத்திரங்கள் பற்றிய ஞானத்தை போதிக்க ஆரம்பித்தார். சுசிலாவின் தந்தையான சிகண்டிக்கு ஹவித்தன் என்று ஒரு சகோதரன் இருந்தான். அவனுடைய மகனே பிரசினவர்ஹி என்பவன். இவன் கடலரசன் மகள் சவர்ணாவை மணந்து, பத்துப் புதல்வர்களைப் பெற்றான். இந்தப் புதல்வர்களே பிரசேதாஸ் என்று பெயர் பெற்றனர். இவர்கள் விஷ்ணுவிடம் அன்பு கொண்டு, அவரையே வணங்கி வந்தனர். பத்து பிரசேதர்களும் மணம் புரிந்து கொண்டனர். அவர்களுக்கு, மாரீசன், தட்சன் என்ற புதல்வர்கள் பிறந்தனர். இந்த தட்சனே, முன்பு பிரம்மனின் மகனாகத் தோன்றியவன். தட்சன் சிவனுடன்

சண்டையிட்டதால், அவன் பிரசேதர்களின் மகனாகப் பிறப்பான் என்று சிவன் சாபமிட்டார்.

இதனைக் கேட்ட முனிவர்கள், "தட்சனுடைய கதையினை எங்களுக்குச் சொல்ல வேண்டும்" என்று லோமஹர்ஷனரைக் கேட்க, அவரும் கூற ஆரம்பித்தார்.

**தட்சன் கதை**

தட்சன், சிவன் தனக்கு மருமகனாக இருந்தும் தனக்குரிய மரியாதையைக் காட்டவில்லை என்று கோபித்து, தான் செய்யும் யாகத்திற்கு அழையா விருந்தாக வந்த சதியைப் பலவாறு ஏசியும், சிவனைத் தரக்குறைவாகப் பழித்தும் இகழ்ந்தார். நொடிந்து போன சதி அங்கேயே தன் உயிரை நீத்தார். சதி இறந்ததை அறிந்த சிவன், தட்சனிடம் வந்து பூமியில் ஒரு சத்திரியன் மகனாகப் பிறப்பான் என்று சாபமிட்டார். இந்தச் சாபத்தின் பயனாகவே, பிரசேதனை மகனாகத் தட்சன் பிறந்தான்.

கூர்ம புராணத்தில் உள்ள தட்சயக்ஞக் கதை, வேறு புராணங்களில் உள்ள தட்சயக்ஞக் கதையினின்று ஒரு சிறிது மாறுபடுகிறது. பிற கதைகளில் தட்ச யக்ஞத்திற்கு வந்து உயிரை நீத்தவர் சதி என்றும், அவரே மறுபடியும் பார்வதியாகப் பிறந்தார் என்றும் கூறுகின்றன. கூர்ம புராணக் கதைப்படி, தட்ச யக்ஞம் பார்வதியின் காலத்தில்தான் நடந்தது. யக்ஞத்தை அழிக்குமாறு பரிந்துரை செய்தவர் பார்வதியே ஆவார். இந்த வேறுபாடு நீங்கலாக மற்ற அனைத்தும் எல்லாப் புராணங் களிலும் ஒன்றாகவே உள்ளன.

**பிரகலாதன் கதை**

பிரகலாதன் தந்தையாகிய ஹிரண்யகசிபுவை, விஷ்ணு நரசிம்ம அவதாரம் எடுத்துக் கொன்ற கதை முன்னரே

கூறப்பட்டுள்ளது. அவனுக்குப் பின்பு அவன் சகோதரனாகிய ஹிரண்யாக்ஷன் அசுரர்களின் தலைவனாக இருந்தான். விஷ்ணு வராக அவதாரம் எடுத்துப் பாதாள உலகில் சென்று, பூமியை மறைத்து வைத்திருந்த ஹிரண்யாக்ஷனைக் கொன்று, பூமியை மீட்டார். அவனுக்குப் பிறகு பிரகலாதன் ஆட்சிப் பொறுப்பேற்றான். சிறந்த விஷ்ணு பக்தனாகிய அவன் சிறந்த முறையில் ஆட்சி செய்தான். வேறு பணியில் பிரகலாதன் ஈடுபட்டிருந்த பொழுது, வந்திருந்த பெரியவரை கவனக் குறைவாய் சரியாக உபசரிக்காமல் இருந்து விட்டான். அந்தப் பெரியவர் மிகவும் கோபம் கொண்டு, "விஷ்ணுவைப் பற்றி நீ மறந்து விடுவாய். அதனால் நீ விஷ்ணுவுடன் போரிட்டுத் தோல்வி அடைவாய்" என்று கூறினார். அப்பெரியவரின் சாபப்படி பிரகலாதன் நேர்மையான வழியை மறந்து, பெரியோர்களை மதிக்க மறந்தான். ஆகையால் வேதம், சாத்திரங்கள் ஆகியவற்றை மறந்து, விஷ்ணு தன் தந்தையைக் கொன்றதால் பழிவாங்க நினைத்தான். நீண்ட காலம் விஷ்ணுவுடன் போர் புரிந்து முடிவில் தோல்வியுற்றான். தன் தவற்றினை உணர்ந்து விஷ்ணுவிடம் மன்னிப்புக் கேட்டான்.

### கௌதம முனிவர் பற்றியது

முன்னொரு காலத்தில் உலகில் எங்கும் கடும் பஞ்சம் நிலவியது. பல ஆண்டுகளாக மழையே இல்லாததால் யாருக்கும் உணவு கிடைக்கவில்லை. காட்டில் உள்ள முனிவர் களுக்கும் உணவு கிடைக்கவில்லை. அந்த நிலையில், காட்டில் மற்றொரு பகுதியில் கௌதம முனிவர் என்பவர் வாழ்ந்து வந்தார். மிகப் பெரிய ஆன்மீக பலம் பொருந்திய அவர் ஆசிரமத்தைச் சுற்றி மழை பொழிந்து வந்தது. அங்கு உணவிற்குப் பஞ்சமே இல்லை. பஞ்சத்தில் அடிபட்ட முனிவர் அனைவரும் இறுதியாக கௌதம முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்றனர். அவர்களை வரவேற்ற கௌதமர் அவர்களுக்கு

வேண்டுமான உணவளித்துத் தம்மிடமே தங்கச் செய்தார். பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து எங்கும் மழை பெய்து பஞ்சம் நீங்கியது. முனிவர்கள் தங்கள் சொந்த இடத்திற்குப் போக விரும்பினர். ஆனால் கௌதமர் அவர்களை விடவில்லை. அதனால் கோபம் அடைந்த முனிவர்கள் கௌதமரின் பேரில் பழிபோட நினைத்தனர். மாயை ஆன கறுப்புப் பசுவை கன்றுக்குட்டி ஒன்றை அவர்கள் உண்டாக்கி கௌதமரின் தோட்டத்தில் மேயவிட்டனர். முனிவர்களின் வஞ்சகத்தை அறியாத கௌதமர் அந்தப் பசுவின் கன்றை மாட்டுக் கொட்டிலில் விடுவதற்காக அதைத் தூக்குவதற்குத் தொட்ட வுடன் அந்தக் கன்றுகுட்டி இறந்து விட்டது. அதைப் பார்த்த முனிவர்கள் "ஓ, கௌதமரே நீர் பசுக்கொலை செய்துவிட்டீர். உம்மிடம் நாங்கள் இருக்க மாட்டோம்" என்று சொல்லிப் புறப்பட முயன்றனர். இதற்குள் நன்றி கெட்ட முனிவர்கள் செய்த செயலை அறிந்து கொண்ட கௌதமர் "நீங்கள் செய்த தீய செயலுக்காக உங்களைச் சபிக்கிறேன். பலமுறை நீங்கள் ஒவ்வொருவரும் மனிதராகப் பிறந்து, நரகத்தில் கிடந்து உழல்வீர்களாக" என்று சபித்தார்.

மனிதர்களெல்லாம் விஷ்ணுவினிடமும் சிவனிடமும் சென்று தங்களைக் காப்பாற்றுமாறு வேண்டினார்கள். விஷ்ணு அவர்களை மன்னிக்க முடியாது என்று கூறிவிட்டார். இதுவரை நேர்மையான பாதையில் சென்ற அவர்களை நரகத்திற்கு அனுப்பவும் முடியாது. ஆகவே சிவனும், விஷ்ணுவும் சேர்ந்து ஒரு வழியைக் கண்டுபிடித்தனர். முதலாவது இவர்களை நேர்மையான வழியினின்று மாற்ற வேண்டும். பிறகு கௌதமனின் சாபப்படி இவர்கள் நரகம் போகச் சரியாக இருக்கும் என்று கருதினர்.

இந்த யோசனையின் படியே சிவன் ஒரு போலி குருவாக வந்து இந்த முனிவர்களின் மனத்தை மாற்றினார். முனிவர்கள்

தவறான வாழ்க்கை வாழத் தொடங்கியதால் அவர்கள் நரகம் செல்வது எளிதாயிற்று. கௌதமரின் சாபமும் பலித்தது.

*(இதனை அடுத்து அந்தகன் கதையும், வலிச்சக்கரவர்த்தி கதையும் பேசப்படுகிறது. இக்கதைகள் முன்னரே பல புராணங் களில் கூறப்பட்டுள்ளதால் அவற்றை இங்கே கொடுக்க வில்லை.)*

**வனா**

வலிச்சக்கரவர்த்திக்கு நூறு பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் மூத்தவனான இவன் சிவபக்தன். மிகுந்த வலிமை படைத்தவனாகிய வனா இந்திரனை வெற்றி கொண்டு, மூவுலகையும் ஆண்டு வந்தான்.

இந்திரனும், மற்ற தேவர்களும் சென்று சிவனிடம் முறையிட்டனர். சிவனை நோக்கி, 'ஐயனே! உம்முடைய பக்தனாகிய வனா எங்களுக்கு மிகுந்த சிரமத்தைத் தருகிறான். ஆகவே அவனிடமிருந்து எங்களைக் காக்க வேண்டும்' என்று கூற, சிவனும் சம்மதித்தார். சிவபெருமான் ஒரே ஒரு அம்பினை எய்து, வனாவின் நகரம் முழுவதையும் எரித்தார். தன்னுடைய நகர் முழுவதும் எரிந்ததைக் கண்ட வனா சிவலிங்கத்தை வழிபட ஆரம்பித்தான். அவனுடைய அன்பினை மெச்சிய சிவபெருமான் தன்னுடைய கணங்களுக்குத் தலைவனாக ஆக்கினார்.

**சூரிய வம்சாவளி**

காசியப முனிவருக்கும், அதிதிக்கும் மகனாகத் தோன்றியவன் வைவஸ்வனா. இவனுக்கு நான்கு மனைவியர். இவர்களில் சம்ஜனா முதல் மனைவி ஆவார். அவருடைய மகனே வைவஸ்வத மனு ஆவான். அவனுக்கு ஒன்பது பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் இக்ஷ்வாகு, நபகா, அரிஷ்டா

முதலானோர். இலா என்று ஒரு மகள் இருந்தாள். அவள் வழியிலேயே சந்திரவம்சம் தொடங்கிற்று. இக்ஷ்வாகு பரம்பரையில் தோன்றியவனே தசரதன். அவன் மகன் இராமன் போன்றோர்.

**சந்திர வம்சாவளி**

சந்திரனின் மகனாகிய புதன், வைவஸ்வத மனுவின் மகளாகிய இலாவை மணந்தான். அவர்களுக்குப் புரூரவா என்ற மகன் இருந்தான். அவன் அப்ஸரஸ் ஊர்வசியை மணந்து அனுமன்களைப் பெற்றனர். இந்தப் பரம்பரையில் வந்தவனே யயாதி மன்னன். யயாதி மன்னனின் மகனாகிய யாதுவின் வழியில் வந்தவனே கார்த்தவீரிய அருச்சுனன். அவனுக்குப் பலநூறு மக்கள் இருந்தனர். அவர்களில் ஐவர், மிக முக்கியமானவர்கள். அவர்கள் முறையே சுரா, சுரசேனா, கிருஷ்ணா, திருஷ்ணா, ஜயத்வஜா என்றழைக்கப்பட்டனர். இவர்களில் ஜயத்துவஜா விஷ்ணுவை தியானிப்பார். மற்ற நால்வரும் சிவனையே வணங்குபவர்கள்.

ஒரு நாள் சகோதரர்களுக்குள் ஒரு வாக்குவாதம் மூண்டது. மூத்த சகோதரர்கள் நால்வரும் ஒன்றுகூடி, இளையவனைப் பார்த்து நீ விஷ்ணுவை வணங்குவது சரியன்று. நம் தந்தை பெரிய சிவபக்தர். அப்படி இருக்க அவருடைய பிள்ளை களாகிய நாம் அவர் வழியில் செல்வதுதான் முறை. தந்தை யைப் போலவே நீயும் சிவபக்தனாக மாறிவிடு என்று கூறினர். அதற்கு விடையாக, ஜயத்துவஜன் "விஷ்ணுதான் எல்லோருக்கும் பெரியவர். அவர்தான் இவ்வுலகைக் காப்பவர். எனவே அவரைத் தொழுவதுதான் சரி" என்றான். இவர்களுக்குள் ஒருமைப்பாடின்மையால் சகோதரர்கள் ஒன்று கூடி சப்தரிஷிகளுள் ஒருவராகிய வசிட்டரிடம் சென்றனர். அவரிடம் தத்தம் வாதங்களை முன்வைத்தனர். அதைக் கேட்ட

வசிட்டர் பின்வருமாறு கூறினார்: "அவரவர் விருப்பத்திற்கு எந்த தெய்வம் உகந்ததோ அதை வழிபடுவதே சரியானதாகும். மேலும் அரசர்கள் விஷ்ணுவையும், இந்திரனையும், பிராமணர்கள் அக்னி, சூரியன், பிரம்மன், சிவன் ஆகியோரையும், தேவர்கள் விஷ்ணுவையும், அசுரர்கள் சிவனையும், யட்சர்கள் கந்தர்வர்கள் சந்திரனையும், முனிவர்கள் பிரம்மன், சிவன் ஆகியோரையும், பெண்கள் பார்வதியையும் வணங்குகின்றனர். மனிதர்கள் விஷ்ணுவும் சிவனும் வேறு வேறு அல்ல என்பதை உணர்ந்து, இருவரையும் ஒரே சமயத்தில் வணங்க வேண்டும்" என்று கூறி முடித்தார் வசிட்டர்.

**வாரணாசியின் தனிச்சிறப்பு**

முன்னொரு காலத்தில் துர்ஜயா என்ற மன்னன் உலகை ஆண்டு வந்தான். அவனுடைய மனைவி மிக்க அழகு வாய்ந்தவள். நல்ல குணநலன்கள் பொருந்தியவள்.

ஒரு நாள் துர்ஜயா அரசன் காளிந்தி நதிக்கரைக்குச் சென்றான். அங்கு அப்ஸரஸ் ஊர்வசியைக் கண்டு மணம் புரிந்து கொண்டு நீண்ட காலம் அங்கேயே தங்கிவிட்டான். பலகாலம் கழித்து தன் ராஜ்ஜியத்தையும், மனைவியையும் நினைத்துக்கொண்டு தன் நாட்டிற்குச் சென்று வர வேண்டும் என்ற தன் விருப்பத்தை ஊர்வசியிடம் தெரிவித்தான். அவள் 'இன்னும் ஓர் ஆண்டு இருந்துவிட்டுப் போகலாம்' என்று கூறினாள். அவன் பிடிவாதம் செய்யவே "அவன் நாட்டிற்குச் சென்று மனைவியைப் பார்த்தாலும் அவளுடன் வாழக் கூடாது. பார்த்துவிட்டு உடனே திரும்பிவிட வேண்டும்" என்று அவனிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டு அவனை அனுப்பினாள். தன் நாட்டிற்கு வந்த அவன் மனைவியைப் பார்த்தும்கூட அவளுடன் பேசாமல் இருந்துவிட்டான். அவன் மனைவி மௌனத்தின் காரணத்தை வற்புறுத்திக் கேட்டபோது

துர்ஜயா நடந்ததைக் கூறிவிட்டான். உடனே அவன் மனைவி "கட்டிய மனைவி இருக்கும் பொழுது வேறு ஒருத்தியுடன் வாழ்ந்த நீங்கள் பெரும் பாவம் செய்து விட்டீர்கள். அந்தப் பாவம் போக, எங்கேயாவது சென்று தவம் செய்யுங்கள்" என்று புத்தி கூறினாள். அதைக் கேட்ட துர்ஜயன், கன்வ முனிவரை அணுகித் தான் எவ்வாறு தவம் செய்ய வேண்டும் என்று கேட்டான். முனிவர், அவன் இமயமலை சென்று தவம் இயற்ற வேண்டும் என்று கூறினார்.

துர்ஜயன் இமயமலை செல்லும் வழியில் ஒரு கந்தர்வன் அழகிய மாலை ஒன்றை அணிந்து கொண்டு எதிரே வருவதைப் பார்த்தான். அந்த மாலையைக் கண்டவுடன் துர்ஜயனுக்கு ஊர்வசி நினைவு வர, ஊர்வசிக்கு அந்த மாலையைப் பரிசளிக்க நினைத்தான். உடனே அந்தக் கந்தர்வ னிடம் போரிட்டு அவனைத் தோற்கடித்து அந்த மாலையை எடுத்துக் கொண்டு தான் ஊர்வசியோடு வாழ்ந்த காளிந்தி நதிக்கரைக்குச் சென்றான். அவளை அங்குக் காணாமையால் பல இடங்களில் தேடிக் கடைசியாக மானசரோவர் ஏரிக் கரைக்கு வந்தான். அங்கு ஊர்வசியைக் கண்டு, மாலையைப் பரிசாகத் தந்தான். நடந்தவற்றைக் கேள்விப்பட்ட ஊர்வசி, 'அரசே! நீங்கள் தவம் செய்யப்போவதுதான் சரி. இல்லா விட்டால் உங்கள் மனைவியின் சாபம், கன்வ முனிவரின் சாபம் ஆகிய இரண்டு சாபங்களும் நம் இருவரையும் அழித்து விடும். ஆகவே உடனே காட்டுக்குப் போங்கள்' என்றாள். அவளை விட்டுப் போக மனமில்லாத துர்ஜயன் அவ்வாறு செய்ய மறுத்துவிட்டான். தன் அழகுதான் அவனை மறக்க முடியாமல் செய்கிறது என்பதை அறிந்த ஊர்வசி, தன் அழகை மாற்றிக் கொண்டு குரூர வடிவத்துடன் காட்சி தந்தாள். அழகற்ற அவளைக் காணச் சகியாத துர்ஜயன் உடனே அவளை விட்டு நீங்கி இமயம் சென்று இருபத்து நான்கு

ஆண்டுகள் கடுந்தவம் செய்தான். அதன்பிறகு கன்வ முனிவரைக் காண வந்தான். முனிவர் "துர்ஜயா! நீ செய்த தவத்தால் ஓரளவு உன் பாவம் நீங்கியது உண்மைதான். அந்த மிகக் கொடிய பாவத்தின் ஒரு பகுதி இன்னமும் உள்ளது. அதைப் போக்க வேண்டுமானால் நீ வாரணாசிக்குச் சென்று சிவனை நோக்கித் தவம் செய். அப்பொழுது உன் பாவம் முழுவதுமாக நீங்கும்" என்று கூற, துர்ஜயன் வாரணாசி சென்று சிவனை நோக்கித் தவம் செய்து தன் பாவங் களினின்று விடுதலை அடைந்தான். எத்தகைய பாவத்தையும் போக்கவல்லது வாரணாசி என்ற தனிச் சிறப்பை உடைய நகரம் என்பதை இதன் மூலம் அறியலாம்.

### கிருஷ்ணன் தவம்

வசுதேவருக்கும், தேவகிக்கும் எட்டாவது பிள்ளையாகப் பிறந்தவர் கிருஷ்ணன். அவதாரங்களுள் ஒன்றாகும்.

நீண்ட நாட்கள் தனக்குப் பிள்ளை இல்லை ஆதலால் கிருஷ்ணன் உபமன்யு முனிவரைச் சந்திக்கச் சென்றார். கங்கைக் கரையிலுள்ள உபமன்யு முனிவரின் ஆசிரமம் மிக்க அழகுடன் விளங்கிற்று. எங்கும் மலர்கள் பூத்துக் குலுங்கின. வேத கோஷம் ஒலித்துக் கொண்டே இருந்தது. மிகக் கொடிய வன விலங்குகளும் அந்த ஆசிரமத்தின் பக்கத்தில் வந்தவுடன் சாதுவாக மாறிவிட்டன. உபமன்யு முனிவரைக் காண பல இடங்களில் இருந்தும் முனிவர்கள் வந்து போயினர். அந்த ஆசிரமத்துக்குள் கிருஷ்ணன் நுழைந்து எல்லா முனிவர் களையும் வணங்கினார். கிருஷ்ணன் யார் என்பதை நன்கறிந்திருந்த அம்முனிவர்கள்— உபமன்யு முனிவர் உள்பட கிருஷ்ணனை வணங்கினர். உபமன்யு முனிவர் "கிருஷ்ணா! தாங்கள் விஷ்ணுவின் அவதாரம் என்பதை நாங்கள் அறிவோம். எல்லோரும் உங்களை நாடி உங்களிடம் வரத்

தவம் செய்கிறார்கள். ஆனால் நாங்கள் செய்த புண்ணிய வசத்தால் விஷ்ணு ஆகிய நீங்களே இந்தச் சிறுகுடிலுக்கு வந்திருக்கிறீர்கள். தாங்கள் வந்தது பற்றி பெருமகிழ்ச்சி அடைகிறோம். என்றாலும் ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக் கொண்டுதான் தாங்கள் இங்கு வந்திருக்க வேண்டும். தயை கூர்ந்து அதனை எங்களுக்குச் சொல்ல வேண்டும்" என்று கூறினார். கிருஷ்ணன், 'முனிவரே! சிவனைக் கண்டு அவருடன் பேச வேண்டும். அதற்கு என்ன வழி என்று சொல்லுங்கள்' என்று கேட்க, முனிவர் 'பாசுபத விரதம் இருந்தால் சிவனைக் காணலாம். அவ்விரதம் இருப்பவர்கள் எல்லையற்ற நம்பிக்கையுடனும், பக்தியுடனும் இதனைச் செய்ய வேண்டும்' என்று சொல்ல, கிருஷ்ணன் அவருக்கு நன்றி கூறிவிட்டு இமயமலைக்குச் சென்றார்.

இமயமலையில் சிவனைக் குறித்துக் கடுமையான பாசுபத விரதம் பூண்டார். நீண்ட காலத்திற்குப் பிறகு சிவன் பார்வதி யுடன் தோன்றி, "கிருஷ்ணன் என்ற பெயருடன் வாழும் விஷ்ணுவே! இந்த உலகத்தில் உள்ள எல்லாப் பொருளும் உம்முடையவை. நினைத்த மாத்திரத்தில் எதையும் நீங்கள் பெற்றுக் கொள்ளலாமே. அப்படியிருக்க என்னைக் குறித்துத் தவம் செய்யக் காரணம் என்ன?" என்று கேட்டார். கிருஷ்ணன் 'தங்களைப் போன்றே எனக்கொரு பிள்ளை பிறக்க வேண்டும். அந்தப் பிள்ளை சிறந்த சிவபக்தனாக இருக்கவேண்டும்' என்ற வரத்தைக் கேட்க, சிவன் 'அவ்வண்ணமே ஆகட்டும்' என்று கூறி மறைந்தார்.

அதன்படியே கிருஷ்ணனுக்கு, மனைவி ஜாம்பதியின் மூலம் சம்பா என்ற மகன் பிறந்தான். அவன் சிறந்த சிவ பக்தனாக வாழ்ந்தான்.

*(இதனை அடுத்து கூர்ம புராணம் யுகங்கள் பற்றிப் பேசுகிறது.)*

### லிங்கங்கள்

சிவபெருமானின் ரூப, அரூப வடிவமாக இருப்பது லிங்கமே ஆகும். வாரணாசியில் மிகச் சிறந்த லிங்கங்கள் உள்ளன. இவற்றுள் மிகப் பெரிய வடிவைக் கொண்டது ஓம்காரலிங்கம். மற்ற லிங்கங்களுள் முக்கியமானவையாகக் கருதப்படுபவை கிருத்திவாலேஸ்வரா, மத்ய தேஷ்வரா, விஷ்வேஸ்வரா, கபர்டிஷ்வரா. கூர்ம புராணம் இந்த லிங்கங்களின் மகிமை பற்றிக் கூறுகிறது.

### ஈஸ்வரகீதை

லோமஹர்ஷனர் கூடி இருந்த முனிவர்களுக்குக் கூர்ம புராணத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே கிருஷ்ண துவைபாயனரான வேதவியாசர் அங்கே வந்து சேர்ந்தார். லோமஹர்ஷனர் உள்ளிட்ட அனைவரும் அவரை வணங்கி, உண்மையான ஞானத்தைப் பெறுவதற்கு வழியைக் கூறுமாறு அவரை வேண்டிக் கொண்டனர். வேதவியாசர் சொல்ல ஆரம்பித்தார்.

"பரமாத்மன் தான் முற்றிலும் தூய்மையானதும், என்றும் உள்ளதும் ஆகும். அந்தப் பரமாத்மாவிலிருந்துதான் இப் பிரபஞ்சம் உற்பத்தி ஆகிறது. மகாபிரளய காலத்தில் இப் பிரபஞ்சம் முற்றிலுமாக ஒடுங்கி, அப்பரமாத்மாவினிடமே சென்று சேர்ந்து விடுகிறது. பரமாத்மா ஐம்பூதங்களும் அல்ல. அதனைத் தொடவோ, முகரவோ, வேறு பொறிபுலன்களால் அறியவோ முடியாது. ஜீவாத்மாவில் பரமாத்மா என்றும் இருந்து வருகிறது. ஜீவாத்மாவில் கலந்திருக்கின்ற அகங்காரமே, ஜீவாத்மாவோடு ஒன்றியிருக்கின்ற பரமாத்மாவை அறிய விடாமல் செய்கின்றது. அகங்காரத்தின் காரணமாக ஏற்படும் இந்த மாயையிலிருந்து உண்மையான அறிவொளிகள் விடுபடு கின்றனர். ஞானி என்பவன் தன் ஆத்மாவிற்கும், காணப்

படுகின்ற பிற பொருட்களுக்கும் இடையே எந்த வேற்றுமை யையும் காண்பதில்லை. ஒரே பரமாத்மா சர, அசர எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கின்றது. ஆறுகளெல்லாம் கடலில் சென்று கலப்பதுபோல, உலகத்தில் உள்ள உயிர்களெல்லாம் இறுதியில் பரமாத்மாவைச் சென்று அடைகின்றன.

யோகம் என்பது தியானத்தின் ஒரு பகுதியாகும். இந்தப் பயிற்சியின் மூலம் இந்த ஜீவாத்ம—பரமாத்ம ஒருமைப் பாட்டைத் தெளிவாக அறிய முடியும். யோகம் என்பது எட்டு வகைப்படும். முதலாவது பிராணாயாமம். பிராணாயாமம் என்றால் மூச்சைக் கட்டுப்படுத்துதல் என்பது பொருளாகும். ரேசகம் என்பது மூச்சை வெளியே விடுவதாகும். பூரகம் என்பது மூச்சை உள்ளே இழுத்தல் ஆகும். கும்பகம் என்பது இவை இரண்டும் இல்லாமல் இருப்பதாகும்.

இரண்டாவது படி பிரத்யாகாரம் எனப்படும். இது பொறிபுலன்களை அடக்குவதாகும். யோகத்தைப் பயிலும் போது உட்கார வேண்டிய முறை அறிந்து உட்கார வேண்டும். சரியான ஆசனம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நான்காவது படி இயமம் எனப்படும். அஹிம்சை, சத்தியம், இரக்கம் என்பவற்றைக் கடைப்பிடிப்பதாகும். நியமம் என்பது ஐந்தாவது படி. கடவுளை பக்தியோடு வழிபடுதல், வேதம் முதலிய வற்றைக் கற்றல், அகப்புறத் தூய்மையோடு இருத்தல், தியானம் ஆகியவையாம். தியானம் என்பது பரப்பிரம்மத்தை ஏதாவது ஒரு வழியுடன் மனத்தில் இருத்தி அதனையே நினைப்பதாகும். இது ஆறாவது படியாகும். தாரணா என்பது கற்பித்துக் கொண்ட தெய்வவடிவை மனத்தில் ஆழமாகப் பதித்துக் கொள்வதாகும். இது ஏழாவது படி. சமாதி என்ற எட்டாவது நிலை, பரமாத்மனையும், ஜீவாத்மனையும் ஐக்கியப்படுத்திக் கொள்வதாகும்.

### சடங்குகள்

குருவை எப்பொழுதும் மதித்து நடப்பதுடன், வணங்க வேண்டும். எந்த ஒருவரிடமிருந்தாவது ஞானத்தைப் பெறக் கூடிய இயல்பு இருந்தால் அந்த ஒருவரை குரு என்றே சொல்ல வேண்டும். பொதுவாகப் பேசுமிடத்து, அறிவு புகட்டுகின்ற ஆசிரியர்கள் அல்லாமல் தந்தை, மூத்த சகோதரன், அரசன், மாமன், மாமனார், தாத்தா ஆகியோரையும் குருவாகக் கொள்ளலாம். குருவோடு சமமான ஆசனத்தில் உட்காரக் கூடாது. குருவிடம் விவகாரம் செய்தலோ, மரியாதைக் குறைவாக நடந்து கொள்வதோ கூடாது. குருவை அவமதிப்பவன் பாவத்திற்குள்ளாகிறான். குருக்களுக்குள் சிறந்தவர்கள் தாய், தந்தை, ஆசிரியர், மூத்த சகோதரன் என்பவர்களாவர்.

மந்திரங்களுள் சிறந்தது காயத்ரி மந்திரம். இறந்த வீட்டிலும், இரகண காலத்திலும் வேதங்களைப் படிக்கக் கூடாது. படுக்கையில் படுத்துக் கொண்டோ, புலால் உணவை உண்ட பிறகோ வேதங்களைப் படிக்கலாகாது. புயலடிக்கும் நேரம், அமாவாசை ஆகிய நேரங்களில் படித்தல் கூடாது.

### கபால மோட்சன தீர்த்தம்

'சிவன் கையில் ஒட்டிக் கொண்ட பிரம்ம கபாலம் எவ்வாறு எங்கே சிவனுடைய கையை விட்டு நீங்கிற்று' என்று முனிவர்கள் கேட்க, லோமஹர்ஷனர் சொல்ல ஆரம்பித்தார்.

முன்னொரு காலத்தில் தன் எதிரில் குடியிருந்த முனிவர்களை எல்லாம் பார்த்து பிரம்மன் தன்னை மறந்தான். பின்வருமாறு பேசத் தொடங்கினான்: "ஓ முனிவர்களே! என்னை யாரென்று நினைத்தீர்கள். சுவயம்புவாகத் தோன்றியவனும், முடிவில்லாதவனுமாகிய நானே பரப்

*பிரம்மம். தேவருலகில் உள்ளவர்களையும் நானே இயக்கு கிறேன். அனைத்தையும் படைக்கின்ற என்னைவிட உயர்ந்த வர்கள் யாருமில்லை. எல்லா தேவதைகளும், தெய்வங்களும் என் இச்சைப்படியே பணிபுரிகின்றனர்!" என்று கூறி முடித்தான்.*

*பிரம்மன் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில், நாராயணனின் ஒரு கூறு விஷ்ணு என்ற பெயரில் பிரம்மம் முன்வந்து பேச ஆரம்பித்தது. வந்த விஷ்ணு சொரூபம், "ஓ பிரம்மனே! நீ என்ன பேசிக் கொண்டிருக்கிறாய். மூன்று கண்களை உடைய பிரபு உன்மேல் மிகவும் வெறுப்புற்று இருக்கிறார். நீ பெரிய அறியாமை என்ற இருளில் மூழ்கி இருக்கிறாய். அந்த இருளில் உன்னை மூழ்கடித்தது உன் அகம்பாவமே ஆகும். நான்தான் அண்டபிண்ட சராசரம் அனைத்தையும் காக்கின்றவன். என்னுடைய ஆணையின் மேல்தான் நீ இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்துக் கொண் டிருக்கிறாய்." இவர்கள் இருவரும் இவ்வாறு சண்டையிட்டுக் கொண்டிருக்கும் பொழுது, நான்கு வேதங்களும் அங்கு வந்தன. வந்த நான்கு வேதங்களும் பிரம்மாவையும், யக்ஞ ஸ்வரூபி விஷ்ணுவையும் பார்த்து, மூலப் பரம்பொருளின் தன்மை என்ன என்பதை விளக்க ஆரம்பித்தன.*

**ரிக்வேதம் பேசியதாவது**

*பிரபு மகேஸ்வரனிடம் இருந்துதான் அனைத்தும் தோன்று கின்றன. அவர் விருப்பத்தினாலேயே பிரபஞ்சம் நிலைத் திருக்கிறது.*

**யஜுர்வேதம் கூறியது**

*பினாகபாணியாகிய ஈஸ்வரனைத்தான் சகலரும் வணங்குகின்றனர்.*

**சாமவேதம் கூறியது**

தேவதேவன் என்று சொல்லப்படுபவர் சங்கரரே ஆவார். அவரைச் சுற்றியே பிரபஞ்சத்தின் தோற்றம், நிலைபேறு, மறைவு ஆகியவை நடைபெறுகின்றன. யோகிகள் தம் ஆத்ம ஞானத்தால் அறிந்து மூலப் பரம்பொருள் என்று வழிபடுவதும் இவரைத்தான்.

**அதர்வணவேதம் கூறியது**

மெய்ஞ்ஞானிகள் பவன் என்றும், புருஷன் என்றும், ருத்ரன், தேவதேவன் என்றும் அறிந்து வழிபடுவது இவரைத் தான். வேதங்கள் கூறிய வார்த்தைகளைக் கேட்ட பிரம்மன், ஏளனச் சிரிப்பு சிரித்துக் கொண்டு, 'பரப்பிரம்மம் என்பது, எதையும் பற்றாமல் இருக்க வேண்டும். நீங்கள் சொல்லும் தேவதேவன் மனைவியோடு வாழ்கின்றவர். அவருடைய பரிவாரங்கள் மிகவும் கர்வம் கொண்டவர்களாக இருக்கின்றனர்' என்று கூறியவுடன் வடிவமற்றதாகிய 'பிரணவம்' ஓர் வடிவெடுத்து பிரம்மன் முன் நின்றது. பிரணவம் பேசத் தொடங்கிற்று:

"மகேசன் என்று சொல்லப்படும் சங்கரன், அல்லது சிவம் நீ நினைப்பது போல் தன்னிலும் வேறான ஒரு தனிப்பட்ட பொருளைச் சக்தி என்று கூறித் தன்னுடன் வைத்துக்கொள்ள வில்லை. அந்தச் சக்தி சிவனின் வேறுபட்டதன்று. பார்வதி என்ற அப்பெண் தெய்வம், பரமனின் அனந்த சொரூபம் அன்றி அவனின் வேறுபட்டுத் தனித்தியங்கும் இயல்புடைய தன்று. பிரணவம் இவ்வாறு பேசியும், அஜன் என்றழைக்கப் படும் பிரம்மன் மாயையினின்று விடுபடவில்லை. அந்த மாயையும் சிவனால் அருளப்பட்டதே ஆகும்.

அஜன் என்ற பிரம்மன் இவ்வாறு பேசிக் கொண் டிருக்கையில், அவன் எதிரில் விண்ணையும், மண்ணையும்

தொட்டுக் கொண்டு ஒரு ஒளிப்பிழம்பு தோன்றியது. அந்த ஒளிப்பிழம்பின் இடையே கோடி சூரியப் பிரகாசத்துடன் மற்றோர் ஒளிப்பிழம்பு காட்சி அளித்தது. இவ்வாறு நின்ற வடிவம் அனைத்திற்கும் மேம்பட்டவனும், கையில் சூலத்தை உடையவனும், பாம்பைப் பூணூலாக அணிந்தவனும், நீல லோகிதன் என்ற பெயரை உடையவனும் ஆகிய சங்கரனே ஆகும். இந்த வடிவத்தைக் கண்ட பிரம்மன், "ஓ, சங்கரா! ஒரு காலத்தில் என் நெற்றியிலிருந்து பிறந்தவன் தானே நீ. இப்பொழுது என்னுள் அடைக்கலம் புகுந்து கொள்" என்று கூறினான்.

ஆணவமே வடிவான இந்த வார்த்தைகளைக் கேட்ட வுடன் சங்கரனிடம் இருந்து காலபைரவ மூர்த்தி என்றொருவர் தோன்றினார். கையில் திரிசூலத்துடன் தோன்றிய அவர், அகம்பாவம் கொண்ட பிரம்மனுடன் போர் புரிந்தார். இறுதியாக அவருடைய ஐந்தாவது தலையைக் கிள்ளி எடுத்து விட்டார். சம்பு என்ற பெயர் படைத்த சங்கரன் கால பைரவ வடிவத்தில் பிரம்மன் தலையைக் கொய்தவுடன், பிரம்மன் இறந்து விட்டார். ஆனால், ஈசன் என்ற பெயருடைய சங்கரன், தன் யோக சக்தியால், பிரம்மனை மறுபடியும் பிழைக்கச் செய்து விட்டார். உயிர் பெற்ற பிரம்மன், ஈசானன் ஆகிய சிவன் தன் சக்தியுடன் கூடி அந்த ஒளிப்பிழம்பிற்கு அப்பால் இருப்பதைக் கண்டான். காலசர்ப்பத்தை கையில் அணிந்த வனாய், புலித் தோலை இடையில் கட்டியவனாய், கோடி சூரியப் பிரகாசம் உடையவனாய் தன் சடைக்கு அழகு செய்யும் வகையில் பிறைச் சந்திரனைச் சூடியவனாய், திரிசூலத்தைக் கையில் ஏந்தியவனாய் இருக்கும், ஈசானன் எனப்படும் மகாதேவனை பிரம்மனால் காண முடிந்தது.

பிரம்ம தேவனின் கபாலம் கால பைரவனின் கையில் ஒட்டிக் கொண்டு விழ மறுத்து விட்டது. அந்தக் கபாலத்துடன்

விஷ்ணுவிடம் பிச்சை ஏற்பதற்காகச் சென்றார். விஷ்ணு தன்னைத் தீயிலிருந்து இரத்தம் கபாலத்தில் விழுமாறு செய்தும் கபாலம் விழவில்லை. பிராமணனாகிய பிரம்மனைக் கொன்றதால், பிரம்மஹத்தி தோஷம் குரூரமான பெண் வடிவுடன் காலபைரவரைப் பின்தொடர்ந்தது. எங்கு சென்றும் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் இறுதியாகக் காலபைரவர் வாரணாசிக்குள் நுழைந்தார். அந்த எல்லையிலேயே பிரம்மஹத்தி அவரை விட்டுப் பிரிந்து விட்டது. நகருக்குள் சென்றதும் கையில் இருந்த கபாலமும், காலபைரவர் கையை விட்டுக் கீழே விழுந்து விட்டது. பிரம்ம கபாலம் கையை விட்டு நீங்கிய இடம் ஆதலால், வாரணாசிக்குக் கபாலமோசன தீர்த்தம் என்ற பெயர் வந்தது.

**சீதையின் அக்னிப் பிரவேசக் கதை**

*(பிரசித்தி பெற்ற வால்மீகி இராமாயணத்தின் மிக முக்கியமான பகுதி சீதையை இராவணன் களவாடிச் சென்றதாகும். வால்மீகிப்படி, இராமனின் மனைவியும், ஜனகன் புத்ரியும், தசரதனின் மருமகளும் ஆகிய சீதையைத் தான் இராவணன் களவாடிச் சென்றான். ஆனால் இந்த முக்கியமான கட்டத்தில் கூர்மபுராணம் சில மாற்றங்களைச் செய்து ஒரு புதிய திருப்பத்தைத் தருகிறது.*

*ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த துளசிதாசர், வால்மீகி உள்பட எல்லாருடைய இராமாயணங்களும் ஒரே மாதிரியாகச் சொல்லிய சீதை சிறையெடுக்கப்பட்ட கதையினை மாற்றி, களவெடுக்கப்பட்ட சீதை உண்மையான சீதை அல்லள்; சாயா சீதை என்று முதன் முதலில் பாடுகிறவர் துளசி தாசரே ஆவார். இந்த மாற்றத்தைத் துளசிதாசர் தாமே செய்யவில்லை; அதிகம் பயிலப்படாத கூர்மபுராணத்தில் இருந்துதான் இக் கதையை எடுத்துக் கொண்டார் என்பதை நன்கறிய முடியும்.)*

**கூர்ம புராணப்படி**
**சீதை களவாடப்பட்ட கதை வருமாறு :**

*இராவணனுடைய தீய எண்ணங்களை, தெய்வ சக்தியால் முன்னரே அறிந்திருந்த ஜானகி, காட்டில் அமைதியாகக் கண்களை மூடிக் கொண்டு அக்னி தேவனை வழிபடும் எட்டுப் பாடல்களுடன் கூடிய வாகினி மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தாள். இதன் முடிவில் மகேஸ்வரன் ஜோதி வடிவுடன் அங்கே தோன்றி சீதையைப் போலவே ஒரு மாய சீதையை உற்பத்தி செய்து, அங்கே இருக்கச் செய்துவிட்டு, உண்மைச் சீதையை அக்னி சொரூபமான தன்னுள் மறைத்துக் கொண்டார். இராவணன் சந்நியாசியாக வடிவம் கொண்டு சீதையிடம் வருவதற்கு முன்பே இது நடைபெற்று விட்டது. காலன் என்ற பெயருடைய யமனால் தூண்டப்பட்ட இராவணன் சீதையைக் கவர வருகின்றான். (அக்னி புராணக் கதையின்படி இராவணன் தங்கையாகிய சூர்ப்பநகை என்ற பாத்திரமே இல்லை. மற்ற இராமாயணங்களின்படி சூர்ப்பநகை தான் இராவணன் மனத்தில் சீதை பற்றிய எண்ணங்களை உருவாக்கினாள். ஆனால் கூர்ம புராணப்படி இராவணனைத் தூண்டியவன் காலன் என்று அழைக்கப்படும் யமனே ஆவான்.) இராவணன் எடுத்துச் சென்றது சாயா சீதை என்பதை இராவணனோ, இராமனோ, இலக்குவனோ எவரும் அறியமாட்டார்கள்.*

*இராவண வதம் முடிந்த பிறகு, மாயா சீதை (சாயா சீதை) இராமன் முன் அழைத்து வரப்படுகிறாள். அவளைக் கண்டவுடன் என்ன காரணத்தாலோ, ராமன் மனத்தில் இவள் உண்மையான சீதை அல்லள் என்ற ஐயம் தோன்றுகின்றது. ஆகவேதான் அவளைத் தீக்குளிக்குமாறு சொல்லுகிறான். உண்மைச் சீதையை மறைத்து வைத்திருந்த அக்னிக்கும், இந்த மாயா சீதை இருக்கின்ற வரை உண்மைச் சீதையை வெளிக்*

கொண்டு வர முடியாது. அந்த இக்கட்டையும் போக்குகின்ற முறையில், இராமன் உத்தரவினால் மாயா சீதை நெருப்பில் விழுந்து மறைந்து விட, உண்மையான சீதையை அக்னி தேவன் வெளியே கொண்டு வருகிறான்.

## நந்தி

முன்னொரு காலத்தில் ஷிலதா என்ற முனிவர் சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார். ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்த பிறகு சிவன் எதிரே வந்தார். பார்வதியுடன் வந்த சிவன், உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்க, 'தாயின் வயிற்றில் பிறக்காதவனும், தங்களைப் போன்றவனும், மரணத்தின் பிடியில் அகப்படாதவனும் ஆகிய ஒரு மகன் எனக்கு வேண்டும்' என்று கேட்க சிவன் அப்படியே ஆகட்டும் என்று கூறி மறைந்தார். அதன் பிறகு ஷிலதா முனிவர் பூமியை உழுகையில் சூரியப்பிரகாசத்தை உடைய ஒரு குழந்தை காணப்பட்டான். அந்தக் குழந்தையைக் கட்டி மகிழ்ந்தார். குழந்தை வளர வளர ஒரு பிராமணச் சிறுவனுக்குரிய பூணூல் அணிதல் முதலிய சடங்குகளை முறையாகச் செய்வித்தார். பிறகு வேதம் கற்பித்தார். எல்லாவற்றையும் எளிதாகக் கற்றுக் கொண்ட குழந்தை தான் தவம் செய்யப் போவதாகக் கூறிவிட்டுக் கடற்கரைக்குச் சென்று சிவனை தியானித்து ஒரு கோடி ருத்ரஜபம் செய்தான். ஜபம் முடிந்ததும் சிவன் எதிரில் தோன்றி, 'உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்' என்றார். இளைஞன் இன்னும் ஒரு கோடி ருத்ரஜெபம் செய்ய அருள் செய்ய வேண்டும் என்று கேட்க, மகேசனும் ஒப்புக் கொண்டார். இதுபோல மூன்றாவது கோடியை முடித்த பொழுது, சிவன் தோன்றினார். 'மறுபடியும் ஒரு கோடி ஜபம் செய்ய வேண்டும்' என்று கேட்க, சிவன் அது தேவையில்லை. இப்பொழுதே உன்னை எல்லாக் கணங்களுக்கும் தலைவனாக

*ஆக்கிவிட்டேன். என் மகனைப் போல நீ இருக்கலாம் என்று வரமளித்தார். சிவனே மருத்தின் மகள் ஒருத்தியை நந்திக்குத் திருமணம் செய்து வைத்தார்.*

**நால்வகைப் பிரளயங்கள்**

*கூர்மத்தின் வாயாலேயே கூர்ம புராணத்தைக் கேட்ட முனிவர்கள் "கூர்ம அவதாரம் கொண்ட நாராயணனே, தங்கள் மூலம் பல்வேறு வகையான விஷயங்களை அறிந்து கொண்டோம். பிரளயம் என்பது என்ன? அதைப் பற்றி விளக்கிச் சொன்னால் நன்றாக இருக்கும்" என்று கேட்க கூர்மம் சொல்லத் தொடங்கியது.*

*உயிருடன் வாழும் ஜீவராசிகள் அன்றாடம் இறந்து கொண்டே இருக்கின்றன. இது நித்தியப் பிரளயம் எனப்படும். கல்பமுடிவில் மூன்று உலகங்களும் அழிவது நைமித்திகப் பிரளயம் எனப்படும். பிரபஞ்ச நிலைப்பேற்றுக்கு மூலமாக உள்ள காரணங்கள் அனைத்தும் ஒருசேர அழிவதைப் பிராகிருத பிரதிசர்கா (பெரும்பிரளயம்) என்று கூறுவர். எல்லாம் அழிந்த நிலையிலும் எஞ்சி இருக்கின்ற யோகிகள் மூலப்பொருளுடன் ஐக்கியமாவதை ஆத்யந்திகப் பிரதிசர்கா (மகாப்பிரளயம்) என்று கூறுவர்.*

*நான்கு யுகங்கள் கூடிய ஓர் எண்ணிக்கை போல, ஆயிரம் எண்ணிக்கைகள் முடிந்த பிறகு பிரஜாபதி அனைத்தையும் தம் ஆன்மாவுக்குள் அடக்கிக் கொள்கிறார். அதன் பிறகு நூறு ஆண்டுகளுக்கு மழை என்பதே இல்லாமல் பெரு வறட்சி தோன்றுகிறது. இதனால் எந்த ஒரு உயிரும் நிலை கொள்ள முடியாமல் அழிகின்றன. இந்நிலையில் அனைத்தும் கருகி பூமியுடன் ஐக்கியமாகிவிடுகின்றன. உலகம் முழுவதும் பாலை வனமாகக் காட்சி அளிக்கும் அந்நிலையில் சூரியன் தோன்றி*

தன் ஏழு கிரணங்களாலும் கடலைக் குடிக்க முற்படுகிறான். கடல்நீர் முழுவதையும் குடித்த பிறகு அக்கிரணங்கள் பூமியை எரிக்கத் தொடங்குகின்றன. பூமியின் மேல், கீழ், நடு ஆகிய பகுதிகளில் பாயும் சூரிய கிரகணங்கள் பூமியை முழுவதும் சூழ்ந்து கொள்வதால் பூமியே நெருப்புப் பந்தாக ஆகிவிடுகிறது. இந்தப் பெரு நெருப்பு நான்கு உலகங்களையும் எரித்துச் சாம்பலாக்குகிறது. ஸ்தாவர, சங்கம உயிரினங்கள் அனைத்தும் அழிந்த நிலையில் பூமியே ஒரு ஆமையின் முதுகு போல் தோன்றுகிறது.



# 16. மச்ச புராணம்

## இப்புராணம் பற்றி...

வடமொழியில் இப்புராணத்தின் பெயர் 'மத்ஸ்ய புராணம்' என்று வழங்கப்படும்.

விஷ்ணு, மீன் அவதாரம் எடுத்து, பெருவெள்ளத்தில் இருந்து மண்ணையும், குடிகளையும் காப்பாற்றுவது பற்றிப் புராணம் பேசுகிறது. தொன்மையான இக்கதை பார்சிகளின் வேதமாகிய அவஸ்தாவிலும், கிரேக்கப் பழங்கதைகளிலும் இடம் பெற்றுள்ளதாகும்.

மச்ச அவதாரத்தில், வேதத்தை எடுத்துச் சென்று நீருக்கடியில் வைத்திருந்த ஹயக்கிரீவன் என்ற அசுரனைக் கொன்று வேதத்தை மீட்டுக் கொடுத்த கதை இதிலடங்கும். இந்தியாவில் உள்ள சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணாபத்தியம், கௌமாரம் ஆகிய ஆறு சமயங்களும் வேதங்களை ஒப்புக் கொள்வதால், இந்தப் புராணத்தையும் ஏற்றுக் கொள்கின்றன.

14,000 பாடல்களைக் கொண்ட இப்புராணம், மேலே கூறிய ஆறுவகைச் சமயங்களில் குறிப்பிட்ட ஒரு சமயத்துக்கு உரியது என்று கூறமுடியாது.

முன்னொரு காலத்தில் நைமிசாரண்ய வனத்தில் முனிவர்கள் பலரும் கூடி ஒரு யாகம் நடத்தினர். யாகம் முடிந்தபின் லோமஹர்ஷனரைப் பார்த்து இதுவரை பல புராணங்களை எங்களுக்குக் கூறினீர்கள். மேலும் கேட்க வேண்டும் என்ற ஆசையால் உங்களை நாடுகிறோம் என்று கூறினார்கள்.

லோமஹர்ஷனர், "புராணங்களில் எல்லாம் மிகப் பழைமையானதும், புண்ணியம் வாய்ந்ததும் ஆன மச்ச புராணத்தை இப்பொழுது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். மிக்க கவனத்துடன் அதைக் கேட்பீர்களாக" என்ற முன்னுரையுடன் லோமஹர்ஷனர் சொல்ல ஆரம்பித்தார்.

**விஷ்ணுவும், மனுவும்**

முன்னொரு காலத்தில் மனு என்ற மன்னன் இப்பூமியை ஆட்சி செய்து வந்தான். இவன் முதல் மனு என்று மச்ச புராணம் கூறினாலும், அதே நேரத்தில் இவன் சூரியன் மைந்தன் என்றும் கூறுகிறது *(மற்றப் புராணங்களின்படி சூரியன் மைந்தனாகிய மனு ஆவான்.)* உரிய காலத்தில் மனு வேந்தன் அரசைத் தன் மகனிடம் ஒப்புவித்து விட்டுக் காட்டிற்குத் தவம் செய்யச் சென்றான். ஆயிரம் வருடங்கள் தவம் செய்த பிறகு பிரம்மா அவன் எதிரே தோன்றினார். 'உனக்கு என்ன வரம் வேண்டும்' என்று பிரம்மா கேட்க, மனு பின்வருமாறு பதில் கூறினான். "பிரம்மனே! என் விருப்பத்தையெல்லாம் ஒரே ஒரு வரத்தில் கேட்டு விடுகின்றேன். அண்மைக் காலத்திலோ அல்லது பலகாலம் கழித்தோ பிரளயம் வந்து இவ்வுலகத்தை அழிக்கப் போகிறது. அந்த அழிவுக் காலத்தில் நான் மட்டும் இருந்து இந்த உலகத்தையும் எல்லா உயிர்களையும் காக்கும் பணியைச்

செய்ய வேண்டுகிறேன்'' என்றான். அதுகேட்ட பிரம்மன், 'அப்படியே ஆகட்டும்' என்று கூறி மறைந்தான்.

சிலகாலம் சென்றபிறகு ஒரு நாள், தவசியாகிய மனு பக்கத்தில் உள்ள குளத்தில் நீராடச் சென்றான். குளித்த பிறகு, பிதுர்க்கடன் செய்வதற்காக இரண்டு கைகளையும் குவித்து அதில் நீரை முகந்தான். கைக்குள் இருந்த நீரில் மிகச்சிறிய மீன் குஞ்சு இங்கும் அங்கும் நீந்திச் சென்றது. அதை விட்டுவிட மனமில்லாத மனு அதைத் தன் கமண்டலத்துள் போட்டான். மறுநாள் கமண்டலத்தை விடப் பெரிதாகிவிட்ட அந்த மீன், 'மனுவே இந்தக் கமண்டலம் சிறிதாக இருக்கிறது. பெரிய இடத்தில் என்னை விடவும்' என்று கூற, மன்னன் அதை ஒரு தொட்டியில் விட்டான். ஒரே நாளில் தொட்டி முழுவதையும் அடைத்துக் கொண்டது அந்த மீன். மறுபடி குளத்தில் விட, குளத்தைவிடப் பெரிதாக மீன் வளர அதை கங்கையில் விட, கங்கையை அடைத்துக் கொண்டு பெரிதாக வளர, இறுதியில் மீனை சமுத்திரத்தில் விட்டான். கடல் சிறிதாகும்படி மீன் வளர்ந்து கடலையே அடைத்துக் கொண்டது. இது கண்டு அதிசயித்த மனு மன்னன் அந்த மீனைப் பார்த்து, 'நீ யார் என்பதை அறிய விரும்புகிறேன். மாயா சக்தியால் என்னை ஏமாற்றுகின்ற நீ அசுரனா? இல்லை, இருக்க முடியாது. நீ விஷ்ணுவாகத்தான் இருக்க முடியும். அறிந்துகொள்ள வேண்டும் என்ற என் ஆவலைப் பூர்த்தி செய்ய வேண்டு கிறேன்.'' உடனே விஷ்ணு பேச ஆரம்பித்தார்.

"மனுவே! நீ நினைத்தது சரிதான். விஷ்ணுவாகிய நான்தான் இந்தப் பெரிய மீன் வடிவம் கொண்டுள்ளேன். இன்னும் சிறிது காலத்தில் மாபெரும் வெள்ளம் வந்து பூமியை மூடப்போகிறது. அந்த வெள்ளத்தில் உன்னிடம் ஒரு படகு வந்து சேரும். அந்தப் படகு தேவர்களால் செய்யப் பெற்றது. அப்படகில் எல்லா ஜீவராசிகளையும் ஏற்றிக்

கொண்டு நீயும் ஏறிக் கொள்வாயாக. அனைவரும் ஏறியவுடன் நானே அங்கு வருவேன். என் முகத்தில் முளைத்துள்ள கொம்பில் படகைக் கட்டி விடுவாயாக. இம்மாதிரி செய்வதால் உயிர் வர்க்கங்கள் பிழைத்துக் கொள்ளும். நீர் வடிந்த பின்பு உயிர் வர்க்கங்களை உரிய இடத்தில் சேர்ப்பித்து இந்தப் பூமியை நீ ஆள்வாயாக" என்று கூறிவிட்டு மறைந்தார். நூறாண்டுகள் மழையே பெய்யாததால் மரம், செடி, கொடிகள் அனைத்தும் வெந்து கரியாயின. பல மக்கள் பஞ்சத்திற்கு பலியாயினர். சூரியன் பூமியை அக்னிக் குண்டமாக மாற்றி னான். இவ்வாறு நடைபெற்ற பின் நூறாண்டுகள் முடியவே சம்வர்தா, சண்டா முதலிய சப்த மேகங்களும் ஒன்றாகக் கூடி, விடாமல் நூறு ஆண்டுகள் மழையாகப் பொழிந்தன. அதன் பயனாக பூமி முழுவதும் நீரில் மறைந்தது. விஷ்ணு சொன்ன படியே படகும் வந்தது. மனு, உயிர் வர்க்கங்களை ஏற்றிக் கொண்டு அங்கு தோன்றிய மீன் கொம்பில் படகைக் கட்டி விட்டான். மீன் பல இடங்களுக்கும் படகை இழுத்துச் சென்றது. அப்படிச் செல்கின்ற காலத்தில் மனு மீனிடம் பல கேள்வி களைக் கேட்டான். மீன் சொன்ன பதிலே மச்ச புராணமாகும்.

### பிரபஞ்சத் தோற்றம்

ஆதியில் எங்கும் இருளே படர்ந்திருந்தது. ஒருநாள் அந்த இருளைக் கிழித்துக் கொண்டு பரப்பிரம்மம் வெளியே வந்தது. வெளியே வந்த அது தன்னைத் தானே மூன்று பங்காகப் பிரித்துக் கொண்டது. பிரம்மா, விஷ்ணு, சிவன் உண்டாயினர். முதலில் தோற்றுவிக்கப்பட்டது நீரே ஆகும். விஷ்ணு அதில் படுத்து உறங்கலானார். நீண்ட காலத்திற்குப் பிறகு நீரில் ஒரு பொன்முட்டை மிதக்கலாயிற்று. அது கோடி சூரியப் பிரகாசமாய் இருந்தது. அதன் உள்ளே ஒரு பகுதியில் பிரம்மன் தன்னைத் தானே உருவாக்கிக் கொண்டார். மறுபாதியில் இந்தப் பிரபஞ்சம் முழுதும் கருவடிவில் இருந்தது. ஓராயிரம்

ஆண்டுகள் முட்டைக்குள் இருந்த பிரம்மன் இறுதியில் அதை இரண்டாகப் பிரித்துக் கொண்டு வெளியே வரலானார். அவர் இருந்த பாதிபோக எதிர்ப்பாதி கருவடிவிலிருந்த பிரபஞ்சத் திற்கு முழு வடிவு கொடுத்தார். இந்தத் தோற்றத்திலேயே சூரியனும் தோற்றுவிக்கப்பட்டான். ஆதியில் தோன்றியவன் ஆதலால், ஆதித்யன் என்ற பெயரும் பெற்றான். மிக நீண்ட காலம் பிரம்மன் தவத்தில் ஈடுபட்டார். தவத்தில் இருக்கும் பொழுதுதான் அவர் வாயிலிருந்து வேதம், புராணங்கள், சாத்திரங்கள் வெளிப்பட்டன. பிரம்மனுடைய மனத்திலிருந்து மானசீக புத்திரர்களாகப் பத்துப்பேர் தோன்றினர். அவர்களே முதல் பத்து முனிவர்கள் ஆவர். மரீச்சி, அத்ரி, புலஸ்தியா, புலஹ ஆகிய பதின்மர் ஆவர். ஆனால் பிரபஞ்சம் வளர வேண்டுமானால் தாயும், தந்தையும் தேவை. எனவே பிரம்மன் தன் உடம்பில் இருந்தே ஸ்வயம்பு மனு என்ற ஆணையும், ஷத்த ரூபா என்ற பெண்ணையும் உற்பத்தி செய்தார். இந்த ஷத்த ரூபாவை சாவித்திரி, காயத்ரி, சரஸ்வதி, பிராமணி என்ற பெயர்களாலும் குறிப்பிடுவர்.

ஷத்த ரூபா, பிரம்மனிடத்தில் தோன்றியதாலும், எல்லை யற்ற அழகுடையவளாய் இருந்ததாலும் பத்து முனிவர்களும் அவளைத் தங்கை என்றே கூறினர். ஆனால் அவள் அழகில் ஈடுபட்ட பிரம்மன் அவளை மணந்து கொள்ள விரும்பினார். இந்த நிலையில் ஷத்த ரூபா மிக்க மரியாதையுடன் பிரம்மனைச் சுற்றி வரலானாள். அவள் தன் பார்வையிலிருந்து விலகிச் சென்று வலப்புறம், பின்புறம், இடப்புறம் ஆகிய பகுதிகளில் சுற்றி வரும்பொழுது அவளைப் பார்க்க முடியவில்லையே என்று வருந்திய பிரம்மன், நான்கு முகங்களைப் படைத்துக் கொண்டார். அவள் மேலே சென்றால் அங்கேயும் விடாமல் பார்க்க, ஐந்தாவது முகத்தையும் படைத்துக் கொண்டார். இதனால்தான் பிரம்மனுக்கு ஐந்து முகம் தோன்றியது.

ஷத்த ரூபாவை மணந்து கொண்ட பிரம்மன், நூறாண்டுகள் கணவனும், மனைவியுமாக வாழ்ந்து சுவயம்பு மனுவைப் பெற்றனர். மச்சபுராணம் வைவஸ்வத மனுவுக்கு மச்சத்தால் சொல்லப்பட்டது என்பதை நினைவுகூர வேண்டும். இப்பொழுது வைவஸ்த மனு ஒரு வினாவை எழுப்பினான். "ஓ விஷ்ணுவே! இது எனக்கு ஓரளவு ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. ஷத்த ரூபா என்பவள் பிரம்மனின் மகள்தானே! அப்படியிருக்க அவளையே மணந்து கொண்டது சரியா? என்று கேட்க, விஷ்ணு "சரியில்லைதான். ஆனால் பிரபஞ்சத்தில் மக்கள் தொகை பெருக வேண்டுமே. அதற்காகத்தான் பிரம்மன் இக்காரியம் செய்தார். தெய்வங்கள் செய்யும் செயலை மனிதர்களின் ஆராய்ச்சிக்கு உட்படுத்துவது சரியாகாது" என்று விஷ்ணு பதிலளித்தார்.

இதன் பிறகு பிரம்மன் மனோ சக்தியால் சனகர் முதலிய நால்வரையும், சிவனையும் படைத்தார். சிவனை அழைத்துத் தன் படைப்புத் தொழிலில் உதவுமாறு கேட்டுக் கொண்டார். சிவன் தன்னைப் போலவே சாவாமூவா மக்களைப் படைக்க பிரம்மன் சிவனைப் பார்த்து, இப்படியே படைத்தால் யமனுக்கு வேலை இல்லாமல் போய்விடும். எனவே பிறந்து இறந்து மறுபடியும் பிறக்கின்ற மக்களைப் படைக்க வேண்டும் என்று கூறினார். தாம் அவ்வாறு செய்ய முடியாது என்று சிவன் கூறியவுடன், 'தாங்கள் படைப்புத் தொழில் செய்ய வேண்டா. நானே அதனைப் பார்த்துக் கொள்கிறேன்' என்று பிரம்மா கூறிவிட்டார். உடனே ஸ்வயம்புமனு பன்னெடுங்காலம் தவம் செய்து அதன் பயனாய் ஆனந்தி என்ற பெண்ணை உண்டாக்கி அவளை மணந்து கொண்டார். இவர்கள் இருவரும், பிரியவரதா, உத்தானபாதா என்ற இரு மகன்களைப் பெற்றனர். உத்தானபாதன் பரம்பரையில் வந்த பிராச்சீனவர்ஹி, கடலரசன் மகள் சாவர்ணாவை மணந்து

கொண்டான். அவர்களுக்குத் தோன்றிய பத்துப் பிள்ளைகளே பிரசேதர்கள் எனப்பட்டனர். இந்தப் பதின்மரும் மரீஷா என்ற பெண்ணையே மணந்தனர். பிரசேதாவுக்கும், மரீஷாவிற்கும் தோன்றிய மகன் தட்சன் ஆவான்.

**தட்சன் பரம்பரை**

தட்சன் பஞ்சஜனி என்பவளை மணந்து ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் வளர்ந்து இளமைப் பருவம் எய்தியவுடன் நாரதர் அங்கு வந்து சேர்ந்தார். அவர்களைப் பார்த்து 'உங்கள் தந்தைக்குப் பிறகு அரசாள வேண்டியவர்கள் அல்லவா நீங்கள்? உலகம் எப்படி இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் எப்படி செம்மையாக ஆட்சி செய்ய முடியும்? ஆகவே உலகம் முழுவதையும் சுற்றிப் பார்த்து வாருங்கள்' என்று அனுப்பினார். யாத்திரை சென்ற ஆயிரம் பேரும் திரும்பி வரவே இல்லை. இதனை அறிந்த தட்சன் மனம் வருந்தி, மறுபடியும் ஓர் ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றான். இவர்களும் வளர்ந்து பருவம் அடைந்தவுடன், நாரதன் அதே வேலையைச் செய்ய இவர்களும் உலகைச் சுற்றி வருகிறேன் என்று சொல்லி காணாமல் போய்விட்டனர். இதனை அடுத்து தட்சன் அறுபது பெண்களைப் பெற்று பத்துப்பேரை தர்ம தேவதைக்கும், இருபத்தி ஏழு பேரை சந்திரனுக்கும், பதின்மூன்று பேரை காசிப முனிவருக்கும், எஞ்சியுள்ளவர்களை மற்ற முனிவர்களுக்கும் திருமணம் செய்து கொடுத்தான்.

காசியபனை மணந்த பதின்மூவருள் அதிதியும், திதியும் முக்கியமானவர்கள். அதிதி வயிற்றில் பிறந்த அனைவரும் ஆதித்தர் எனப்படும் தேவர்கள் ஆவர். திதி வயிற்றில் பிறந்தவர்கள் தைத்தியர்கள் ஆவர். காசிபனின் மனைவியருள்

ஒருத்தியான தனு மூலம் நூறு தானவர்கள் தோன்றினர். இவர்களில் விப்ரசித்தி முக்கியமானவன் ஆவான்.

*(இப்பகுதியில் காணப்படும் மருத்துக்களின் கதை முன்னரே சொல்லப்பட்டுள்ளது.)*

**மன்வந்திரங்கள்**

பிரம்மனுடைய ஒரு நாள் ஒரு கல்பம் எனப்படும். அவருடைய ஒரு நாளில் இந்த உலகைப் பொருத்தவரையில் பதினான்கு மன்வந்திரங்கள் வந்து போகின்றன. ஒவ்வொரு கல்பத்தின் முடிவிலும், இப்பூமி இல்லாமல், அண்டம் முழுவதும் அழிக்கப்படுகிறது. அழிக்கப்பட்ட பிறகு புதிய உற்பத்தி தொடங்குகிறது.

இப்பொழுது நடைபெறுகின்றது ஏழாவது மன்வந்திரம் ஆகும். ஆறு மன்வந்திரங்கள் முன்னரே வந்து போய்விட்டன. இந்த அண்டம் மறுபடியும் அழிவை எய்துவதற்கு இப் பொழுது நடைபெறுகின்ற மன்வந்திரம் போக இன்னும் ஏழு மன்வந்திரங்கள் நடைபெற உள்ளன. ஒவ்வொரு மன்வந்திரத்திலும் தெய்வங்களும், சப்த ரிஷிகளும், இந்திரர் களாக மாறுகின்றனர்.

1. முதல் மன்வந்திரம் சுவயம்பு மனு—தேவர்கள்; யமன்கள்.

2. இரண்டாவது ஸ்வரோசிஷா மன்வந்திரம்—தூத்ரஸ், முனிவர்கள் : தத்தோலி சாயாவனா, ஸ்தம்பா, ப்ரனா, காசிப, ஔர்வா, பிரஹஸ்பதி.

3. மூன்றாவது—ஔத்தமாவே மூன்றாவது மனு. தேவர்களுக்குப் பாவனர்கள் என்று பெயர். கௌகுருந்தி, டால்பியா, சங்கா, பிரவாஹனா, சிவா, சீதா, சஸ்மிதா ஆகியோர் சப்த ரிஷிகளாவர்.

4. நான்காவது தாமசமே நான்காவது மனு. ஏழு முனிவர்கள்—கவி, பிருத்து, அக்னி, அகபி, கபி, ஜல்பா, திமனா தேவர்களுக்கு சாத்யாஸ் என்று பெயர்.

5. ஐந்தாவது ரெய்வதாவே ஐந்தாவது மனு. தேவர்கள் அபுதரஜஸ் எனப்பட்டனர். தேவவாஹீ, சுவாஹீ, பார்ஜன்ய, சோமபாமுனி, ஹிரண்ய ரோமா, சப்தஷ்வா ஆகிய சப்த ரிஷிகள்.

6. ஆறாவது—சக்ஷீஸாவ ஆறாவது மனு. தேவர்கள் லேகாஸ் எனப்பட்டனர். சப்தரிஷிகள், பிருகு, சுதாமா, விரஜா, சஹிஷ்னு, நதா வைவஸ்வன், அடினமா.

7. ஏழாவது—இப்பொழுது நடைபெறும் மன்வந்திரம். வைவஸ்வத மனு என்று பெயர். அத்ரி, வசிட்டர், காசிபர், கௌதமர், பரத்வாஜர், விஸ்வாமித்திரர், ஜமதக்கினி ஆகிய ஏழு ரிஷிகள். தேவர்கள் சத்யாஸ் எனப்பட்டனர்.

8. எட்டாவது—சாவர்ணி எட்டாவது மனு. அஸ்வதாமா, சரத்வன, கௌசிகா, காலவ, விடானந்த, காசிபர், ராமா ஆகியோர் சப்த ரிஷிகளாவர்.

9. ஒன்பதாவது மனு ரௌக்யா, பத்தாவது மனு பௌத்யா, பதினோராவது மனு மேருசாவரணி, பன்னிரண் டாவது மனு ரிதா, பதின்மூன்றாவது மனு ரித்தமா, பதினான்காவது மனு விஸ்வகேசனா ஆகியவர் ஆகும். இதன் பின்பு பிருத்துவின் தோற்றம் விவரிக்கப்படுகிறது.

சூரிய வம்சம் காசியப முனிவன் அதிதி மூலம் பெற்ற மகன் வைவஸ்வத மனு ஆவான். இவனே சூரியனும் ஆவான். இவனுக்கு மூன்று மனைவியர் இருந்தனர். இவருள் சம்ஜனா என்பவருக்கு வைவஸ்வத மனு என்ற பிள்ளையும், யமன், யமுனா என்ற இரட்டைப் பிள்ளைகளும் பிறந்தனர்.

இரண்டாவது மனைவியாகிய ரஜனிக்கு ரேவதா என்ற மகனும், மூன்றாவது மனைவியான பிரபா என்பவருக்கு பிரபதா என்ற மகனும் தோன்றினர்.

சூரியனின் மிகுதியான ஆற்றலைத் தாங்க முடியாத சம்ஜனா தன்னைப் போலவே ஒரு பெண்ணைத் தன் உடம்பிலிருந்து உண்டாக்கினாள். அந்த வடிவத்திற்குச் சாயா என்று பெயர். சாயாவிற்கும் அவள் மூலமான சம்ஜனாவிற்கும் வேறுபாடு அறியாத சூரியன் சாயா மூலம் சாவர்ணி மனு, சனி என்ற பிள்ளைகளையும், தப்தி, விஷ்தி என்ற பெண் களையும் பெற்றான்.

சாயாவிற்கும், சம்ஜனாவின் மகன் யமனுக்கும் சண்டை வர, யமன் அவளை உதைக்க காலைத் தூக்கினான். உடனே சாயா, 'என்னை உதைக்கத் தூக்கிய காலில் புழு மண்டுவதாக' என்று சாபமிட்டாள். உடனே சூரியனிடம் சென்று யமன் பேசினான். 'தந்தையே, ஏதோ முன்கோபத்தால் நான் என் தாயை உதைப்பேன்' என்று காலைத் தூக்கினேன். உடனே என் தாய் உன் கால் புழுத்து ஒழிவதாக என்று சாபமிட்டாள். இது விந்தையிலும் விந்தை. எந்தத் தாயும் தன் மகனுக்கு இவ்வாறு சாபமிடமாட்டாள். ஆகவே இவள் என் தாய் அல்ல' என்று கூறியவுடன் சூரியன் சாயாவைக் கேட்க அவளும் உண்மையை ஒப்புக் கொண்டாள். உடனே சூரியன் தன் மாமனார் ஆகிய விஸ்வகர்மாவிடம் சென்று கேட்க, விஸ்வகர்மா உன்னிடம் இருந்து வந்த அன்றைக்கே சம்ஜனா பெண் குதிரை வடிவில் காட்டில் வாழ்கிறாள் என்றான். சூரியனைப் பார்த்து விஸ்வகர்மா "எல்லை மீறிய தேஜஸ் உன்னிடம் இருப்பதால்தான் யாரும் உன்னை நெருங்க முடிவ தில்லை. அந்தத் தேஜஸில் ஒரு பகுதியை வெட்டி எடுத்து விடுகிறேன். அதன் பிறகு அனைவரும் உன்னுடன் சகஜமாகப் 'பழகுவார்கள்" என்று கூறிவிட்டு, சூரியனின் தேஜஸில் ஒரு

பகுதியை வெட்டிவிட்டான். வெட்டப்பட்ட இப்பகுதியிலிருந்த தேஜஸை மூலப்பொருளாக வைத்து சுதர்சன சக்கரம், சிவனுக்குரிய திரிசூலம், இந்திரனின் வஜ்ராயுதம் என்பவற்றை விஸ்வகர்மா உண்டாக்கினார்.

தன் தேஜஸைக் குறைத்துக் கொண்ட சூரியன் சம்ஜனாவைத் தேடிச் சென்றான். அவள் பெண் குதிரை வடிவுடன் இருந்ததால், தான் ஒரு ஆண்குதிரை வடிவெடுத்து அவளுடன் வாழ்ந்தான். இவர்களுக்கு அஸ்வினிகள் என்ற பெயரில் இருவர் தோன்றினர். இதன் பிறகு சம்ஜனாவும், சூரியனும் தம் பழைய வடிவை ஏற்றுக் கொண்டனர். சனியின் உடன் பிறந்த சாவர்ணி மனு சுமேரு மலைக்குச் சென்று தவம் செய்தான். பின் ஒரு மனுவாகப் பிறக்கக் கூடிய வாய்ப்பைப் பெற்றான். சனி நவ கோள்களில் ஒருவனாகிறான். யமுனா, தப்தி இருவரும் இரண்டு ஆறுகளாக ஆயினர். யமன் ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்து, மரண தேவனாக ஆகும் வரம் பெற்றான்.

**தட்சனும், சதியும்**

இக்கதை ஏற்கெனவே மற்ற புராணங்களில் கொடுக்கப் பட்டிருந்தாலும், அங்கு காணப்படாத பகுதி இங்கு தரப் பட்டுள்ளது. யாக சாலைக்குள் நுழைந்து தட்சனைப் பார்த்து, என் கணவர் சிவனை ஏன் அழைக்கவில்லை என்று கேட்டாள். அது கேட்ட தட்சன், "உன் கணவன் எவ்விதத் தகுதியும் இல்லாதவன். ரிஷிகளும், முனிவர்களும் இங்கே வந்திருக் கிறார்கள். அவர்களுக்குச் சமமாக எவ்விதத் தகுதியும் இல்லாத உன் கணவனை அழைப்பது பொருந்தாத செயலாகும்." இதைக் கேட்ட சதி, "சிவனுடைய பெருமை அறியாத உனக்கு மகளாகப் பிறந்ததற்கு வெட்கப்படுகிறேன். இந்த உடம்பு நீ கொடுத்தது. ஆதலால் இந்த உடம்புடன் உயிர்வாழ விரும்ப

வில்லை. இந்த உடம்பை உன் எதிரிலேயே போக்கிக் கொள்ளப் போகிறேன். போவதற்கு முன்னர் நான் இடும் சாபத்தைப் பெற்றுக்கொள். தேவலோகத்தில் இருக்கின்ற நீ, இறந்து பூலோகத்தில் பிரச்சேனர்கள் மகனாகப் பிறக்கக் கடவாயாக." இதைக் கேட்ட தட்சன், நடுங்கிப் போய்விட்டான். "மகளே! நீ எல்லா உலகங்களுக்கும் தாய் என்பதை மறந்துவிட்டேன். உன் கொடுமையான சாபத்தில் இருந்து எனக்கு விடுதலை தர வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். அதற்கிணங்கிய சதி, பூமியில் பிறந்தாலும் என்னிடமும் சிவனிடமும் பக்தி கொண்டவனாகப் பிறப்பாயாக. என்னுடைய பெயரில் வழங்கும் நூற்று எட்டுத் தீர்த்தங்களில் நீ நீராடுவாயாக. இவற்றையெல்லாம் செய்து முடித்த பின்பு உன் சாபம் நீங்கும் என்று கூறி தன் உடம்பைப் போக்கிக் கொண்டாள்.

### பிரம்மதத்தா

முன்னொரு காலத்தில், கௌசிக முனிவனுக்கு ஏழு மகன்கள் இருந்தனர். கௌசிகன் இறந்த பிறகு இவர்கள் கார்க முனிவனின் சீடர்களாக வாழ்ந்தனர். அப்போது திடீரென்று பஞ்சம் வந்து உயிர்கள் செத்து மடிந்தன. கார்க முனிவர் தமது பசுக்களை எல்லாம் காட்டிற்கு ஓட்டிச் சென்று வளர்க்குமாறு ஏழு சீடர்களையும் ஏவினார். அந்த எழுவரும் காட்டில் வாழும் பொழுது, பசுக்களுக்குப் புல் கிடைத்தாலும், இவர்களுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. எழுவரும் ஒரு யோசனை செய்து ஒரு முடிவிற்கு வந்தனர். பசுவில் ஒன்றினைக் கொன்று சாப்பிட முடிவு செய்தனர். எழுவரில் இளையவன் "பசு வதை மிகவும் கொடிய பாவம். ஆனாலும் இது தவிர வேறு வழியும் தெரியவில்லை. எனவே இறக்கின்ற மனிதர்களுக்குச் செய்யும் இறுதிக் கடன்களை இப் பசுவிற்கும் செய்துவிட்டுப் பிறகு கொன்று தின்னலாம்" என்றான்.

இவ்வாறு செய்வதால் தாங்கள் செய்யும் பாவத்தின் கொடுமை கொஞ்சம் குறையும் என்று நம்பினான். அவ்வாறே செய்து முடித்தனர். பஞ்சம் தீர்ந்தவுடன் எஞ்சிய மாடுகளை குருவிடம் கொண்டுவந்து சேர்ப்பித்து விட்டு, ஒரு மாட்டைப் புலி அடித்துக் கொன்றுவிட்டது என்று பொய் கூறினார்கள். கார்க முனிவரைப் பொறுத்த மட்டில் இவர்கள் கூற்றில் நம்பிக்கை வைத்திருந்தார். இந்தப் பசுவதை செய்த பாவத்தால் ரிஷிகுமாரர்கள் எழுவரும் வேட்டைக்காரர்களாகப் பிறந்தனர். அவர்கள் அனைவருக்கும் ஜதீஸ்மரா இருந்ததால், முற் பிறவியை நினைவில் கொண்டுவர முடிந்தது. அந்த வேட்டைக் காரப் பிறவியைப் போக்கிக்கொள்ள முடிவு செய்து, உண்ணா நோன்பிருந்து எழுவரும் உயிரை விட்டனர். அடுத்த பிறப்பில் எழுவரும் பறவைகளாகப் பிறந்தனர். கடைசி மூவர் தவிர மூத்த நால்வரும் இந்த உலக வாழ்க்கை பிடிக்காமல் நாட்டத்தை வேறு பக்கம் செலுத்தினர். மூன்று பறவைகளும் மரத்தின் மேல் தங்கி இருக்கும் பொழுது பாஞ்சால மன்னன் விப்ரஜா அங்கு வந்தான். அவன் தோற்றப்பொலிவைக் கண்ட ஒரு பறவை, இவனைப்போல் அழகான மன்னனாகப் பிறக்க வேண்டும் என்று நினைத்தது. அரசனின் மந்திரிகள் எல்லோரையும் அதிகாரம் செய்வதைப் பார்த்து மற்ற இரு பறவைகளும் மந்திரிகளாகப் பிறக்க விரும்பின.

இப்பறவைகள் இறந்த பிறகு முதல் பறவை விப்ரஜ மன்னன் மகனான பிரம்மதத்தனாகப் பிறந்தது. மற்ற இரு பறவைகள் மந்திரி மகன்களாகப் பிறந்தன. அரசன் மகனாகிய பிரம்மதத்தன் கல்யாணி என்ற பெண்ணை மணந்து கொண்டான். அந்தக் கல்யாணி முற்பிறப்பில் அவனால் கொல்லப்பட்ட பசுவே ஆகும். ஒருநாள் மாலைப் பொழுதில் அரச குமாரனும், கல்யாணியும் தோட்டத்தில் உலாவிக் கொண் டிருந்தனர். அரசகுமாரனைப் பொறுத்த மட்டில் அவனுக்கு

உலகத்தில் உள்ள உயிர்கள் பேசிக் கொள்ளும் பாஷைகள் அனைத்தும் புரிந்து கொள்ளும்படியான ஆற்றல் இருந்தது. அதனால் தோட்டத்தில் நடந்து கொண்டு இருந்த பிரம்மதத்தன் திடீரென்று சிரித்தான். அவன் அவ்வாறு சிரிப்பதற்குரிய நிகழ்ச்சி அங்கே நடந்தது.

இரண்டு எறும்புகள் தமக்குள் பேசிக் கொண்டிருந்ததை அரசகுமாரன் கவனித்தான். ஆண் எறும்பு பெண் எறும்பி னிடம் நெருங்கிச் சென்ற பொழுது, பெண் எறும்பு முறைத்துக் கொண்டு, 'என் பக்கத்தில் வராதே. இனி என்னோடு பேச வேண்டாம்' என்று கூறிற்று. ஒன்றும் புரியாத ஆண் எறும்பு, நான் ஒரு தவறும் செய்யவில்லையே. எதற்காக என்னைக் கோபிக்கின்றாய் என்று கேட்டது. அதற்கு அந்தப் பெண் எறும்பு, "அதற்குள் நீ செய்த காரியத்தை மறந்துவிட்டாயா? நேற்று உனக்குக் கிடைத்த சர்க்கரைத் துண்டத்தை வேறொரு பெண்ணுக்கு நீ தந்ததை மறந்து விட்டாயா?' என்று கோபத்துடன் கேட்டது. ஆண் எறும்பு, நான் ஒரு பாவமும் அறியேன். பக்கத்தில் நீதான் இருக்கிறாய் என்று நினைத்து சர்க்கரைத் துண்டத்தைக் கொடுத்து விட்டேன். இனி அப்படி நடக்காது. என்னை மன்னித்துவிடு' என்று கூறியவுடன் பெண் எறும்பு தன் கோபத்தை மறந்துவிட இரண்டும் கூடிக் குலாவின. எறும்புகளின் இந்த உரையாடலும் பிறகு அவை கூடிக் குலாவியதும் பிரம்மதத்தனுக்குச் சிரிப்பை உண்டாக்கியது.

காரணமில்லாமல் அவன் சிரித்ததைக் கண்ட அவன் மனைவி, "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்க, பிரம்மதத்தன் நடந்தவற்றைக் கூறினான். ஆனால் எறும்புகளின் உரையாடலைத் தன் கணவன் கேட்டான், புரிந்து கொண்டான் என்பதை அவன் மனைவி நம்பத் தயாராக இல்லை. அவன் ஏதோ தன் மேல் குறை கண்டுதான் சிரிக்கிறான் என்ற

முடிவுக்கு வந்த அவள், அவனிடம் கடுங்கோபம் கொண்டு தனியே போய்விட்டாள். அவளை எப்படிச் சமாதானம் செய்வது என்று தெரியாமல், படுக்கையில் புரண்டு கொண் டிருந்த பிரம்மதத்தனுக்கு விஷ்ணு கனவில் வந்தார். "பிரம்ம தத்தா! கவலைப்பட வேண்டாம். நாளை காலை பொழுது விடிந்ததும் உன் பிரச்சினைக்கு முடிவு வந்துவிடும்" என்று கூறிப் போய்விட்டார்.

இது இப்படி இருக்க, பிரம்மதத்தன் முற்பிறப்பில் நான்கு சகோதரர்கள் உலக வாழ்க்கை வெறுத்து தவம் செய்தனர் அல்லவா? அவர்கள் மறுபிறப்பில் சுதரித்ரா என்ற பிராமணனுக்குப் பிள்ளைகளாய்ப் பிறந்தனர். பறவையாக இருக்கும் பொழுதே உலக வாழ்வில் ஈடுபட மனம் இல்லாமல் இருந்தமையின் அந்த நால்வரும் காட்டிற்குச் சென்று தவம் செய்ய வேண்டுமென்று விரும்பிப் புறப்பட்டனர். ஆனால் அவர்கள் தந்தை அவர்களை விடுவதாக இல்லை. அவன் அவர்களைப் பார்த்து, "பிள்ளைகளே! நீங்கள் தவம் செய்யப் போவது என்பது சரியான காரியம் அன்று. நீங்கள் நால்வரும் இவ்வாறு போய்விட்டால் என் முதுமைக் காலத்தில் என்னை யார் கவனித்துக் கொள்வார்கள்?" என்றான். அது கேட்ட மைந்தர்கள், "தந்தையே! கவலை வேண்டாம். பக்கத்து நாட்டில் பிரம்மதத்தன் என்ற மன்னன் ஆட்சி செய்து கொண்டிருக் கிறான். அவனிடம் சென்று நாங்கள் சொல்லும் நாலு வார்த்தைகளை மட்டும் சொல்லுங்கள். பசுமாடு, வேடர்கள், மான்கள், பறவைகள் என்ற இந்த வார்த்தைகளை மன்னனிடம் சொன்னால் உங்கள் தேவைக்கு அதிகமாகவே பொன்னும் பொருளும் தருவான். பெற்றுக் கொண்டு சௌகரியமாக இருங்கள்" என்று கூறிவிட்டுக் காட்டிற்குப் போய்விட்டனர்.

விஷ்ணு கனவில் சொன்னதில் இருந்து எப்பொழுது பொழுது விடியும் என்று காத்துக் கொண்டிருந்த மன்னன்

பிரம்மதத்தனிடம், காலையில் ஒரு பிராமணன் வந்து நின்றான். அந்த பிராமணன், "அரசே! எனக்கு முதுமைக் காலத்தில் எவ்விதக் குறையும் இன்றி வாழ நிலங்கள், மாடுகள், பொன் ஆகியவை வேண்டும். தருவீர்களா" என்று கூறிவிட்டு, வியப்போடு தன்னைப் பார்க்கும் பிரம்மதத்தனைப் பார்த்து மெதுவாக, "அரசே! பசுமாடு, வேடர்கள், மான், பறவைகள்" என்று மந்திரம் சொல்வது போல் சொல்லி முடித்தான். அரச வாழ்க்கையில், சுகபோகத்தில் மூழ்கி இருந்த மன்னன் பிரம்மதத்தன் மனத்திரையில் பழைய பிறப்புக்களும், அதன் காரணமும் வரிசையாக வந்தன. தன்னுடைய சகோதரர்கள் ஆன்மிக வளர்ச்சி அடைந்து காட்டிற்குச் சென்று விட்டதை அறிந்த மன்னன் எதிரே இருந்த அந்தணனுக்குப் பெருஞ் செல்வத்தைத் தந்து அனுப்பி விட்டான்.

தன் மகனை அழைத்து அவனுக்கு அரசைத் தந்தான். மந்திரி குமாரர்களை அழைத்து நடந்ததைக் கூறியவுடன் இவர்கள் மூவரும் பறவைகளாக இருந்தவர்கள் ஆதலால் பழம்பிறப்பு நினைவுக்கு வர உடனே இந்தச் சுகபோகங்களைத் துச்சமாகக் கருதி உதறிவிட்டு மூவருமாகக் காட்டிற்குத் தவம் செய்யச் சென்று விட்டனர்.

முனிவர்கள், "லோமஹர்ஷணரே! கதையை நாங்கள் நன்கு புரிந்து கொண்டோம். ஆனால் ஒரு சந்தேகம். எறும்புகள் பாஷையை எப்படி பிரம்மதத்தன் அறிந்து கொண்டான்?" என்று கேட்க, லோமஹர்ஷணர் "அது ஒன்றும் அவ்வளவு பெரிய காரியமில்லை. பிரம்மதத்தன் தந்தை, தனக்கு மகன் வேண்டும் என்று வேண்டும் பொழுதே ஜீவராசிகளின் பாஷையை அறியும் சக்தியுடையவனாக அவன் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதனால்தான் பிரம்மதத்தனால் எறும்புகளின் பாஷையை அறிந்து கொள்ள முடிந்தது" என்று கூறினார்.

## புரூரா – ஊர்வசி

முன்னொரு காலத்தில் புரூரவன் என்ற மன்னன் உலகை ஆண்டு வந்தான். மாபெரும் சக்தி உடையவனாகிய அவன் நேர்மையிலிருந்து சிறிதும் பிசகாதவனாய் உலகை ஆட்சி செய்து வந்தான். மனிதர்கள் வாழ்க்கையின் குறிக்கோள்களாக உள்ள தர்ம, அர்த்த, காமம் என்ற மூன்றின் அளவறிந்து வாழ்ந்து வந்தான். அவன் நேர்மையை, குறிக்கோள் வாழ்வைக் கண்ட தர்ம, அர்த்த, காம தேவதைகள் இந்த மூன்றில் எதனிடம் அதிக பக்தி கொண்டிருக்கிறான் என்பதை அறிய மானிட வடிவம் கொண்டு வந்தன. இவர்கள் யாரென்று அறியாத அரசன் அவர்களைப் பொன் ஆசனத்தில் இருத்தி முறைப்படி உபசாரம் செய்தான். அப்படிச் செய்யும் பொழுது கூட அவனையும் அறியாமல் தருமத்திற்குக் கொஞ்சம் அதிகமான உபசாரம் செய்து விட்டான். இதைக் கண்டு பொறாத அர்த்த, காம தேவதைகள் அவனைச் சபித்தன. அர்த்த தேவதை 'உன் செல்வத்தையெல்லாம் இழந்து நீ தவிப்பாய்' என்று சாபமிட்டது. காமதேவதை 'ஊர்வசியிடம் மயங்கி பைத்தியம் பிடித்து அலைவாய்' என்று சாபமிட்டது. ஆனால் தர்மதேவதை நீ அறவழியில் இருந்து நீங்காமையால் இந்தச் சாபங்களில் இருந்து விடுதலை அடையலாம் என்று கூறிப் போய்விட்டது.

சில நாட்கள் கழித்து, மன்னன் ஒரு தேரில் ஏறி காட்டுவழி சென்றான். அவன் எதிரே கேசி என்ற அசுரன், ஊர்வசியை பலவந்தமாக இழுத்துச் செல்வதைக் கண்டான். கேசியிடம் போரிட்டு அவனைத் தோல்வியுறச் செய்து, ஊர்வசியை இந்திரனிடம் சேர்ப்பித்தான். இந்த அரிய காரியத்தைச் செய்த புரூரவனிடம் இந்திரன் மிகுந்த நட்புப் பாராட்டி வாழ்ந்தான்.

ஒருமுறை இந்திர சபையில் ஒரு நாட்டியத்திற்கு ஏற்பாடாயிற்று. நாட்டிய சாத்திரத்தின் தந்தையாகிய பரத முனிவரே முன்னின்று நடத்தினார். மேனகை, ரம்பை, ஊர்வசி ஆகிய மூவரும் நடனம் ஆடிக் கொண்டிருந்தனர். தன்னைக் காப்பாற்றியவனும், அழகில் மிகுந்தவனுமாகிய புரூரவன் எதிரிலே அமர்ந்திருந்தான். ஊர்வசி அவனையே அதிகம் கவனித்துத் தன் வசம் இழந்தாள். அதனால் ஜதிவிட்டுப் போய்விட்டது. கோபம் கொண்ட பரத முனிவர் பூமியில் ஐம்பத்தைந்து ஆண்டு வாழ்வாயாக என்று சாபமிட்டார். பூமிக்கு வந்த ஊர்வசி புரூரவனை மணந்து அயு, திரிதயு, முதலான எட்டுப் பிள்ளைகளைப் பெற்றாள்.

**கச்சன் – தேவயானி**

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கடும் போர் நடந்தது. இந்தச் சண்டையில் ஒரு வேறுபாடு இருந்து வந்தது. தேவர்களின் குருவாக பிரஹஸ்பதியும், அசுரர்களின் குருவாக சுக்கிராச்சாரியும் இருந்தனர். தேவகுருவான பிரகஸ்பதிக்குத் தெரியாத ஒரு மந்திரம் சுக்கிராச்சாரியாரிடம் இருந்தது. மிருத்யுசஞ்சீவினி என்ற மந்திரத்தால் இறந்தவர்களை எழுப்ப முடியும். பிருஹஸ்பதிக்கு இந்த மந்திரம் தெரியாது. தேவாசுர யுத்தத்தில் தேவர்கள் இறந்தால் இறந்தவர்கள் தாம். ஆனால் அசுரர்கள் பக்கத்தில் எத்தனைபேர் இறந்தாலும், அத்துணைப் பேரையும் மிருத்யுசஞ்சீவினி மந்திரத்தால் சுக்கிராச்சாரியார் மீட்டு வருவார். இதனால் ஒவ்வொரு போரிலும் தேவர்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வர, அசுரர்களின் எண்ணிக்கை குறையாமல் இருந்தது. தேவர்கள் கூடி யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தனர். பிரஹஸ்பதியின் மகனாகிய கச்சன் சுக்கிராச்சாரியாரிடம் சென்று எப்படியாவது அந்த மந்திரத்தைத் தெரிந்து கொண்டு வர வேண்டும் என்பதுதான் அந்த யோசனையின் முடிவு.

இந்த முடிவின்படி கச்சன், சுக்கிராச்சாரியாரிடம் சென்றான். 'குருவே! நான் பிரஹஸ்பதியின் மகன் என்றாலும் தங்களுக்குச் சீடனாக இருந்து ஆயிரம் வருடங்கள் பணி புரிய விரும்புகிறேன்' என்று கேட்டுக் கொண்டான். மிருத்யு சஞ்சீவினி பற்றி அவன் ஒன்றும் அறியான். அவன் உள் நோக்கத்தைப் புரிந்துகொள்ளாத சுக்கிராச்சாரியார் அவனைச் சீடனாக ஏற்றுக் கொண்டார். சுக்கிராச்சாரியாருக்குப் பணி புரிந்து வந்த கச்சன் மீது காதல் கொண்டாள் தேவயானி. ஐந்நூறு ஆண்டுகள் கழிந்தன. பிருஹஸ்பதியின் மகனே கச்சன் என்பதை அசுரர்கள் அறிந்து கொண்டனர். பிரஹஸ்பதியை வெறுத்து வந்த அசுரர்கள், கச்சனையும் வெறுத்தனர். ஒரு சமயம் கச்சன் மாடுகளை மேய்த்துக் கொண்டு நெடுந் தொலைவு சென்றிருக்கும் பொழுது, அசுரர்கள் அவனைக் கொன்று அவன் உடலைப் புலிக்கு உணவாக்கினர். மாடுகள் மட்டும் தனியே ஆசிரமம் திரும்பியதைக் கண்ட தேவயானி கச்சன் யாராலோ கொல்லப்பட்டிருக்க வேண்டும் என்று கருதித் தன் தந்தையிடம் "தந்தையே! மாடுகள் இங்குத் திரும்பி வந்து விட்டன. கச்சன் வரவில்லை. அவனை யாரோ கொன்றிருக்க வேண்டும். நான் அவனை விரும்புவதால் அவன் இல்லாமல் என்னால் உயிர் வாழ முடியாது" என்று கூறவும், சுக்கிராச்சாரியார், "மகளே! கவலை வேண்டா. நான் மிருத்யு சஞ்சீவினி மந்திரத்தின் மூலம் அவனை உயிர்ப்பிக்கிறேன்" என்று கூறி, அவனை உயிர் பெறச் செய்தார். சில நாட்கள் கழிந்தன. ஒரு சமயம் கச்சன் மலர்களைப் பறிக்கச் சென்ற பொழுது அசுரர்கள் அவனைக் கொன்று, அந்த உடலை எரித்து விட்டனர். அந்தச் சாம்பலை எடுத்து மதுவில் கலந்து தங்கள் குருவாகிய சுக்கிராச்சாரியாருக்கும் கொடுத்துவிட்டனர்.

கச்சன் திரும்பி வராததால் கவலையுற்ற தேவயானி தந்தையிடம் கூற, தன் தவ வலிமையால் நடந்ததை அறிந்து

கொண்டார். சுக்கிராச்சாரியார் உடனே தன் மகளிடம் "மகளே! நாம் ஒரு சிக்கலில் இருக்கிறோம். கச்சன் என் வயிற்றினுள் இருக்கிறான். அவனை என் மந்திரத்தால் உயிருடன் எழுப்பினால், அவன் என்னைக் கிழித்துக் கொண்டு வெளியே வர வேண்டும். நான் இறந்துவிடுவேன். எங்கள் இருவரில் ஒருவர்தான் உயிரோடு இருக்க முடியும். யார் வேண்டும்" என்று கேட்க, தேவயானி "இருவருமே எனக்கு மிகவும் முக்கியம் வாய்ந்தவர்கள். ஆதலால் இருவருமே உயிருடன் இருக்க வேண்டும்" என்று கூற சுக்கிராச்சாரியார் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார். அவர் கச்சன் பெயரைச் சொல்லி, வயிற்றுக்குள் இருந்த அவனுக்கு மிருத்யுசஞ்சீவினி மந்திரம் உபதேசம் செய்தார். அதன் பிறகு அந்த மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு அவர் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்தான். வந்த அவன் அதே மந்திரம் சொல்லி அவரை எழுப்பினான்.

சிலகாலம் கழித்து அவன் தேவலோகம் செல்லப் புறப்பட்டான். அவனைத் தடுத்து நிறுத்திய தேவயானி, 'உன் மேல் அளவற்ற காதல் கொண்ட என்னை விட்டு விட்டு நீ எங்கே செல்கிறாய்? என்னை மணந்து கொள்' என்று வேண்டினாள். கச்சன், நீயோ குருவின் மகள், குருவின் ஸ்தானத்தில் வைத்து என்னால் மதிக்கப்பட வேண்டியவள். மேலும் ஒரு காரணம் உள்ளது. நானே உன் தந்தையின் வயிற்றில் இருந்து வெளியே வந்ததால் உனக்குச் சகோதரன் முறையாகி விட்டேன். உன்னை மணந்து கொள்வது என்பது பெரும் தவறாகிவிடும்' என்று கூறிவிட்டான்.

காதலில் தோல்வி அடைந்த தேவயானி, அவன் மேல் கடுங்கோபம் கொண்டு, "என்னை ஏமாற்றிவிட்டுப் போகும் உனக்கு என் தந்தையிடம் கற்றுக் கொண்ட எவையும் பயன்படாமல் போகக் கடவதாக" என்று சபித்தாள்.

வருத்தமடைந்த கச்சன், தேவையில்லாமல் என்னை நீ சபித்தாய். நானும் உன்னைச் சபிக்கிறேன். "எந்த பிராமணனும் உன்னைத் திருமணம் செய்து கொள்ள மாட்டான். எக்காலத்தும் நீ விரும்பிய பொருளை அடைய மாட்டாய்" என்று சாபமிட்டான்.

லோமஹர்ஷனரிடம் புராணம் கேட்டுக் கொண்டிருந்த முனிவர்கள், அவரிடம் "சுக்கிராச்சாரிக்கு மிருத்யுசஞ்சீவினி மந்திரம் தெரியும் என்று சொன்னீர்கள். ஆனால் அவர் எப்படி, எப்பொழுது அந்த மந்திரத்தைத் தெரிந்துகொண்டார் என்பதைக் கூறவில்லையே" என்று கேட்க, லோமஹர்ஷனர் சொல்ல ஆரம்பித்தார்.

தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் இடைவிடாது நடந்த யுத்தத்தில் அசுரர்கள் அதிகம் பாதிக்கப்பட்டனர். அந்த நிலையில் சுக்கிராச்சாரியார் அவர்களைப் பார்த்து, "கவலையை விடுங்கள். நான் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்து புதிய ஆற்றலைப் பெற்று வருகிறேன். அதுவரை நீங்கள் தேவருடன் சண்டை போட வேண்டாம். உங்கள் ஆயுதங்களை எல்லாம் கட்டி வைத்துவிட்டு, என் தந்தையாகிய பிருகு முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்று அமைதியாக இருங்கள்" என்று கூறிவிட்டு, சிவனை நோக்கித் தவம் செய்யச் சென்றார். சிவன் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று கேட்க, இறந்தவரை எழுப்பும் வித்தை தமக்குத் தெரிய வேண்டும் என்று சுக்கிராச்சாரி கேட்டார். சிவன், "அது அவ்வளவு எளிதன்று. புகையை மட்டும் உட்கொண்டு ஓராயிரம் வருடங்கள் தவம் செய்வாயே ஆனால் இது சித்தியாகும்" என்றார். அதற்குள் சுக்கிராச்சாரியார் எதற்காகத் தவம் செய்கிறார் என்ற செய்தி தேவர்களுக்குத் தெரிய வந்தது. அசுரர்கள் பயந்து ஒடுங்கி, பிருகுவின் ஆசிரமத்தில் இருக்கிறார்கள் என்று தெரிந்தவுடன் அவர்களுடன் சண்டை

யிடத் தயாராயினர். பிரகஸ்பதிக்குக் கூடத் தெரியாத மந்திரத்தை சுக்கிராச்சாரி தெரிந்து கொள்ளப் போயிருக்கிறார் என்பதை அறிந்த இந்திரன் தன் மகள் ஜெயந்தியை சுக்கிராச்சாரியிடம் அனுப்பி அவர் தவத்தைக் கலைக்க ஏற்பாடு செய்தான். அவள் வந்து ஆயிரம் ஆண்டுகள் சுக்கிராச்சாரிக்குத் தொண்டு செய்து கொண்டிருந்தாள்.

இதனிடையில் தேவர்கள் அசுரர்கள் மேல் போர் தொடுத்தனர். நிராயுதபாணிகளாய் முனிவரிடம் தங்கி இருக்கும் தங்களிடம் போரிடுவது தவறு என்று அசுரர்கள் சொல்லியும் தேவர்கள் அதனைச் சட்டை செய்யவில்லை. அஞ்சிய அசுரர்கள் சுக்கிராச்சாரியின் தாயிடம் வந்து புகல் வேண்டினர். அந்த அம்மையார், 'நீங்கள் அஞ்ச வேண்டா. நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று கூறி தம் ஆற்றலைப் பயன்படுத்தி, இந்திரனை ஒரே இடத்தில் அசைய முடியாமல் நிற்கச் செய்து விட்டார். இந்திரன் பரிதாபமாக நிற்பதைக் கண்ட தேவர்கள் ஓடி ஒளிந்தனர். இந்திரன் நிற்பதைப் பார்த்த விஷ்ணு அவனிடம் வந்து நீ என்னுள் புகுந்து கொள். நான் உன்னை பத்திரமாக அழைத்துச் செல்கிறேன் என்று கூற, இந்திரன், அசையவே முடியாத நான் உன்னிடம் எப்படி வருவது என்று கேட்க, அதோ சுக்கிராச்சாரியின் தாய் நிற்கிறாள். அவளைக் கொன்றுவிடுங்கள் என்று கூற, விஷ்ணு தன் சக்கரத்தால் அத்தாயின் கழுத்தை அறுத்து விட்டார். இது நடைபெறும் பொழுது பிருகு முனிவர் ஆசிரமத்தில் இல்லை. அவர் மீண்டும் ஆசிரமம் வந்தபொழுது நடந்ததை அறிந்து கொண்டார். தம் மாபெரும் ஆற்றலைப் பயன் படுத்தி, "விஷ்ணுவே! நீ பூலோகத்தில் பல பிறப்புக்கள் மானுடனாகப் பிறந்து உழல்வீராக" என்று சபித்தார். அதே ஆற்றலைப் பயன்படுத்தித் தம் மனைவியின் உயிரையும் மீட்டார்.

செய்வதறியாத தேவர்கள் பிரஹஸ்பதியிடம் சென்றனர். இந்திரன், பிரஹஸ்பதி சுக்கிராச்சாரி வடிவம் எடுத்து, அசுரர்கள் குரு என்ற முறையில் அவர்களை ஏமாற்ற வேண்டும் என்று தந்திரம் சொல்லிக் கொடுத்தான். பிரகஸ்பதியும் இத்திட்டத்தை ஏற்றுக் கொண்டு சுக்கிராச்சாரி வடிவம் எடுத்து, பிருகு ஆசிரமம் வந்து, சுக்கிராச்சாரியிடம் பதவியை ஏற்றுக் கொண்டார். பிரஹஸ்பதியின் வஞ்சகம் தெரியாத அசுரர்கள் அவரைத் தம் குரு எனவே ஏற்றுக் கொண்டனர்.

பிரஹஸ்பதி அசுரரிடம் வந்த பொழுது, உண்மையான சுக்கிராச்சாரியின் தவம் ஆயிரமாவது ஆண்டை எட்டி விட்டது. சிவன் தோன்றி, மிருத்யுசஞ்சீவினி மந்திரம் சுக்கிராச்சாரிக்கும் பயன்படும் என்று கூறி மறைந்தார். தவம் கலைந்த சுக்கிராச்சாரி எதிரே உள்ள அழகான பெண்ணைப் பார்த்து, 'நீ யார்? ஏன் என்னிடம் பணிபுரிகிறாய்?' என்று கேட்க, அப்பெண் உண்மையை மறைத்து, சுக்கிராச்சாரியின் மேல் உள்ள அன்பு காரணமாகப் பணிபுரிவதாகக் கூறினாள். அதில் மகிழ்ந்த சுக்கிராச்சாரி உனக்கு என்ன வரம் வேண்டும், கேள் தருகிறேன்' என்றார். இந்திரன், பிரகஸ்பதி ஆகியோர் செய்த சூழ்ச்சியை நன்கு அறிந்த ஜெயந்தி, 'என்னை மணந்து கொண்டு பத்தாண்டுகள் என்னுடன் இருக்க வேண்டும்' என்றாள். சுக்கிராச்சாரி 'வரம் தந்தேன்' என்று கூறி அவளை மணந்து பத்தாண்டுகள் அவளுடன் வாழ்ந்தார்.

ஜெயந்தி இந்த வரத்தைப் பெறுவதற்கும், பிருகஸ்பதி, சுக்கிராச்சாரியாராக மாறி அசுரர்கள் குருவாக மாறுவதற்கும் சரியாக இருந்தது. பத்தாண்டுகளுக்குப் பின், சுக்கிராச்சாரியார் ஜெயந்தியை விட்டுவிட்டுத் தம் இருப்பிடம் வந்தார். அங்கு ஆச்சரியம் காத்திருந்தது. தன்னைப் போலவே ஒரு சுக்கிராச்சாரியார் அங்கு இருப்பதைக் கண்டார். அசுரர்களை

அழைத்து, 'நான்தான் உண்மையான சுக்கிராச்சாரி. இவர் போலி' என்று எடுத்துக் கூறியும் அசுரர்கள் நம்ப மறுத்தனர். 'காலாந்தரத்தில் நீங்கள் அழியக் கடவீர்கள்' என்று உண்மை சுக்கிராச்சாரி சாபமிட்டார். அந்நிலையில் போலி சுக்கிராச்சாரி மறைய பிரகஸ்பதி அங்கு நின்றார். அசுரர்கள் தங்கள் பிழையை எண்ணி வருந்தினர். உண்மை சுக்கிராச்சாரி காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டனர், என்றாலும் கொடுத்த சாபம் கொடுத்ததுதான்.

**புராணங்கள்**

லோமஹர்ஷனர், முனிவர்களுக்குப் புராணங்களின் பட்டியலைக் கொடுத்துக் கூறியதாவது :

ஆரம்பத்தில் ஒரே ஒரு புராணம் மட்டுமே இருந்தது. வேத வியாசர் மூலபுராணத்தைப் பதினெட்டு மகாபுராணங்களாகப் பிரித்தார். அந்த மகாபுராணங்கள் மொத்தமும் நான்கு லட்சம் பாடல்களைக் கொண்டவை. அந்த மகா புராணங்கள் பின்வருமாறு :

**1. பிரம்மபுராணம் :** பிரம்மனால், மரீச்சி முனிவருக்குச் சொல்லப்பட்டது. இதில் பதின்மூன்றாயிரம் பாடல்கள் உள்ளன.

**2. பத்மபுராணம் :** ஐம்பத்தைந்தாயிரம் பாடல்களைக் கொண்டது.

**3. விஷ்ணுபுராணம் :** பராசர முனிவரால் சொல்லப் பட்டது. இருபத்து மூவாயிரம் பாடல்களைக் கொண்டது.

**4. வாயுபுராணம் (சிவபுராணம்) :** வாயுதேவனால் கூறப்பட்டது. இருபத்து நான்காயிரம் பாடல்களைக் கொண்டது.

**5. பாகவதபுராணம் :** பதினெட்டாயிரம் பாடல்களைக் கொண்டது.

**6. நாரத புராணம் :** நாரதரால் கூறப்பெற்றது. இருபத்து ஐந்தாயிரம் பாடல்களைக் கொண்டது.

**7. மார்க்கண்டேய புராணம் :** ஒன்பதாயிரம் பாடல் களைக் கொண்டது.

**8. அக்னி புராணம் :** அக்னி தேவனால் வசிட்ட முனிவருக்குக் கூறப்பட்டது. பதினாயிரம் பாடல்களைக் கொண்டது.

**9. பவிஷ்ய புராணம் :** பிரம்மனால் கூறப்பட்டது. பதினாலாயிரத்து ஐந்நூறு பாடல்களைக் கொண்டது.

**10. பிரம்மவைவர்த்த புராணம் :** சாவர்ணி மனுவால் நாரதருக்குக் கூறப்பட்டது. பதினெட்டாயிரம் பாடல்களைக் கொண்டது.

**11. லிங்க புராணம் :** பிரம்மனால் கூறப்பட்டது. பதினோராயிரம் பாடல்களைக் கொண்டது.

**12. வராக புராணம் :** விஷ்ணுவினால், பூமிதேவிக்குக் கூறப்பட்டது. இருபத்து நான்காயிரம் பாடல்களைக் கொண்டது.

**13. ஸ்கந்த புராணம் :** ஸ்கந்தனால் கூறப்பட்டது. எண்பத்தோராயிரம் பாடல்களைக் கொண்டது.

**14. வாமன புராணம் :** பிரம்மனால் கூறப்பட்டது. பத்தாயிரம் பாடல்களைக் கொண்டது.

**15. கூர்மபுராணம் :** விஷ்ணுவினால் அவர் ஆமை வடிவில் இருந்த பொழுது கூறப்பட்டது. பதினெட்டாயிரம் பாடல்களைக் கொண்டது.

**16. மச்ச புராணம் :** விஷ்ணு மீன் அவதாரம் எடுத்த பொழுது கூறப்பட்டது. பதினாலாயிரம் பாடல்களைக் கொண்டது.

**17. கருட புராணம் :** கிருஷ்ணனால் கூறப்பட்டது. பதினெட்டாயிரம் பாடல்களைக் கொண்டது.

**18. பிரம்மாண்ட புராணம் :** பிரம்மனால் கூறப்பட்டது. பன்னிரண்டாயிரத்து இருநூறு பாடல்களைக் கொண்டது.

**வஜ்ராங்காவின் கதை**

இந்திரனைக் கொல்ல வேண்டும் என்று திதி என்ற காசியப முனிவரின் மனைவி விரதம் மேற்கொண்டாள். விரதத்தில் ஏற்பட்ட பிழையால் மருத்துக்கள் என்ற பெயருடன் பிறந்த பிள்ளைகள் அனைவரும் அவள் எண்ணத்திற்கு மாறாக இந்திரனின் நண்பர்களாக ஆகிவிட்டனர். இதனால் மனம் குமுறிய திதி மறுபடியும் விரதம் மேற்கொண்டாள்.

அவளுடைய கணவர் காசியபன் "பதினாயிரம் ஆண்டுகள் நீ தவம் செய்தால் உனக்கு ஒரு மகன் பிறப்பான். இந்திரனின் வஜ்ராயுதம் கூட அவனை ஒன்றும் செய்ய முடியாது. வஜ்ராங்கா என்ற பெயரை அவன் பெறுவான்" என்று கூறினார்.

பதினாயிரம் ஆண்டுகள் கழித்து வஜ்ராங்கன் பிறந்தான். அவன் வளர்ந்து காளைப் பருவம் அடைந்தவுடன் அவன் தாய் அவனிடம் பின்வருமாறு கூறினாள். "மகனே, ஆயிரக்கணக்கான பிள்ளைகளை நான் பெற்றும் அவ் வனைவரையும் இந்திரன் கொன்றுவிட்டான். எப்படியாவது அவனைப் பழிவாங்க வேண்டும். நீ உடனே போருக்குச் சென்று வா" என்று அனுப்பினாள். இந்திரனுடன் போர் புரிந்து அவனைக் கட்டி இழுத்துக் கொண்டு வந்தான். தன்

தாயின் எதிரே இந்திரனை நிறுத்தி அவனைக் கொல்வதற்குத் தயாரானான். அப்போது பிரம்மாவும் காசியப முனிவரும் அங்கே வந்தனர். பிரம்மா வஜ்ராங்கனைப் பார்த்து பின்வருமாறு பேசினார். "நீ இவனைக் கொல்ல வேண்டா. இந்திரன் இறந்தால் தீர்க்க முடியாத சில பிரச்சினைகள் உண்டாகும். மேலும் உன்னால் கட்டப்பட்டு உன் முன் நிற்பதே இந்திரனுக்குக் கிடைத்த பெரிய அவமானம். இந்திரப்பதவியில் இருக்கும் ஒருவர் இப்படி அவமானப்படுவது இறப்பதை விடக் கொடுமையானது. ஆகவே இவனை விட்டு விடு" என்று கூறினான் பிரம்மன். அதைக் கண்ட வஜ்ராங்கா, 'இவனைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணம் எனக்கில்லை. என் தாயின் ஆணைக்குக் கட்டுப்பட்டே இவனை இங்குக் கொண்டு வந்தேன். அனைத்துலகங்களையும் படைக்கும் தலைவரான தாங்களும் என் தந்தையும் கட்டளை இடும்போது எக் காரணத்தைக் கொண்டும் அந்தக் கட்டளையை மீறமாட்டேன். ஆகவே இவனை அவிழ்த்து விடுகிறேன்' என்று கூறி இந்திரனை விடுதலை செய்துவிட்டான்.

இது நடந்த பிறகு, பிரம்மா வஜ்ராங்கனைப் பார்த்து உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள் என்று சொல்ல, நெடுங்காலம் பெருந்தவத்தில் நான் ஈடுபட வேண்டும் என்ற வரத்தைக் கேட்டான் வஜ்ராங்கன். அந்த வரத்தைக் கொடுத்த பிரம்மன், வாரங்கி என்ற அழகான பெண்ணை உண்டாக்கி வஜ்ராங்கனுக்கு மணம் செய்து வைத்தான்.

சிலகாலம் கழித்து வஜ்ராங்கன் கடுந்தவம் ஒன்றை மேற்கொண்டான். ஆயிரம் ஆண்டுகள் இவ்வாறு செய்த பிறகு, அடுத்த ஆயிரம் ஆண்டுகள் தலைகீழாக நின்று தவம் செய்தான். அதனை அடுத்து நீரினுள் சென்று இதே போன்று தவத்தை மேற்கொண்டான்.

கணவன் வரும்வரை காத்திருக்க வேண்டிய வாரங்கி தன் ஆசிரமம் சென்று தன் தவத்தை மேற்கொண்டாள். இந்திரன் தனக்கு ஏற்பட்ட அவமானத்தை மறக்கவில்லை. ஆனால் வஜ்ராங்கனை நேரடியாக எதிர்த்து ஒன்றும் செய்ய முடியாது என்பதை அறிந்த இந்திரன், வாரங்கி தங்கி இருந்த ஆசிரமத்தைச் சுற்றி உள்ள மரங்களை எல்லாம் கீழே விழுமாறு செய்து அதிலுள்ள இலைகளை எல்லாம் தானே ஆடாக மாறித் தின்றுவிட்டான். பிறகு அந்த ஆசிரமத்தைச் சுற்றியுள்ள இடங்களை எல்லாம் பாலைவனமாக்கி வாழ முடியாத இடமாகச் செய்தான். இதன் பிறகு சப்த மேகங்களையும் வரவழைத்து ஆசிரமச் சுவர்கள் எல்லாம் இடியும் வரை மழை பெய்யச் செய்தான். இத்தனை நடந்தும் வாரங்கி தன் தவத்தில் இருந்து விடுபடவும் இல்லை. கண்ணை விழித்துப் பார்க்கவும் இல்லை.

நீருக்குள் ஆயிரம் ஆண்டு தவத்தை முடித்த வஜ்ராங்கன், ஆசிரமத்திற்கு வந்தபொழுது அதன் பரிதாப நிலையையும், மனைவி தவத்தில் இருப்பதையும் கண்டான். அது யாருடைய வேலை என்பதையும் தெரிந்து கொண்டான். இந்திரனைக் கொல்லத் தான் எடுத்த முயற்சியை பிரம்மாவும், தந்தையும் தடுத்து விட்டார்கள். எனவே தான் ஒரு மகனைப் பெற்று இந்திரனைப் பழிவாங்க முடிவு செய்தான். மறுபடியும் தவத்தில் ஈடுபட்டு பிரம்மன் எதிர்பட்டவுடன், இந்திரனை அழிக்க ஒரு மகன் வேண்டும் என வேண்டினான். 'அப்படியே ஆகட்டும்' என்று பிரம்மன் கூறி மறைந்தார். இதிலிருந்து தாரகன் என்ற அந்தப் பிள்ளையை ஆயிரம் ஆண்டுகள் தன் கருவிலேயே வைத்திருந்தாள் வாரங்கி. இறுதியாக தாரகன் என்ற மைந்தன் பிறந்தான். அவன் பிறந்த பொழுது பூமி நடுங்கிற்று. கடல் அலைகள் மிக உயரத்திற்கு எழும்பின. கொடுமையான புயல் வீசிற்று. கொடிய வன விலங்குகள்

மகிழ்ச்சி அடைந்தன. முனிவர்கள் பதறி நடுங்கினர். உரிய காலத்தில், தாரகன் அசுரர்களின் அரசனாகப் பதவி ஏற்றான்.

## தாரகன் தவம்

தாரகன் பிறந்ததிலிருந்தே தேவர்களைப் பழி வாங்க வேண்டும் என்ற உறுதியோடு இருந்தான். ஆனால் வரபலம் இல்லாமல் தேவர்களை எதிர்ப்பது இயலாத காரியம் என்பதை அறிந்த தாரகன், தவம் செய்ய புறப்பட்டான். பரிபத்திர மலைக்குச் சென்று அங்குள்ள குகையில் தவத்தை மேற் கொண்டான். சில நாட்கள் ஒன்றும் உண்ணாமலும் சில நாட்கள் தண்ணீரை மட்டும் குடித்தும், சில நாட்கள் பச்சை இலைகளை மட்டும் தின்றும் தவம் செய்தான். இறுதியாக அக்கினியை வளர்த்து தன் உடம்பில் உள்ள சதைகளை நெருப்பில் இட்டுத் தவம் செய்தான். அப்போது பிரம்மன் அவன் எதிரே தோன்றி, “இது போதும் உன்னுடைய உடலை அறுக்கத் தேவையில்லை. உன் தவத்தை மெச்சினேன். உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்” என்று சொல்ல, தாரகன் ஒரு வரத்தைக் கேட்டான். “என்னை யாரும் வெல்லக் கூடாது. சாவே என்னை நெருங்கக் கூடாது” என்ற வரத்தைக் கேட்டவுடன், பிரம்மன், “சாகாதவர்களே மூன்று உலகத்திலும் இல்லை. ஆகவே சிரஞ்சீவியாய் இருப்பது இயலாத காரியம். வேறு எப்படியானாலும் உன் வரத்தை மாற்றிக் கேள்” என்று பிரம்மா சொல்ல, தாரகன், “அப்படி எனக்குச் சாவு வருவ தானால் ஒரு ஏழு வயது பாலகன் மூலம் வரட்டும்” என்று கேட்டான். பிரம்மன் அந்த வரத்தைத் தந்துவிட்டு மறைந்தார்.

## தேவாசுரப் போர்

தாரகன் பிரம்மனிடம் இருந்து வரத்தைப் பெற்ற பிறகு மிகப் பெரியதொரு படை திரட்டலானான். ஆயிரக்கணக்கான யானைகள், குதிரைகள் ஆகியவற்றைச் சேர்த்து, ஜம்பா,

குஜம்பா, மகிஷா, குஞ்சரா, மேகா, காலநேமி, மதனா, ஜம்பகா, சும்பா ஆகியோர் படைத்தலைவர்களாக நியமிக்கப்பட்டனர்.

தேவர்களும் பெரும் போர் உள்ளது என்பதை அறிந்து பெரும்படை திரட்டினர். இந்திரன், மாதலி என்பவன் ஓட்டிய ரதத்திலும்; எமன், எருமைக்கடா மேலும்; அக்கினி, ஆட்டின் மேலும்; வருணன், ஒரு பாம்பின் மேலும் ஏறி வந்தனர். காலாட்படையில் சூரியன், சந்திரன், குபேரன் முதலியோர் வந்தனர். போர் தொடங்கியது. யானைகளோடு யானைகளும் குதிரைகளோடு குதிரைகளும், ரதங்களோடு ரதங்களும் மோதின. இப்போரில் பல அசுரர்கள் கொல்லப்பட்டாலும் தேவர்கள் தோற்று ஓடும் நிலைமை வந்தது. அப்போது இந்திரனுக்கு உதவியாக விஷ்ணு வந்தார். அவருடைய சக்கரம் பலரைக் கொன்றாலும் ஜம்பா என்பவன் கதாயுதத்தால் அடித்து விஷ்ணுவை மயக்கம் அடையச் செய்தான். ஆனால் இந்திரன் ஜம்பாவைக் கொன்றான். இறுதியாகத் தாரகனைச் சந்திப்பது என்பது தேவர்களுக்கு முடியாத காரியம் ஆகி விட்டது. தேவர்கள் தோற்றனர். தாரகன் வெற்றி அடைந்தான்.

### பிரம்மனது அறிவுரை

தாரகனிடம் அடிவாங்கிய தேவர்களில் இறந்தவர்கள் போக எஞ்சியவர்கள் நேரே பிரம்மனிடம் சென்றார்கள். அவர்களைப் பார்த்து நீங்கள் ஏன் எல்லாம் இழந்தவர்கள் போல முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு இருக்கிறீர் கள்? என்ன நடந்தது என்று கேட்டார். தேவர்கள் "பிரம்மாவே நீங்கள்தான் எங்கள் கஷ்டங்களுக்குக் காரணம். நீங்கள் தாரகனுக்குக் கொடுத்த வரத்தின் வன்மையால் எங்கள் அனைவரையும் கொடூரமாக அடித்து விட்டான். அவனைக் கொல்ல முடியாது என்று தெரிந்துவிட்டது. இப்போது என்ன செய்வது?" என்று கேட்டார்கள். பிரம்மன் கவலைப்பட

வேண்டா. தாரகனைக் கொல்ல முடியும். ஓர் ஏழு வயது பாலகன் தான் அவனைக் கொல்ல முடியும். அப்படிப்பட்ட பாலகன் இன்னும் தோன்றவில்லை. சிவன்தான் அந்த பாலகனைத் தோற்றுவிக்க முடியும். அதற்குச் சில இடையூறுகள் உள்ளன. சிவன் தவத்தில் இருக்கிறார். சிவனை அடைய வேண்டும் என்று பார்வதியும் தவத்தில் இருக்கிறார். முதலாவது சிவனுடைய தவத்தைக் கலைக்க வேண்டும். இரண்டாவது பார்வதியைத் திருமணம் முடிக்க வேண்டும். அதற்கு ஒரே வழி மதனனை விட்டு சிவனுடைய தவத்தைக் கலைக்க வேண்டும் என்று கூறினார்.

அனைத்தும் அப்படியே நடந்தது. சிவன் பார்வதியை மணந்தார். தடபுடலாகத் திருமணம் நடைபெற்றது.

சிவனுக்கும், பார்வதிக்கும் பிறந்த கார்த்திகேயன் குழந்தையாக இருக்கும்பொழுதே கோடி சூரியப் பிரகாசம் பெற்றிருந்தார். ஒரே உடம்பாயினும் ஆறு முகங்கள் பெற்றிருந்ததால், ஷடானனன் என்ற பெயரும் அவருக்கு ஏற்பட்டது. குழந்தையாக இருந்தாலும் அவன் யார் எனப் புரிந்து கொண்ட தேவர்கள் எல்லாவகையான ஆயுதங் களையும் அவர்களுக்குத் தந்திருந்தனர். இதன் பிறகு தாரகனுடன் அவர் போர் புரிய வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர்.

போர்க்களத்திற்கு வந்த கார்த்திகேயனைப் பார்த்து தாரகன் கேலி பேசத் தொடங்கினான். மற்ற பிள்ளைகளோடு சேர்ந்து பந்து விளையாட வேண்டிய நீ தவறுதலாகப் போர்க் களம் புகுந்து விட்டாய். ஓடிச் சென்று விளையாடுவாயாக என்றான் தாரகன். கார்த்திகேயன், 'நான் என்ன செய்ய வேண்டும் என்று நீ எனக்குச் சொல்லித்தர வேண்டியதில்லை. உன் படைகளை அழைத்துக் கொண்டு போருக்கு வா' என்று

ஸ்கந்தன் கூறவே தாரகன் தண்டாயுதத்தை எறிய அவர் அதனைத் தடுத்துவிட்டார். அதன் பிறகு சக்திவாய்ந்த பல ஆயுதங்களையும் தாரகன் வீச, அவற்றை எல்லாம் தடுத்து அழித்து விட்டார் ஸ்கந்தன். இறுதியாக ஸ்கந்தன் தன் வேலாயுதத்தைச் செலுத்தித் தாரகன் மார்பைப் பிளந்தான். தாரகன் பிரம்மனிடம் வரம் பெற்றபடியே ஏழு வயது பாலகனால் கொல்லப்பட்டான். தோல்வியே கண்டறியாத தாரகன் இறந்ததைக் கண்டு அசுரர்கள் போர்க்களத்தை விட்டே ஓடினர்.

### கௌரி

சிவன் ஒருநாள் பார்வதியைப் பார்த்து விளையாட்டாக காளி என்று அழைத்தார். தன் கறுப்பு நிறத்தைச் சுட்டிக் காட்டிக் கேலி செய்கிறார் என்று நினைத்த பார்வதி பெருங் கோபம் அடைந்து தன் நிறத்தை மாற்றிக் கொள்ளத் தவம் செய்யச் சென்றார். அவர் சென்றிருக்கும் பொழுது, அதி என்ற அசுரன் சிவபெருமானிடம் விளையாட்டுக் காட்ட எண்ணி பாம்பு வடிவுடன் நந்திதேவன் காவலனைத் தாண்டி சிவன் இருக்குமிடம் சென்றான். உள்ளே பார்வதி வடிவெடுத்து சிவன் முன் நிற்க, அவன் யார் என்பதை கவனிக்காமல் பார்வதி என்று நினைத்து வந்து விட்டாயா என்றார் சிவன். சரியான பதில் வராததைக் கண்ட சிவன், அவன் அதி என்ற அசுரன் என்று தெரிந்ததும் அங்கேயே அவனைக் கொன்று விட்டார். தவம் செய்யச் சென்ற பார்வதி பிரம்மன் எதிர்ப் பட்டவுடன் தன்னுடைய நிறத்தை மாற்றி அமைக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்ள, பிரம்மன் அவ்வண்ணமே ஆகட்டும் என்றார். பார்வதியின் நிறம் தனியே கழன்று நின்றது. அது பெண் தெய்வ வடிவில் கௌசிகி என்ற பெயருடன் நின்றது. அத்தெய்வத்தை விந்தியாவாசினி என்ற பெயரைத் தாங்கி

விந்திய மலையில் சென்று வாழ்வாயாக என்று பிரம்மன் கட்டளை இட்டார். கரிய நிறம் போனவுடன் பொன் நிறத்துடன் விளங்கிய பார்வதிக்கு கௌரி என்ற பெயரும் வந்தது.

**சாவித்திரி**

அஸ்வபதி என்ற மன்னன் குழந்தைப் பேறின்மையால் நீண்ட காலம் தவம் செய்து வந்தான். பிரம்மன் தோன்றி 'உனக்கு ஆண் சந்ததிக்கு வாய்ப்பே இல்லை. பெண் குழந்தை இருக்கும்' என்று வரமளித்தார். வரத்தின்படிப் பிறந்த பெண்ணுக்கு 'மாலதி' என்று பெயரிட்டு, சாவித்திரி தேவியை வேண்டிப் பெற்ற குழந்தை ஆதலின் அவளுக்கு சாவித்திரி என்ற பெயரும் வழங்கலாயிற்று. துயுமத் சேனாவின் மகன் சத்தியவானை மணந்த அவள் வாழ்க்கையில், நாரதர் வெளிப்பட்டு, "பெண்ணே! இன்னும் ஓராண்டில் உன் கணவன் உயிர் பிரியும். தக்க விரதங்களை மேற் கொள்வாயாக" என்று கூறிப் போனார். அந்த வருடம் முடிய நான்கு நாட்கள் இருக்கையில், சாவை எதிர்பார்த்து பூஜை முதலியவற்றில் பொழுதைப் போக்குவதற்காகக் குளத்தங் கரையில் தங்கி இருந்தனர். சத்தியவானுக்குப் பொறுக்க முடியாத தலைவலி வர, மனைவியின் மடியில் தலை வைத்துப் படுத்தான். அங்கே யமன் வந்து ஓர் அங்குல உயரமுள்ள சத்தியவான் உயிரைப் பிரித்து எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

கற்புக்கரசியாகிய சாவித்திரியும் யமனைப் பின் தொடர்ந்தாள். பின்தொடர வேண்டா என்று யமன் தடுத்தும், சாவித்திரி அவனைப் பார்த்து இரண்டு காரணங்களால் உன்னைப் பின்தொடர்கிறேன். "முதலாவது காரணம், கற்புடைய பெண்ணாகிய நான் கணவன் எங்கே

இருக்கிறானோ அங்கே செல்வதுதான் முறை. இரண்டாவது காரணம், தர்மதேவன் என்று உனக்குப் பெயர் இருப்பதால் உன்னைப் பின்தொடர்வது சிறப்புடையதாகும்" என்றாள். ஒவ்வொரு வரமாகத் தருகிறேன் என்று யமன் சொல்ல, கண் தெரியாத மாமனாருக்குக் கண் வேண்டும் என்றாள்; பெற்றாள். பிறகு ராஜ்ஜியத்தை ஆளத் தனக்கு நூறு பிள்ளைகள் வேண்டும் என்று வரம் கேட்டாள். கவனக் குறைவால் யமன் அப்படியே ஆகட்டும் என்றான். உடனே சாவித்திரி 'தர்மராஜனே! இது என்ன ஞாயம்? என் கணவனை நீ பிரித்து எடுத்துச் சென்றுவிட்டால், எனக்கு நூறு பிள்ளைகள் எப்படிப் பிறப்பார்கள்?' என்று கேட்க, யமன் மனம் மிக மகிழ்ந்து சத்தியவான் உயிரைத் திருப்பிக் கொடுத்து விட்டான்.

**பாற்கடல் கடைதல்**

தேவர்கட்கும், அசுரர்கட்கும் இடைவிடாமல் போர் நடந்து கொண்டே இருந்தது. இரண்டு பக்கத்திலும் கணக்கற்றவர் இறந்து கொண்டே இருந்தனர். ஆனால் அசுரர்களைப் பொறுத்தமட்டில் அவர்கள் குருவாகிய சுக்கிராச்சாரிக்குத் தெரிந்த மிருத்யுசஞ்சீவினி மந்திரத்தால், இறந்த அசுரர்கள் எல்லாம் பிழைத்துக் கொள்ள, தேவர்கள் ஜனத்தொகை குறையலாயிற்று. தேவர்கள் சென்று தங்கள் நிலையை பிரம்மனிடம் விளக்கிச் சொல்ல, 'பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்து உண்டால் தேவர்கள் சாகாத்தன்மை பெறுவர்' என்று கூற, கடல் கடையும் வேலை தொடங்கிற்று. மந்திரமலை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பு கயிறாகவும் கடையத் தயார் ஆனாலும் மந்திர மலை ஆகிய மத்தை அடியில் இருந்து தாங்க விஷ்ணு உடன்பட்டார். அசுரர்கள் வாசுகி தலைப்பக்கமும் தேவர்கள் அதன் வால்பக்கமும் பிடித்துக்

கடைந்தனர். முதலில் வந்த சந்திரனை, சிவன் தலையில் வைத்துக் கொண்டார். அடுத்து வந்த லட்சுமியை விஷ்ணு எடுத்துக் கொண்டார். உச்சைச்சிரவம் என்ற குதிரை வர இந்திரன் எடுத்துக்கொண்டார். கடைசியாக தன்வந்திரி அமுத கலசத்தோடு வர, அசுரர்கள் அதைப் பிடுங்க முயலும் போது, விஷ்ணு பெண் வடிவெடுத்து அவர்கள் கவனத்தைத் திருப்ப, அமுதம் தேவர்களுக்கு மட்டும் பங்கிடப்பட்டது. அசுரர்களில் ஒருவனாகிய ராகு தேவ வடிவம் எடுத்து அமுதத்தை வாங்கி வாயில் ஊற்ற, உண்மை அறிந்த சூரிய சந்திரர்கள் அவன் கழுத்தை அறுத்துவிட்டனர். அமுதம் வாயளவில் தங்கியதால் ராகுவின் தலை மட்டும் தேவர்களைப் போல என்றும் இருப்பதாயிற்று. தன்னைக் காட்டிக் கொடுத்த சூரிய, சந்திரர்களைப் பிடிக்க ராகு முயல்வதுதான் கிரகணம் என்று சொல்லப்படும்.

**கட்டட, சிற்பக்கலைகள்**

கட்டடக் கலைக்கு மூலமாக உள்ளவர்கள் பிருகு, வசிட்டர், விஸ்வகர்மா, நாரதர் முதலிய பதினெட்டு தேவர்களும், முனிவர்களும் ஆவர். சைத்ர (சித்திரை) மாதத்தில் வீடு கட்டும் பணி தொடங்கக் கூடாது. வைகாசியில் துவங்குவது நற் பலனைத் தரும். மார்கழி, மாசி, பங்குனி மாதங்கள் (தமிழ் மாதம் சித்திரை 1ஆம் தேதி, அகில இந்திய கணக்குப்படி சைத்ர மாதம் 24ஆம் தேதி ஆகும். இதனைக் கொண்டு மற்ற வற்றைக் கணக்கிட்டுக் கொள்ளலாம்) அஸ்வினி, ரோகிணி, மூலம் ஆகிய நட்சத்திரங்கள், வீடு கட்டத் துவங்குவதற்கு உகந்தவை. ஞாயிறு, செவ்வாய்க் கிழமைகள் தவிர மற்ற நாட்கள் சிறப்பானவை.

வீடு கட்டத் தேர்ந்தெடுக்கப்பட்ட மனை சோதனைக்குள் ளாக்கப்பட வேண்டும். ஒரு குழியை வெட்டி அதில் செடியை நட வேண்டும். அச்செடி வளர்ந்து மரமாக நின்றால் அது

நல்ல இடம். செடி கருகிப் போனால் வேறு இடம் தேட வேண்டும். மனையில் ஒரு சதுரமான படம் வரைய வேண்டும். அதற்குள் ஒரே அளவிலான எண்பத்தோரு சதுரங்கள் வரையப்பட வேண்டும். ஒவ்வொரு சதுரத்திலும் ஒரு குறிப்பிட்ட தேவனை வணங்க வேண்டும்.

ஒரு வீட்டிற்கு நான்குபுறமும் கதவுகள் இருக்குமானால் அவ்வீடு சர்வ தபோ பாத்ர என்று வழங்கப்படும். ஒரு சாதாரண மக்கள் குடியிருக்கும் வீடு ஒரு முழம் நீளம் இருக்க வேண்டும். வீட்டின் முன்புறம் மரங்கள் இருக்கக் கூடாது.

வீடு கட்டும்பொழுது மரவேலைக்காகத் தேர்ந்தெடுக்கப் படும் மரங்களை கவனமாகப் பார்த்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். பறவைகள் வீடு கட்டியிருக்கும் மரங்களை வெட்டக் கூடாது. சில குறிப்பிட்ட மரங்களைப் பயன் படுத்தக் கூடாது. இடி விழுந்த மரங்களைப் பயன்படுத்தக் கூடாது. சுடுகாட்டில் உள்ள மரங்கள், கோயிலைச் சுற்றி உள்ள மரங்கள், இரண்டு ஆறுகள் சங்கமிக்கும் இடத்தில் உள்ள மரங்களைத் தேர்ந்தெடுக்கக் கூடாது. வேப்பமரம், மாமரம் ஆகியவற்றைப் பயன்படுத்தக் கூடாது.

சிவனுடைய விக்கிரகம் செய்யும் பொழுது, சிவனது தலையில் சடைமுடி தரித்திருக்க வேண்டும். நெற்றியில் பிறைச் சந்திரன் அமைக்கப்பட வேண்டும். சிவனுக்கு வயது பதினாறு என்பது போல் தோற்றமளிக்க வேண்டும். புலித்தோல் ஆடையாகவும், பாம்புகளை மாலையாகவும் அணிந்திருக்க வேண்டும். மயிலிறகு ஒரு காதினை அழகுபடுத்த வேண்டும். திரிசூலம், தண்டம், வேல் முதலியவை வலப்புறத்திலேயே இருக்க வேண்டும். கபாலம், பாம்பு, வாள் முதலியவை இடப்பக்கம் வைக்கப்பட வேண்டும். எருதின் மீது அமர்ந்து இருப்பதுபோல் விக்கிரகம் அமைத்தால், சிவனுக்கு இரு கைகள் இருக்க வேண்டும். சிவன் நடனம் ஆடுவதுபோல்

வடிவமைத்தால், அச்சிலைக்குப் பத்து கைகள் வடிக்கப்பட வேண்டும். திரிபுரத்தை எரிப்பதுபோல் தோற்றம் தர வேண்டுமானால், பதினாறு கைகள் வழங்கப்பட வேண்டும். சிவனின் வடிவமைத்தலில் ஒரேயொரு வடிவம் தனித்தன்மை பெற்றிருக்க வேண்டும். அவ்வடிவம் அர்த்தநாரீசுவர வடிவம். பாதி ஆண் உருவும், பெண் உருவு பாதியும் பெற்றிருத்தல் வேண்டும். இதில் சிவன் உருவம் வலப்பக்கமாகவும், பார்வதி உருவம் இடப்பக்கமாகவும் அமைக்கப்பட வேண்டும். வலக் கையில் கபாலம் அல்லது திரிசூலம் ஏந்தியிருக்க வேண்டும். இடக்கையில் தாமரை மலர் அல்லது கண்ணாடி இருக்க வேண்டும்.

மற்றொரு வகையான விக்கிரகம் உமா மகேஸ்வரன் எனப்படும். இரண்டு விக்கிரகங்கள் சிவனுடையதும், பார்வதியுடையதும் தனித்தனியே செய்யப்பட வேண்டும்.

**மண்டபங்கள்**

மண்டபங்கள் பலவகைப்படும். அவற்றைக் கட்டும் பொழுது, எத்தனைத் தூண்கள் வைக்கப்பட்டுக் கட்டப் படுகிறதோ அதற்கு ஏற்றவாறு வேறு வேறான பெயர்களில் குறிப்பிடப்படும். இருபத்தேழு விதமான மண்டபங்கள் மிக முக்கியமானவை எனக் கருதப்படுகிறது. அவையாவன:—

1. **புஷ்பக மண்டபம்** அறுபத்தி நான்கு தூண்களையும்,
2. **புஷ்ப பாத்ரா மண்டபம்** அறுபத்தி இரண்டு தூண் களையும்,
3. **சுவ்ரதா மண்டபம்** அறுபது தூண்களையும்,
4. **அம்ரித்த நந்தனா** ஐம்பத்தெட்டு தூண்களையும்,
5. **தௌவுல்யா** ஐம்பத்தாறு தூண்களையும்,
6. **புத்தி சம்கீர்னா** ஐம்பத்து நான்கு தூண்களையும்,

7. கஜபாத்ரா ஐம்பத்திரண்டு தூண்களையும்,
8. ஜயவாஹா ஐம்பது தூண்களையும்,
9. ஸ்ரீவத்சா நாற்பத்தி எட்டு தூண்களையும்,
10. விஜயா நாற்பத்தி ஆறு தூண்களையும்,
11. வாஸ்துகிருத்தி நாற்பத்தி நான்கு தூண்களையும்,
12. சுருதிஜ்யா நாற்பத்தி இரண்டு தூண்களையும்,
13. யக்ஞ பாத்ரா நாற்பது தூண்களையும்,
14. விஷாலா முப்பத்தி எட்டு தூண்களையும்,
15. சுஷ்லிஷ்டா முப்பத்தி ஆறு தூண்களையும்,
16. வித்ரு மார்தனா முப்பத்து நான்கு தூண்களையும்,
17. பாகபஞ்ச முப்பத்தி இரண்டு தூண்களையும்,
18. நந்தனா முப்பது தூண்களையும்,
19. மானவா இருபத்தி எட்டு தூண்களையும்,
20. மானபாத்ரகா இருபத்தி ஆறு தூண்களையும்,
21. சுக்ரீவா இருபத்தி நாலு தூண்களையும்,
22. ஹரிதா இருபத்தி இரண்டு தூண்களையும்,
23. கார்னிகரா இருபது தூண்களையும்,
24. ஷடர்திகா பதினெட்டு தூண்களையும்,
25. சிம்ஹா பதினாலு தூண்களையும்,
26. சியாம் பத்ரா பதினான்கு தூண்களையும்,
27. சமுத்ரா பன்னிரண்டு தூண்களையும்,

கொண்டு கட்டப்பட வேண்டும். மண்டபங்கள் முக்கோண வடிவிலேனும், அரைவட்ட வடிவிலேனும், நீண்ட சதுர வடிவிலேனும் இருக்க வேண்டும்.

இவற்றை அடுத்து, தான தர்மங்கள் பற்றி மச்ச புராணம் பேசுகிறது. லோமஹர்ஷனர் புராணத்தைக் கூறி முடித்தவுடன், முனிவர்கள் அவருக்கு நன்றி கூறிவிட்டுச் சென்றனர்.

# 17. கருட புராணம்

## இப்புராணம் பற்றி...

*கருடன் விஷ்ணுவிற்கு வாகனமாகவும், சிறந்த பக்தனாகவும் இருந்ததால் அவனது பக்தியை ஏற்றுக் கொண்ட விஷ்ணு, அவனையே ஒரு புராணம் பாடுமாறு பணித்தார். அதன்படி காசியப முனிவருக்கு கருடன் இதை உரைத்ததால் கருடபுராணம் எனப் பெயர் பெற்றது. காசியப முனிவருக்குச் சொன்னதை விஷ்ணுவும் பங்கிட்டுக் கொண்டார். அவர் அதனை ருத்ரன், பிரம்மன் மற்ற தேவர்களுக்கும் சொல்ல, பிரம்மன் அதனை வியாச முனிவருக்குச் சொல்ல, அவர் லோமஹர்ஷனருக்குச் சொன்னார். நைமிசாரண்ய வனத்தில் சௌனக முனிவருக்கும், மற்ற முனிவர்களுக்கும் லோமஹர்ஷனர் இப்புராணத்தைக் கூறினார்.*

*பூர்வ காண்டம், உத்தர காண்டம் என இரண்டு காண்டங்கள் உள்ளன. 18,000 பாடல்கள் உள்ளன. பொதுப்படையானதும், முக்கியத்துவம் வாய்ந்ததும் ஆகிய பல விஷயங்கள் பற்றிக் கூறுவதால் இதனை ஒரு களஞ்சியம் என்று கூறலாம். பூர்வ காண்டத்தில் புராணங் களுக்குரிய ஐந்து இலக்கணங்களும் உள்ளன. இவை அல்லாமல், வேறு புராணங்களில் காணப்பெறாத வானியல்,*

*சோதிடம், கற்களைப் பரிசோதித்துப் பார்த்தல், மருத்துவம், அளவுகள், இலக்கணம், அரசியல் என்பவை போன்ற பல கலை விஞ்ஞான சம்பந்தமான செய்திகளையும் கொண்டுள்ளது. இதில், ராமாயண, பாரதக் கதைகள் இடம் பெற்றுள்ளன.*

*அடுத்துள்ள உத்திர காண்டம் அளவில் சிறியதாயினும், பிறப்பு, இறப்பு, மறுபிறப்பு என்பவை பற்றி விரிவாகப் பேசுகிறது. பிறப்பு, இறப்புச் சூழலிலிருந்து விடுதலை பெறும் வழியும் கூறப்பட்டுள்ளது.*

*கருட புராணத்தின் மூலப்பகுதி எதுவும் இப்போது கிடைக்கவில்லை. இதில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அவ்வவற்றைத் தனியே பேசும் நூல்களில் இருந்து தாராளமாக எடுக்கப்பட்டுள்ளன.*

இப்புராணம் நைமிசாரண்ய வனத்தில் சௌனகர் முதலானோர் கேட்க சூதா சொல்லத் தொடங்கினார். இங்கு சூதா என்று குறிப்பது தனி மனிதனை அன்று. பிராமணத் தாய்க்கும், பிராமணரல்லாத தந்தைக்கும் பிறந்தவர்களே சூதர்கள் என்று அழைக்கப்பட்டனர். ஆங்காங்கு சென்று புராணப் பிரசங்கம் செய்வதும், குதிரை மேய்ப்பதும் இவர்கள் தொழிலாகும். வியாசரின் சீடரான லோமஹர்ஷனரும் இந்தச் சூதர் இனத்தைச் சேர்ந்தவரே ஆவார். நைமிசாரண்யத்தில் கூடிய முனிவர்கள், லோமஹர்ஷனரைப் பார்த்து, "லோமஹர்ஷனரே! தாங்கள் பெருங்கல்வி உடையவர். வியாசரின் சீடரும் ஆவீர். தாங்கள் தாம் எங்களுடைய ஐயங்களைப் போக்க வேண்டும். கடவுளர்களில் மிக மேம்பட்டவர் யார்? யாரை நாங்கள் வணங்க வேண்டும்? எந்தப் பொருளைப் பற்றி தியானம் செய்யவேண்டும்? தீமை அழிப்பவர் யார்? தர்மம் என்றால் என்ன?"

முனிவர்களின் கேள்விகளுக்கு லோமஹர்ஷனர், "இப்பொழுது நான் கருட புராணம் பற்றிச் சொல்லப் போகிறேன். விஷ்ணுவின் வாகனமாகிய கருடனே, காசியப முனிவனுக்குச் சொல்லியதே இப்புராணம்" என்று கூறினார்.

முதலில் விஷ்ணு எடுத்த இருபத்தி இரண்டு அவதாரங்கள் பற்றிக் கூறுகிறேன். 1. முதல் அவதாரம் இளம் பையனாக, 2. வராகம், 3. தேவரிஷி, 4. நர—நாராயணன், 5. கபில முனிவர், 6. தத்தாத்ரேயர், 7. ருச்சி—அகுதி மகனாக, 8. நபி—மேரு மகன் உருக்கிரமா, 9. பிருத்து, 10. மத்ஸ்ய, 11. கூர்மம், 12. தன்வந்திரி, 13. மோகினி அவதாரம், 14. நரசிம்மன், 15. வாமனம், 16. பரசுராமன், 17. வேதவியாசர், 18. நாரத முனிவர், 19. இராமன், 20. கிருஷ்ணன், 21. புத்தர், 22. இனி எடுக்கப் போகும் கல்கி அவதாரம்.

## பிரபஞ்ச உற்பத்தி

பரப்பிரம்மத்தின் இலக்கணம் சொல்லி, உலகம் நீருக்குள் மூழ்கி இருந்ததையும் சொல்லி, அதில் ஒரு பொன்முட்டை இருந்தது என்பதையும் சொல்கிற வரையில் கருட புராணம், ஏனைய புராணங்களைப் போல் உள்ளது. மற்ற புராணங்கள் எல்லாம் முட்டைக்குள் பிரம்மன் இருந்தார் என்று சொல்ல, கருட புராணம், முட்டைக்குள் விஷ்ணு இருந்தார் என்று சொல்கிறது. விஷ்ணு பிரம்மனையும், சிவனையும் தோற்றுவித்தார். முட்டைக்குள் இருந்த பொருட்களைக் கொண்டு பிரபஞ்சத்தை உற்பத்தி செய்தார். மூவர் என்று இங்கே சொல்வது அவர்கள் செய்யும் தொழில்கள் பற்றியே ஆகும். பிரம்மன் படைக்கிறார், விஷ்ணு காக்கிறார். சிவன் அழிக்கிறார் என்று சொன்னாலும் இம்மூவரும் வெவ்வேறான வர் அல்லர், ஒருவரே என்பதை உணர வேண்டும். பிரம்மன் முதலில் நான்கு கணங்களை(கூட்டங்களை)ப் படைத்தார்.

அவர்கள் முறையே தேவர்கள், அசுரர்கள், பிதுர்க்கள், மனிதர்கள். தேவர்கள் பகலிலும், அசுரர்கள் இரவிலும் மிகுதியான பலத்தைப் பெறுவர். இந்த நால்வகை தவிர ராட்சசர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், அனைத்து விலங்குகளையும் படைத்தார். பிரம்மனின் நான்கு வாய்களில் இருந்தும், நான்கு வேதங்கள் சொல்லப்பட்டன. மானசீக புத்திரர்கள், சுவயம்பு மனு ஆகியோரின் படைப்பு அடுத்து பேசப்படுகிறது. தட்சன் மகளாகிய வினதாவின் மகனாகத் தோன்றியவனே கருடன். இவனே கருடபுராணத்தை இயற்றியவன்.

கருட புராணம் விஷ்ணு, லட்சுமி, சூரியன் ஆகிய மூவரையும் வழிபடும் முறைகளையும், அவரவர்களை வழிபடும் போது சொல்லவேண்டிய மந்திரங்களையும் விரிவாகப் பேசுகிறது. விஷ்ணுவுக்கு வாசுதேவா, வாமன பாலபத்ராய, பார்ஜன்ய முதலிய ஆயிரம் நாமங்களைப் பேசுகிறது.

**பாம்புக்கடியை நிவர்த்திக்க**

பிராணேஷ்வரா என்ற மந்திரம் பாம்புக்கடியிலிருந்து ஒருவரை மீட்க உதவுகிறது. ஆனாலும் இதற்குச் சில விதிவிலக்குகள் உள்ளன. எந்த இடத்தில் இருந்து பாம்பு கடித்தது என்பதும், உடம்பில் எந்த உறுப்பில் கடித்தது என்பதும் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டும். ஆறு, சுடுகாடு, கரையான் புற்று, மலை, மரப்பொந்து, கிணறு என்ற இடங்களில் இருக்கும் பாம்பு கடித்தால் இம்மந்திரம் பயன்படாது. மனித உறுப்புக்களில் கை கஷ்கம், இடுப்பு, தொண்டை, நெற்றி, காது, வயிறு, வாய், கைகள், முதுகு ஆகிய இடுப்புக்கு மேலே இருக்கும் பகுதிகளில் பாம்பு கடித்தால் இம்மந்திரம் பயன்படாது.

மேலே சொல்லிய இடங்களைத் தவிர வேறு இடங்களில் இருந்து, மேலே சொல்லிய உறுப்புகளைத் தவிர வேறு உறுப்புகளில் கடித்தால், பிராணேஷ்வர மந்திரத்தைச் சொல்லி பிழைக்கச் செய்யலாம். எட்டு இதழ்களை உடைய ஒரு தாமரையை வரைந்து இந்த மந்திரத்தை அதன் இதழ்களில் எழுதி, பாம்பால் கடிக்கப்பட்டவர் மேல் இந்தப் படத்தை வைத்து, அமர்ந்து இருந்து கொண்டு கீழே மந்திரங்களை திருப்பித் திருப்பிச் சொல்லவேண்டும். உருக்கிய நெய்யைக் கடிபட்டவனுக்குக் கொடுத்து குடிக்கச் சொன்னால் அவன் பிழைக்க உதவியாக இருக்கும். இம்மந்திரங்கள் ஜெபிக்கப் படும்போது, கை நிறைய சர்க்கரையை வீட்டிற்குள் எறிந்தால் பாம்புகள் அந்தப் பக்கமே வராது.

**சாளக்கிராமம்**

சாளக்கிராமம் என்பது விஷ்ணுவைக் குறிக்கும் ஒரு வடிவமாகும். இது பலவகைப்படும். சங்கு, சக்கரம், பத்மம் ஆகிய அடையாளங்களை இதே வரிசையில் பெற்றிருப்பது கேசவ சாளக்கிராமம். இம்முறை மாறி சக்கரம், சங்கு, பத்மம், கதை என்ற வரிசையில் பெற்றிருப்பது மாதவ சாளக்கிராமம். பத்மம், கதை, சக்கரம், சங்கு வரிசையில் இருப்பது நாராயண சாளக்கிராமம். கதை, பத்மம், சங்கு, சக்கரம் வரிசையில் இருப்பது கோவிந்த சாளக்கிராமம். பத்மம், சங்கு, சக்கரம் கதை வரிசையில் இருப்பது விஷ்ணு சாளக்கிராமம். சங்கு, பத்மம், கதை, சக்கரம் இருப்பது மதுசூதனன் சாளக்கிராமம். கதை, சக்கரம், சங்கு, பத்மம் வரிசையில் இருப்பது திரிவிக்கிரம சாளக்கிராமம். பத்மம், சக்கரம், கதை, சங்கு வரிசையில் அமைந்திருப்பது பத்மநாப சாளக்கிராமம். சக்கரம், சங்கு, கதை, பத்மம் வரிசையில் அமைந்திருப்பது வாசுதேவ சாளக்கிராமம். கதை, பத்மம், சக்கரம், சங்கு வரிசையில் அமைந்திருப்பது ஸ்ரீகிருஷ்ண சாளக்கிராமம்.

**கோயில் அமைப்பு**

கோயில்கள் ஐந்து வகைகளில் அமையலாம். அவை முறையே வைரஜா, புஷ்பகா, கைலாசா, மாளகா, திரிபிஷ்டபா. இவற்றிடையே வேறுபாடு இவற்றின் அமைப்பில் உள்ளதாகும். வைரஜா சதுர வடிவிலும், புஷ்பகா நீண்ட சதுர வடிவிலும், கைலாசா வட்ட வடிவிலும், மாளகா முட்டை வடிவிலும், திரிபிஷ்டகா அறுகோண வடிவிலும் அமைந்திருக்கும். இந்த முழு அமைப்பில் உள்ளே வேண்டுமான மாற்ற அமைப்புகள் இருக்கலாம். கோயிலின் நுழைவாயிலின் பக்கத்தில் நாடகம் நடத்துவதற்குக் களம் அமைக்கப்பட வேண்டும். கோயில் பூசாரி, கோயிலுக்குச் சற்றுத் தள்ளி குடியிருக்க வேண்டும். கோயிலைச் சுற்றி நந்தவனங்கள், குளங்கள் முதலியன இருத்தல் வேண்டும்.

**சோதிட நம்பிக்கைகள்**

27 நட்சத்திரங்களில் அஸ்வினி, அனுஷம், ரேவதி, மிருகசீரிடம், மூலம், புனர்வசு, பூசம், ஹஸ்தம் என்ற இந்த நட்சத்திரங்கள் பிரயாணத்திற்கு உகந்தவை. கிணறு, குளம் வெட்ட பரணி, கார்த்திகை, ஆயில்யம், மகம், மூலம், விசாகம், பூரட்டாதி என்ற நட்சத்திரங்கள் உகந்தவை. இதே நட்சத்திரங்கள் தானியம் அறுவடை செய்யவும், கோயில் கட்டவும் உகந்தவை. விதை விதைக்க ரேவதி, அஸ்வினி, சித்திரை, ஸ்வாதி, ஹஸ்தம், புனர்பூசம், அனுஷம், மிருகசீரிடம் ஆகியவை ஏற்றவையாம்.

இராசிச் சக்கரத்தில் உள்ள பன்னிரண்டு ராசிகளில் ஒருவன் எந்த ராசியில் பிறக்கிறானோ அது அவன் ஜென்ம ராசி (ஜென்ம லக்கினம்) எனப்படும். சந்திரன் இருக்கும் ராசியை ஜென்ம லக்கனத்தோடு எண்ணிப் பார்க்கவும். ஜென்ம லக்கினத்திலேயே சந்திரன் இருந்தால் திருப்தியுடைய

மனிதனாக இருப்பார். ஜென்ம லக்கினம் முதல் வீடு என்று எண்ண வேண்டும். சந்திரன் இரண்டாம் வீட்டில் இருந்தால் வறுமை. மூன்றாம் வீட்டில் இருந்தால் அரச மரியாதை கிடைக்கும். நான்காம் வீட்டில் இருந்தால் சண்டை. ஐந்தாம் வீட்டில் இருந்தால் திருமணம். ஆறாம் வீட்டில் இருந்தால் செல்வம். ஏழாம் வீட்டில் இருந்தால் கௌரவம். எட்டாம் வீட்டில் இருந்தால் உயிர்ப் பயம். ஒன்பதில் இருந்தால் செல்வம். பத்தில் இருந்தால் வெற்றி. பதினொன்றில் இருந்தால் வெற்றி. பன்னிரண்டில் இருந்தால் மரண பயம்.

முதல் வீட்டில் சுக்கிரனும், சந்திரனும்; இரண்டாம் வீட்டில் சந்திரன், புதன், சுக்ரன், குரு; மூன்றில் செவ்வாய், சனி, சூரியன்; நான்கில் புதன்; ஐந்தில் சுக்கிரன், குரு, சந்திரன், கேது; ஆறில் சனி, சூரியன், செவ்வாய்; ஏழில் குரு, சந்திரன்; எட்டில் புதன், சுக்கிரன்; ஒன்பதில் குரு; பத்தில் சூரியன், சனி, சந்திரன்; பதினொன்றில் எந்த கிரகம் இருந்தாலும்; பன்னிரண்டாம் வீட்டில் புதன், சுக்கிரன் இருந்தால் நலம் பயக்கும்.

**ருச்சி**

முன்னொரு காலத்தில் ருச்சி என்ற முனிவர் இளமைப் பருவம் தொட்டே உலக பந்த பாசங்களில் அகப்படாமல் ஊர் சுற்றுவதையே தொழிலாகக் கொண்டிருந்தார். தியானம் செய்த நேரம் போக, சுற்றி வருவதையே தொழிலாகக் கொண்டிருந்த அவரை அவர் பிதுர்க்கள் ஒருமுறை சந்தித்துப் பின்வருமாறு கூறினர்.

"ருச்சி! நீ இவ்வாறு எதிலும் பற்றில்லாமல் சுற்றி வருவது படைத்தவனுடைய கருத்துக்கு மாறாகும். இவ்வுலகம் படைக்கப் பட்டதன் நோக்கம் ஒருவன் ஒருத்தியை மணந்து குழந்தைகள் பெற்று, நேர்மையான வழியில் வாழ்ந்து வாழ்வின் பயனை அடைவதாகும். இல்லறத்தில் இருக்கின்ற காரணத்தால் பந்த

பாசங்கள் ஒட்டிக் கொள்ளும் என்று நினைப்பது தவறு. உலகத்தில் இருந்தபடியே கடமைகளைச் செய்து கொண்டு ஒன்றிலும் பற்று வைக்காமல் வாழ முடியும். அப்படி வாழ்வதற்காகத்தான் உலகம் படைக்கப்பட்டுள்ளது" என்று கூறினர்.

ருச்சி முன்னோர்களைப் பார்த்து, 'பரம ஏழையாயும், இளமைப் பருவம் இல்லாதவனாகவும் இருக்கும் எனக்கு யார் பெண் தருவார்கள்?' என்று கேட்க, 'பிரம்மனை நோக்கித் தவம் செய்க' என்று முன்னோர் கூறினர்.

அதன்படியே ருச்சி, நூறு ஆண்டுகள் பிரம்மனை நோக்கித் தவம் செய்தான். பிரம்மன் தோன்றி, பிரம்மலோச்சா என்ற அப்ஸரஸின் மகளை மணந்து கொள்ளுமாறு பணித்தார். அக்கட்டளைப்படி மானினி என்ற பெண்ணை மணந்து வாழ்ந்தான்.

**அரசனும் கடமைகளும்**

ஓர் அரசன் என்பவன் தன் பகைவர்களை வென்று, குடிமக்கள் நலமுடன் வாழ வழிவகுக்க வேண்டும்.

மாலை கட்டுபவன் செடி, கொடிகள், மரங்கள் என்பவற்றில் இருந்து தனக்கு வேண்டுமான பூக்களைப் பறித்துக் கொள்கிறானே தவிர, அச்செடி கொடி மரங்களை வேரோடு பிடுங்குவதில்லை. அதேபோல, அரசன் நாட்டைக் காப்பதற்குத் தேவையான பொருளை வரிமூலம் வசூல் செய்யலாம். ஆனால் அந்த வரிச்சுமை வரி செலுத்துவோரை ஆண்டிகளாக ஆக்கிவிடக் கூடாது. பூப்பறிக்கும் ஒருவன் அச்செடி கொடிகளுக்கு நீர் விட்டுக் காப்பது போல அரசனும் வரிப்பணம் செலுத்தும் குடிமக்கள் நலமுடன் வாழ தேவையான உதவிகளைச் செய்ய வேண்டும்.

குடிமக்களிடமிருந்து வசூல் செய்யும் வரிப்பணத்தை ஆடம்பரம், கேளிக்கை என்பவற்றில் செலவிடாது, பயனுடைய வழியில் செலவு செய்ய வேண்டும். அரசன் குடிமக்களைத் தன் குழந்தைகள் போலப் பாதுகாக்க வேண்டும். அரசன் புரோகிதர்கள், அமைச்சர்கள், பணியாளர்கள் என்பவர்களை நியமிக்கும் பொழுது மிக்க கவனத்துடன் இருக்க வேண்டும். நன்கு ஆராய்ந்து, ஒவ்வொருடைய தகுதி, பண்பு, விசுவாசம் என்பவற்றை ஆராய்ந்தே இவர்களைப் பணியில் அமர்த்த வேண்டும். பிரச்சினைகள், இடையூறுகள் வரும் பொழுது மன்னன் மனம் கலங்கிவிடக் கூடாது. அதற்கெதிராக, மனத் துணிவோடு பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டும். இராகுவால் பிடிக்கப்பட்ட சந்திரன் மறுபடியும் அதிலிருந்து விடுதலை அடைவது போல், அரசனுக்கு வரும் இடையூறு களையும், பிரச்சினைகளையும் தக்க முறையில் சந்தித்தால் நீங்கிவிடும். பணியாளர்களை அன்புடன் நடத்தாமல் எப்பொழுதும் ஏசிக்கொண்டே இருந்தால் அவர்கள் மனம் ஒடிந்து பணிகளைச் செவ்வனே செய்யமாட்டார்கள்.

ஓர் அரசனிடம் ஆறுவகையான இயல்புகள் எதிர் பார்க்கப்படுகின்றன. அவையாவன: ஊக்கமுடைமை, மனத்தைரியம், பொறுமை, அறிவுடைமை, வண்மை, உடல் வலிமை என்பவையாம். அமைச்சர்கள், மருத்துவர்கள் என்பவர்களை நியமனம் செய்யும் பொழுது, மிக்க கவனத்துடன் அவர்களுடைய அரச விசுவாசத்தைப் பல வழிகளில் ஆராய்ந்து, சோதனை செய்து அதன் பின்னரே அவர்களைப் பணியில் அமர்த்த வேண்டும்.

**மருத்துவம்**

தன்வந்திரி, சுஷ்ருதா என்ற முனிவருக்கு ஆயுர்வேதங் களைக் கற்றுத் தந்தது பற்றி, ஆயுர்வேத நூல்கள் விரிவாகப்

பேசுகின்றன. கருடபுராணம் நான்கு அத்தியாயங்களில் இதை அப்படியே எடுத்துக் கூறுகிறது. ஒரு நோயைக் கண்டு அறிவது, சிகிச்சை அளிப்பது என்பதை ஐந்து படிகளாக ஆயுர்வேதம் கூறுகிறது. அதையே கருட புராணமும் சொல்கிறது. ஐந்து படிகள் பின்வருமாறு: முதலாவது நிதானா என்று சொல்லப் படும் ஒரு நோய் தோன்றுவதற்குரிய அறிகுறிகள் வெளிப் படையாகத் தெரிவதற்கு முன்னரே குறிப்பிட்ட நோய் வர வாய்ப்புள்ளது என்று அறிவதே நிதானா எனப்படும். உதக பூர்வரூபோ எனப்படும்— நோய் ஒருவனைத் தாக்கு வதற்கு முன்னர் பல அறிகுறிகளை முன் எச்சரிக்கையாகக் காட்டுகிறது. நோயின் அறிகுறிகள் முதலில் சிறிதாகவும் ஆழ்ந்து கவனித்தால் வெளியே காணமுடியாத அளவில் தோன்றுகின்றன. அப்பொழுதே அதைக் கூர்ந்து கவனித்துத் தெரிந்துகொள்வது பூர்வரூபா எனப்படும். மூன்றாவது ரூபா எனப்படும்— நோய்க்குரிய அறிகுறிகள் அனைத்தும் வெளிப் படையாகத் தெரிகின்றன. நான்காவது உபஷயா எனப்படும்— முழு அறிகுறிகளும் தோன்றிய பிறகு, இந்த அறிகுறிகள் எந்த நோய்க்குக் காரணமாக உள்ளன என்பவற்றைக் கூர்ந்து கவனித்து மருத்துவம் செய்தல், மருந்து கொடுத்தல், உணவை முறைப்படுத்துதல், பட்டினி போடுதல் முதலானவையாம். ஐந்தாவது சம்பிராப்தி எனப்படும். நோய் நீங்கிய உடம்பு வலுவிழந்து காணப்படும் ஆதலால் மறுபடியும் படிப்படியாக அவ்வுடம்பு பழைய நிலைமைக்கு வருமாறு செய்வதே சம்பிராப்தி எனப்படும்.

ஜுரம் என்று எடுத்துக் கொண்டால் அது பலவகைப்படும். விக்கல், வாந்தி, தோலில் கொப்புளங்கள் தோன்றுதல், பசியின்மை, சோர்வு, தூங்கிவிழுதல் என்பவை போகத் தலைவலி, உடல்வலி, வலிப்பு, மயக்கம், தூக்கமின்மை, ஜன்னி, அதீதமான வியர்வை, தாகம் ஆகிய அறிகுறிகளும்

தோன்றலாம். இது ஜுரத்தின் நிதானா பகுதி ஆகும். இவற்றுள் எந்தெந்த அறிகுறிகள் காணப்படுகின்றன என்பதைப் பொறுமையாக இருந்து சோதிக்க வேண்டும். இவற்றை அடுத்து கருடபுராணம், கபக்காய்ச்சல், க்ஷயரோகம், இதயக்கோளாறு, கல்லீரல் தொழிற்படாமை, வயிறு சம்பந்தமான நோய்கள், மூலம், பூச்சிகள், கீல்வாதம் என்பன போன்ற நோய்களும் அவற்றின் அறிகுறிகளும் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. எந்தெந்த நோய்க்கு எந்தெந்த மருந்துகள் என்பதையும் கோடைக்காலம், மழைக்காலம் போன்ற காலவேறுபாட்டை அறிந்து மருந்துகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நோயை அறிய முற்படும்பொழுது அது வாயு, பித்தம், கபம் என்ற மூன்றில் எதனோடு தொடர்புடையது என்பதை நுணுக்கமாக ஆராய்ந்து தெரிந்து கொள்ள வேண்டும்.

**கவசங்கள்**

கவசங்களுள் மிக முக்கியமானது விஷ்ணு கவசம் ஆகும். இதை அணியும் பொழுது பின்வரும் பிரார்த்தனையுடன் அணியவேண்டும்.

பெரிய ஜனார்த்தனனை வழிபட்டு இந்தக் கவசத்தை அணிகிறேன். அந்த ஜனார்த்தனன் நோய்களில் இருந்து என்னைக் காப்பானாக. விஷ்ணு முன்பகுதியைக் காக்க, கிருஷ்ணன் பின்பகுதியைக் காக்க, ஹரி தலையைக் காக்க, ஜனார்த்தனன் இருதயத்தைக் காக்க, ரிஷிகேசன் மனத்தைக் காக்க, கேசவன் நாக்கைக் காக்க, வாசுதேவன் கண்களைக் காக்க, சங்கர்சக காதுகளைக் காக்க, பிரத்யும்னன் மூக்கைக் காக்க, அனிருத்தன் தோலினைக் காக்க, வனமாலி கன்னத்தைக் காக்க, ஸ்ரீவத்ஸன் கீழ்ப்பகுதியைக் காக்க, விஷ்ணுவின் சக்கரம் இடப்புறம் காக்க, விஷ்ணுவின் கதை வலப்புறம் காக்க, கருடன் என் முயற்சிகளைக் காக்க.

வராகம் என்னை நீரில் காக்க, வாமனம் ஆபத்தில் காக்க, நரசிம்மம் காக்க, கேசவன் எங்கும் காக்க, விஷ்ணு எதிரிகளிடமிருந்து காக்க, விஷ்ணு என் பாவங்களைப் போக்க, என் மனத்தைக் காத்து, அறிவை வளர்க்க என்ற இவற்றைச் சொல்லி, விஷ்ணுவை வழிபட்டு இந்தக் கவசத்தை அணிகிறேன்.

இப்பொழுது நான் முழு தைரியத்துடன் உலகில் எங்கு வேண்டுமானாலும் செல்வேன். பேய்கள், பூதங்கள், ராட்சசர்கள் ஆகியோர் என்னை ஒன்றும் செய்ய முடியாது. தெய்வங்கள் என்னை ஓயாது காக்கின்றன. எனவே எனக்கு அச்சம் என்பதில்லை. கவசத்துக்குள் வைக்கப்படும் மந்திரங்கள் ரகசியமாக இருக்க வேண்டும்.

**மெய்ஞ்ஞானம்**

துயரம் என்பது அகங்கார மமகாரங்களினால் உண்டாகிறது. 'நான்' என்ற அகங்காரமும், 'எனது' என்ற மமகாரமும் இருக்கும் வரை, மெய்ஞ்ஞானத்தை அடைதல் இயலாத காரியம். அஞ்ஞானம் என்பதை, ஒரு மரமாக உருவகம் செய்தால், அதனுடைய வேரும், அடிமரமும் அகங்காரமாகும். வீடு, மனை என்பன அஞ்ஞான மரத்தின் பெருங் கிளைகளாகவும், மனைவி, மக்கள், சுற்றம் என்பவர்கள் சிறு கிளைகளாகவும், பொருட்செல்வம் இலைகளாகவும் கருதப்படலாம்.

பாப, புண்ணியங்கள் அம்மரத்தின் பூக்கள். இன்ப, துன்பங்கள் மரத்தின் பழங்களாகும். மக்கள் உலக விவகாரங் களில் ஈடுபட்டு, அலுத்துப் போய் இம்மரத்தின் அடியில் ஒதுங்குகின்றனர். இந்த மரத்தின் அடியில் தங்கிப் பெறும் மகிழ்ச்சி, துன்பம் எதுவாயினும் அவை நிலையானவை அல்ல. உண்மையான மகிழ்ச்சி, நிலையான இன்பம் எப்போது

வருமென்றால், இந்த மரமும், அது தரும் நிழலும், அது தரும் பழங்களும் வெறும் மாயையே என்பதை உணரும் பொழுது தான் கிடைக்கும்.

கற்றறிந்தவர்கள் உண்மையான அறிவைக் கொண்டு, அல்லது மெய்ஞ்ஞானத்தின் உதவியால் இந்த அஞ்ஞானத்தை வெட்டி வீழ்த்துகின்றனர். இம்மரத்தை வெட்டி வீழ்த்திய வர்களே, மெய்ஞ்ஞானிகள் எனப்படுவர். அவர்கள் பரப் பிரம்மத்திடம் ஐக்கியமானவர்கள். அவர்களே உண்மையான இன்பத்தைக் கண்டவர்கள் ஆவர். அஞ்ஞானத்தில் மூழ்கிய வர்கள் இந்த பூத உடம்பும், ஆன்மாவும், வெவ்வேறானவை என்று தெரியாமல் இரண்டையும் ஒன்றாக்கிக் குழம்புகின்றனர். ஞானம் என்பது என்ன? தங்குவதற்கு ஒரு வீடு, உடல் நிலை பெற உணவு, அஞ்ஞானத்தைப் போக்கும் மெய்ஞ்ஞானம் இவை தவிர எஞ்சிய அனைத்தும் பயனற்றவை.

மெய்ஞ்ஞானத்தை நாடுபவன் பின்வருமாறு பிரார்த்தனை செய்கிறான்: "நான் இந்த பூதவுடம்பல்லன்; ஒளி பொருந்திய பிரம்மமே ஆவேன் நான்; என்னைப் பொறுத்தவரை பிறப்பு, இறப்பு ஒன்றுமில்லை. இந்த உலகத்திற்கும் எனக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஒளி பொருந்திய பரப்பிரம்மமாகிய யான், பஞ்ச பூதங்களில் இருந்து வேறுபட்டு நிற்பவன். ஒளி பொருந்திய பிரம்மமாகிய நான் தங்குவதற்குத் தனியாக ஓர் இடம் இல்லை. எங்கும் நிறைந்திருக்கும் இயல்பினன் யான். ஒளி பொருந்திய பிரம்மமாகிய என்னைத் தொடவோ, முகரவோ இயலாது. நான் கேட்பதும் இல்லை, பேசுவதும் இல்லை. எனக்கு எந்தப் பொறிபுலன்களும் இல்லை. மூச்சு விடும் உயிரல்லன் யான். அஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்டவன் யான். என்றும் இன்பமுடையவனாய், அனைத்தையும் அறிந்தவனாய், தூய்மையானவனாய் இருப்பவனே யான்."

இந்த மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவர்கள், எவ்வித பந்தத்திலும் ஈடுபடுவது இல்லை. இதன் எதிராக அஞ்ஞானத்தில் மூழ்கியவர்களே பிறந்து, இறந்து, பிறந்து இன்ப துன்பங்களில் உழல்கின்றனர்.

யோகம் என்பது ஆத்மாவைப் பரப்பிரம்மத்திடம் ஐக்கியப் படுத்துவதாகும். மனம், அறிவு, பொறிபுலன்கள் ஆகியவற்றை அடக்கி ஒருவழிப் படுத்துவதே யோகமாகும். யோகம் ஆறு படிகளைக் கொண்டது. மூச்சை அடக்கி, பிறகு விடுவது பிராணாயாமம் என்ற முதல் படி. திரும்பத் திரும்ப மந்திரத்தைச் சொல்வது ஜபம் என்ற இரண்டாவது படி. ஐம்பொறிகளை அடக்கி ஆள்வது மூன்றாவது படியாகிய பிரத்யாகாரம். குறிப்பாக ஒரு பொருளினை நினைத்து தியானம் செய்வது நான்காவது படியாகிய தியானம். இது தொடர்ந்து செய்யப்பட்டு மனத்தை அப்பொருளில் நிறுத்துதல் ஐந்தாவது படியாகிய தாரணை எனப்படும். எப்பொருளைக் குறித்துத் தவம் செய்யப்படுகிறதோ, அப்பொருளே எங்கும் காணப்படின், அதுவே ஆறாவதும், இறுதியும் ஆன சமாதி என்ற படியாகும். இந்நிலையிலேயே ஆத்மாவும், பரப் பிரம்மமும் ஒன்றாக ஐக்கியமாகிறது.

இந்த மெய்ஞ்ஞானம் பெற்ற பொழுது ஒரு விடுதலை உணர்ச்சியும், சுதந்திர உணர்ச்சியும் மிகுதியாகக் கிடைக் கின்றன. இந்நிலை வரும்பொழுது அதுவரை வாழ்ந்த அஞ்ஞான வாழ்க்கை ஏதோ ஒரு தூக்கம் போன்று காணப் படும். உலகியலில் கிடைக்கும் இன்ப துன்பம் இரண்டுமே ஆத்மாவிற்குச் சம்பந்தமில்லாதது, தொடர்பில்லாதது என்பதைப் புரிந்து கொள்ள முடியும். புகையில்லாது பிரகாசமாக எரிகிறது. மாயை என்ற புகைப்படலம் நீக்கப்பட்ட பொழுது, ஆத்மா சுயம்பிரகாசமாக விளங்குகிறது. ஆயிரம் யாகங்கள் செய்து புண்ணியத்தைச் சேர்ப்பதைக் காட்டிலும்,

இந்த மெய்ஞ்ஞானம் பெறுதல் மிக மிகச் சிறப்புடைய தாகும்.

இதனை அடுத்து கருட புராணத்தின் உத்திர காண்டம் தொடங்குகிறது. லோமஹர்ஷனரைப் பார்த்து முனிவர்கள் பின்வருமாறு கேட்டனர். "லோமஹர்ஷனரே! ஒரு உடம்பு நீங்கியவுடன் ஆத்மா மற்றோர் உடம்பினுள் புகுந்து விடுகிறது என்று சொன்னீர்கள்.

"நீங்களே உடம்பைவிட்டு நீங்கிய உயிர் செய்த பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப, நரகத்தில் துன்பம் அனுபவித்து விட்டுப் பிறகு மற்றொரு உடம்பில் புகுவதாகக் கூறுகிறீர்கள். இந்த இரண்டு கூற்றுக்களாலும் நாங்கள் குழப்பம் அடைந் துள்ளோம். தயவு செய்து எங்கள் குழப்பத்தைப் போக்க வேண்டுகிறோம்."

இதைக் கேட்ட லோமஹர்ஷனர், "குழப்பம் வேண்டாம். கருடனுக்கும், விஷ்ணுவுக்கும் நடந்த உரையாடலை இதோ கூறுகிறேன், கேளுங்கள்."

## கருடன் விஷ்ணுவிடம் கேட்ட வினாக்கள்

ஒருமுறை கருடன் உலகத்தைச் சுற்றிப் பார்த்துவர எண்ணி மூன்று உலகங்களையும் பார்த்துவிட்டு மீண்டான். அவன் மனத்தில் மகிழ்ச்சி இல்லை. மனம் கனமாக இருந்தது. சென்றவிடங்களில் எல்லாம் துக்கமும், துயரமும் தாண்டவ மாடக் கண்ட கருடன் மனஅமைதி இல்லாமல், விஷ்ணு லோகம் போய்ச் சேர்ந்தான். அவன் இதுவரை பார்த்த காட்சி களுக்கு நேர்விரோதமாக விஷ்ணு லோகத்தில் அனைவரும் ஆனந்தத்துடன் இருந்தனர். மிக அழகான உடை உடுத்தி மகிழ்ச்சி தாண்டவமாடும் முகங்களுடன் காணப்பட்டனர். இலட்சுமி எல்லா இடங்களிலும் இருந்ததால் எங்கும்

ஐஸ்வர்யம் நிரம்பி இருந்தது. ஓர் அழகிய பொன்னால் ஆகிய சிம்மாசனத்தில் விஷ்ணு மந்தகாசப் புன்னகையுடன் அமர்ந்திருந்தார். எங்கும் இன்பமயம். கருடனுடைய மனத்தில் ஒரு நெருடல். மூன்று உலகங்களையும் நிறைத்துக் கொண்டு நிற்கும் துயரம் துன்பம் எங்கே? இந்த விஷ்ணுலோகத்தில் காணப்படும் அமைதியும் இன்பமும் எங்கே? ஏன் இப்படி இருக்க வேண்டும் என்றெல்லாம் நினைத்த கருடன் விஷ்ணு எதிரே போய் நின்றான். கலக்கமுற்ற முகத்துடன் நிற்கும் கருடனைப் பார்த்து, விஷ்ணு, "கருடா! எப்படி இருக்கிறாய்? எல்லாம் நலம்தானா? உலகம் சுற்றிப் பார்க்கப் போனாயே, எங்கெங்கு சென்றிருந்தாய்?" என்று கேட்டார்.

**கருடன்**

யமலோகத்தைத் தவிர மற்ற எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்துவிட்டேன். என் மனத்தில் சில கேள்விகள் உள்ளன. அவற்றிற்குத் தங்களிடம் இருந்து விடை தெரிந்துகொள்ள வேண்டுகிறேன். ஏன் உயிர்கள் உலகில் பிறக்கின்றன? ஏன் இறக்கின்றன? உடம்போடு ஒட்டிய பொறிபுலன்கள் ஒருவர் இறந்த பிறகு என்ன ஆகின்றன? இறந்த பிறகு மனிதர்கள் எங்கே போகிறார்கள்? சிரார்த்த சடங்கு ஏன் செய்யப் படுகிறது? ஒருவன் உயிரோடு இருக்கும் பொழுது செய்த பாவ, புண்ணியங்கள் அவன் உடம்பு அழிந்த பிறகு என்ன ஆகின்றன? இறப்பு என்பது என்ன?

மேலே கண்டவற்றுள் சில கேள்விகளுக்கு விஷ்ணு விடை கூறினார். இறந்தவர்கள் எங்கே போகிறார்கள் என்ற வினாவிற்குப் பல்வேறு நரகங்களைப் பற்றி மிக விரிவாக எடுத்துக் கூறிய விஷ்ணு, அடுத்து விருஷ்டோசர்கா என்ற சடங்கைப் பற்றிக் கூறினார். அதை விளக்குவதற்குப் பின்வரும் கதையினைக் கூறினார்.

முன்னொரு காலத்தில் விரவாஹனா என்ற மன்னன் நடுநிலை தவறாமல் நேர்மையுடன் ஆட்சி செய்து வந்தான். ஒருமுறை காட்டிற்குச் சென்ற பொழுது வசிட்டரின் ஆசிரமம் எதிரே தென்பட்டது. உள்ளே சென்று, முனிவரை வணங்கிய மன்னன், 'முனிவரே! நன்முறையில் ஆட்சி செய்தாலும் யமபயம் என்னை வாட்டுகிறது. யமனுடைய பிடியில் அகப்படாமல் இருப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெரிவித்தருளுங்கள்' என்று கேட்டான். "தர்மவழி பலவகைப்படும் என்று தர்ம சாத்திரங்கள் சொல்கின்றன. தர்மம் செய்வதில் ஒரு காளைமாட்டை தானம் செய்வது மிகச் சிறந்த புண்ணியமாகும்" என்று வசிட்டர் கூறிவிட்டு, "தர்மவத்சாவின் கதை தெரியுமா?" என்று கேட்டு, வசிட்டர் கூற ஆரம்பித்தார்.

முன்னொரு காலத்தில் விதேகா என்ற நகரத்தில் தர்மவத்சா என்ற பிராமணன் வாழ்ந்து வந்தான். நீதி தவறாமல் தர்ம சிந்தையுடன் வாழ்ந்து வந்த பிராமணன், ஒருநாள் ஒரு மலையின் மேல் ஏறி, யாகத்திற்குப் பயன் படுத்தக் கூடிய வேர்களைப் பறிக்கச் சென்றான். அப்பொழுது, முன்பின் தெரியாத நால்வர் அங்கு வந்து இந்த பிராமணனைத் தூக்கிக் கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்றனர். ஓரிடத்தில் அவனை இறக்கி விட்டனர். செல்வம் கொழிக்கும் பெரு நகரமாக இருந்தது அவ்வூர். திக்கு திசை புரியாமல் விழித்துக் கொண்டிருந்த பிராமணனை அரசன் முன்னே கொண்டு நிறுத்தினர். இந்த பிராமணனைக் கண்டவுடன் அரசன் சிம்மாசனத்தில் இருந்து எழுந்து இறங்கி வந்து பிராமணனை வணங்கி, மிகப் பெரிதாக வரவேற்றான்.

பிறகு பிராமணனைத் தூக்கி வந்த நால்வரையும் பார்த்து, இவரை இருந்த இடத்தில் கொண்டு விடுங்கள் என்று கூறினார். ஆச்சரியம் அடைந்த பிராமணன், 'சற்றுப்

பொறுங்கள். நீங்கள் யார்? நான் ஏன் இங்கு கொண்டு வரப்பட்டேன்? என்னை எதற்காக வணங்கினீர்கள்? இதற்கு விளக்கம் பெற விரும்புகிறேன்' என்று கூறினான்.

உடனே அரசன், 'தர்ம வழியில் நடந்து விஷ்ணுவை வழிபடுகின்ற தூய்மையானவர்களைக் காணவேண்டுமென்பது என் விருப்பமாகும். அந்த வழியில் செல்லும் தூய்மையான உங்களைத் தரிசிக்க விரும்பினேன். அதனால்தான் உங்களை இங்கே கொண்டு வருமாறு கூறினேன். நான் வந்து உங்களை வணங்கி இருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் உங்களை இங்கே கொண்டுவரச் சொன்னது அதீதமானதுதான். அதற்கும் ஒரு காரணமுண்டு. அதை என் மந்திரிகள் இப்பொழுது உங்களுக்கு விளக்கிச் சொல்வார்கள்' என்று கூறி முடித்தார்.

மந்திரிகளுள் ஒருவனாகிய விபஸ்வித் என்பவன் இப்பொழுது சொல்ல ஆரம்பித்தான். "எங்கள் மன்னர் போன ஜென்மத்தில் விரதா நகரில், விஷ்வம்பரா என்ற பெயருடைய வைசியனாக வாழ்ந்து வந்தார். வயது முதிர்ந்த காலத்தில் அவரும் அவர் மனைவியும் தீர்த்த யாத்திரை சென்று பல தீர்த்தங்களில் நீராடிவிட்டு ஊர் திரும்புகின்ற வழியில் லோமஷா என்ற முனிவரைப் பார்த்தனர். அந்த வைசியர் தன் வரலாற்றை முனிவரிடம் கூறி, இறுதியாக, இவ்வளவு வயதாகியும் இன்னும் பொருட்செல்வத்தின் மீது இருந்த பற்று நீங்கவில்லை. அதற்கு என்ன செய்யலாம்?" என்று கேட்டார். அதற்கு விளக்கம் தரும் முறையில் லோமஷா முனிவர், நாரதர் கதையைக் கூறத் துவங்கினார்.

முன்னொரு பிறப்பில், ஒரு பிராமணன் வீட்டில் பணிப் பெண்ணாக இருந்தவரின் மகனாகப் பிறந்தார். அந்த பிராமணனைச் சந்திக்கப் பல அறிஞர்களும், முனிவர்களும் வந்தனர். அவர்கள் பேசிக்கொண்டிருந்ததை எல்லாம்

விடாமல் கேட்டுக் கொண்டிருந்த பணிப்பெண்ணின் மகன் கேள்வி ஞானத்தாலேயே சிறந்த அறிஞனாக மாறிவிட்டான் என்று சொல்லி வரும் பொழுதே பிரம்ம சொரூபம், ஆத்ம சொரூபம் என்பவற்றை எல்லாம் லோமஷா கூறினவுடன், வைசியனின் மனம் அமைதி அடைந்தது. அப்பொழுது அவனைப் பார்த்து லோமஷா, பின்வருமாறு கூறினார். "ஓ! வைசியனே, நீ நிரம்பப் புண்ணியம் செய்திருக்கின்றாய். ஒரே ஒரு குறைதான் உண்டு. ஒரு காளைமாட்டை தானமாகக் கொடுத்தால், பல அசுவமேத யாகங்கள் செய்த புண்ணியம் கிடைக்கும்" என்று கூறினார். உடனே அந்த வைசியன், புஷ்கராவிற்குச் சென்று காளைமாட்டை தானம் செய்து பெரும் புண்ணியத்தைச் சேர்த்துக் கொண்டதால் இப்பொழுது இங்கு அரசராக உள்ளார். பிராமணரே! எங்கள் அரசர் தர்ம சிந்தை உள்ள தூயவர்களைத் தரிசிக்க வேண்டுமென்று விரும்புவதால் அடிக்கடி உங்களைப் போன்ற பெரியவர்களை இங்கே வரவழைத்து தரிசனம் செய்கிறார். இந்தக் கதை யைக் கூறி முடித்த வசிட்டர், விரவஹனாவைப் பார்த்து, 'அரசனே! நீ நிரம்பப் புண்ணியம் செய்திருக்கிறாய் என்றா லும், இந்தக் காளை மாட்டு தானத்தை (விருஷோத்சர்கா) செய்துவிட்டால் பெரும் புண்ணியத்தை அடைவாய்' என்று கூறினார். வசிட்டர் வார்த்தையைக் கேட்ட மன்னன், உடனே சென்று காளைமாட்டை தானம் செய்தான். அவன் இறந்த பொழுது, யமன் அவனை நேரே சொர்க்கத்திற்கு அனுப்பி விட்டான்.

**சந்தப்தகாவும், பேய்களும்**

முன்னொரு காலத்தில் சந்தப்தகா என்ற பிராமணன் சிறந்த விஷ்ணு பக்தனாக இருந்து வந்தான். ஸ்தல யாத்திரை சென்று பல தீர்த்தங்களிலும் நீராடிவிட்டு வேறொரு தீர்த்தத்திற்குச் செல்லும் வழியில் ஒரு அடர்ந்த காட்டிடை

அகப்பட்டுக் கொண்டான். பறவைகள் கூட மரங்களுக்குக் கீழே பறக்க முடியாதபடி அவ்வளவு அடர்த்தியாக இருந்தது காடு. அக்காட்டினுள் நுழைந்து வழி தெரியாமல் அகப்பட்டுக் கொண்ட இந்த பிராமணன் ஓரிடத்தில் நின்று பக்கத்தில் உள்ள பெரிய மரத்தை அண்ணாந்து பார்த்தான். அங்கே ஒரு பிணம் தொங்கிக் கொண்டிருப்பதையும், ஐந்து பேய்கள் அதைத் தின்று கொண்டிருப்பதையும் பார்த்தான்.

பயந்து போன பிராமணன் அதைப் பார்த்துவிட்டுச் செய்வதறியாது நிற்கையில் நான்கு பேய்களும் அவனைச் சுற்றிக் கொண்டன. நான்தான் முதலில் இவனைப் பார்த்தேன். எனக்குத்தான் இவன் ஆகாரமாக வேண்டும் என்று ஒவ்வொரு பேயும் சொல்லிக் கொண்டு தம்முள் சண்டையிட்டன. திகைத்து நின்ற பிராமணனைத் தூக்கிக் கொண்டு நான்கு பேய்களும் ஆகாயத்தில் கிளம்பின.

பிராமணன் விஷ்ணு பக்தன் ஆகையால், விஷ்ணுவை தியானித்தான். யட்சர்களின் தலைவனான மணிபத்ராவை அழைத்து, நீ ஒரு பிரேதமாகச் சென்று அப்பேய்களின் கவனத்தைக் கவர்ந்து பிராமணனை விடுவிப்பாயாக என்று உத்தரவு இட்டார். மணிபத்ரா, பிராமணனைப் பிடித்திருந்த நான்கு பேய்களையும் எட்டி உதைத்துத் தள்ள அந்தப் பேய்கள் பிராமணனை விட்டுவிட்டு மரத்தில் தொங்கிய சடலத்திற்குப் பக்கத்தில் போக யத்தனித்தன. அதற்குள் மணிபத்ரா அந்தச் சடலத்தை எடுத்துக் கொண்டு சென்றது. அந்த நான்கு பேய்களும் வேறு வழியில்லாமல் பிராமணன் காலில் விழுந்தன. நாங்கள் நால்வரும் மிகப் பெரிய பாவிகள். எங்களை மன்னித்து விடுங்கள் என்று கெஞ்சின. பிராமணன் அந்தப் பேய்களைப் பார்த்து நீங்கள் யார், எப்படி இந்த நிலைக்கு வந்தீர்கள் என்று கேட்க, பார்யுஷிதா என்ற முதலாவது பேய் தன் வரலாற்றைச் சொல்லத் தொடங்கியது.

இந்தப் பேய் முன் பிறப்பில் ஒரு பிராமணன். இல்லறத்தா னாக இருக்கும் பொழுது ஒரு சிரார்த்தத்திற்கு பிராமணனை வரச் சொல்லி இருந்தான். அந்த பிராமணன் வர அதிக நாழியாயிற்று. பசி மிகுதியினால் இவன் உணவை உண்டு விட்டான். காலம் கடந்து வந்த பிராமணனுக்கு இவன் உண்டது போக எஞ்சியதைக் கொடுத்து உண்ணச் செய்தான். பிதுர்க் களை மதியாமல் தான் முதலில் உண்டதால் பேயானான்.

சுச்சிமுகா என்ற இரண்டாவது பேய் முன் ஜென்மத்தில் நேர்மை, ஒழுக்கம் இல்லாத ஒரு சத்ரியனாக இருந்தது. பத்ரவதா என்ற நதிக்கரையில் ஒரு பிராமணன் தன் ஐந்து வயது மகளைக் கரையில் உட்கார வைத்துவிட்டுக் குளிக்கப் புறப்பட்டான். இந்தச் சத்ரியன் அவளை அழித்து அவள் ஆபரணங்களைப் பிடுங்கிக் கொண்டான். குழந்தை தண்ணீர் குடிப்பதற்காகச் செம்பை வாயில் வைத்த பொழுது அந்தச் சத்ரியன் குழந்தையிடம் இருந்து செம்பைப் பிடுங்கி தண்ணீரையும் குடித்துவிட்டான். குழந்தை பயத்தினால் இறந்து விட்டது. குழந்தையைத் தண்ணீர் குடிக்க முடியாமல் செய்ததால் அந்தப் பேய்க்கு எதையும் உண்ண முடியாமல், வாயில் ஓர் ஊசி அளவு துவாரமே இருந்தது.

ஷிக்ரகா என்ற பேய் முன் ஜென்மத்தில் ஒரு வைசியனாக இருந்தது. அந்த வைசியன் தன் நண்பன் ஒருவனைச் சேர்த்துக் கொண்டு, தூர தேசம் சென்று வியாபாரம் செய்தனன். அந்த நண்பன் பெரு லாபத்தை அடைந்தான். இவன் எல்லா வற்றையும் இழந்தான். இருவரும் தங்கள் ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர். வழியில் ஓர் ஆற்றங்கரையில் இவன் அமர்ந்திருக்க, நிறைந்த லாபம் ஈட்டிய இவன் நண்பன் இவன் மடியில் தலை வைத்து உறங்கிக் கொண்டிருந்தான். அவன் பொருளைத் திருட எண்ணிய இவன், தூங்குகின்றவனை ஆற்றுக்குள் தள்ளிவிட்டான். பிறகு அவன் பொருளை

எல்லாம் இவன் எடுத்துக் கொண்டு இவன் ஊருக்குத் திரும்பினான். அவன் மனைவியைப் பார்த்து, 'உன் கணவனைத் திருடர்கள் அடித்துக் கொன்று விட்டார்கள்' என்று சொல்லி விட்டான். துயரம் தாங்காத அவள் தற்கொலை செய்து கொண்டாள். இவன் பேயாக மாறி அலைகிறான்.

நான்காவது பேய் ரோதகா என்பவன் முற்பிறப்பில் சூத்திரனாக இருந்தான். இவன் உழைப்பைக் கண்டு மகிழ்ந்த மன்னன், நூறு கிராமங்களை இவனுக்கு இனாமாகக் கொடுத்தான். இவனுக்குத் தாய், தந்தையர், ஒரு தம்பி ஆக மூவர் உறவினர் இருந்தனர். நிலத்து ஆசை வெறியாக மாறிவிட்ட இவன், தாய் தந்தையருக்கும், தம்பிக்கும், சோறு போடுவதே வீண்செலவு என்று நினைத்து தம்பியை விரட்டி விட்டான். தாய் தந்தையரை சிறைக்குள் அடைத்து விட்டான். சிறையில் அடைபட்ட தாய் தந்தையர் விஷம் குடித்து இறந்தனர். தம்பியும் வறுமையால் உயிரை விட்டான். இவன் இறந்த பிறகு பேயாக மாறி விட்டான்.

ஐந்தாவது பேய் லேகா, முற்பிறப்பில் ஒரு பிராமணனாக இருந்தான். கோயிலில் பூசை செய்யும் பணியில் ஈடுபட்டிருந் தான். கோயிலில் உள்ள பல விக்கிரங்களுக்கும் ஆபரணங்கள் போடப்பட்டிருந்தன. அந்த ஆபரணங்களை எடுப்பதற்காக ஒரு கடப்பாறையால் நெம்பி எடுத்ததனால், விக்கிரகங்கள் காயப்பட்டன. இவன் நகைகளைத் திருடிய விஷயம் அரசனுக்குத் தெரிந்துவிட அரசன் இவனுக்குக் கொலைத் தண்டனை கொடுக்கத் தயாராக இருந்தான். அதை அறிந்து கொண்ட இந்த பிராமணன் அரண்மனைக்குள் புகுந்து அரசனைக் கொன்றுவிட்டான். நகைகளை எடுத்துக் கொண்டு ஊரைவிட்டுச் செல்லும் பொழுது, இந்த பிராமணனைப் புலி கடித்துக் கொன்றதால், இப்பொழுது பேயாக இருக்கிறான்.

பேய்கள் இந்தக் கதைகளைக் கூறி முடித்ததும், அவை தங்கள் பிழையை உணர்ந்து விட்டதால், விஷ்ணுலோகத்தில் இருந்து விமானங்கள் வந்து அந்த ஐந்து பேய்களையும் சாந்தப்பதகா என்ற பிராமணனையும் விஷ்ணுலோகம் அழைத்துச் சென்றது.

## இராமனும் சீதையும்

கருடன் விஷ்ணுவைப் பார்த்து, "பிரபுவே! பிதுர்க்களுக்கு எங்களைப் போன்ற உடம்பு இல்லை. அப்படி இருக்க நாம் சமர்ப்பிக்கும் பிண்டங்களை, உணவை அவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள்" என்று சொல்வது எப்படிப் பொருந்தும் என்று கேட்க, விஷ்ணு விடை கூறினார்.

"கருடா! பிதுர்க்களுக்கு பூமியில் உள்ளவர்களைப் போல உடம்பு இல்லை என்பது உண்மைதான். ஆனால் சிரார்த்தச் சடங்கில் பிராமணர்களை அழைத்து, உணவு பரிமாறு கிறார்கள் அல்லவா? வருகின்ற பிதுர்க்கள் இந்த பிராமணர் களின் உடம்பில் புகுந்து உணவை ஏற்றுக் கொண்டு போய் விடுகிறார்கள். ராமன் சிரார்த்தச் சடங்கு செய்த கதையை உனக்குச் சொல்கிறேன், கேள்.

ராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் காட்டில் இருக்கும் பொழுது தசரதன் இறந்து விட்ட செய்தி ராமனுக்குக் கிட்டியது. அப்பொழுது எளிய உணவைச் சமைத்து, முனிவர்களை அழைத்து அவர்களுக்கு உணவு கொடுக்கத் தயாரானான் ராமன். முனிவர்கள் உண்ண அமர்ந்தவுடன், பரிமாற வேண்டிய சீதை எங்கும் காணப்படவில்லை. நேரம் ஆகிக் கொண்டிருந்தபடியால், ராமனே அவர்களுக்குப் பரிமாறி, அவர்கள் உண்டபின் அனுப்பிவிட்டான். வந்தவர்கள் உண்டு போனபின் சீதை இராமனிடம் வந்தாள். பரிமாற வேண்டிய நீ எங்கே போய்விட்டாய் என்று ராமன் கேட்டான்.

'இங்குள்ள முனிவர்களைத்தான் நீங்கள் அழைத்தீர்கள். அவர்கள் தாம் வருகிறார்கள் என்று நினைத்திருந்தேன். ஆனால் உட்கார்ந்திருந்தவர்களைப் பார்த்தவுடன் அதிர்ச்சி அடைந்தேன். என்னுடைய மாமனார், அவர் தகப்பனார், அவருடைய தகப்பனார் ஆகிய மூவரும் வந்து உட்கார்ந் திருந்தார்கள். மாமன்மாரின் எதிரே இந்த மரவுரியைக் கட்டிக் கொண்டு வர வெட்கமாக இருந்தது. மேலும் பெரிய அரசராகிய அவருக்கு மிக எளிய உணவைத் தருவதற்கு மிகவும் வெட்கமாக இருந்தது. அதனால்தான் ஓடி ஒளிந்து கொண்டேன்' என்று சொன்னாள்.

நம்முடைய பிதுர்க்கள் நாம் அழைக்கும் விருந்தினர்கள் உடம்பில் புகுந்து கொண்டு நாம் அளிக்கும் உணவை உட்கொள்ளுகிறார்கள் என்பதை நீ தெரிந்துகொள்ள வேண்டும்" என்று கூறி முடித்தார் விஷ்ணு.

**நால்வகைப் பிறப்பு**

உலகில் உள்ள ஜீவராசிகள் அனைத்தும் பிறப்பின் அடிப்படையில் நான்கு வகையாகப் பிரிக்கப்படும். முட்டையில் பிறப்பன அண்டஜா என்றும், வேர்வையில் பிறப்பன ஸ்வேதஜா என்றும், செடி கொடியில் பிறப்பன உத்பீஜா என்றும், நடக்கும் ஜீவராசிகள் ஜராயுஜா என்றும் கூறப்படும். ஒவ்வொரு ஆத்மாவும் ஒவ்வொரு வகைப் பிறப்பிலும் பிறந்து, அடுத்தடுத்து மேல் பிறவி அடைந்து இறுதியாக மனிதராகப் பிறக்கின்றனர். ஒவ்வொரு ஆத்மாவும் ஒவ்வொரு வகையிலும் இருபத்தியொரு லட்சம் தடவை பிறந்து, நான்காவது பிறவிக்கு வரும்பொழுது எண்பத்தியோரு லட்சம் பிறப்பை அடைகின்றனர்.

*(இதே கருத்தை நம் நாட்டில் தோன்றிய மாணிக்கவாசகர், "புல்லாய், பூடாய், புழுவாய், மரமாய், பல்விருகமாய்,*

*பறவையாய், பாம்பாய், கல்லாய், மனிதராய் என்று வரும் அடிகளில் குறிப்பிடுவதையும், ஒவ்வொரு ஆத்மாவும் இத்தனையும் தாண்டி வருகிறது என்பதையும் அதே பாடலில்,*

*"................................ இத்தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"*

*என்று கூறுவதைக் காண்க.*

*எண்பத்தோரு லட்சம் பிறவிகள் என்று கருடபுராணம் கூறுவதைத் திருஞானசம்பந்தர்,*

*உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம்*
*யோனி பேதம்*
*நிறைசேரப் படைத்து அவற்றின் உயிர்க்கு உயிராய்*
*அங்கங்கே நின்றான் கோயில்*

*என்று திருவீழிமழலைப் பதிகத்தில் கூறுவதையும் காணலாம்.)*

**உயிர் வாழ்க்கை**

கருடன் விஷ்ணுவைப் பார்த்து, வேதத்தில் சொல்லப்பட்ட படி நூறாண்டு வாழ்பவர் குறைவாகவே உள்ளனர். பலரும் இதை எட்டாமல் இறந்து விடுகின்றனரே, ஏன்?

விஷ்ணு : அவரவர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப, ஆயுள் கணிக்கப்படுகிறது.

**உடலமைப்பு**

அடுத்து விஷ்ணு சர ராசிகளின் உடலமைப்புப் பற்றிப் பின்வருமாறு கூறினார்.

மனித உடல் என்பது தோல், சதை, இரத்தம், கொழுப்பு, எலும்பினுள் இருக்கும் ஜவ்வு, எலும்பு, உயிர் என்பவற்றால் ஆனது. பஞ்ச பூதங்களும் உடலமைப்பிற்கு உதவுகின்றன.

பூமி— தோல், எலும்பு, நரம்புகள், சதை, உரோமம் என்பவற்றில் கலந்துள்ளது. நீர்— எச்சில், இரத்தம், எலும்பு, சவ்வு என்பவற்றிலும், நெருப்பு— பசி, தூக்கம், தாகம், களைப்பு, சுறுசுறுப்பு என்பவற்றிலும், காற்று— கோபம், துவேஷம், அடக்கம், பயம், அறியாமை என்பவற்றிலும், ஆகாயம்— நவ துவாரங்கள், ஈர்ப்பு, கேட்கும் தன்மை, மனம் என்பவற்றிலும் கலந்துள்ளது.

புலன்கள் ஐந்து வகைப்படும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவை ஐம்புலன்கள் ஆகும். இந்தப் புலன்களுக் குரிய பொறிகள் வாய், கண், உடல், காது, மூக்கு என்பவை ஆகும். செயல்படும் கருவிகள், கை, கால், நா முதலியவை. பத்து வகை நாடிகள் உடம்பில் உள்ளன. அவையாவன: இட, பிங்கல; சுஷ்மன, காந்தாரி; ஹந்தி, ஜீஹ்வா; புஷாயஷா, அலம்புஷா; குஹூ, சங்கினி என்பவையாம்.

பத்துவகை வாயுக்கள் உடலில் உள்ளன:— அபானம், சமான, உதானம், வியானம், நாக, கூர்ம, கிரிகர, தேவதத்தா, தனஞ்செயன் முதலியவை ஆகும். மனிதனின் உடலில் மூன்றரைக் கோடி ரோமங்கள் உள்ளன. தலையில் மூன்று லட்சம் ரோமங்கள் உள்ளன. முப்பத்திரண்டு பற்களும், இருபது நகங்களும் உள்ளன. ஆயிரம் பலம் (அன்றைய அளவு முறை) எடை சதை, நூறு பலம் எடை ரத்தம், பத்து பலம் எடை கொழுப்பு, பத்து பலம் எடை தோல், பன்னிரண்டு பலம் எடை எலும்பு ஜவ்வு உள்ளதென அறிஞர் கூறுவர்.

மனித உடலுக்கும், பூமிக்கும் ஒருவகை ஒற்றுமை உள்ளது. இடுப்பின் கீழே உள்ள பகுதி பாதாள லோகத்துடனும், இடுப்பிற்கு மேற்பட்ட பகுதி பூமிக்கு மேலே உள்ள உலகங் களுடனும் தொடர்பு கொண்டுள்ளது. குதிகால்கள் தாள லோகத்துடனும், கணுக்கால்கள் விதல லோகத்துடனும்,

கெண்டைக்கால் சுதல லோகத்துடனும், முட்டிக்கால் தராதல லோகத்துடனும், தொடைகள் ராஜாள லோகத்துடனும், இடுப்பு பாதாள லோகத்துடனும் தொடர்பு கொண்டுள்ளது. கொப்பூழ் பூலோகத்துடனும், வயிறு புவர்லோகத்துடனும், இருதயம் சொர்க்க லோகத்துடனும், தொண்டை மகரலோகத்துடனும், முகம் ஜனலோகத்துடனும், நெற்றி தபலோகத்துடனும், உச்சந் தலை சத்திய லோகத்துடனும் தொடர்புடையது. இவ்வாறாகப் பதினான்கு லோகங்கள் மனிதனின் உடம்புடன் தொடர்பு கொண்டுள்ளன.

**தீர்த்துங்கள்**

புண்ணிய ஸ்தலம் எனப்படும் இடமே தீர்த்தமாகும். கங்கையும், அதனைச் சார்ந்த இடங்களும் மிகப் புண்ணியம் வாய்ந்த இடங்களாகும். அவற்றில் மிகச் சிறப்பானவை ஹரித்துவாரா, பிரயாகை, கங்கா சாகரம் முதலியவையாகும்.

வாரணாசியும் சிறந்த தீர்த்தமாகும். ஏனெனில் சிவனும், விஷ்ணுவும் அங்கு எப்பொழுதும் இருக்கின்றனர். தானம் செய்வதற்குக் குருக்ஷேத்திரம் சிறந்த இடமாகும். பிரபசா, துவாரகை, சரஸ்வதி, கேதாரம் ஆகிய இடங்களும் புண்ணிய பூமிகளாகக் கருதப்படுகின்றன. ஒருவர் புண்ணிய பூமிக்குச் சென்றுதான், பரப்பிரம்மத்தை நினைத்துத் தவம் செய்ய வேண்டும் என்பதில்லை. வீட்டில் அமர்ந்து பரப்பிரம்மனை நினைத்துத் தியானம் செய்தால், அந்த வீடே புண்ணிய தீர்த்தத்தின் மகிமையைப் பெறுகிறது.

தீர்த்தங்களில் கயை மிகப் பிரபலமானதாகக் கருதப் படுகிறது. நீண்ட காலத்துக்கு முன்னர் கயாசுரன் என்றோர் அசுரன் இருந்தான். இவன் கடுமையான தவம் செய்வதைக் கண்டு அஞ்சிய தேவர்கள், விஷ்ணுவின் உதவியை நாடினர். விஷ்ணுவும் அவர்களுக்கு உதவி புரிவதாகக் கூறினார்.

ஒரு சமயம் கயாசுரன் பூஜைக்குத் தேவையான மலர்களைப் பறிக்கச் சென்றான். களைப்பின் காரணமாக படுத்துறங்கி விட்டான். அச்சமயம் விஷ்ணு அங்கு தோன்றி கயாசுரனைக் கொன்றார். கிகதா என்ற இடத்தில் இவ்வதம் நடைபெற்றதால் அவ்விடம் கயா என்ற பெயர் பெற்றது. சிரார்த்தம் செய்வதற்கு முக்கியமான இடமாகக் கருதப்படுவது கயை.

மக்களுக்கு, முக்தி பெறுவதற்கு நான்கு வழிகள் கூறப் பெறுகின்றன. முதலாவது பரப்பிரம்மம் பற்றிய ஞானம் பெறுவது. இரண்டாவது கயையில் சிரார்த்தம் செய்வது. மூன்றாவது மாட்டுக் கொட்டிலில் உயிரை விடுதல். நான்காவது, குருக்ஷேத்திரத்தில் சென்று தங்கி இருத்தல்.

முடிவுரையாக, கருட புராணம், மற்றப் புராணங்களைப் போல இதனைப் படிப்பதால் எல்லா நலன்களும் விளையும் என்று கூறி முடிக்கின்றது.

